ஜென் தத்துவச் சிந்தனை மேதை

# போதி தருமர்

**BODHI DHARMA:**

The Greatest Zen Master

ஓஷோ

தமிழாக்கம்:

சுவாமி சியாமானந்த்

கவிதா பப்ளிகேஷன்

தபால் பெட்டி எண் : 6123

8, மாசிலாமணி தெரு, பாண்டி பஜார்,

தி. நகர், சென்னை - 600 017.

© 2436 4243, 2432 2177

ஜென் தத்துவ சிந்தனை மேதை போதி தருமர்

முதற் பதிப்பு : அக்டோபர், 2012

விலை : ₹ 500/-

**ZenThaththuva Sinthani Methai Bodhidharumar**

Originally published in English as
**BODHI DHARMA: The Greatest Zen Master**

Copyright © 1987, 2012 OSHO International Foundation. All rights reserved.

Copyright © All revisions 1953-2012 OSHO International Foundation
Under the author name OSHO.

OSHO is registered trademark of OSHO International Foundation,
used under license.

| | | |
|---|---|---|
| Translated by | : | **Swamy Shymanand** |
| Publishing Editor | : | **Sethu Chockalingam** |
| First Edition | : | October, 2012 |
| Pages | : | 720 |
| **Price** | : | **₹ 500/-** |
| ISBN | : | 978-81-8345-228-1 |
| Printed at | : | **Padmavathi Offset ,<br>Chennai - 2. 044 - 2845 0105** |

Published by :
**KAVITHA PUBLICATION**
Post Box No. 6123, # 8, Masilamani Street,
Pondy Bazaar, Thyagaraya Nagar, Chennai - 600 017.
Phone : 044 - 24364243 / 24322177 Tele Fax : 044 - 24364243
E-mail : kavitha_publication@yahoo.com
Website : www.kavithapublication.in

*No part of this book may be reproduced or transmitted in any form or by any means electronic or mechanical including photocopying or recording or by any information storage and retrieval system without permission in writing from Osho International Foundation.*

# பொருளடக்கம்

பக்கம்

1. எதையுமே தேடாமலிருத்தல் தான் பேரானந்தம் ........... 5
2. உனது சொந்த உயிர் உணர்விற்கு ஒரு புனிதப்பயணம் ........ 43
3. இந்த இயற்கை இயல்புக்கு அப்பால், அங்கு ஒரு புத்தரும் இல்லை ........ 69
4. புத்தர்கள் முட்டாள்தனமானவற்றை செய்வதில்லை ... 96
5. அடிப்படை பண்புதான் நமது தன் இயல்பு ........ 130
6. வாக்கியத்தின் இடையில் தான் புரிதல் வருகிறது ...... 165
7. உங்களது பரம்பரை செல்வத்தில் உரிமை கோர தயாராகுங்கள் ........ 199
8. தவறானவராக இருப்பதற்கு ஒவ்வொருவருக்கும் உரிமை உள்ளது ........ 238
9. இறந்த மனிதர் இரத்தம் சிந்துவதில்லை ........ 274
10. மனம் என்பதில் இல்லாமல் இருத்தலே எல்லாமுமாகும் ........ 310

பக்கம்


11. மனம் தான் மனிதனின் மிகப் பெரிய எதிரி ................ 340
12. ஒவ்வொரு துன்பமும் புத்தருக்கான விதை .............. 375
13. மனமே அடிமைத் தளை ............................................ 403
14. ஒரு புத்தரை நேர்கொள்ளுதல் ஆபத்தானது ............ 445
15. புத்த நிலைக்கு ஊடுருவி நுழைதல்
போதி தருமரின் ஊடுருவி உதித்த பிரசங்கம் ............ 485
16. 'எனக்குத் தெரியாது' என்று கூறுவதற்குரிய
தைரியம் .................................................................. 515
17. ஆபத்தை ஒட்டுமொத்தமாக வெற்றி கொள் ........... 553
18. முழுமையாக விழித்தெழுதலே விழிப்புணர்வாகும் .. 594
19. உங்களது இதயத்தின் ஆழத்தில்
புதிரை விரும்பி பாராட்டுங்கள் ................................ 626
20. கண் சிமிட்டும் தொலைவிற்கும் குறைவாக ............. 671

## பயிற்சி செய்தல் குறித்து போதி தருமரின் சுருக்க விவரம்

**பா**தைக்கு அநேக சாலைகள் செல்கின்றன. ஆனால் அடிப்படையில் பகுத்தறிதல் மற்றும் பயிற்சி செய்தல் ஆகிய இரண்டு மட்டுமே உள்ளன. பகுத்தறிதல் என்னும் சாலை வழியாக நுழைவது என்பதற்கு வழிகாட்டுதல் மூலமாக சாராம்சத்தை அறிந்து கொள்ளுதல் என்று அர்த்தம். வெளிப்படையாக தெரியாத ஒரே மாதிரியான உண்மை இயல்பை எல்லா உயிரினங்களும் பகிர்ந்து கொள்கின்றன என்றும் நம்புவதாகும். ஏனெனில் அது மாயத்தோற்றம் மற்றும் மனக்கிளர்ச்சியால் மூடப்பட்டுள்ளது. மாயத் தோற்றத்தில் இருந்து உண்மை நிலையின் பக்கம் திரும்புகின்றவர்களும்; சுவரினைப் பார்த்து தியானம் செய்பவர்களும்; சுயம் மற்றும் ஏனையவை இல்லாமல் இருப்பவர்களும்; அழிபவரும் ஞானியும் ஒன்றானவர்களும்; புனித நூல்களினால் அசையாமல் இருப்பவர்களும் ஆகிய இவர்கள் அனைவரும் பகுத்தறிவுடன் முழுமையான, பேசப்படாத ஒப்பந்தத்தில் உள்ளனர். பகுத்தறிவினால் அவர்கள் நகர்தல் இல்லாமல், முயற்சி இல்லாமல் நுழைந்து விடுகிறார்கள் என்று நாம் கூறுகிறோம்.

பயிற்சி செய்தல் மூலமாக உள்ளே நுழைதல் என்பது அநீதியால் அவதிப்படல், நிலைமைகளை மேற்கொள்ளுதல், எதையுமே தேடாமல் இருத்தல், தர்மத்தை செயல்படுத்துதல் என்கின்ற எல்லாவற்றையும் உள்ளடக்கிய இந்த நான்கினையும் குறிக்கிறது.

முதலாவதாக, அநீதியால் அவதிப்படல், பாதையைச் தேடிச் செல்கின்றவர்கள் துரதிருஷ்டத்தை எதிர்கொள்ளும்போது, அவர்கள் தங்களுக்குள்ளாகவே "கடந்து சென்ற எண்ணிலடங்கா காலங்களில் நான் தேவையானவற்றை விட்டு விட்டு அற்பமானவற்றின் பக்கமாகத் திரும்பி இருப்பு நிலையின் எல்லாவிதத்திலும் சுற்றித் திரிந்து விட்டேன். எந்தக் காரணமும் இல்லாமல் கோபம் அடைந்து கொண்டும், எண்ணிடலங்கா தீய வினைகளால் குற்ற உணர்வுடையவனாக ஆகிவிட்டேன். எனவே இப்போது நான் எந்தத் தவறான செயல்களையும் செய்யா விட்டாலும் கூட எனது கடந்த கால நடவடிக்கைகளுக்காக நான் தண்டிக்கப்படுகிறேன். தீவினையானது அதன் பழங்களை கொடுக்கும்போது கடவுள்களோ அல்லது மனிதர்களோ அந்த பழங்களைப் பற்றி முன்கூட்டியே கண்டுகொள்ள முடியாது. எனவே நான் இது அநீதியானது என்று புகார் கூறாமலும், திறந்த இதயத்துடனும் ஏற்றுக் கொள்கிறேன்" என்று நினைக்க வேண்டும். துரதிருஷ்டங்களை நீ சந்திக்கும்போது நிலைகுலைந்து போகாதே, ஏனெனில் அது நடைமுறை அறிவைக் கொடுக்கிறது என்று சூத்திரங்கள் கூறுகின்றன. இப்படிப்பட்ட புரிதலினால் நீ பகுத்தறிவுடன் ஒத்திசைவோடு இருக்கிறாய். மேலும் அநீதியில் அவதிப்படுவதால் நீ பாதைக்குள் நுழைந்து விடுகிறாய்.

இரண்டாவதாக நிலைமைகளை மேற்கொள்ளுதல். அழிந்து போகக்கூடியவர்களாக நாம் இருப்பதால் நம்முடைய எண்ணப்படி அல்லாமல் நிலைமைகளாலேயே நாம் ஆளப்படுகிறோம். நாம் அனுபவிக்கின்ற எல்லா கஷ்டங்களும் சந்தோஷங்களும் நிலைமைகளைச் சார்ந்தே உள்ளது. புகழ் மற்றும் அதிர்ஷ்டம் போன்ற ஏதோ ஒரு மாபெரும் வெகுமதியால் நாம் ஆசீர்வதிக்கப் படுகிறோம் என்றால் அது கடந்த காலத்தில் நம்மால் நடப்பட்ட விதையின் பழங்களே ஆகும். நிலைமைகள் மாறும்போது அது முடிந்து போகிறது. இந்த மகிழ்ச்சி என்பது இருப்பது ஏன்? ஆனால், வெற்றியும் தோல்வியும் நிலைமைகளைப் பொறுத்து இருக்கும்போது, மனமானது வளர்வதும் இல்லை. தேய்வதும் இல்லை. மகிழ்ச்சி என்னும் காற்றில் அசையாமல் இருப்பவர்கள் அமைதியாகப் பாதையை பின்தொடர்கிறார்கள்.

மூன்றாவதாக, எதையுமே தேடாமல் இருத்தல். இந்த உலகின் மக்கள் மாயையில் இருக்கின்றனர். ஏதோ ஒன்றிற்காக அவர்கள் எப்போதுமே ஏக்கம் கொண்டு இருக்கின்றனர்; ஒரே வார்த்தையில் சொல்ல வேண்டும் என்றால் தேடிக்கொண்டு இருக்கிறார்கள். ஆனால் ஞானமுள்ளவர்கள் விழித்தெழுந்து விடுகின்றனர். அவர்கள் தொன்றுதொட்டு வரும் பழக்கத்திற்குப் பதிலாக பகுத்தறிவை தேர்ந்தெடுக்கின்றனர். அவர்கள் உயர்ந்த நிலையில் தங்களது மனதை நிலைபெறச் செய்துவிட்டு தங்களின் உடலானது பருவ காலத்தற்குத் தக்கபடி மாறிக்கொள்ளும்படி விட்டு விடுகின்றனர். எல்லா விஷயங்களும் அவர்களுக்கு காலியான தாகவே இருக்கிறது. ஆசைக்குரிய எதையும் அவர்கள் வைத்திருப்பதில்லை. செழிப்பும், பேரழிவும் எப்போதும் மாறி மாறி வரும். இந்த மூன்று ஆட்சி எல்லைக்குள் வசிப்பது எரிகின்ற ஒரு வீட்டில் வசிப்பது போன்றதாகும். ஓர் உடலைப் பெற்றிருப்பதே அவதிப்படுவதற்காகத்தான். இந்த உடலோடு யாராவது அமைதியை அறிந்திருக்கிறார்களா?

நான்காவதாக, தர்மத்தை செயல்படுத்துதல். இயற்கையில் எல்லாம் தூய்மையானவை என்னும் உண்மைதான் தர்மம் என்பதாகும். இந்த உண்மையினால் எல்லா தோற்றங்களும் வெறுமையாக இருக்கின்றன. மாசுபடுத்துதலும், பற்று கொள்ளுதலும் புறப்பொருளும் அகப்பொருளும் இங்கு இல்லை. இந்த சூத்திரங்கள், "தர்மம் என்பது எந்த உயிர் உணர்வையும் உள்ளடக்கியது இல்லை. ஏனெனில் அது இருத்தல் என்பதன் எந்த ஒரு மாசுகளும் இல்லாதது. மேலும் தர்மம் என்பது எந்த ஒரு சுயத்தையும் உள்ளடக்கியது இல்லை. ஏனெனில் அது சுயம் என்பதன் எந்த ஒரு மாசும் இல்லாதது" என்று கூறுகின்றன. இந்த உண்மையை புரிந்து கொள்ளவும், நம்புவதற்கும் போதுமான ஞானம் உள்ளவர்களும் தர்மத்திற்கு தக்கபடி செயல்படுகிறார்கள். தர்மத்தின் அமைப்பானது அதிருப்தி கொள்ளத்தக்க எதையும் கொண்டதாக இல்லாமல் இருப்பதால், அவர்கள் தங்களது உடல், உயிர் மற்றும் செல்வத்தினை எந்தவிதமான வருத்தம் இல்லாமல் கொடுப்பவர் என்கிற தற்பெருமை இல்லாமல், வெகுமதி அல்லது பெறுபவர் என்பதில்லாமல், மேலும் விருப்பு, வெறுப்பு இல்லாமல்

நற்செயல்களுக்கு அர்ப்பணிக்கின்றனர். மாசுகளை நீக்கி மற்றவர்களை உருமாற்றம் செய்வதை உருவங்களின் மீது எந்த விதமான பற்றுதலும் கொள்ளாமல் அவர்கள் செய்கின்றனர். இப்படியாக தங்களின் செயல்பாடுகளின் மூலம் மற்றவர்களுக்கு அவர்களால் உதவ முடிவதோடு கூட அவர்கள் மெய்ஞ்ஞானம் அடைகின்ற பாதையை மகிமைப்படுத்துகிறார்கள். நற்செயல் களோடு கூட அவர்கள் ஏனைய புண்ணிய காரியங் களையும் செய்கின்றனர். ஆனால் மாயையை ஒழிப்பதற்கான ஆறு புண்ணியச் செயல்களை செயல்படுத்தும் போது அவர்கள் எதையுமே செயல்படுத்துவதில்லை. தர்மத்தை செயல்படுத்துதல் என்பதற்கு இதுதான் அர்த்தம். இதைப் புரிந்துகொண்டு, இருக்கின்ற எல்லாவற்றில் இருந்தும் தங்களை விலக்கிக் கொண்டும், எதையுமே ஓடுவதையும், கற்பனை செய்வதையும் நிறுத்திக் கொள்கின்றவர்களுக்காக இந்த சூத்திரங்கள், "தேடுதல் என்பது அவதிப்படுவதாகும். எதையுமே தேடாமல் இருப்பதுதான் பேரானந்தமாகும்" என்று கூறுகின்றன. நீ எதையுமே தேடாதபோது நீ பாதையில் இருக்கின்றாய்.

எனது இதயத்தில் போதி தருமருக்கு ஒரு மென்மையான இடம் வைத்திருக்கிறேன். அதுதான் அவரைப்பற்றி பேசுவதை மிகவும் சிறப்பானதொரு நிகழ்வாக ஆக்கி'விடுகிறது. ஒருவேளை, நான் மிகவும் ஆழ்ந்து நேசித்த மனிதர் அவர் ஒருவர் மட்டுமே என்பதால் அவரைப் பற்றி பேசும்போது கிட்டத்தட்ட நான் என்னைப் பற்றியே பேசப்போகிறேன். அதுவும் கூட ஒரு மிகப்பெரிய சிக்கலை உருவாக்குகிறது. ஏனெனில் அவர் தனது வாழ்நாளில் ஒருபோதும் எதையும் எழுதியதில்லை. மெய்ஞ் ஞானிகள் எவராயினும் அவர்கள் ஒருபோதும் எழுதியதில்லை. அதற்கு போதி தருமர் விதிவிலக்கல்ல; ஆனால் பாரம்பரியமாக நாம் பேசப் போகின்ற இந்த மூன்று புத்தகங்களும் போதி தருமருக்கு உரியவை.

கிட்டத்தட்ட ஓராயிரம் ஆண்டுகளாக இந்தப் புத்தகங்கள் போதி தருமருக்கு உரியதாக உள்ளன. ஆனால் பண்டிதர்கள் இதற்குத் தேவையான சான்றுகள் இல்லை என்கிற காரணத்தைக் கூறுகின்றனர். இவற்றை நாம் ஏன் ஏற்றுக்கொள்ளக் கூடாது

என்பதற்கு எந்தவிதமான காரணங்களும் இல்லை. நான் ஒரு பண்டிதன் அல்லன். ஆனால் நிச்சயமாக போதி தருமரால் பேசப்பட்ட பகுதிகளாக இவை இருந்தாக வேண்டும். ஆனால் இவை அவரால் எழுதப்பட்ட புத்தகங்கள் அல்ல. இவை அவரது சீடர்கள் எடுத்த குறிப்புகள். ஒரு சீடர் தனது குரு பேசுவதை குறிப்பு எடுக்கும்போது அந்த குறிப்புகளின் மீது தனது சொந்த பெயரை போடாமல் இருப்பது பழங்கால பாரம்பரியமாகும். ஏனெனில் அந்தக் குறிப்புகளில் எதுவும் அந்த சீடருக்கு சொந்தமானது அல்ல. அவை அவரது குருவிடம் இருந்து வந்தவை.

ஆனால், நான் போதி தருமரை மிகவும் அந்நியோன்யமாக அறிந்துகொண்ட வரையில், வேறு யாராவது ஒருவர் குறிப்புகள் எடுக்கும்போது, அந்த குறிப்புகளுக்குள் அந்த சீடரின் சொந்த மனமானது உள்ளே நுழைந்து விடுவதால் இதில் சில தவறுகள் இருப்பதற்கான சாத்தியங்கள் இருக்கிறது. அந்த சீடருக்கு போதிய புரிதல் இல்லாததால் அவர் போதி தருமர் கூறியதை திரித்துக் குறிப்பெடுத்து விட்டார்.

இந்த சூத்திரங்களுக்குள் நுழைவதற்கு முன்பு போதி தருமர் பற்றி சில விஷயங்களை அறிந்து கொள்ளுதல் நல்லது. அது அவருக்கே உரித்தான அந்த மனத்தை உங்களுக்கு கொடுக்கும். மேலும் இந்தப் புத்தகங்களில் எது அவருக்கு சொந்தமான கருத்து, எது அவருக்கு சொந்தமில்லாத கருத்து என்பதையும், நீங்கள் புரிந்து கொள்வதற்கு ஒரு வழியாக அது இருக்கும். இது ஒரு வித்தியாசமான விளக்க உரையாக இருக்கப் போகிறது.

தென்னிந்தியாவில் ஓர் அரசரின் மகனாகப் பிறந்தவர் போதி தருமர். அது ஒரு பெரிய சாம்ராஜ்யமாக இருந்தது. அது பல்லவர்களின் பேரரசு. அவரது தந்தைக்கு அவர் மூன்றாவது மகன். அவர் அபரிமிதமான புத்திசாலித்தனம் நிறைந்த ஒரு மனிதராக இருந்தார். எல்லாவற்றையும் பார்த்தபின்னர் அவர் தனது சாம்ராஜ்யத்தைத் துறந்து விட்டார். அவர் இந்த உலக வாழ்க்கைக்கு எதிரானவர் அல்லர். ஆனால், முக்கியமில்லாத, ஒன்றுக்கும் உதவாத காரியங்களில் தனது காலத்தை வீணாக்குவதற்கு அவர் தயாராக இல்லை. தனது சுயமான இயல்பை அறிந்து கொள்வது

மட்டுமே அவரது ஒட்டுமொத்த அக்கறையாக இருந்தது. ஏனெனில், அதை நீங்கள் அறிந்து கொள்ளவில்லை எனில் இறுதியாக மரணத்தைத்தான் நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

உண்மையில் எல்லா ஆன்மிக சாதகர்களும் மரணத்திற்கு எதிராக போராடினார்கள். மரணம் என்பது இங்கு இல்லை என்றால் இங்கு மதம் என்பது இருந்திருக்காது என்று பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் கூறி இருக்கிறார். அதில் சில உண்மை உள்ளது. ஆனால், அதை முழுமையாக ஏற்றுக்கொள்ள மாட்டேன். ஏனெனில் மனம் என்பது மிகவும் பரந்து விரிந்த கண்டம் போன்றது. அது மரணத்திற்கான தேடுதல் மட்டுமல்ல; அது பேரானந்தத்திற்கான தேடுதலும்கூட. உண்மைக்கான தேடுதலும் கூட. அது வாழ்க்கைக் கான அர்த்தத்தை தேடுவதும் ஆகும். அது இன்னும் அநேக விஷயங்களை உள்ளடக்கியது. ஆனால் நிச்சயமாக பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் கூறியது சரியானதாகும். மரணம் என்பது இல்லை எனில் மிகச்சிலர் மட்டுமே, மிகவும் அபூர்வமான மக்கள் மட்டுமே மதத்தின் மீது ஆர்வம் உடையவர்களாக இருந்திருப்பார்கள். மரணம் என்பது மாபெரும் ஊக்குவிப்பு.

போதி தருமர் தனது தந்தையிடம், "தாங்கள் என்னை மரணத்தில் இருந்து காப்பாற்ற முடியவில்லை என்னும்போது, தயவு செய்து என்னைத் தடுக்காதீர்கள். மரணத்திற்கு அப்பால் உள்ள ஏதோ ஒன்றினை தேடிச் செல்வதற்கு என்னைப் போக விடுங்கள்" என்று கூறிவிட்டு அவர் தனது சாம்ராஜ்ஜியத்தைத் துறந்தார். அந்த நாட்கள் மிகவும் அழகானவை. அதுவும் குறிப்பாக கீழை நாடுகளில், அவரது தந்தை சிறிது நேரம் யோசித்தார். அதன்பிறகு அவர், "நான் உன்னை தடுக்க முடியாது. ஏனெனில் உனது மரணத்தில் இருந்து என்னால் உன்னைக் காப்பாற்ற முடியாது. எனது ஆசீர்வாதங்களோடு நீ உனது தேடுதலைத் தொடங்கு. இது எனக்கு வருத்தமானதாகத்தான் இருக்கிறது. ஆனால் இது எனக்குள்ள பிரச்சினை; இது எனது பற்றுதல். எனக்குப் பின்னால் நீதான் சக்கரவர்த்தியாக வருவாய் என்றும், இந்த பல்லவ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியாக வருவாய் என்றும் நான் நம்பிக்கொண்டு இருந்தேன். ஆனால் நீயோ அதைவிட மேலான ஒன்றைத் தேர்ந்தெடுத்து விட்டாய். நான் உனது தந்தை.

எனவே நான் உன்னை எப்படித் தடுக்க முடியும்? மேலும் நான் எதிர்பாராத விதத்தில் ஓர் எளிய கேள்வியை நீ போட்டு விட்டாய். நீ என்னிடம், 'உங்களால் எனது மரணத்தைத் தடுக்க முடியும் என்றால் அதன்பின்னர் நான் இந்த அரண்மனையை விட்டுப் போக மாட்டேன். ஆனால் உங்களால் எனது மரணத்தைத் தடுக்க முடியவில்லை என்றால், அதன்பின்னர் தயவு செய்து என்னைத் தடுக்காதீர்கள்' என்று கூறிவிட்டாய்" என்று கூறினார். இதில் நீங்கள் போதி தருமரின் மிக உயர்ந்த புத்திசாலித்தனத்தைக் கண்டுகொள்ள முடியும்.

நான் உங்களுக்கு நினைவூட்ட விரும்புகின்ற இரண்டாவது விஷயம் என்னவென்றால் போதி தருமர், கௌதம புத்தரைப் பின்பற்றி நடந்தவர் என்றாலும் கூட சில சந்தர்ப்பங்களில் அவர் கௌதம புத்தரை விடவும் உயர்ந்த நிலைமைகளைக் காட்டுகிறார். உதாரணமாக, கௌதம புத்தர் தனது கூட்டமைப்பில் பெண்களுக்கு சந்நியாச தீட்சை கொடுப்பதற்கு மிகவும் பயப்பட்டார். ஆனால் போதி தருமரோ மெய்ஞ்ஞானம் பெற்ற ஒரு பெண்மணியிடம் தான் தீட்சை பெற்றார். அவளது பெயர் பிரக்யதாரா. ஒருவேளை மக்கள் அவளது பெயரை மறந்து போயிருக்கலாம்; ஆனால் போதி தருமரால் தான் அவளது பெயர் இன்னமும் இருக்கிறது. அவளது பெயர் மட்டுமே இருக்கிறது. ஆனால் அவளைப்பற்றிய எதுவும் நமக்கு தெரியவில்லை. அவள்தான் போதி தருமரை சீனாவிற்கு செல்லும்படி கட்டளை இட்டாள். போதி தருமருக்கு அறுநூறு வருடங்களுக்கு முன்பு புத்த மதம் சீனாவில் பரவி இருந்தது. இது ஏதோ ஓர் அற்புதம் போல நடந்துவிட்டது. வேறு எங்கும், எப்போதும் இதுபோன்று நடந்தது இல்லை. புத்தரின் போதனைகள் ஒட்டுமொத்த சீன மக்களுக்கும் உடனடியாக பிடித்துப் போய் விட்டது.

சூழ்நிலை எப்படி இருந்தது என்றால் சீனாவானது கன்பியூசியஸின் தாக்கத்தில் வசித்தது. மேலும் அதில் சீனர்கள் மிகவும் களைத்துப் போய் இருந்தனர். ஏனெனில் கன்பியூசியஸ் வெறுமனே ஒரு நல்ஒழுக்கவாதியாக, ஒரு புனிதமானவராக இருந்தார். வாழ்க்கையின் அகத்தில் உள்ள புதிர்களைப் பற்றி அவருக்கு எதுவும் தெரியாது. உண்மையில் அகம் என்ற ஒன்று

உண்டு என்பதையே அவர் மறுக்கிறார். எல்லாமே வெளியில் உள்ளதுதான்; எனவே அதை நேர்த்தியாக்குங்கள், அதை பளபளப்பாக்குங்கள், அதை எந்த அளவுக்கு அழகாக ஆக்க முடியுமோ அந்த அளவுக்கு அழகானதாக ஆக்குங்கள் என்று அவர் கூறினார்.

கன்பியூசியஸின் சம காலத்தில் லாவோத் சூ.. சுவாங்க்த் சூ, லீ த் சூ போன்றவர்களும் இருந்தனர். ஆனால் அவர்கள் ஞானிகளாக இருந்தார்கள், குருமார்கள் போன்று இல்லை. கன்பியூசியசுக்கு எதிராக சீன மக்களின் உள்ளங்களில் ஒரு எதிர்ப்பு இயக்கத்தை அவர்களால் உருவாக்க முடியவில்லை. எனவே அங்கு ஒரு வெற்றிடம் இருந்தது. ஆன்மா என்பது இல்லாமல் யாரும் வசிக்க முடியாது. மேலும் ஆன்மா என்பது இல்லை என்று நீங்கள் நினைக்க ஆரம்பித்து விட்டால், அதன்பிறகு உங்களது வாழ்க்கையானது அதன் எல்லா அர்த்தங்களையும் இழந்துவிடும். ஆன்மா தான் உங்களை ஒருங்கிணைக்கும் கருத்து; அது இல்லை என்று நீங்கள் இந்த பிரபஞ்சம் மற்றும் முடிவில்லாத வாழ்க்கையில் இருந்து துண்டிக்கப்பட்டு விடுவீர்கள். ஒரு மரத்தின் கிளையானது வெட்டப்பட்வுடன் அதன் கிளையானது எப்படி கண்டிப்பாக காய்த்துப் போகிறதோ அதைப் போன்றதாகும். இயற்கையில் இருந்து அது ஊட்டச்சத்தைப் பெறுகின்ற அந்த மூல இடத்தை இழந்து விடுகிறது. உங்களுக்குள் ஆன்மா என்பது இல்லை, தன்னுணர்வு என்பது இல்லை என்கிற அந்த எண்ணமானது உங்களை இயற்கையில் இருந்து துண்டித்து விடுகிறது. ஒருவர் சுருங்கிப்போக ஆரம்பித்து விடுகிறார். ஒருவருக்கு மூச்சு முட்ட ஆரம்பித்து விடுகிறது.

ஆனால் கன்பியூசியஸ் ஒரு மாபெரும் பகுத்தறிவாளர். லாவோத் சூ, சுவாங்க்த் சூ, லீ த்சூ போன்றவர்களுக்கு கன்பியூசியஸ் செய்து கொண்டிருப்பது தவறு என்று தெரியும். ஆனால் அவர்கள் குருமார்கள் அல்லர். அவர்கள் தங்களின் ஒருசில சீடர்களுடன் தங்களின் மடாலயங்களில் இருந்து விட்டனர்.

புத்த மதம் சீனாவிற்குள் சென்றடைந்தபோது அது உடனடியாக மக்களின் இதயத்திற்குள் நுழைந்துவிட்டது. சீன மக்கள் ஏதோ

தாகத்தினால் பல நூற்றாண்டுகளாக இருந்தது போன்றும், புத்த மதம் ஒரு மழை மேகம் போன்று வந்துவிட்டதாகவும் நினைத்தனர். அது அவர்களின் தாகத்தை அபரிமிதமாக தணித்துவிட்டதால், அங்கே கற்பனை செய்ய முடியாத ஏதோ ஒன்று நிகழ்ந்தது.

கிறிஸ்தவ மதமும் அநேக மக்களை மதமாற்றம் செய்திருந்தது. ஆனால் அந்த மதமாற்றமானது மதம் என்று அழைக்கின்ற மதிப் பில்லாதது. கிறிஸ்தவ மதம், ஏழைகள், பசியோடு இருப்பவர்கள், பிச்சைக்காரர்கள், அனாதைகள் ஆகியவர்களை எந்த ஓர் ஆன்மிக தாக்கமும் இல்லாமல், வெறுமனே அவர்களுக்கு உணவு, உடை, உறைவிடம், கல்வி ஆகியவற்றைக் கொடுத்ததன் மூலமாக மதமாற்றம் செய்துவிட்டது. ஆனால் இதற்கும் ஆன்மிகத்திற்கும் எந்த சம்பந்தமும் இல்லை. முகமதியர்களும் கூட அளவுகடந்த எண்ணிக்கையில் மக்களை மதமாற்றம் செய்தனர். ஆனால் அவர்கள் வாளின் முனையினால் செய்தனர். "ஒன்று நீ முகமதிய னாக இரு. இல்லாவிட்டால் நீ உயிர் வாழ முடியாது. இதை நீயே தேர்ந்தெடுத்துக்கொள்'' என்று கூறி மதமாற்றம் செய்தனர்.

மனித இனத்தின் வரலாற்றில், சீனாவில் நடந்த மதமாற்றம் மட்டுமே உண்மையான மதமாற்றம் ஆகும். புத்த மதம் வெறுமனே அதனை விளக்கமாக எடுத்துக் கூறியது. எனவே அந்த போதனை களின் அழகு மக்களால் புரிந்துகொள்ளப்பட்டது. அவர்கள் அதற்கான தாகத்தோடு இருந்தார்கள். இதுபோன்ற ஒன்றிற்காக அவர்கள் காத்துக்கொண்டு இருந்தனர். இந்த உலகத்தில் மிகப்பெரிய நாடாகிய சீனாவில் அந்த ஒட்டுமொத்த சீன நாடும் புத்த மதத்திற்கு மாறியது. அறுநூறு ஆண்டுகள் கழித்து போதி தருமர் அங்கு சென்றபோது அங்கு ஏற்கனவே முப்பதாயிரம் புத்த கோயில்களும், மடாலயங்களும், இரண்டு மில்லியன் புத்தத் துறவிகளும் சீனாவில் இருந்தனர். இரண்டு மில்லியன் துறவிகள் என்பது ஒரு சிறிய எண்ணிக்கை கிடையாது. அது சீனாவின் ஒட்டுமொத்த ஜனத்தொகையில் ஐந்து சதவிகிதமாக இருந்தது.

போதி தருமரின் குருவாகிய பிரக்யதாரா, அவரை சீனாவிற்குப் போகும்படி கூறினாள். ஏனெனில் அவருக்கு முன்பு சீனாவிற்கு சென்றவர்கள் மெய்ஞ்ஞானம் அடையாதவர்கள்

என்றாலும்கூட அவர்கள் சீனாவில் புத்த மதம் குறித்து மிகப்பெரிய தாக்கத்தை உண்டாக்கி இருந்தனர். போதி தருமருக்கு முன்பு சென்றவர்கள் மிகப்பெரிய பண்டிதர்கள், மிகவும் ஒழுக்க சீலர்கள், அன்பும் அமைதியும் கருணையும் உடையவர்கள். ஆனால் அவர்களில் யாரும் மெய்ஞ்ஞானம் அடைந்தவர் அல்லர். எனவே இப்போது சீனாவிற்கு இரண்டாவது கௌதம புத்தர் தேவைப்பட்டது. அதற்கான களம் தயாராக இருந்தது.

போதி தருமர் தான் சீனாவைச் சென்றடைந்த முதல் மெய்ஞ் ஞானி. கௌதம புத்தர் தனது கூட்டமைப்பில் பெண்களுக்கு தீட்சை அளிப்பதற்குப் பயந்தபோது, போதி தருமர், கௌதம புத்தரின் பாதையில் ஒரு பெண்மணியின் மூலம் தீட்சை பெறு வதற்கு போதுமான தைரியத்துடன் இருந்தார் என்கிற அந்த கருத்தை நான் தெளிவாக்க விரும்புகிறேன். அப்போது அநேக மெய்ஞ்ஞானிகள் இருந்தனர். ஆனால், போதி தருமர் குறிப்பிட்ட நோக்கத்திற்காக ஒரு பெண்மணியை தேர்ந்தெடுத்தார். பெண்களும் மெய்ஞ்ஞானிகள் ஆகமுடியும் என்பதைக் காட்டுவதுதான் அந்த நோக்கமாக இருந்தது. அதுமட்டுமல்ல, அந்தப் பெண்மணியின் சீடர்களும்கூட மெய்ஞ்ஞானிகள் ஆகமுடியும் என்பதையும் காட்டுவதற்காகவே அவர் அப்படி செய்தார். புத்த மதத்தில் மெய்ஞ்ஞானம் அடைந்தவர்களின் மத்தியில் போதி தருமரின் பெயர் மட்டுமே கௌதம புத்தருக்கு அடுத்தபடியாக உள்ளது.

இந்த மனிதரைப் பற்றி அநேக கதைகள் உள்ளன. அவை எல்லாமே சில சிறப்புகளைக் கொண்டுள்ளன. முதல் கதை என்னவென்றால், சீனாவிற்கு செல்வதற்கு அவருக்கு மூன்று ஆண்டுகள் ஆயிற்று. மேலும் அவர் சீனாவைச் சென்றடைந்த போது சீனச் சக்கரவர்த்தியாக வூ (Wu) என்பவர் போதி தருமரை வரவேற்பதற்கு வந்தார். போதி தருமரின் புகழ் அவருக்கு முன்பு சீனாவைச் சென்றடைந்திருந்தது. வூ சக்கரவர்த்தியானவர், கௌதம புத்தரின் தத்துவத்திற்கு மாபெரும் சேவை செய்து வந்தார். ஆயிரக்கணக்கான பண்டிதர்கள் புத்த மத நூல்களை பாலி மொழியில் இருந்து சீன மொழிக்கு மொழிபெயர்த்துக் கொண்டு இருந்தனர். மேலும் அந்த சக்கரவர்த்திதான் இந்த மொழி பெயர்ப்பு

வேலைக்கு உறுதுணையாக இருந்தார். அவர் ஆயிரக்கணக்கான கோயில்களையும், மடாலயங்களையும் உண்டாக்கினர். மேலும் அவர் ஆயிரக்கணக்கான துறவிகளுக்கு உணவளித்து வந்தார். அவர் தனது ஒட்டுமொத்த கஜானாவையும், கௌதம புத்தரின் சேவையில் செலவிட்டு வந்தார். எனவே போதி தருமருக்கு முன்பு சீனாவிற்குச் சென்ற புத்தத் துறவிகள் அனைவரும் அந்தச் சக்கரவர்த்தியிடம் அவர் மிகப்பெரிய புண்ணியத்தைத் தேடி இருப்பதால், அவர் சொர்க்கத்தில் ஒரு கடவுளாக பிறப்பார் என்று கூறி வந்தனர்.

எனவே இயல்பிலேயே அந்த வூ சக்கரவர்த்தி போதி தருமரிடம் முதல் கேள்வியாக, "நான் அநேக மடாலயங்களை கட்டியிருக்கிறேன். ஆயிரக்கணக்கான பண்டிதர்களுக்கு நான் உணவளித்து வருகிறேன். கௌதம புத்தரின் போதனைகளை கற்றுக்கொள்ள நான் ஒரு முழு பல்கலைக்கழகத்தைத் திறந்திருக் கிறேன். நான் எனது ஒட்டுமொத்த சாம்ராஜ்யத்தையும், அதன் கஜானாவையும் கௌதம புத்தரின் சேவையில் ஈடுபடுத்தி வருகிறேன். இதனால் எனக்கு என்ன வெகுமதி கிடைக்கப் போகிறது?' என்று கேட்டார்.

இந்த மனிதர் இப்படி இருப்பார் என்று அந்த சக்கரவர்த்தி ஒருபோதும் நினைக்கவில்லை. எனவே அவர் போதி தருமரைப் பார்த்தவுடன் கொஞ்சம் தர்மசங்கடத்திற்குள்ளானார். போதி தருமர் பார்ப்பதற்கு மிகவும் மூர்க்கமானவர் போன்று தோன்றினார். அவருக்கு மிகப்பெரிய கண்கள் இருந்தன. ஆனால் அவருக்கு மிகவும் மென்மையான இதயம் இருந்தது. தனது இதயத்தில் அவர் ஒரு தாமரைப்பூ போன்று இருந்தார். ஆனால் அவரது முகமானது நீங்கள் எந்த அளவுக்கு ஆபத்து நிறைந்தவராக கறப்னை செய்து பார்க்க முடியுமோ அந்த அளவுக்கு இருந்தது. அவர் கண்களுக்கு சன் கிளாஸ் மட்டும் அணியவில்லை. அதையும் அவர் அணிந்திருந்தால், அவர் ஒரு மாஃபியா கூட்டத்தைச் சேர்ந்த ஒருவர் போன்று இருப்பார்.

இந்த கேள்வியை வூ சக்கரவர்த்தி மிகுந்த பயத்துடன்தான் கேட்டார். அதற்கு போதி தருமர், "உங்களது சேவைக்கு எதுவும்

கிடைக்காது. எந்த வெகுமானமும் கிடைக்காது. அதற்கு மாறாக ஏழாவது நரகத்தில் விழுவதற்குத் தயாராக இருங்கள்'' என்று கூறினார்.

அதற்கு அந்த சக்கரவர்த்தி, "நான் எந்த தவறும் செய்ய வில்லையே. ஏன் எனக்கு ஏழாவது நரகம்? புத்தத் துறவிகள் என்னிடம் கூறியவற்றை எல்லாம் நான் செய்து கொண்டிருக் கிறேன்'' என்று கேட்டார்.

உடனே போதி தருமர், "நீங்கள் உங்களது சொந்த குரலைக் கேட்காத வரையில், யாரும் உங்களுக்கு உதவ முடியாது. அவர் புத்த மதத்தை சேர்ந்தவராக இருந்தாலும், இல்லாவிட்டாலும் யாராலும் முடியாது. மேலும் நீங்கள் உங்களது சொந்தக் குரலை இதுவரை கேட்டதில்லை. அதை நீங்கள் கேட்டிருந்தால் இதுபோன்ற முட்டாள்தனமான கேள்வியைக் கேட்டிருக்க மாட்டீர்கள்'' என்று பதில் கூறினார்.

"கௌதம புத்தரின் பாதையில் எந்தவெகுமதிக்கும் இடம் இல்லை. ஏனெனில் வெகுமதி பெறவேண்டும் என்கிற அந்த ஆசையானது உங்களது பேராசை பிடித்த மனதில் இருந்துதான் வருகிறது. ஆசையின்றி இருத்தல் தான் கௌதம புத்தரின் ஒட்டு மொத்த போதனையாகும். கோயில்கள் மற்றும் மடாலயங்களை கட்டுதல், ஆயிரக்கணக்கான துறவிகளுக்கு அன்னம் அளித்தல் போன்ற புண்ணியச் செயல்களை நீங்கள் உங்களது மனதில் ஓர் ஆசையோடு செய்து கொண்டிருந்தால், நீங்கள் நரகத்திற்கான உங்களது பாதையை தயார் செய்து கொண்டு இருக்கிறீர்கள். இந்த விஷயங்களை நீங்கள் வெறுமனே சந்தோஷத்திற்காகவும், உங்களது ஒட்டுமொத்த சாம்ராஜ்யத்தோடும் உங்களது மகிழ்ச்சியை பகிர்ந்து கொள்வதற்காகவும், எந்த இடத்திலும் இவற்றுக்காக எனக்கு வெகுமதி கிடைக்க வேண்டும் என்கிற சிறிதளவு ஆசையும் கூட இல்லாமல் செய்தால் அதன்பிறகு இந்த செயல்களே உங்களுக்கு வெகுமதி போன்று ஆகிவிடும். அப்படி இல்லையெனில் நீங்கள் புத்தரின் போதனைகளில் உள்ள ஒட்டு மொத்த குறிப்பையும் தவறவிட்டு விடுகிறீர்கள்'' என்று போதி தருமர் கூறினார்.

அப்போது வூ சக்கரவர்த்தி போதி தருமரிடம், "எனது மனம் முழுவதும் எண்ணங்கள் நிறைந்து உள்ளது. நான் எனது மனதில் அமைதியை உருவாக்க முயற்சித்துக் கொண்டிருக்கிறேன். ஆனால் நான் தோற்றுவிட்டேன். ஏனெனில் இந்த எண்ணங்கள் மற்றும் அவற்றின் கூச்சலால், நீங்கள் கூறுகின்ற அந்த உள் குரலை என்னால் கேட்க முடியவில்லை. அதைப்பற்றி எனக்கு எதுவும் தெரியாது" என்று கூறினார்.

உடனே போதி தருமர் அவரிடம், "அப்படியானால் நான் தங்கி இருக்கப் போகின்ற மலையில் உள்ள கோயிலுக்கு, உங்களது பாதுகாவலர்கள் யாரும் இல்லாமல் நீங்கள் மட்டும் தனியாக அதிகாலை நான்கு மணிக்கு வாருங்கள். அப்போது நான் உங்களது மனதை எப்போதைக்குமே அமைதியாக இருக்கும்படி செய்து விடுகிறேன்" என்று கூறினார்.

இந்த மனிதர் புதுமையானவராகவும், மூர்க்கத்தனமான வராகவும் இருப்பதாக அந்த சக்கரவர்த்தி நினைத்தார். அவர் அநேக துறவிகளை சந்தித்து இருக்கிறார். அவர்கள் மிகவும் பணிவாகக் காணப்பட்டனர். ஆனால், இந்த மனிதரோ, "நான் ஒரு மிகப்பெரிய நாட்டின் சக்கரவர்த்தி என்பதைப் பற்றியும் கூட கவலைப்படாதவராக இருக்கிறார். மேலும் அதிகாலை நான்கு மணிக்கு இருட்டில், அதுவும் தனியாக இவரிடம் போக வேண்டியுள்ளது. இந்த மனிதர் ஆபத்தானவர் போன்று தெரிகிறது" என்று நினைத்தார். போதி தருமர் தன்னுடன் எப்போதும் ஒரு பெரிய கைத்தடியை எடுத்துக்கொண்டு செல்வது வழக்கம்.

அன்று இரவு முழுவதும் அந்த சக்கரவர்த்தியால் தூங்க முடியவில்லை. அவர் தனக்குள்ளே, 'நாம் போவதா அல்லது போகாமல் இருப்பதா? ஏனெனில் இந்த மனிதர் எதுவும் செய்வார் போல் தெரிகிறது. இவரை முற்றிலும் நம்பமுடியவில்லை' என்று நினைத்தார். ஆனால் அதற்கு மாறாக அவர் தனது உள்ளத்தில் இந்த மனிதரின் நேர்மையை உணர்ந்தார். இவர் போலித்தன மானவர் அல்லர் என்பதை உணர்ந்தார். அவரோ ஒரு பிச்சைக்காரர். ஆனால் நீயோ ஒரு சக்கரவர்த்தி என்பதைப் பற்றி கூட அவர் கொஞ்சமும் கவலைப்படவில்லை. அவர் முன்பு நீ ஒரு பிச்சைக்காரர் போன்று இருக்கிறாய். "நான் உனது மனதை

எப்போதும் அமைதியாக இருக்கும்படி செய்து விடுகிறேன்'' என்று சொல்கிற விதம் பயப்படும்படி இருந்தது.

அந்த சக்கரவர்த்தி தனக்குள், ''விநோதமாக உள்ளது. இந்தியாவில் இருந்து வந்த புத்திசாலிகள் அநேகம் பேரிடம் நான் கேட்டிருக்கிறேன். அவர்களும் எனக்கு தியான செய்முறை களையும், நுணுக்கங்களையும் கற்றுக் கொடுத்தனர். அவற்றை நான் பயிற்சி செய்தும் வருகிறேன். ஆனால் எதுவுமே நடக்கவில்லை. ஆனால் இந்த விநோதமான மனிதர் கிட்டத்தட்ட பைத்தியம் போன்று அல்லது குடிகாரன் போன்று தோன்றுகிறார். மேலும் விநோதமான முகத்தில் மிகப்பெரிய கண்களுடன் அவர் பயத்தை உருவாக்குகிறார். ஆனால் இவர் நேர்மையானவராகவும் கூட தெரிகிறார். இவர் ஒரு கொடுமையான கருத்தாக இருக்கிறார். ஆனால் நாம் உயிரை பணயம் வைப்பது மதிப்பு மிக்கது. இவரால் என்ன செய்ய முடியும்; அதிகம் போனால் இவர் என்னைக் கொன்று போடலாம்' என்று நினைத்தார். இறுதியாக அவரால் தனக்குள் உள்ள கிளர்ச்சியை தடுக்க முடியவில்லை. ஏனெனில் அந்த மனிதர், ''நான் உனது மனதை எப்போதும் அமைதியில் இருக்கும்படி செய்து விடுகிறேன்'' என்று வாக்குறுதி கொடுத்திருக்கிறார்.

அதிகாலை இருளில் நான்கு மணிக்கு வூ சக்கரவர்த்தி தனியாக கோயிலுக்குச் சென்றார். அப்போது போதி தருமர் கோயில் படிக்கட்டில் தனது கைத்தடியுடன் நின்று கொண்டிருந்தார். போதி தருமர் சக்கரவர்த்தியைப் பார்த்து, ''இரவு முழுவதும் போவதா அல்லது வேண்டாமா என்று நீ விவாதம் செய்தபோதிலும் நீங்கள் வருவீர்கள் என்று எனக்குத் தெரியும். நீங்கள் என்ன விதமான சக்கரவர்த்தி. இந்த அளவுக்கு கோழையாக இருக்கிறீர்கள். இந்த ஏழைத் துறவியைப் பார்த்து, இந்த கைத்தடியைத் தவிர வேறு எதுவும் இந்த உலகில் இல்லாத ஓர் ஏழை பிச்சைக்காரனைப் பார்த்து பயப்படுகிறீர்கள். ஆனால் இந்த கைத்தடியைக் கொண்டுதான் நான் உங்களது மனதை அமைதியில் ஆழ்த்தப் போகிறேன்'' என்று கூறினார்.

உடனே அந்த சக்கரவர்த்தி, ''அடக் கடவுளே, ஒருவரது மனதை ஒரு கைத்தடியை கொண்டு அமைதியாக்கிட முடியும்

என்று யாராவது கேள்விப்பட்டது உண்டா! இந்தத் தடியினால் அவனது தலையில் அடித்தால் அத்தோடு அவன் கதை முடிந்துவிடும். அதன்பின்னர் அந்த ஆளின் மனம் மட்டுமல்ல அவனும்கூட அமைதியாகி விடுவான். ஆனால் இப்போது நாம் திருப்பிச் சொல்வது மிகவும் தாமதமான ஒரு செயலாக இருக்கும்" என்று நினைத்தார்.

போதி தருமர், அந்த சக்கரவர்த்தியிடம், "இந்த கோயிலின் முற்றத்தில் உட்காருங்கள்" என்றார். அங்கு சுற்றிலும் ஒருவர்கூட இல்லை. "உங்களது கண்களை மூடிக் கொள்ளுங்கள். உங்களுக்கு முன்னால் நான் எனது கைத்தடியுடன் உட்கார்ந்திருக்கிறேன். உங்களது மனதை பிடித்துக் கொள்வதுதான் உங்களது வேலை. எனவே உங்களது கண்களை மூடிக்கொண்டு, உங்களுக்குள் அந்த மனதைத் தேடிச் செல்லுங்கள். அது எங்கு உள்ளது என்று நீங்கள் தேடிக் கண்டுபிடியுங்கள். நீங்கள் அதைப் பிடித்துவிட்ட அந்த நொடிப்பொழுதே என்னிடம், "அது எங்கு இருக்கிறது" என்று கூறுங்கள். அதன்பின்னர் மீதி வேலைகளை எனது கைத்தடி பார்த்துக் கொள்ளும்" என்று கூறினார்.

உண்மையை அல்லது அமைதியை அல்லது மௌன நிலையை தேடுகின்ற எந்த ஒரு சாதகருக்கும் இது ஒரு விநோதமான அனுபவமாக இருந்திருக்கும். ஆனால் இப்போது வேறு வழி இல்லை. வூ சக்கரவர்த்தி அங்கே கண்களை மூடிக்கொண்டு உட்கார்ந்தார். அவர் தனக்குள் சுற்றிலும் பார்த்தார். மனம் என்கிற ஒன்று அங்கு இல்லை. அவர் கைத்தடி தனது வேலையைச் செய்து விட்டது. முதல் முறையாக அவர் அப்படிப்பட்டதொரு சூழ்நிலையில் இருந்தார். நீங்கள் உங்களது மனதை கண்டுபிடித்துவிட்டால், இந்த மனிதர் தனது கைத்தடியைக் கொண்டு என்ன செய்வார் என்று யாருக்கும் தெரியாது. அதுவும் அந்த அமைதியான மலைப்பிரதேசத்தில் போதி தருமரின் முன்னிலையில் என்ன நடக்கும் என்பதை யாரும் அறிய மாட்டார்கள். போதி தருமருக்கென்று தனிப்பட்ட கவர்ச்சியான தோற்றம் உண்டு. அநேக மெய்ஞ்ஞானிகள் இருந்தனர். ஆனால் போதி தருமர் ஒரு எவரெஸ்ட் மலை போன்று தனியாக நின்றார். அவரது ஒவ்வொரு செயலும் அசல் செயல்களாகவும், தனித்துவம்

மிக்கதாகவும் இருந்தது. அவரது ஒவ்வோர் அசைவும் அவரது சொந்த கையெழுத்தை பெற்றிருந்தது. அது மற்றவர்களிடம் இருந்து பெற்றது அல்ல.

சக்கரவர்த்தி தனது மனதைத் தேடிக் கண்டுபிடிப்பதற்கு கடின முயற்சி செய்தார். ஆனால் முதல் முறையாக அவரால் அந்த மனதைக் கண்டுபிடிக்க முடியவில்லை. இது ஒரு சிறிய தந்திரம். நீங்கள் ஒருபோதும் அதைத் தேடிப் பார்க்காததால் தான் மனம் என்பது அங்கு உள்ளது. நீங்கள் ஒருபோதும் அதுகுறித்து விழிப்புணர்வுடன் இல்லாமல் இருப்பதால் மட்டுமே அது அங்கு இருக்கிறது. நீங்கள் அதைத் தேடிப் பார்க்கும்போது நீங்கள் விழிப்புணர்வுடன் இருப்பதால் அந்த விழிப்புணர்வு அதை நிச்சயமாக முழுவதுமாக கொன்று விடுகிறது. நேரம் கடந்தது. அந்த அமைதியான மலையும், குளிர்ந்த தென்றலுடன் சூரியன் உதித்தது. சக்கரவர்த்தி வூ வின் முகத்தில் அப்படிப்பட்டதொரு அமைதியை, மௌன நிலையை, ஒரு சிலை போன்று அசையாத தன்மையை போதி தருமரால் காண முடிந்தது. அவர் சக்கரவர்த்தியை உலுக்கி அவரிடம், "நீண்ட நேரம் ஆகிவிட்டது. நீங்கள் உங்களது மனதை தேடிக் கண்டுபிடித்து விட்டீர்களா?" என்று கேட்டார்.

அதற்கு வூ சக்கரவர்த்தி, "உங்களது கைத்தடியை பயன்படுத்தாமலேயே நீங்கள் எனது மனதை முற்றிலுமாக அமைதிப்படுத்தி விட்டீர்கள். என்னிடம் மனம் என்கிற ஒன்று இல்லை. மேலும் நீங்கள் கூறிய அந்த உள்குரலையும் நான் கேட்டேன். நீங்கள் கூறியவை எல்லாம் சரிதான் என்பதை நான் இப்போது அறிந்து கொண்டேன். உங்களுக்கு வெகுமதி கொடுப் பதற்கு இங்கு யார் இருக்கிறார்கள்? இது ஒரு குழந்தைத்தனமான எண்ணம், உங்களுக்குத் தண்டனை கொடுப்பதற்கு இங்கு யார் இருக்கிறார்கள்? உங்களது செயல்கள்தான் உங்களுக்குத் தண்டனை. மேலும் உங்களது செயல்கள்தான் உங்களுக்கு வெகுமதி. நீங்கள்தான் உங்களது விதியின் எஜமான்" என்று கூறினார்.

உடனே போதி தருமர், "நீங்கள் ஒரு அபூர்வமான சீடர். நான் உங்களை நேசிக்கிறேன். நான் உங்கள் மீது மரியாதை கொள்கிறேன். நீங்கள் ஒரு சக்கரவர்த்தி என்பதற்காக அல்ல.

ஆனால் வெறுமனே ஒரே ஒரு முறை உட்கார்ந்து இருந்தபோதே இந்த அளவுக்கு உங்களது மனதின் இருள் மறைந்து போகும் அளவுக்கு அதிக வெளிச்சத்தையும், விழிப்புணர்வையும், கொண்டு வந்த உங்களது தைரியத்திற்காக உங்களுக்கு மரியாதை கொடுக்கிறேன்" என்று கூறினார்.

போதி தருமரை தனது அரண்மனைக்கு வரும்படி வூ கேட்டுக் கொண்டார். அதற்கு போதி தருமர், "அது எனது இடம் அல்ல. நான் எவ்வளவு மூர்க்கத்தனமானவனாக இருக்கிறேன் என்பதை நீங்களே பார்த்தீர்கள். முன்கூட்டியே நான் அறியாத செயல்களை எல்லாம் நான் செய்துகொண்டு இருக்கிறேன். நான் நொடிக்கு நொடி, தானே எழுகின்ற இயல்புப்படி வாழ்பவன். நான் எப்படி நடந்து கொள்வேன் என்று முன்கூட்டியே உங்களால் தீர்மானிக்க முடியாது. உங்களது மக்களுக்கு உங்களது அரச சபைக்கு, உங்களுக்கு நான் தேவையற்ற சிக்கல்களை உருவாக்கி விடுவேன். நான் அரண்மனைகளுக்கு உரியவன் அல்லன், நான் எனது மூர்க்கத்தனத்தில் வாழ்வதற்கு விட்டு விடுங்கள்" என்று கூறினார்.

அவர் தாய் (TAI) என்னும் பெயருடைய மலையில் வசித்தார். இரண்டாவது கதை என்னவென்றால் தேயிலையை உருவாக்கிய முதல் மனிதர் போதி தருமர் என்பதாகும். TAI என்னும் பெயரில் இருந்துதான் Tea என்னும் பெயர் வந்துள்ளது. ஏனெனில் TAI மலையில்தான் தேயிலை உருவாக்கப்பட்டது. மேலும் இந்த TAI என்பதில் இருந்துதான் எல்லா மொழிகளிலும் Tea (தேநீர்) என்பதற்கான வார்த்தை உருவாக்கப்பட்டது. ஆங்கிலத்தில் அது Tea, இந்தியில் CHAI, Tai என்கிற அந்த சீன வார்த்தையை CHA என்பது போன்றும்கூட உச்சரிக்கலாம். தேநீருக்கு மராத்தி மொழியில் மிகச்சரியாக CHA என்றே கூறப்படுகிறது.

தேயிலையை போதி தருமர் எப்படிப்பட்ட விதத்தில் உருவாக்கினார் என்பது சரித்திரமாக இருக்க முடியாது. ஆனால் அது மிகவும் சிறப்பு மிக்கது. கிட்டத்தட்ட எல்லா நேரமும் அவர் தியானம் செய்துகொண்டே இருப்பார். மேலும் சிலசமயம் அவர் இரவில் தூங்கி விடுவார். எனவே, தூங்கி விழாமல் இருக்கவும், தனது கண்களுக்கு ஒரு பாடம் புகட்டவும், அவர் தனது கண்களின்

இமைகளில் உள்ள எல்லா முடிகளையும் எடுத்து கோயில் மைதானத்தில் தூக்கி வீசினார். அந்த கண் இமையின் முடிகளில் இருந்து தேயிலைச் செடிகள் வளர்ந்ததாக கதையில் கூறப்பட் டுள்ளது. அவை தான் முதல் தேயிலைச் செடிகள். அதனால்தான் நீங்கள் தேநீர் அருந்தும்போது உங்களால் அதன்பின்னர் தூங்க முடிவதில்லை. மேலும் புத்த மதத்தில் தியானம் செய்வதற்கு அது ஒரு வழக்கமான ஒன்றாக ஆகிவிட்டது. தேநீர் தியானத்திற்கு அளவுகடந்த உதவி செய்கிறது. எனவே ஒட்டுமொத்த புத்த மத உலகமும் தியானத்தின் ஒரு பகுதியாக தேநீர் அருந்துகிறது. ஏனெனில் அது உங்களை உஷாராகவும், விழிப்புடனும் இருக்கச் செய்கிறது.

சீனாவில் இரண்டு மில்லியன் புத்தத் துறவிகள் இருந்த போதிலும் கூட அதில் நான்கு பேரை மட்டுமே சீடர்களாக இருப்பதற்குத் தகுதியுடையவர்களாக போதி தருமர் கண்டு கொண்டார். அவர் உண்மையிலேயே மிகவும் தேர்வு செய்து எடுக்கக்கூடியவர். ஹுய் கோ (HUI KO) என்னும் அவரது முதல் சீடரை தேர்ந்தெடுப்பதற்கு அவருக்கு கிட்டத்தட்ட ஒன்பது ஆண்டுகள் ஆயிற்று.

ஒன்பது வருடங்கள் என்பது சரித்திரப்பூர்வமான உண்மை. ஏனெனில் அதற்கு பழங்கால குறிப்புகள் உள்ளன. மற்றவர்கள் அதைக் குறிப்பிடவில்லை என்றாலும் கூட போதி தருமருடன் சம காலத்தில் வாழ்ந்தவர்கள் அனைவரும் அதைப்பற்றி குறிப்பிட்டு இருக்கிறார்கள். வூ சக்கரவர்த்தியை அரண்மனைக்குத் திருப்பி அனுப்பிய பிறகு அவர் கோயிலின் சுவரைப் பார்த்து ஒன்பது ஆண்டுகள் அப்படியே உட்கார்ந்து விட்டார். அவர் அதை ஒரு மிகப்பெரிய தியானமாக ஆக்கிவிட்டார். அவர் வெறுமனே அந்த சுவரைப் பார்த்துக் கொண்டே இருந்தார். இப்போது, நீங்கள் ஒரு சுவரினை நீண்ட காலம் பார்த்துக்கொண்டு இருந்தால் உங்களால் சிந்திக்க முடியாது. கொஞ்சம் கொஞ்சமாக அந்த சுவரினைப் போன்று மனத்திரையும் கூட வெறுமையானதாக ஆகிவிடுகிறது.

மேலும் இரண்டாவதாக ஒரு காரணமும் இருந்தது. "எனக்கு சீடராக இருப்பதற்கு தகுதியுள்ள யாரோ ஒருவர் வருகிற வரையில்,

நான் மற்றவர்களை பார்க்க மாட்டேன்'' என்றும் அவர் அறிவித்திருந்தார்.

மக்கள் அவரைப் பார்ப்பதற்கு வருவார்கள். ஆனால் அவர்கள் அவருக்குப் பின்னால் உட்கார்ந்து இருப்பார்கள். அது ஒரு விநோதமான சூழ்நிலையாக இருக்கும். யாரும் இப்படிப்பட்ட வழியில் பேசியது கிடையாது. அவர் சுவரிடம் பேசுவார். மக்கள் அவருக்குப் பின்னால் உட்கார்ந்து கொண்டு இருப்பார்கள். ஆனால் அவர் பார்வையாளர்களை நோக்கித் திரும்ப மாட்டார். ஏனெனில், ''பார்வையாளர்கள் அதிகமாக எனது மனதை காயப் படுத்துகின்றனர். அவர்களும்கூட ஒரு சுவர் போன்று இருக் கிறார்கள். யாரும் புரிந்து கொள்வதில்லை. மேலும் இப்படிப்பட்ட அறியாமை நிலையில் இருக்கும் மக்களை பார்ப்பது மிகவும் ஆழமாக மனதை காயப்படுத்துகிறது. ஆனால் ஒரு சுவரைப் பார்ப்பதில் எந்த ஒரு கேள்வியும் எழுவதில்லை; ஒரு சுவர் வெறுமனே ஒரு சுவர்தான். அந்த சுவரினைக் கேட்க முடியாது. எனவே அதனால் மனம் காயப்பட வேண்டிய அவசியம் கிடையாது. யாராவது ஒருவர் தனது செயல்களின் மூலம் எனது சீடராக இருப்பதற்குத் தயாராக இருக்கிறார் என்பதை நிரூபித்தால் மட்டுமே நான் பார்வையாளர்கள் பக்கம் திரும்புவேன்'' என்று கூறினார்.

ஒன்பது வருடங்கள் கடந்துவிட்டன. என்ன செய்வது என்று மக்களுக்குத் தெரியவில்லை. எந்த விதமான செயல் அவரை திருப்திப்படுத்தும் என்று தெரியவில்லை. அவர்களால் அதைக் கண்டுகொள்ள முடியவில்லை. அதன் பின்னர்தான் இந்த ஹுய் கோ என்னும் இளைஞன் வந்தான். அவன் வாளினால் தனது கைகளில் ஒன்றினை வெட்டி போதி தருமர் முன்னால் வீசி எறிந்துவிட்டு அவரிடம், ''இது வெறும் ஆரம்பம் மட்டுமே. நீங்கள் திரும்புங்கள். அல்லது எனது தலை உங்களுக்கு முன்னால் வந்து விழும். நான் எனது தலையையும்கூட வெட்டப் போகிறேன்'' என்று கூறினான்.

போதி தருமர் திரும்பிப் பார்த்துவிட்டு, 'உண்மையிலேயே எனக்குத் தகுதி உள்ள ஆள் நீதான். உனது தலையை வெட்ட

வேண்டிய அவசியம் இல்லை. நாம் அதைப் பயன்படுத்த வேண்டும்'' என்று கூறினார்.

ஹூய் கோ என்கிற இந்த மனிதர்தான் அவரது முதல் சீடர்.

இறுதியாக அவர் சீனாவை விட்டுக் கிளம்பும்போது அல்லது சீனாவை விட்டு வெளியேற நினைத்தபோது அவர் தனது நான்கு சீடர்களையும் அழைத்தார். ஹூய் கோவிற்குப் பிறகு மேலும் மூன்று பேர் சேர்ந்திருந்தனர். அவர் சீடர்களிடம், ''எனது போதனைகளின் சாராம்சத்தை தந்தி வாசகங்கள் போல, சிறிய வாக்கியங்களில், எளிமையான வார்த்தைகளில் என்னிடம் கூறுங்கள். நாளைக் காலையில் நான் இமயமலைக்கு திரும்பி போவதற்கு தீர்மானித்திருக்கிறேன். எனவே உங்கள் நால்வரில் ஒருவரை நான் எனக்குப்பின்னர் குருவாக, வாரிசாக தேர்வு செய்ய இருக்கிறேன்'' என்று கூறினார்.

முதல் ஆள், ''உங்களது போதனையானது மனதைக் கடந்து சென்று முற்றிலும் அமைதியாக இருந்தால் அதன்பின்னர் எல்லாமே அதன் போக்கில் நிகழ ஆரம்பிக்கும் என்பதாகும்'' என்று கூறினான்.

உடனே போதி தருமர், ''நீ தவறாகக் கூறவில்லை. ஆனால் நீ என்னைத் திருப்திப்படுத்தவில்லை. நீ எனது வெளிப்பகுதியான தோலினை மட்டுமே பெற்றிருக்கிறாய்'' என்று கூறினார்.

இரண்டாம் ஆள், ''நான் என்பது இல்லை. மேலும் இருப்பு நிலை மட்டுமே இருக்கிறது என்பதை அறிந்து கொள்வதுதான் உங்களது அடிப்படை போதனை'' என்றான்.

உடனே போதி தருமர், ''கொஞ்சம் பரவாயில்லை. ஆனால் எனது தரத்திற்கு ஏற்றபடி இல்லை. நீ எனது எலும்புகளைப் பெற்றிருக்கிறாய், உட்கார்'' என்று கூறினார்.

மேலும் மூன்றாம் மனிதர், ''அதுகுறித்து எதுவும் சொல்ல முடியாது. அதைப்பற்றி சொல்வதற்கு எந்த ஒரு வார்த்தையும் தகுதியுடையதாக இல்லை'' என்று கூறினார்.

உடனே போதி தருமர், ''நல்லது. ஆனால் இப்போது நீ ஏற்கனவே அதைப்பற்றி கொஞ்சம் கூறிவிட்டாய். நீ கூறியதிலேயே

நீ முரண்பட்டு விட்டாய். கீழே உட்கார். நீ எனது எலும்பு மஜ்ஜையைப் பெற்றிருக்கிறாய்'' என்று கூறினார்.

மேலும் நான்காவதாக அவரது முதல் சீடர் ஹுய் கோ வந்தார். அவர் போதி தருமரின் காலடியில் எந்த ஒரு வார்த்தையும் கூறாமல் இருந்தார். அவரது கண்களில் கண்ணீர் உருண்டோடியது. போதி தருமர் அவரைப் பார்த்து, "நீ அதைக் கூறிவிட்டாய். நீதான் எனது வாரிசாக இருக்கப் போகிறாய்'' என்று கூறினார்.

ஆனால் அன்றைய தினம் இரவில் யாரோ ஒரு சீடரால் போதி தருமருக்கு விஷம் கொடுக்கப்பட்டு பழிவாங்கப்பட்டார். ஏனெனில் அந்த சீடர் அவரது வாரிசாக தேர்ந்தெடுக்கப்பட் வில்லை. எனவே அவர்கள் அவரைப் புதைத்து விட்டனர். மேலும் இதில் விநோத மான ஒரு கதை என்னவென்றால், மூன்று ஆண்டுகளுக்குப் பின்னர் சீனாவில் இருந்து வெளியேறி இமயமலை நோக்கி நடந்து வந்த அரசு அதிகாரி ஒருவர் போதி தருமரை அவரது கைத்தடியுடனும், அந்தக் கைத்தடியில் அவரது செருப்புகளில் ஒன்றும் தொங்கிக் கொண்டிருக்க அவர் வெறும் காலுடன் நடந்து வருவதைப் பார்த்திருக்கிறார்.

அந்த அதிகாரிக்கு போதி தருமரைத் தெரியும். அவரை அநேக முறை சென்று பார்த்திருக்கிறார். இந்த மனிதரோடு அவர் அன்பு வசப்பட்டுவிட்டார். அவர் போதி தருமரிடம், "இந்தக் கைத்தடியின் அர்த்தம் என்ன, மேலும் அதில் ஒரு செருப்பு மட்டும் தொங்கிக் கொண்டிருப்பதற்கு என்ன அர்த்தம்?'' என்று கேட்டார். அதற்குப் போதி தருமர், 'விரைவில் நீ அதை அறிந்து கொள்வாய். எனது மக்களை நீ சந்தித்தால் நான் காலா காலத்திற்கும் இமயமலையில் இருப்பதற்காக போய்க்கொண்டு இருப்பதாக கூறிவிடு'' என்று கூறினார்.

அந்த அதிகாரி உடனடியாக எவ்வளவு வேகமாக அவரால் செல்ல முடியுமோ அவ்வளவு வேகமாக, மலையில் போதி தருமர் வாழ்ந்து வந்த மடாலயத்தை அடைந்தார். அங்கு போதி தருமருக்கு விஷம் கொடுக்கப்பட்டு அவர் இறந்துவிட்டதாக கூறப்பட்டதை அவர் கேட்டார். மேலும் அங்கு ஒரு கல்லறையும் இருந்தது. அந்த அதிகாரி அதைப்பற்றி கேள்விப்பட்டது

கிடையாது. ஏனெனில் அவர் அந்த சாம்ராஜ்யத்தின் எல்லைப் பகுதியில் வேலை பார்த்து வந்தார். உடனே அந்த அதிகாரி, "அடக் கடவுளே, நான் அவரைப் பார்த்தேன். மேலும் நான் ஏமாறுவதற்கும் வழி இல்லை. ஏனெனில் இதற்கு முன்பு நான் அவரை அநேக தடவை பார்த்திருக்கிறேன். அவர் அதே மனிதர்தான், அதே சுட்டெரிக்கும் கண்கள், அதே மூர்க்கத் தனமான சுட்டெரிக்கும் பார்வை, மேலும் இவை எல்லாவற்றிற்கும் மேலாக ஒற்றைச் செருப்பு தொங்குகின்ற அவரது கைத்தடியை அவர் தூக்கிக்கொண்டு நடந்து கொண்டிருந்தார்" என்று கூறினார்.

சீடர்களால் தங்களின் ஆர்வத்தை அடக்கமுடியவில்லை. எனவே அவர்கள் கல்லறையைத் திறந்து பார்த்தார்கள். அவர்களால் அங்கு பார்க்க முடிந்தது எல்லாம் ஒரே ஒரு செருப்பு மட்டுமே. அதன்பின்னர் தான் அந்த அதிகாரி, "அதன் அர்த்தத்தை நீ கண்டுகொள்வாய்; விரைவில் நீ அதை அறிந்து கொள்வாய்" என்று போதி தருமர் ஏன் கூறினார் என்பதைப் புரிந்து கொண்டார்.

இயேசு உயிர்த்தெழுந்தது குறித்து நாம் அதிகம் கேள்விப்பட்டிருக்கிறோம். ஆனால் போதி தருமர் உயிர்த்தெழுந்ததைப் பற்றி யாரும் அதிகம் பேசவில்லை. ஒருவேளை அவர்கள் போதி தருமரை புதைக்கும்போது அவர் ஒருவித கோமா நிலையில் இருந்திருக்கலாம். ஆனால் அதற்குப் பிறகு புலன்கள் உயிர்பெற்று கல்லறையை விட்டு வெளியேறி இருக்கலாம். வெளியேறும்போது ஒற்றை செருப்பை அங்கேயே விட்டுவிட்டு, அடுத்த செருப்பை தனது கைத்தடியில் மாட்டிக்கொண்டு அவரது திட்டப்படி அவர் வெளியேறி இருக்கலாம்.

அவர் இமயமலையின் முடிவில்லாத பனிப்பிரதேசத்தில் மரணமடைய விரும்பினார். அவர் தனக்குக் கல்லறையோ, கோயிலோ அல்லது சிலையோ இருக்கக்கூடாது என்று விரும்பினார். தான் வழிபடப்படுவதற்கான எந்த ஒரு சிறு காலடித் தடத்தையும் கூட விட்டு விட்டுப்போக அவர் விரும்பவில்லை. அவரை நேசித்தவர்கள் தங்களின் சொந்த உயிர் உணர்விற்குள் தான் நுழைய வேண்டும். "யாராலும் நான் வழிபடப்படாமல்

இருக்கப் போகிறேன்" என்று அவர் கூறினார். மேலும் அவர் கிட்டத்தட்ட மெல்லிய காற்றில் மறைந்து போய்விட்டார். அதற்குப் பிறகு என்ன நடந்தது, அவர் எங்கு இறந்தார் என்பதைப்பற்றி யாரும் எதுவும் கேள்விப்படவில்லை. இமயமலையின் முடிவில்லாத பனிப்பிரதேசத்தில் எங்காவது அவர் புதையுண்டு போயிருக்கலாம்.

இதுதான் போதி தருமர் என்ற அந்த மனிதர், மேலும் இவை மூன்றும் சிறிய சேகரங்கள். அவற்றை நாம் ஒட்டுமொத்தமாக ஒரே புத்தகமாக எடுத்துக்கொள்ளப் போகிறோம். இவை அவரது எழுத்துக்கள் அல்ல; ஏனெனில் அந்த மனிதரின் எந்த ஒரு தன்மையையும் இவை காட்டவில்லை. இவை அறிவுஜீவி சீடர்களின் குறிப்புகள்; எனவே இவற்றில் அடிப்படை மற்றும் முக்கிய தவறுகள், தவறான புரிதல்கள், தவறான விளக்கங்கள் கண்டிப்பாக இருந்தாக வேண்டும். அவர்கள் மனம் என்பது இல்லாமல் போய்விட்ட . மக்கள் அல்லர். அவர்களின் மனங்கள்தான் குறிப்புகள் எடுத்துக் கொண்டிருந்தது; அவர்களின் மனங்கள்தான் வார்த்தைகளைத் தேர்வு செய்தது.

போதி தருமர் வார்த்தைகளின் மனிதர் அல்லர், அவர் செயலில் காட்டுகின்ற மனிதர். அவர் ஒரு புத்தகத்தை எழுதுவதற்கான சாத்தியமே இல்லை. ஒருபோதும் தான் வழிபடப்படக்கூடாது என்று விரும்பிய ஒரு மனிதர். தனக்குப் பின்னால் யாரும் பின்தொடர்ந்து வருவதற்கு எந்த ஒரு காலடிச் சுவட்டையும் விடுவதற்கு ஒருபோதும் விரும்பாத ஒரு மனிதர்; ஒரு புத்தகத்தையும் கூட எழுத மாட்டார். ஏனெனில் அது அவரது காலடிச் சுவட்டைப் பின்பற்றி நடப்பதற்கு விட்டுச்செல்வதாகி விடும்.

ஆனால் அவை குறித்து நான் பேசுவதற்குத் தேர்ந்தெடுத்து விட்டேன். ஏனெனில் இந்த மூன்று சிறிய சேகரங்களும் மட்டுமே போதி தருமருடையவையாக பல நூற்றாண்டுகளாக நம்பப் படுகிறது. மக்கள் அவரது பேச்சைக் குறிப்பெடுத்தாலும்கூட அவற்றில் அங்கும் இங்குமாக போதி தருமருக்குரிய ஏதோ ஒன்று இருக்கிறது. ஏதோ ஒன்று குறிப்புகளுக்குள் நுழைந்துள்ளது. இதில்

எந்தப் பகுதி போதி தருமருடையது, எந்தப் பகுதி குறிப்புகள் எடுத்தவருடையது என்கிற வித்தியாசத்தைக் கண்டுபிடிப்பது எந்த ஒரு பண்டிதருக்கும் கூட மிகவும் கடினமானதொரு வேலையாகும். ஆனால் எனக்கு இது ஒரு பிரச்சினையே கிடையாது.

எது மாசுபடாத போதி தருமருடையது, மேலும் எது அதைத் தனதாக விளக்கிய பண்டிதரின் மனதில் மட்டுமே இருந்து வந்தது என்பதை நான் எனது சொந்த அனுபவத்தில் இருந்து அறிந்து கொள்வேன். எனவே இவை சாதாரணமாக வியாக்கியானங்கள் அல்ல. ஒருவிதத்தில் இது போதி தருமரைப் பற்றி உள்ளதில் அரிசியையும், உமியையும் தனியாக பிரிக்கின்ற முதல் முயற்சியாக இருக்கிறது.

முதல் வாக்குமூலம்: *பாதைக்கு அநேக சாலைகள் செல்கின்றன.* இதை போதி தருமர் சொல்லியிருக்க முடியாது. உண்மையை நோக்கி ஒரே ஒரு பாதை உள்ளது என்றும்கூட அவரால் சொல்ல முடியாது. நீங்கள் அந்த உண்மை நிலையாகவே இருக்கிறீர்கள் என்பதுதான் அவரது அணுகுமுறை. நீங்கள் எங்கும் போக வேண்டியதில்லை. நீங்கள் எங்கும் செல்வதை நிறுத்திவிட்டால் அப்போது உண்மை நிலையானது எங்கு உள்ளதோ அந்த வீட்டில் நீங்கள் வெறுமனே இருக்க முடியும். ஒரு பாதையில் பின்பற்றி செல்ல வேண்டும் என்ற கேள்விக்கே இடமில்லை; அதற்கு நேர்மாறாக எந்த ஒரு வழியையும் பின்பற்றி நடக்காமல் இருக்கிறீர்களா என்பதுதான் கேள்வி. அப்போது நீங்கள் இங்கேயே இருக்க முடியும். அப்போது நீங்கள் வெறுமனே உங்களுக்குள், இப்போதுள்ள பொழுதில் இருக்க முடியும். ஒவ்வொரு பாதையும் உங்களை வழிதவறிச் செல்லும்படி செய்துவிடும். இதுதான் போதி தருமரின்அணுகுமுறை. இந்த வாக்குமூலம் பண்டிதரின் வழியாக இருக்கிறது.

*பாதைக்கு அநேக சாலைகள் உள்ளன. ஆனால் அடிப் படையில் பகுத்தறிதல் மற்றும் பயிற்சி செய்தல் ஆகிய இரண்டும் மட்டுமே உள்ளது.*

போதி தருமர் இதைக் கூறுவதற்கான சாத்தியங்கள் இல்லை. நிச்சயமாக பகுத்தறிவானது உங்களின் உயிர் உணர்வின் இறுதி

உண்மை நிலைக்கு உங்களை வழிநடத்திச் செல்லாது. பகுத்தறிவு என்பது மனதின் ஒரு பகுதி. மேலும் இதைவிடவும் அதிகத் தவறானது செயல்படுத்தும் பாதை ஆகும். இதற்கு அந்தப் பாதையானது நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டது என்றும் நீங்கள் அதற்குத் தக்கபடி செயல்பட்டு உங்களை ஒழுங்குபடுத்திக் கொள்ள வேண்டும் என்றும் அர்த்தமாகி விடுகிறது. அப்போது நீங்கள் மற்றவர்களை பின்பற்றி போலியாக நடப்பதாக விடும். எனவே உங்களது அசல் முகத்திற்கு உங்களால் வரமுடியாமல் போய்விடும்.

எந்தவிதமான செயல் பயிற்சியும் தேவையில்லை. நீங்கள் எங்கு இருக்க வேண்டிய அவசியம் உள்ளதோ அங்குதான் நீங்கள் உண்மையிலேயே இருக்கிறீர்கள். இது நீங்கள் வெறுமனே சுற்றிச் சுற்றி வந்து கொண்டு உங்களது சொந்த உயிர் உணர்வில் ஒருபோதும் இல்லாமல் போய்விடுவது போன்று உள்ளது. அப்படி நீங்கள் உங்களது உயிர் உணர்வில் நிலையாகத் தங்கி இருப்பதற்கு அநேக பாதைகளும் இல்லை. அல்லது இரண்டு பாதைகளும் இல்லை.

*பகுத்தறிவு என்னும் சாலை வழியாக நுழைவது என்பதற்கு வழிகாட்டுதல் மூலமாக சாராம்சத்தை அறிந்து கொள்தல் என்று அர்த்தம்.*

இதற்கு தகவலான்து வேறு யாரிடம் இருந்தோ வருகிறது என்று அர்த்தம்.

*... மேலும் வெளிப்படையாக தெரியாத ஒரே மாதிரியான உண்மை இயல்பை எல்லா உயிரினங்களும் பகிர்ந்து கொள்கின்றன என்றும் நம்புவதாகும்...*

நம்பிக்கை என்னும் வார்த்தையை போதி தருமரால் பயன்படுத்த முடியாது. நம்பிக்கை என்னும் வார்த்தையை பயன்படுத்துவதில் அவர்தான் கடைசி மனிதராக இருப்பார். ஏனெனில் நம்பிக்கை என்பது குருடான மக்களை மட்டும் உருவாக்குகிறது. நம்பிக்கை என்பது ஒருபோதும் உங்களது கண்களாக ஆகிவிடாது. அது ஒருபோதும் உங்களுக்கு வெளிச்

சத்தை கொண்டு வருவதில்லை. ஆனால் தப்பெண்ணங்கள், அபிப்பிராயங்கள், கொள்கைகள் ஆகியவற்றை மட்டுமே கொண்டு வருகிறது. ஆனால் அவை அனுபவங்கள் அல்ல. போதி தருமர் அடிப்படையில் அனுபவங்களின் மீது மட்டுமே ஆர்வத்துடன் இருந்தார்.

*...ஏனெனில் அது மாயத்தோற்றம் மற்றும் மனக்கிளர்ச்சி யினால் மூடப்பட்டுள்ளது.*

இவை போதி தருமரின் தகுதிக்கு குறைவான, புறம்பான வாக்குமூலங்கள்.

*"மாயத்தோற்றத்தில் இருந்து உண்மை நிலையின் பக்கம் திரும்புகின்றவர்களும், சுவரினைப் பார்த்து தியானம் செய்பவர்களும் சுயம் மற்றும் ஏனையவை இல்லாமல் இருப்ப வர்களும் அனுபவமும் ஞானமும் ஒன்றானவர்களும் அசையாமல் இருப்பவர்களும், ஆகிய இவர்கள் அனைவரும் பகுத்தறிவுடன் முழுமையாக பேசப்படாத ஒப்பந்தத்தில் உள்ளனர்."*

இந்த வாக்குமூலத்தின் கடைசிப் பகுதி மாற்றப்பட வேண்டிய தாகும். 'பகுத்தறிவுடன்' என்பதற்குப் பதிலாக அது 'பிரபஞ்சத் தோடு' என்று இருக்க வேண்டும்.

இந்த துண்டுப்பகுதி போதி தருமரிடம் இருந்துதான் வந்துள்ளது என்பதை என்னால் முழுமையான உத்தரவாதத்துடன் கூறமுடியும் இதைப் புரிந்துகொள்ள முயற்சி செய்யுங்கள். சுவரினைப் பார்த்து தியானம் செய்பவர்களும் என்பதற்கு எண்ணங்களை கைவிட ஆரம்பித்தவர்களும் மனதை கைவிட்ட வர்களும் யாருடைய மனமானது எந்தவிதமான அசைவும் இல்லாமல், தூய்மையான அசையாத்தன்மையுடன் வெறுமனே ஒரு சுவர் போன்று திரை போன்று ஆகிவிடுகிறதோ அவர்களும் என்று அர்த்தமாகும். அவர்கள் ஆன்மா இல்லை என்பதை தங்களுக்குள் நான் என்னும் தன்முனைப்பு இல்லை என்பதை, "நான் இருக்கிறேன்" என்று கூறாமல் "இயற்கை இருக்கிறது, நான் இல்லை என்பதைப் புரிந்து கொள்கிறார்கள்."

ஆன்மா இல்லாமை என்பது கௌதம புத்தரின் அடிப்படைகளில் ஒன்றாகும். மேலும் போதி தருமர் நிச்சயமாக இதோடு ஒத்துப்போவார். ஏனெனில் கௌதம புத்தர் உருவாக்கிய அந்த ஒட்டுமொத்த புரட்சிக்கும் இதுதான் அஸ்திவாரம் போன்றது. அழிபவரும் ஞானியும் ஒன்றானவர்களும்... இதை கௌதம புத்தராலும் கூட சொல்ல முடியாது. ஒட்டுமொத்த வரலாற்றிலும், ஒட்டுமொத்த உலகிலும், சாதாரண மனிதனும் ஞானியும் வேறுபட்டவர்கள் அல்லர் என்று போதி தருமர் என்கிற ஒரே ஒரு தனி மனிதரால் மட்டுமே கூற முடியும். சாதாரண மனிதனும், ஞானியும் வேறுபட்ட தனிமனிதப் பண்புகளை மட்டுமே, வெளித்தோற்றத்தை மட்டுமே கொண்டு உள்ளனர். ஆனால் அவர்களுக்குள் உள்ள, உள்பகுதிகள், அவர்களின் அகஇயல் வெறுமனே ஒரே மாதிரியாகத்தான் இருக்கிறது. பாவியும், புனிதரும் ஒரே மாதிரியானவர்கள். ஒரு பாவி தேவை இல்லாமல் தனது குற்ற உணர்வினால் அவதிப்படுகிறான். அதேபோன்று ஒரு புனிதன் தேவை இல்லாமல் நான் உன்னைவிட புனிதமானவன்' என்ற தனது ஆணவத்தினால் அறியப்படுகிறான். அடிப்படையில் இருவரும் ஒரே மாதிரியானவர்கள். ஆன்மா இல்லாதவர்கள், தூய்மையான வெறுமையுள்ளவர்கள். மேலும் புனித நூல்களினால் அசையாமல் இருப்பவர்களும்... இத்தகைய தியானம் செய்கின்றவர்களை, வெறுமையை அறிந்து கொண்டவர்களை, நான் என்னும் தன்முனைப்பால் மாசுபடுத்தப்படாத தூய்மையான தன்னுணர்வை அறிந்து கொண்டவர்களை, புனித நூல்களில் என்னதான் கூறப்பட்டிருந்தாலும் கூட இவர்களை மாற்றிவிட முடியாது. இது சரியானது அல்ல என்று ஒட்டுமொத்தமாக எல்லா புனித நூல்களும் கூறினாலும்கூட இவர்கள் அதற்கு அசைந்து கொடுக்க மாட்டார்கள். எந்த ஒரு புனித நூலும் இவர்களை கலக்கத்தில் ஆழ்த்த முடியாது. இவர்கள் இந்த பிரபஞ்சத்தோடு முழுமையாக, பேசப்படாத ஒப்பந்தத்தில் இருக்கின்றனர், பகுத்தறிவுடன் அல்ல. இந்த சிறிய பகுதி மட்டும் போதி தருமருடையது அல்ல. இந்த புத்தகத்தை எழுதியவரால் இது சேர்க்கப்பட்டுள்ளது. பகுத்தறிவினால் நகர்தல் இல்லாமல் முயற்சி இல்லாமல் அவர்கள் நுழைந்து விடுகிறார்கள் என்று நாம் கூறுகிறோம். மீண்டும் இந்த

வாக்மூலம் நிச்சயமாக போதி தருமரிடம் இருந்து வந்துள்ளது. நகர்தல் இல்லாமல், ஏனெனில் எங்கும் போக வேண்டியது இல்லை. உங்களை நீங்கள் கண்டுகொள்வதற்கு நீங்கள் அசைவற்ற மௌன நிலையில் இருந்தாக வேண்டும். நகர்தல் இல்லாமல் மேலும் முயற்சி இல்லாமலும் இருந்தாக வேண்டும். ஏனெனில் முயற்சியானது நகர்தலை கொண்டு வந்துவிடும். நீ இல்லாதது போன்று வெறும் மௌன நிலையில், நகர்தல் இன்றி, முயற்சி இன்றி நீ வெறுமனே இருந்தாக வேண்டும். அவர்கள் இந்த பிரபஞ்சத்தின் இதயத்திற்குள் நுழைந்து விடுகிறார்கள்.

செயல்படுத்துதல் மூலமாக உள்ளே நுழைவது என்பது எல்லா பயிற்சிகளையும் உள்ளடக்கிய நான்கினை குறிக்கிறது.

இவை புத்தமத புனித நூல்களில் இருந்து வந்தாலும்கூட இந்த வாக்குமூலங்கள் போதி தருமரிடம் இருந்து வந்ததாக நான் நினைக்கவில்லை. எனவே இவற்றை நாம் கொஞ்சம் பார்ப்போம்.

அநீதியால் அவதிப்படல்... இது புத்தமத புனித நூல்களில் இருந்து வந்துள்ளது. இந்த முதல் விஷயத்தை போதி தருமரால் சொல்ல முடியாது. ஆனால் கௌதம புத்தரால் சொல்லமுடியும். மேலும் அநீதியால் அவதிப்படல், நிலைமைகளை மேற்கொள்ளுதல் ஆகிய இவை மிகவும் சிக்கலான வாக்குமூலங்கள். ஒரு மனிதன் நிறைவுடன் இருப்பதற்கு இது உதவ முடியும். ஆனால் அவனிடம் உள்ள எழுச்சிகளை எல்லாம் இது வெளியே எடுத்து விடுகிறது. அநீதியால் அவதிப்படல் என்பதை இரண்டு பக்கங்களில் இருந்தும் பார்க்க வேண்டும். ஒருபக்கம் அநீதியால் அவதிப்படல் என்பது கர்ம விதியின் ஒரு பகுதியாக இருக்கிறது. உங்களது போன பிறவியின் தீவினைகள் அதை உருவாக்கி விட்டன. இது வெறுமனே ஒரு தண்டனை. எனவே எந்த விதமான புகாரும் கூறாமல், எந்தவிதமான கிளர்ச்சியும் செய்யாமல் அதில் நீ அவதிப்படு. இது மேம்போக்காக ஒரு நிறைவை நிச்சயமாக உருவாக்கும். ஆனால் இது உங்களது தனி மனிதத்தன்மை என்னும் அழகான ஒன்றினை அழித்து விடும். உங்களுக்குள் உள்ள எழுச்சியாளனை இது அழித்து விடும். இது எழுச்சியளவில் ஒருவிதமான தற்கொலை.

இது நிச்சயமாக கௌதம புத்தரால் கற்பிக்கப்பட்டது. எனவேதான் இந்தியாவின் வறுமை, இரண்டாயிரம் ஆண்டுகளாக அடிமைத்தனம் ஆகியவற்றில் கௌதம புத்தருக்கும் கொஞ்சம் பங்கு உண்டு என்பதை நான் எப்போதும் கூறிக்கொண்டு வந்திருக்கிறேன். எந்தவிதமான புகாரும் கூறாமல் அநீதியை அவதியுடன் தாங்கிக் கொள், உன்னைச் சுற்றிலும் நிகழ்கின்ற எந்த சூழ்நிலைகளையும் நீ மேற்கொண்டு விடு என்று மக்களுக்கு கற்றுக்கொடுக்கப்பட்டது. உதாரணமாக, அடிமைத்தனமா அதை ஏற்றுக்கொள் என்று கற்பிக்கப்பட்டுள்ளது. இப்படி கௌதம புத்தரின் தாக்கம் மிகவும் பெரியது. இது இந்தியர்களின் உள்ளத்தில் ஆழமாக சென்று விட்டதுதான் வறுமைக்கும், நீண்ட அடிமைத்தனத்திற்கும் காரணமாக இருந்துவிட்டது. எந்த ஒரு நாடும் இப்படி இரண்டாயிரம் ஆண்டுகள் அடிமைத்தனத்தில் இருந்தது கிடையாது. மேலும் இன்று சுதந்திரம் அடைந்து விட்டபோதும்கூட இந்தியர்களின் மனமானது இன்னமும் ...... தத்துவப்படி ஓர் அடிமையாகவே உள்ளது.

உதாரணமாக் ரவீந்திரநாத் தாகூர் தனது கீதாஞ்சலி என்ற புத்தகத்திற்காக நோபல் பரிசு பெற்றார். அந்த புத்தகம் ஏற்கனவே பெங்காலி மற்றும் இந்தி மொழிகளில் இருபது ஆண்டுகளாக இருந்து வந்தது. யாரும் அதைப்பற்றி ஒருபோதும் அக்கறை காட்டவில்லை. ஆனால் அதற்கு நோபல் பரிசு கிடைத்தபோது, அது ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டபோது, உடனடியாக தாகூர் ஓர் உலகப் புகழ்பெற்ற மனிதராக ஆகிவிட்டார். அவர் கல்கத்தாவில் வசித்தார். மேலும் கல்கத்தா பல்கலைக்கழகம் அவருக்கு கௌரவ டாக்டர் பட்டம் அளிக்க விரும்பியது. ஆனால் அவர் மறுத்து விட்டார். தனது மறுப்பு கடிதத்தில் அவர், "நீங்கள் எனக்கு டாக்டர் பட்டம் கொடுக்கவில்லை, நீங்கள் நோபல் பரிசுக்குத்தான் டாக்டர் பட்டம் கொடுக்கிறீர்கள். உங்களது மனம் அந்த அளவுக்கு அடிமைப்பட்டு இருக்கிறது. எனது புத்தகம் இங்கு இருபது ஆண்டுகளாக இருக்கிறது. மேலும், எனது அசல் புத்தகத்தைவிட அதன் மொழிபெயர்ப்பு அவ்வளவு அழகானதாக இல்லை" என்று எழுதி இருந்தார். மொழிபெயர்ப்பானது வெகு தொலைவில் கேட்கின்ற எதிரொலி போன்றது. மேலும் அசலுக்கு

உள்ள அழகு மொழிபெயர்ப்பில் இருக்காது என்பதும் உண்மை தான்.

கவிதையை ஒரு மொழியில் இருந்து மற்றொரு மொழிக்கு மொழிபெயர்க்க முடியாது. உரைநடையை மட்டுமே மொழி பெயர்க்க முடியும். ஏனெனில் ஒவ்வொரு மொழியும் கருத்தில், பொருளில் மிகச்சிறிய வேறுபாடுகளைக் கொண்டது. மேலும் கவிதையில் அந்த மிகச்சிறிய வேறுபாடுகள் முக்கிய பங்காற்று வதால் அதை நீங்கள் சுலபமாக அடுத்த மொழிக்குக் கொண்டு செல்ல முடியாது.

நிலைமைகளை மேற்கொள்ளுதல், நிலைமை எப்படி இருந்தாலும் அது நமது தலைவிதி என்று மேற்கொள்ளல் போன்ற போதனை களைக் கூறியதன் மூலம் இந்தியாவின் வறுமைக்கும், அடிமைத் தனத்திற்கும் கௌதம புத்தர் நிச்சயமாக பொறுப்பானவராக ஆகிவிட்டார். அநீதியால் அவதிப்படும் போதும்கூட நீங்கள் புகார் சொல்லக்கூடாது. இது உங்களுக்குள் உள்ள எழுச்சியை, புரட்சியை கொன்று போடுகிறது. மேலும் எழுச்சியும், புரட்சியும் இல்லை எனில் நீங்கள் கிட்டத்தட்ட உயிரற்றவன் போன்றுதான் இருப்பீர்கள். உங்களது எழுச்சிதான் உங்களது வாழ்க்கை என்னும் சிற்றோடை ஆகும்.

மிகவும் காட்டமாக தனது வாக்குமூலங்களைக் கூறுகின்ற போதி தருமர் போன்றவர்கள் இந்த இரண்டையும் செயல்படுத்த வேண்டிய பயிற்சிகளாக கூறுவார்கள் என்று நான் நினைக்க வில்லை. என்றாலும்கூட மூன்றாம் விஷயம் நிச்சயமாக அவரிட மிருந்து தான் வந்துள்ளது. எதையுமே தேடாமல் இருத்தல் மற்றும் தர்மத்தை செயல்படுத்துதல்: இதில் தர்மம் என்கிற வார்த்தையை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். இது மொழிபெயர்க்கப்பட வில்லை. ஆனால் இதை மிகச் சுலபமாக மொழிபெயர்க்க முடியும். தர்மம் என்றால் சுய இயல்பு, தன் இயல்பு என்று அர்த்தம். உதாரணமாக சூடாக இருப்பது நெருப்பின் இயல்பு, குளிராக இருப்பது பனிக்கட்டியின் இயல்பு. மனிதனின் சுய இயல்பு என்ன? சுயம் இல்லாமை, மௌன நிலை மேலும் கருணை திடீரென்று மேலெழுந்து வருதல். இதை போதி தருமர் கூறியிருப்பார்.

கண்டிப்பாக அவர்தான் கூறியிருக்க வேண்டும். ஆனால் அதற்கு முன்பு எதையுமே தேடாமல் இருத்தல் என்கிற ஒரு நிபந்தனை உள்ளது. ஒவ்வொரு தேடுதலும் உங்களை, உங்களிடமிருந்து வெகு தொலைவிற்கு எடுத்துக்கொண்டு போய்விடுகிறது. எனவே எதையும் தேடாமல் இருத்தல் என்பது போதி தருமரின் போதனை களில் முக்கியமான ஒன்றாகும். எங்கும் போகாதீர்கள். உங்களது எல்லா சக்தியையும் உங்களுக்குள் இழுத்துக் கொள்ளுங்கள். உங்களது இதழ்களை எல்லாம் மூடிவிட்டு வெறுமனே உள்ளே இருங்கள். அப்போது தர்மம் என்றால் என்ன, சுய இயல்பு என்றால் என்ன என்று நீங்கள் அனுபவிப்பீர்கள். அதன்பின்னர் அதை பயிற்சி செய்யுங்கள், செயல்படுத்துங்கள். அதன்பின்னர் யாருமாக இல்லாதவர்-போன்று நீங்கள் செயலாற்றுங்கள். அதன்பின்னர் மாபெரும் கருணையோடு செயல் புரியுங்கள். அதன்பிறகு உங்களது ஒட்டுமொத்த வாழ்க்கையும் நீங்கள் ஒரு மனிதர் என்பதாக அல்லாமல், வெறுமனே இருக்கின்ற ஒரு இருப்பு நிலை என்பது போன்று இருக்கட்டும். ஏனெனில் உங்களுக்குள் சுயம் என்பது இல்லை.

*"முதலாவதாக. அநீதியால் அவதிப்படல். பாதையைத் தேடிச் செல்கின்றவர்கள். துரதிருஷ்டத்தை எதிர்கொள்ளும்போது அவர்கள் தங்களுக்குள்ளாகவே, கடந்து சென்ற எண்ணிலடங்கா காலங்களில்நான் தேவையானவற்றை விட்டுவிட்டு அற்பமான வற்றின் பக்கமாக திரும்பி இருப்பு நிலையின் எல்லா விதத்திலும் சுற்றித் திரிந்து விட்டதை எந்தக் காரணமும் இல்லாமல் கோபம் அடைந்து கொள்ளும், எண்ணிலடங்கா தீவினைகளால் குற்ற உணர்வு உடையவனாக ஆகிவிட்டேன். எனவே இப்போது நான் எந்தவிதமான தவறான செயல்களையும் செய்யாவிட்டாலும் கூட எனது கடந்தகால நடவடிக்கைகளுக்காக நான் தண்டிக்கப் படுகிறேன்."*

இந்த வார்த்தைகள், குறிப்பு எடுத்த அந்த மனிதரிடம் இருந்து வந்தவை.

*தீவினையானது அதன் பழங்களை கொடுக்கும்போது கடவுள்களோ அல்லது மனிதர்களோ அந்த பழங்களைப் பற்றி*

முன்கூட்டியே கண்டுகொள்ள முடியாது. எனவே நான் இது அநீதியானது என்று புகார் கூறினாலும், திறந்த இதயத்துடனும் ஏற்றுக் கொள்கிறேன்.”

இந்த வார்த்தைகள் நிச்சயமாக போதி தருமருடையது அல்ல.

துரதிருஷ்டங்களை நீ சந்திக்கும்போது நிலைகுலைந்து போகாதே. ஏனெனில் அது நடைமுறை அறிவைக் கொடுக்கிறது என்று சூத்திரங்கள் கூறுகின்றன. இப்படிப்பட்ட புரிதலினால் நீ பகுத்தறிவோடு ஒத்திசைந்து இருக்கிறாய். மேலும் அநீதியால் அவதிப்படுவதால் நீ பாதைக்குள் நுழைந்து விடுகிறாய்.

இந்த வார்த்தைகளில் போதி தருமரின் கையெழுத்து இல்லை.

இரண்டாவதாக நிலைமைகளை மேற்கொள்ளுதல்: அழிந்து போகக்கூடியவர்களாக நாம் இருப்பதால், நம்முடைய எண்ணப்படி அல்லாமல் நிலைமைகளாலேயே நாம் ஆளப்படுகிறோம்.

மீண்டும் இது போதி தருமரிடம் இருந்து வரவில்லை. நம்முடைய எண்ணப்படி அல்லாமல் நிலைமைகளாலேயே நாம் ஆளப்படுகிறோம் என்று போதி தருமரால் கூறமுடியாது. முதல் விஷயமாக நாம் இருக்கவே இல்லை. நாம் என்பது தூய்மையான வெறுமை மட்டுமே. அப்படி இருக்கும்போது இந்த தூய்மையான வெறுமையை யாரால் ஆளமுடியும்? மேலும் உங்களை விடவும் நிலைமைகளை மிகவும் முக்கியமானவையாக ஆக்குதல் ஒட்டுண்ணிகளை, சுரண்டல்காரர்களை, உங்கள் மீது ஆர்வம் உள்ளவர்களை மீண்டும் ஆதரிப்பது போன்று ஆகிவிடுகிறது.

புகழ் மற்றும் அதிர்ஷ்டம் போன்ற ஏதோ ஒரு வெகுமதியால் நாம் ஆசீர்வதிக்கப்படுகிறோம் என்றால் அது கடந்த காலத்தில் நம்மால் நடப்பட்ட விதையின் பழங்களே ஆகும்.

மீண்டும் இதுவும் போதி தருமருடையது அல்ல. போதி தருமர், கடந்த காலத்தையோ அல்லது எதிர்காலத்தையோ நம்புவது இல்லை; அவரது நம்பிக்கை நிகழ்காலத்தில் மட்டுமே உள்ளது. மேலும் நீங்கள் என்ன செய்தாலும் உங்களது நிழல் உங்களைப் பின்தொடர்வதுபோல, உங்களது செயலைப் பின்தொடர்ந்து அதன் விளைவுகள் வரும். புண்ணியம் வெகுமதிகளைக் கொண்டு

வருகிறது. பாவம் கஷ்டத்தைக் கொண்டு வருகிறது. அவர் ஓர் எளிமையான மனிதர். அவர் மிகவும் சிக்கலான தத்துவவாதி அல்லர். மேலும் உங்கள் மீது ஆர்வம் கொண்டுள்ளவர்களுக்கு எந்தவிதத்திலும் அவர் ஆதரவு அளிப்பதில்லை.

நிலைமைகள் மாறும்போது அது முடிந்து போகிறது. இந்த மகிழ்ச்சி என்பது இருப்பது ஏன்? ஆனால் வெற்றியும் தோல்வியும் நிலைமைகளைப் பொறுத்து இருக்கும்போது, மனமானது தேய்வதும் இல்லை, வளர்வதும் இல்லை. மகிழ்ச்சி என்னும் காற்றில் அசையாமல் இருப்பவர்கள் அமைதியாக பாதையை பின்பற்றுகிறார்கள்.

ஒருவேளை, இந்த வார்த்தைகள் போதி தருமருடையவை யாக இருக்கலாம். நான் ஒருவேளை என்றுதான் கூறுகிறேன். வெற்றியாலும், தோல்வியாலும் நீங்கள் பாதிக்கப்படக்கூடாது. அவை கனவுகளை விடவும் மேலானவை அல்ல. அவை வரும், போகும். நீங்கள் உங்களது சாட்சி பாவனையான உயிர் உணர்வோடு இருக்க வேண்டும். மகிழ்ச்சி என்னும் காற்றில் அசையாமல் இருப்பவர்கள் அமைதியாக பாதையைப் பின்தொடர் கிறார்கள்.

மூன்றாவதாக, எதையுமே தேடாமல் இருத்தல். இந்த உலகின் மக்கள் மாயையில் இருக்கின்றனர். ஏதோ ஒன்றிற்காக அவர்கள் எப்போதுமே ஏக்கம் கொண்டு இருக்கின்றனர். ஒதே வார்த்தையில் சொல்ல வேண்டும் என்றால் தேடிக்கொண்டே இருக்கின்றனர். ஆனால் ஞானமுள்ளவர்கள் விழித்தெழுந்து விடுகின்றனர். அவர்கள் தொன்றுதொட்டு வரும் பழக்கத்திற்குப் பதிலாக பகுத்தறிவை தேர்ந்தெடுக்கின்றனர். அவர்கள் தங்களது மனதை உயிர்நிலையில் நிலைபெறச் செய்துவிட்டு தங்களது உடலானது பருவ காலத்திற்கு தக்கபடி மாறிக்கொண்டு இருக்கும்படி விட்டுவிடுகின்றனர். எல்லா விஷயங்களும் அவர்களுக்கு காலியானதாகவே இருக்கிறது. ஆசைக்குரிய எதையும் அவர்கள் வைத்திருப்பதில்லை. செழிப்பும், பேரழிவும் எப்போதும் மாறி மாறி வரும். இந்த மூன்று ஆட்சி எல்லைக்குள் வாழ்வது, எரிகின்ற ஒரு வீட்டில் வாழ்வது போன்றதாகும். ஓர் உடலைப் பெற்றிருப்பதே

*அவதிப்படுவதற்காகத்தான். இந்த உடலோடு யாராவது அமைதியை அறிந்திருக்கிறார்களா?*

இந்தப் பகுதியில் ஒருசில விஷயங்கள் நிச்சயமாக போதி தருமரின் நறுமணத்தைக் கொடுக்கின்றன. ஆனால் சில விஷயங்கள் அதே தன்மை இல்லாதது போல காணப்படுகிறது. உதாரணமாக எதையுமே தேடாமல் இருத்தல் என்பது போதி தருமருடையது. ஞானமுள்ளவர்கள் விழித்தெழுந்து விடுகின்றனர் என்பது போதி தருமருடையைது. அவர்கள் தொன்று தொட்டு வரும் பழக்கத்திற்குப் பதிலாக பகுத்தறிவை தேர்ந்தெடுக்கின்றனர். நான் பகுத்தறிவு என்னும் வார்த்தையை மாற்றிவிட்டு தியானம் என்கிற வார்த்தையை அதற்குப் பதிலாக போட விரும்புகிறேன். தொன்று தொட்டு வரும் பழக்கத்திற்குப் பதிலாக அவர்கள் தியானத்தை தேர்ந்தெடுக்கின்றனர். அவர்கள் வாழ்க்கைக்கும் பாரம்பரியமான தற்கும் பதிலாக தங்களின் சொந்த புத்திசாலித் தனத்தை தேர்வு செய்கின்றனர்.

இது நிச்சயமாக போதி தருமரிடம் இருந்து வந்தது அல்ல. *அவர்கள் தங்களின் மனதை உயர்ந்த நிலையில் நிலைபெறச் செய்து விட்டு, தங்களின் உடலானது பருவ காலத்திற்குத் தக்கபடி மாறிக் கொள்ளும்படி விட்டு விடுகின்றனர்.* பாவியும் புனிதரும் ஒரே மாதிரியானவர்கள் என்று கூறுகின்ற ஒரு மனிதர், சாதாரண மானவரும், ஞானியும் ஒன்று என்று கூறுகின்ற ஒரு மனிதர் இப்படிப்பட்ட வாக்குமூலத்தை கொடுக்க முடியாது. ஏனெனில் அவரைப் பொறுத்தமட்டில் உயர்ந்த நிலையும், தாழ்ந்த நிலையும் வேறானவை அல்ல. அவை வேறானவையாக இருக்க முடியாது.

*எல்லா விஷயங்களுமே அவர்களுக்கு காலியானதாகவே இருக்கிறது.* இது நிச்சயமாக போதி தருமருடையது என்று உறுதிப் படுத்தலாம். உங்களுக்கு வெளியே உங்களது வாழ்க்கையில் என்னவெல்லாம் நடக்கிறதோ அவை எல்லாம் வெறுமனே காலியானவை, ஒரு கனவைப்போல காலியானவை. கனவு எந்தப் பொருளால் உண்டாக்கப்பட்டுள்ளதோ அதே பொருளால்தான் அதுவும் உண்டாக்கப்பட்டுள்ளது. ஞானமுள்ளவர்கள் விழித் தெழுந்து விடுகிறார்கள். மேலும் இந்த ஒட்டுமொத்த வாழ்க்கை

யையும் ஒரு நீண்ட கனவுத்தொடர் என்பதை கண்டுகொள் கின்றனர். சிலசமயம் நல்லதாகவும், சிலசமயம் கெட்டதாகவும், சில சமயம் இனிமையானதாகவும், சில சமயம் பயங்கரமானதாகவும் இருக்கின்றன. ஆனால் அவை எல்லாம் கனவுகளே. விழிப் படைந்த ஒருவர் தனது தூக்கத்தில் கனவு காண்பதும் இல்லை அல்லது அவர் விழித்திருக்கும்போது வெளி உலகக் கனவுகளால் அவர் மாயையில் இருப்பதும் இல்லை. ஆசைப்படுவதற்குரிய எதையும் அவர்கள் வைத்திருப்பதில்லை. செழிப்பும் பேரழிவும் எப்போதும் மாறி மாறி வரும். இந்த மூன்று ஆட்சி எல்லைக்குள் வாழ்வது எரிகின்ற ஒரு வீட்டில் வாழ்வது போன்றதாகும். இந்த மூன்று ஆட்சி எல்லைகள் என்பது உடல், மனம் மற்றும் உள்ளம் ஆகியவை ஆகும். நான்காவதாகிய துரியத்தில் வசிப்பது இந்த பிரபஞ்சத்தோடு அமைதியாக இருப்பதாகும். நான்காவதாக தர்மத்தை செயல்படுத்துதல். இயற்கையில் எல்லாம் தூய்மை யானவை என்னும் உண்மைதான் தர்மம் என்பதாகும். இந்த உண்மையினால் எல்லாத் தோற்றங்களும் வெறுமையானவையாக இருக்கின்றன. மாசுபடுத்துதல், பற்று கொள்ளுதலும், அகப் பொருளும், புறப்பொருளும் இங்கு இல்லை.

இது சுத்தமாக போதி தருமருடையது என்று கூறமுடியும்.

இந்த சூத்திரங்கள், "தர்மம் என்பது எந்த உயிர் உணர்வையும் உள்ளடக்கியது இல்லை. ஏனெனில் அது இருக்கிறது என்கின்ற எந்த ஒரு மாசும் இல்லாதது. மேலும் தர்மம் என்பது எந்த ஒரு சுயத்தையும் உள்ளடக்கியது இல்லை. ஏனென்னில் அது சுயம் என்பதன் எந்த ஒரு மாசும் இல்லாதது" என்று கூறுகின்றன. இந்த உண்மையைப் புரிந்து கொண்டவர்களும், நம்புவதற்கு போதுமான ஞானம் உள்ளவர்களும், தர்மத்திற்கு தக்கபடி செயல்படுத்துகிறார்கள். இவை குறிப்புகள் எழுதிய மக்களால் சேர்க்கப்பட்டவை.

தர்மத்தின் அமைப்பானது அதிருப்தி கொள்ளத்தக்க எதையும் கொண்டதாக இல்லாமல் இருப்பதால் அவர்கள் தங்களின் உடல், உயிர் மற்றும் செல்வத்தினை எந்த ஒரு வருத்தமும் இல்லாமல், கொடுப்பவர் என்கின்ற தற்பெருமை இல்லாமல், வெகுமதி

அல்லது பெறுபவர் என்பதில்லாமல், மேலும் விருப்பு வெறுப்பு இல்லாமல் நற்செயல்களுக்கு அர்ப்பணிக்கின்றனர். மாசுக்களை நீக்கி மற்றவர்களை உருமாற்றம் செய்வதை, உருவங்களின் மீது எந்த ஒரு பற்றுதலும் கொள்ளாமல் அவர்கள் செய்கின்றனர். இப்படியாக தங்களின் செயல்பாடுகள் மூலம் மற்றவர்களுக்கு அவர்களால் உதவுவதோடு கூட அவர்கள் மெய்ஞ்ஞானம் அடைகின்ற பாதையை மகிமைப்படுத்துகிறார்கள். மேலும் நற்செயல்களோடு கூட அவர்கள் ஏனைய புண்ணிய காரியங் களையும் செய்கின்றனர். ஆனால் மாயையை ஒழிப்பதற்கான ஆறு புண்ணியச் செயல்களைச் செய்யும்போது அவர்கள் எதையுமே செயல்படுத்துவதில்லை.

இந்த வாக்கியத்திற்கு மேலே உள்ள எல்லா வாக்குமூலங் களும் போதி தருமாவுடையது என்று அதிகாரப்பூர்வமாக சொல்ல முடியாது. ஆனால் அவர்கள் எதையுமே செயல்படுத்துவதில்லை என்கிற இந்த வார்த்தைக்கு முன்பு பதிவு செய்யப்பட்ட விஷயங்களை எல்லாம் செயல்படுத்துகின்ற மக்கள் எதையுமே செயல்படுத்துவதாகாது. ஏனெனில் இந்த உலகம் ஒரு கனவு பூமியாக மட்டுமே இருக்கும்போது, நீ ஒரு திருடனோ அல்லது நீ நற்செயல் செய்கின்ற மாபெரும் மனிதனோ, அது எந்தவிதமான வேறுபாட்டையும் உண்டாக்காது. ஆனால் நீ ஒரு திருடனோ, அல்லது நற்செயல் புரிபவனோ, எதுவாக இருந்தாலும் எந்த வேறுபாட்டையும் உண்டாக்காது. நீ விழித்து எழுந்து விடும்போது அது எந்த வேறுபாட்டையும் உண்டாக்குமா? நற்செயல்கள் புரிகின்ற மாபெரும் மனிதன் என்பதற்காக நீங்கள் சந்தோஷப் படுவீர்களா? அல்லது கனவில் நீங்கள் திருடனாக இருந்தீர்கள் என்பதற்காக வெட்கப்படுவீர்களா? இரண்டுமே கனவுகள், சோப்புக் குமிழிகள், அவற்றுக்கு எந்த அர்த்தமும் இல்லை.

போதி தருமரை நன்கு அறிந்ததால் அவரது வார்த்தைகளில் எது மிகச் சரியானது என்று என்னால் கூற முடியும். அவர்கள் எதையுமே செயல்படுத்துவதில்லை - அதாவது மேலே குறிப்பிட்ட விஷயங்களை செயல்படுத்துகின்ற மக்கள் எதையுமே செயல் படுத்துவதில்லை. தர்மத்தை செயல்படுத்துதல் என்பதற்கு இதுதான் அர்த்தம்.

போதி தருமர் கூறுவது என்னவென்றால், நீ செயல்படுத்துவது எல்லாம் ஒன்றுமே இல்லை என்னும் போது. இதை அறிந்து கொள்ளுதல், இதை புரிந்து கொள்ளுதல் தான் தர்மத்தை செயல் படுத்துதல் என்று அழைக்கப்படுகிறது.

மேலும் இதைப் புரிந்துகொண்டு, இருக்கின்ற எல்லாவற்றில் இருந்தும் தங்களை விலக்கிக் கொண்டும், எதையுமே தேடுவதையும், கற்பனை செய்வதையும் நிறுத்தி கொள்ளுகின்றவர்களுக்காக, இந்த சூத்திரங்கள், "தேடுதல் என்பது அவதிப்படுவதாகும். எதையுமே தேடாமல் இருப்பதுதான் பேரானந்தமாகும்" என்று கூறுகின்றன. நீ எதையுமே தேடாத போது நீ பாதையில் இருக்கிறாய்.

எனவே, இந்த புத்தகங்களில் இந்த குறிப்புகளில் எவை போதி தருமருடைய வாக்குமூலங்கள் மற்றும் எவை இந்த புத்தகங்களை எழுதியவர்களுடைய வாக்குமூலங்கள் என்பதற்கு இடையே மிகச்சரியாக கோடுகளைப் போடுகின்ற இந்த விஷயம் ஒரு தொடர் முயற்சியாக இருக்கப்போகிறது. ஆனால் அதை நான் அதிகாரத்தோடு கூறமுடியும். ஏனெனில் இது எனது சொந்த புரிதல் மற்றும் அனுபவமும் ஆகும். போதி தருமரின் ஒவ்வொரு கருத்தோடும் நான் ஒத்துப் போகிறேன், வேறு வார்த்தைகளில் சொல்ல வேண்டும் என்றால் என்னுடைய ஒவ்வொரு கருத்தோடும் போதி தருமர் ஒத்துப் போகிறார்.

பண்டிதர்கள் இந்த புத்தகத்தைப் பற்றி பேசி இருக்கிறார்கள். நான் ஒரு பண்டிதன் அல்லன். நான் ஒரு போதி தருமர். எது என்னுடைய வாக்குமூலம் மற்றும் எது என்னுடைய வாக்குமூலம் அல்ல என்பதை நான் அடையாளம் கண்டுகொள்வேன்.

○

## போதி தருமரின் இரத்த ஓடை பிரசங்கம்:

மூன்று எல்லைக்குள் காணப்படுகின்ற எல்லாமும் திரும்பவும் மனதிற்கு வழிநடத்திச் செல்கிறது. அதனால்தான், கடந்தகால மற்றும் எதிர்கால புத்தர்கள், விவரணைகளைப் பற்றி கவலைப் படாமல் மனதில் இருந்து மனதிற்கு செல்ல போதித்தார்கள். ஆனால், அதை அவர்கள் விவரிக்கவில்லை எனில், மனம் என்பதற்கு அவர்கள் என்ன அர்த்தத்தைக் கொள்கிறார்கள்?

நீங்கள் கேட்கிறீர்கள், அது உங்களது மனம். நான் பதிலளிக்கிறேன். அது என்னுடைய மனம். எனக்கு மனம் என்பது இல்லாமல் இருந்தால் என்னால் எப்படி பதிலளிக்க முடியும்? உங்களுக்கு மனம் என்பது இல்லை என்றால் நீங்கள் எப்படி கேட்கமுடியும்? எது கேட்கிறதோ அது உங்களது மனம். ஆரம்பம் என்பது இல்லாமல், முடிவில்லா கல்ப காலங்களில் நீங்கள் என்னவெல்லாம் செய்தீர்களோ, நீங்கள் எங்கெல்லாம் இருக்கிறீர்களோ அதுதான் உங்களது உண்மையான மனம், அதுதான் உங்களது உண்மையான புத்தர். அதே விஷயம், இந்த மனம் தான் புத்தராக இருக்கிறது என்று கூறுகிறது. இந்த மனதிற்கு அப்பால் நீங்கள் ஒருபோதும் வேறொரு புத்தரைக் காண மாட்டீர்கள். இந்த மனதிற்கு அப்பால் விடுதலை அல்லது மெய்ஞ்ஞானத்தை தேடுவது சாத்தியமில்லாததாக இருக்கிறது. உங்களது சொந்த சுய இயல்பின் உண்மை நிலை; காரணங்களும் விளைவுகளும் இல்லாத நிலை தான் மனம் என்பதன் அர்த்தமாக உள்ளது. உங்களது மனம்தான் விடுதலை. இந்த மனதிற்கு அப்பால் எங்கோ ஓரிடத்தில் ஒரு புத்தர் அல்லது மெய்ஞ்ஞான நிலையைக்

கண்டுகொள்ள முடியும் என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால் அப்படிப்பட்ட ஓர் இடம் இல்லை.

ஒரு புத்தரையோ அல்லது மெய்ஞ்ஞான நிலையையோ கண்டுகொள்ள முயற்சிப்பது இந்த அண்டவெளியை அபகரிக்க முயற்சிப்பது போன்றதாகும். அண்டவெளிக்கு பெயர் மட்டுமே உள்ளது. ஆனால் உருவம் இல்லை. அது, நீங்கள் கையில் எடுக்கக் கூடியதோ அல்லது கீழே போட்டு விடுகின்றதோ அல்ல. நிச்சயமாக அதை உங்களால் அபகரிக்க முடியாது. இந்த மனதிற்கு அப்பால் நீங்கள் ஒரு புத்தரை ஒருபோதும் பார்க்க மாட்டீர்கள். புத்தர் என்பது உங்களது மனதினால் உருவாக்கப்பட்ட ஒரு பொருள். எனவே இந்த மனதிற்கு அப்பால் ஒரு புத்தரை ஏன் காண நினைத்தீர்கள்?

கடந்த கால மற்றும் எதிர்கால புத்தர்கள் இந்த மனதைப் பற்றி மட்டுமே பேசுகின்றனர். இந்த மனம் தான் புத்தர், மேலும் புத்தர் என்பது இந்த மனம் தான். இந்த மனதிற்கு அப்பால் இங்கே எந்த ஒரு புத்தரும் இல்லை. மேலும் புத்தருக்கு அப்பால் இங்கே எந்த ஒரு மனமும் இல்லை. இந்த மனதிற்கு அப்பால் ஒரு புத்தர் இருக்கிறார் என்று நீங்கள் நினைத்தால், அவர் எங்கு இருக்கிறார்? இந்த மனதிற்கு அப்பால் இங்கே எந்த ஒரு புத்தரும் இல்லை, எனவே அப்படிப்பட்ட ஒருவரை ஏன் காண முயற்சிக்கிறீர்கள். இப்படி நீங்கள் உங்களை ஏமாற்றிக்கொண்டு இருக்கிற வரையில் உங்களது உண்மையான மனதை நீங்கள் அறிந்துகொள்ள முடியாது. உயிரற்ற ஓர் உருவத்தின் கவர்ச்சியில் கட்டுண்டு இருக்கிற வரையில் நீங்கள் சுதந்திரமானவராக இருக்க முடியாது. நீங்கள் என்னை நம்பாமல், உங்களை ஏமாற்றிக் கொள்வது உங்களுக்கு உதவாது. இது புத்தரின் தவறு அல்ல. என்றாலும் மக்கள் மாயையில் உள்ளனர். தங்களது சொந்த மனம்தான் புத்தர் என்கிற விழிப்புணர்வு அவர்களிடம் இல்லை. அப்படி இருந்திருந்தால், மனதிற்கு வெளியே ஒரு புத்தரை தேடிக்கொண்டு இருக்க மாட்டார்கள்.

புத்தர்கள், புத்தர்களை காப்பாற்ற மாட்டார்கள். ஒரு புத்தரைக் காண்பதற்கு நீங்கள் உங்களது மனதைப் பயன்படுத்தினால், நீங்கள்

புத்தரைக் காண மாட்டீர்கள். வேறு எங்கோ ஒரு புத்தரை நீங்கள் தேடுகின்ற வரையில் உங்களது மனம் தான் புத்தராக இருக்கிறது என்பதை நீங்கள் ஒருபோதும் காண மாட்டீர்கள். மேலும் ஒரு புத்தரை வழிபடுவதற்கு இன்னொரு புத்தரை பயன்படுத்தாதீர்கள். மேலும் ஒரு புத்தரை ஆவாஹனம் செய்வதற்கு மனதைப் பயன்படுத்தாதீர்கள். புத்தர்கள் புனித நூலின் சூத்திரங்களை மனப்பாடம் செய்து ஒப்புவிப்பதில்லை. புத்தர்கள் நல்ஒழுக்க விதிகளை வைத்திருப்பதில்லை. மேலும் புத்தர்கள் நல்ஒழுக்க விதிகளை உடைப்பதும் இல்லை. புத்தர்கள் எதையும் வைத்துக் கொள்ளவோ அல்லது உடைப்பதோ இல்லை. புத்தர்கள் நல்லதையோ அல்லது கெட்டதையோ செய்வதில்லை.

ஒரு புத்தரைக் கண்டுகொள்ள நீங்கள் உங்களது சுய இயல்பை பார்க்க வேண்டும். யார் ஒருவர் தனது இயல்பை காண்கிறாரோ அவர் ஒரு புத்தராக இருக்கிறார். உங்களது சுய இயல்பை நீங்கள் பார்க்காமல், இருந்து கொண்டு, புத்தர்களை ஆவாஹனம் செய்வதோ, சூத்திரங்களை மனப்பாடம் செய்து ஒப்புவிப்பதோ, காணிக்கைகளை அளிப்பதோ, மற்றும் நல்ஒழுக்க விதிகளை வைத்திருப்பதோ, எல்லாமே பயனற்றது. புத்தர்களை ஆவாஹனம் செய்வது நல்ல கர்மாவை விளைவிக்கிறது. சூத்திரங்களை ஒப்புவிப்பது நல்ல ஞாபக சக்தியை விளைவிக்கிறது. நல்ல ஒழுக்க விதிகளை வைத்திருப்பது நல்ல மறுபிறவியை விளைவிக்கிறது. மேலும் காணிக்கைகள் கொடுப்பது எதிர்காலத்திற்கு ஆசீர்வாதங் களை விளைவிக்கிறது. ஆனால் புத்தரை விளைவிக்காது.

மெய்ஞ்ஞான நிலையை அல்லது புத்தநிலையை அடை யாளம் கண்டுகொள்வது கடினமானது. ஆனால் அது கடின மற்றதும் கூட ஆகும். அதை நீங்கள் தேடிக் கண்டுபிடிக்க ஆரம்பித்தால் அது கடினமானது. நீங்கள் வெறுமனே உட்கார்ந்து கொண்டு, உங்களுக்குள் மௌன நிலையை, அமைதியை, வெறுமனே தூய விழிப்புணர்வை ஏற்படுத்திக் கொண்டால் அது கடினமானது அல்ல.

அதன்பின்னர் நீங்கள் ஒரு புத்தர், அதன்பின்னர் நீங்களே மெய்ஞ்ஞானம். நீங்கள் மெய்ஞ்ஞானி ஆகிவிடுகிறீர்கள் என்பது

கிடையாது. நீங்கள் அதுவாக ஆகின்ற ஒன்றில்லை. அது உங்களின் முக்கிய உயிர் உணர்வு, அது உங்களின் எளிய, தானே நிகழ்கின்ற இயல்பு.

மெய்ஞ்ஞானம் அடைதல் என்பது உங்களது சுய இயல்பு.

ஒருவர் மெய்ஞ்ஞானம் அடைந்து விடும்போது அதில் உள்ள மிகப்பெரிய கஷ்டம் என்னவென்றால் அதை நீங்கள் இருளில் வாழ்கின்ற மக்களிடம், எந்த ஒரு வெளிச்சத்தையும் ஒருபோதும் பார்க்காதவர்களிடமும் எடுத்துக்கூறுவது மிகப்பெரிய கடினமானதாகும். அது கிட்டத்தட்ட குருடான மக்களிடம் வெளிச்சத்தைப் பற்றி பேசுவது போன்றதாகும். மெய்ஞ்ஞானம் பெற்ற குரு ஒருவர், "எனது அனுபவத்தை மற்றவர்களிடம் கூறுவதற்காக நான் எடுத்துக்கொண்ட ஒட்டுமொத்த முயற்சியும், குருடர்களுக்கு மூக்கு கண்ணாடிகளை விற்பது போன்றதாகும்" என்று கூறியதாக குறிப்பிடப்பட்டுள்ளது.

எனவே, மெய்ஞ்ஞானம் அடைந்த அநேகம் பேர் அமைதியாகவே இருந்து விட்டனர். மேலும் அதைப்பற்றி பேசிய வெகு சிலரும் கூட அவர்களின் வார்த்தைகளை அவர்களின் மெய்ஞ்ஞானத்தை அதன் அழகை, அதன் மகிழ்ச்சியை அதன் நறுமணத்தை எடுத்துச் செல்ல முடியாதவை என்பதை அறிவார்கள். அந்த அனுபவத்தை வார்த்தைகளில் மொழிபெயர்க்கின்ற அந்த நொடிப்பொழுதிலேயே அதில் உள்ள முக்கியமானது உயிரற்று போய்விடுகிறது. வெறும் உயிரற்ற பிணம் மட்டுமே அடுத்த மனிதர்களை சென்றடைகிறது.

ஆனால் கருணை மிகுதியால், நம்பிக்கைக்கு எதிராக நம்பிக்கொண்டு காலம் காலமாக ஒருசில மெய்ஞ்ஞானம் அடைந்தவர்கள், வாழ்க்கை என்பது நீங்கள் நினைக்கிற மாதிரியான ஒன்று அல்ல என்று உங்களுக்கு எடுத்துக் கூறுவதற்கு எல்லாவிதமான முயற்சிகளையும் செய்தனர். வாழ்க்கை என்பது நீங்கள் நினைத்துக் கொண்டிருப்பதை விட மேலும் அதிகமானது, எல்லையற்ற விதத்தில் அதிகமானது.

ஆனால் எந்த ஒரு மெய்ஞ்ஞானம் பெற்ற மனிதரும் ஒரு சிறுவார்த்தையைக் கூட எழுதவில்லை. அதற்கான எளிமையான

காரணம் என்னவென்றால், பேசப்பட்ட வார்த்தைக்கு குறிப்பிட்ட தொரு கதகதப்பு இருக்கும். ஆனால் எழுதப்பட்ட வார்த்தை முற்றிலும் குளிர்ச்சியானது. பேசப்பட்ட வார்த்தையில் குரு இருக்கிறார். ஆனால் எழுதப்பட்ட வார்த்தையில் குரு இருப்பதில்லை. பேசப்படுகின்ற வார்த்தையானது வெறுமனே ஒரு வார்த்தை அல்ல; அதன்மூலம் உங்களுக்கு மறைமுகமாக எடுத்துச் செல்லப்படுகின்ற ஏனைய அநேக விஷயங்களும் இருக்கின்றன. குருவின் பிரசன்னம், குருவின் பேரானந்தம்,குருவின் அருள், அவரது வரவேற்கும் கண்கள், அவரது இதயம் உங்களை அழைப்பது ஆகிய இவை எல்லாம் எழுதப்பட்ட வார்த்தையில் இல்லாமல் போய்விடுகிறது.

அதனால்தான் எந்த ஒரு மெய்ஞ்ஞானம் பெற்ற மனிதரும் ஒருபோதும் எதையும் எழுதியதில்லை. ஆனால் சீடர்கள் அவர் பேசியதை குறிப்பெடுத்து இருக்கிறார்கள். மெய்ஞ்ஞானம் அடைந்த மக்களின் பெயர்களில் இருக்கின்ற எல்லா இலக்கியங் களும், சீடர்களின் குறிப்புகளே தவிர வேறு ஒன்றும் அல்ல. இந்த பிரச்சினை மேலும் மேலும் சிக்கலானதாக ஆகிவிடுகிறது. ஏனெனில் அந்த சீடர், தான் புரிந்து கொள்ளாத ஏதோ ஒன்றினை எழுதிக்கொண்டு இருக்கிறார். அவர் குருவை நேசிக்கிறார். அவர் குருவோடு ஆழ்ந்த நேச உறவில் ஈடுபட்டு இருக்கிறார். ஆனால் அவர் அந்த குருவின் புதிர்களைப் புரிந்துகொள்ளவில்லை. குருவின் அற்புத சக்தியின் தாக்கத்தில் அவர் இருக்கிறார். ஆனால் அவர் தனது ரகசியத்தை அறிந்திருக்கவில்லை. தனது ரகசியத்தை அவர் தெரிந்து கொள்ளாதவரையில் அவரால் குருவின் ரகசியத்தை அறிந்துகொள்ள முடியாது. ஏனெனில் அவை இரண்டு விஷயங்கள் அல்ல.

குருவின் வார்த்தைகள் காணாமல் போய்விடக்கூடாது என்று சீடர் நினைக்கிறார். காலம் காலமாக நினைத்து வந்து கொண்டிருக் கின்றார். அந்த வார்த்தைகள் மிகவும் விலைமதிப்பற்றவை. அவை சொக்கத்தக்கம் போன்றவை. எதிர்கால சந்ததியினருக்காக குறைந்தபட்சம் ஏதாவது கொஞ்சம் சேகரித்து வைக்கப்பட வேண்டும். ஆனால் சீடரின் புரிதல் மிகவும் சிறியது. மேலும் அவர் தனது புரிதலுக்கு தக்கபடி மட்டுமே எழுதுகிறார். முதலில், குரு

பேசும்போதே அதிகம் இழக்கப்பட்டு விடுகிறது; அதன்பிறகு சீடன் கவனிக்கும்போது அதில் அதிகம் இழக்கப்பட்டு விடுகிறது; அதன்பின்னர் சீடர் அதை எழுதும்போது இன்னும் அதிகம் இழக்கப்பட்டு விடுகிறது. மேலும் சீடர் ஒரு மொழியில் எழுதுகிறார். அதன்பின்னர் அது மற்ற மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுக் கொண்டே இருக்கிறது. அது குருவின் அசல் பேச்சின் தொலைதூர எதிரொலியாக ஆகிவிடுகிறது.

உதாரணமாக, போதி தருமர் சீன மொழியில் பேசினார். அது அவரது தாய்மொழி அல்ல. அவர் இந்தியாவில் பிறந்தவர். அவர் சீன மொழியைக் கற்றார். (உங்களது வாழ்க்கையின் உள்ளே உள்ள மூல விஷயங்களின் அனுபவங்களை, உங்களது உள்ளத்தின் அமைதிகளை, உங்களது இருப்பு நிலையின் பேரானந்த நிலையை வெளிப்படுத்தி கூறுவது என்பது உங்களது தாய்மொழியிலும் கூட கடினமானதாகும்.) எனவே (வெறுமனே கற்றுக்கொண்ட ஒரு மொழியில் பேசுவது என்பது மிகவும் கடினம். மேலும் சீன மொழி ஓர் எளிமையான மொழி அல்ல. ஒருவர் சீன மொழியில் பண்டிதர் ஆகவேண்டும் எனில் உண்மையில் அவருக்கு குறைந்தபட்சம் முப்பது ஆண்டுகள் ஆகும்; ஏனெனில் சீன மொழியில் எழுத்துகள் கிடையாது. அது பட விளக்கங்களோடு கூடிய ஒரு மொழி. அது மிகவும் ஆதிகாலத்து வகையைச் சார்ந்த ஒரு மொழி.)

எழுத்துகள் ஒரு மொழிக்கு மிகவும் எளிய விஷயத்தைக் கொண்டு வருகின்றன. ஆனால் எழுத்துகள் என்பது இல்லா மொழிகளாகிய, சீன அல்லது கொரிய அல்லது ஜப்பானிய மொழிகள், அந்த நாட்டில் பிறக்காதவர்களுக்கு மிகவும் கடினமானவை. அந்த மொழிகள் படங்கள் போன்றவை. ஒவ்வொரு விஷயத்திற்கும் ஒரு குறிப்பிட்ட படம் அடை யாளக் குறியீடாக இருக்கும். எனவே நீங்கள் ஆயிரக்கணக்கான குறியீட்டுப் படங்களை நினைவில் வைத்திருக்க முடியாவிட்டால், உங்களால் பேசுவதற்கு முடியாது. உங்களால் எழுதுவதற்கு முடியாது. போதி தருமர் சீனாவை நோக்கி சென்று கொண்டிருந்த போது, அவர் சீனாவை சென்றடைவதற்கு முன்பு மூன்று வருடங்களுக்குள் சீன மொழியை அவர் அவசரம் அவசரமாகக்

கற்றுக்கொள்ள நேர்ந்தது. கிட்டத்தட்ட முப்பது வருட வேலையை அவர் மூன்றே ஆண்டுகளில் முடித்தார்.

எனவே இயற்கையில், அவர் என்ன கூறினாரோ அது அவரது அனுபவத்தில் இருந்து வெகு தொலைவில் உள்ளதாகும். மேலும் அந்த சங்கடம் மீண்டும் அதிகமாகிவிட்டது. ஏனெனில் இந்த சூத்திரங்கள் சீன மொழியில் இருந்து ஆங்கிலத்திற்கு மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. உதாரணமாக, இந்த சூத்திரங்களின் மையமாக உள்ள அந்த 'மனம்' என்னும் ஒரு வார்த்தையை கொடுக்கிறேன்.

போதி தருமர் உண்மையிலேயே என்ன அர்த்தத்தில் பேசி னாரோ அதற்கு நேர்மாறான அர்த்தத்தையே இந்த சூத்திரங்களைப் படிக்கின்ற யாரும் புரிந்துகொள்ளப் போகிறார்கள். மேலும் அதற்கான காரணம் இந்த 'மனம்' என்னும் வார்த்தை.

உங்களது சிந்திக்கும் செயல்முறைக்கு ஒரே ஒரு வார்த்தை மட்டுமே இருக்கிறது. அதுதான் Mind (மனம்). மேலும் சிந்திக்கும் செயல்முறைக்கு அப்பால் உள்ள ஏதோ ஒன்றினைக் குறிப்பிடுவதற்கு ஆங்கில மொழியில் எந்த வார்த்தையும் இல்லை. கௌதம புத்தர் மற்றும் போதி தருமரின் ஒட்டுமொத்த தத்துவமும், மனிதன் தனது சிந்திக்கும் செயல்பாட்டிற்கு அப்பால் செல்வது எப்படி என்பதைப் பற்றியதாக மட்டுமே இருக்கிறது. சமஸ்கிருதத் தில், பாலி மொழியில் வேறுவிதமான வார்த்தைகள் இருக்கின்றன. Mind என்ற ஆங்கில வார்த்தையின் மூல வார்த்தையாகிய மனஸ் (Manus) என்பதற்கு 'சிந்திக்கும் செயல்பாடு' என்பதுதான் மிகச்சரியான அர்த்தமாகும். அதன்பிறகு சித்தம் (Chitta) என்பதற்கு சிந்திக்கும் செயல்முறைக்கு அப்பால் உள்ள தன்னுணர்வு என்று அர்த்தம்.

அதிக விழிப்புணர்வு பெற்றவர்களும், வெறும் பண்டிதர் களாக மட்டுமே இருந்துவிடாமல் தியானம் குறித்து அனுபவம் உள்ளவர்களும், இந்த சூத்திரங்களில் 'மனம்' என்னும் வார்த்தையைப் பார்த்தால், தியானம் செய்த ஒருவர் அந்த இடத்தில் அதற்கு எதிரான மனம் அற்ற (no-mind) என்ற வார்த்தையைப் போட்டு விடுவார். மனம் அற்ற நிலை (no-mind) என்பதற்கு

ஆங்கிலத்தில் எந்த ஒரு வார்த்தைகளும் கிடையாது. எனவே அது வெறுமனே, அறிவுக்குப் புறம்பாக உருவாக்கப்பட்ட ஒரு வார்த்தை. இந்த சூத்திரங்களில் எங்கெல்லாம் 'மனம்' என்று குறிப்பிடப்பட்டுள்ளதோ அங்கெல்லாம் தயவு செய்து மனம்-அற்ற என்ற வார்த்தையைப் போட்டுக் கொள்ளுங்கள். அப்படிச் செய்யவில்லை என்றால் நீங்கள் முற்றிலும் தவறான ஒரு பாதையில் போய்க்கொண்டு இருப்பீர்கள்.

மூன்று எல்லைக்குள் காணப்படுகின்ற எல்லாமும் திரும்பவும் மனம் அற்ற நிலைக்கு வழிநடத்திச் செல்கின்றன. மொழி பெயர்ப்பாளர் 'மனதிற்கு' என்று கூறுகிறார். மனம் என்பது ஊடுருவி கடந்து செல்ல வேண்டிய ஒன்றாகும். மனம் என்பது ஒரு நோய்; தியானம் என்பது அதை ஊடுருவி அதற்கு அப்பால் செல்வதற்கான ஒரு முயற்சி ஆகும். ஆகையினால் இந்த சூத்திரங்களில் மனம் என்று இருக்கின்ற இடங்களில் எல்லாம், இந்த மொழி பெயர்ப்பை திருத்தவதற்காக அந்த இடங்களில் எல்லாம் அதற்குப் பதிலாக 'மனம்-அற்ற' என்று நான் படிக்கப்போகிறேன். இந்த மொழிபெயர்ப்பானது மொழியைப் புரிந்து கொண்டுள்ள யாரோ ஒருவரால் செய்யப்பட்டுள்ளது. ஆனால் தியானம் என்பதைப் புரிந்துகொண்ட ஒருவரால் செய்யப்படவில்லை. மூன்று எல்லைக்குள் காணப்படுகின்ற எல்லாமும்... மூன்று எல்லைகள் என்ன? இந்த உடல், மனம், உள்ளம்.... இவை நான்காவதாகிய 'துரியா'விற்கு வழிநடத்திச் செல்கின்றன. துரியா என்பது மனம் அற்ற நிலை என்று மட்டுமே மொழிபெயர்க்கப்பட முடியும்; மனம் அற்ற நிலை என்பது எண்ணம் என்கிற நீர் வட்டங்கள் இல்லாத ஓர் அமைதியான நிலைக்கு வழிநடத்துகிறது. அங்கு காலம் என்பது மறைந்து போகிறது. இடம் மறைந்து போகிறது. மேலும் எந்த ஒரு விஷயத்தைப் பற்றிய உணர்வும் இல்லாமல் வெறுமனே தூய்மையான ஒரு தன்னுணர்விற்கு வழிநடத்திச் செல்கிறது. ஆனால் அதைப்பற்றிய தன்னுணர்வு, ஒரு சுயம்பிரகாச விழிப்புணர்வு அங்கே இருக்கிறது. மூன்று எல்லைக்குள் காணப்படுகின்ற எல்லாமும் இந்த சுயம்பிரகாச விழிப்புணர்வுக்கு வழிநடத்திச் செல்கிறது.

தியானத்தை உணர்ந்த, புரிந்துகொண்ட மக்கள் எப்போதும் 'சித்தம்' என்பதை 'மனம் அற்ற' என்பதைப் போன்று மொழி பெயர்த்துள்ளனர்.

அதனால்தான் கடந்தகால மற்றும் எதிர்கால புத்தர்கள், விவரணைகளைப் பற்றி கவலைப்படாமல் மனதில் இருந்து மனதிற்குச் செல்ல போதித்து வந்தார்கள். இது மிகவும் முட்டாள் தனமானது, ஆனால் பண்டிதர்கள் தாங்கள் தயாராக இல்லாத ஏதோ ஒன்றினை உண்மையிலேயே செய்து கொண்டிருக்கிறார்கள். கடந்த கால மற்றும் எதிர்கால புத்தர்கள் மனதில் இருந்து மனம் அற்ற நிலையை, அமைதியில் இருந்து அமைதிக்கு, இருப்பு நிலையில் இருந்து இருப்பு நிலைக்கு என்று கூறுவதுதான் சரியான காரியமாக இருக்கும் எனவே இப்படி அமைதியில் இருந்து அமைதிக்கு மாற்றப்படுவதில், இருப்பு நிலையில் இருந்து இருப்பு நிலைக்கு மாற்றப்படுவதில், இயல்பாகவே அங்கு விவரணைக்கு இடம் இல்லை.

விவரணைகள் மனதின் ஒரு பகுதி, மனதைக் கடந்து செல்கின்ற நொடிப்பொழுதிலேயே நீங்கள் எல்லா விவரிப்பு களையும் கடந்து சென்று விடுகிறீர்கள். இப்போது குறிப்பெடுத்த அந்த சீடரின் மனம் உள்ளே வருகிறது. ஆனால் அதை அவர்கள் விவரிக்கவில்லை எனில், மனம் என்பதற்கு அவர்கள் என்ன அர்த்தத்தைக் கொள்கிறார்கள்? மேலும் அவர் தன்னை திருப்திப்படுத்திக் கொள்வதற்காக, "நீங்கள் கேட்கிறீர்கள் உங்களது மனம்; அது நான் பதிலளிக்கிறேன். அது என்னுடைய மனம் என்று அந்த சீடர் பதிலளித்துக் கொள்கிறார். அந்த சீடரைப் பொறுத்த மட்டில் அது உண்மையானது. ஆனால் மெய்ஞ்ஞானியைப் பொறுத்தமட்டில் அது உண்மை அல்ல. அவர் வார்த்தைகளின் மூலம் தன்னை வெளிப்படுத்திக் கொள்வதில்லை. அவர் வார்த்தை களைப் பயன்படுத்தினாலும் கூட மௌன நிலையின் தருணங் களை உருவாக்குவதற்கு அது ஒன்று மட்டுமே உபாயமாகும்.

உண்மையான இடமாற்றம் இடைவெளிகளில் மட்டுமே நிகழ்கின்றது. எதுவும் சொல்லப்படுவதும் இல்லை, எதுவும் கேட்கப்படுவதும் இல்லை, என்றாலும் கூட போதனையானது ஓர்

உயிர் உணர்வில் இருந்து அடுத்த உயிர் உணர்விற்கு ஒரு பெரிய தாவுதலை எடுத்து விடுகிறது. இதுதான் ஒரு குருவிற்கும் ஒரு சீடனுக்கும் இடையில் நிகழ்கின்ற அழகு மற்றும் அற்புதம் மற்றும் அதிசயம். எனக்கு மனம் என்பது இல்லாமல் இருந்தால் என்னால் எப்படி பதிலளிக்க முடியும்? உங்களுக்கு மனம் என்பது இல்லாமல் போனால் உங்களால் எப்படி கேட்க முடியும்? எது கேட்கிறதோ அது உங்களது மனம். முடிவில் கல்ப காலங்களில்... முடிவில்லாத காலங்களில், ஆரம்பம் என்பது இல்லாமல் நீங்கள் என்ன வெல்லாம் செய்தீர்களோ, நீங்கள் எங்கெல்லாம் இருக்கிறீர்களோ அதுதான் உங்களது உண்மையான மனம். அதுதான் உங்களது உண்மையான புத்தர். போதி தருமர் இப்படி கூறியதாக அந்த சீடர் குறிப்பிடுகிறார்.

அவர் உண்மையிலேயே குழப்பம் அடைந்துள்ளார். தியானம் என்பது ஊடுருவிக் கடந்து செல்கின்ற ஒரு நிலை, மனம் என்பதில் இருந்து ஒரு விடுதலை என்பதை அறியாத யாரும் இதேபோன்ற நிலையில் தான் இருப்பார்கள். அது அண்டவெளிக்கு அப்பாற் பட்டது. அங்கே மனதின் செயல்பாடு ஒருபோதும் சென்றடைய முடியாது.

மேலும் அதுதான் உங்களது உண்மையான இயல்பு. அதுதான் உங்களது மெய்ஞ்ஞானம், அதுதான் உங்களது புத்த நிலை. அந்த மௌன நிலையில் இருந்து நீங்கள் என்ன செய்தாலும் அது மெய்யறிவுடையதாக இருக்கிறது. அந்த அமைதியான நிலையில் இருந்து என்னவெல்லாம் வளர்கிறதோ அதெல்லாம், சொர்க்கத்தில் மலரும் ஒரு தாமரையாகிறது. அந்த அமைதியில் இருந்துகொண்டு உங்களால் தவறான எதையும் செய்ய முடியாது. உண்மையில் அந்த அமைதி நிலையில் சரி மற்றும் தவறு, நல்லது மற்றும் தீயது ஆகியவற்றிற்கு இடையே உள்ள வேறுபாடு மறைந்து போகிறது. அந்த மௌன நிலையில் இருந்து நீங்கள் எதைச் செய்தாலும் அது வெறுமனே அந்த இருப்பு நிலைக்குரியது. அது எப்படி இருந்தாக வேண்டுமோ அப்படிப்பட்ட வழியில் இருப்பதாகும். அந்த செயல் உங்களது முயற்சி அல்ல, அது உங்களது எண்ணம் அல்ல, அது முன்கூட்டியே திட்டமிட்ட உங்களது செயல் அல்ல; அது வெறுமனே உங்களிடம் தானே எழுகின்ற வெளிக் கொட்டுதல்.

இந்த மனமே புத்தர். இதை நான் திருத்துகிறேன். இந்த மனம் அற்ற நிலைதான் புத்தர். இந்த மனம் அற்ற நிலைக்கு அப்பால், நீங்கள் வேறு ஒரு புத்தரை ஒருபோதும் காணமுடியாது. இந்த மனம் அற்ற நிலைக்கு அப்பால், மெய்ஞ்ஞானம் அல்லது விடுதலை என்பதைத் தேடுவது சாத்தியப்படாது. உங்களது சொந்த சுய இயல்பின் உண்மை நிலை, காரணங்களும் விளைவுகளும் இல்லாத நிலை தான் மனம் அற்ற நிலை என்பதன் அர்த்தமாக உள்ளது. உங்களது மனம் அற்ற நிலைதான் விடுதலை. ஆனால், எங்கெல்லாம் நான் மனம் அற்ற நிலை என்று கூறுகிறேனோ அங்கெல்லாம் இந்த சூத்திரத்தில் மனம் என்று எழுதப்பட்டுள்ளது. இதோடு நான் முழுமையாக ஒத்துப்போகவில்லை. மேலும் போதி தருமரும் இதோடு ஒத்துப்போகமாட்டார். புத்தரும்கூட இதை ஏற்றுக்கொள்ள மாட்டார். மேலும் தியானத்தின் ஒரு சிறு காட்சியைக் கண்ட எவரும்கூட இதை ஒத்துக்கொள்ள மாட்டார். இந்த மனம் அற்ற நிலைக்கு அப்பால் எங்கோ ஓரிடத்தில் ஒரு புத்தர் அல்லது மெய்ஞ்ஞான நிலையைக் கண்டு கொள்ள முடியும் என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால் அப்படிப்பட்ட ஓர் இடம் இல்லை.

ஒரு புத்தரையோ அல்லது மெய்ஞ்ஞான நிலையையோ கண்டுகொள்ள முயற்சிப்பது இந்த அண்டவெளியை அபகரிக்க முயற்சிப்பது போன்றதாகும். அண்டவெளிக்கு பெயர் மட்டுமே உள்ளது. ஆனால் உருவம் இல்லை. அது நீங்கள் கையில் எடுக்கக்கூடியதோ அல்லது கீழே போட்டு விடுகின்றதோ அல்ல. நிச்சயமாக உங்களால் அதை அபகரிக்க முடியாது. இந்த மனம் அற்ற நிலைக்கு அப்பால் நீங்கள் ஒருபோதும் ஒரு புத்தரை பார்க்க மாட்டீர்கள். புத்தர் என்பது உங்களது மனம் அற்ற நிலையில் உருவாக்கப்பட்ட ஒரு பொருள்.

உண்மையில் மனம் அற்ற நிலையும், புத்தரும் ஒன்றுபோல் ஆனவை. ஆனால் இந்தக் குறிப்புகளை எடுத்த அந்த ஒன்று மறியாத சீடர் ‘மனம்’ என்கிற வார்த்தையை பயன்படுத்திக் கொண்டே போகிறார். அது முற்றிலும் அர்த்தமற்றது.

*இந்த மனம் அற்ற நிலைக்கு அப்பால் ஒரு புத்தரை ஏன் காண நினைக்கிறீர்கள்?*

கடந்த கால மற்றும் எதிர்கால புத்தர்கள் இந்த மனம் அற்ற நிலை பற்றித்தான் பேசுகின்றனர். இந்த மனம் அற்ற நிலைதான் புத்தர். மேலும் புத்தர் என்பதும் இந்த மனம் அற்ற நிலைதான். இந்த மனம் அற்ற நிலைக்கு அப்பால் எந்த ஒரு புத்தரும் இல்லை. மேலும் புத்தருக்கு அப்பால் எந்த ஒரு மனம் அற்ற நிலையும் இல்லை. இந்த மனம் அற்ற நிலைக்கு அப்பால் ஒரு புத்தர் இருக்கிறார் என்று நீங்கள் நினைத்தால், அவர் எங்கு இருக்கிறார்.

இந்த சூத்திரம் முழுக்கவும் இதே தவறு தொடர்கிறது. இந்த சூத்திரம் போதி தருமர் பற்றிய மிகவும் பழைமையான சூத்திரமாகும். மேலும் கிட்டத்தட்ட பதினான்கு நூற்றாண்டுகளாக இது போதி தருமரின் போதனையாக ஏற்றுக்கொள்ளப்பட்டு இருக்கிறது. அதற்கான காரணம் என்னவென்றால் தானே நேரடியாக அதை அனுபவித்துப் பார்த்து அந்த அனுபவத்தை புரிந்துகொள்வதற்கு யாரும் முயற்சி செய்யாமல் இருந்து விட்டதேயாகும். மக்கள் வெறுமனே புனித நூல்களைப் படிக்கின்றனர். அவர்கள் பாண்டித் தியம் பெற்றவர்கள் ஆகின்றனர். ஆனால் அவர்களுக்குள் ஆழத்தில் அறியாமையே இருக்கிறது. அவர்கள் வெளிச்சத்தைப் பற்றி பேச ஆரம்பிக்கின்றனர். ஆனால் அவர்களின் குருட்டுத் தன்மை தொடர்கிறது. அதனால்தான், மனதிற்கு அப்பால் ஒரு புத்தர் இருப்பதாக நீங்கள் நினைக்கிறீர்கள் என்று அவர் கூறுகிறார். மனதிற்கு அப்பால் மட்டுமே ஒரு புத்தர் இருக்கிறார். அது சிந்தித்தல் என்கிற ஒரு கேள்வி அல்ல, ஆனால் இந்த முட்டாள் சீடர் மனதிற்கு அப்பால் ஒரு புத்தர் இல்லை என்று கூறுகிறார். புத்தரும், இந்த மனமும் ஒன்று போலானவை என்கிற கருத்தை அவர் உண்டாக்கி விட்டார். அப்படியானால் அதன்பிறகு தியானம் எதற்கு தேவை? உங்கள் அனைவருக்கும் மனங்கள் உள்ளது. நீங்கள் போதுமான புத்தரை வைத்திருக்கிறீர்கள். இதற்கு மேலும் அதிகமாக உங்களுக்கு மனம் தேவையா?

உங்களுக்கு மனதில் இருந்து விடுதலை தேவை. எண்ணம் என்பதில் இருந்து விடுதல தேவை. மனநிலைகள், உணர்ச்சிகள் ஆகியவற்றில் இருந்து விடுதலை தேவை. இவை எல்லாம் தான் உங்களது மனதை உருவாக்குகின்றன. ஆனால் இவற்றுக்கு

அப்பால் அங்கே ஒரு சாட்சியாளர், ஒரு கவனிப்பாளர் இருக்கிறார். அந்தக் கவனிப்பாளர்தான் புத்தர்.

இந்த சீடர் மனித இனத்திற்கு சேவை செய்திருந்தாலும் கூட நான் இவன் மீது கடுமையாக நடந்துகொள்ள வேண்டியுள்ளது. அவரால் போதி தருமருடைய வார்த்தைகளை சரியான விதத்தில் பதிவு செய்கின்ற திறமை இல்லாவிட்டாலும் கூட அவர் போதி தருமரின் வார்த்தைகளை பதிவு செய்தாவது வைத்திருக்கிறார். ஆனால், இந்த சூத்திரங்களை போதி தருமர் போன்று அதே நிலையில் உள்ள யாராலும் திருத்துவதற்கு முடியும். எனவே இங்கு பிரச்சினை இல்லை. அவர் முட்டாளாக இருந்தாலும் கூட அவர் மிகப்பெரிய சேவை செய்திருக்கிறார்.

எப்போதாவது அவர் போதி தருமர் கூறியதை அப்படியே திருப்பிக் கூறுகிறார். *இப்படி நீங்கள் உங்களை ஏமாற்றிக்கொண்டு இருக்கிற வரையில், உங்களது உண்மையான மனம் அற்ற நிலையை நீங்கள் அறிந்துகொள்ள முடியாது. உயிரற்ற ஓர் உருவத்தின் கவர்ச்சியும் நீங்கள் கட்டுண்டு இருக்கிற வரையில் நீங்கள் சுதந்திரமானவராக இருக்க முடியாது.*

உங்களது சிறைவாசம் எதற்காக? உங்களது மனமே உங்களது சிறை. இங்கே அநேகவிதமான சிறைகள் உள்ளன. ஆனால் அவை எல்லாமே சிறைகள்தான். இந்து ஒரு வேறுபட்ட சிறையை, வேறுபட்ட கட்டடக் கலையுடன் கூடிய சிறையை வைத்திருக்கிறார். ஒரு முகமதியர் ஒரு வேறுபட்ட ஒரு சிறையை, வேறுபட்ட கட்டடக்கலையுடன் கூடிய சிறையை வைத்திருக்கிறார்; மேலும் கிறிஸ்தவர் ஒரு வேறுபட்ட சிறையை வைத்திருக்கிறார். இப்படி போய்க்கொண்டே இருக்கிறது. ஆனால் அவை எல்லாம் அவற்றின் கட்டடக்கலையினால் மட்டுமே வேறுபட்டு உள்ளது. ஆனால் சிறைவாசியைப் பொறுத்தமட்டில் அவை எல்லாம் சிறைகளே. மக்கள் ஒரு சிறையில் இருந்து மற்றொரு சிறைக்கு, ஒரு வேளை அதிலாவது நமக்கு விடுதலை கிடைக்குமோ என்று நகர்ந்துகொண்டே இருக்கிறார்கள். கிறிஸ்தவர், இந்துவாக மாறுகிறார். இந்து, பௌத்தராக ஆகிறார். பௌத்தர், முகமதியர் ஆகிறார். ஆனால் அவர்கள் வெறுமனே சிறைகளை மட்டுமே

மாற்றிக்கொண்டு இருக்கிறார்கள். ஒரு செயல்முறைத் திட்டத்தில் இருந்து வேறு ஒரு செயல்முறைத் திட்டத்திற்கு நகர்ந்து செல்கிறார்கள். ஆனால் அந்த செயல்முறைத் திட்டங்களில் இருந்து வெளியேறி விடுவது மட்டுமே இப்போதைய தேவையாகும். இப்படி செயல்முறைத் திட்டத்தில் இருந்து வெளியேறுவதற்கான விஞ்ஞானப்பூர்வமான வழி என்பதுதான் தியானம் என்பதன் அர்த்தமாகும்.

உங்களது மனமானது முற்றிலும் இப்படிப்பட்ட செயல்முறைத் திட்டத்தில் இருந்து வெளியேற முடியும் என்றால், அது முற்றிலும் அழிக்கப்பட ஒரு தபுலா ரசா போன்று ஒவ்வொரு கற்றறிவும் அழிக்கப்பட்ட ஒரு சுத்தமான எழுது பல்கை போன்று ஆகி விடுகிறது. இந்த கள்ளம் கபடமற்ற நிலைதான் மனம் அற்ற நிலை என்பதன் அர்த்தாகும். இந்த கள்ளம் கபடமற்ற நிலைதான் உங்களுக்குள் ஒரு புத்தர் பிறப்பதாகும்.

*நீங்கள் என்னை நம்பாமல், உங்களை ஏமாற்றிக்கொள்வது உங்களுக்கு உதவாது. இது புத்தரின் தவறு அல்ல. என்றாலும் மக்கள் மாயையில் உள்ளதை, தங்களது சொந்த மனம் அற்ற நிலைதான் புத்தர் என்கிற விழிப்புணர்வு அவர்களிடம் இல்லை. அப்படி இருந்திருந்தால், மனம் அற்ற நிலைக்கு வெளியே ஒரு புத்தரைத் தேடிக்கொண்டு இருக்க மாட்டார்கள்.*

விழிப்புணர்வின் உயர்ந்த சிகரத்தை சென்றடைந்தவர்களைப் பொறுத்தமட்டில் மிகப்பெரிய மாயை என்பது, தேடுதல் என்பது தான், அதுவும் சத்தியத்தை, இந்த பிரபஞ்சத்தின் அர்த்தத்தை அல்லது இப்போதுள்ள உயிரின் முடிவில்லாத, மரணமற்ற நிலையை உங்களுக்கு வெளியே தேடுவதுதான் மிகப்பெரிய மாயை. மனம் எப்போதும் வெளியேதான் பார்க்க முயற்சிக்கிறது. ஏனெனில் இந்த உலகில் செயலாற்றுவதுதான் மனதின் செயல் ஆகும். அதனால்தான் அறிவியல், வியாபாரம், பொருளாதாரம் ஆகியவற்றிற்கு மனமானது முற்றிலும் சரியான ஒன்றாக உள்ளது. உங்களுக்கு வெளியே எதுவாக இருந்தாலும் மனமானது முற்றிலும் சரியான வழியில் செயல்படுகிறது.

ஆனால் உங்களுக்குள் எது உள்ளதோ அது மனதானது அடைகின்ற எல்லைக்கு அப்பால் உள்ளது. நீங்கள் மனதை விட்டுவிட்டு அதற்கு மேல் எழுந்து, அதை விட்டு விலகி செல்ல வேண்டும். நீங்கள் ஒரு சாட்சியாளனாக மட்டுமே ஆகிவிடுகின்ற அந்த நொடிப்பொழுதில், மனதினை அது ஏதோ வெளியில் உள்ள ஒரு பொருள் போன்று கவனிக்கும்போது, நீங்கள் வீட்டினை வந்தடைந்து விடுவீர்கள். ஆனால், இந்த சூத்திரங்களை குறிப்பெடுத்த அந்த மனிதரும், இதை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த அந்த மனிதரும், ஒருவேளை தியானத்தின் அனுபவம் இல்லாதவர்களாக இருந்திருக்கலாம். மனம் அற்ற நிலை என்பது மட்டுமே சாத்தியப்படுகின்ற எல்லா இடங்களிலும் அவர்கள் மனம் என்ற வார்த்தையை திரும்பத் திரும்ப பயன்படுத்துகின்றனர்.

*புத்தர்கள் புத்தர்களை காப்பாற்ற முடியாது.* இப்போது இது போதி தருமரிடம் இருந்துதான் வந்திருக்க வேண்டும் என்று நான் கண்டிப்பாக சொல்ல முடியும். இது மிகவும் அபரிமிதமான அர்த்தம் நிறைந்த வாக்குமூலம். மேலும் அந்த ஒன்றுமறியாத சீடரின் தகுதிக்கு அப்பாற்பட்டது. இதை அவரால் புரிந்து கொள்ளக்கூட முடியாது. சீடர் இதைக் கேட்டவுடன் அதை அப்படியே எழுதி இருக்க வேண்டும். ஒருவேளை போதி தருமர் இதை திரும்பத் திரும்ப கூறியிருக்கலாம். இது கௌதம புத்தரின் போதனைகளில் மிகவும் முக்கியமானது. யாரும் உங்களை காப்பாற்ற முடியாது என்று போதி தருமர் கூறுகிறார். “நானே உங்களது ரட்சகன்” என்று இயேசு கூறுகிறார். நீங்கள் இயேசுவை போதி தருமரோடு ஒப்பிட்டுப் பார்த்தால் நீங்கள் மிகவும் ஆச்சரியப்படுவீர்கள். “நீயே எனது ஆடு, நானே மேய்ப்பன், மேலும் நீ தொலைந்து போனால், நான் உன்னைக் கண்டு பிடிப்பேன்” என்று இயேசு கூறுகிறார். புரிந்து கொள்ளாதவர் களுக்கு, இது ஏதோ ஒரு மிகப்பெரிய கருணை என்று தோன்றலாம். இயேசு அந்த அளவுக்கு கருணையோடும், அன்போடும், நேசத்தோடும் இருக்கிறார் என்று தோன்றுகிறது: இந்த மனித இனத்தைக் காப்பாற்றுவதற்கு அவர் தன்னை தியாகம் செய்தார் என்று கிறிஸ்தவர்கள் கூறுகின்றனர். ஆனால் இன்னமும் இந்த மனித இனம் ஏன் காப்பாற்றப்படவில்லை. என்று யாரும்

கேட்பதில்லை. அந்த ஒன்றுமறியாத மனிதர் தேவையில்லாமல் மரணமடைந்து விட்டார். இதுகுறித்து நான் எப்போதும் ஆச்சரியமடைந்ததுண்டு. கிறிஸ்தவர்களை நான் கவனித்து வந்திருக்கிறேன். இயேசு இந்த மனித இனத்தைக் காப்பாற்றுவதற்கு தனது உயிரைத் தியாகம் செய்தார் என்று எந்தவிதமான தர்மசங்கடமும் இல்லாமல் அவர்கள் கூறிக்கொண்டே போகின்றனர். மிகவும் அறியப்பட்ட கிறிஸ்தவ மத போதகரும், தத்துவத்தின் பக்கம் ஆர்வமுள்ள மனதினை உடையவரும் ஆகிய ஸ்டேன்லி ஜோன்ஸ் என்கிற மதபோதகருடன் மிகவும் நட்புடன் இருப்பது வழக்கம். நான் இருக்கின்ற நகரத்திற்கு அவர் வரும்போதெல்லாம் நான் அவரது பிரசங்கத்தைக் கேட்பதற்கு செல்வது வழக்கம். ஒருநாள் என்னால் தாங்க முடியாமல் போயிற்று. ‘இயேசு மட்டுமே ஒரே ரட்சகர்’ என்று அவர் இடைவிடாமல் திரும்பத் திரும்ப கூறிக்கொண்டே இருந்தார்.

நான் எழுந்து நிற்க வேண்டியதாயிற்று. “இது எனது வேலையும் அல்ல, நான் ஒரு கிறிஸ்தவனும் அல்லன், உண்மையில் இந்த தேவாலயத்தில் எந்த ஒரு தொந்தரவையும் நான் உருவாக்கக் கூடாது; நான் கிறிஸ்தவ கோயிலுக்குச் செல்கின்ற கூட்டத்தை சார்ந்தவனும் அல்லன். ஆனால் நீங்கள் இந்த அளவுக்கு முட்டாள் தனமான ஒன்றை மீண்டும் மீண்டும் கூறிக்கொண்டு இருக்கிறீர்கள். இந்த மனித இனம் காப்பாற்றப்பட வேண்டும் என்பதற்காக இயேசு சிலுவையில் மரித்தார் என்று சொல்லிக்கொண்டே போகிறீர்கள். ஆனால் இந்த மனித இனம் எங்குமே காப்பாற்றப்பட்டதை நான் பார்க்க முடியவில்லை. தன்னையே கூட அவரால் காப்பாற்ற முடியவில்லையே” என்று நான் கூறினேன்.

ஆனால் இந்தியாவிற்கு வெளியில் தோன்றிய எல்லா மதங்களும் ‘ரட்சகர்’ என்னும் கருத்தைக் கொண்டிருந்தன. இஸ்லாம், யூத மதம், கிறிஸ்தவ மதம் ஆகிய மூன்று மதங்களும் இந்தியாவிற்கு வெளியில் தோன்றிய மதங்கள். மேலும் இந்த மூன்று மதங்களும் ‘ரட்சகர்’ என்றும் கருத்தைக் கொண்டிருந்தன. இந்தியாவில் நான்கு மதங்கள் உள்ளன. இந்து மதம், சீக்கிய மதம், சமண மதம், புத்த மதம். சமண மதம் மற்றும் புத்த மதம் ஆகிய இரண்டு மதங்கள் மட்டுமே யாரையும் காப்பாற்ற முடியும் என்கிற

கொள்கையை வெறுமனே மறுக்கின்ற மதங்கள். ஏனெனில் இது கண்டனத்துக்குரியது, இது தாழ்வுபடுத்துவதாகும் என்று அவை கூறுகின்றன. நான் அவர்களது கொள்கையோடு ஒத்துப்போகிறேன். "நான் உன்னை காப்பாற்றுவேன்" என்கிற அந்த கருத்தானது உங்களை விடவும் என்னை உயர்ந்தவன் ஆக்கிவிடுகிறது. உங்களைவிட புனிதமானவன் என்று ஆக்கி விடுகிறது. நான் சிறப்பு வாய்ந்தவன் ஆகி விடுகிறேன். கடவுளின் ஒரே தேவகுமாரன் நான்தான் அல்லது கடவுளின் ஒரே தூதன் அல்லது கடவுளின் ஒரே தீர்க்கதரிசி நான்தான் என்றும் நீங்கள் வெறும் சாதாரண மனித உயிர்கள் என்பது போன்றும் ஆகிவிடுகிறது.

ஆனால் போதி தருமருடைய வாக்குமூலமானது *புத்தர்கள், புத்தர்க்ளை காப்பாற்றுவது இல்லை* என்று இருக்கிறது. நீங்கள் அறிந்தாலும் அல்லது அறியா விட்டாலும் நீங்கள் அனைவரும் புத்தர்கள்தான் என்று அவர் கூறுகிறார். எனவே யாராவது எப்படி உங்களைக் காப்பாற்ற முடியும்? உங்களை விழித்தெழ செய்வதை மட்டுமே ஒரு புத்தர் செய்ய முடியும். அது அதிகம் உங்களைக் காப்பாற்றுவது ஆகாது. நீங்கள் யாரையாவது விழித்தெழச் செய்யும்போது நீங்கள் அவரை விடவும் புனிதமானவர், சிறப்பானவர் என்று நீங்கள் நினைக்கிறீர்களா, மேலும் தூங்கிக் கொண்டிருக்கிற ஓர் ஒன்றுமறியாத மனிதரை எழுப்புவதால், இந்த மனித சமுதாயத்திற்கு ஒரு மாபெரும் சேவை செய்துவிட்டதாக நினைக்கிறீர்களா?

*புத்தர்கள் புத்தர்களை காப்பாற்றுவதில்லை.* இது மிகவும் பொருள் பொதிந்த வாக்குமூலம். இது ஒவ்வோர் உயிருக்கும் சமத்துவத்தைக் கொடுக்கிறது. ஒரே ஒரு வித்தியாசம், அதுவும் கூட அதிக வித்தியாசம் ஆகாது. அது என்னவென்றால் ஒவ்வொருவரும் புத்தர்தான்; ஒருசிலர் ஆழ்ந்த தூக்கத்தில் இருப்பதால் தாங்கள் யார் என்பது தெரியாமல் இருக்கிறார்கள். மேலும் ஒருசிலர் விழித்தெழுந்த தாங்கள் யார் என்பதை அறிந்து கொண்டு விட்டார்கள். யாராவது ஒருவர் தனது தூக்கத்தை தொடர விரும்பினால் அது சரியானதுதான்; அது அவரது பிறப்புரிமை. நீங்கள் வலுக்கட்டாயமாக யாரையும் எழுப்ப முடியாது. ஏனெனில் நீங்கள் அவரது சுதந்திரத்தில் குறுக்கிடுகிறீர்கள்.

இது நடந்த நிகழ்ச்சி. அலகாபாத்தில் கங்கை நதிக் கரையில் நான் உட்கார்ந்து கொண்டிருந்தேன். அலகாபாத்தில் உள்ள ஒரு கிறிஸ்தவக் கல்லூரியில் பேசுவதற்காக நான் சென்றிருந்தேன். அந்த கிறிஸ்தவக் கல்லூரி ரயில்வே பாலத்திற்குப் பக்கத்தில் ஓர் அழகான இடத்தில் கங்கை நதிக்கரையில் இருந்தது. நான் கரையில் அமர்ந்திருந்தேன். மேலும் பல மைல் தூரம் வரை யாருமே இல்லை. அப்போது ஒருவன் திடீரென்று வந்து ஆற்றில் குதித்து விட்டான். ஒருவேளை அவன் ஆற்றில் குளிக்கப் போகிறான் என்று நான் நினைத்துக் கொண்டேன். ஆனால் அவன் குதித்தவுடன், "எனக்கு உதவுங்கள், எனக்கு உதவுங்கள்" என்று கத்த ஆரம்பித்து விட்டான். அவன் எனக்கு அருகில் இருந்தான். ஒரு கண நேரம் நான் யோசித்தேன். இது என்ன விஷயம்? யாரிடம் உதவி கேட்கிறான் என்றால் முதலில் இவன் ஏன் குதித்தான்? ஆனால் இவனை முதலில் வெளியே கொண்டு வருவது நல்லது என்று நான் நினைத்தேன். நான் இதைப்பற்றி யோசித்துக் கொண்டு இருந்தால் அந்த நேரத்திற்குள் அவன் காலியாகி விடுவான். எனவே நானும் குதித்து விட்டேன். அவன் மிகவும் கனத்த மனிதனாக இருந்தான். ஆனால் அவனை எப்படியோ நான் வெளியே இழுத்துவிட்டேன். ஆனால் அவன் கொஞ்சம் எதிர்ப்பதை நான் உணர்ந்தேன். "நான் மூழ்கிக் கொண்டிருக்கிறேன். என்னைக் காப்பாற்றுங்கள்" என்று அவன் கத்தியது எனக்கு இன்னும் ஆச்சரியத்தைக் கொடுத்தது. ஆனால் நான் அவனை வெளியே கொண்டு வர முயற்சி செய்தபோது அவன் எனக்கு உதவ மறுக்கிறதை நான் உணர்ந் தேன். அவன் எனது முயற்சியை தடுத்துக்கொண்டு இருந்தான்.

நான் அவனிடம், "நீ என்ன பைத்தியமா? உன்னைக் காப்பாற்ற வேண்டுமா அல்லது வேண்டாமா?" என்று கேட்டேன்.

அதற்கு அவன், "தயவு செய்து என்னைக் காப்பாற்றுங்கள்" என்று கூறினான். எனவே நான் அவனை வெளியே இழுத்துக் கொண்டு வந்தேன். ஆனால் அவன் வெளியே வந்தவுடன், "உங்களுக்குப் புரியவில்லையா? நான் தற்கொலை செய்தேன்" என்று கூறிவிட்டு என்மீது கோபம் கொள்ள ஆரம்பித்தான். நான் அவனிடம், "இதை முன்பே நீ சொல்லி இருக்கலாமே. அப்படி யானால் "என்னைக் பாப்பாற்றுங்கள்" என்று நீ ஏன் கத்தினாய்

என்று நான் கேட்டேன். அதற்கு அவன், "இது இயற்கைதான். நான் தற்கொலை செய்து கொள்ளத்தான் விரும்பினேன். ஆனால் எனக்குள் அடி ஆழத்தில் எங்கோ ஓர் இடத்தில் நான் இன்னமும் உயிர் வாழவேண்டும் என்கிற ஆசை இருந்துள்ளது. அதனால் தான் நான் கத்த ஆரம்பித்தேன்" என்று கூறினான்.

உடனே நான் அவனிடம், "சரி" என்று கூறிவிட்டு நான் வெறுமனே அவனை மீண்டும் ஆற்றுக்குள் தள்ளிவிட்டேன். நான் மீண்டும் அவனிடம், "இதுதான் உனது ஆசை என்றால் அதன்பின்னர் உனக்கு எதிராக நான் எதையும் செய்ய மாட்டேன்" என்று கூறினேன்.

ஆனால் அவன் மீண்டும் கத்த ஆரம்பித்தான். அவன் என்னிடம், "உங்களுக்கு என்ன பைத்தியமா? நீங்கள் என்னைக் கொல்ல விரும்புகிறீர்களா?" என்று கேட்டாள்.

அதற்கு நான், "இப்போது நான் செய்வதற்கு ஒன்றும் இல்லை. நான் என்ன செய்தேனோ அதை தலைகீழாக மாற்றிச் செய்தாக வேண்டும். இப்போது இங்கு உட்கார்ந்து கொண்டு நான் அமைதியாக கவனித்துக்கொண்டு இருப்பேன்" என்று கூறினேன்.

அப்போது வேறு யாரோ வந்து ஆற்றில் குதித்து அவனை வெளியே கொண்டு வந்தார்கள். இந்த முறை அவன் எதிர்ப்பு ஏதும் காட்டாமல் இருந்தான். ஆனால் அவன் என்னை முறைத்துப் பார்த்துக்கொண்டே சென்றான். நான் அவனிடம் "என்ன விஷயம், நீ எங்கு போகிறாய்?" என்று கேட்டேன்.

அதற்கு அவன், "தற்கொலை செய்ய வேண்டும் என்பது கட்டாயமானதா?" என்று கூறினான்.

உடனே நான், "அப்படி இல்லை, நான் ஒருபோதும் உன்னை தற்கொலை செய்து கொள்ளும்படி கூறவில்லை. நீதான் தற்கொலை செய்வதற்கு சென்றாய். அதை நீ மறந்து விட்டாயா?" என்று கூறினேன். அதற்கு அவன், "நீங்கள் விநோதமான மனிதராகத் தெரிகிறது. யாராவது தற்கொலை செய்யும் போதோ அல்லது தற்கொலை செய்ய முயற்சிக்கும் போதோ, மக்கள் அவனைத் தடுப்பார்கள். ஆனால் நீங்களே அவனுக்கு உதவி செய்கிறீர்கள்" என்று கூறினான்.

அதற்கு நான், "எந்த விதத்திலும் நான் உனக்கு உதவத் தயாராக இருக்கிறேன். நீ ஆற்றை விட்டு வெளியே வர விரும்பினால் நான் உனக்கு உதவ தயாராக இருக்கிறேன். நீ இந்த ஆற்றோடு போக விரும்பினாலும் நான் உதவுவதற்கு தயாராக இருக்கிறேன். நீ என்ன செய்ய விரும்புகிறாயோ உனது அந்த வாழ்க்கை முறையில் நான் குறுக்கிட விரும்பவில்லை" என்று கூறினேன்.

உடனே அவன், "நான் இறப்பதற்கு விரும்பவில்லை" என்றான்.

அதற்கு நான் அவனிடம், "அது மிகவும் சரியானது நீ போகலாம். ஆனால் இருமுறை யோசி. நீ மீண்டும் இங்கு திரும்பவும் வரவேண்டியதிருக்கும்" என்றேன்.

அதற்கு அவன், "நான் திரும்பவும் வரப்போவதில்லை" என்றான்.

உடனே நான், "அது உன்னைப் பொறுத்தது. தற்கொலை எண்ணம் மீண்டும் உனக்கு வரலாம் என்றுதான் நான் வெறுமனே உனக்கு நினைவுபடுத்தினேன். மேலும் இதுதான் ஒரு நல்ல சந்தர்ப்பம். இதைத் தவற விட்டுவிடாதே. சாதாரணமாக நதிக்கரையில் நிறைய மக்கள் இருப்பார்கள். ஆனால் சந்தர்ப்ப வசத்தால் இங்கு யாரும் இல்லை. உனது வழி எந்த வழியாக இருந்தாலும், இப்படியோ அல்லது அப்படியோ எதுவானாலும் உனக்கு உதவக்கூடிய ஒரே ஒரு மனிதன் மட்டுமே இங்கு இருக்கிறேன்" என்று கூறினேன்.

உடனே அவன், "நீங்கள் இங்கு இருக்கும் வரையில் நான் திரும்பவும் வரப்போவதில்லை" என்றான்.

அதற்கு நான் அவனிடம், "அது உன்னைப் பொறுத்தது. நான் இல்லை என்றால் நீ சிக்கலில் மாட்டிக் கொள்வாய்" என்றேன்.

*புத்தர்கள் புத்தர்களை காப்பாற்றுவதில்லை* என்று போதி தருமர் கூறுகிறார். மக்களை அவர்களின் சொந்த உண்மை நிலைக்கு விழித்தெழச் செய்வதற்கான ஒவ்வொரு முயற்சியையும் புத்தர்கள் செய்கின்றனர். ஆனால் இதில் காப்பாற்றுதல் என்கிற

கேள்விக்கே இடமில்லை. மக்கள் ஏற்கெனவே புத்தர்களாக இருக்கின்றனர். எதுவும் அவர்களுடன் சேர்க்கப்பட வேண்டியதில்லை. இதுதான் புத்த மதம் மற்றும் சமண மதம் ஆகியவற்றின் மிகப்பெரிய பங்களிப்புகளில் ஒன்றாகும். ஆனால் மீண்டும் மீண்டும் அந்த சீடர் தவறு செய்ய வேண்டியதாகிறது. அவர் வெறுமனே உதவிகள் ஏதுமற்று இருக்கிறார். இந்த வாக்கியத்தை மட்டும் அது எப்படி இருக்க வேண்டுமோ, அப்படியே போட்டுவிட்டார். ஆனால் அதன்பிறகு அவர் ஆரம்பிப்பதாவது: ஒரு புத்தரை காண்பதற்கு நீங்கள் உங்களது மனதைப் பயன்படுத்தினால் நீங்கள் புத்தரைக் காண மாட்டீர்கள். வேறு எங்கோ ஒரு புத்தரை நீங்கள் தேடுகின்ற வரையில், உங்களது மனம் அற்ற நிலைதான் புத்தராக இருக்கிறது என்பதை நீங்கள் ஒருபோதும் காண மாட்டீர்கள்.

அவர் மனம் என்று கூறுகிறார், நான் அதை மனம் அற்ற நிலை என்று படித்துக்கொண்டு இருக்கிறேன்.

மேலும் ஒரு புத்தரை வழிபடுவதற்கு மற்றொரு புத்தரைப் பயன்படுத்தாதீர்கள். இந்த வார்த்தைகள் போதி தருமரிடம் இருந்துதான் வருகிறது என்பதை முழு அதிகாரத்தோடு மீண்டும் என்னால் கூறமுடியும். ஒரு புத்தரை வழிபடுவதற்கு மற்றொரு புத்தரைப் பயன்படுத்தாதீர்கள். ஒரு புத்தர் மற்றொரு புத்தரைக் காப்பாற்ற முடியாது என்பதைப் போல, ஒரு புத்தர் மற்றொரு புத்தரை வழிபடுவது என்பதும் முழுமையான முட்டாள்தனமாக இருக்கிறது. புத்த மதம் வழிபாட்டிற்கு எதிரானது.

“எந்த ஒரு சிலையையும் உண்டாக்காதீர்கள். எந்த ஒரு கோயிலையும் உண்டாக்காதீர்கள். ஏனெனில் நீங்கள் ஒரு புத்தர் என்றும் நீங்கள் மற்றொரு புத்தரை வழிபட வேண்டியதில்லை என்றும் நான் எனது வாழ்வின் முழுவதும் உங்களுக்கு போதனை செய்து வந்திருக்கிறேன்” என்பதுதான் கௌதம புத்தரின் கடைசி வார்த்தைகளாக இருந்தது. அதிலும் குறிப்பாக ஓர் உயிருள்ள புத்தராய் ஒரு கல்லினால் ஆன புத்தரராய் வழிபடப்படுவது அப்பட்டமாக அர்த்தமற்ற செயல்.

மேலும் ஒரு புத்தரை ஆவாஹனம் செய்வதற்கு மனதைப் பயன்படுத்தாதீர்கள். புத்தர்கள் புனித நூலின் சூத்திரங்களை

மனப்பாடம் செய்து ஒப்புவிப்பதில்லை. புத்தர்கள் நல்ஒழுக்க விதிகளை வைத்திருப்பதில்லை. மேலும் புத்தர்கள் நல்ஒழுக்க விதிகளை உடைப்பதும் இல்லை. புத்தர்கள் எதையும் வைத்துக் கொள்ளவோ அல்லது உடைப்பதோ இல்லை. புத்தர்கள் நல்லதையோ அல்லது கெட்டதையோ செய்வதில்லை.

இந்த வாக்கியங்கள் கண்டிப்பாக போதி தருமரிடம் இருந்து நேரடியாக வந்திருக்க வேண்டும். ஏனெனில் இப்படிப்பட்ட மிகப் பெரிய விஷயங்களைக் கூறுவது சீடனின் தகுதிக்கு அப்பாற் பட்டது. தங்களின் சொந்த விழிப்புணர்வைத் தவிர புத்தர்கள் வேறு எந்த ஒழுக்க விதிகளையும் பின்பற்றுவதில்லை என்று போதி தருமர் கூறுகிறார்.

அவர்கள் தங்களின் சுய ஒளியைத் தவிர வேறு எந்த புனித நூலையும் பின்பற்றுவதில்லை. அவர்கள் எதையும் பின்பற்றுவதும் இல்லை. அல்லது அவர்கள் எதையும் மீறுவதும் இல்லை. அவர்கள் நல்லதையும் செய்வதில்லை. கெட்டதையும் செய்வதில்லை. நல்லது மற்றும் கெட்டது ஆகியவற்றிற்கு அப்பால் தானாகவே எழுகின்ற விழிப்புணர்வில் அவர்கள் வெறுமனே செயலாற்றுவார்கள்.

புத்தர்கள் புனிதர்களோ அல்லது ஒழுக்கசீலர்களோ அல்லர். அவர்கள் தூய்மையான தன்னுணர்வின் மூலம் செயல்புரிகின்றனர். மேலும் அவர்களது செயல்கள் எந்த ஒரு கொள்கையினாலோ, எந்த ஒரு சூத்திரத்தினாலோ தீர்மானிக்கப்படுவதில்லை. அவர்கள் எந்த ஒரு சூத்திரத்தையும் மனப்பாடம் செய்து திரும்ப ஒப்புவிப்பது கிடையாது. அவர்கள் புனித நூல்களைப் பற்றி கவலைப்படுவது இல்லை. ஏனெனில் அவர்களுக்கு பாதையைக் காட்டுவதற்கும், அவர்களின் முடிவான விதிக்கு அவர்களை வழிநடத்திச் செல்வதற்கும் தங்களின் சொந்த விழிப்புணர்வே போதுமானது என்று அவர்கள் அறிவார்கள்.

ஒரு புத்தரைக் கண்டுகொள்ள நீங்கள் உங்களது சுய இயல்பை பார்க்க வேண்டும். எவர் ஒருவர் தனது சுயஇயல்பை காண்கிறாரோ அவர் ஒரு புத்தராக இருக்கிறார். உங்களது சுய இயல்பை நீங்கள் பார்க்காமல் இருந்து கொண்டு புத்தர்களை ஆவாஹணம் செய்வதோ, சூத்திரங்களை மனப்பாடம் செய்து ஒப்புவிப்பதோ,

காணிக்கைகளை அளிப்பதோ மற்றும் நல் ஒழுக்க விதிகளை வைத்திருப்பதோ எல்லாமே பயனற்றது.

இந்த வார்த்தைகள் நிச்சயமாக விழிப்புணர்வு அடைந்த ஒரு மனிதனிடமிருந்து ஒலி மற்றும் ஓசையைக் கொண்டுள்ளன. அவை போதி தருமரிடம் இருந்துதான் கண்டிப்பாக வந்திருக்க வேண்டும். ஆனால் அந்த சீடர் திருப்தி அடையவில்லை; அவர் கொஞ்சம் அசௌகரியத்தை உணர்ந்திருக்க வேண்டும். சூத்திரங்களை மனப்பாடம் செய்து ஒப்புவித்தல், காணிக்கைகள் செலுத்துதல் மேலும் நல் ஒழுக்க விதிகளை வைத்திருத்தல் ஆகியவை பயனற்றவை என்று கூறுவது அவருக்கு கொஞ்சம் அசௌகரியமானதாக தெரியலாம். ஏனெனில், இவை எல்லாம் மத துவேஷ கருத்துகள். எந்த ஒரு சாதாரண மதமும் இவற்றை ஏற்றுக் கொள்வதில்லை.

அதனால்தான் அந்த சீடர் உடனடியாக, புத்தர்களை ஆவாஹனம் செய்வது நல்ல கர்மங்களை விளைவிக்கிறது என்கிற தனது சொந்த கருத்துகளை போடுகிறார். இப்போது இது அவரால் சேர்க்கப்பட்டது. இப்போது இது பயனற்றது. ஆனால் பயனற்றது என்கிற வார்த்தையினால் அவரால் சௌகரியமாக இருக்க முடியவில்லை. அவர் அதை எழுத வேண்டியதாயிற்று. ஏனெனில் போதி தருமர் அதைக் கூறி இருக்க வேண்டும். ஆனால் போதி தருமர் பேசியது நீர்த்துப் போக செய்கின்ற சுதந்திரம் சீடருக்கு உள்ளது. உண்மையில் அவர் தனது ஒட்டுமொத்த குரலையே மாற்ற ஆரம்பிக்கிறார்.

புத்தர்களை ஆவாஹனம் செய்வது நல்ல கர்மாக்களை விளைவிக்கிறது. சூத்திரங்களை ஒப்புவிப்பது நல்ல ஞாபக சக்தியை விளைவிக்கிறது. நல்ல ஒழுக்க விதிகளை வைத்திருப்பது நல்ல மறுபிறவியை விளைவிக்கிறது. மேலும் காணிக்கைகளைக் கொடுப்பது எதிர்காலத்திற்கு ஆசீர்வாதங்களை விளைவிக்கிறது. ஆனால் புத்தரை விளைவிக்காது.

போதி தருமரின் வார்த்தைகளை மிகச்சரியாக போடுவதற்கு அந்த சீடர் மிகவும் கடினமாக முயற்சி செய்திருக்கிறார். ஆனால் அது அவருக்கு ஒரு பெரிய முயற்சியாகவும், மிகப்பெரிய மன

இறுக்கமாகவும் இருந்திருக்க வேண்டும். ஏனெனில், போதி தருமர் என்ன கூறுகிறாரோ அதை மிகப்பெரிய தியானங்கள் செய்கின்ற மக்களால் மட்டுமே புரிந்துகொள்ள முடியும். சாதாரண மனிதர்களால் அதைப் புரிந்துகொள்வது சாத்தியப்படாது. எல்லா சாதாரண மதங்களுக்கும், சாதாரண தீர்க்கதரிசிகளுக்கும்; சாதாரண இறை தூதர்களுக்கும், சாதாரண புனித நூல்களுக்கும் அது எதிரானதாக இருக்கிறது.

கொஞ்சம் அசௌகரியத்தை உணர்ந்ததால் அந்த சீடர் தனது சொந்த பங்கிற்கு சிலவற்றை சேர்த்து விடுகிறார். இப்போது தியானத்தின் ருசியை அறியாத ஒரு மனிதன் இந்த சூத்திரங்களைப் படித்தால், அவன் நிச்சயமாக குழப்பம் அடையப் போகிறான். மேலும் அந்த சீடரால் சேர்க்கப்பட்ட விஷயங்களினால் நிச்சயமாக தவறாக வழிநடத்தப்படுவான். தெள்ளத் தெளிவான நீர் போன்ற போதி தருமரின் வார்த்தைகளை எல்லா வகையான குப்பை களையும் அந்த சீடர் அதில் கலந்து அதை மாசுபடுத்துகின்றார். ஏனெனில் இப்படிப்பட்டதொரு தெள்ளத் தெளிவான அணுகு முறையை, இந்த அளவிற்கு நேர்த்தியான ஒன்றை அவனால் தாங்கிக்கொள்ள முடியாது.

கௌதம புத்தரின் வரிசையில் அனேக மெஞ்ஞானம் அடைந்த மக்கள் இருந்தாலும் கூட, போதி தருமர் தான் அதிக புகழ்பெற்றவராக ஆகிவிட்டார். ஜென் பௌத்தத்தை நிறுவியவர் அவர் அல்லர், மகா கஷ்யபா தான் ஜென் பௌத்தத்தின் நிறுவனர். ஆனால் மகா கஷ்யபா மங்கிவிட்டார். போதி தருமர் நிறுவனர் அல்லர். ஆனால் கௌதம புத்தருக்கு அடுததபடியாக மிகவும் முக்கியமானவராக போதி தருமர் ஆகிவிட்டார். ஏனெனில் அவர் தனது மூர்க்கத்தனத்தினாலும், எந்த ஒரு சமாதானமும் செய்து கொள்ளாத அணுகுமுறையாலும் புகழ்பெற்று விட்டார். அவர் யாரையும் ஆறுதல் படுத்துவதில்லை; அவர் வெறுமனே உண்மையைக் கூறுகிறார். அது உங்களைப் பொறுத்தது. ஆனால் உங்களை ஆறுதல் படுத்துவதற்காக அவர் ஒரு சிறு வார்த்தை யையும் கூட சேர்க்கப் போவதில்லை. ஏனெனில் ஒவ்வோர் ஆறுதலும் உங்களை தூங்க வைப்பதாக ஆகிவிடும். ஒவ்வோர் ஆறுதலும் ஒருவகையான அபின் போதைப் பொருள் போன்றது.

போதி தருமர் முற்றிலும் கடுமையானவராக இருக்கிறார். அதனால்தான் அனல் பறக்கும் பார்வையுடன் கூடிய மனிதராக அவரை ஓவியத்தில் காட்டி உள்ளனர். அதற்கு அவர் அப்படித்தான் இருந்தார் என்று அர்த்தமாகி விடாது. அவர் ஓர் இளவரசர். மேலும் பல நூற்றாண்டுகளாக அவர் ஓவியங்களில் வரையப்பட்டிருப்பது அவரது உண்மையான புகைப்படம் என்று நான் நினைக்கவில்லை. அதற்கு மாறாக அவரோடு பழகியவர்களின் அனுபவங்களை அவர்கள் அனல் பறக்கும் தோற்றத்துடன் ஓவியமாக வரைந்திருக்கலாம். மேலும் அவர் அனல் பறக்கும் தோற்றமுள்ளவர்தான். ஏனெனில் அவர் எந்த ஓர் ஆறுதல் வார்த்தையும் கூறுவதில்லை. அவர் வெறுமனே மூடி மறைக்காமல் உண்மையை அப்படியே கூறிவிடுவார். அது உங்களை காயப்படுத்துமென்னில் மிகவும் நல்லது. ஒருவேளை நீங்கள் காயப்படுத்தப்பட வேண்டியது அவசியமான ஒன்றாக இருக்கலாம். ஏனெனில் அதுமட்டுமே உங்களை விழிப்படையச் செய்யும். உங்களுக்கு ஆறுதல்கள் தேவையில்லை. ஏனெனில் அது உங்களை ஆழ்ந்த உறக்கத்தில் ஆழ்த்தி விடும்.

போதி தருமர் தனித்துவம் வாய்ந்தவர்; மேலும் அவரது சீடர்களால் ஏன் புரிந்துகொள்ள முடியவில்லை என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியும். அவரின் பேச்சுகளை கேட்ட அநேக மக்களின் நிலையும் அது போன்றுதான் இருந்திருக்கும். இறுதி தருணத்தில் அவர் தனக்குப் பின்னர் வாரிசைத் தேர்ந்தெடுக்க விரும்பியபோது அவர் நான்கு சீடர்களை மட்டுமே தேர்ந்தெடுத்தார். மேலும் அந்த நால்வரில் இருந்து அவர் ஒருவரை தனது வாரிசாக தேர்வு செய்தார். அவர் உண்மையிலேயே மிகவும் கண்டிப்பான குருவாக இருந்தார்; ஒருவேளை இந்த உலகம் அறிந்த வரையில் அவர் ஒருவர்தான் மிகவும் கண்டிப்பான குருவாக இருந்திருக்க வேண்டும். ஆனால் அவர் மிகவும் கருணை நிறைந்தவரும்கூட. ஏனெனில் அவரின் கண்டிப்பானது அவரது கருணையைத் தவிர வேறு எதுவும் அல்ல.

○

**நீ**ங்களாகவே புரிந்து கொள்ளவில்லை எனில் வாழ்வு மற்றும் மரணம் ஆகியவற்றின் அடிப்பாகத்திற்குச் செல்வதற்கு நீங்கள் ஓர் ஆசிரியரைக் கண்டாக வேண்டும். ஆனால் அவரோ தனது இயல்பினைப் பார்க்காத வரையில் அப்படிப்பட்ட ஒரு மனிதர் ஓர் ஆசிரியர் அல்லர். பௌத்த கோயிலின் பன்னிரண்டு வகை சட்டதிட்டங்களை அவர் மனப்பாடம் செய்து ஒப்புவித்தாலும்கூட, அவரால் பிறப்பு மற்றும் இறப்பு என்னும் சக்கரத்திலிருந்து தப்பிக்க முடியாது. விடுதலை பெற்று விடுவோம் என்கிற நம்பிக்கை இல்லாமலேயே அவர் மூன்றின் எல்லைக்குள் அவதிப்படுகிறார்.

வெகு காலத்திற்கு முன்பு நல்ல நட்சத்திரம் என்னும் துறவி, கோயிலின் சட்டதிட்டம் முழுவதையும் ஒப்புவிக்கின்ற திறமை பெற்றிருந்தார். ஆனால் அவரால் சக்கரத்தில் இருந்து தப்பிக்க முடியவில்லை. ஏனெனில் அவர் தனது இயல்பைக் காணவில்லை. நல்ல நட்சத்திரம் என்னும் துறவியின் நிலையே இப்படிப்பட்டது என்னும்போது, இன்றைய காலத்தில் ஒருசில சூத்திரங்களையோ அல்லது சாஸ்திரங்களையோ மனப்பாடம் செய்து ஒப்பித்துக் கொண்டு, இதுதான் தர்மம் என்று நினைக்கின்றவர்கள் யாரோ அவர்கள் முட்டாள்கள். நீங்கள் உங்களது மனதைப் பார்க்காத வரையில், இந்த அளவுக்கு அதிக உரைநடைப் பகுதிகளை மனப்பாடம் செய்து ஒப்பிவித்தல் பயனற்றது.

ஒரு புத்தரைக் காண வேண்டும் எனில், நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் உங்களது சுய இயல்பை பார்ப்பது மட்டுமேயாகும். உங்களது தன் இயல்பு தான் புத்தர். மேலும் திட்டங்களில் இருந்து விடுதலை பெற்று, அக்கறை கொள்வதில்

இருந்து விடுதலை பெற்றுள்ளவர் எவரோ அந்த மனிதர்தான் புத்தர். உங்களது தன் இயல்பை கண்டுகொள்ளாமல், நாள் முழுவதும் வேறு எங்கேயோ ஓடி தேடி அலைந்து கொண்டிருந்தால் நீங்கள் ஒருபோதும் ஒரு புத்தரைக் கண்டுகொள்ள மாட்டீர்கள். உண்மை நிலை என்னவென்றால் இங்கு கண்டுகொள்வதற்கு எதுவும் இல்லை. ஆனால் இப்படிப்பட்டதொரு புரிதலை நீங்கள் அடைவதற்கு உங்களுக்கு ஓர் ஆசிரியர் தேவை. மேலும் நீங்கள் அதைப் புரிந்து கொள்வதற்கு கஷ்டப்பட வேண்டியது அவசியமாகும். வாழ்வும் மரணமும் முக்கியமானவை. அதில் வீணாக நீங்கள் அவதிப் படாதீர்கள். உங்களை ஏமாற்றிக் கொள்வதில் எந்த ஓர் ஆதாயமும் இல்லை. மலை அளவு ஆபரணங்களை நீங்கள் வைத்திருந்தாலும் கூட மேலும் கங்கை கரையில் எத்தனை மணல் உள்ளதோ அத்தனை வேலைக்காரர்களை நீங்கள் வைத்திருந்தாலும்கூட, உங்களது கண்கள் திறந்திருக்கும்போது மட்டுமே நீங்கள் அவற்றை காண்கிறீர்கள். ஆனால் உங்களது கண்கள் மூடப்பட்டு இருந்தால் என்ன காண்பீர்கள்? அதன்பின்னர், நீங்கள் பார்க்கின்ற எல்லாமே ஒரு கனவு அல்லது மாயை போன்றது என்பதை கண்டிப்பாக அறிந்துகொள்ள வேண்டும்.

விரைவில் நீங்கள் ஓர் ஆசிரியரைக் கண்டுகொள்ளவில்லை எனில் இந்த பிறவியை நீங்கள் வீணாக வாழ்கிறீர்கள். நீங்கள் புத்த இயல்பை வைத்திருக்கிறீர்கள் என்பது உண்மை. ஆனால் ஓர் ஆசிரியர் உதவி இல்லாமல் உங்களால் அதை ஒருபோதும் அறிந்துகொள்ள முடியாது. ஒரு மில்லியன் மனிதர்களில் ஒரே ஒரு மனிதன் மட்டுமே ஆசிரியரின் உதவி இல்லாமல் மெய்ஞ்ஞானம் அடைந்தவர் ஆகிறார். இது இப்படி இருந்தாலும்கூட, சூழ்நிலைகளின் சேர்க்கையால் யாரோ ஒருவர் புத்தர் என்று கூறினாரோ அதைப் புரிந்து கொள்கிறார். அந்த மனிதருக்கு ஓர் ஆசிரியர் தேவை இல்லை. இப்படிப்பட்ட மனிதர், கற்றுக் கொடுக்கப்படுகின்ற எல்லாவற்றையும் விட உயர்ந்த ஓர் இயல்பான விழிப்புணர்வைப் பெற்றிருக்கிறார். ஆனால் அந்த அளவுக்கு நீங்கள் ஆசீர்வதிக்கப்படவில்லை எனில் கடினமாகப் படியுங்கள். கற்பித்தல் வழியாக நீங்கள் புரிந்து கொள்வீர்கள்.

புரிதல் இல்லாமல், கற்றுக் கொள்ளாமலேயே தங்களால் செய்ய முடியும் என்று நினைக்கின்ற மனிதர் எவரோ அவர் கறுப்புக்கும் வெள்ளைக்கும் உள்ள வேறுபாட்டை கூறமுடியாது. மாயை நிறைந்த ஆன்மாக்களை விடவும் வேறானவர் அல்லர். புத்த தர்மத்தை பொய்யாக அறிவிக்கின்ற இப்படிப்பட்ட மக்கள், உண்மையில், புத்தரை நிந்தனை செய்கின்றனர். மேலும் தர்மத்தை கவிழ்த்து விடுகின்றனர். ஆனால் அவர்களது போதனை சாத்தான்களுடையதே அன்றி புத்தருடையது அல்ல. அவர்களது ஆசிரியர் சாத்தான்களின் அரசர். மேலும் அவர்களது சீடர்கள் சாத்தானின் அன்புக்குரியவர்கள். இப்படிப்பட்ட கற்பித்தல்களை பின்பற்றுகின்ற மாயை நிறைந்த மக்கள், பிறப்பு இறப்பு என்னும் கடலின் ஆழத்தில் தெரியாமலே மூழ்கி விடுகிறார்கள்.

அவர்கள் தங்களின் இயல்பைக் கண்டுகொள்ளாத வரையில் மக்கள் அவர்களை புத்தர்கள் என்று எப்படி அழைக்க முடியும். சாத்தானின் ஆட்சி எல்லைக்குள் அவர்கள் நுழைந்து விடும்படி ஏமாற்றுகின்ற அவர்கள் பொய்யர்கள். அவர்கள் தங்களின் சுய இயல்பை கண்டுகொள்ளாத வரையில் பன்னிரண்டு விதமான கோயில் சட்டதிட்டங்கள் பற்றிய அவர்களின் பிரசங்கமானது சாத்தானின் போதனை என்பதைத் தவிர வேறு எதுவும் அல்ல. அவர்களின் பற்றுறுதி மாராவிற்குரியது,புத்தருக்கு உரியது அல்ல. கறுப்புக்கும் வெள்ளைக்கும் வித்தியாசம் தெரியாதவர்கள், பிறப்பு மற்றும் இறப்பு என்பதில் இருந்து அவர்கள் எப்படி தப்பிக்க முடியும்?

தனது சுய இயல்பை கண்டுகொள்பவர் ஒரு புத்தர். யாரெல்லாம் அப்படி கண்டுகொள்ளவில்லையோ அவர்கள் அழிந்து போகக்கூடியவர்கள். ஆனால் அழிந்து போகக்கூடிய இயல்பை விட்டுவிட்டு வேறு எங்கோ புத்தரின் இயல்பை நீங்கள் கண்டுகொள்ள முடியும் எனில் அது எங்கு இருக்கிறது? நமது அழிந்து போகின்ற இயல்புதான் நமது புத்த இயல்பு. இந்த இயல்புக்கு அப்பால் அங்கே வேறு ஒரு புத்தர் இல்லை. புத்தர் தான் நமது இயல்பு. இந்த இயற்கை இயல்பை தவிர்த்து அங்கே ஒரு புத்தர் இல்லை. மேலும் இந்த புத்தரைத் தவிர்த்து மேலும் ஓர் இயற்கை இயல்பு அங்கு இல்லை.

இந்தப் பூமியில் கடந்த காலத்தில் மெய்ஞ்ஞானம் அடைந்த மக்களால் பயன்படுத்தப்பட்ட சமஸ்கிருதம், பிரகிருத் மற்றும் பாலி ஆகிய மொழிகள் அக அனுபவங்களைப் பொறுத்தமட்டில் மிகவும் வார்த்தை செழுமை நிறைந்தவை. இன்று மேலை நாடுகளில், அறிவியல் ஆராய்ச்சி, கண்டுபிடிப்புகள் மற்றும் தொழில் நுட்பங்களுக்கான மிகச்சரியான மொழிவளம் உள்ளது ஆனால் கீழை நாட்டு மொழிகளில் அது இல்லை. எப்படிப் பார்த்தாலும் அக அனுபவங்களைப் பொறுத்தமட்டில் கீழை நாட்டு மொழிகள் அளவுகடந்த செழுமையுடன் உள்ளன. ஆனால் மேலை நாட்டு மொழிகள் முற்றிலும் செழுமை அற்று உள்ளன. இந்த மூன்று மொழிகளில் சமஸ்கிருதம் உபநிஷத்துகளிலும், இந்து ஞானிகளாலும் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. பிரகிருத் மொழி யானது மகாவீரர் மற்றும் சமண ஞானிகள் மற்றும் குருமார்களால் பயன்படுத்தப்பட்டுள்ளது. பாலி மொழியானது கௌதம புத்தரால் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆசிரியர் (Teacher) என்கிற வார்த்தைக்கு சில சில வித்தியாசங்களோடு அநேக வார்த்தைகளை வைத்திருக்கின்றனர். முதல் வார்த்தை சிக்ஷக் (Sikshak) என்பதாகும். அதற்கு தகவல்களை மட்டுமே மற்றவர்களுக்கு சொல்லிக் கொடுக்கின்ற ஒரு மனிதர் என்று அர்த்தம். அவர் அதை அறிந்திருக்கலாம் அல்லது அறியாமலும் இருக்கலாம். அது சம்பந்தம் இல்லாதது. ஆனால் அவரது தகவல் சரியானது. அவர் மனம் என்பதன் மனிதர்.

இரண்டாவதாக, வெறும் தகவலாக மட்டுமில்லாமல், அனுபவத்திற்குள் கொஞ்சம் ஆழ்ந்து செல்கின்ற ஒரு வார்த்தை அத்யாபக் (Adhyapak) என்பதாகும். அந்த ஆசிரியர் தகவல்களை கூறுபவர் மட்டுமல்லர்; அவரே தகவல்களை அறிந்தவர். அவருக்கு இது ஒரு மனம் சம்பந்தப்பட்ட விஷயம் அல்ல. இது அவரின் உள்ளத்தின் (Heart) ஒரு பகுதியும் கூட, ஆனால் அது ஒரு பகுதி மட்டுமே. மேலும் மூன்றாம் வார்த்தை உபாத்தியாயர் என்பதாகும். இது அனுபவத்தில் கொஞ்சம் அதிக ஆழமாக செல்லக்கூடியது. இந்த ஆசிரியரின் தகவல்கள் முந்தைய இருவரை விடவும் அதிக உயிர்த்துடிப்பு மிக்கது. இவர் பாதையில் பிரயாணம் செய்திருக் கிறார். ஆனால் அவர் இறுதி எல்லையை சென்றடையவில்லை.

மேலும் இறுதியாக ஆச்சாரியார் என்கிற வார்த்தை உள்ளது. இவர் இறுதி லட்சியத்தை அடைந்தவர். மேலும் அவர் மற்றவர் களுக்குக் கொடுக்கின்ற தகவல்கள் அவரது சொந்த அனுபவங் களாகும். அவரே அவரது சுய அதிகாரி, அவரது சொந்த விவாதம், அவரது சொந்த பிரசன்னமே ஒட்டுமொத்த நம்பிக்கைச் சான்றாகும். ஆனால் ஆங்கிலத்தில் 'Teacher' என்கிற ஒரே ஒரு வார்த்தை மட்டுமே உள்ளது. இதுதான் எல்லாவகையான மக்களுக்கும் பயன்படுத்தப்படுகிறது. அடுத்த வார்த்தை 'master' (குரு) என்பதாகும். இதை ஆங்கில மக்கள் அதிகம் பயன்படுத்துவதில்லை. ஆனால் ஆச்சாரியர் என்கிற வார்த்தைக்கு சமமான குரு (master) என்னும் வார்த்தையை பயன்படுத்த நான் விரும்புகிறேன். குரு என்பதற்கு எல்லாவற்றையும் அறிந்த ஒருவர் என்று அர்த்தம். அவர் தனது மனதின் மூலமாக மட்டும் அறிந்த வராக இல்லாமல், தனது சொந்த அனுபவத்தின் மூலமாகவும் அறிந்தவர் ஆகிறார்.

இந்த பகுதியில் அநேக சூத்திரங்கள் மாசுபடுத்தப்படாதவை யாக இருக்கின்றன. போதி தருமரே இதை பேசி இருப்பதால் அந்த சீடர் வெறுமனே அதை அப்படியே குறிப்பாக எடுத்து விட்டார்.

*நீங்களாகவே புரிந்துகொள்ளவில்லை என்று நீங்கள் ஓர் ஆசிரியரைக் கண்டுகொள்ள வேண்டும்.*

இதில் ஆசிரியர் என்பதற்கு பதிலாக குரு என்கிற வார்த்தை தான் சரியானதாக இருக்கும். ஏனெனில் ஆசிரியர் என்பவர் புற உலக விஷயங்களை பற்றி உங்களுக்கு கற்பிக்கிறவர். அவர் அக அனுபவங்களை கற்பித்தாலும் கூட அது மற்றவர்களிடம் இருந்து அவர் கற்றுக்கொண்டதாகவே இருக்கும். அவர் அறிவுமிக்கவராக இருக்கலாம். ஆனால் அவரே மெய்யறிவாக இருக்கமாட்டார். இந்த இரண்டிற்கும் உள்ள வித்தியாசத்தை குறிப்பதற்காக மொழி பெயர்ப்பாளர் ஒரு வித்தியாசமான விதத்தில் அதைக் குறிப்பிடு கிறார்.

*நீங்களாகவே புரிந்துகொள்ளவில்லை எனில், வாழ்வு மற்றும் மரணம் ஆகியவற்றின் அடிப்பாகத்திற்கு செல்வதற்கு நீங்கள் ஓர் ஆசிரியரைக் கண்டாக வேண்டும். ஆனால் அவரோ தனது*

இயல்பினைப் பார்க்காத வரையில், அப்படிப்பட்ட மனிதர் ஓர் ஆசிரியர் அல்லர்.

அனுபவத்தின் மிகவுயர்ந்த சிகரத்தை அடைந்த ஒருவரை ஒரு குரு என்று அழைப்பது சிறந்ததாகும். மேலும் ஒரு தலைமுறையில் இருந்து அடுத்த தலைமுறைக்கு அறிவை எடுத்துக் கொடுக்கின்ற ஒருவருக்கு ஆசிரியர் என்கிற வார்த்தையை விட்டுவிடலாம். மேலும் குரு என்பவரும் கூட அவருக்கே சொந்தமான ஒரு மரியாதையினை கொண்டிருக்கிறார்.

ஆசிரியர் என்பவர் கிட்டத்தட்ட ஒரு கணினி போன்றவர். அவர் படித்திருக்கிறார். எல்லா புனித நூல்களையும் அவர் மனப்பாடம் செய்திருக்கலாம். ஆனால் அவரது இருப்பு நிலை யானது அவர் எதையும் அறிந்தவர் என்பதை சுட்டிக்காட்டாது. அவர் என்ன சொல்கிறாரோ அதற்கான விவாதங்களாக அவரது செயல்கள் இருக்காது. அவர் கூறுவதெல்லாம் அவரது மனதின் உள்ள மேல் அடுக்கில் இருந்து மட்டுமே வருகிறது; அவை அவரது உயிர் உணர்வின் உள்மையத்தில் இருந்து வருவதில்லை. ஆசிரியர் வார்த்தைகள் இல்லாமல் கற்றுக்கொடுக்கக் கூடாது. ஆனால் அதற்கு மாறாக ஒரு குரு மௌன நிலை இல்லாமல் கற்பிக்க முடியாது. அவர் வார்த்தைகளை பயன்படுத்தினாலும்கூட அது மௌன நிலையை உருவாக்குவதற்காக மட்டுமே இருக்கும். குரு என்பவர் அவர் என்ன கூறுகிறாரோ அதற்கு ஒரு வாழும் உதாரணமாக அவர் இருப்பார். ஓர் ஆசிரியர் வெறுமனே புலமைபெற்ற, படித்த மனதினை உடையவராக இருப்பார். குரு ஒரு உருமாற்றம் செய்யப்பட்ட உயிர் உணர்வை காட்டுகிறார். ஒரு சுயம்பிரகாசமான இருப்புநிலையைக் காட்டுகிறார். கண்கள் உள்ள யாரும் அதைப் பார்க்க முடியும். அவரது அருளை, அவரது அழகை, அவரது பேரானந்த நிலையை, அவரது சிரிப்பை பார்க்க முடியும்; அவரது மௌன நிலையிலும்கூட வார்த்தைகளின்றி அநேக விஷயங்கள் கூறப்படுகின்றன. அவரது மௌன நிலையும் கூட முடிவான ஒன்றின் பாடலாக இருக்கிறது; அவர் அசையாமல் அப்படியே இருந்தாலும்கூட, இந்த ஒட்டுமொத்த பிரபஞ்சத்தின் நடனத்தை வெளிப்படுத்துகின்ற ஒரு நடனமாக அவர் இருப்பார். ஆசிரியர் என்னும் வார்த்தையில் இருந்து குரு என்னும் வார்த்தை

வெகு தொலைவில் இருப்பதால் அந்த வார்த்தையை தனியாக பயன்படுத்துவது சிறந்தது.

நீங்களாகவே புரிந்து கொள்ள முடியவில்லை எனில் நீங்கள் ஓர் குருவை கண்டுகொள்ள வேண்டியதிருக்கும் என்று கூறுவதற்கு நான் முன்னுரிமை அளிக்கிறேன். ஏனெனில் குரு தனது சுய இயல்பை அறிந்திருக்கிறார். மேலும் அவர் தனது சுய இயல்பை அறிந்து கொண்டதன் மூலம் எல்லா உயிரினங்களின் இயல்பையும் அவர் அறிந்து கொண்டவர் ஆகிறார். ஏனெனில் அவை எல்லாம் ஒரே மாதிரியான இயல்புடையவை. தன்னை அறிந்து கொண்டதன் மூலம் அவர் உங்களையும் கூட அறிந்து கொள்கிறார். அவரது ஞானம், அவரது அறிதல் அவருக்கும் அவரது சீடர்களுக்கும் இடையே ஒரு பாலம் போன்று உள்ளது.

*பௌத்த கோயிலின் பன்னிரண்டு வகை சட்டதிட்டங்களை அந்த ஆசிரியர் மனப்பாடம் செய்து ஒப்புவித்தாலும்கூட, அவரால் பிறப்பு இறப்பு என்னும் சக்கரத்தில் இருந்து தப்பிக்க முடியாது. விடுதலை பெற்று விடுவோம் என்கிற நம்பிக்கை யிலேயே அவர் மூன்றின் எல்லைக்குள் அவதிப்படுகிறார்.*

உங்களது மரணமில்லாத் தன்மை அல்லது உங்களது முடிவில்லாத தன்மை அல்லது இந்த முழுமையோடு உங்களின் ஒன்றுதல், பற்றிய அனுபவத்தை வெறும் கல்வி அறிவு மட்டுமே உங்களுக்கு கொடுத்துவிடப் போவதில்லை. அது உங்களது மனதை அநேக வார்த்தைகளால் நிரப்பி விடுகிறது. ஆனால் உங்களது உயிர் உணர்வை காலியானதாகவும், குழிவானதாகவும் விட்டுவிடுகிறது. நேரடியாக நீங்கள் எதையும் அறிந்து கொள்வதில்லை. ஆனால் உண்மை நிலை என்பது நேரடியாக மட்டுமே அறியக்கூடியது. அது அடுத்தவர்களின் கை மூலமாக உங்களுக்கு வருகின்ற அந்த நொடிப் பொழுதிலேயே அதன் பின்னர் அது உண்மையானதாக இருக்காது; அது வெறுமனே உயிர்த்துடிப்பு இல்லாமல், உயிரற்ற வார்த்தையாகவே இருக்கிறது.

மிகப்பெரிய அறிவாற்றல் உள்ள ஒரு மனிதர், ஓர் அறிவுஜீவி, ஒரு பண்டிதர், ஒரு மதகுரு, பிறப்பு மற்றும் இறப்பு என்னும் சக்கரத்தில் இருந்து விடுதலை பெறப் போவதில்லை. மூன்று

எல்லைக்குள்ளும் அவர் அனுபவிக்கின்ற அவதிகளில் இருந்தும் அவர் விடுதலை அடையப் போவதில்லை. கௌதம புத்தரைப் பொறுத்தமட்டில் சொர்க்கம், பூமி, நரகம் ஆகிய மூன்றும் வெவ்வேறு விதமான அவதிகளே அல்லாமல் வேறு எதுவும் அல்ல. புத்த மதம் மிக உயர்ந்த சிகரத்தை அடைந்து விட்டது. ஏனெனில் அதில் சொர்க்கமும் கூட இறுதியானதொரு வீடாக கருதப்படுவதில்லை. இன்னமும்கூட அது அவஸ்தைதான். ஆனால், கொஞ்சம் சுத்திகரிக்கப்பட்ட அவஸ்தை. ஆனால் எப்படியும் அது அவஸ்தைதான். ஒருவர் மூன்றிலும் இருந்து விடுதலை அடைய வேண்டும். அதன்பிறகு அது நிர்வாணாவாக இருக்கிறது. அதன்பிறகு அது மெய்ஞ்ஞானம் அடைதலாக இருக்கிறது.

*வெகு காலத்திற்கு முன்பு நல்ல நட்சத்திரம் என்னும் துறவி கோயிலின் சட்டதிட்டங்கள் முழுவதையும் ஒப்புவிக்கின்ற திறமை படைத்திருந்தார். ஆனால் அவரால் சக்கரத்தில் இருந்து தப்பிக்க முடியவில்லை. ஏனெனில் அவர் தனது இயல்பைக் கண்டுகொள்ள வில்லை. நல்ல நட்சத்திரம் என்னும் துறவியின் நிலையே இப்படிப்பட்டது என்றால், இன்றைய காலத்தில் ஒருசில சூத்திரங்கள் அல்லது சாஸ்திரங்களை ஒப்புவித்துக் கொண்டு, இதுதான் தர்மம் என்று நினைக்கிறவர்கள் யாரோ அவர்கள் முட்டாள்கள்.*

போதி தருமர் தான் இதைக் கூறியிருப்பார் என்று ஏற்றுக் கொள்ளலாம். புத்த சூத்திரங்கள் அனைத்தையும் மனப்பாடம் செய்து திரும்ப ஒப்புவிக்கின்ற அறிவுஜீவி மக்களை முடடாள்கள் என்று அழைப்பது ஒரு சீடரின் தகுதிக்கு அப்பாற்பட்டது. போதி தருமர் மட்டுமே அதைச் செய்ய முடியும். கர்வத்தினாலோ, ஆணவத்தினாலோ, அவர்களை கண்டனம் செய்ய வேண்டும் என்றோ அப்படிக் கூறவில்லை. போதி தருமருக்கு இது வெறுமனே ஓர் உண்மை என்பதாகும்.

உண்மையைச் சொல்லியாக வேண்டும். போதி தருமர், நற்பாங்கு மற்றும் சமுதாயக் கட்டுப்பாடு போன்ற குப்பைகளை மதிக்கின்ற மனிதர் அல்லர். உண்மை எதுவோ அதை வெறுமனே அவர் கூறுகிறார். அவர் கூறுவதை நான் முழுமையாக ஒத்துக்

கொள்கிறேன். மெத்தப் படித்த பண்டிதர்களோடு எனது அனுபவமும் அவர்கள் மெத்தப் படித்த முட்டாள்கள் என்பதுதான் ஆகும். பல்கலைக்கழகங்களில் இருந்து அவர்கள் பெரிய பட்டங்களையும், மாபெரும் கௌரவத்தையும் பெற்றுள்ளனர். ஆனால் அவர்களின் சொந்த தன்னுணர்வைப் பொறுத்தமட்டில் அது மற்றவர்களைப் போன்றே உள்ளது. அவர்கள் வெறும் கிளிப்பிள்ளைகள். மேலும் ஒருவேளை கிளிப்பிள்ளைகள் கூட உங்களது பண்டிதர்களை விடவும் அதிக புத்திசாலித்தனத்துடன் இருக்கலாம்.

நான் ஒரு கிளியைப் பற்றி கேள்விப்பட்டிருக்கிறேன். அது குளிர்காலம், எனவே அந்தக் கிளிக்கு சொந்தக்கார பெண்மணி அந்த கிளியையும், கிளிக் கூண்டையும் அதற்கு குளிர் அடிக்கக் கூடாது என்பதற்காக ஒரு தடித்த போர்வையால் மூடுவது வழக்கம். பகல் பொழுதில் அந்த போர்வையை அவள் எடுத்து விடுவாள். ஒருநாள் சூரியன் உதித்து விட்டதாலும், அந்தக் கிளி பாட ஆரம்பித்து விட்டதாலும் அவள் போர்வையை வெளியே எடுத்தாள். ஆனால் அந்த கிளியானது அதற்கு கற்றுக்கொடுத்த பாடலைப் பாடாமல் மற்ற எல்லாக் கிளிகளையும் போல பாடியது. அந்தப் பாடல் இயற்கையானது. மேலும் அது காட்டில் இருக்கின்ற எல்லாக் கிளிகளுக்கும் தானே வருகின்ற பாட்டு. நமக்கு அது அர்த்தமற்றது. ஆனால் அவற்றுக்கு அது அபரிமிதமான மகிழ்ச்சியைக் கொடுப்பதாகும். அந்த பெண்மணியின் கணவர் அவசர கால ராணுவ சேவையில் பணியாற்றி வந்தார். எனவே எப்போதாவது ஒருமுறை அவர் முன் அறிவிப்பு இல்லாமலேயே வீட்டிற்கு வருவார்.

அவள் உடனே போர்வையைப் போட்டு கிளியை மூடிவிட்டு தனது படுக்கைக்கு சென்றுவிட்டாள். அப்போது அந்தக் கிளி, "அடக் கடவுளே, இன்றைய பகல் பொழுது மிகவும் குறுகியதாக ஆகிவிட்டதே" என்று கூறியது. இப்போது இதை யாரும் அதற்குக் கற்றுக்கொடுக்கவில்லை. இது அந்த கிளியின் சொந்த புத்திசாலித் தனத்தில் இருந்து வந்தது. கிளிக்கு அது விநோதமாக இருந்தது. ஒவ்வொரு நாளும் காலையில் போர்வை எடுக்கப்பட்டு மாலையில் திரும்பவும் போர்வை போட்டு மூடப்படும். ஆனால் இன்று என்ன

ஆயிற்று? இன்றைய பகல் பொழுது உண்மையிலேயே மிகவும் குறுகியதாக ஆகிவிட்டது.

ஆனால் மெத்தப் படித்தவர்கள் என்று உங்களால் அழைக்கப் படுபவர்களுக்கும் கூட இந்த அளவு புத்திசாலித்தனம் கிடையாது. அதற்கான எளிமையான காரணம் என்னவென்றால் அவர்களின் கல்வி அறிவு மலை போன்று ஆகிவிடுவதால், அவர்களின் அறிவும் புத்திசாலித்தனமானது காணாமல் போய்விடுவதற்கு அநேக சாத்தியங்கள் உள்ளன. கல்வி அறிவின் சுமை தாங்க முடியாத அளவிற்கு மிகவும் கனமானதாக இருக்கிறது. அவர்களது கற்றலிற்கு எதிராக அவர்களால் புத்திசாலித்தனத்துடன் இருக்க முடியாது. அவர்கள் நிச்சயமாக முட்டாள்கள். ஏனெனில் அவர்கள் தங்களுக்கு எதுவுமே தெரியாத விஷயங்களைப் பற்றி மற்றவர்களிடம் பேசிக்கொண்டு இருப்பதால் மற்றவர்களை மட்டும் ஏமாற்றிக்கொண்டு இருக்கவில்லை. ஆனால் அவர்கள் தங்களையும் கூட ஏமாற்றிக்கொண்டு இருக்கிறார்கள். மேலும் அவர்கள் வெறும் வார்த்தைகளிலேயே தங்களது வாழ்க்கையை வீணடித்துக் கொண்டு இருக்கிறார்கள்.

உண்மையான வாழ்க்கை என்பது அனுபவங்களால் ஆனது. வெறும் வார்த்தைகளால் ஆனது அல்ல. நீங்கள் உங்களது வாழ்நாள் முழுவதும் அன்பு, அன்பு, அன்பு என்று திரும்பத் திரும்ப கூறிக்கொண்டே இருக்கலாம். ஆனால் இன்னமும் உங்களுக்கு அந்த அன்பின் அனுபவம் கிடைக்காமல் போயிருக்கும். ஆனால் அன்பு என்னும் அனுபவத்தை நீங்கள் அடைகின்ற அந்த நொடிப் பொழுதே அந்த அனுபவமானது அந்த அளவுக்கு பரந்ததாக இருப்பதால் வெறும் அன்பு என்னும் வார்த்தைக்குள் அதை அடக்க முடியாது என்பதை திடீரென்று அறிந்து கொண்டு நீங்கள் ஆச்சரியமடைவீர்கள்.

அன்பு என்பதிலேயே உங்களது நிலை இப்படி என்றால், உண்மை என்பதில் உங்களின் நிலை எப்படிப்பட்டதாக இருக்கும்? ஏனெனில் உண்மை என்பது எல்லையற்றது, முடிவில்லாதது. அதை அறிந்துகொள்வது என்றால் அமைதியாகி விடுதல் என்று அர்த்தம். உண்மையின் பிரசன்னம், அதன் உணர்வுகள், உங்களை பயபக்தி

நிலையில் ஆழ்த்தி விடும். அப்போது எல்லா வார்த்தைகளும் பொருத்தமற்றதாக ஆகிவிடும். நீங்கள் உங்களது மனம் (அற்ற நிலையில்) பார்க்காத வரையில்... இங்கு அந்த சீடர் மீண்டும் தனது சொந்த புரிதலுக்குள் சென்று விடுகிறார்; அவர் மீண்டும் மனம் என்பதைப் பயன்படுத்துகிறார்.

நீங்கள் உங்களது மனம் அற்ற நிலையைப் பார்க்காத வரையில், இந்த அளவுக்கு அதிக உரைநடைப் பகுதிகளை மனப்பாடம் செய்து ஒப்புவிப்பது பயனற்றது.

மேலும், நீங்கள் உங்களது மனம் அற்ற நிலையை அறிந்து கொண்டால், அதன்பிறகும்கூட இந்த அளவுக்கு உரைநடைப் பகுதியை மனப்பாடம் செய்து ஒப்புவித்தல் பயனற்றது. ஏனெனில் அதன்பின்னர் அதைத் திரும்ப ஒப்புவிப்பதற்கு எதுவுமே இருக்காது. ஒவ்வொரு புத்தரும் பேசியதன் ஆரம்ப இடத்திற்கே நீங்கள் அப்போது வந்து விடுகிறீர்கள். இப்போது புனித நூல் களுக்கு எந்த விதமான அர்த்தமும் இருக்காது. சூத்திரங்களுக்கும், சாஸ்திரங்களுக்கும் எந்தவிதமான அர்த்தமும் இருக்காது. நீங்கள் ஏற்கெனவே அறிந்து கொண்டுள்ளதை விடவும் அதிகமாக புனித நூல்கள் உங்களுக்கு எதையும் கொடுக்காது.

*ஒரு புத்தரைக் காண வேண்டும் என்றால், நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் உங்களது சுய இயல்பினைப் பார்ப்பது மட்டுமேயாகும்.*

அதைத்தான் நானும் உங்களுக்கு மீண்டும் மீண்டும் கூறிக்கொண்டே இருக்கிறேன். இந்த அறியாமையில் இருந்து வெளியேறுவதற்கு, ஆன்மாவின் இருண்ட இரவில் இருந்து வெளிவருவதற்கு, உங்களது சொந்த உயிர் உணர்வு குறித்து விழிப்புணர்வுடன் இருப்பது மட்டுமே வழியாகும். உங்களது விழிப்புணர்வு குறித்து விழிப்புணர்வுடன் இருப்பதே வழியாகும். நீங்கள் உங்களது விழிப்புணர்வு குறித்து விழிப்புடன் இருக்கும்போது எல்லாமே நின்று விடுகிறது. திடீரென்று நீங்கள் காலம் என்பதற்கு அப்பால் மற்றும் இடம் என்பதற்கு அப்பால் இருப்பீர்கள். அப்போது உங்களை இந்த முழுமையின் ஒரு பகுதியாக ஆக்குகின்ற ஒரு வாசல் திறக்கிறது. இதுதான்

உட்புறத்தின் கணக்கியல் அதாவது முழுமையின் ஒரு பகுதி என்பது முழுமையை விடவும் சிறியது அல்ல. இதைப் புரிந்துகொள்வது கடினமானதாக இருக்கும். முழுமையின் ஒரு பகுதியானது முழுமைக்கு சமமானது. ஏனெனில் முழுமை என்பது பகுதிகளாக பிரிக்க முடியாதது. பிரித்தல் சாத்தியப்படாது. அதனால்தான் உங்களுக்குள் உள்ள உண்மையான உயிர் உணர்வை நாம் 'individual' அதாவது 'குழுவில் ஒன்று' என்று அழைக்கிறோம். குழுவில் ஒன்று என்பது பிரிக்க முடியாதது. எனவே நீங்கள் இந்த முழுமையின் ஒரு பகுதி என்பதை உணர்ந்து கொள்கின்ற அந்ததருணம்தான் ஆரம்பமாக இருக்கிறது. முழுமையோடு உங்களது முதல் நேர் கொள்ளல். விரைவில் நீங்கள் ஒரு பகுதி அல்ல, நீங்கள்தான் அந்த முழுமை என்பதை நீங்கள் உணர்ந்து கொள்வீர்கள். ஏனெனில் இங்கு பிரித்தல் என்பதற்கான எந்த சாத்தியமும் கிடையாது.

உங்களது தன் இயல்புதான் புத்தர். மேலும் திட்டங்களில் இருந்து விடுதலை பெற்று, அக்கறை கொள்வதில் இருந்து விடுதலை பெற்றவர் எவரோ அந்த மனிதர் தான் புத்தர். உங்களது தன் இயல்பை கண்டுகொள்ளாமல் நாள் முழுவதும் வேறு எங்கேயோ ஓடி தேடி அலைந்து கொண்டிருந்தால் நீங்கள் ஒருபோதும் மெய்ஞ்ஞானத்தை கண்டுகொள்ள மாட்டீர்கள்.

உண்மையில் கண்டுகொள்வதற்கு எதுவும் இல்லை. எனவே உங்களது ஓட்டம் எல்லாம் பயனற்றது. இந்த வாக்குமூலம் போதி தருமரிடம் இருந்துதான் வந்துள்ளது என்று என்னால் சான்றளிக்க முடியும்.

கண்டுகொள்வதற்கு எதுவுமே இல்லை. நீங்களே எல்லாமுமாக இருக்கிறீர்கள். கண்டு கொள்பவன் தான் பொக்கிஷமாக இருக்கிறான். கண்டுகொள்ள வேண்டிய வேறு எதுவும் இல்லை. அதனால்தான் இயேசுவின் வாக்குமூலங்களாகிய, "தேடுங்கள், அப்போது நீங்கள் கண்டடைவீர்கள், தட்டுங்கள் திறக்கப்படும், கேளுங்கள் தரப்படும்" என்பது அழகானது, கவிதை போன்றது, மனம் கவர்வது. ஆனால் உண்மையானது அல்ல. நீங்கள் போதி தருமரைப் பின்பற்றினால் அவர், "தேடுங்கள், அப்போது நீங்கள்

ஒருபோதும் கண்டுகொள்ள மாட்டீர்கள்" என்றுதான் கூறுவார். "ஏனெனில், ஒவ்வொரு தேடுதலும் உங்களை, உங்களிடமிருந்து வெகுதூரம் கொண்டுசென்று விடுகிறது. யாரைக் கண்டுகொள்ள நீங்கள் முயற்சிக்கிறீர்கள்? அந்த நபர் நீங்கள்தான். நீங்கள்தான் புத்தர். நீங்கள் எங்கே போய்க்கொண்டு இருக்கிறீர்கள்.

தட்டாதீர்கள், அப்படி செய்தால் கதவானது மூடப்பட்டு விடும். ஏனெனில் உங்களது தட்டுதலே ஓர் ஆசையாகும், ஒரு கோரிக்கையாகும். ஆனால் ஒரு புத்தருக்கு ஆசையும் கிடையாது, கோரிக்கையும் கிடையாது. அதனால்தான் அவருக்கு கதவானது எப்போதும் திறந்தே இருக்கிறது.

கேட்காதீர்கள், அப்படிச் செய்தால் நீங்கள் தவற விட்டுவிடு வீர்கள். யாரிடம் நீங்கள் கேட்கிறீர்கள்? உங்களுக்கு அதைக் கொடுப்பதற்கு யாரும் இங்கு இல்லை? நீங்கள் ஏற்கெனவே அதைப் பெற்றிருக்கிறீர்கள். கேட்பதன் மூலம் நீங்கள் வெளியே சுற்றித் திரிகிறீர்கள். நீங்கள் வேறு யாரையோ தேடிக்கொண்டு இருக்கிறீர்கள். மேலும் அதை யாரும் உங்களுக்கு கொடுக்க முடி யாது. யாராவது உங்களுக்கு கொடுப்பார்களா என்கிற கேள்விக்கே இடமில்லை. நீங்கள் ஏற்கெனேவ அதைப் பெற்றிருக்கிறீர்கள்.

ஆகவே தேவையானது என்னவெனில் கேட்காமலும், அல்லது தட்டாமலும், அல்லது தேடாமலும் இருப்பதேயாகும். தேவைப்படுவதெல்லாம் உங்களது சுய இயல்பு குறித்து விழிப்புணர்வுடன் இருப்பதேயாகும். அப்போது நீங்கள் அதைக் கண்டுகொள்வீர்கள். கண்டுகொள்ள வேண்டியது எதுவும் இல்லை. ஆனால் இப்படிப்பட்ட ஒரு புரிதலை அடைவதற்கு உங்களுக்கு ஒரு குரு தேவை. உங்களுக்கு ஏன் ஒரு குரு தேவைப்படுகிறார்? நீங்கள் உங்களுக்கு உள்ளேயே ஏற்கெனேவ உண்மை நிலையை வைத்திருக்கும் போது, நீங்கள் ஏன் வெறுமனே ஓய்வுடன் இருந்துகொண்டு அதுகுறித்து விழிப்புணர்வுடன் இருக்கக் கூடாது?

இதில் உள்ள பிரச்சினை என்னவென்றால், பல காலமாக உங்களது தன்னுணர்வானது இந்த உலகம் முழுவதும் சுற்றித் திரிந்துள்ளது. வீட்டிற்கு வருவதற்கான வழியை அது

மறந்துவிட்டது. நீங்கள் வீட்டைவிட்டு வெளியேறி நீண்ட நெடுங்காலம் ஆகிவிட்டதால், உங்களுக்கு ஒரு வீடு இருந்ததை நீங்கள் அறிந்திருக்கவில்லை. அல்லது எப்போதாவது உங்களுக்கு ஒரு வீடு இருந்ததா என்பதை நீங்கள் அறிந்திருக்கவில்லை. வீட்டைப் பற்றிய உங்களது ஞாபக சக்தியானது நீங்கள் அதை ஏதோ ஒரு திரைப்படத்திலோ அல்லது ஒரு கனவிலோ அல்லது அதைப்பற்றி எங்கேயோ படித்தது போன்று உள்ளது. அது தூரத்து பள்ளத்தாக்குகளின் எதிரொலி போன்று இருக்கிறது; அது உங்களுக்கு ஒரு நிச்சயமான தன்மையைக் கொடுக்கவில்லை.

அதனால்தான் ஒரு குரு தேவைப்படுகிறார். குரு என்பவர் நிச்சயமான தன்மையை உங்களுக்கு கொடுக்கின்ற ஒருவராக இருக்கிறாரே தவிர, வேறு எதுவாகவும் இல்லை. அவரது பிரசன்னமானது நீங்கள் எப்போதும் கனவில் கண்டதை விடவும் மேலும் அதிகமாக உங்களுக்குள் உள்ளது என்பதை முற்றிலும் நிச்சயமானதாக ஆக்குகிறது. உங்களது சொந்த சாத்தியங்களைப் பற்றி அவரது கண்கள் உங்களுக்கு ஒரு சிறு காட்சியைக் கொடுக்கிறது. அவரது மௌன நிலை உங்களுக்குள் ஒரு மௌன நிலையை தூண்டுகிறது. மேலும் அவரது அதிகாரம் உங்களுக்குள் ஒரு செயல்பாட்டை ஆரம்பித்து வைக்கிறது. போதி தருமர் சரியாகத்தான் கூறுகிறார்.

ஆனால் இப்படிப்பட்டதொரு புரிதலை நீங்கள் அடைவதற்கு உங்களுக்கு ஓர் ஆசிரியர் தேவை. மேலும் அதை நீங்கள் புரிந்துகொள்வதற்கு நீங்கள் கஷ்டப்பட வேண்டியதிருக்கும். வாழ்வும், மரணமும் முக்கியமானவை. அதில் வீணாக நீங்கள் அவதிப்படாதீர்கள். உங்களை ஏமாற்றிக்கொள்வதில் எந்த ஓர் ஆதாயமும் இல்லை.

ஆனால் ஒவ்வொருவரும் ஏமாற்றிக் கொண்டுதான் இருக்கிறோம். ஒரு சிலர் பணம் சம்பாதித்துக் கொண்டு தாங்கள் உயர்ந்த செல்வந்தர் ஆகிவிடும்போது தங்களுக்குள் உள்ள சக்தியை அடையாளம் கண்டுகொள்கிற நிலையை அடைந்து விடலாம் என்று நினைத்துக்கொண்டு தங்களை ஏமாற்றிக் கொண்டு இருக்கின்றனர்; ஒருசிலர் அறிவாற்றலை சேர்த்து

வைப்பதன் மூலம் ஏமாற்றிக்கொண்டு இருக்கிறார்கள்; ஒருசிலர் அதிகாரம் படைத்தவர்களாக, மரியாதை படைத்தவர்களாக ஆகி விடுவதன் மூலம் அடைந்து விடலாம் என்று ஏமாற்றிக்கொண்டு இருக்கின்றனர்; மேலும் ஒருசிலர் புனிதர்களாகவும், தங்களைத் தாங்களே துன்புறுத்திக் கொள்கின்ற யோகிகளாகவும் ஆகிக்கொண்டும் கூட ஏமாற்றிக் கொண்டு இருக்கிறார்கள். ஆனால் நீங்கள் என்னதான் செய்தாலும், நீங்கள் செய்வது உங்களது தன் இயல்பு குறித்த விழிப்புணர்விற்கு உங்களை வழிநடத்திச் செல்லவில்லை என்றால் அது ஓர் ஏமாற்று வேலை.

மலை அளவு ஆபரணங்களை நீங்கள் வைத்திருந்தாலும்கூட, மேலும் கங்கைக் கரையில் எத்தனை மணல்கள் உள்ளதோ அத்தனை வேலைக்காரர்களை நீங்கள் வைத்திருந்தாலும்கூட, உங்களது கண்கள் திறந்திருக்கும்போது மட்டுமே நீங்கள் அவற்றை காண்கிறீர்கள். ஆனால் உங்களது கண்கள் மூடப்பட்டு இருந்தால் என்ன காண்பீர்கள்?

அவை எல்லாம் மறைந்துவிடும். உங்களுக்கான ஒரு சிறிய பரிசோதனை என்று போதி தருமர் கூறுகிறார். காலை வேளையில் நீங்கள் உங்களது கண்களைத் திறந்த உடன் உங்களது கனவுகள் எல்லாம் மறைந்து விடுகின்றன. அதே விதத்தில் நீங்கள் கண்களை மூடிக்கொள்ளும்போது உங்களது அரண்மனைகள் மறைந்து விடுகின்றன. உங்களது ஒட்டுமொத்த உலகமும் மறைந்து விடுகிறது. மேலும் ஒரு விநோதமான விஷயத்தை நீங்கள் எப்போதாவது கவனித்திருக்கிறீர்களா? பகல் பொழுதிலும்கூட சிலசமயம், ஒருவேளை அது உண்மையற்றதாக இருக்குமோ என்று நீங்கள் சந்தேகப்படலாம். ஏனெனில் அதன் உண்மைத் தன்மை குறித்து நிச்சயத்துடன் இருப்பதற்கு எந்த ஒரு வழியும் இருக்காது. நீங்கள் இங்கு உட்கார்ந்து இருக்கிறீர்கள். இது ஒரு கனவு என்று உங்களால் நினைக்க முடியாதா? நீங்கள் கனவு காண்கிறீர்கள் என்பது சாத்தியமானது. இது ஒரு கனவு அல்ல, இது உண்மையான ஒன்று என்று நீங்கள் எப்படி அறிகிறீர்கள்? ஒரே ஒரு வித்தியாசம் உங்களது கண்கள் திறந்து இருக்கின்றன. ஆனால் இரவில் கனவு காணும்போது அது ஒரு கனவு என்று ஒருபோதும் சந்தேகப்படுவது கிடையாது. இது வினோதமான புதிர்களில்

ஒன்றாகும். உண்மையான வாழ்க்கையில் முழு விழிப்புணர்வுடன் இருக்கும் போது நீங்கள் அதன் உண்மைத்தன்மை குறித்து சந்தேகப்பட முடியும்; ஒரு கனவில் அந்த கனவின் உண்மைத் தன்மை குறித்து யாரும் எப்போதும் சந்தேகப்படுவதில்லை. யாரும் அது ஒரு கனவு என்று நினைப்பதில்லை. அந்த அளவுக்கு அது உண்மையானதாக உள்ளது.

போதி தருமர் உங்களுக்கு ஓர் உதாரணத்தை கொடுப்பதற்கு முயற்சி செய்கிறார். நீங்கள் இறந்து விடும்போது உங்களது கண்களை மூடி விடுவார்கள். கீழை நாடுகளில் இது ஒரு பாரம்பரியம். ஒருவர் இறந்து விடுகின்ற அந்த நொடிப் பொழுதே, உடனடியாக அவரது கண்கள் மூடப்பட்டு விடும். எனது குழந்தை பருவத்தில் இருந்தே இந்த கருத்து குறித்து ஆர்வத்துடன் இருந்தேன். இது ஏன் செய்யப்படுகிறது? அவர் திறந்த கண்களுடன் இறக்க விரும்பினால் அவர் அப்படியே இறந்து விட்டுப் போகட்டுமே. இதில் அடுத்தவர்கள் ஏன் குறுக்கிட வேண்டும். மரணத்திற்குப் பிறகாவது அவர் தனது கண்களை கொஞ்சம் திறந்து வைத்துக்கொண்டு இருப்பதற்கான கொஞ்ச சுதந்திரத்தையும் கூட நீங்கள் ஏன் அனுமதிப்பதில்லை? நான் ஒவ்வொருவரையும் கேட்டேன். ஏனெனில் யாராவது எப்போதாவது இறந்து விட்டால் நான் அந்த இடத்தில் இருப்பேன். அங்கு என்ன நடக்கிறது என்பதைப் பார்ப்பதற்கு நான் உடனடியாக அங்கு சென்று விடுவேன். நான் அநேகரிடம் கேட்டேன். ஆனால் ஏன் அப்படிச் செய்கிறார்கள், ஏன் கண்களை மூடுகிறார்கள் என்று யாராலும் பதில் சொல்ல முடியவில்லை.

எப்போதும் அடிக்கடி மக்கள் திறந்த கண்களுடன் தான் இறந்து போகின்றனர். மூடிய கண்களோடு மரணமடைவது மிகவும் அபூர்வமானது. ஏனெனில் கண் இமைகளை மூடுவதற்கும் கூட உங்களுக்கு உயிர் சக்தி தேவை; அதேபோன்று கைவிரல்களை முஷ்டி போன்று வைத்துக் கொண்டும் மரணமடைய முடியாது. ஏனெனில், நீங்கள் உங்களது கைகளை முஷ்டி போன்று வைத்துக்கொள்வதற்கு கொஞ்சம் உயிர் சக்தி தேவை. ஒவ்வொரு வரும் திறந்த கைகளுடன் மட்டுமே மரணமடைகிறோம். இப்போது அங்கு உயிர் சக்தி இல்லை. உங்களால் எப்படி கைகளை

முஷ்டியாக வைத்திருக்க முடியும்? இதேபோன்ற வழியில் கிட்டத்தட்ட ஒவ்வொருவரும் கண்களைத் திறந்தபடியே மரண மடைகிறோம்.

யாரும் இதுகுறித்து எனக்கு எதுவும் கூறமுடியவில்லை என்றாலும்கூட, நான் மிகப்பெரிய துறவிகளை எல்லாம் கேட்டிருக் கிறேன். ஆனால் அவர்கள், "நீ இப்படிப்பட்ட விநோதமான கேள்வியைக் கொண்டு வருகிறாய். நாங்கள் அதுபற்றி ஒதுபோதும் சிந்தித்தது கிடையாது. மேலும் அது குறித்து எந்த ஒரு புனித நூலிலும் குறிப்பிடப்படவில்லை. இது ஒரு நடைமுறை பழக்க வழக்கம்" என்று கூறினார்கள்.

ஆனால் நான் அவர்களிடம், "இது இப்படியே நடந்து கொண்டேதான் இருக்கிறது. இது முற்றிலும் அர்த்தமற்றது என்று என்னால் இதை ஏற்றுக்கொள்ள முடியாது. ஏனெனில் இதில் உள்ள அர்த்தத்தை என்னால் காண முடிகிறது. ஒரு மனிதன் இறக்கும்போது அவனது கண்கள் மேல்பக்கமாகத் திரும்புகின்றன. இறந்து போன ஒரு மனிதனின் திறந்த கண்களில் நீங்கள் வெள்ளை நிறத்தை மட்டுமே காண்பீர்கள். கண்களில் உள்ள கறுப்பு பகுதி, உண்மையான கண், மேல்நோக்கி திரும்பி விடுகிறது. அது மக்களிடம் பயத்தை உருவாக்குகிறது. ஒருவருடைய கண்கள் வெறுமனே திறந்திருக்கும்போது எல்லாமே வெள்ளை நிறத்தில் இருப்பது மக்களுக்கு பயத்தைக் கொடுக்கிறது. ஆனால் இது உங்களது தூக்கத்தில்கூட நடக்கிறது; உங்களது கண்கள் மேல்நோக்கி திரும்பி விடுகின்றன. அதுதான் கண்களுக்கான ஓய்வு. ஆனால் இறந்தவுடன் கண்கள் இப்படி முழுமையான ஓய்விற்கு சென்று விடுவதால், இதனால் மக்கள் மனதில் பயத்தைத் தூண்டாமல் இருப்பதற்கு, அந்த கண்கள் உடனடியாக மூடப்படுகிறது" என்று கூறினேன்.

மேலும் தத்துவ ரீதியில் இப்போது இந்த உலகம் இல்லாமல் போய்விடுவதால் கண்கள் மூடப்படுகின்றன. நீங்கள் மறைய வில்லை; உங்களுக்கு இந்த உலகம் மறைந்துள்ளது. ஒரு மனிதன் இறந்து விடுகின்ற அந்த நொடிப்பொழுதிலேயே, அவர் தனது சாம்ராஜ்யத்தை தன்னோடு எடுத்துக்கொண்டு போகமுடியாது.

அவர் தனது கல்வி அறிவை தன்னோடு எடுத்துக்கொண்டு செல்ல முடியாது அவர் தனது புகழ், மரியாதை, கௌரவம் ஆகிய வற்றையும் எடுத்துச்செல்ல முடியாது. அவர் தன்னோடு எடுத்துச்செல்ல முடிவதெல்லாம் அவரது தன் இயல்பு குறித்த அவரது விழிப்புணர்வு மட்டுமே ஆகும். அதுமட்டும் தான் உங்களது செல்வம். அந்த செல்வத்தை நீங்கள் சம்பாதிக்கவில்லை என்றால் நீங்கள் ஒரு அபரிமிதமான சந்தர்ப்பத்தை வீணாக்கிக் கொண்டு இருக்கிறீர்கள்.

அதன்பின்னர் நீங்கள் பார்க்கின்ற எல்லாமே ஒரு கனவு அல்லது மாயை போன்றது என்பதை கண்டிப்பாக அறிந்துகொள்ள வேண்டும். ஏனெனில் 'மரணம்' அவை எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு போகப் போகிறது. மரணமானது எடுத்துக் கொண்டு போக முடியாத ஒன்று மட்டுமே உண்மை நிலைக்கான அடிப்படையாகும்.

விரைவில் நீங்கள் ஒரு குருவை கண்டுகொள்ளவில்லை எனில், இந்த பிறவியை நீங்கள் வீணாக வாழ்கிறீர்கள். நீங்கள் புத்த இயல்பை வைத்திருக்கிறீர்கள் என்பது உண்மை. ஆனால் ஒரு குருவின் உதவி இல்லாமல் உங்களால் அதை ஒருபோதும் அறிந்துகொள்ள முடியாது. ஒரு மில்லியன் மனிதர்களில் ஒரே ஒரு மனிதர் மட்டுமே குருவின் உதவி இல்லாமல் மெய்ஞ்ஞானம் அடைந்தவர் ஆகிறார்.

இது போதி தருமரிடம் இருந்து வந்தது என்று நிச்சயமாக என்னால் கூறமுடியும். இது சாதாரணமாக குறிப்புகளை எடுக்கின்ற ஒருவரின் தகுதிக்கு அப்பாற்பட்டது. ஒரு மில்லியன் மனிதர்களில் ஒரே ஒரு மனிதர் மட்டுமே குருவின் உதவி இல்லாமல் மெய்ஞ்ஞானம் அடைந்தவர் ஆகிறார். போதி தருமரும்கூட ஒரு குருவின் உதவி இல்லாமல் மெய்ஞ்ஞானம் அடையவில்லை.

ஆனால் அதற்கான சாத்தியங்கள் உள்ளன. ஏனெனில் அது உங்களது தன் இயல்பு. உண்மையில், எந்த ஒரு குருவின் தேவையும் கிடையாது. நீங்கள் உங்களுக்குள் ஏதாவது ஒன்றை காணப் போகிறீர்களா அல்லது இல்லையா என்பதைப்பற்றி கவலைப்படாமல் உங்களுக்குள் நுழைந்து செல்வதற்கு

போதுமான தைரியம் உங்களிடம் இருந்தால், நீங்கள் ஒரு குருவின் உதவி இல்லாமல் அதைக் கண்டு கொள்கிறீர்கள். ஒரு குருவின் உதவி என்பது என்ன? மெய்ஞ்ஞானம் என்பது உங்களுக்குள் உள்ளது என்கிற நிச்சயத்தன்மையை மட்டுமே அவர் உங்களுக்கு கொடுக்கிறார். ஏனெனில் நீங்கள் அதற்கான அதிதீவிரச் செயலில் ஈடுபடுவதற்கு நீங்கள் தயாராக இல்லை. அப்படி இல்லையெனில், நிச்சயத்தன்மை ஏன் தேவைப்படுகிறது? இது உங்களது வாழ்கை. மேலும் உங்களிடம் அதற்கான உரிமையும் உள்ளது. அது என்ன என்பதை அறிந்து கொள்கின்ற ஒரு விருப்பத்தை, ஏக்கத்தை மட்டுமே நீங்கள் பெற்றிருக்க வேண்டும்.

எனது வாழ்க்கையில் நான் எந்த ஒரு குருவையும் வைத்துக் கொள்ளவில்லை. அநேக மெய்ஞ்ஞானம் அடைந்த மக்களை நான் சந்தித்து இருக்கிறேன். ஆனால் என்னைத் தனியாக விட்டுவிடும்படி நான் அவர்களிடம் வெறுமனே எனக்கு ஒரு நிச்சயத்தன்மையை மட்டும்தான் கொடுக்கிறது. ஆனால், நிச்சயத்தன்மை இல்லாமலேயே செல்கின்ற திறன் என்னிடம் இருந்தது. உண்மையில், எந்தவிதமான நிச்சயத்தன்மையும் இல்லாமல், நீங்கள் எங்கு போகிறீர்கள் என்பதை அறிந்து கொள்ளாமலே உங்களுக்குள் நீங்கள் எதையாவது கண்டு கொள்வீர்களா அல்லது இல்லையா என்பது தெரியாமலே உங்களுக்குள் செல்வது அதிக சாறு நிறைந்தது.

ஒரு நிச்சயத்தன்மையுடன் நீங்கள் உங்களுக்குள் செல்வது என்பது நீங்கள் ஒரு திரைப்படத்தை இரண்டு முறை பார்ப்பதைப் போன்றது. எல்லாமே நிச்சயமானதாக இருக்கும், இப்போது என்ன நடக்கப்போகிறது என்பது உங்களுக்குத் தெரியும். எனது வாழ்நாள் முழுவதும் நான் பேசிக்கொண்டு இருக்கின்ற அந்த புதிய மனிதனுக்கு குரு தேவைப்பட மாட்டார். ஏனெனில் அவன் வீரதீரம் நிறைந்தவனாக இருப்பான். மேலும் வீரதீரச் செயல் வேண்டும் என்பதற்காக, உயிரின் ஆரம்ப இடத்தில் என்ன இருக்கிறது என்பதை பார்ப்பதற்காக அவன் தனியாகவே செல்வான்.

ஆனால் இதுவரை ஒரு மில்லியன் மனிதரில் ஒரே ஒரு மனிதர் மட்டுமே குருவின் உதவி இலலாமல் மெய்ஞ்ஞானம் அடைந்தவர் ஆகிறார். ஒருவேளை அந்த ஒரு மனிதன் நானாகக்கூட இருக்கலாம். ஏனெனில், இந்த ஒட்டுமொத்த மனித வரலாற்றில் குருவை வைத்துக் கொள்ளாமல் மெய்ஞ்ஞானம் அடைந்த யாரையும் நான் அறிந்திருக்கவில்லை. ஆனால் போதி தருமர், தான் ஒரு குருவை வைத்துக்கொண்டார் என்றாலும்கூட குரு இல்லாமல் அடையக்கூடிய சாத்தியக்கூறுகளை அவர் அடையாளம் கண்டுகொண்டார். மேலும் ஒரு மில்லியன் மனிதரில் ஒரே ஒரு மனிதர் மட்டுமே குருவின் உதவி இல்லாமல் மெய்ஞ்ஞானம் அடைந்தவர் ஆகிறார் என்கிற அவரது வாக்குமூலத்தை நான் நிறைவேற்றிக் கொண்டு இருக்கிறேன். இது இப்படி இருந்தாலும் கூட, சூழ்நிலைகளின் சேர்க்கையால் யாரோ ஒருவர் புத்தர் என்ன கூறினாரோ அதை புரிந்து கொள்கிறார். அந்த மனிதருக்கு ஒரு குரு தேவை இல்லை. இப்படிப்பட்ட ஒரு மனிதர் கற்றுக்கொடுக்கப்படுகின்ற எல்லாவற்றையும் விடவும் உயர்ந்த ஓர் இயல்பான விழிப்புணர்வைப் பெற்றிருக்கிறார். ஆனால் அந்த அளவுக்கு நீங்கள் ஆசீர்வதிக்கப்படவில்லை எனில் கடினமாகப் படியுங்கள். கற்பித்தல் வழியாகவே நீங்கள் புரிந்துகொள்வீர்கள். இந்தக் கடைசி வாக்குமூலங்கள் போதி தருமரிடம் இருந்து வந்திருக்க முடியாது. முதலில், உங்களது இயல்பை அறிந்து கொள்தல் என்பது படிப்பதன் மூலம் உங்களுக்கு வந்துவிடாது. நீங்கள் இந்த உலகில் உள்ள எல்லா புனித நூல்களையும் படித்துக்கொண்டே போகலாம் என்றாலும் கூட நீங்கள் உங்களை அறிந்துகொள்ள மாட்டீர்கள். மேலும் இந்த அறிதல் மற்றவர்கள் உங்களுக்கு கற்பித்தலின் வழியாகவும் வராது. கற்பித்தல் என்பது வெளியில் இருந்து வரும் தகவல் என்று அர்த்தம். அப்படி இல்லாமல் வேறு எப்படி அது வரமுடியும்? அது குருவோடு தோழமை கொண்டிருப்பதன் மூலம், அந்த நிலையை அடைந்த யாரோ ஒருவரிடம் நேசத்தோடு இருப்பதன்மூலம் அவரிடம் உங்களது சொந்த எதிர்காலத்தை காண்பதன் மூலம் அது உங்களுக்கு வரும். நீங்கள் வெறுமனே ஒரு விதை போன்று இருக்கிறீர்கள். ஆனால் அவரோ மலராக மலர்ந்து விட்டவர்.

நீங்களும் மேலே நகர்ந்து சென்று ஒரு மலராக ஆகவேண்டும் என்கிற ஆசையை, ஏக்கத்தை உங்களுக்குக் கொடுக்கிறது. நீங்கள் படித்தீர்களா என்பது கேள்வி அல்ல, நீங்கள் கற்பிக்கப்பட்டீர்களா என்பது கேள்வி அல்ல. குருவின் மீது ஆழ்ந்து அன்பு கொண்டிருக்கிறீர்களா என்பதுதான் கேள்வி ஆகும். அதனால்தான் இந்த வாக்கியங்கள் போதி தருமருடையது அல்ல என்று கூறுகிறேன். அவை அவருடையதாக இருக்க முடியாது. போதி தருமரே கூட இங்கு இருந்து, இவை தனது வாக்குமூலங்கள் தான் என்று கூறினாலும் கூட நான் அதை நம்புவதற்கு மறுத்து விடவேன். இவை அவரது வாக்கியங்கள் அல்ல. போதி தருமர் போன்ற ஒரு மனிதர் இதுபோன்ற குப்பை விஷயங்களைக் கூற முடியாது.

*புரிதல் என்பது இல்லாமல், கற்றுக்கொள்ளாமலேயே தங்களால் செய்ய முடியும் என்று நினைக்கின்ற மனிதர் எவரோ, அவர் கறுப்பிற்கும் வெள்ளைக்கும் இடையே உள்ள வேறுபாட்டை கூறமுடியாத மாயை நிறைந்த ஆன்மாக்களை விடவும் வேறானவர் அல்ல.*

இவை சீடரின் குறிப்புகள். அவர் மீண்டும் படித்தலின் உண்மையை வலியுறுத்துகிறார். மிகவும் படித்த, மிகவும் அறிவுள்ள மக்களை நீங்கள் அனைவரும் அறிவீர்கள். ஆனால் அவர்களுக்குள் அடிஆழத்தில உள்ளே ஒளி இல்லை. அவர்கள் பேரானந்தத்தை வெளிப்பரப்புவது கிடையாது. உண்மையில் அவர்களது படிப்பானது அவர்களை கவலை மிக்கவர்களாக ஆக்கிவிடுகிறது. அவர்களை இலகுவானவர்களாக ஆக்குவதை விட்டுவிட்டு கல்வி அறிவானது அவர்களை தாங்க முடியாத சுமை உள்ளவர்களாக ஆக்கிவிடுகிறது. எதையும் அறியாமலேயே அவர்கள் அதிகம் அறிந்து கொள்வதால் அது அவர்களின் உயிர் உணர்வில் ஒரு மாபெரும் இறுக்கமான நிலையாக ஆகிவிடுகிறது; ஏனெனில் உண்மையில் அவர்களுக்கு எதுவும் தெரியாது. ஆனால் அவர்கள் அளவுக்கு அதிகமாக தகவல்களை சேர்த்து வைத்துள்ளனர். மக்கள் அவர்களை வழிபடுகின்றனர். மக்கள் அவர்களுக்கு மரியாதை அளிக்கன்றனர். எனவே நமது கல்வி அறிவு எல்லாம் மேலோட்டமானதுதான் என்கிற உண்மையை அவர்களால் ஏற்றுக்கொள்ள முடியாது. அது நமது உயிர்

உணர்விற்குள் வளரவில்லை. அதற்கு நமக்குள் வேர்கள் இல்லை. இந்த மலர்கள் எல்லாம் சந்தையில் இருந்து வாங்கப்பட்டவை. அவை நமது உயிர் உணர்வில் வளர்ந்தவை அல்ல.

மீன் பிடிக்கச் சென்ற ஒரு மனிதனைப் பற்றி நான் கேள்விப் பட்டிருக்கிறேன். நாள்முழுவதும் முயற்சி செய்தும் அவரால் ஒரு மீனைக்கூட பிடிக்க முடியவில்லை. அவன் இப்போது தனது மனைவியைப் பற்றி கவலைப்பட்டான். ஆகவே அவன் மீன் சந்தைக்கு போய் மூன்று அழகான பெரிய மீன்களை வாங்கினான். ஆனால் ஒரு நிபந்தனையோடு வாங்கினான். ஆனால் அந்த மீன்களை விற்ற மீன் வியாபாரியிடம் இந்த மீனவனின் நிபந்தனையை புரிந்துகொள்ள முடியவில்லை. ஏனெனில் அந்த நிபந்தனை விநோதாமனதாக இருந்தது. மேலும் இப்படிப்பட்ட விஷயம் அவனுக்கு முதல் முறையாக நடக்கிறது. அந்த மீன் வியாபாரி கேட்கின்ற எந்த ஒரு விலையையும் கொடுபபதற்கு ஆந்த மனிதன் தயாராக இருந்தான். ஆனால் நிபந்தனை என்னவென்றால் அந்த வியாபாரி அந்த மீன்களை வீசவேண்டும். அதை அந்த மனிதன் பிடிக்க வேண்டும் என்பதுதான். அதற்கு அந்த வியாபாரி, "அதில் எந்த பிரச்சினையும் இல்லை. நான் தூக்கி வீசுகிறேன். நீ பிடித்துக்கொள். ஆனால் இதில் என்ன உள்ளது என்பது எனக்குப் புரியவில்லை" என்றான்.

அதற்கு அந்த மனிதன், "உனக்குப் புரியாது. ஆனால் நான் பொய் சொல்ல விரும்பவில்லை. நான் வீட்டிற்குப் போனால் எனது மனைவி எத்தனை மீன்களை நான் பிடித்தேன் என்று கேட்பாள். எனது சொந்த கைகளால் நான் பிடித்த இந்த மூன்று மீன்களையும் நான் காட்டுவேன். நான் மிகச் சரியாக உண்மையுடன் இருப்பதற்கு விரும்புகிறேன்" என்றான்.

இப்படிப்பட்ட மனிதன் அவனது மனைவியை ஏமாற்றி விடலாம். ஆனால் தான் தன்னை ஏமாற்ற முடியுமா? இது உண்மையிலேயே உண்மை நிலைதானா அல்லது உண்மையின் பெயரால் வெறுமை பொய்மையால் மூடப்பட்ட நிலையா? மேலும் மெத்தப் படித்தவர்கள் என்று நீங்கள் அழைக்கின்றவர்களின் சூழ்நிலையும் இதேபோன்றதுதான். அவர்களும் மீன்களைப்

பிடித்திருக்கிறார்கள். ஆனால் ஏரியில் இருந்து அல்ல, ஒரு மீன் வியாபாரியிடம் இருந்து. மேலும் அவரது கடை சந்தையில் உள்ளது. மேலும் அவர்கள் நிச்சயமாக அதைப் பிடித்திருப்பார். ஆனால் நிச்சயமாக தாங்கள் அதைப் பிடிக்கவில்லை என்பதும், தாங்கள் அதை விலைக்கு வாங்கியதும் அவர்களுக்குத் தெரியும். ஆனால் உண்மையை யாரும் விலை கொடுத்து வாங்க முடியாது. நீங்கள் உங்களது உள் ஒளியை உங்களது சொந்த விழிப்புணர்வின் மூலமே பிடிக்க வேண்டும். அதைத்தவிர வேறு எந்த வழியும் இல்லை. புத்த தர்மத்தைப் பொய்யாக அறிவிக்கின்ற இப்படிப்பட்ட மக்கள் உண்மையில் புத்தரை நிந்தனை செய்கின்றனர். மேலும் தர்மத்தை கவிழ்த்து விடுகின்றனர். ஆனால் அவர்களுடைய போதனை சரித்திரத்தினுடையதே அன்றி புத்தருடையது அல்ல. அவர்களின் ஆசிரியர் சாத்தான்களின் அரசர். மேலும் அவரது சீடர்கள் சாத்தானின் அன்புக்குரியவர்கள். இப்படிப்பட்ட கற்பித்தல்களைப் பின்பற்றுகின்ற மாயை நிறைந்த மக்கள், பிறப்பு இறப்பு என்னும் கடலின் ஆழத்தில் தெரியாமலேயே மூழ்கி விடுகின்றனர்.

அவர்கள் தங்களின் இயல்பை அறிந்து கொள்ளாத வரையில் மக்கள் அவர்களை புத்தர்கள் என்று எப்படி அழைக்க முடியும்? சாத்தானின் எல்லைக்குள் அவர்கள் நுழைந்து ஒரு படி ஏமாற்றுகின்ற அவர்கள் பொய்யர்கள். அவர்கள் தங்களின் சுய இயல்பைக் கண்டுகொள்ளாத வரையில் பன்னிரண்டு விதமான கோயில் கட்ட திட்டங்கள் பற்றி அவர்களது பிரசங்கமானது சாத்தானின் போதனை என்பதைத்தவிர வேறு எதுவும் இல்லை. அவர்களின் பற்றுறுதி மாராவிற்குரியது. மாரா என்பது புத்த மத்தில் சாத்தானைக் குறிப்பதாகும். புத்தருக்குரியது அல்ல. கருப்புக்கும் வெள்ளைக்கும் வித்தியாசம் தெரியாதவர்கள் பிறப்பு மற்றும் இறப்பு என்பதில் இருந்து அவர்கள் எப்படி தப்பிக்க முடியும்?

தனது சுயஇயல்பை கண்டு காள்பவர் புத்தர். யாரெல்லாம் அப்படி கண்டுகொள்ளவில்லையோ, அவர்கள் எல்லாம் அழிந்து போகக்கூடியவர்கள். ஆனால் அழிந்து போகக்கூடிய இயல்பை விட்டுவிட்டு வேறு எங்கோ நீங்கள் புத்தரின் இயல்பை

கண்டுகொள்ள முடியும் எனில் அது எங்கு இருக்கிறது? நமது அழிந்து போகின்ற இயல்புதான் நமது புத்த இயல்பு.

நாம் அதை அடையாளம் கண்டுகொள்வது மட்டுமே அவசியமாகிறது. அதில் வேறு எந்த வித்தியாசமும் கிடையாது. யார் ஒருவர் அதை அடையாளம் கண்டுகொண்டு அதை தனது இயல்பு என்கிற விழிப்புணர்வோடு இருக்கிறாரோ அவர் ஒரு புத்தர். யார் ஒருவர் தனது சுய இயல்பை அடையாளம் கண்டுகொள்ளாமலும், தனக்குள் ஒருபோதும் செல்லாலும் இருக்கிறாரோ அவர் அழிந்து போகக்கூடியவராக இருக்கிறார். ஆனால் வேறுபாடு என்பது அடையாளம் கண்டுகொள்வதில், விழிப்புணர்வில் மட்டுமே இருக்கிறது; அங்கே உங்களுக்கும் மெய்ஞ்ஞானம் அடைந்த ஒருவருக்கும் இடையே தன்மையில் எந்த ஒரு வித்தியாசமும் இல்லை. அவர் அதை அறிந்து கொண்டு விட்டார். ஆனால் நீங்களோ உங்களது சொந்த பொக்கிஷங்கள் குறித்து விழிப் புணர்வு இல்லாமல் இருப்பது மட்டுமே வேறுபாடாக உள்ளது.

எனவே போதி தருமர் அறிவிப்பதாவது: நமது அழிந்து போகின்ற இயல்புதான் புத்தரின் இயல்பு. இந்த இயல்புக்கு அப்பால் அங்கே எந்த ஒரு புத்தரும் இல்லை. புத்தர்தான் நமது இயல்பு. ஆனால் நாம் அதுகுறித்து விழிப்புணர்வு அடையாத வரையில் நாம் அழிந்து போகக்கூடியவர்களாகவே இருப்போம். இந்த இயற்கை இயல்பைத் தவிர்த்து அங்கே ஒரு புத்தர் இல்லை. மேலும் இந்த புத்தரைத் தவிர்த்து மேலும் ஓர் இயற்கை இயல்பு அங்கு இல்லை.

புத்தர் என்கிற இந்த வார்த்தை போதி தருமரால் மீண்டும் மீண்டும் கூறப்படும். எனவே அதற்கு என்ன அர்த்தம் என்பதை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். அது யாருடைய தனிப்பட்ட பெயரும் அல்ல. புத்தர் என்றால் வெறுமனே விழிப்புணர்வு பெற்ற ஒருவர் என்றுதான் அர்த்தம். கௌதம புத்தர் மிகவும் புகழ்பெற்ற விழிப்புணர்வு அடைந்த மனிதர். ஆனால் அவர் ஒருவர் மட்டுமே விழிப்புணர்வு அடைந்த மனிதர் என்று அர்த்தமாகி விடாது. அவருககு முன்பும் அநேக புத்தர்கள் இருந்துள்ளனர். மேலும் அவருக்குப் பின்பும் அநேக புத்தர்கள் இருந்திருக்கிறார்கள்.

மேலும் ஒவ்வொரு மனிதனும் புத்தராக ஆகிவிடுகின்ற காலம் வரையில் எதிர்காலத்தல் புதிய புத்தர்கள் முளைத்துக்கொண்டே இருப்பார்கள்.

ஏனெனில் ஒவ்வொருவரிடம் அதற்கான சக்தி உள்ளது. அதற்கான காலத்திற்காக, சரியான காலத்திற்காக மட்டுமே நீங்கள் காத்துக்கொண்டு இருக்கிறீர்கள். என்றாவது ஒருநாள், வெளி உலக உண்மையினால் துன்புறுத்தப்பட்டு, எல்லாவற்றையும் பார்த்து விட்டு அதில் ஒன்றும் இல்லை என்பதைக் கண்டுகொண்ட விரக்தியில் நீங்கள் நிச்சயமாக, உங்களுக்குள் திரும்பியாக வேண்டும்.

கௌதம புத்தரின் தனிப்பட்ட பெயர் சித்தார்த்தர் என்பதாகும். கௌதமர் என்பது அவரது குடும்பப்பெயர். எனவே அவர் பெயர் கௌதம சித்தார்த்தர் என்று இருந்தது. புத்தர் என்பது அவருடைய பெயர் அல்ல; அது அவரது விழிப்புணர்வு அடைந்த நிலை. நான் எனது டிஸ்கோ அரங்கத்திற்கு ஜோர்பா தி புத்தா என்று பெயர் வைத்திருக்கிறேன். இதற்கு இலங்கையின் தூதர், இலங்கை ஒரு பௌத்த நாடு என்பதால், எனக்கு ஒரு கடிதம் எழுதினார். அதில் அவர், “இது மிகவும் அவமரியாதையானது. இது எங்களது மத உணர்வுகளாக காயப்படுத்துகிறது. உங்களது டிஸ்கோ அரங்கத் திற்கு ஜோர்பா தி புத்தா என்று பெயர் வைத்திருப்பதில் உள்ள புத்தர் என்பதை தயவு செய்து எடுத்து விடுங்கள் என்று கூறி இருந்தார்.

அதற்குப் பதில் அளிக்கும் விதமாக நான் அவருக்கு, “ஒருவேளை நீங்கள் புத்த மதத்தில் பிறந்திருக்கலாம். ஆனால் நான் ஒரு புத்தர். எனவே எனது டிஸ்கோக்களுக்கு ஜோர்பா தி புத்தா என்று பெயரிட்டு அழைப்பதற்கு எனக்கு எல்லா உரிமையும் உள்ளது. அதற்கும் உங்களது புத்தருக்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது. நீங்கள் திருப்தியாக இருக்கலாம். நான் எனது டிஸ்கோவை ஜோர்பா தி சித்தார்த்தா என்று பெயரிட்டு அழைத் திருந்தால், அதன்பின்னர் கலக்கம் அடைந்ததில் அர்த்தம் இருக்கும். ஆனால் புத்தர் என்பது தனி மனிதரின் பெயர் அல்ல; கௌதம புத்தர் என்பவர் ஒரு மில்லியன் புத்தர்களில் ஒருவராக

மட்டுமே இருக்கிறார். மேலும் ஜோர்பாவிற்கு ஒரு புத்தராக ஆகக்கூடிய எல்லா சக்தியும் உள்ளது. அதை நானும் தடுக்க முடியாது. மற்றும் உங்களாலும்கூட முடியாது. மேலும் நீங்கள் ஒரு பௌத்தர் மட்டுமே. வெறுமனே புத்த மதத்தைப் பின்பற்றி நடப்பவர் மட்டுமே. ஒரு பாசாங்குக்காரர் மட்டுமேயாகும். 'புத்தர்' என்பதற்கு மிகச்சரியான அர்த்தம் கூட உங்களுக்குத் தெரியாது. சுய விழிப்புணர்வு என்பதை நீங்கள் ஒருபோதும் அனுபவித்தது கிடையாது. எனவே நீங்கள் என்ன விரும்புகிறீர்கள் என்று எனக்கு மீண்டும் எழுதுங்கள்'' என்று கூறினேன்.

அவர் அமைதியாக இருந்து விட்டார். அவர் பதில் கடிதம் எழுதவில்லை. மேலும் அவர் அந்தக் கடிதத்தை வேறு யாரிடமும் காட்டி இருக்க மாட்டார் என்று நான் நினைக்கிறேன்.

ஆகவே புத்தர் என்கிற வார்த்தையை போதி தருமர் பயன்படுத்தும் போதெல்லாம் அவர் கௌதம புத்தரைப் பற்றி குறிப்பிடவில்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள். அவர் விழிப்பணுர்வு, மெய்ஞ்ஞானம், விடுதலை, முக்தி ஆகியவற்றைப் பற்றித்தான் கூறுகிறார். புத்தர் என்கிற அந்த வார்த்தையில் இந்த குணாதிசயங்கள், தன்மைகள் எல்லாம் உள்ளன. இது யாருடைய பெயரும் அல்ல. மேலும் இது ஒவ்வொருவருக்கும் சாத்தியப் படுகின்ற சக்தி என்பதாக உள்ளது.

O

என்னால் எனது சுய இயல்பை காண முடியாமல் போய் விட்டால் புத்தர்களை ஆவாஹணம் செய்வதன்மூலம், சூத்திரங்களை மனப்பாடமாக ஒப்புவிப்பதன் மூலம், காணிக்கைகள் செலுத்துவதன் மூலம், நல்ல ஒழுக்கங்களை கடைப்பிடிப்பதன் மூலம், பக்தி செய்வதன் மூலம் அல்லது நல்ல காரியங்களை செய்வதன் மூலம் நான் மெய்ஞ்ஞானத்தை அடைய முடியுமா?

முடியாது. உங்களால் முடியாது.

ஏன் முடியாது?

அப்படி நீங்கள் ஏதாவது அடைந்தால் அது சூழ்நிலையால் வருவது. அது கர்மவினையால் வருவதாகும். அது தெய்வ தன்மையால் விளைகிறது. அது சக்கரத்தை திருப்பி விடுகிறது. மேலும் நீங்கள் பிறப்பு இறப்பு என்பதற்கு உட்படுகின்ற காலம் வரையில் நீங்கள் ஒருபோதும் மெய்ஞ்ஞானம் அடைய முடியாது. மெய்ஞ்ஞானம் அடைவதற்கு நீங்கள் உங்களது இயல்பினை கண்டுகொள்ள வேண்டும். நீங்கள் உங்களது இயல்பினை காணாத வரையில் காரண காரியங்களைப் பற்றிய இந்த பேச்சுகள் எல்லாம் முட்டாள்தனமானவை. புத்தர்கள் முட்டாள்தனமானவற்றை செய்வதில்லை. புத்தர் கர்மத்தில் இருந்து விடுதலை பெற்றவர். காரண காரியங்களில் இருந்து விடுதலை பெற்றவர். அவர் ஏதாவது ஒன்றை அடைகிறார் என்று கூறுவதே ஒரு புத்தரை நீங்கள் அவதூறு செய்வதாகும். எதை அடைவது அவரால் சாத்தியப் படும்? ஒரு மனதின் மீது, ஒரு சக்தியின் மீது, ஒரு புரிதலின் மீது மனதை ஒருநிலைப்படுத்தி குவிப்பதோ அல்லது ஒரு காட்சியை

காண்பதோ ஒரு புத்தருக்கு சாத்தியப்படாததாகும். ஒரு புத்தர் ஒருபுறம் மட்டுமே உள்ளவர் அல்லர். அடிப்படையில் அவரது மனதின் இயல்பானது காலியானதாக இருக்கிறது; அது சுத்தமானதாகவும் இருப்பதில்லை அல்லது அசுத்தமானதாகவும் இருப்பதில்லை. பயிற்சி செய்தல் மற்றும் அடையாளம் கண்டுகொள்வதில் இருந்து அவர் விடுதுலை பெற்றவர். காரண, காரியங்களில் இருந்து அவர் விடுதலை பெற்றவர்.

ஒரு புத்தர் நல் ஒழுக்க விதிகளை கடைபிடிப்பதும் கிடையாது. ஒரு புத்தர் நல்லதும் செய்வதில்லை அல்லது கெட்டதும் செய்வதில்லை, ஒரு புத்தர் சுறுசுறுப்பாகவும் இருப்பதில்லை அல்லது சோம்பேறியாகவும் இருப்பதில்லை. எதையுமே செய்யாதவர் எவரோ அவரே ஒரு புத்தர். ஒரு புத்தரின் மீதே தனது மனதை நிலைநிறுத்த முடியாதவர் எவரோ அவரே ஒரு புத்தர். ஒரு புத்தர் புத்தரே அல்ல, புத்தர்களைப் பற்றி நினைக்காதீர்கள். நான் என்ன பேசிக்கொண்டு இருக்கிறேன் என்பதை நீங்கள் கண்டுகொள்ளவில்லை என்றால் உங்களால் ஒருபோதும் உங்களது சொந்த மனதை அறிந்துகொள்ள முடியாது.

தங்களின் இயல்பை கண்டுகொள்ளாதவர், மற்றும் எல்லா நேரமும் எதையும் செய்யாமல் இருப்பதை பயிற்சி செய்ய முடியும் என்று கற்பனை செய்பவர் எவரோ அவர்கள் பொய்யர்கள் மற்றும் முட்டாள்கள். அவர்கள் முடிவே இல்லாத அண்டவெளியில் விழுந்து விடுவார்கள். அவர்கள் குடிகாரர்கள் போன்றவர்கள். நல்லது கெட்டதை அவர்களால் பிரித்துக் கூற முடியாது. எதையுமே செய்யாமல் இருப்பதை நீங்கள் பயிற்சி செய்ய நினைத்தால், உங்களுடைய பகுத்தறிவு சிந்தனைக்கு நீங்கள் முடிவு கட்டு வதற்கு முன்பு நீங்கள் உங்களது இயல்பினைக் கண்டுகொள்ள வேண்டும். உங்களது இயல்பினைக் கண்டுகொள்ளல் மெய்ஞ் ஞானம் அடைதல் என்பது சாத்தியப்படாது.

என்றாலும்கூட மற்றவர்கள் கர்மா என்பது இல்லை என்று கூறிக்கொண்டு எல்லாவிதமான கெட்ட செயல்களையும் செய்கின்றனர். எல்லாமே வெறுமை என்பதால், தீவினைகளைச் செய்வது தவறானது அல்ல என்று அவர்கள் அதை தவறாக

தொடர்ந்து செய்து வருகின்றனர். இப்படிப்பட்ட மனிதர்கள் விடுதலை பெறுவோம் என்று நம்பக்கூடமுடியாத முடிவற்ற இருள் சூழ்ந்த ஒரு நரகத்தில் விழுந்து விடுகிறார்கள். புத்திசாலிகள் இதுபோன்ற கருத்துகளை பிடித்துக் கொண்டிருப்பதில்லை. ஆனால் நமது ஒவ்வொரு அசைவும் அல்லது நிலையும் அது எப்போது நடந்தாலும் அது நமது மனதுதான் என்னும்போது ஒரு மனிதனின் உடல் மரணமடைந்து விடும்போது நாம் ஏன் இந்த மனதை பார்ப்பது கிடையாது? மனம் என்பது எப்போதும் இருக்கிறது. நீங்கள் அதை வெறுமனே பார்ப்பது இல்லை. ஆனால் மனம் என்பது இருக்கும்போது என்னால் ஏன் அதைப் பார்க்க முடியவில்லை?

நீங்கள் எப்போதாவது கனவு காண்பதுண்டா?

ஆம், காண்பதுண்டு.

நீங்கள் கனவு காணும்போது அது நீங்களா?

ஆம், அது நான்தான்.

மேலும் நீங்கள் செய்கின்றதும், கூறுகின்றதும் உங்களில் இருந்து வேறானதாக இருக்கிறதா?

இல்லை, அப்படி இல்லை.

ஆனால் அது அப்படி இல்லை எனில் அதன்பிறகு இந்த உடல் உங்களின் உண்மையான உடல். மேலும் இந்த உண்மையான உடல் தான் உங்களது மனம். மேலும் இந்த மனமானது ஆரம்பமே இல்லாத முடிவில்லாத கல்ப காலத்தின் மூலம், ஒருபோதும் வேறுபடவில்லை. அது ஒரு போதும் வாழவும் இல்லை அல்லது சாகவும் இல்லை; தோன்றவும் இல்லை அல்லது மறையவும் இல்லை. அதிகரிக்கவும் இல்லை அல்லது குறையவும் இல்லை. அது சுத்தமாகவும் இல்லை அல்லது அசுத்தமாகவும் இல்லை. கெட்டதாகவும் இல்லை அல்லது நல்லதும் இல்லை. கடந்த காலம் அல்லது எதிர்காலமாகவும் இல்லை. அது உண்மையாகவும் இல்லை. அல்லது பொய்யானதாகவும் இல்லை. அது ஆணும் அல்ல அல்லது பெண்ணும் அல்ல. ஒரு ஒரு துறவி போன்றும் தோன்றுவது இல்லை அல்லது ஒரு சாதாரண மனிதன் போன்றும்

இல்லை. அது வயதானவரும் அல்ல அல்லது இளைஞனும் அல்ல. ஒரு ஞானியும் அல்ல அல்லது ஒரு முட்டாளும் அல்ல. ஒரு புத்தரும் அல்ல அல்லது அறியக்கூடியவனும் அல்ல. அது அறிந்து கொள்வதற்கும் முயற்சிப்பது இலலை. அப்படி எந்த கர்ம வினையாலும் அவதிப்படுவதில்லை. அதற்கு பலமும் கிடையாது அல்லது உருவமும் இல்லை. அது அண்டவெளி போன்றது. உங்களால் அதை உங்களுக்கு சொந்தமானதாக ஆக்கிக் கொள்ளவும் முடியாது அல்லது நீங்கள் அதை இழந்துவிடவும் முடியாது. அதனுடைய நகர்வுகளை மலைகள், ஆறுகள், அல்லது பாறைச் சுவர்களாலும்கூட தடுக்க முடியாது. அதன் நிறுத்த முடியாத சக்தியானது ஐந்து ஸ்கந்த மலையை ஊடுருவிச் செல்லக்கூடியது. மேலும் சம்சாரம் என்னும் ஆற்றை கடக்கக்கூடியது. எந்த ஒரு கர்ம வினையும் இந்த உண்மையான உடலை கட்டுப்படுத்த முடியாது. ஆனால் இந்த மனமானது கண்களுக்கு தெரியாதது மேலும் பார்ப்பதற்கு கடினமானது. புலன்களின் மனது போன்றதாக இது இல்லை. ஒவ்வொரும் இந்த மனதைப் பார்ப்பதற்கு விரும்புகின்றனர். மேலும் அதன் ஒளியினால் தங்களது கைகளையும், கால்களையும் அசைத்துக் கொண்டிருப்பவர்களோ, கங்கை கரையில் உள்ள மணல்களின் எண்ணிக்கை அளவு அநேகம் பேர் உள்ளனர். ஆனால் அவர்களிடம் கேட்டுப் பாருங்கள். அவர்களால் அதை விளக்கிக் கூறமுடியாது. அவர்கள் பொம்மலாட்ட பொம்மைகள் போன்று இருக்கின்றனர். பயன்படுத்த வேண்டியது அவர்கள்தான். இதை ஏன் அவர்கள் பார்க்க முடிவதில்லை?

நான் மிகவும் வருத்தடைகிறேன். ஏனெனில் போதி தருமர் தனது பேச்சுகளை குறிப்பெடுப்பதற்கு தவறான மக்களை அமர்த்தி விட்டார்; அவர்களின் சொந்த குழப்பத்தில் அவர்கள் கலந்து விட்டார்கள். தாங்கள் என்ன கூறுகிறோமோ அது போதி தருமரால் சொல்லப்பட்டதுான் என்று தோன்றும்படி செய்வதற்கு அவர்கள் கடின முயற்சி செய்கின்றனர். ஆனால் இயற்கையில் இருப்பு நிலையில் மெய்ஞ்ஞானம் என்றால் என்ன என்று புரிந்து கொள்ளாத மக்கள் நிச்சயமாக இவர்களின் எலிப்பொறிக்குள் விழுந்து விடுவார்கள். இவற்றில் எது போதி தருமருக்கு சொந்த

மானது மற்றும் எது குறிப்புகள் எடுத்தவர்களுக்கு சொந்தமானது என்று பிரித்து பார்ப்பதற்கு அவர்களால் முடியாது.

இந்த சூழ்நிலையை பார்த்தபிறகு நான் உங்களுக்கு கூறிய ஒரு நிகழ்ச்சியை உங்களுக்கு நினைவுபடுத்துவது அவசியமானதாக ஆகிறது. இந்த நாட்டின் மிகப்பெரிய கவிஞர்களில் ஒருவராகிய ரவீந்திரநாத் தாகூர் கீதாஞ்சலி என்னும் தனது புத்தகத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். அவர் இங்கிலாந்தில் கல்வி கற்றவர் என்றாலும்கூட அவர் தனது மொழிபெயர்ப்பை நம்பவில்லை. அவர் வங்காளத்தில் மிகவும் செல்வம் நிறைந்த குடும்பத்தைச் சேர்ந்தவர். பிரிட்டிஷ்காரர்கள் அவரது தாத்தாவிற்கு அரசர் பட்டம் கொடுத்திருந்தனர்.

இந்த உலகில் சாத்தியப்படுகின்ற எல்லா கல்வியையும் அவர் பெற்றிருந்தார் என்றாலும் ஒரு தாய்மொழி என்பது தாய்மொழிதான் அவர் தனது கவிதைகளை எல்லாம் வங்காள மொழியில் எழுதி இருந்தார். ஆனால் அவரது நண்பர் சிலர் கீதாஞ்சலி அந்த அளவுக்கு அழகானதாக இருப்பதால், அதை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தால் அதற்கு நோபல் பரிசு பெறுகின்ற ஒரு சாத்தியக்கூறு உள்ளது என்று கூறினார்கள். ஆனால் ரவீந்திரநாத் தாகூரைத் தவிர வேறு யார் அதை மொழி பெயர்க்க முடியும்? வேறு யார் அவரைவிட சிறந்த மொழி பெயர்ப்பாளராக இருக்க முடியும்?

எனவே அவர் அதை மொழிபெயர்த்தார். ஆனாலும்கூட அவர் தயங்கினார். அந்த காலத்தில் மிகவும் பெரிய கிறிஸ்தவ மதபோதகரான C.F. ஆண்ட்ரூஸ் என்கிறவரிடம் இந்த மொழி பெயர்ப்பை வாசித்து பார்க்கும்படி கேட்டுக் கொண்டார். ஏனெனல் அவருக்கு வங்காள மொழியும் தெரியும். அவர் மிகப்பெரிய அறிவாளியாகவும், உலகப்புகழ் பெற்றவராகவும் இருந்தார். அவர் வங்காளத்தில் ஒரு மதபோதகராக வசித்து வந்தார். அவர் வங்காளிகளிடையே பிரசங்கம் செய்து வந்தபடியால் அவர் அவர்களின் மொழியைக் கற்றிருந்தார். எனவே அந்த மொழிபெயர்ப்பை பார்ப்பதற்கும் வங்காள மொழியில் உள்ள அசல் கவிதையைப் பார்ப்பதற்கும் அவர்தான் சரியான நபராக

இருந்தார். நான்கு இடங்களைத் தவிர. அந்த புத்தகத்தில் இங்கும் அங்குமாக வெறும் நான்கு வார்த்தைகளைத் தவிர அந்த ஒட்டுமொத்த மொழிபெயர்ப்பையும் அங்கீகரித்தார். "அந்த நான்கு வார்த்தைகளும் இலக்கணப்படி தவறானவை. மேலும் அதே அர்த்தம் வருகின்ற ஆனால் இலக்கணப்படி சரியான நான்கு வார்த்தைகளையும் நான் சிபாரிசு செய்கிறேன்" என்று அவர் கூறினார்.

எனவே மொழியைப் பொருத்தமட்டில் C.F. ஆண்ட்ரூஸ் சொல்வது சரி என்பதால் ரவீந்திரநாத் தாகூர் சமாதானம் அடைந்தார். எனவே அவர் அந்த நான்கு வார்த்தைகளையும் நீக்கிவிட்டு C.F. ஆண்ட்ரூஸ் கூறிய வார்த்தைகளைப் போட்டு விட்டார். ஆனால் ரவீந்திரநாத் தாகூருக்கு லண்டனில் ஆங்கிலக் கவிஞர்கள் அநேகம் பேர் நண்பர்களாக இருந்தனர். எனவே அவர் லண்டன் சென்று அங்கு அந்த காலத்தில் மிகவும் புகழ்பெற்றிருந்த கவிஞராகிய ஈட்ஸ் என்பவரின் விருந்தினராக தங்கினார். அப்போது ஈட்ஸ் அங்குள்ள ஆங்கிலக் கவிஞர்களை மட்டுமே அழைத்து கீதாஞ்சலியின் ஆங்கில மொழிபெயர்ப்பை கேட்கும்படி செய்தார். அந்த புத்தகமானது நோபல் பரிசிற்கு பரிந்துரை செய்கின்ற அளவுக்கு தனித்தன்மை வாய்ந்ததாகவும், அபூர்வ மானதாகவும் இருந்ததை ஈட்ஸ் கண்டுகொண்டார். ஆனால் அநேக நோபல் பரிசு பெற்ற கவிஞர்களிடம் அதைக் காட்டி அவர்களின் கருத்தை கேட்பது நல்லது என்று நினைத்தார்.

எனவே கிட்டதட்ட இருபது அல்லது இருபத்திஐந்து கவிஞர்கள் கீதாஞ்சலியைக் கேட்பதற்காக ஈட்ஸின் வீட்டில் கூடினார்கள். அவர்கள் அனைவரும் அந்த கவிதையால் மனம் கவரப்பட்டனர். மேலும் அந்த புத்தகத்திற்கு நோபல் பரிசு கொடுக்க வேண்டும் என்று நோபல் பரிசுக் குழுவினரைக் கேட்டுக்கொள்வது என்று எல்லாரும் ஒருமனதாக விரும்பினார்கள். ஆனால் ஈட்ஸ் கொஞ்சம் தயங்கினார். "இந்த புத்தகத்தில் நான்கு வார்த்தைகளைத் தவிர எல்லாமே சரியாக உள்ளது" என்று அவர் கூறினார். அந்த நான்கு வார்த்தைகளும் C.F. ஆண்ட்ரூஸால் திருத்தப்பட்ட வார்த்தைகள் என்பதை அறிந்து ரவீந்திரநாத் தாகூரால் அதை நம்ப முடியவில்லை.

ஈட்ஸ் அவரிடம், "அந்த வார்த்தைகள் இலக்கணப்படி சரியாக உள்ளன. ஆனால் அவை கவிதை நயத்துடன் இல்லை. அந்த வார்த்தைகள் வேறு யாரோ குறுக்கிட்டது போன்று தெரிகின்றன. அவை கவிதை அழகின் ஓட்டத்தை தடுக்கின்றன. அவை உதவி செய்வதற்குப் பதிலாக உபத்திரவம் செய்கின்றன. எனவே அந்த நான்கு வார்த்தைகளையும் மாற்றும்படி நான் உங்களுக்கு அறிவுரை கூறுகிறேன்" என்றார்.

"அந்த வார்த்தைகளை நீங்கள் எங்கிருந்து பெற்றீர்கள்? ஏனெனில் அவை உங்களது வார்த்தைகள் அல்ல என்பது நிச்சயமாக எனது உயிர் உணர்விற்குத் தெரிகிறது. நீங்கள் உபயோகித்துள்ள அந்த இடத்தில் எந்த ஒரு கவிஞனும் அந்த வார்த்தைகளைப் பயன்படுத்த மாட்டான். ஒரு மொழியியலாளர் அதைச் செய்வார். இலக்கணத்திலும், மொழிஇயலிலும் முழுமையானதாக இருக்க வேண்டும் என்கிற ஒருவர் மட்டுமே அந்த வார்த்தைகளைப் பயன்படுத்துவார். ஆனால் ஒரு கவிஞனுக்கு குறிப்பிட்ட சுதந்திரம் உள்ளது. இலக்கண நடையில் இருந்து கொஞ்சம் விலகிச் செல்வதற்கு கவிஞனுக்கு கவிதை உரிமம் உள்ளது. ஏனெனில் உரைநடையை விடவும் கவிதை யானது உயர் மதிப்புடையது. உரைநடையைப் பொறுத்தமட்டில் இலக்கணத்தை பயன்படுத்துவது சரியானதுதான். ஆனால் அது கவிதைக்கு ஒரு தொந்தரவு போன்று இருக்கும்.

ரவீந்திரநாத் தாகூரால் இதை நம்பமுடியவில்லை. எனவே அவர், "நீங்கள் சொல்வது சரிதான். இவை எனது வார்த்தைகளை அல்ல; இவை C.F. ஆண்ட்ரூஸிடம் இருந்து வந்தவை. நான் முதன் முதலில் பயன்படுத்திய வார்த்தைகளை உங்களுக்குக் கூறுகிறேன்" என்று கூறினார்.

அவர் தனது வார்த்தைகளைக் கொடுத்தார். அப்போது ஈட்ஸ் அளவுகடந்த மகிழ்ச்சி அடைந்தார். "இப்போது எல்லாமே சரியாகிவிட்டது. நதியின் ஓட்டம் போன்ற கவிதைக்கு தடையாக இருந்த அந்த நான்கு பாறைகளும் அகற்றப்பட்டன. உங்களது வார்த்தைகள் இலக்கணப்படி இல்லை. ஆனால் அவை கவிதையாக உள்ளன. மேலும் அவை உங்களது இதயத்தில் இருந்து வந்திருக்கின்றன" என்று கூறினார்.

இலக்கணம் என்பது மனதின் விளையாட்டு. ஆனால் கவிதை என்பது மனதின் பகுதி அல்ல; மனம் என்பது உரைநடை போன்று இருப்பது தேவையானது. ஆனால் கவிதை இதயத்திற்கு சொந்தமானது. இலக்கணப்படி தவறு ஆனால் கவிதைப்படி சரியானது. கீதாஞ்சலி நோபல் பரிசு குழுவிற்கு அளிக்கப்பட்டது. மேலும் நோபல் பரிசிற்கு ஒருமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டது.

போதி தருமரின் சூத்திரங்களை எழுதிய இந்த மக்கள் மொழி இயலைப் பொறுத்தமட்டில் நல்ல திறமையுடன் இருந்தார்கள்; ஆனால் அவர்கள் மெய்ஞ்ஞான அனுபவத்தோடு கொஞ்சம்கூட ஒத்துப்போக வில்லை. ஒத்துப்போகவே இல்லை என்பதைத் தான் இந்த சம்பவம் காட்டுகிறது. எனவே போதி தருமரின் சரியான பேச்சு களுக்கு மத்தியில் இதில் அனேக பொய்யான வாக்குமூலங்கள் மிகவும் குழப்பமான வாக்குமூலங்கள் இருக்கின்றன.

எனவே ஒருவர் மிகவும் கூர்மையான விழிப்புணர்வோடு இதைப் படிக்க வேண்டும். அப்படி இல்லை எனில் போதி தருமர் எங்கு முடிக்கிறார். அந்த சிலர் எந்த இடத்தில் உள்ள வருகிறார் என்பதை கண்டுகொள்வது சிரமம். அந்த அளவுக்கு கலந்து உள்ளது நான் மிகவும் வருத்தமடைகிறேன். ஏனெனில் போதி தருமருக்கு இன்னும் சிறந்த சீடர்கள் இருந்திருக்கலாம். இந்த உலகம் அறிந்த மிகப்பெரிய குருமார்களில் அவரும் ஒருவர். ஆனால் அவர் அப்படி மிகப்பெரிய குருவாக இருந்ததால் மிகச்சிறிய சீடர்கள் மட்டுமே அவருக்கு நெருக்கமாக செல்ல முடிந்திருக் கலாம். ஆனால் அவருக்கு நெருக்கமாக சென்ற சீடர்கள் எவரும் அவரது பேச்சை குறிப்புகள் எடுக்கவில்லை.

போதி தருமர் தனது வாரிசாக தேர்ந்தெடுத்த ஹுய் கோ என்னும் சீடரிடம், "எனது போதனைகளில் முக்கியமானது எது?" என்று கேட்டபோது அவர் வெறுமனே குருவின் கால்களில் விழுந்து விட்டார். அவரது கண்களில் இருந்து கண்ணீர் உருண்டோடியது. எந்த ஒரு சிறு வார்த்தையும் அவர் கூறவில்லை. அவர் எழுந்து நிற்பதற்கு உதவி செய்துவிட்டு போதி தருமர் அவரிடம், "நீ பதில் சொல்லவில்லை என்றாலும்கூட, உனது பதிலை நான் ஏற்றுக்கொள்கிறேன். நீ ஒரு சிறு வார்த்தைகூட

சொல்லவில்லை என்றாலும்கூட. அந்த செய்தியை எனக்குக் கூறுவதற்கு உனது கண்ணீரே போதுமானது. நீ என்னைப் புரிந்துகொண்டு விட்டாய். மேலும் நீ ஏன் மௌனமாகி விட்டாய் என்பதையும் நான் புரிந்துகொண்டு விட்டேன். நீ சமாளித்து ஏதாவது ஒரு பதிலைக் கூறுவதை விடவும் உனது மௌனம் இன்னும் அதிகமாக கூறிவிட்டது. நீதான் எனது ஆத்மா; நான் சென்ற பிறகு நீதான் எனது பிரதிநிதியாக இருப்பாய்" என்று கூறினார்.

ஆனால் ஹுய் கோ ஒரு சிறு வார்த்தைகூட எழுதவில்லை. எனவே இது ஒரு விநோதமான தலைவிதியாக ஆகிவிட்டது. புரிந்து கொண்டவர்கள் இப்படி குழப்பமான வாக்குமூலங்களை பதிவு செய்வதற்கு மிகவும் சிரமப்படுவார்கள். இப்படி ஒரு தவறைச் செய்வதற்கு பதிலாக அவர்கள் மௌனமாக இருந்து விடுவார்கள். ஆனால் புரிந்து கொள்ளாதவர்கள் எதற்கும் பயப்பட மாட்டார்கள். தாங்கள் தவறுகள் செய்கிறோம் என்பதை அவர்கள் அறிந்திருக்க மாட்டார்கள்.

மேலெழுந்த வாரியாக பார்த்தால் இந்த குறிப்புகள் முற்றிலும் சரியானவை என்று என்னால் காட்டமுடியும். ஆனால் அதற்கு உள்ளே அநேக இடங்களில் அவை போதி தருமரின் வாக்குமூலங்களாக இருக்க முடியாது. இறுதியான தன்னுணர்வை அடைந்த எந்த ஒரு மனிதனின் வாக்குமூலங்களாகவும் அவை இருக்க முடியாது. தன்னைத்தானே அறிதல் என்னும் விதியை அடைந்த ஒருவரின் வாக்கியங்களாக இருக்க முடியாது.

இனி இந்த சூத்திரங்களைப் பார்ப்போம்.

*என்னால் எனது சுய இயல்பை காண முடியாமல் போய்விட்டால் புத்தர்களை ஆவாஹணம் செய்வதன் மூலம், சூத்திரங்களை மனப்பாடமாக ஒப்புவிப்பதன் மூலமும், காணிக்கைகள் செலுத்துவதன் மூலம், நல்ல ஒழுக்கங்களைக் கடைபிடிப்பதன் மூலம் பக்தி செய்வதன் மூலம், அல்லது நல்ல காரியங்களைச் செய்வதன் மூலம், நான் மெய்ஞ்ஞானத்தை அடைய முடியுமா?*

*முடியாது, உங்களால் முடியாது.*

முடியாது என்பது நிச்சயமாக போதி தருமாவிடம் இருந்து வந்துள்ளது. மேலே சொல்லப்பட்ட விஷயங்களைத்தான் இந்த உலகில் உள்ள மதங்கள் செய்து கொண்டிருக்கின்றன. மதப்பற்றுள்ள மக்கள் அனைவரும் இந்த விஷயங்களை செய்து வருகின்றனர். அவர்கள் கடவுளை ஆவாஹனம் செய்கின்றனர். அவர்கள் புத்தர்களை ஆவாஹனம் செய்கின்றனர். அவர்கள் ஜின்னாக்களை ஆவாஹனம் செய்கின்றனர்; அவர்கள் தீர்க்கதரிசிகளை, ரட்சகர்களை, மேசையாக்களை ஆவாஹனம் செய்கின்றனர். அவர் சூத்திரங்களை, புனித குர்ஆன், புனித பைபிள், புனித கீதை மற்றும் புனித தம்மதம் ஆகியவற்றை அவர்கள் மனப்பாடம் செய்து திருப்பி கூறுகின்றனர். அவர்கள் கோயில்களில், மசூதிகளில், தேவாலயங்களில், யூத மதக் கோயில்களில், குருத்துவாராக்களில் காணிக்கைகளை செலுத்தி வருகின்றனர். நல்ஒழுக்க விதிகளாகிய விரதம் இருத்தல், இரவில் சாப்பிடாமல் இருத்தல், இரவில் குடிக்காமல் இருத்தல் ஆகிய வற்றை கடைபிடிக்கின்றனர். வெவ்வேறு மதங்களில் ஆயிரக் கணக்கான வெவ்வேறு விதமான ஒழுக்கவிதிகள் பின்பற்றப் படுகின்றன.

முந்தைய தினம் நான் தால்மட் என்கிற யூதர்களின் புனித நூலைப் பார்த்தேன். அநேக முறை அதைத் திறந்து பார்த்துவிட்டு மூடி இருக்கிறேன். ஏனெனில் ஒரே ஒரு பத்தி படித்தாலே போதும். அதில் உள்ள முட்டாள்தனங்களை நீங்கள் கண்டுகொள்ள முடியும். நீங்கள் எந்தப் பக்கத்தை திறந்து படித்தாலும் அதில் ஆன்மிகத்திற்கு எந்தவிதமான சம்பந்தமும் இல்லாதவை மட்டுமே கூறப்பட்டுள்ளன. உதாரணமாக, சபோத் என்னும் புனித நாளில் நீங்கள் உங்களது தோட்டத்திற்கோ அல்லது வயல்வெளிக்கோ, பண்ணைக்கோ செல்லலாம். ஆனால் அதன் கடைசி எல்லை வரை செல்லக்கூடாது என்றுள்ளது. இது உங்களது புனித நூலின் ஒரு பகுதி. மேலும் அதன்பிறகு அது குறித்த வியாக்கியானங்களும் உள்ளன. "ஏன் இப்படி கூறப்பட்டுள்ளது?" என்று ஒரு யூத மதகுரு கூறுகிறார். அடுத்த மதகுரு வேறு எதையோ சொல்கிறார். இப்படிப்பட்ட முட்டாள்தனமான வாக்குமூலத்திற்கு நூற்றுக்கணக்

கான வியாக்கியானங்கள் இருக்கின்றன. அல்லது நீங்கள் ஒரு ஜன்னல் மற்றும் ஒரு கதவை மட்டுமே வைத்துக்கொள்ள வேண்டும் என்பதாகும். மேலும் அதில் உள்ள கேள்வி என்னவென்றால் அந்த ஜன்னலை கதவின் வலது பக்கம் வைக்க வேண்டுமா அல்லது இடதுபக்கம் வைக்க வேண்டுமா என்பதாகும். மேலும் அது வலதுபக்கம்தான் இருக்க வேண்டும் என்றோ அல்லது இடது பக்கம்தான் இருக்க வேண்டும் என்றோ மிகப்பெரிய மதகுருக்கள் விவாதம் செய்கின்றனர். மேலும் அவர்கள் விவாதம் செய்வது ஏன்? மேலும் ஜன்னல் பெரியதாக இருக்கக்கூடாது என்றும் சிறியதாக இருக்க வேண்டும் என்றும் கூறப்பட்டுள்ளது. எவ்வளவு சிறியதாக இருக்க வேண்டும்?

நல்ல ஒழுக்க விதிகள் என்னும் பெயரில் எல்லாவிதமான முட்டாள்தனங்களும் கடைபிடிக்கப்படுகின்றன. பக்தி அல்லது நற்செயல்கள் என்ற பெயரில் மருத்துவமனை, பள்ளிகள், அனாதை விடுதிகள் ஆகியவை திறக்கப்படுகின்றன. போதி தருமர் போன்ற ஒரு மனிதரால் மட்டுமே, "முடியாது, மெய்ஞ்ஞானத்தையோ அல்லது புத்த நிலையையோ, இதுபோன்ற முட்டாள்தனமான விஷயங்களைச் செய்வதன் மூலம் அடைந்துவிட முடியாது என்று கூற முடியும். இங்கே ஒரே ஒரு வழி மட்டுமே உள்ளது. அது நீங்கள் உங்களது உயிர் உணர்வை உங்களது சுய இயல்பை உணர்ந்து கொள்வதாகும்.

*ஏன் முடியாது?*

*அப்படி நீங்கள் ஏதாவது ஒன்றை அடைந்தால் அது அப்போதுள்ள நிலையில் வந்ததாகும்.* இப்போது இது மிகவும் சிறப்பானது. எனவே நீங்கள் இதைப் புரிந்துகொள்ள வேண்டும். ஏதாவது நிலையினால் நீங்கள் ஏதாவது ஒன்றை பெறும்போது அந்த நிலை விலக்கப்பட்டு விடும்போது நீங்கள் அதை இழந்து விடலாம். மெய்ஞ்ஞானம் அடைதல் என்பது எந்த ஒரு நிலைக்கும் கட்டுப்படாததாக இருக்க வேண்டும். அதை திரும்ப எடுத்துக் கொள்ள முடியாது என்பதுதான் அதற்கான எளிய காரணமாகும். உங்களது வாழ்க்கை நிலைமைகளைச் சார்ந்து உள்ளது யார் வேண்டுமானாலும் உங்களை கொலை செய்து விடலாம்.

நீங்களேகூட தற்கொலை செய்துகொள்ளலாம். ஆனால் உங்களது மெய்ஞ்ஞானம் என்பது எந்த ஒரு நிலையையும் சாராத ஒன்றாக இருந்தாக வேண்டும்.

அதை உடைப்பதற்கு உங்களால் எதுவும் செய்ய முடியாது. நிலைமைகளுக்கு உட்படாத எதையும் உங்களால் அழிக்க முடியாது. திரும்பிச் செல்வதற்காக எந்த முயற்சியையும் நீங்கள் செய்ய முடியாது. ஏனெனில் அதற்கான நிலை இருக்காது. அதற்கான காரணம் இருக்காது. அது அழிக்கப்படுவதில் இருந்து விடுதலை பெற்றதாகும். உதாரணமாக நீங்கள் கட்டைகளை வைத்து நெருப்பு மூட்டுகிறீர்கள். ஆனால் அது நிலைமைக்குட் பட்டது. நீங்கள் அதில் உள்ள கட்டைகளை வெளியே எடுத்து விட்டால், அந்த நெருப்பு அணைந்து விடும். அந்த நெருப்பு அங்கு இருக்க வேண்டும் என்றால் அந்த மரக்கட்டை அங்கு கண்டிப்பாக இருந்தாக வேண்டும். அது நிபந்தனைகள் அற்றது அல்ல. அது ஒரு காரணத்தினால் ஏற்பட்ட ஒரு விளைவு. காரணத்தை வெளியே எடுத்துவிட்டால் விளைவு மறைந்து போய்விடும்.

அதுதான் ஆன்மிகவாதி மற்றும் பொருளியல் வாதி ஆகியவர்களுக்கு இடையே உள்ள வேறுபாடாகும். வாழ்க்கை, தன்னுணர்வு ஆகியவை எல்லாம் நிபந்தனைக்குட்பட்டது. அவை எல்லாம் விளைவுகள் என்று தத்துவ வார்த்தைகளில் பொருளியல்வாதி கூறுகிறார். காரணங்கள் எடுக்கப்பட்டு விடும்போது அவை எல்லாம் மறைந்து போய்விடும். மரணத்தின் போது உங்களது உடலானது உண்டாக்கப்பட்டுள்ள பஞ்சபூதங் களும் தனித்தனியே பிரிந்து அவற்றின் மூலக்கூறுகளோடு திரும்பவும் சேர்ந்து விடுகின்றன. நீர் நீரோடும், பூமி பூமியோடும், காற்று காற்றோடும், நெருப்பு நெருப்போடும், வெளி, ஆகாயம், வெளியோடும் ஆகாயத்தோடும் சேர்ந்து விடுகிறது. அதன்பிறகு எதுவும் இருப்பதில்லை. ஆன்மா என்ற ஒன்று உயிர் பிழைத்து இருப்பதில்லை. அது ஒரு விளைவு மட்டுமே ஆகும். காரணங்கள் எல்லாம் இருந்தபோது விளைவும் இருந்தது. ஆனால் காரணங்கள் விலக்கிக் கொள்ளப்பட்டவுடன் விளைவானது மறைந்து விடுகிறது. இதைவேறு வார்த்தைகளில் "தன்னுணர்வு என்பது ஒரு

உப விளைவு; அதனால் அது ஒருபோதும் இருந்தது இல்லை" என்று கார்ல் மார்க்ஸ் கூறுகிறார். போதி தருமர் கூறுவதாவது:

*அப்படி ஏதாவது ஒன்றை நீங்கள் அடைந்தால் அது நிலைமையைச் சார்ந்தது. அது கர்ம வினை சார்ந்தது. அது தெய்வ தண்டனையால் விளைகிறது. அது சக்கரத்தை திருப்பி விடுகிறது. மேலும் நீங்கள் பிறப்பு, இறப்பு என்பதற்கு உட்படுகின்ற காலம் வரையில் நீங்கள் ஒருபோதும் மெய்ஞ்ஞானம் அடைய முடியாது.*

மெய்ஞ்ஞானம் என்பது ஏதோ ஒரு காரணத்தினால் ஆன விளைவாக இருக்கக்கூடாது. ஏதாவது பயிற்சியின் விளைவாக இருக்கக்கூடாது. நீங்கள் நிறைவேற்றிய ஏதாவது நிபந்தனைகளின் விளைவாக இருக்கக் கூடாது. அது எந்தவிதமான அடைதலாகவும் இல்லாமல், அது ஒரு கண்டுகொள்ளலாக மட்டுமே இருக்க வேண்டும்.

அது ஏற்கெனவே அங்கு இருக்கிறது.

நீங்கள் வெறுமனே உங்களது கண்களை மூடிக்கொண்டு இருக்கிறீர்கள். எனவே நீங்கள் உங்களது கண்களை திறக்கும்போது நீங்கள் உங்களது புத்த நிலையை பார்க்கிறீர்கள். இதை நீங்கள் அடைந்துவிட்ட ஒன்றாக கூற முடியாது. மேலும் உங்களது கண்களைத் திறந்தது ஒரு காரணமாக ஆகாது. நீங்கள் உங்களது கண்களைத் திறக்கிறீர்களோ அல்லது இல்லையோ, உங்களது புத்தநிலை அப்படியே இருக்கிறது. கண்களை மூடிக்கொண் டிருக்கும் போதுகூட நீங்கள் புத்தர்கள்தான்; கண்களைத் திறந்த பின்பும்கூட அதில் மாறுதல் இருக்காது. நீங்கள் புத்தர்களாகவே இருப்பீர்கள். உங்களது புரிதலில் மட்டுமே மாற்றம் வந்திருக்குமே தவிர உங்களது குணாதிசயத்திலோ அல்லது உங்களது இருப்பு நிலையிலோ மாற்றம் இருக்காது. உங்களது புரிதலில் மட்டுமே மாற்றம் இருக்கும். "அடக் கடவுளே, பல பிறவிகளாக நான் மெய்ஞ்ஞானத்தை, புத்த நிலையை தேடிக்கொண்டு இருந்தேன். எல்லா இடங்களிலும் தேடிக் கொண்டும் நற்செயல்களை செய்து கொண்டும், நல் ஒழுக்கங்களை கடைபிடித்துக் கொண்டும், காணிக்கைகள் கொடுத்துக்கொண்டும், பிரார்த்தனைகள் செய்து கொண்டும், சூத்திரங்களை திரும்பக் கூறிக்கொண்டும் இருந்தேன்.

ஆனால் அவை எல்லாம் முட்டாள்தனமானவை. ஏனெனில் சூத்திரங்களை நான் கூறிக் கொண்டிருக்கும் போதும் நான் பிறகு புத்தனாக இருந்தேன். புத்தரின் கல் சிலைக்கு மலர்களை காணிக்கையாக நான் அளித்தபோது, நான் அப்படிப்பட்டதொரு முட்டாள்தனமான செயலை செய்து கொண்டிருந்தேன். ஏனெனில் அப்போது நான் ஒரு புத்தர் ஒரு கல் சிலையின் காலடியை தொடும்படி செய்து விட்டேன். நான் எப்போதுமே ஒரு புத்தராக இருந்து கொண்டிருக்கிறேன். அது எனது நிபந்தனையற்ற இயல்பு" என்கின்ற புரிதல் மட்டுமே உங்களது மாற்றமாக இருக்கும்.

அதனால்தான், "முடியாது, மதங்கள் மக்களிடம் போதனை செய்து வருகின்ற அப்படிப்பட்ட விஷயங்களால் நீங்கள் புத்த நிலையை அடைய முடியாது" என்கிற போதி தருமரின் பேச்சுகள் அபரிமிதமாக சிறப்புடையதாக உள்ளன.

*மெய்ஞ்ஞானத்தை அடைவதற்கு நீங்கள் உங்களது இயல்பை கண்டாக வேண்டும்.* மேலும் இது ஒரு மொழி, மேலும் மொழியில் உள்ள கஷ்டம் என்னவென்றால் நீங்கள் அதை 'அடைதல்' என்றுதான் அழைத்தாக வேண்டும். இல்லையெனில் அங்கே எந்தவிதமான அடைதல் இருக்கிறது? உண்மையில் அது மறைந்திருக்கும் பொருளை கண்டு கொள்வதேயாகும். பொக்கிஷம் அங்கு உள்ளது, நீங்கள் அதன்மேல் மூடியுள்ளவற்றை எடுத்துப் பார்க்க வேண்டும். நீங்கள் அதை உண்டாக்குவது இல்லை. நீங்கள் அதை படைப்பது இல்லை. அது புதிதான ஏதோ ஒன்று அல்ல; அது எப்போதும் எப்போதும் அங்கேயே இருந்து வருகிறது. நீங்கள் அதை கண்டுபிடிக்கிறீர்களா அல்லது இல்லையா என்பது எந்த வேறுபாட்டையும் உண்டாக்காது. அது நிபந்தனைகள் ஏதுமின்றி காலாகாலத்திற்கும் இருப்பது.

*நீங்கள் உங்களது இயல்பினைக் காணாத வரையில் காரண காரியங்களைப் பற்றிய இந்த பேச்சுகள் எல்லாம் முட்டாள் தனமானவை.*

இந்த கடுமையான வார்த்தைகள் போதி தருமரிடமிருந்து மட்டுமே வந்திருக்க வேண்டும் என்று என்னால் கூறமுடியும். வேறு எந்த சீடருக்கும் இந்த அளவுக்கு தைரியம் கிடையாது. புத்தர்கள்

முட்டாள்தனமானவற்றை செய்வதில்லை என்று போதி தருமரால் மட்டுமே கூற முடியும். இது ஒரு சிங்கத்தின் கர்ஜனை. ஒரு சாதாரண சீடரின் எழுத்து அல்ல. புத்தர் கர்மத்தில் இருந்து விடுதலை பெற்றவர், காரண காரியங்களில் இருந்து விடுதலை பெற்றவர். அவர் ஏதாவது ஒன்றை அடைகிறார் என்று கூறுவதே ஒரு புத்தரை நீங்கள் அவதூறு செய்வதாகும். இதில் அடைதல் என்ற கேள்விக்கே இடமில்லை. அவர் கண்டிக்க மட்டுமே செய்கிறார். அவர் தனது கண்களைத் திறந்து தன்னையே பார்க்கிறார். எதை அடைவது அவரால் சாத்தியப்படும்? ஒரு மனதின் மீது ஒரு சக்தியின் மீது ஒரு புரிதலின் மீது மனதை ஒருநிலைப்படுத்தி குவிப்பதோ அல்லது ஒரு சிறு காட்சியைக் காண்பதோ ஒரு புத்தருக்கு சாத்தியப்படாததாகும். ஒரு புத்தர் ஒருபுறம் மட்டுமே உள்ளவர் அல்லர்.

அதனால்தான் அவரால் தன்மீது மனதைக் குவிக்க முடிவதில்லை. அவர் பல பரிமாணங்கள் நிறைந்தவர். அவர் உலகளாவியர். ஒரே ஒரு பரிமாணத்தை உடையவர். உயிர்கள் மட்டுமே மனதை குவிக்கின்றன. உங்களது சாதாரண மனதைக் குவிக்க முடியும். உங்களால் மனதை ஒருநிலைப்படுத்த முடியும். ஆனால் ஒரு புத்தரால் மனதை ஒருநிலைப்படுத்த முடியாது. அவர் இந்த வானத்தை போல திறந்த உள்ளத்துடன் இருப்பார். எல்லா திசைகளிலும், எல்லாப் பரிமாணங்களிலும் திறந்தே இருப்பவர்.

ஒரு புத்தர் ஒருபுறம் மட்டுமே உள்ளவர் அல்லர். அடிப்படையில் அவரது மனம் அற்ற நிலையின், சீடர். அவருடைய மனம் என்று எழுதி இருக்கிறார். ஆனால் நான் அதை திருத்தியாக வேண்டும். அடிப்படையில் அவரது மனம் அற்ற நிலையின் இயல்பானது காலியானதாகவே இருக்கிறது. அது சுத்தமானதாக இருப்பதில்லை. அசுத்தமானதாகவும் இருப்பதில்லை. நான் ஏன் மனம் என்பதை திருத்தினேன் என்பதை உங்களால் காணமுடியும். ஏனெனில் அது மனம் என்று இருந்தால் அது காலியானதாக இருக்க முடியாது. மனம் என்பது எப்போதுமே எண்ணங்களால் நிறைந்து இருக்கின்றது; மனம் என்பது எண்ணங்களின் பெட்டகம் என்பதைத்தவிர வேறு எதுவும் இல்லை. மனம் என்பது சிந்திக்கும் செயல் என்பதற்கான மறு பெயராகும். பகலில் அது சிந்தித்துக்

கொண்டு இருக்கிறது. இரவில் அது கனவு கண்டுகொண்டு இருக்கிறது. ஆனால் அது எப்போதும் ஏதாவது ஒன்றினால் நிறைந்துள்ளது. அது ஒருபோதும் காலியானதாக இல்லை.

மேலும் மனம் என்பது எப்போதும் சுத்தமானதாகவோ அல்லது அசுத்தமானதாகவோ இருக்கிறது. அதனுள் என்ன வகையான எண்ணங்கள் போய்க்கொண்டு இருக்கின்றன என்பதைப் பொறுத்து அது இருக்கிறது. யாரையாவது கொலை செய்ய வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருக்கலாம் அல்லது நீங்கள் எதையாவது திருட வேண்டும் என்று நினைக்கலாம். அல்லது நீங்கள் யாருககாவது உதவ வேண்டும் என்று நினைக்கலாம். மேலும் நீங்கள் கருணை நிறைந்த எண்ணத்தால் நிரம்பி இருக்கலாம். அன்பு எண்ணத்தால் அல்லது அழிக்கின்ற எண்ணத்தால் நிரம்பி இருக்கலாம். எனவே உங்களது மனதில் என்ன விதமான எண்ணம் உள்ளது என்பதைப் பொறுத்தது. மேலும் மனம் என்பது ஒருபோதும் காலியானதாக இருப்பது இல்லை. அதனால்தான் அது சுத்தமானதாகவோ அல்லது அசுத்தமானதாகவோ அல்லது இரண்டும் சேர்ந்து உள்ளதாகவோ இருக்கலாம். உங்களது மனமானது இப்படிப்பட்டதொரு குழப்பத்தில் இருப்பதால் அசுத்தமான மற்றும் சுத்தமான நல்ல எண்ணங்கள் மற்றும் கெட்ட எண்ணங்கள் ஆகியவை எல்லாம் ஒரு கூட்டமாக நின்றுகொண்டு இருக்கின்றன. அதனால்தான் அந்த மனம் என்னும் வார்த்தை நான் மனம் அற்ற நிலை என்று மாற்ற விரும்புகிறேன். அதன்பின்னர் மட்டுமே அந்த வாக்குமூலம் அர்த்தமுள்ளதாக ஆகும். அடிப்படையில் அவரது மனம் அற்ற நிலையின் இயல்பானது காலியானதாகவே இருக்கிறது. அது சுத்தமானதாகவும் இருப்பதில்லை, அசுத்தமானதாகவும் இருப்பதில்லை. ஏனெனில் மனம் அற்ற நிலை என்பது இரண்டு பட்ட தன்மைக்கு அப்பாற்பட்டது.

மனம் என்பது ஒருபோதும் இரண்டுபட்ட தன்மைக்கு அப்பால் இருக்க முடியாது. அது எப்போதும் ஆதரவாகவோ அல்லது எதிர்ப்பாகவோ தான் நினைத்துக்கொண்டு இருக்கும்; அது எப்போதும் பிரிவும், பிளவும் நிறைந்ததாகவும் இருக்கும். அது ஒருபோதும் முழுமையானதாக இருந்தது இல்லை. அதன்

ஒரு பகுதி எப்போதும் தயக்கத்திலேயே இருக்கும். நீங்கள் என்ன செய்தாலும், உங்களின் ஒரு பகுதி உங்களோடு இருப்பதில்லை; "இதைச் செய்யாதே, அப்படிச் செய்தால் அதை நினைத்து பின்னால் நீ வருத்தப்படுவாய்" என்று சொல்லிக்கொண்டே இருக்கும். ஒவ்வொரு மனிதனும் ஏன் துன்பத்தில் இருக்கிறான் என்பதற்கான காரணங்களில் இதுவும் ஒன்றாகும். ஏனெனில் நீங்கள் என்ன செய்தாலும் அது என்னவாக இருந்தாலும் சரி, அதோடு ஒத்துப்போகாத மனதின் ஒரு பகுதி எப்படியும் பழிவாங்க நினைக்கும். அது உங்களிடம், "கவனி, இப்போது பார், இதைச் செய்யாதே என்று நான் முன்கூட்டியே கூறினேன். ஆனால் நீ ஒருபோதும் காதுகொடுத்து கேட்கவில்லை" என்று கூறும். அந்தப் பகுதி சொல்வதை நீங்கள் காது கொடுத்து கேட்டிருந்தாலும் கூட சூழ்நிலை வேறு மாதிரியாக மாறி இருக்காது. ஏனெனில் "இதைச் செய்" என்று கூறிய அந்த மறு பகுதி காத்திருந்து கொண்டு உங்களை கண்டனம் செய்வதற்கான சந்தர்பபத்தை கவனித்துக் கொண்டிருந்து. "நீ ஒருபோதும் நான் சொல்வதைக் கேட்பதில்லை" என்று கூறும்.

மனம் அற்ற நிலை மட்டுமே இரண்டுபட்ட தன்மை இல்லாமல் இருக்க முடியும். ஏனெனில் அது காலியானதாக இருக்கிறது. மனம் அற்ற நிலை என்பது எதையும் தேர்வு செய்யாத ஒரு நிலை. மனம் அற்ற நிலை என்பது தூய்மையான விழிப்புணர்வு. அது வெறுமனே காலியாக உள்ள வானம்.

*ஒரு புத்தர் நல்ஒழுக்க விதிகளை கடைபிடிப்பதில்லை.* இது மிகவும் பெரியதொரு வாக்குமூலம். இது இந்த உலகம் முழுவதிலும் எங்கு பார்த்தாலும் பொன் எழுத்துகளில் எழுதி, ஒவ்வொருவரும் இதைப் புரிந்துகொள்ளும்படி செய்ய வேண்டும்.

*ஒரு புத்தர் நல்ஒழுக்க விதிகளை கடைபிடிப்பதில்லை.*

அவர் எந்த ஒரு நல்ஒழுக்க கட்டுப்பாட்டையும் பின்பற்றுவ தில்லை. ஏன்? ஏனெனில் அவர் எந்த ஒரு கட்டுப்பாட்டையும், நல் ஒழுக்க விதியையும் பின்பற்ற வேண்டிய அவசியம் கிடையாது. அவர் முழு விழிப்புணர்வுடன் வாழ்கின்ற ஒரே காரணத்தினால் அவர் எந்த ஓர் ஒழுக்க விதிகளையும் அவர் பின்பற்றுவதில்லை.

அவரது பதில் செயல்கள் எல்லாமே அவரது முழு விழிப்புணர்வில் இருந்து வருகிறது. அவரது செயல்கள் எந்த ஒரு நல் ஒழுக்க விதியில் இருந்தோ, எந்த ஒரு புனித நூலில் இருந்தோ வருவதில்லை. அவர் தனது தூய வெறுமையின் மூலம் நொடிக்கு நொடி செயல் புரிகிறார்.

வெறுமனே அமைதியாக இருந்துகொண்டு அவர் தனது ஒட்டுமொத்த உயிர் உணர்வும், பதில் செயல் செய்வதற்கு அனுமதிக்கிறார். அவர் ஒரு முகம் பார்க்கும் கண்ணாடி போன்றவர். அவர் வெறுமனே பிரதிபலிக்கிறார்; அவர் வேறு எதையும் செய்வதில்லை. அவரது பதில் செயல்கள் அவரது பிரதிபலிப்புகள்.

*ஒரு புத்தர் நல்லதும் செய்வதில்லை. அல்லது கெட்டதும் செய்வதில்லை. ஒரு புத்தர் சுறுசுறுப்பானவராகவும் இருப்பதில்லை. அல்லது சோம்பேறியாகவும் இருப்பதில்லை. எதையுமே செய்யாதவர் எவரோ அவரே ஒரு புத்தர்.ஒரு புத்தரின் மீதே கூட மனதை நிலைநிறுத்த முடியாதவர் எவரோ அவரே ஒரு புத்தர்.*

அவர் முன்னால் கடவுளே நின்று கொண்டிருந்தாலும் அவரால் தனது மனதை கடவுள் மீது குவிக்க முடியாது. அவர் தூய வெறுமை நிலையில் இருப்பவர். அவர் மன இறுக்கத்தை சுமந்து கொண்டு இருப்பதில்லை. ஏனெனில் மனதை ஒருநிலைப் படுத்துதல் என்பது மன இறுக்கத்துடன் இருப்பதாகிறது. மனதை குவித்தல் என்பது மன இறுக்கமானதாகும். புத்தர் முற்றிலும் ஓய்வுடன் இளைப்பாறுபவராக இருப்பார்.

*ஒரு புத்தர் ஒரு புத்தரே அல்லர் என்று கூறுகின்ற இந்த இடத்தில் போதி தருமர் தனது உச்சத்தை சென்றடைகிறார்.*

இப்போது இதைப் புரிந்துகொள்வது மக்களுக்கு மிகவும் கடினமானதாகவே இருக்கும்; குறிப்பாக இந்த உலகில் அநேக மதங்களினால் தப்பெண்ணங்களால் இருக்கின்ற மக்களுக்கு இது கடினமானதாக இருக்கும். ஒரு புத்தர் ஒரு புத்தர் அல்லர். இதை நன்றாக புரிந்துகொள்ள வேண்டும்; ஏனெனில் இது மிகவும் சிறப்பு வாய்ந்தது. எனவே நீங்கள் இதை தவற விட்டுவிட்டால், எல்லாவற்றையுமே தவற விட்டு விடுவீர்கள்.

ஒருசில உதாரணங்களைப் பார்ப்போம். ஒருவேளை அது உதவிகரமானதாக இருக்கலாம். பிறந்த ஒரு குழந்தை முழுவதும் கள்ளம் கபடமற்ற நிலையில் இருக்கிறது. ஆனால் தான் கள்ளம் கபடமற்ற நிலையில் இருக்கிறோம் என்பது அவனுக்கு தெரியும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? கள்ளம் கபடமற்ற ஒரு குழந்தைதான் கள்ளம் கபடமற்ற நிலையில் இருக்கிறோம் என்பதை அறியுமா? தான் கள்ளம் கபடமற்ற நிலையில் இருக்கிறோம் என்தை அவன் அறிந்து கொண்டால் அதன்பின்னர் அவன் கள்ளம் கபடமற்றவனாக இருக்க மாட்டான். கள்ளம் கபடமற்ற ஒரு குழந்தையானது தான் கள்ளம் கபடமற்று இருப்பதை அறியாமல் இருப்பதால் மட்டுமே அவன் கள்ளம் கபடமற்றவன் ஆகிறான்.

புத்தர் என்பது ஒரு மறுபிறவி; தன்னுணர்வின் மறுபிறவி. அவர் இரண்டாவது குழந்தைப் பருவத்தை அடைகிறார். அவர் மீண்டும் பிறந்தவராகிறார். அவர் முழுமையான தன்னுணர்வு; ஆனால் அவர் அதை உணர்ந்து, "நான் முற்றிலுமான தன்னுணர் வுடன் இருக்கிறேன்" என்று கூற முடியாது. அப்படிப்பட்ட அவரது வாக்குமூலம் அவரது தன்னுணர்வை அசுத்தமானதாக ஆக்கி விடும். அவரது தன்னுணர்வானது ஒரு குழந்தையின் கள்ளம் கபடமற்ற நிலை போன்றதாகும். அது சுய தன்னுணர்வாக இருக்க முடியாது. அது அங்கே இருக்கிறது. மேலும் வேறு எதற்கும் அங்கு இடம் இல்லை. "நான் ஒரு புத்தராக இருக்கிறேன்" என்கிற எண்ணத்திற்கும்கூட அங்கு இடம் இருக்காது.

*ஒரு புத்தர் புத்தரே அல்லர், புத்தர்களைப் பற்றி நினைக்கா தீர்கள்.* ஏனெனில் புத்தர்களைப் பற்றி நினைப்பது அர்த்தமற்றது. நீங்களே கூட ஒரு புத்தராக இருக்கிறீர்கள். அப்படி இருக்கும்போது புத்தர்களைப் பற்றி நினைத்துக்கொண்டு இருப்பதில் நீங்கள் ஏன் உங்களது நேரத்தை வீணாக்கிக் கொண்டு இருக்கிறீர்கள்? உங்களது கண்களை வெறுமனே திறந்துகொண்டு வெறுமனே விழித் தெழுந்து ஒரு புத்தராக ஏன் இருக்கக்கூடாது? புத்தர்களைப் பற்றி நினைத்துக்கொண்டு இருப்பதால் நீங்கள் என்ன லாபம் அடையப் போகிறீர்கள்?

நான் என்ன பேசிக்கொண்டு இருக்கிறேன் என்பதை நீங்கள் கண்டுகொள்ளவில்லை என்றால், உங்களால் ஒருபோதும் உங்களது சொந்த மனம் அற்ற நிலையை அறிந்துகொள்ள முடியாது.

தங்களின் இயல்பை கண்டுகொள்ள முடியாதவர் மற்றும் எல்லா நேரமும் எதையும் செய்யாமல் இருப்பதை பயிற்சி செய்ய முடியும் என்று கற்பனை செய்பவர் எவரோ அவர்கள் பொய்யர்கள் மற்றும் முட்டாள்கள். இதில் ஆபத்து உள்ளது. போதிதருமருக்கு அதுகுறித்த விழிப்புணர்வு உள்ளது. அங்கே வஞ்சகம் நிறைந்த மக்கள், பொய்யர்கள், முட்டாள்கள், மற்றவர்களை ஏமாற்றுபவர்கள், தங்களையே ஏமாற்றிக் கொள்பவர்கள் இருப்பார்கள். போதி தருமரின் இப்படிப்பட்ட மாபெரும் பேச்சுகளை படித்துக்கொண்டும் கேட்டுக் கொண்டும் தங்களுக்கு எதுவுமே நல்லதும் அல்ல, எதுவுமே கெட்டதும் அல்ல என்று பாசாங்கு செய்ய ஆரம்பித்து, நல்லது கெட்டது ஆகியவற்றுக்கு இடையே வித்தியாசத்தை காண்பதைப் பற்றி தாங்கள் கவலைப்பட வேண்டிய அவசியம் இல்லை என்று கூறுகின்ற அநேக மக்களை நான் அறிவேன். ஏனெனில் போதி தருமரும் மற்றும் போதி தருமர் போன்ற மக்களும் நீங்கள் ஒரு புத்தர் என்று அறிவித்து விட்டார்கள். எனவே மக்கள் தங்களின் கண்களைத் திறக்காமலேயே அந்த கருத்தை அனுபவித்துக் கொண்டு இருக்கிறார்கள். அவர்கள் தங்களின் சுய இயல்பை அனுபவித்தது கிடையாது. ஆனால் தாங்கள் மெய்ஞ்ஞானிகள் என்று அறிவிக்க ஆரம்பித்து விடுகிறார்கள். இப்படிப்பட்ட மக்கள் தங்களுக்கு அளவு கடந்த கெடுதல் செய்து கொள்கிறார்கள். மேலும் அடுத்தவர்களுக்கும் அளவுகடந்த தீங்கு செய்து விடுகிறார்கள்.

தங்களை மெய்ஞ்ஞானிகள் என்று அறிவிக்கின்ற அநேக மக்களை நான் பார்த்திருக்கிறேன். ஆனால் இப்போது நீங்கள் இருப்பதை விடவும் கொஞ்சம் அதிக தன்னுணர்வுடன் கூட அவர்கள் இருப்பதில்லை. எனவே இந்த மாபெரும் வாக்கு மூலங்கள் ஆபத்தானவையாக இருக்க முடியும். இந்த

வாக்கியங்கள் இமயமலைச் சிகரங்களை விடவும் மிகப்பெரியவை. இந்த உயரத்தில் இருந்து நீங்கள் விழுந்து உங்களை நீங்களே அழித்துவிட முடியும். இத்தகைய ரகசியங்கள் மிகவும் நேர்மையான, உண்மையான விதியில் புரிந்துகொள்ளப்பட வேண்டியவை; இதை மக்களைச் சுரண்டுவதற்கும் உங்களது ஆணவத்தை அதிகரிக்கவும் பயன்படுத்தக்கூடாது.

இத்தகைய மக்கள் முடிவே இல்லாத அண்ட வெளியில் விழுந்து விடுவார்கள். அவர்கள் குடிகாரர்கள் போன்றவர்கள். நல்லது கெட்டதை அவர்களால் பிரித்து கூற முடியாது. எதையுமே செய்யாமல் இருப்பதை நீங்கள் பயிற்சி செய்ய நினைத்தால் உங்களது பகுத்தறிவு சிந்தனைக்கு நீங்கள் முடிவு கட்டுவதற்கு முன்பு நீங்கள் உங்களது இயல்பினைக் கண்டுகொள்ள வேண்டும். உங்களது இயல்பினைக் கண்டுகொள்ளாமல் மெய்ஞ்ஞானம் அடைதல் என்பது சாத்தியப்படாது.

எனவே நேர்மையுடன் இருக்க வேண்டும் என்பதை இடைவிடாமல் நினைவில் வைத்துக்கொள்வது ஒவ்வொரு தனிமனிதனையும் பொறுத்தது. அப்படி இல்லையெனில் யாரும் உங்களைத் தடுக்க முடியாது; நீங்கள் மெய்ஞ்ஞானம் அடைந்து விட்டதாக அறிவித்து விடலாம். ஆனால் உங்களது கண்கள் காட்டிக்கொடுத்து விடும். உங்களைச் சுற்றி உள்ள எல்லாமும் நீங்கள் மெய்ஞ்ஞானம் அடையவில்லை என்பதைக் காட்டிக் கொடுத்து விடும். மேலும் இது எந்த விதத்திலும் உங்களுக்கு உதவப் போவதில்லை; சிலரை இது தவறாகவும் கூட வழிநடத்தி சென்று விடும். மேலும் உங்களது மெய்ஞ்ஞானத்தை நம்புகின்ற சில மக்களை நீங்கள் பெற்றுவிடக்கூடும். இது எப்போதுமே சாத்தியப்படும். ஏனெனில் இந்த உலகம் முழுவதும் முட்டாள்கள் நிறைந்து இருப்பதால் எந்த ஒரு முட்டாளும் கூட சீடர்களைப் பெற்றுவிட முடியும். மேலும் ஒருசில முட்டாள்களை நீங்கள் சீடர்களாக கண்டுகொண்டு விட்டால் அதன்பிறகு நீங்கள் ஒரு மெய்ஞ்ஞானம் அடைந்தவர்தான் என்கிற முழு நிச்சயத்துடன் நீங்கள் இருக்கலாம். இல்லையெனில் இப்படி அநேக புத்திசாலி மக்கள் உங்களை எப்படி நம்ப முடியும்?

என்றாலும்கூட மற்றவர்கள் இங்கு கர்மா என்பது இல்லை என்று கூறிக்கொண்டு எல்லாவிதமான கெட்ட செயல்களையும் செய்கின்றனர். எல்லாமே வெறுமை என்பதால், தீவினைகளைச் செய்வது தவறானது அல்ல என்று அவர்கள் தவறாக தொடர்ந்து செய்து வருகின்றனர். இப்படிப்பட்ட மக்கள் தாங்கள் விடுதலை பெறுவோம் என்று நம்பக்கூட முடியாத, முடிவற்ற இருள் சூழ்ந்த ஒரு நரகத்தில் விழுந்து விடுகிறார்கள். புத்திசாலிகள் இந்த கருத்துகளை பிடித்துக்கொண்டு இருப்பதில்லை.

இது மாபெரும் தனிமனித பொறுப்பு சம்பந்தமான கேள்வி யாகும்; இதைவிட மிகப்பெரிய பொறுப்பு வேறு எதுவும் இங்கு இல்லை. இதை எப்போதுமே நினைவில் வைத்திருங்கள். ஒரு சிறு நொடி கூட மறந்து விடாதீர்கள். நீங்கள் எதுவாக இல்லையோ அதைப்பற்றி எதுவும் கூறாதீர்கள்; அப்படி செய்தால் நீங்கள் இருளில் விழுந்து விடுவீர்கள். மேலும் அதிலிருந்து வெளியே வருவது மிகவும் கடினமாகி விடும்.

ஆனால் நமது ஒவ்வோர் அசைவும், அல்லது நிலையும், அது எப்போது நடந்தாலும் அது நமது மனம் அற்ற நிலைதான் எனும்போது ஒரு மனிதனின் உடலானது மரணமடைந்து விடும்போது நாம் ஏன் இந்த மனம் அற்ற நிலையை பார்ப்பது கிடையாது?

மனம் அற்ற நிலை என்பது எப்போதும் இருக்கிறது. நீங்கள் அதை வெறுமனே பார்ப்பது கிடையாது. மனம் அற்ற நிலை என்பது ஒரு பொருள் அல்ல. அது ஒரு விளைப்பொருள் அல்ல. மனம் அற்ற நிலை என்பது தூய வெளி. அது முழுமையான வெறுமை, அது மௌன நிலை. உங்களால் அதைக் கேட்க முடியாது. அதை நீங்கள் கூறும்போது அந்த முழுமையான மௌன நிலையைப் பற்றி எப்போதாவது நினைத்து பார்த்ததுண்டா? அந்த அமைதியை நீங்கள் காதில் கேட்டதுண்டா? நீங்கள் கேட்பது எல்லாம் சப்தம் இல்லாத நிலையைத்தான். எனவே சப்தம் இல்லாத நிலையை நீங்கள் காதில் கேட்பதால்தான் அதுதான் அமைதி என்று நீங்கள் முடிவு கட்டி விடுகிறீர்கள்.

நீங்கள் எந்தவிதமான கவலையும், துன்பமும், மன இறுக்கமும், வேதனையும் அனுபவிக்காத போது, அதுதான் அமைதி மற்றும் பேரானந்த நிலை என்று நீங்கள் யூகிக்கிறீர்கள். ஆனால் இவை உங்களால் பார்க்க முடிகின்ற பொருள்கள் அல்ல. அல்லது ஒரு மனிதன் இறக்கும்போது அவனது மனம் அற்ற நிலையானது உடலை விட்டு வெளியேறுவதை உங்களால் பார்க்க முடியாது.

நான் இந்த வாக்குமூலங்களில் சில இடங்களை மாற்றி வருவதை நீங்கள் மீண்டும் நினைவு வைத்துக் கொள்ளுங்கள். எங்கெல்லாம் மனம் என்பது இருக்கிறதோ அங்கெல்லாம் நான் மனம் அற்ற நிலை என்று கூறிவருகிறேன். ஏனெனில் மனம் என்பதை நீங்கள் பார்க்க முடியும். நீங்கள் அதை ஒவ்வொரு நாளும் பார்க்கிறீர்கள். அதைப் பார்ப்பதற்கு நீங்கள் மரணமடைய வேண்டிய அவசியம் இல்லை. வெறுமனே நீங்கள் கண்களை மூடிக்கொண்டாலே போதும். நீங்கள் அதைப் பார்ப்பதற்கு ஆரம்பித்து விடுவீர்கள்.

*ஆனால் அந்த மனம் அற்ற நிலை இருக்கிறது என்றால், என்னால் அதை ஏன் பார்க்க முடிவதில்லை?*

சீடர் கேள்விகளைக் கேட்டு போதி தருமரின் பதில்களைப் பெறுவதற்கு முயற்சி செய்கிறார். அவர் இதற்கான பதில்களைப் பெற்றிருக்க வேண்டும். ஆனால் அவர் அதைப் புரிந்துகொள்ள முடியாமல் போய் இருக்கலாம். அதனால் ஒருவேளை இந்த கேள்விகளை எழுப்பி இருக்கலாம். அந்த பதில்களை இவரது சொந்த வழியில் திரித்துக் கூறுகிறார். மனம் அற்ற நிலை என்பது எப்போதும் இருக்கிறது. நீங்கள் வெறுமனே அதைப் பார்ப்பது இல்லை என்று போதி தருமர் கூறி இருந்தார். அது தூய்மையான வெளி என்பதால் உங்களால் அதைப் பார்க்க முடிவதில்லை. அது ஒரு பொருள் அல்ல. அது ஒன்றும் இல்லாதது அல்லது கொஞ்சம் சிறப்பாக கூறவேண்டும் என்றால் அது ஒரு பொருள் அல்ல. அது கண்களுக்குத் தெரியாதது. ஆனாலும்கூட அந்த சீடர் அதே கேள்வியை வேறு வழிகளில் கேட்கிறார். மனம் என்பது இருக்கிறது - மனம் அற்ற நிலை இருக்கிறது - என்றால், என்னால் அதை ஏன் பார்க்க முடிவதில்லை? அவர் குறிப்புகளை எழுதவில்லை போல்

தெரிகிறது. அப்போது அவர் மறந்து போயிருக்க வேண்டும் அல்லது போதி தருமர் கொடுத்த பதிலை அவர் புரிந்து கொள்ள வில்லை போல் தெரிகிறது. ஏனெனில் அந்த கேள்வி அங்கு உள்ளது. ஆனால் அதற்கான பதில் அங்கு இல்லை. பதில் கண்டிப்பாக இருந்தாக வேண்டும். நீங்களே அதுவாக இருக் கிறீர்கள். எனவே உங்களால் அதைப் பார்க்க முடிவதில்லை.

உங்களைத் தவிர இந்த உலகில் இருக்கின்ற எல்லாவற்றையும் உங்களால் பார்க்க முடியும். எனவே எனது சொந்த கையைத் தவிர இந்த உலகில் உள்ள எல்லாவற்றையும் என்னுடைய கைகளில் பிடித்துவிட முடியும். எனது சொந்த கண்களைத் தவிர இந்த உலகில் உள்ள எல்லாவற்றையும் என்னால் பார்க்க முடியும்.

மனம் அற்ற நிலைதான் எனது இயல்பு.

அதை நான் உணர முடியும்; அதை நான் வாழ்ந்து பார்க்க முடியும். அதை நான் சுவைத்துப் பார்க்க முடியும், நான் அதைப் பாட முடியும். நான் அதை நடனமாட முடியும்; ஆனால் நான் அதைப் பார்க்க முடியாது. ஏனெனில் நானே அதுவாக இருக் கிறேன். இதுபோன்று ஏதோ ஒன்றுதான் பதிலாக இருந்திருக்க வேண்டும். ஆனால் அது பதிவு செய்யப்படவில்லை.

இந்த வித்தியாசத்தை சீடர் புரிந்துகொள்ள வேண்டும் என்று போதி தருமர் மிகவும் கடின முயற்சி எடுத்துக் கொள்கிறார்.

*நீங்கள் எப்போதாவது கனவு காண்பதுண்டா?*

*ஆம், காண்பதுண்டு.*

*நீங்கள் கனவு காணும்போது அது நீங்களா?*

ஆனால் இன்னமும் அந்த சீடர் அதைப் புரிந்துகொள்ள வில்லை. எனவே அவர் ஆம், அது நான்தான் என்று பதில் அளிக்கிறார். மேலும் இது போதி தருமர் மற்றும் கௌதம புத்தர் மேலும் விழிப்புணர்வு அடைந்த அனைவரின் ஒட்டுமொத்த தத்துவத்திற்கு எதிரானதாக இருக்கிறது. இதற்கான பதிலானது, "இல்லை, அது நான் இல்லை" என்று இருந்திருக்க வேண்டும். ஏனெனில் நான் எப்படி கனவுகளாக இருக்க முடியும்? கனவுகள் என் முன்பு மிதந்து செல்கின்றன. நான் அவற்றைப் பார்க்கிறேன்.

நான் அதைப் பார்ப்பதால் நிச்சயமாக நான் அந்த கனவுகள் அல்ல. நான் காண்பவன் அவை எல்லாம் காணப்படுபவை. நான் அவற்றை அறிபவன், அவை எல்லாம் அறியப்படுபவை. அவை புறப்பொருள்கள். நான் அகப்பொருள் எனவே, "ஆம், அது நான்தான்" என்பது சரியான பதிலாக இருக்க முடியாது. ஆனால், "இல்லை அது நான் இல்லை" என்று இருந்தாக வேண்டும்.

*மேலும் நீங்கள் செய்கின்றதும், கூறுகின்றதும் உங்களில் இருந்து வேறானதாக இருக்கிறதா?*

மீண்டும் அதே தவறு; இதற்கு கொடுக்கப்பட்ட பதிலானது, "இல்லை, அது அப்படி இல்லை என்று உள்ளது. அது என்னிலிருந்து வேறானதாக இல்லை. எந்த ஒரு செயலும், எந்த ஒரு பேச்சும் என்னிலிருந்து வேறானதாக இல்லை ஆனால் இது மிகவும் எளிதானது; குறிப்பாக உங்களுக்கு இது எளிமையானதாக இருந்தாக வேண்டும். நடந்து செல்லும்போது அது உங்களது உடலின் ஒரு செயல் என்று உங்களால் பார்க்க முடியும். ஆனால் நீங்கள் அந்த நடை அல்ல, நீங்கள் நடந்து செல்லவில்லை, உங்களது தன்னுணர்வு எப்போதும் எங்கே இருந்ததோ அதே இடத்தில் மிகச்சரியாக உள்ளே உள்ளது. நீங்கள் எழுந்து நேராக நின்றாலும் அல்லது நடந்து சென்றாலும் அது எப்போதும் ஒரே மாதிரி உள்ளது. இதற்கான உண்மையான பதிலானது, "ஆம், அது வேறானது, அது நான் அல்ல" என்று இருக்க வேண்டும். எனது செயல் நானாக இருக்க முடியாது. நான் எப்போதுமே பின்னால் இருந்துகொண்டு அதைக் கவனிக்கின்ற ஒருவன், நான் எப்போதுமே அதற்கு அப்பால் உள்ள ஒரு சாட்சி" என்று இருக்க வேண்டும். ஆனால் அது அப்படி இருந்தால், அதன்பின்னர் இந்த உடல் உங்களது உண்மையான் உடல் அல்ல. இது என்னால் திருத்தப்பட்டது. சீடரின் குறிப்புகள் நேர் எதிராக உள்ளன. இந்தக் குறிப்புகள் தொடர்ந்து இதேபோன்று தவறாகவே உள்ளன. குறிப்பில் ஆனால் அது அப்படி இருந்தால், அதன்பின்னர், இந்த உடல்தான் உண்மையான உடல் என்று இருக்கிறது. நீங்கள் உங்களது செயல்களில் இருந்து வேறானவர் இல்லை என்றால் உங்களது கனவுகளில் இருந்து நீங்கள் வேறானவர் இல்லை

என்றால், அதன் பின்னர் இதுதான் உங்களது உண்மையான மனம், இதுதான் உங்களது உண்மையான உடல்.

ஆனால் இது உங்களது உண்மையான உடல் அல்ல, விரைவில் ஒருநாள் வரும். அப்போது இந்த உடல் இறுதிச்சடங்கு தீயில் எரிந்து போய்விடும். ஆனால் நீங்கள் எரிவதில்லை. உங்களது தன் உணர்வு ஒரு புதிய வடிவத்தை எடுத்திருக்கும். அது வெகு தூரம் நகர்ந்து சென்றிருக்கும். எனவே நான் திருத்தியபடியே பேசுகிறேன். ஆனால் அது அப்படி என்றால் அதன்பிறகு இந்த உடல் உங்களது உண்மையான உடல் அல்ல. மேலும் இந்த உண்மையான உடல் என்பது உங்களது மனம் அற்ற நிலை. இந்த மனம் அற்ற நிலையானது ஆரம்பமே இல்லாத, முடிவில்லாத கல்ப காலத்தின் மூலம் ஒருபோதும் வேறுபடவில்லை. அது ஒருபோதும் வாழவும் இல்லை, சாகவும் இல்லை. வெறுமனே உள்ள குழப்பத்தை பாருங்கள். இந்த உடல் உண்மையானது என்றால் பின்னால் வருகின்ற இந்த வாக்குமூலங்கள் சம்பந்தமுடையதாக இருக்க முடியாது. முடிவில்லாத கல்ப காலங்களின் மூலம் இந்த மனம் அற்ற நிலையானது ஒருபோதும் வேறுபடவில்லை. அது ஒருபோதும் வாழவும் இல்லை, சாகவும் இல்லை. தோன்றவும் இல்லை அல்லது மறையவும் இல்லை. அதிகரிக்கவும். இல்லை அல்லது குறையவும் இல்லை, அது சுத்தமானதாகவும் இல்லை அல்லது அது அசுத்தமானதாகவும் இல்லை, கெட்டதும் இல்லை அல்லது நல்லதும் இல்லை, கடந்த காலமும் அல்ல, அல்லது எதிர்காலமும் அல்ல. அது உண்மையானதும் அல்ல, அல்லது பொய்யானதும் அல்ல; அது ஆணும் அல்ல அல்லது பெண்ணும் அல்ல; அது ஒரு துறவி போன்று தோன்றுவது இல்லை அல்லது ஒரு சாதாரண மனிதன் போன்றும் இல்லை. அது வயதானவராகவும் இல்லை அல்லது இளைஞனாகவும் இல்லை; அது ஒரு ஞானியும் அல்ல அல்லது ஒரு முட்டாளும் அல்ல; ஒரு புத்தரும் அல்ல அல்லது அழியக்கூடியவனும் அல்ல; அது அறிந்து கொள்வதற்கு முயற்சிப்பதும் இல்லை அல்லது எந்த கர்ம வினையாலும் அவதிப்படுவதுமில்லை; அதற்குப் பலமும் கிடையாது அல்லது உருவமும் கிடையாது. அது அண்டவெளி

போன்றது. உங்களால் அதை உங்களுக்கு சொந்தமானதாக ஆக்கிக்கொள்ள முடியாது.

எனது திருத்தங்கள் செய்யப்பட்டால் மட்டுமே இந்த வாக்கு மூலங்கள் சாத்தியப்படும். இல்லையெனில் இந்த வாக்குமூலங்கள் முற்றிலும் சாத்தியப்படாமல் போய்விடும். ஏனெனில் உங்களது உடல் அநேக முறை இறந்திருக்கிறது. அநேக முறை பிறந் திருக்கிறது, மீண்டும் இறக்கும், மீண்டும் பிறக்கும். இந்த உடல் உங்களது உண்மையான உடல் அல்ல.

உங்களது உண்மையான உடல் என்பது உங்களது உண்மையான உயிர் உணர்வாக இருக்கிறது. அது ஒருபோதும் இறந்து போகாதது. ஒருபோதும் பிறக்காதது, அநேக உருவங்களின் மூலம் எப்போதும் முடிவில்லாமல் தொடர்ந்து இருப்பது. ஆனால் அது ஒரேமாதிரி அப்படியே இருந்து வந்துள்ளது. "நீங்கள் எங்கிருந்தும் எந்தத் திசையில் இருந்தும் கடல் நீரை ருசித்துப் பார்க்கலாம். அதன் ருசி எப்போதும் ஒரே மாதிரியானதாகத்தான் இருக்கும்" என்கிற கௌதம புத்தரின் வாக்குமூலம் ஒன்று உள்ளது.

எனவே நீங்கள் இந்த உடலில் இருக்கிறீர்களோ அல்லது அடுத்த உடலில் இருக்கிறீர்களோ, ஆனால் உங்களது தன்னுர்ணவு மட்டும் அப்படியே இருக்கிறது. மேலும் இந்த உடல் மட்டுமே நிச்சயமாக ஆண் அல்லது பெண்ணாக இருக்கிறது; உங்களது உயிர் உணர்வு மட்டுமே பெண்ணும் அல்ல ஆணும் அல்ல. எனவே நான் கூறிய திருத்தங்கள் செய்யப்படவில்லை எனில், பின்னால் வருகின்ற எல்லா வாக்குமூலங்களும் அந்த சீடர் எழுதியுள்ள வாக்குமூலங்களுக்கு முற்றிலும் சம்பந்தம் இல்லாத தாகவும் நேர் எதிரானதாகவும் ஆகிவிடும்.

அல்லது நீங்கள் அதை இழந்துவிடவும் முடியாது. அதனுடைய நகர்வுகளை, மலைகள், ஆறுகள் அல்லது பாறைச் சுவர்களாலும்கூட தடுக்க முடியாது. அதன் நிறுத்த முடியாத சக்தியானது ஐந்து ஸ்கந்த மலையை இந்த ஐந்து ஸ்கந்த மலைகளைத்தான் நான் பஞ்சபூதங்கள் என்று கூறினேன். ஸ்கந்தா என்பது பஞ்ச பூதங்களுக்கான அதாவது நிலம், நீர், காற்று,நெருப்பு, ஆகாயம் ஆகியவற்றுக்கான பௌத்த வார்த்தை. இந்த

பஞ்சபூதங்களினாலும்தான் உங்களது உடல் உண்டாக்கப்பட்டுள்ளது. ஆனால் உங்களது உண்மையான உயிர் உணர்வு இந்த ஸ்கந்தங்களுக்கெல்லாம் அப்பால் உள்ளது. ஐந்து ஸ்கந்த மலையை ஊடுருவிச் செல்லக்கூடியது. மேலும் சம்சாரம் என்னும் ஆற்றினைக் கடக்கக் கூடியது. உங்களது தன்னுணர்வு இந்த பஞ்சபூதங்களால் ஆனது அல்ல. மேலும் இந்த பஞ்சபூதங்களும் மலை போன்று இருந்தாலும் கூட உங்களது தன்னுணர்வானது இவற்றை கடந்து சென்று இவற்றிற்கு அப்பால் உள்ள உங்களது உண்மையான வீட்டினை அடைவதைத் தடுக்க முடியாது.

இந்த சம்சார சாகரங்களும் கூட, இந்த உலகமும் கூட நீங்கள் உங்களது முடிவான வீட்டினை சென்றடைவதைத் தடுக்க முடியாது. ஏனெனில் அந்த முடிவான வீடானது உங்களுக்கு உள்ளே இருக்கிறது. அதை சென்றடைவதை எதுவும் தடுக்க முடியாது. நீங்கள் ஏற்கெனவே அதில்தான் இருக்கிறீர்கள். வெறுமனே அதுகுறித்த விழிப்புணர்வு இல்லாமல் இருக்காதீர்கள்.

எந்த ஒரு கர்ம வினையும் இந்த உண்மையான உடலை அல்லது இந்த உண்மையான உயிர் உணர்வை கட்டுப்படுத்த முடியாது. ஆனால் இந்த மனம் அற்ற நிலையானது கண்களுக்குத் தெரியாதது. மேலும் பார்பபதற்கு கடினமானது. இது புலன்களின் மனது போன்றதாக இல்லை. ஒவ்வொருவரும் இந்த மனம் அற்ற நிலையைப் பார்ப்பதற்கு விரும்புகின்றனர். மேலும் அதன் ஒளியினால் தங்களது கைகளையும் கால்களையும் அசைத்துக் கொண்டிருப்பவர்களோ கங்கைக் கரையில் உள்ள மணல்களின் எண்ணிக்கை அளவிற்கு அநேகம் பேர் உள்ளனர்.

நீங்கள் அதைப் பார்க்கவில்லை என்றாலும்கூட ஒவ்வொருவரும் அதைப் பெற்றிருக்கிறோம். அதன் ஒளியில்தான் நீங்கள் வாழ்கிறீர்கள். உங்களது இந்த வாழ்க்கையும்கூட உங்களது மனம் அற்ற நிலைக்கு சொந்தமானது. ஆனால் அவர்களிடம் கேட்டுப்பாருங்கள். அவர்களால் அதை விளக்கிக் கூறமுடியாது.

நீங்கள் வாழ்கிறீர்கள், நீங்கள் உயிரோடு இருப்பதை நீங்களே அறிவீர்கள். ஆனால் யாராவது ஒருவர் உங்களிடம் வாழ்க்கை என்றால் என்ன என்றோ அல்லது வாழ்க்கை என்பதை

விவரிக்கும்படி கேட்டாலோ உங்களுக்குப் பதில் சொல்லத் தெரியாது. இது எதைப்போன்றது என்றால், மிகவும் சுவையான ஒன்றை நீங்கள் சுவைத்துப் பார்த்து அதன் ருசியை அறிந்து கொள்கிறீர்கள். ஆனால் அது என்ன என்று கூறுவதற்கு உங்களுக்கு ஏதாவது ஒரு வழி உள்ளதா? எப்படி இருந்தது என்று கூறுவதற்கு வழி உள்ளதா? இதற்கு ஒரே வழி அந்த அடுத்த மனிதரும் அதை சுவைத்துப் பார்ப்பது மட்டுமேயாகும். எந்த ஒரு விளக்கங்களும் அவருக்கு உதவாது.

ஒருபோதும் இனிப்பை சாப்பிடாத ஒரு மனிதனிடம் இனிப்பு என்றால் என்ன என்று உங்களால் விளக்கிக் கூற முடியாது. நீங்கள் உங்களது சொல்லாற்றல், பேச்சாற்றால் எல்லாவற்றையும் கொண்டு வந்தாலும்கூட இனிப்பு என்னும் பெரிய விஷயத்தை உங்களால் விளக்கிக் கூற முடியாது. இருக்கின்ற ஒரே வழி அவருக்கு சில இனிப்பு வகைகளைக் கொடுத்து சுவைக்கச் செய்வது மட்டுமே ஆகும். இதைத்தான் இந்த குருமார்கள் அனைவரும் எல்லாக் காலங்களிலும் செய்துகொண்டு இருக்கின்றனர். உங்களுக்கு இனிப்பு என்றால் என்ன என்று விளக்கிக் கூறுவதற்கு மாறாக அவர்கள் அதை சாப்பிட்டுப் பார்ப்பதற்கு அவர்கள் உங்களுக்கு கொடுக்கின்றனர். அவர்கள் தங்களின் சொந்த உயிர் உணர்வையே, தங்களின் சொந்த பிரசன்னத்தையே நீங்கள் ருசித்துப் பார்ப்பதற்காக உங்களுக்கு கொடுக்கின்றனர்.

ஒவ்வொருவரும் உள்ளுக்குள் ஒரு புத்தரை வைத்திருக் கிறார்கள். ஆனால் இதை அவர்கள் உணராததால் அவர்கள் ஒரு பொம்மலாட்ட பொம்மை போன்று செயல்படுகின்றனர். உள்ளே இருக்கின்ற இந்த புத்தர் அவர்கள் பயன்படுத்துவதற்காக இருக்கிறார். இதை அவர்கள் ஏன் பார்ப்பதில்லை? அவர்கள் ஏன் பொம்மலாட்ட பொம்மை போன்றே இருந்து கொண்டே போகிறார்கள்? தங்களது சொந்த உயிர் உணர்விற்கு அவர்கள் எஜமானர்களாக ஏன் ஆகக்கூடாது? மேலும் இது கடினமான தொரு வேலையும் அல்ல, உண்மையில் இது ஒரு வேலையே அல்ல. இது கொஞ்சம் விழிப்புணர்வு பெற்றவர்களாக ஆகி விடுகின்ற நுட்பம், உங்களை கொஞ்சம் உலுக்கி விழித்தெழச் செய்யக்கூடிய ஒரு நுட்பம். இந்த தியானங்கள் எல்லாம் உங்களை

எல்லாம் கொஞ்சம் உலுக்கி விடுகின்ற எளிய உபாயங்கள் மட்டுமேயாகும். அப்போதுதான் உங்களது ஆழ்ந்த ஆன்மிக உறக்கம் கலைந்து போகும். P.D. ஒனஸ் பென்ஸ்கி அவர்கள் தனது குருவாகிய ஜார்ஜ் குர்ட்ஜியப்பிற்கு தனது நூலாகிய 'In Search of the Miraculous' என்பதை "எனது தூக்கத்தைக் கலைத்த ஜார்ஜ் குர்ட்ஜியப்" அவர்களுக்கு அர்ப்பணிக்கிறேன் என்று அழகான வார்த்தைகளில் குறிப்பிடுகிறார். ஆனால் அது ஒன்று மட்டும்தான் குருவின் வேலையாகும். ஏதாவது ஒரு வகையில் உங்களது தூக்கத்தைக் கலைக்க வேண்டும். ஏதாவது ஒருவகையில் உங்களை உலுக்கி விழித்தெழச் செய்ய வேண்டும். எனவே நீங்கள் எங்கும் போகவேண்டியது கிடையாது. மேலும் நீங்கள் அடைவதற்கும் இங்கு ஏதும் இல்லை.

நீங்கள் எங்கு இருக்க வேண்டுமோ அங்கு ஏற்கெனவே இருக்கிறீர்கள். தேடுதல் ஒன்று மட்டுமே பாவச் செயல்.

தேடிச்செல்லுதல் மட்டுமே வழிதவறி சுற்றித் திரிதலாகும். வெறுமனே உங்களுக்குள் இருந்துகொண்டு எல்லாவற்றில் இருந்தும் உங்களை திரும்பப் பெற்றுக்கொண்டு உங்களது எல்லா சக்தியையும், சக்தியின் ஒவ்வோர் அதிர்வுகளையும் திரும்பப் பெற்று அதன்பின்னர் அதை உங்களது உயிர் உணர்வின் மையத்தின் மீது ஒருமுகப்படுத்துவதாகும். குர்ட்ஜியப் இதை 'பளிங்கு போல் கெட்டிப்படுதல்' என்று அழைக்கிறார். மேலும் அவரும்கூட போதி தருமர் போன்ற ஒரு மனிதர் ஆவார். போதி தருமரின் அதே பிரிவில் யாரையாவது சேர்ப்பது என்றால் அதன் பிறகு குர்ட்ஜியப் ஒருவர் மட்டுமே அதற்குத் தகுதியானவர். உங்களது உயிர் உணர்வை பளிங்குபோல் கெட்டிப்படுத்துதல் என்று எப்படி அழைக்கிறாரோ அதேபோன்றுதான் போதி தருமர் உங்களது உயிர் உணர்வை அல்லது புத்த நிலையை விழித்தெழச் செய்தல் என்று அழைக்கிறார்.

இந்த சூத்திரங்களை எல்லாம் படித்ததன் மூலம், பழங்கால சூத்திரங்களை ஒரு பார்வை பார்க்க வேண்டும் என்று யோசித்துக்கொண்டு இருக்கிறேன். ஏனெனில் இந்த சூத்திரங்களில் நான் காண்கின்ற இந்த தவறுகள் அவற்றிலும் கண்டிப்பாக

இருந்தாக வேண்டும். அவை மெய்ஞ்ஞானம் அடைந்தவர்களால் எழுதப்பட்டவை அல்ல. மேலும் இந்த குழப்பங்கள், இந்த தவறான தகவல்கள், எந்தவிதமான உள்நோக்கமும் இல்லாமல் இதை பின்பற்றுபவர்களுக்கு அளவுக்கு அதிகமான தீங்கினை செய்துவிடும்; இவை திருத்தப்பட வேண்டும். எனவே இப்படி குழப்பமாகவும், தவறாகவும் இருக்கின்ற எல்லாவற்றையும் திருத்தி விமர்சிப்பதாகவே எனது இந்த வியாக்கியானங்கள் இருக்கின்றன. இந்த சூத்திரங்களை எழுதிய சீடர்கள் விட்டுச் சென்ற கருத்துகள் இல்லாமல், போதி தருமரை முற்றிலும் தெளிவானவராக கொண்டுவர நான் விரும்புகிறேன். இதுபோன்று எப்போதுமே நடந்து வந்துள்ளது. இயேசுவிற்கு பிறகு முந்நூறு ஆண்டுகள் கழித்து அவரது சுவிசேஷங்கள் எழுதப்பட்டன. அவற்றைத் திருத்துவதற்கு இயேசு அப்போது அங்கு இல்லை. அவற்றை திருத்துவதற்கு வேறு ஒரு இயேசுவை எந்த ஒரு கிறிஸ்தவரும் விரும்ப மாட்டார்கள். அப்படி இல்லை எனில், நான் முழுமையான விருப்பத்துடன் இருக்கிறேன். கௌதம புத்தரின் சூத்திரங்கள் அவரது மரணத்திற்குப் பின்னர்தான் எழுதப்பட்டன. அதன்பிறகு அவரது சீடர்களிடையே அதிக வாய்த்தகராறு ஏற்பட்டதால் அவரது மரணத்திற்குப் பிறகு உடனடியாக ஒன்றோடு ஒன்று கலந்து முரண்பட்டுக் கொண்டு முப்பத்து இரண்டு பிரிவுகள் உருவாயின. சிலர் "இப்படி அவரால் சொல்லப்பட்டிருக்கிறது" அல்லது இப்படி அவரால் சொல்லப்படவில்லை" என்று ஒருவருக்கொருவர் முரண்பட்டனர். இப்படி ஒருவரை ஒருவர் மறுத்து வந்ததால் முப்பத்து இரண்டு விதமான திரித்துக் கூறல்கள் உருவாகின. ஆனால் அப்பாவி கௌதம புத்தர் அப்போது உயிரோடு இல்லை. மேலும் இப்படி முப்பத்து இரண்டு வேறுபட்ட திரித்து கூறல்களை கொண்ட எந்த ஒரு விஷயத்தையும் அவர் கூறவே இல்லை. அவரது அர்த்தம் மிகவும் தெளிவானது. ஆனால் யார் தனது மனதிற்கு அப்பால் சென்று இருக்கிறார்களோ அவர்களுக்கு மட்டுமே அந்தத் தெளிவு சாத்தியப்படும். ஏனெனில் மனம் என்பது குழப்பம், மனம் அற்ற நிலை என்பது தெளிவு என்பதாக உள்ளது.

மனம் அற்ற நிலையின் அமைதி உங்களுக்கு தெளிவைக் கொடுக்கிறது. நீங்கள் உடனடியாக எது சரி; எது தவறு என்று கண்டுகொள்ள முடியும்; அங்கு எந்த ஒரு விவாதத்திற்கும் இடமே இல்லை. இந்த சூத்திரங்களைப் படிக்கும் போது எங்கு இது தவறாக உள்ளது அல்லது எங்கு இது சரியாக உள்ளது என்று ஒரு சிறு நொடிப்பொழுது கூட சிந்திக்கவோ அல்லது தயங்கவோ இல்லை. ஏதாவது ஒரு இடத்தில் தவறாக இருந்தால் அந்த நொடிப்பொழுதே அது உடனடியாக, முழுமையாக எனக்கு எந்த ஒரு தயக்கமும் இல்லாமல் தெளிவாகத் தெரிந்தது.

இந்த சூத்திரங்களைப் பார்த்த பிறகு தான், மெய்ஞ்ஞானம் அடையாத மக்களால் எழுதப்பட்ட எல்லா பழைய சூத்திரங் களையும் ஒரு பார்வை பார்த்து அவற்றைத் திருத்த வேண்டும் என்று நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன். ஏனெனில் இதுதான் அதற்கு சரியான நேரம். இந்த சூத்திரங்கள் எந்தவிதமான திருத்தங்கள் இல்லாமலும் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக உயிரோடு இருந்துள்ளன.

ஆனால் மக்கள் இவற்றில் மாற்றம் தேவையில்லை என்பதில் அதீத ஆசையுடனும், வெறித்தனத்துடனும் இருக்கின்றனர். உதாரணமாக எனது திருத்தங்கள் பௌத்தர்களால் விரும்பப்படு வதில்லை. அவர்களது மனது மிகவும் காயப்படும். ஒவ்வொரு வரியும் அப்படியே இருக்கவேண்டும் என்று விரும்புவார்கள். ஆனால் இந்த வரிகள் போதி தருமரால் எழுதப்பட்டவை அல்ல என்ற கருத்தை அவர்கள் பார்க்க மாட்டார்கள். அப்படி அவரே எழுதி இருந்தால் அவை எல்லாமே சரியாக இருந்திருக்கும். ஆனால் அவை மெய்ஞ்ஞானம் அடையாத மக்களால் எழுதப்பட்டுள்ளது. எனவே இவற்றில் தவறுகள், குழப்பங்கள், தவறான வாக்குமூலங்கள், அநேக விஷயங்கள் விடப்பட்டு மேலும் ஒருவேளை சீடர்களால் அநேக விஷயங்கள் சேர்க்கப்பட்டும் நிச்சயமாக இருந்தாக வேண்டும். ஏனெனில் அப்போதுதான் அதை ஒரு முழுமையான கதையாக, ஒரு முழுமையான தத்துவமாக அந்த சீடர்கள் அவற்றை ஆக்கி இருக்க முடியும். இது மிகவும் கடினமானதொரு காரியமாக இருக்கப் போகிறது. இன்னும் அநேக மக்களை என்மீது

கோபப்படவைக்கப் .போகிறது. நான் ஏற்கெனவே அநேகம் பேர்களை கோபம் கொள்ளும்படி செய்து விட்டேன். எனவே இப்போது நான் இதற்கு மேல் கவலைப்படப் போவது கிடையாது. அது எனக்கு ஒரு பொருட்டடல்ல. நான் ஏற்கெனவே பல லட்சம் பேர்களை கோபத்திற்கு உள்ளாக்கி இருக்கிறேன். எனவே மேலும் சில மில்லியன் மக்களை கோபத்திற்குள்ளாக்குவதனால் இப்போது அது ஒரு பெரிய விஷயமே ஆகாது.

இந்த ஒட்டுமொத்த உலகமும் தன்மீது கோபம் கொள்வதைக் கண்டு ஒரே ஒரு மனிதனாவது கவலைப்படாமல் இருந்தாரே என்று புதிய மனிதனின் எதிர்கால சந்ததியினர் மிகவும் நன்றியுணர்வுடன் இருப்பார்கள். உண்மைக்கும் பொய்மைக்கும் இடையே அவர் பிரித்தறிந்து பார்த்ததற்கு அவர்கள் நன்றியுணர்வு டன் இருப்பார்கள்.

மக்கள் மாயையில் இருக்கின்றனர் என்று புத்தர் கூறினார். இதனால்தான் அவர்கள் செயலாற்றும்போது முடிவில்லாத மறுபிறவி என்னும் ஆற்றில் விழுந்து விடுகின்றனர். மேலும் அதிலிருந்து வெளியே வருவதற்கு முயற்சி செய்யும் போது அவர்கள் இன்னும் அதிக ஆழத்தில் மட்டுமே மூழ்கி விடுகின்றனர். இவை எல்லாம் ஏனெனில் அவர்கள் தங்களின் இயல்பைப் பார்ப்பதில்லை. மக்கள் மாயையில் இல்லை என்றால் அதன் பின்னர் அவர்களுக்கு எதிரே ஒன்றினைப் பற்றி அவர்கள் ஏன் கேட்க வேண்டும்? ஒருவர்கூட தங்களின் கைகள் மற்றும் கால்களின் அசைவுகளைப் புரிந்துகொள்வதில்லை. புத்தர் தவறாக எடுத்துக்கொள்ளப்படவில்லை. மாயையில் இருக்கின்ற மக்கள் தாங்கள் யார் என்பதை அறிந்து கொள்ளவில்லை. ஆழ்ந்தறிவதற்கு கடினமான ஏதோ ஒன்று புத்தரால் அறியப்பட்டுள்ளது. மற்றும் வேறு யாரும் அதை அறியவில்லை. ஞானவான்கள் மட்டுமே இந்த மனதை தர்ம இயல்பு, விடுதலை என்று அழைக்கப்படுகின்ற இந்த மனதை அறிந்து கொள்கின்றனர். இது தடுக்க முடியாத ததாகதா என்றும், புரிந்து கொள்ள முடியாதது, புனித ஆன்மா, அழிவற்றது, மாபெரும் ஞானி, என்றும் கூட அழைக்கப்படுகிறது. அதன் பெயர்கள் வேறுபடுகின்றன. ஆனால் அதன் சாராம்சம் வேறுபடுவதில்லை. புத்தர்களும் கூட வேறுபடுகின்றனர். ஆனால் யாரும் தனது சொந்த மனதை விட்டுவிட்டு செல்வதில்லை.

இந்த மனதின் திறனானது எல்லையற்றது. மேலும் அதன் வெளிப்பாடுகளானது ஒருபோதும் தீர்ந்து போகாதது. உங்களது கண்களால் உருவங்களைப் பார்ப்பதும், உங்களது காதுகளால் ஓசைகளைக் கேட்பதும், உங்களது மூக்கினால் வாசனைகளை

நுகர்வதும், உங்களது நாவினால் சுவையை ருசிப்பதும், இப்படி ஒவ்வோர் அசைவும் அல்லது நிலையும் அறிய எல்லாமுமே உங்களது மனம்தான். ஒவ்வொரு தருணத்திலும், மொழிகள் போகமுடியாத இடங்களில் உள்ளதுதான் உங்களது மனம்.

"ஒரு ததாகதரின் உருவங்கள் முடிவில்லாதவை. மேலும் அதுபோன்றதுதான் அவரது விழிப்புணர்வும் என்று இந்த சூத்திரங்கள் கூறுகின்றன. மனது என்பது இருப்பதன் காரணத்தினால் தான் இப்படி முடிவில்லாத உருவங்கள் இருக்கின்றன. பொருள்களின் நகர்வு மற்றும் நிலை என்னவாக இருந்தாலும் அந்த பொருள்களை வேறுபடுத்திக் காண்பது மனதினுடைய விழிப்புணர்வாகும். ஆனால் இந்த மனதிற்கு உருவங்கள் கிடையாது. மேலும் அதன் விழிப்புணர்விற்கு எல்லைகள் கிடையாது. அதனால்தான், "ஒரு ததாகதரின் வடிவங்கள் முடிவில்லாதவை மற்றும் அவரது விழிப்புணர்வும் முடிவற்றது" என்று கூறப்பட்டுள்ளது.

நான்கு பூதங்கள் மட்டுமே கொண்ட பூதஉடல் தொந்தர வானது. பூத உடலானது பிறப்பிற்கும் இறப்பிற்கும் உட்பட்டது. ஆனால் உண்மையான உடலானது இருப்புநிலை இல்லாமலேயே இருக்கிறது. ஏனெனில் ஒரு ததாகதரின் உண்மையான உடல் ஒருபோதும் மாறாதது. "இந்த புத்த இயல்பு என்பது தாங்கள் எப்போதும் பெற்றிருக்கிற ஒன்று என்று மக்கள் கண்டிப்பாக அறிந்துகொள்ள வேண்டும்" என்று சூத்திரங்கள் கூறுகின்றன. மகா கஸ்யபா மட்டுமே தனது சுய இயல்பை அறிந்து கொண்டார். "ஒரு வடிவத்தை கொண்டுள்ள எல்லாமுமே மாயைதான்" என்று சூத்திரங்கள் கூறுகின்றன. "நீங்கள் எங்கு இருக்கிறீர்களோ அங்கேயே ஒரு புத்தர் இருக்கிறார்" என்றும்கூட இந்த சூத்திரங்கள் கூறுகின்றன. உங்களது மனம்தான் புத்தர். ஒரு புத்தரை வழிபடுவதற்கு வேறு ஒரு புத்தரை பயன்படுத்தாதீர்கள்.

ஒரு புத்தரோ அல்லது போதி சத்வரோ திடீரென்று உங்கள் முன்பு தோன்றினாலும்கூட, அங்கு மரியாதை செலுத்த வேண்டிய அவசியம் கிடையாது. நமது மனம் வெற்றிடமாக உள்ளது மேலும் அப்படிப்பட்ட எந்த உருவத்தையும் அது தனக்குள் வைத்திருக்க

வில்லை. தோற்றங்களைப் பிடித்துக் கொண்டிருப்பவர்கள் சாத்தான்கள். அவர்கள் பாதைக்கு வெளியே இருந்து விடுகிறார்கள். மனதினால் பிறந்த மாயைகளை ஏன் வழிபடுகிறீர்கள்? அதை வழிபடுபவர்கள் ஒன்றும் அறியாதவர்கள். வழிபடுவதன்மூலம் நீங்கள் சாத்தானின் கவர்ச்சி ஆற்றலின் கீழ் விழுந்து விடுகிறீர்கள். நான் இதைக் குறிப்பிட்டு சொல்கிறேன். ஏனெனில் இது குறித்து உங்களுக்கு விழிப்புணர்வு இல்லாததால் நான் பயப்படுகிறேன். ஒரு புத்தரின் அடிப்படை இயல்பிற்கு இப்படிப்பட்ட எந்த ஓர் உருவமும் கிடையாது. வழக்கத்திற்கு மாறாக ஏதாவது தோன்றினாலும்கூட இதை உங்கள் மனதில் வைத்திருங்கள். அதை ஆரத் தழுவாதீர்கள். மேலும் அதைக் கண்டு பயப்படாதீர்கள். மேலும உங்களது மனமானது அடிப்படையில் தூய்மையானது என்பதை சந்தேகிக்காதீர்கள். இப்படிப்பட்ட எந்த உருவத்திற்கும் எங்கு இடம் இருக்க முடியும்? மேலும் ஆவிகள், பேய்கள் அல்லது தெய்விக ஆன்மாக்களின் தோற்றம் குறித்தும் கூட மரியாதையோ அல்லது பயமோ கொள்ளாதீர்கள்.

அடிப்படையில் உங்களது மனம் வெறுமையானது. எல்லாத் தோற்றங்களும் மாயைகள். தோற்றங்களைப் பிடித்துக்கொண்டு இருக்காதீர்கள்.

கல்வி அறிவு மிக்கவர்கள், மெத்தப் படித்தவர்கள், அறிவு ஜீவிகள், பிராமணர்கள், பண்டிதர்கள் ஆகியவர்களுக்கு எதிராக கௌதம புத்தரும் மகாவீரரும் கிளர்ந்து எழுந்தது விநோதமான ஒரே நேரத்தில் நிகழ்ந்த சம்பவங்களில் ஒன்றாகும். இதற்கான எளிய காரணம் என்னவென்றால் நீங்கள் அறிவுஜீவிகளாக இருப்பதன் மூலம் உங்களது அறியாமையை மூடி மறைத்து விடுகிறீர்கள். அறியாமையானது உங்களது உயிர் உணர்வில் இருந்து வெளியேற்றப்படவில்லை.

இது ஓர் இருண்ட இரவில் உங்களது வீட்டில் ஒரு விளக்கையும் கூட நீங்கள் வைத்திராமல் இருப்பதைப் போன்றதாகும். வெளிச்சத்தைப் பற்றி எவ்வளவு அதிகமான தகவல்களை எல்லாம் நீங்கள் சேர்த்து வைத்திருக்கலாம். ஆனால் வெளிச்சம் பற்றிய தகவல் உங்களது வீட்டிற்கு வெளிச்சத்தைக் கொண்டு

வந்துவிடாது. வீடு இருட்டாகத்தான் இருக்கும். ஆனால் ஒரே ஒரு விஷயம் மட்டும் சாத்தியப்படும். உங்களது தகவல்கள் உங்களுக்குள் ஒரு மாயையை உருவாக்கி விடும். வெளிச்சம் பற்றிய தகவலால் நீங்கள் மூழ்கி இருக்கும்போது நீங்கள் இருட்டைப் பற்றி மறந்து விடலாம். ஆனால் அங்குதான் இருக்கிறது; நீங்கள் அதை மறந்து விட்டீர்களா அல்லது இல்லையா என்பது எந்த ஒரு வித்தியாசத்தையும் ஏற்படுத்தாது. உண்மையில் இருள் அங்கு உள்ளது என்பதை அறிந்துகொள்வது நல்லது. மேலும் அந்த இருட்டை அழிப்பதற்கும் வெளிச்சத்தை உருவாக்குவதற்கும் ஏதாவது செய்யப்பட வேண்டும். வெளிச்சத்தைப் பற்றி அறிந்து வைத்திருப்பது எதற்கும் உதவாது. உண்மையான வெளிச்சம் தேவை. ஆனால் விநோதமாக நடந்த நிகழ்வு என்னவெனில் கௌதம புத்தர் மற்றும் மகாவீரர் ஆகிய இருவரையும் பிராமண அறிவு ஜீவிகள் சூழ்ந்திருந்தனர். மேலும் அவர்கள் இருவரும் அவர்கள் வாழ்நாள் முழுவதும் கூறியவை எல்லாம் அவர்கள் எந்த மக்களுக்கு எதிராக இருந்தார்களோ அதே மக்களால் ஒன்று திரட்டப்பட்டது.

மகாவீரரிடம் பதினோரு நெருங்கிய சீடர்கள் இருந்தனர். அவர்கள் அனைவரும் பிராமண அறிவுஜீவிகள், மெத்தப் படித்தவர்கள், மாபெரும் அறிவாளிகள். ஆனால் அவர்களின் அறியாமையானது வேறு எல்லாரையும் போலவே இருந்தது. அறியாமையானது தன்னை அறிவின் மூலம் அலங்கரித்துக் கொள்ள முடியும். ஆனால் அது மறைக்க மட்டுமே செய்கிறது. அது அறியாமையை அழிப்பது இல்லை. ஒருவர் தனது சொந்த ஒளியை, தனது சொந்த உயிர் உணர்வை, தனது தன் இயல்பை தேடிக் கண்டுபிடிக்க வேண்டும். ஒருவர் தனது சொந்த உயிர் உணர்வை கண்டுபிடிக்கின்ற அந்த நொடிப் பொழுதிலேயே எல்லா இருளும் மறைந்து போக ஆரம்பிக்கிறது. ஏனெனில் உங்களது உயிர் உணர்வின் மையத்தில் தூய்மையான ஒளியைத் தவிர வேறு எதுவும் இல்லை. ஆனால் இதை நீங்கள் கண்டுபிடிக்க வேண்டும்.

கல்வி அறிவில் ஆர்வம் உள்ள அல்லது புனித நூல்களில் ஆர்வம் உள்ள அல்லது ஏனைய ஞானிகளிடம் இருந்து கற்றுக்கொள்ள ஆர்வம் உள்ள மக்கள் அனைவரும் தங்களின்

மெய்ஞ்ஞானத்தின் ஆரம்ப இடத்தை, தங்களின் சுய ஒளியினை அடைவதற்கு எதுவுமே செய்வதில்லை.

இதேநிலைதான் கௌதம புத்தருக்கும் ஏற்பட்டது. அவரது நெருங்கிய சீடர்கள் பிராமணர்களாக இருந்தனர். எனவே அவர்களது குறிப்புகளில் மிகப்பெரிய தவறான புரிதல் எழுந்து விட்டது. அவர்கள் கௌதம புத்தரைப் பற்றி என்ன எழுதியுள்ளார் களோ அது அவர்களின் சொந்த படிப்பினால், சொந்த அறிவினால் கலப்படம் செய்யப்பட்டு, மாசுபடுத்தப்பட்டுள்ளது. கௌதம புத்தரின் மௌன நிலையில் கொடுக்கப்பட்ட செய்திகளினோடு அவர்களின் மனமும் உள்ளே வந்துவிட்டது. ஒரு மனதில் இருந்து மற்றொரு மனதிற்கு என்பதாக இல்லாமல், இதயத்தில் இருந்து மற்றோர் இதயத்திற்கு உயிர் உணவில் இருந்து அடுத்த உயிர் உணர்விற்கு கௌதம புத்தரின் செய்திகள் ஒப்படைக்கப்பட்டன.

இதே துரதிருஷ்டமான சூழ்நிலை போதி தருமருக்கும் ஏற்பட்டு விட்டது. இது இன்னும் மிகப்பெரிய அளவில் நடந்துவிட்டது. ஏனெனில் போதி தருமர் இந்தியாவில் பிறந்தார். ஆனால் சீனாவில் போதித்தார். அவரைச் சுற்றி இருந்த மக்கள், அவர் மீது ஆர்வம் கொண்ட மக்கள், அனைவரும் அறிவாற்றலில் ஆர்வம் உள்ளவர்களாக இருந்தனர். வாழ்க்கையின் எல்லா புதிர்களையும் திறக்கின்ற தங்க திறவுகோல் அவரிடம் நிச்சயமாக இருந்தது. அவரது ஒவ்வொரு வார்த்தையும் உண்மையான அனுபவத்தில் இருந்து வந்தது. அவர் ஆயிரக்கணக்கான துறவிகளை கவர்ந்து இருந்தார். ஆனால் அதில் இருந்த பிரச்சினை என்னவென்றால் அத்தகைய மக்கள் அவரது வார்த்தைகளை மனப்பாடம் செய்துவிட்டு போதி தருமரின் இருப்பு நிலையில் இருந்த விஷயங்களை மறந்து விட்டனர். மேலும் அப்படிப்பட்டவர்கள் தான் இந்த சூத்திரங்களையும் எழுதி உள்ளனர். எனவே இயற்கையாகவே இதில் மிகப்பெரிய தவறுகள் உள்ளன. ஆனால் அவை கற்கள் போன்று இருந்தாலும்கூட அவற்றுக்கிடையே ஒருசில வைரங்களும் இருக்கின்றன. மேலும் நாம் அந்த வைரங்களைக் கண்டுகொள்வோம்.

போதி தருமர் அனுபவித்த அதே விதத்தில் அவர்களால் அனுபவிக்க முடியவில்லை என்றாலும்கூட அவர்கள் நிச்சயமாக

அவரது கவர்ந்திழுக்கும் தோற்றத்தினால் மனம் கவரப்பட்டார்கள். மெழுகுவர்த்தி வெளிச்சத்தை நோக்கி வருகின்ற விட்டில் பூச்சிகள் போல அவரது காலடியில் அமர்வதற்காக, சீனாவின் தொலைதூர மாகாணங்களில் இருந்து அவர்கள் வந்தனர். ஆனால் அதுமட்டுமே போதாது. அது ஒரு நல்ல ஆரம்பம். ஆனால் அதுவே பயணத்தின் முடிவு அல்ல. அப்படி வந்தவர்களால் தங்களது சொந்த மனதினை மறக்க முடியவில்லை. அவர் பேசுவதைக் கேட்டுக்கொண்டு இருக்கும்போதும் கூட அவர்கள் தங்களுக்குள் தங்களது சொந்த எண்ணங்களை நினைத்துக் கொண்டு இருந்தனர். போதி தருமரின் கருத்தானது தங்களது கொள்கைகளோடு ஒத்துப்போகிறதா அல்லது இல்லையா என்று இன்னமும் ஒப்பிட்டுப் பார்த்துக்கொண்டு இருந்தனர். அவர்கள் மனிதர்களுக்கு கருத்துகளை திரித்து எடுத்துக்கொண்டும், அவரது வார்த்தைகளுக்கு புதிய அர்த்தங்களையும், புதிய நிறங்களையும் கொடுத்து வந்தனர்.

மேலும் போதி தருமர் அவராக எதையும் எழுதவில்லை. எழுதப்பட்ட வார்த்தை உயிரற்ற வார்த்தை என்கிற எளிய காரணத் திற்காக எந்த ஒரு மெய்ஞ்ஞானியும் எதையும் எழுதுவதில்லை. பேசப்படுகின்ற வார்த்தையில் ஒரு கதகதப்பும், அழகும், குருவின் பிரசன்னமும் இருக்கிறது. எழுதப்படுகின்ற வார்த்தையில் இருந்து பேசப்படுகின்ற வார்த்தையானது முற்றிலும் வேறுபட்ட வகையைச் சேர்ந்ததாக இருக்கும். எழுதப்படுகின்ற வார்த்தை ஓர் உயிரற்ற பிணம் போன்றது; பேசப்படுகின்ற வார்த்தையானது உயிர்த் துடிப்புள்ளது. அது இன்னமும் சுவாசித்துக்கொண்டு இருக்கும். எழுதப்பட்ட வார்த்தைகளில் இல்லாத இதயத்துடிப்பு அதில் இருக்கும். எனவேதான் எந்த காலக்கட்டத்தை எடுத்துக் கொண் டாலும், எந்த ஒரு மெய்ஞ்ஞானியும் எதையும் எழுதவில்லை.

எனவே நீங்கள் மிகவும் விழிப்புடன் இருக்க வேண்டும். இந்த சூத்திரங்களை குறிப்பெடுத்து சேகரித்த சீடர்களின் மனமானது எந்த இடத்தில் குறுக்கிட்டு அளவுகடந்த அழகான ஒன்றினை எப்படி அழித்து விட்டன என்று நான் சுட்டிக் காட்டுவேன். போதி தருமர் கூறியதை மிகச்சரியாக அப்படியே அவர் குறிப்பிட முடியவில்லை என்றாலும்கூட இங்கும் அங்குமாக ஒருவேளை

தவறுதலாக உண்மையான வார்த்தைகளை அவர்கள் குறிப்பிட்டு இருக்கலாம்.

போதி தருமரால் பேசப்பட்ட ஒருசில வார்த்தைகளை கண்டு கொண்டு அவற்றுக்கு ஓர் இதயத்துடிப்பை மீண்டும் கொடுப்பது ஒரு மாபெரும் மகிழ்ச்சியாகும். எனது வியாக்கியானம் வெறுமனே ஒரு வியாக்கியானம் அல்ல; அது தவறான கைகளில் விழுந்துவிட்ட அந்த அழகான வார்த்தைகளுக்கு மீண்டும் ஓர் உயிரை ஓர் உயிர்த்தெழுதலைக் கொடுப்பதாகும். அந்த வார்த்தைகள், இப்படி பிணம் போல சிறையில் இருப்பதில் இருந்து, இப்படிப்பட்ட குழப்பமான நிலையில் இருந்து விடுவிக்கப்பட வேண்டும். இப்போது சூத்திரங்கள்.

மக்கள் மாயையில் இருக்கின்றனர் என்று புத்தர் கூறினார். இதனால்தான் அவர்கள் செயலாற்றும்போது முடிவில்லாத மறுபிறவி என்னும் ஆற்றில் விழுந்து விடுகின்றனர். மேலும் அதிலிருந்து வெளியே வருவதற்கு முயற்சி செய்யும்போது அவர்கள் இன்னும் அதிக ஆழத்தில் மட்டுமே மூழ்கி விடுகின்றனர். இவை எல்லாம் ஏனெனில் அவர்கள் தங்கள் இயல்பைப் பார்ப்பதில்லை. மக்கள் மாயையில் இல்லை என்றால் அதன்பின்னர் அவர்களுக்கு எதிரே உள்ள ஒன்றினைப் பற்றி அவர்கள் ஏன் கேட்க வேண்டும்? ஒருவர்கூட தங்களின் கைகள் மற்றும் கால்களின் அசைவைப் புரிந்துகொள்வதில்லை. புத்தர் தவறாக எடுத்துக்கொள்ளப்படவில்லை. மாயையில் இருக்கின்ற மக்கள் தாங்கள் யார் என்பதை அறிந்து கொள்ளவில்லை.

இந்த வார்த்தைகளை சேகரித்த மக்களிடமிருந்து எந்தவித மான குறுக்கீடும் இல்லாமல் இவை போதி தருமரின் உண்மையான வார்த்தைகள் என்பது புரிந்து கொள்ளவேண்டியது முதல் விஷய மாகும்.

இந்த சூத்திரங்களில் மக்கள் மாயையில் இருப்பதாக வலியுறுத்திக் கூறப்படுகிறது. அவர்கள் மாயை என்ன? அவர்கள் தாங்கள் யார் என்பதை அறியாமல் இருப்பதுதான் மாயை. தாங்கள் யார் என்று தெரியாத காரணத்தினால் அவர்கள் தங்களைச் சுற்றிலும் ஒரு பொய்யான தனி மனிதப் பண்பை உருவாக்கி

உள்ளனர். ஏனெனில் நீங்கள் யார் என்பதை அறியாமல் வாழ்வது என்பது சாத்தியப்படாத ஒன்றாகும். நிச்சயமாக நீங்கள் பைத்தியமாகி விடுவீர்கள். ஒரு நொடிப்பொழுது வெறுமனே சிந்தித்துப் பாருங்கள். நீங்கள் யார் என்பதை நீங்கள் அறிந்திருக்கவில்லை என்னும்போது அது ஓர் அதிர்ச்சியானதாக உள்ளது. அடை யாளத்தை கலைத்து விடுகின்ற ஒன்றாக உள்ளது. நீங்கள் யார் என்று அறிந்துகொள்ளாமல் உங்களால் உயிர் வாழ முடியாது. எனவே உங்களால் அறிந்து கொள்ள முடியவில்லை என்றால் அதன்பின்னர் நீங்கள் ஏதாவது ஒன்றை உருவாக்க வேண்டியதிருக்கும். அது ஒரு பொய்யான பதிலியாக இருக்கும். ஆனால் அது பொய்யானதாக இருந்தாலும்கூட நீங்கள் உங்களை அறியாமல் இருக்கின்ற அந்த பைத்தியம் பிடித்த சூழலில் இருந்து அது உங்களை வெளியே கொண்டு வந்து விடும்.

யாரிடமாவது நீங்கள் யார் என்று கேளுங்கள், உடனே அவர் தான் ஒரு மருத்துவர் என்றோ, ஒரு பொறியாளர் என்றோ, ஒரு பேராசிரியர் என்றோ, ஒரு கிறிஸ்தவர் என்றோ, ஓர் இந்து அல்லது பௌத்தர் என்றோ கூறுவார். இவை எல்லாம் பொய்யான அடையாளங்கள். இவை எல்லாம் நீங்கள் யார் என்று அறிந்து கொள்ளாத அந்த பைத்தியக்கார சூழ்நிலையை மறப்பதற்காக உங்களால் உருவாக்கப்படுகின்ற பொய்யான அடுக்குகள். நீங்கள் ஆயிரத்தோரு விஷயங்களில் உங்களை ஐக்கியப்படுத்திக் கொண்டு இருக்கிறீர்கள். நீங்கள் ஒரு கணவனாகவோ அல்லது மனைவியாகவோ இருக்கிறீர்கள். ஆனால் இவை உங்களது இயல்பு அல்ல. நீங்கள் பிறக்கும்போது ஒரு தலைவராகப் பிறப்பதில்லை. மேலும் நீங்கள் பிறக்கும்போது ஒரு பொறியாள ராகவோ அல்லது ஒரு மருத்துவராகவோ அல்லது ஒரு பேராசிரியராகவோ பிறப்பது இல்லை. இவை எல்லாம் உங்களுக்குள் தொடர்ந்து இருக்கின்ற வெறுமையை நீங்கள் உணராமல் இருப்பதறகாக உங்களாலும், இந்த சமூகத்தினாலும் உருவாக்கப்பட்டவை. இப்படி ஏதாவது ஒன்றை நீங்கள் உருவாக்க வில்லை எனில் அந்த வெறுமையானது மிகவும் ஆபத்தானது. மேலும் உங்களுக்குள் புத்தி சுவாதீனம் இல்லாத நிலையை உருவாக்கிவிடும்.

மேலும் மக்கள் திருப்தி அடைதலும் கிடையாது. அவர்கள் தங்களின் இந்த பொய்யான அடுக்கை மேலும் மேலும் அதிக தடிமன் ஆனதாக ஆக்கிக்கொண்டே செல்கின்றனர். அவர்கள் அரசியல் கட்சிகளின் அங்கத்தினர்களாக ஆகின்றனர். மதங்களில் அங்கத்தினர்களாக ஆகிவிடுகின்றனர். ரோட்டரி கிளப் மற்றும் லயன்ஸ் கிளப் ஆகியவற்றின் அங்கத்தினர்களாக ஆகிவிடு கின்றனர். தாங்கள் இன்னார் என்பது குறித்து ஏதாவது சில கருத்துகளை உருவாக்கிக்கொண்டே செல்கின்றனர். உங்களை சாதாரண புத்தி சுவாதீனத்துடன் வைத்திருப்பதற்கு இவை எல்லாம் தேவையானவை. நீங்கள் உங்களைச் சுற்றி அணிந்துள்ள இந்த ஆடைகள் எல்லாம் இல்லாத நிலையில், முழு நிர்வாண நிலையில், நீங்கள் உங்களை எதிர்கொள்ள வேண்டும்.

இதுதான் மாயை, ஒவ்வொருவரும் தனது சுய இயல்பில் இருந்து வராத ஒரு வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருக்கிறோம். இது உண்மையான உயிராற்றல் என்பது போன்று இல்லாமல் கிட்டத்தட்ட ஒருவிதமான நடிப்பு போன்று இருக்கிறது. வெறுமனே உங்களைக் கவனித்து பாருங்கள். அப்போது மக்கள் மாயையில் இருக்கின்றனர் என்கின்ற மிகவும் சிறப்பான, அர்த்தம் நிறைந்த இந்த கூற்றில் உள்ள மாபெரும் அகப்பார்வையை நீங்கள் கண்டு கொள்வீர்கள். அதனால்தான் அவர்களின் செயல்கள் எப்போதும் தவறான திசைகளில் செல்கிறது. அதனால்தான் அவர்கள் துன்பம், துயரம், வேதனை, கவலை நிறைந்த ஒரு வாழ்க்கையை வாழ்கின்றனர். இப்படிப்பட்ட மக்கள் இருளில் வீழ்ந்துகொண்டு இருக்கிறார்கள் என்று போதி தருமர் கூறும்போது இந்த மக்கள் மேலும் மேலும் மாயை நிறைந்தவர்களாக ஆகிக்கொண்டு இருக்கின்றனர் என்றுதான் அவர் கூறுகிறார். அவர்கள் தங்களின் மாயை என்னும் அடுக்கை எந்த அளவுக்கு கடினமான ஒன்றாக ஆக்க முடியுமோ அந்த அளவுக்கு கடினமானதாக ஆக்கிக் கொண்டால் மட்டுமே அவர்கள் தங்களின் உண்மை நிலை குறித்து விழிப்புணர்வு இல்லாமல் இருக்க முடியும். மேலும் அவர்களின் பொய்யான இந்த அடுக்கினால் அவர்களின் அன்பு பொய் யானதாக ஆகிறது. அவர்களின் நட்பு பொய்யானதாக ஆகிறது.

அவர்களின் ஒட்டுமொத்த வாழ்க்கையுமே வெறும் ஒரு நாடகம் போன்று ஆகிவிடுகிறது.

அவர்கள் எல்லா காரியங்களையும் செய்கின்றனர். ஆனால் அவர்களிடம் இருந்து தன்னிச்சையாக வருவதில்லை. அது அவர் களின் உயிர் உணர்வில் இருந்து வருவதில்லை. அதனால்தான் அவர்கள் எப்போதும் ஏனோதானோ என்று இருக்கின்றனர். அவர்கள் எப்போதும் தயக்கத்துடன் இருக்கின்றனர். அவர்கள் எப்போதும் எது சரி; எது தவறு என்று கேட்டுக்கொண்டே இருக் கின்றனர். அவர்கள் எப்போதும் எல்லாவற்றையும் பற்றி கேட்டுக்கொண்டே இருக்கின்றனர்.

தன்னை அறிந்த ஒரு மனிதனிடம் கேட்பதற்கு கேள்விகள் இருக்காது. தன்னை அறிந்த ஒரு மனிதன் என்ன செய்யப்பட வேண்டும் என்பதை மிகச்சரியாக அறிவான். மேலும் அவன் ஏதாவது ஒன்றைத் தேர்வு செய்ய வேண்டும் என்கிற கேள்விக்கே இடம் இருக்காது. அவன் எது செய்தாலும் அது சரியாகத்தான் இருக்கும். உங்களது சுய இயல்பில் இருந்து சரியானது மட்டுமே எழுகிறது. ஓர் உண்மையான ரோஜா செடியில் இருந்து ஓர் உண்மையான ரோஜா மலர் வருவதுபோல வருகிறது. இது ஓர் இயற்கையான விஷயம்.

நான் சில மாதங்கள் ராய்ப்பூரில் தங்குவது வழக்கம். எங்களது வீட்டிற்கு அருகில் ஓய்வு பெற்ற கணித பேராசிரியர் ஒருவர் வசித்தார். எனது வீட்டின் ஜன்னல் வழியாக நான் அவரைப் பார்ப்பது வழக்கம். அழகான பூக்கள் நிறைந்த ஒரு தொட்டியை அவர் வைத்திருந்தார். மேலும் அந்தத் தொட்டிக்கு தண்ணீர் ஊற்றுவதற்கு தினமும் தண்ணீர் கொண்டு வருவது வழக்கம். முதல் நாளில் இதைப் பார்த்த எனக்கு எந்த பிரச்சினையும் எழவில்லை. ஆனால் நாட்கள் போகப்போக அந்த பூக்கள் எல்லாம் அப்படியே இருப்பதைக் கண்டு நான் ஆச்சரியமடைந்தேன். அவற்றின் இதழ்கள் உதிர்ந்து விழுவதில்லை. இயற்கையான விதத்தில் அந்த இதழ்கள் மறைந்து போவது இல்லை. புதிய பூக்களின் வருகைக்காக பழைய பூக்கள் உதிர்ந்து போவது இல்லை. இறுதியாக என்னால் எனது ஆர்வத்தை அடக்க முடியவில்லை. நான்அவரது ஜன்ன

லுக்கு அருகில் சென்றேன். அப்போது நான் ஆச்சரியமடைந்தேன். அவை உண்மையான பூக்கள் அல்ல. அவை செயற்கையான பிளாஸ்டிக் பூக்கள். ஆனால் அவை உண்மையான பூக்கள்தான் என்று அக்கம்பக்கத்தினருக்கும் ஒரு மாயையை உருவாக்குவதற்கு அவர் தினமும் அவற்றிற்கு தண்ணீர் ஊற்றி வந்தார். நான் அவரது வீட்டின் கதவைத் தட்டி அந்த வயதான மனிதரிடம், "நீங்கள் என்ன செய்கிறீர்கள்? இந்த பூக்களுக்கு தண்ணீர் விடவேண்டிய அவசியம் இல்லையே" என்று கேட்டேன்.

அதற்கு அவர், "அது எனக்கும்கூட தெரியும். ஆனால் அதைப்பற்றி அக்கம்பக்கத்தில் இருப்பவர்களுக்குத் தெரியாதே. எனவே அந்த தோற்றத்தை உருவாக்கவே நான் தினமும் தண்ணீர் ஊற்றி வந்தேன்" என்று கூறினார்.

உங்களது பொய்யான தனிமனிதப் பண்பானது வெறுமனே ஒரு பிளாஸ்டிக் மலர் போன்றது. அது உங்களுக்கு நிறைவைக் கொடுக்காது. அது உங்களுக்கு மெய்ஞ்ஞானத்தைக் கொடுக்காது. அது துன்பத்திலிருந்து உங்களுக்கு விடுதலை கொடுக்காது.

உங்களது வேதனையில் இருந்து பரவச நிலை அனுபவத்தில் அது உங்களை எடுத்துச்செல்ல முடியாது. அது உங்களை இருளில் இருந்து ஒளிக்கும், மரணத்தில் இருந்து மரணமில்லாத நிலைக்கும் எடுத்துச்செல்ல முடியாது. இதுதான் மாயை.

*ஆழ்ந்து அறிவதற்கு கடினமான ஏதோ ஒன்று புத்தரால் அறியப்பட்டுள்ளது மற்றும் வேறு யாரும் அதை அறியவில்லை.*

'புத்தர்' என்பது எந்த ஒரு தனிப்பட்ட மனிதரின் பெயரும் அல்ல என்பதை நினைவில் கொள்ளுங்கள். புத்தர் என்றால் வெறுமனே விழிப்படைந்த ஒருவர் என்றுதான் அர்த்தம். விழிப்படைந்தவர் மெய்ஞ்ஞானம் பெற்றவர் யாராக இருந்தாலும் அவர் ஒரு புத்தர்தான். நீங்களும்கூட ஒரு புத்தர்தான். நீங்கள் அதை உணராமல் இருப்பது மட்டுமே அதில் உள்ள வேறுபாடாகும். நீங்கள் ஒருபோதும் உங்களுக்குள் எட்டிப் பார்த்து அங்கிருக்கின்ற புத்தரைக் கண்டுகொண்டதில்லை. உங்கள் உயிரின் ஆரம்ப இடம் என்பது மெய்ஞ்ஞானத்தை தவிர வேறு எதுவும் அல்ல.

ஆழ்ந்து அறிவதற்குக் கடினமான ஏதோ ஒன்று புத்தரால் அறியப்பட்டுள்ளது மற்றும் வேறு யாரும் அதை அறியவில்லை என்று போதி தருமர் கூறுகிறார். நீங்கள் உங்களுக்குள் நுழைந்து சென்று உங்களது உண்மையான தனிமனிதத் தன்மையை கண்டுகொள்ளும் போது மட்டுமே இதுவரை நீங்கள் மாயையில் இருந்ததை நீங்கள் அறிந்து கொள்வீர்கள். அதன்பிறகு மட்டுமே அங்கு ஒப்பிட்டுப் பார்ப்பது இருக்கமுடியும்.

உண்மையான ரோஜா மலர்களை ஒருபோதும் பார்த்திராத ஒரு மனிதன், தனது வாழ்நாள் முழுவதும் செயற்கையான பிளாஸ்டிக் மலர்களோடு கழித்து விடுவான். மேலும் அவை தான் உண்மையான ரோஜா மலர்கள் என்றும் நம்பிக்கொண்டே இருப் பான். அவனை விழிப்புறச் செய்வதற்கு, நீங்கள் உண்மையான ரோஜாக்களை கொண்டு வந்து அவனிடம் கொடுத்து அதை ஒப்பிட்டுப் பார்த்து அதில் உள்ள வேறுபாட்டை அவன் உணர்ந்து கொள்ளும்படி செய்ய வேண்டும். பிளாஸ்டிக் மலர்கள் உயிரற்றவை. அவற்றுக்கு நறுமணம் கிடையாது. அவை வளர்த்து எடுக்கப்பட்டவை அல்ல; அவை உயிரற்றுப் போவதும் இல்லை.

உண்மையான மலர் அழிந்து போகக்கூடியது. காலையில் அது இந்த உலகிற்கு வருகிறது. மழையில், காற்றில், சூரிய ஒளியில் அது நடனமாடுகிறது. மேலும் மாலையில் அது இல்லாமல் போய்விடுகிறது. அறியாத ஒன்றில் இருந்து அது வருகிறது. மேலும் அந்த அறியாத ஒன்றிற்கும் திரும்பவும் நகர்ந்து சென்று விடுகிறது. நமது மனித வாழ்க்கையும் அதேபோன்ற சூழ்நிலையில்தான் இருக்கிறது.

நாம் அறியாத ஒன்றில் இருந்து வருகிறோம். மேலும் நாம் அறியாத ஒன்றிற்குள் நகர்ந்து போய்க்கொண்டே இருக்கிறோம். நாம் மீண்டும் வருவோம். ஆயிரக்கணக்கான தடவை நாம் இங்கு இருந்திருக்கிறோம். மேலும் ஆயிரக்கணக்கான முறை நாம் மீண்டும் இங்கு இருப்போம். நமது முக்கிய உயிர் உணர்வு மரணமடையாதது. ஆனால் நமது உடல், நம்மைச் சுற்றி உள்ளது அழிந்து விடக்கூடியது. நாம் இருக்கின்ற இந்த நிலை, நமது வீடுகள், இந்த உடல், இந்த மனம் ஆகியவை பருப்பொருள்களால்

உண்டாக்கப்பட்டுள்ளது. அந்தப் பொருள்கள் களைப்படைந்து விடும். அவற்றுக்கு வயதாகி விடும். அவை மரணமடைந்து விடும். ஆனால் உங்களது தன்னுணர்வு உங்களது உடல் மற்றும் மனதிற்கு அப்பால் உள்ள ஒன்றாகும். எல்லாவற்றிற்கும் அப்பால் உள்ள ஒன்றாகும். போதி தருமர் இதற்கு மனம் அற்ற நிலை என்கிற வார்த்தையைப் பயன்படுத்துகிறார். கௌதம புத்தரும்கூட மனம் அற்ற நிலை என்பதைத்தான் பயன்படுத்துகிறார். இந்த மனம் அற்ற நிலைதான் முடிவில்லாத ஒன்றாகும். அது தன்னை வெளிப்படுத்து வற்காக வருகிறது. மீண்டும் அறியாத ஒன்றினுள் அது திரும்பிச் சென்று விடுகிறது.

ஒருவர் மெய்ஞ்ஞானம் அடைகின்ற வரையில், இப்படி அறியாத ஒன்றில் இருந்து அறிந்த ஒன்றிற்கும் மேலும் அறிந்த ஒன்றில் இருந்து அறியாத ஒன்றிற்கும் நகர்ந்து செல்தல் முடிவில்லாத காலம் வரையில் தொடர்கிறது. மெய்ஞ்ஞானம் அடைந்த பிறகு அது தான் அவரது கடைசி வாழ்க்கையாக இருக்கிறது. அதன்பின்னர் இந்த மலர் மீண்டும் வருவதில்லை. தன்னைப் பற்றி உணர்ந்து கொண்ட இந்த மலர் மீண்டும் ஒரு வாழ்க்கைக்கு வரவேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில் வாழ்க்கை என்பது நாம் கற்றுக்கொள்கின்ற ஒரு பள்ளிக்கூடமே தவிர அது வேறு எதுவும் அல்ல. அவர் தனது பாடங்களைக் கற்றுக்கொண்டு விட்டார். இப்போது அவர் மாயைக்கு அப்பால் கடந்து சென்றுவிட்டார். அவர் முதல்முறையாக அறிந்த ஒன்றில் இருந்து அறியாத ஒன்றிற்குள் நகர்ந்து சென்று விடமாட்டார். ஆனால் அறிய முடியாத ஒன்றிற்குள் நகர்ந்து சென்று விடுவார்.

நீங்கள் அறிந்த ஒன்றில் இருந்து அறியாத ஒன்றிற்கு நகர்ந்து சென்றால் நீங்கள் மீண்டும் பிறப்பீர்கள். ஆனால் நீங்கள் அறிந்த ஒன்றில் இன்று அறிய முடியாத ஒன்றினுள், பிரபஞ்சத்தின் புதிருக்குள் நகர்ந்து சென்று விடும்போது நீங்கள் இந்த பிரபஞ்சத் தோடு ஒன்றாகி விடுவீர்கள். திரும்பவும் வருவது இல்லை.

ஞானவான்கள் மட்டுமே இந்த மனம் அற்ற நிலையை, தர்ம இயல்பு என்று அழைக்கப்படுகின்ற இந்த மனம் அற்ற நிலையை, முக்தி என்று அழைக்கப்படுகின்ற இந்த மனம் அற்ற நிலையை

அறிந்து கொள்கிறார்கள். இங்கு. இதைக் குறிப்பெடுத்த அந்த மனிதர் தவற விட்டுவிட்டார். மனம் அற்ற நிலை என்று கூறுவதற்குப் பதிலாக அவர் மனம் என்று கூறுகிறார். மனம் என்பது உங்களது இறுதியான உண்மை அல்ல. அவர் போதி தருமரை புரிந்துகொள்ளவில்லை மேலும் இப்படிப்பட்ட ஒரு மெய்ஞ்ஞானி கூறியதை திரித்துக் கூறுவது மிகப்பெரிய பாவச் செயல். ஏனெனில் பல நூற்றாண்டுகளுக்கு மக்கள் குழப்பத்தில் இருப்பார்கள்.

வாழ்வோ அல்லது சாவோ இந்த மனம் அற்ற நிலையில் கட்டுப்படுத்த முடியாது. எதனாலும் முடியாது. இது தடுக்கமுடியாத ததாகதா என்றும், புரிந்துகொள்ள முடியாதது. புனித ஆன்மா, அழிவற்றது மற்றும் மாபெரும் ஞானி என்றும்கூட அழைக்கப் படுகிறது.

மேலும் இந்த குறிப்புகளை எடுத்த அந்த மனிதர் மனம் என்புதை ததாகதா என்று அழைக்க முடியாது என்கிற கருத்தை கண்டு கொள்வதற்கு போதுமான புத்திசாலித்தனத்தையும் கூட பெறாதவராக இருக்கிறார். மனம் என்பதை புரிந்துகொள்ள முடி யாதது என்று அழைக்க முடியாது. ம்னம் என்பது புனித ஆன்மா, அழிவற்றது, மாபெரும் ஞானி என்றும்கூட அழைக்க முடியாது.

மனம் என்பது மிகவும் சாதாரணமானது, உலக வாழ்க்கை சார்ந்தது. அது தினப்படியான காரியங்களுக்குப் பயனுடையது; அதன் செயல்பாடு புற உலகில்தான் இருக்கிறது. அக உலகைப் பொறுத்தமட்டில் அது முற்றிலும் பயனற்றது. தங்களின் அக உயிர் உணர்வை அறிந்துகொள்ள விரும்புகிறார்கள். மனதைத் தாண்டி அப்பால் செல்ல வேண்டும். அவர்கள் தங்களின் மனதை பின்னால் விட்டுச் செல்ல வேண்டும்.

இதுதான் தியானம் என்பதன் ஒட்டுமொத்த செயல்பாடாகும்.

ததாகதா என்கிற ஒரு வார்த்தை புரிந்துகொள்ளப்பட வேண்டும். இதை மொழிபெயர்ப்பதற்கு அந்த மொழிபெயர்ப் பாளருக்கு எந்த ஒரு சரியான வார்த்தையும் கிடைக்கவில்லை; ஒருவேளை அவருக்கு அந்த வார்த்தையின் அர்த்தம்கூட

தெரியாமல் இருந்திருக்கலாம். ஏனெனில் மேலை நாட்டு மொழிகளில் இதற்கு இணையான வார்த்தை இல்லை. ததாகதா என்பது தனிப்பட்ட புத்தமத வார்த்தை. கௌதம புத்தர் ததாகதா என்னும் தத்துவத்தை போதித்து வந்தார். மேலும் ததாகதா என்பது அடிப்படைப் பண்பு என்கிற வார்த்தைக்கு கொஞ்சம் நெருக்கத்தில் வருகின்ற வார்த்தையாகும். என்ன நடந்தாலும் அது அந்த விஷயங்களின் அடிப்படை பண்பு அல்லது இயல்பாகும் என்று புத்தர் கூறுகிறார். என்ன நடந்தாலும் அதனால் நீங்கள் சந்தோஷப்பட வேண்டிய அவசியம் இல்லை. நீங்கள் துக்கப்பட வேண்டிய அவசியமும் இல்லை. நீங்கள் அதனால் பாதிக்கப்பட வேண்டிய அவசியமே கிடையாது. பிறப்பு நிகழ்கிறது. இறப்பும் நிகழ்கிறது. ஆனால் நீங்கள் உங்களது அடிப்படை இயல்புடன் இருந்தாக வேண்டும். வாழ்க்கை என்பது இப்படித்தான் செயலாற்றும் என்பதை நினைவில் கொள்ள வேண்டும். இதுதான் வாழ்க்கையின் வழியாகும்.

அதற்கு எதிராக நீங்கள் எதையும் செய்ய முடியாது.

நதிகள் கடலை நோக்கிச் செல்வது அவற்றின் அடிப்படை இயல்பு. நெருப்பு உஷ்ணமாக இருப்பது அதன் அடிப்படை பண்பு. அப்படித்தான் நமது தன் இயல்பும் இருக்கிறது.

யாரோ வந்து கௌதம புத்தரை அவமானப்படுத்துகிறார்கள், திட்டுகிறார்கள். அப்போது அவர் அதை அமைதியாக கேட்டுக்கொண்டு நிற்கிறார். அந்த மனிதர் போன பின்னர் புத்தரின் சீடர்கள் புத்தரிடம், "நீங்கள் ஏன் அமைதியாக இருந்தீர்கள்?" என்று கேட்டபோது, அதற்கு புத்தர், அது அந்தமனிதனின் அடிப்படை இயல்பு. அதுதான் அவன் நடந்து கொள்கின்ற விதம். அமைதியாக இருப்பது என்னுடைய அடிப்படை இயல்பு. அந்த மனிதனை விடவும் நான் புனிதமானவன் அல்லன். அந்த மனிதனை விடவும் நான் உயர்ந்தவன் அல்லன். எங்களது அடிப்படை பண்புகளும், வெறுமனே வேறுபட்டு இருப்பதால் எங்களது தன் இயல்புகளும் வேறுபட்டு உள்ளன" என்று பதிலளித்தார்.

ததாகதா என்னும் வார்த்தை மிகவும் ஆழத்தன்மை கொண்டதாக இருக்கிறது. ததாகதா என்றால் என்ன என்பதைப் புரிந்துகொண்ட ஒரு மனிதன் எந்த ஒரு சூழ்நிலையிலும் கலக்கமடையாமல் இருக்கிறான். எதுவும் அவனை கலக்கமடையச் செய்ய முடியாது. அவன் கவலை அற்றவனாக ஆகிவிடுகிறான். மேலும் ததாகதர் என்றால் நொடிக்கு நொடி ததாகதாவில் வாழ்ந்து கொண்டிருக்கிற ஒருவர் என்று அர்த்தமாகும். எந்த மொழியிலும் இல்லாத அளவுக்கு ததாகத் என்கிற வார்த்தை மிகவும் அழகான வார்த்தைகளில் ஒன்றாகும். அடுத்த மனிதர்களின் இயல்பைப் பற்றி கவலைப்படாமல் தனது இயல்பின்படி வெறுமனே வாழ்கின்ற ஒரு மனிதர் என்று அதற்கு அர்த்தம்.

கௌதம புத்தர் இப்படி கூறுவது வழக்கம். "ஒருமுறை நான் ஒரு காட்டின் வழியாக போய்க் கொண்டிருந்தேன். அப்போது என்மீது ஒரு மரத்தின் கிளை விழுந்தது. இதைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்? அந்தக் கிளை என்னைக் காயப்படுத்தி விட்டதால் நான் அந்தக் கிளையை அடிக்க வேண்டுமா?" புத்தர் இப்படிக் கூறியதைக் கேட்ட அடுத்த மனிதர், "நீங்கள் மரக்கிளையை அடிக்க வேண்டுமா என்கிற கேள்வியே எழவில்லை. உங்களைக் காயப்படுத்த வேண்டும் என்பது அந்த மரக்கிளையின் ஆசை அல்ல. அதற்கு உங்கள் மீது விழவேண்டும் என்கிற ஆசையும் கிடையாது. நீங்கள் அந்த மரத்தின் கீழே வரும்போது அந்தக் கிளையானது உங்கள் மீது விழுந்தது வெறுமனே இயற்கையில் நடந்த ஒரு விபத்து" என்று பதிலளித்தார்.

அதைக்கேட்ட புத்தர், "அப்படியானால் யாராவது என்னை அவமானப்படுத்துவதும் கூட அதேபோன்றதுதான். அந்த மனிதன் கோபம் நிறைந்து இருக்கும்போது நான் வெறுமனே அங்கு இருக்கும்படி ஆகிவிட்டது. நான் அங்கு இல்லாமல் போயிருந் தால் அவன் வேறு யாருடனாவது கோபம் கொண்டிருப்பான். அது அவனது இயல்பு; அவன் தனது இயல்பை பின்பற்றி நடந்திருக் கிறான். நான் எனது இயல்பைப் பின்பற்றி நடந்து கொண்டேன்" என்று கூறினார்.

எனவே உங்களது இயல்பில் ஒத்திசைந்து நீங்கள் இருக்கும் போது நீங்கள் நிச்சயமாக கவலை இல்லாதவராக, யாரும் உங்களை ஊடுருவிச் செல்ல முடியாதவராக ஆகிவிடுகிறீர்கள். நீங்கள் உங்களது சுய இயல்பில் பளிங்குபோல் கெட்டிப்படுத்தப்பட்டு இருப்பதால் எதுவும் உங்களை கலக்கமடையச் செய்ய முடியாது. அதன் பெயர்கள் வேறுபடுகின்றன. ஆனால் அதன் சாராம்சம் வேறுபடுவதில்லை. புத்தர்களும்கூட வேறுபடுகின்றனர். ஆனால் யாரும் தனது சொந்த மன்மற்ற நிலையை விட்டுவிட்டுச் செல்வதில்லை.

இது புரிந்துகொள்ளப்படவேண்டிய சிறப்பான வாக்கியம். புத்தர்களும்கூட வேறுபடுகின்றனர். மெய்ஞ்ஞானம் அடைந்த ஒவ்வொருவரும் தனக்கே உரித்தான சொந்த தனித்துவத்தைப் பெற்றிருக்கின்றனர். இது மக்களிடையே ஒரு மிகப்பெரிய தவறான புரிதலை உருவாக்கி விட்டது. ஏனெனில் கிறிஸ்துவானவர் கௌதம புத்தரைப் போன்று நடந்து கொள்வதில்லை. மகாவீரர், கௌதம புத்தர் போன்று நடந்து கொண்டதில்லை. கிருஷ்ணர், கௌதம புத்தர் போன்று நடந்து கொள்வதில்லை. கௌதம புத்தரின் சீடரான போதி தருமரும்கூட கௌதம புத்தரைப் போன்று நடந்து கொள்வதில்லை. இது இந்த உலகில் மிகப்பெரிய குழப்பத்தை உருவாக்கி விட்டது. இவர்கள் அனைவரும் சரியானவர்களாக இருக்க முடியாது என்று மக்கள் நினைக்கின்றனர்.

கௌதம புத்தர் ஒருவர் மட்டுமே சரியானவர் என்று புத்த மதத்தினர் நினைக்கின்றனர். கிறிஸ்து சரியானவராக இருக்க முடியாது என்று நினைக்கின்றனர். இப்படிப்பட்ட தவறானப் புரிதல் எழுகிறது. ஏனெனில் காலாகாலத்திற்கும் ஒவ்வொரு புத்தரும் ஒரே மாதிரி இருக்கப் போகிறார்கள் என்று இந்த மக்கள் நினைக்கின்றனர். இயற்கையில் எதுவுமே ஒரே மாதிரி இருப்பதில்லை.

ஒவ்வொரு மனிதனும் தனக்கென்று சொந்தமான தனித் தன்மையைப் பெற்றிருக்கிறான். மேலும் அவன் மெய்ஞ்ஞானம் பெறும்போது அவனது இந்த தனித்தன்மை மேலும் அதிக தனித்துவம் நிறைந்ததாக ஆகிவிடுகிறது. அவன் இமயமலைச் சிகரம் போன்று, கௌரி சங்கர் போன்று, தனித்து நிற்கின்ற, தனித்து

நின்று நட்சத்திரங்களைத் தொடுகின்ற சிகரம் போன்று ஆகிவிடு கிறான். அதனால்தான் விழிப்புநிலை அடைந்த அவர்களைப் பற்றி நான் பேசிக்கொண்டு இருக்கிறேன். மனிதனின் ஒட்டுமொத்த வரலாற்றில் முதல்முறையாக இது செய்யப்படுகிறது. இந்துக்கள் கிருஷ்ணரைப் பற்றியும், ராமரைப் பற்றியும் பேசிக் கொண்டிருக்கின்றனர். பௌத்தர்கள் புத்தரைப் பற்றியும், போதி தருமரைப் பற்றியும் பேசிக் கொண்டிருக்கின்றனர். கிறிஸ்தவர்கள் கிறிஸ்து, புனித பிரான்சிஸ், மெய்ஸ்டர் ஏக்கார்ட் ஆகியவர்கள் பற்றி பேசிக் கொண்டிருக்கின்றனர். முகமதியர்கள், முகமது நபிகள் பற்றி பேசிக் கொண்டிருக்கின்றனர். சூஃபிகள் ஜலாலுதீன் ரூமி, சர்மத், அல்ஃஹிலாஜ் மன்சூர் ஆகியவர்கள் பற்றி பேசிக் கொண் டிருக்கின்றனர். ஆனால் இப்படிப்பட்ட எல்லா மெய்ஞ்ஞானம் பெற்ற மக்களையும் ஒன்று சேர்த்துக்கொண்டு வருகின்ற தைரியம் யாருக்கும் இருந்ததில்லை.

இந்த உலகில் உள்ள எல்லா மெய்ஞ்ஞானிகளும் தங்களின் நடத்தையில் எவ்வளவுதான் வேறுபட்டு இருந்தாலும், தங்களின் தத்துவங்களில் எவ்வளவுதான் வேறுபட்டு இருந்தாலும், தங்களது செயல்களில் எவ்வளவுதான் வேறுபட்டு இருந்தாலும், தங்களின் தனித்தன்மைகளில் எவ்வளவுதான் வேறுபட்டு இருந்தாலும் கூட அவர்கள் அனைவரும் இன்னமும் ஒரேமாதிரியான சுவையை பெற்றிருக்கின்றனர். ஒரே மாதிரியான மனம் அற்ற நிலையை பெற்றிருக்கின்றனர் என்பதை இந்த உலகிற்கு தெளிவுபடுத்துவது தான் எனது ஒட்டுமொத்த முயற்சியாக இருந்து வந்திருக்கின்றது. அவர்களுக்கு உள்ளே உள்ள மையப்புள்ளி ஒரே மாதிரிதான் இருக்கிறது. அது ஒரே மாதிரியான ஒளியாகத்தான் இருக்கிறது.

மெழுகுவர்த்தியின் வடிவத்தை வைத்து எடைபோட்டு விடாதீர்கள். மெழுகுவர்த்திகள் பல வடிவங்களில் இருக்க முடியும். ஆனால் அந்த மெழுகுவர்த்திகள் வடிவத்தில் அளவுகளில் நிறங்களில் வேறுபட்டு இருந்தாலும் கூட அவற்றின் வெளிச்சம் ஒரே மாதிரிதான் இருக்கும். அதன் ஒளியைப் பற்றி அறிந்தவர் எவரோ அவர்கள் மெழுகுவர்த்தியைப் பற்றியும், அவற்றின் வடிவம், அளவு, அவற்றின் நிறங்கள் ஆகியவற்றைப் பற்றியும்

கவலைப்பட மாட்டார்கள். முக்கியமானது எது என்றால் அது மெழுகுவர்த்தி அல்ல; முக்கியமானது எது என்றால் அது அதிலிருந்து வருகின்ற வெளிச்சமாகத்தான் இருக்கிறது.

மனம் அற்ற நிலை என்பதுதான் ஒவ்வொரு விழிப்பு நிலை அடைந்தவரின் ஒளிச்சுடராக இருக்கிறது. அவர் தனது மனதின் மூலம் செயல் புரியாமல், அவரது தன் இயல்பில் இருந்துகொண்டு செயல்புரிகிறார்.

*இந்த மனம் அற்ற நிலையின் திறனானது எல்லையற்றது. மேலும் அதன் வெளிப்பாடுகளானது ஒருபோதும் தீர்ந்து போகாதது. உங்களது கண்களால் உருவங்களைப் பார்ப்பதும், உங்களது காதுகளால் ஓசைகளைக் கேட்பதும், உங்களது மூக்கினால் வாசனையை நுகர்வதும், உங்களது நாவினால் சுவையை ருசிப்பதும் - இப்படிப்பட்ட ஒவ்வோர் அசைவும் அல்லது நிலையும் ஆகிய எல்லாமுமே உங்களது மனம் அற்ற நிலைதான். ஒவ்வொரு தருணத்திலும் உங்களது மொழிகள் போகமுடியாத இடங்களில் உள்ளதுதான் உங்களது மனம் அற்ற நிலை.* ஆனால் போதி தருமரின் பேச்சுகளை குறிப்பெடுத்த அந்த சீடர், உங்களின் மனம் என்று எல்லா இடங்களிலும் கூறிக் கொண்டே போகிறார். இது மிகவும் முட்டாள்தனமானது, தர்க்க வாதம் இல்லாதது, பகுத்தறிவற்றது. ஒரு பெரிய முரண் பாட்டைக்கூட கண்டுகொள்ள முடியாத அந்த சீடர் என்ன விதமான சீடர் என்று ஒருவரால் நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை. மொழிகள் மனதிடம் போகமுடியாது என்று கூறுகிறார். மொழி என்பதே மனதிற்குரியதுதான். அது போகவேண்டிய அவசியமே கிடையாது. மனம் அற்ற நிலைக்கு தான் மொழிகள் போக முடியாது. எண்ணங்களுக்கு அப்பால் உள்ள அமைதி நிலைக்கு மொழிகளால் போகமுடியாது. மனம் என்பது எண்ணங்களால் நிறைந்து இருக்கிறது. மேலும் எல்லா எண்ணங்களும் மொழியின் வடிவத்தில்தான் இருக்கின்றன.

*“ஒரு ததாகதரின் உருவங்கள் எல்லையற்றவை. மேலும் அதே போன்றுதான் அவரது விழிப்புணர்வும்” என்று இந்த சூத்திரங்கள் கூறுகின்றன.*

ததாகதர்களின், புத்தர்களின் விழிப்பு நிலை அடைந்த மக்களின் உருவங்கள் முடிவில்லாதவை என்பதை புரிந்து கொள்ளாமல் மதங்கள் எல்லாம் அற்ப விஷயத்திற்காக சண்டை போட்டுக்கொண்டு இருக்கின்றன. உதாரணமாக சமண மதத்தினர் கௌதம புத்தரை ஒரு மெய்ஞ்ஞானி என்று ஏற்றுக்கொள்வது கிடையாது. ஏனெனில் அவர்கள் மகாவீரரை மெய்ஞ்ஞானி என்று ஏற்றுக்கொண்டுள்ளனர். மேலும் மகாவீரர் ஆடைகள் அணியாமல் நிர்வாணமாக வசித்தார் என்கிற எளிய காரணத்திற்காகவே அவர்கள் கௌதம புத்தரை மெய்ஞ்ஞானியாக ஏற்றுக் கொள்வதில்லை. கௌதம புத்தர் நிர்வாணமாக வசிக்கவில்லை. வெறுமனே ஆடைகளை மட்டுமே வைத்துக்கொண்டு, புத்தர் ஆடைகளைப் பயன்படுத்துகிறார் என்பதற்காக அவரை மெய்ஞ்ஞானி அல்லர் என்கின்றனர். இதே சூழ்நிலைதான் புத்தமத அறிவுஜீவிகளிடமும் உள்ளது. மகாவீரர் நிர்வாணமாக வசித்தார் என்பதற்காக பௌத்தர்கள் அவரை மெய்ஞ்ஞானியாக ஏற்றுக் கொள்வதில்லை.

பல்வேறு விதமாக இருப்பவர்களை ஏற்றுக் கொள்வதற்கு யாரும் தயாராக இல்லை. கார் தொழிற்சாலைகளில் வரிசை கட்டி வருகின்ற கார்கள் போன்று புத்தர்களும் ஒரே மாதிரி இருக்க வேண்டும் என்று அவர்கள் விரும்புகின்றனர். அங்கு எல்லா காரும் ஒரே மாதிரி தான் இருக்கும். போர்டு கார் தொழிற்சாலையில் ஒவ்வொரு நிமிடத்திற்கும் ஒரு கார் அதன் ஒன்று சேர்க்கும் வரிசையில் இருந்து வெளியே வருகிறது. ஒரு மணி நேரத்தில் அறுபது போர்டு கார்கள் வெளிவரும். ஆனால் அவை அனைத்தும் ஒரே மாதிரியே இருக்கும்.

ஒரு புத்தர் என்பவர் ஓர் இயந்திரம் அல்ல. இயந்திரங்கள் ஒரே மாதிரி இருக்கலாம். மெய்ஞ்ஞானம் அடையாத மக்களும் கூட ஒரே மாதிரியானவர்களாக இல்லை. இங்கே ஐயாயிரம் மக்கள் அமர்ந்திருக்கிறீர்கள். ஆனால் இங்கு ஒரே மாதிரியான இருவரை உங்களால் கண்டுகொள்ள முடியாது. இரட்டைக் குழந்தைகளாக பிறப்பவர்களும்கூட மிகச்சரியாக ஒரே மாதிரி இருப்பதில்லை. முதலில் அவர்களின் தாயார் அவர்களை அடையாளம் கண்டு கொள்வார். அதன்பின்னர் போகப்போக அவர்களின்

நண்பர்களும்கூட அவர்களை அடையாளம் கண்டு கொள்வார்கள். அவர்கள் கிட்டத்தட்ட ஒரே மாதிரி இருந்தாலும்கூட இரட்டைப் பிறவிகளிலும் கூட சிறு வித்தியாசம் இருக்கிறது. மேலும் புத்தர்கள் இரட்டையர்கள் அல்லர். கிறிஸ்துவிடம் அவருக்கே உரித்தான ருசி உள்ளது. மகாவீரரிடம் அவருக்குரிய அழகு உள்ளது. புத்தர் தனக்கே உரித்தான உயர்வுநிலையைக் கொண்டிருப்பார்.

இந்த உலகம் முழுவதிலும், பல்வேறு காலகட்டங்களில் பல்வேறு இனங்களில் மெய்ஞ்ஞானம் அடைந்தவர்கள் இருந்து வந்துள்ளனர் என்பதை உங்களது மனதில் ஆழமாகப் பதிய வைப்பதற்கு நான் விரும்புகிறேன். அவர்களின் தனித்தன்மையை பாதுகாத்துக் கொண்டு அவர்கள் அனைவரும் ஒரே வகையைச் சேர்ந்தவர்கள் என்பதை அடையாளம் கண்டுகொள்வதற்கு இதுதான் நேரம். அவர்களிடம் ஓர் ஒற்றுமை இருக்கிறது. ஆனால் அவர்களின் மையப்புள்ளியில் உள்ளது. மேற்பரப்பில் நீங்கள் கருதுகின்ற அளவுக்கு அவர்கள் தனித்தன்மை உடையவர்களாக இருக்கின்றனர். மேலும் இப்படி இருப்பதும் ஓர் அழகுதான். எல்லாப் புத்தர்களுமே இயேசு கிறிஸ்து போன்று தங்களின் தோள்களில் சிலுவையை சுமந்துகொண்டு இருந்தால் இந்த உலகம் செழிப்பற்றதாக இருக்கும். நீங்கள் எங்கு போனாலும் அங்கு ஓர் இயேசு சிலுவையைச் சுமந்துகொண்டு இருப்பதைத்தான் பார்க்க முடியும். அல்லது மெய்ஞ்ஞானிகள் அனைவரும் மகாவீரர் போன்று ஆடைகள் இன்றி நிர்வாணமாக வசித்தால் இந்த உலகம் செழிப்படைந்ததாக இருக்காது.

மகாவீரர் மட்டும் அப்படி இருந்தது முற்றிலும் நல்லது. அவர் தனக்கே உரித்தான தனித்தன்மையையும், அவரது அழகையும், அவரது கம்பீரத்தையும் பெற்றிருக்கிறார். மேலும் யாரோடும் அவர் ஒப்பிடப்பட முடியாதவர்.

ஒவ்வொரு மெய்ஞ்ஞானியும் ஒப்பிட முடியாதவர்கள்.

அவருக்கு ஈடு இணை வேறு யாரும் கிடையாது.

இப்படித்தான் விஷயங்கள் இருந்தாக வேண்டும். இந்த உலகில் வெறும் ரோஜாக்கள் மட்டுமே இருக்கக்கூடாது. அது

எல்லாவகையான மலர்களையும் பெற்றிருக்க வேண்டும். மேலும் அது எல்லாவிதமான நறுமணங்களையும் பெற்றிருக்க வேண்டும். அதன்பிறகு மட்டுமே இந்த இயற்கை செழிப்பானதாக இருக்கும்.

*பொருள்களின் நகர்வு மற்றும் நிலை என்னவாக இருந்தாலும் அந்தப் பொருள்களை வேறுபடுத்திக் காண்பது மனம் அற்ற நிலையில் உள்ள விழிப்புணர்வாகும். ஆனால் இந்த மனம் அற்ற நிலைக்கு உருவங்கள் கிடையாது. மேலும் அதன் விழிப்புணர் வுக்கு எல்லைகள் கிடையாது. அதனால்தான் "ஒரு ததாகதரின் வடிவங்கள் முடிவில்லாதவை மற்றும் அவரது விழிப்புணர்வும் எல்லையற்றது" என்று கூறப்படுகிறது.*

*நான்கு பூதங்கள் கொண்ட பூத உடல் தொந்தரவானது. அந்த பூத உடலானது பிறப்பிற்கும் இறப்பிற்கும் உட்பட்டது. ஆனால் உண்மையான உடல் - இந்த உண்மையான உயிர் உணர்வு - இருப்பு நிலை இல்லாமலேயே இருக்கிறது. ஏனெனில் ஒரு ததாகதரின் உண்மையான உடல் ஒருபோதும் மாறாதது.*

உங்களது உடல் என்று அழைக்கப்படுகின்றதற்கு உள்ளே ஓர் உயிர் உணர்வு, ஓர் உள் உடல், உங்களது விழிப்புணவின் உடல், உங்களது தன்னுணர்வு என்னும் ஒளிச்சுடரின் உடல் இருக்கிறது. அது ஒருபோதும் மாறாதது.

*இந்த புத்த இயல்பு என்பது தாங்கள் எப்போதுமே பெற்றிருந்த ஒன்று என்று மக்கள் கண்டிப்பாக அறிந்து கொள்ள வேண்டும் என்று சூத்திரங்கள் கூறுகின்றன.*

போதி தருமர் வலியுறுத்திக் கூறுகின்ற மிகவும் முக்கியமான விஷயங்களில் இதுவும் ஒன்றாகும். உங்கள் எல்லாரிடமும் அது உள்ளது. ஒவ்வொரு மனித உயிரும் அதைப் பெற்றுள்ளது. ஒரே மாதிரியான அண்டவெளி உங்களுக்குள் உள்ளது; ஒரே மாதிரியான மனம் அற்ற நிலை. மேலும் தனித்துவத்துடன் மலர்கின்ற அந்த மலர்ச்சிக்கான சக்தியும் ஒரே மாதிரியானதாக உங்களுள் உள்ளது. உங்களது உயிர் உணர்வை பொறுத்தமட்டில் யாரும் பணக்காரர் இல்லை, யாரும் ஏழையும் இல்லை. நீங்கள் எப்போதும் அதைப் பெற்றிருக்கிறீர்கள். இந்த நொடிப்பொழுதே

கூட நீங்கள் அனைவரும் புத்தர்கள்தான்; ஆனால் நீங்கள் ஒருபோதும் உங்களுக்குள் எட்டிப்பார்த்தது கிடையாது. நீங்கள் ஒருபோதும் அதைக் கண்டுபிடித்தது கிடையாது. புத்த நிலை, மெய்ஞ்ஞானம், விழிப்பு நிலை, விடுதலை, மோட்சம், நிர்வாணம் ஆகிய இந்த வார்த்தைகள் எல்லாம் ஒரே விஷயத்தைத்தான் அர்த்தமாகக் கொண்டுள்ளன என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

நீங்கள் மெய்ஞ்ஞானம் அடையும்போது முதல் விஷயம் உங்களைப் பார்த்தே நீங்கள் நன்றாக சிரிப்பீர்கள். இரண்டாவது விஷயம் ஒரு கோப்பை சூடான தேநீர் குடிப்பதாகும். நீங்கள் நன்றாக சிரிப்பீர்கள். ஏனெனில் நீங்கள் எப்போதும் உங்களுக்குள் பெற்றுள்ள ஒன்றினை நீங்கள் இதுநாள் வரை தேடித் திரிந்ததை நினைத்து சிரிப்பீர்கள். நீங்கள் களைப்பாக இருப்பதால், காலம் காலமாக தேடி இதுவரை ஒன்றும் கிடைக்காமல் போன களைப்பு மிகுதியில் ஒருகோப்பை தேநீர் அருந்துவீர்கள். இதில் உள்ள பிரச்சினை என்னவென்றால் நீங்கள் காலம் காலமாக தேடிக்கொண்டே திரிந்து நீங்கள் கண்டுபிடித்திருக்க மாட்டீர்கள். ஏனெனில் தேடுபவன்தான் உங்களது தேடுதலாக இருக்கிறான். இந்த வெளிப்புற உலகில் நீங்கள் எதைக் கண்டுகொள்ள முயற்சிக்கிறீர்களோ, அதைக் கண்டுகொள்ள முடியாது. ஏனெனில் தேடுபவன் தான் தேடப்படுகின்ற பொருளாகவும் இருக்கிறான்.

நீங்கள் அதைக் கண்டுகொண்ட பின்னர், வெறுமனே ஆச்சரியமடையவில்லை. நீங்கள் எப்போதுமே மெய்ஞ்ஞானம் பெற்றவராகவே இருந்து வந்திருக்கிறீர்கள். வெறுமனே நீங்கள் அதுகுறித்து விழிப்புணர்வு அடையவில்லை. இது உங்களது சட்டைப் பையில் ஒரு வைரத்தை, ஒரு கோகினூர் வைரத்தை வைத்துக்கொண்டு உங்களது வாழ்நாள் முழுவதும் உங்களது சட்டைப்பையில் இருப்பது இந்த உலகிலேயே மிகவும் விலை உயர்ந்த வைரம் என்பதை அறியாமலேயே நீங்கள் பிச்சை எடுத்துக்கொண்டு இருப்பதைப் போன்றதாகும். நீங்கள் இதைக் கண்டுபிடித்து விடுகின்ற அன்றைய தினம், வாழ்க்கையானது உங்களிடம் ஒரு மாபெரும் நகைச்சுவை நாடகத்தை நடத்தி விட்டதைக் கண்டு நீங்கள் நிச்சயம் ஆச்சரியப்படுவீர்கள்.

மகாகஸ்யபா மட்டுமே தனது சுயஇயல்பை அறிந்து கொண்டார்.

அந்த கதை பற்றி உங்களுக்கு நினைவுபடுத்த வேண்டியது அவசியமாகும். ஜென்னை நிறுவியர் போதி தருமர் அல்லர். உண்மையான நிறுவனர் மகா கஸ்யபா. ஆனால் அவர் ஒருபோதும் பேசாததால் மக்கள் அவரை எப்போதுமே மறந்து விட்டனர். அவர் நிழலில் மறைந்து விட்டார்; ஆனால் அவர் அபரிமிதமான அழகுள்ள மனிதர். அளவுகடந்த அருள் நிறைந்த ஒரு மனிதர். மேலும் அவர் எப்படி ஜென்னை நிறுவினார் என்பது நினைவுகொள்ளத்தக்க ஒன்றாகும்.

ஒருநாள் வைசாலியில் உள்ள செருப்பு தைக்கும் ஏழை மனிதர் ஒருவர் தனது குளத்தில் தாமரை மலர்கள் பூக்கும் பருவ காலம் இல்லாதபோது அபூர்வமாக ஒரு தாமரை மலர் பூத்திருப்பதைக் கண்டார். அப்போது தாமரை மலர்களின் பருவ காலம் இல்லை என்பதால் அந்தத் தாமரை மல்ரை அதிக விலைக்கு விற்கலாம் என்பதால் அவர் மிகவும் சந்தோஷமடைந்தார். மேலும் அந்தத் தாமரை மலர் மிகவும் அழகாகவும் இருந்தது. அவர் அந்த மலரை எடுத்துக்கொண்டு அரண்மனை நோக்கி போய்க் கொண்டிருந்த போது அந்த நகரின் மிகப்பெரிய பணக்காரர் தங்கத்தேரில் இவரை நோக்கி வந்து கொண்டிருந்தார். இந்த அழகான தாமரை மலரைப் பார்த்தவுடன் அந்த மாபெரும் செல்வந்தர் தேரை நிறுத்தி சுதாஸிடம், "இந்தத் தாமரை மலரை முடிவாக நீ என்ன விலைக்குக் கொடுப்பாய்?" என்று கேட்டார்.

அந்த ஏழை சுதாஸிற்கு எவ்வளவு சொல்வது என்று தெரியவில்லை. எனவே அவர், "நான் ஒரு ஏழை. நீங்கள் என்ன கொடுத்தாலும் அது எனக்குப் போதும்" என்று கூறினார். அதைக்கேட்ட அந்த செல்வந்தர் சுதாஸிடம், "ஒருவேளை உனக்கு தெரியாமல் இருக்கலாம். ஆனால் நகருக்கு வெளியே மாந்தோப்பில் தங்கி இருக்கின்ற கௌதம புத்தரைக் காண்பதற்கு நான் போய்க் கொண்டிருக்கிறேன். மேலும் இந்த அழகான தாமரை மலரை அவரது காலடியில் வைப்பதற்கு நான் விரும்புகிறேன். இதுபோன்ற ஒரு பரிசுப் பொருளைப் பார்த்து அவரேகூட

ஆச்சரியப்படுவார். எனவே நான் உனக்கு ஐநூறு தங்கக்காசுகள் கொடுக்கிறேன்'' என்று கூறினார்.

சுதாஸினால் இதை நம்ப முடியவில்லை. தனக்கு எப்போதாவது ஐநூறு தங்கக் காசுகள் கிடைக்கும் என்று அவர் கனவிலும் கூட நினைக்கவில்லை. ஆனால் அப்போது அந்த இடத்திற்கு அரசரின் தேரும் வந்தது. அரசர் தேரை நிறுத்தி சுதாஸிடம், ''அந்த செல்வந்தர் உனக்கு எவ்வளவு பணம் கொடுக்கிறாரோ அதைப்போன்று நான்கு மடங்கு அதிகமாக நான் பணம் தருகிறேன். அவருக்கு விற்றுவிடாதே. கொஞ்சம் பொறு'' என்று கூறினார்.

என்ன நடக்கிறது என்பதை சுதாஸினால் நம்பமுடியவில்லை. ஐநூறு தங்கக்காசுகள் நான்கு மடங்காக என்னும்போது இந்த ஒரு மலருக்கு இரண்டாயிரம் தங்கக்காசுகள் கிடைக்கப் போகிறது. எனவே அவர் அரசரிடம், ''எனக்குப் புரியவில்லை. இந்த அளவுக்கு நீங்கள் ஆர்வத்துடன் இருப்பதற்கு என்ன காரணம்?'' என்று கேட்டார்.

இதற்கிடையில் அந்த செல்வந்தரும் தான் தோற்றுப் போய்விடக்கூடாது என்று நினைத்தார். அவர் அரசரைவிடவும் பணக்காரராக இருந்தார். உண்மையில் அரசரேகூட அந்த செல்வந்தரிடம் அதிகப் பணம் கடன் வாங்கி இருந்தார். எனவே அவர் அரசரிடம், ''நீங்கள் செய்வது சரியல்ல. நீங்கள் அரசராக இருக்கலாம். ஆனால் இப்போது நாம் போட்டியாளர்களாக இருக்கிறோம். நீங்கள் கொடுப்தைவிடவும் நான்கு மடங்கு நான் அதிகமாக பணம் கொடுக்றேன்'' என்று கூறினார். இப்படி இருவரும் நான்கு மடங்கு, நான்கு மடங்கு என்று போட்டி போட்டனர். இப்போது இந்த மலரை என்ன விலைக்குக் கேட்கிறார்கள் என்பதுகூட சுதாஸிற்கு மறந்துவிட்டது. அந்த ஏழைக்கு கணக்கு தெரியாது. அவர்கள் சொல்கின்ற தொகையானது அவனது எண்ணிப்பார்க்கும் திறமைக்கு அப்பால் போய்விட்டது. ஆனால் திடீரென்று ஒரு விஷயத்தை அவர் புரிந்து கொண்டார். எனவே அவர் இரண்டு பேரையும் நிறுத்தி, ''கொஞ்சம் பொறுங்கள். நான் இதை விற்கப்போவது இல்லை''

என்றார். அவர்கள் இருவரும் அதிர்ச்சி அடைந்தனர். உடனே அவர்கள் சுதாஸிடம், "என்ன பிரச்சினை, உனக்கு அதிகம் பணம் வேண்டுமா?" என்று கேட்டனர்.

அதற்கு சுதாஸ், "இதுவரை நீங்கள் என்ன விலை கூறி இருக்கிறீர்கள் என்று எனக்குத் தெரியாது. மேலும் எனக்கு அதிகப் பணமும் தேவையில்லை. நீங்கள் இருவருமே இந்தத் தாமரை மலரை கௌதம புத்தருக்கு கொடுக்கப் போகிறீர்கள் என்கிற ஒரே காரணத்திற்காக நான் இந்தத் தாமரை மலரை விற்பதற்கு விரும்பவில்லை. எனக்கு அவரைப்பற்றி எதுவும் தெரியாது. நான் அவரது பெயரை மட்டுமே கேள்விப்பட்டிருக்கிறேன். இப்படி நீங்கள் இருவரும் அதிகப் பணம் தருகிறேன் என்று ஒருவருக் கொருவர் சண்டை போட்டுக் கொள்வதைப் பார்க்கும்போது அந்த மனிதர் எப்படிப்பட்டவர் என்று என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. அப்படி இருக்கும்போது நான் இந்த சந்தர்பப்த்தை தவறவிட மாட்டேன். நான் இந்த தாமரை மலரை கௌதம புத்தருக்குப் பரிசாக கொடுப்பேன். அவர் இரட்டிப்பு ஆச்சரியம் அடையட்டும்" என்று கூறினார். ஓர் ஏழை மனிதனிடம் எண்ண முடியாத அளவுக்குப் பணம் கொடுக்கிறேன் என்ற பின்பும்கூட அதை அவன் மறுத்து விட்டான்.

சுதாஸ் போனார். அந்த அரசரும் செல்வந்தரும் அவருக்கு முன்பே அங்கு சென்றடைந்து விட்டனர். அங்கு அவர்கள் புத்தரிடம், "ஒரு செருப்பு தைக்கும் தொழிலாளியை பார்த்து நாங்கள் அதிர்ச்சி அடைந்து விட்டோம். நாங்கள் அவரிடம் தோற்றுப் போய்விட்டோம். என்ன விலைக்கும் அவர் அந்தத் தாமரை மலரை விற்க மறுத்துவிட்டார். நான் எனது ஒட்டுமொத்த கஜானாவையேகூட கொடுக்கத் தயாராக இருந்தேன்" என்று ஏற்கெனவே நடந்த கதை முழுவதையும் கூறிவிட்டனர். அதன்பின்னர் சுதாஸ், நடந்து வந்து சேர்ந்தான். கௌதம புத்தரின் காலைத் தொட்டு வணங்கிவிட்டு அந்தத் தாமரை மலரை அவரது காலடியில் காணிக்கையாக்கினான்.

உடனே கௌதம புத்தர், "சுதாஸ், நீ அதை ஏற்றுக் கொண்டிருக்க வேண்டும். அவர்கள் உனக்கு ஏகப்பட்ட பணம்

தந்தார்கள். ஆனால் என்னால் உனக்கு எதுவும் கொடுக்க முடியாது" என்று கூறினார். சுதாஸின் கண்களில் கண்ணீர் வழிந்தது. அவர் புத்தரிடம், "நீங்கள் உங்கள் கைகளில் வெறுமனே இந்தத் தாமரை மலரை வைத்திருந்தால் அதுவே எனக்கு போதுமானதாகும். இந்த ஒட்டுமொத்த ராஜ்ஜியத்தை விடவும் அது எனக்குப் பெரிதாகும். அது அந்த செல்வந்தரின் ஒட்டுமொத்த கஜானாவை விடவும் உயர்ந்ததாகும். நான் ஒரு ஏழை. ஆனால் நான் முற்றிலும் நன்றாக இருக்கிறேன். எனது வாழ்க்கைக்கு வேண்டியதை நான் சம்பாதிக்கிறேன். நான் பணக்காரன் ஆகவேண்டிய அவசியம் இல்லை. ஆனால் இப்போது எனது செயல் பலப் பல நூற்றாண்டுகளுக்கு ஒரு சரித்திர சம்பவமாக நினைவு கூரப்படும் மனிதன் உங்களை நினைவில் வைத்திருக்கும் காலம் வரை இந்த சுதாஸையும் அவன் கொடுத்த இந்தத் தாமரை மலரையும் நினைவில் வைத்திருப்பான். நீங்கள் இதை வெறுமனே உங்களது கையில் வைத்திருங்கள்" என்று கூறினார்.

புத்தர் அந்தத் தாமரை மலரை கையில் எடுத்துக்கொண்டார். அது வழக்கமாக அவர் காலையில் பிரசங்கம் செய்கின்ற நேரமாக இருந்தது. அவர் காலைச் சொற்பொழிவை ஆரம்பிக்கப் போவதை கேட்பதற்கு காத்துக் கொண்டிருந்தனர். ஆனால் புத்தரோ காலைச் சொற்பொழிவை ஆரம்பிப்பதற்குப் பதிலாக அவர் வெறுமனே அந்தத் தாமரைப் பூவையே பார்த்துக் கொண்டிருந்தார். நிமிடங்கள் கடந்தன. ஒரு மணி நேரம் கடந்து விட்டது. 'என்ன நடந்தது? இந்த மலர் ஏதோ மந்திர சக்தி நிறைந்தது போன்று புத்தர் அந்த மலரையே வெறுமனே பார்த்துக்கொண்டே இருக்கிறாரே' என்று நினைத்து மக்கள்அமைதி இழக்க ஆரம்பித்தனர்.

அந்தத் தருணத்தில் கௌதம புத்தரின் சீடர்களில் ஒருவரும், ஒருபோதும் எதுவும் பேசாதவரும், இந்த நிகழ்விற்கு முன்பும், பின்பும் எங்கும் எந்த ஒரு புனித நூலிலும் குறிப்பிடப்படாதவரு மான, மகா காஸ்யபா சிரித்தார். அப்போது கௌதம புத்தர் மகா காஸ்யபாவை அழைத்து அவரிடம் அந்தத் தாமரை மலரை கொடுத்தார்.

அப்போது புத்தர் அவரிடம், "நான் உன்னிடம் இந்த மலரை மட்டும் கொடுக்கவில்லை. நான் எனது ஒட்டுமொத்த ஒளியையும் உனக்குப் பரிமாற்றம் செய்கிறேன். எனது ஒட்டுமொத்த நறுமணத்தையும், எனது ஒட்டுமொத்த விழிப்பு நிலையையும் உனக்குக் கொடுக்கிறேன். இது மௌன நிலையில் நடக்கின்ற ஒரு பரிமாற்றம்; இந்த மலர் ஒரு அடையாளம் மட்டுமே" என்று கூறினார்.

இதுதான் ஜென்னின் ஆரம்பம்.

மக்கள் மகா காஸ்யபிடம், "என்ன நடந்தது? நாம் அனைவரும் அப்போது அங்கு இருந்து அந்த காட்சியை எங்களது கண்களால் பார்த்தாலும்கூட உனக்கு இந்த மலரை புத்தர் கொடுத்ததைத் தவிர வேறு எதையும் எங்களால் கண்டுகொள்ள முடியவில்லை. மேலும் நீயும் கௌதம புத்தரின் காலைத் தொட்டு வணங்கிவிட்டு உனது இருக்கைக்குத் திரும்பிச் சென்று மீண்டும் உனது கண்களை மூடிக்கொண்டாய். எனவே என்ன நடந்தது?" என்று கேட்டனர்.

அதற்கு மகா காஸ்யபா ஒரே ஒரு விஷயத்தை மட்டுமே கூறியதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. "எனது குரு உயிரோடு இருக்கும்போதே நீங்கள் அவரிடம் இதைக் கேட்டுக் கொள்ளுங்கள். பதில் சொல்வதற்கான உரிமை எனக்குக் கிடையாது" என்று கூறிவிட்டார். மேலும் இதுகுறித்து கௌதம புத்தரும்கூட, "இது ஒரு புதிய ஆரம்பம். எனது ஒட்டுமொத்த அனுபவத்தையும் வார்த்தைகள் ஏதுமின்றி மற்றவர்களிடம் பரிமாறிக் கொண்டேன். அப்போது ஒருவர் அதைப்பெற்றுக்கொள்கின்ற நிலையில் இருக்கவேண்டும். ஆனால் மகா காஸ்யபா தனது சிரிப்பின் மூலம் தனது ஏற்றுக்கொள்ளும் திறனைக் காட்டிவிட்டார். அவர் ஏன் சிரித்தார் என்று உங்களுக்குத் தெரியாது. அவர் சிரித்தார், ஏனெனில் அந்தத் தருணத்தில் அவர் திடீரென்று தனக்குள் எட்டிப்பார்த்தார். அப்போது உள்ளே தானும் கூட ஒரு புத்தர்தான் என்பதைக் கண்டுகொண்டார். அதை அங்கீகரிக்கும் விதமாக "நான் உனது விழிப்பு நிலையை ஏற்றுக் கொள்கிறேன்" என்னும்விதமாக நான் அதை அவரிடம் கொடுத்தேன்.

மகா காஸ்யபா என்கிற இந்த மனிதர்தான் ஜென்னை நிறுவியவர். அல்லது கௌதம புத்தருக்கும், மகா காஸ்யபாவிற்கும் இடையே நிகழ்ந்த இந்த சூழ்நிலைதான் ஜென் என்னும் ஆற்றின் ஆரம்பமாக இருக்கிறது. மகா காஸ்யபாவிற்கு பிறகு ஆயிரம் ஆண்டுகள் கழித்து போதி தருமர் வந்தாலும் கூட அவர் அப்படிப் பட்டதொரு பலம் நிறைந்தவராக இருந்தபடியால் கிட்டத்தட்ட அவர்தான் ஜென்னின் நிறுவனர் ஆகிவிட்டார். ஆனால் அவர் அளவுக்குத் தெளிவாகப் பேசக்கூடியவராக இருந்தார். சொல்ல முடியாத சில விஷயங்களையும் கூட அவரால் சொல்ல முடியும். பேசமுடியாத விஷயங்களையும் கூட அவரால் பேச முடியும். உங்களை மீண்டும் உங்களது வீட்டிற்கு கொண்டு வருவதற்கும், உங்களது சுய இயல்பிற்கு உங்களை விழிப்புணர்வு அடையச் செய்வதற்கும்; அவரால் உபாயங்களையும் வழிவகைகளையும் கண்டுகொள்ள முடிந்தது.

மகா காஸ்யபா மட்டுமே தனது சுய இயல்பை உணர்ந்து கொண்டார். அவருக்கு எதுவும் கொடுக்கப்படவில்லை; குருவிடம் இருந்து அவருக்கு அங்கீகாரம் மட்டுமே கிடைத்தது. இறுதி அங்கீகாரத்தை தவிர ஒரு குருவானவர் ஒரு சீடருக்கு வேறு எதையும் ஒருபோதும் கொடுப்பதில்லை. ஒருவர் தனக்குள் பார்ப்பதற்கு ஏதாவது ஒரு வழியில் தந்திரமாக செயலாற்ற வேண்டும். இங்குள்ள எல்லா தியான முறைகளும் நீங்கள் உங்களுக்குள் வெறுமனே எட்டிப் பார்க்கின்றதற்கான அறிவிற்கு பொருந்தாத செயல் முறைகள் மட்டுமே ஆகும். நீங்கள் உங்களுக்குள் பார்த்து விடும்போது குருவினால் உங்களுக்கு அங்கீகாரம் கொடுக்க முடியும். "ஒரு வடிவத்தை கொண்டிருக் கின்ற எல்லாருமே மாயைதான்" என்று சூத்திரங்கள் கூறுகின்றன. "நீங்கள் எங்கு இருக்கிறீர்களோ அங்கேயே ஒரு புத்தர் இருக்கிறார்" என்றுகூட இந்த சூத்திரங்கள் கூறுகின்றன. நீங்கள் ஓர் இடத்தில் இருக்கிறீர்கள். அங்கு வேறு யாரும் இல்லாமல் இருக்கலாம்; ஆனால் நீங்கள் எங்கு இருக்கிறீர்களோ அங்கு ஒரு புத்தர் இருக்கிறார்; ஏனெனில் நீங்களே ஒரு புத்தர்தான். புத்தர் எங்கு இருக்கிறார் என்று சுற்றுமுற்றும் பார்க்காதீர்கள். நீங்கள் எங்கு

இருந்தாலும் அங்கு ஒரு புத்தர் இருக்கிறார்; ஏனெனில் நீங்களும் ஒரு புத்தர்தான்.

*உங்களது மனம் அற்ற நிலைதான் புத்தர். ஒரு புத்தரை வழிபடுவதற்கு வேறு ஒரு புத்தரை பயன்படுத்தாதீர்கள்.*

எனவேதான் புத்தர் வழிபாட்டினை கற்றுக் கொடுக்கவில்லை. ஏனெனில் அது அசிங்கமானது. எல்லாரும் புத்தர்கள்தான்; அதில் ஒருசிலர் ஆழ்ந்த தூக்கத்தில் உள்ளனர். ஒருசிலர் விழித்துக் கொள்கின்றனர். ஆனால் அது அதிக வேறுபாட்டை உண்டாக்குவதில்லை. ஆழ்ந்த தூக்கத்தில் இருப்பவர்களேகூட விழித்து எழுந்து விடுவார்கள். விழித்து எழுந்தவர்களும்கூட ஆழ்ந்த தூக்கத்தில் இருந்தவர்கள்தான். இதில் வழிபடுதல் என்கிற கேள்விக்கே இடமில்லை. புத்தரின் போதனைகளில் வழிபாடு, பிரார்த்தனை என்பது போன்று எதுவும் இல்லை.

*ஒரு புத்தரோ அல்லது போதி சத்துவரோ திடீரென்று உங்கள் முன்பு தோன்றினாலும் கூட அங்கு மரியாதை செலுத்தவேண்டிய அவசியம் கிடையாது.*

தவறாக புரிந்து கொள்ளக்கூடிய ஒன்றினை போதி தருமர் கூறுகிறார். உண்மையில் அவர் கூறுகின்ற எல்லாமுமே தவறாகப் புரிந்து கொள்ளப்படலாம். ஆகவே அவரை தவறாக புரிந்து கொள்ளாமல் இருப்பதற்கு நீங்கள் மிகவும் விழிப்புடன் இருக்க வேண்டும். அவரைப் புரிந்துகொள்ளுதல் மிகவும் கடினம். அவரை தவறாக புரிந்து கொள்வது சுலபம். அவரை தவறாக புரிந்து கொள்ளாதபடிக்கு உங்களால் சமாளிக்க முடியும் என்றால், அவரைப் புரிந்து கொள்வதற்கான சாத்தியங்கள் உள்ளன.

அங்கு மரியாதை செலுத்த வேண்டிய அவசியம் இல்லை என்று அவர் கூறும்போது அந்த வாக்கியம் தெளிவாக இருக்கிறது. ஆனால் இது சுலபமாக தவறாகப் புரிந்து கொள்ளப்படலாம். மரியாதை செலுத்த வேண்டிய அவசியம் கிடையாது என்று அவர் கூறுகிறார். புறத்தூண்டுதல் இன்றி தானே கொடுக்கின்ற மரியாதைக்கான சாத்தியங்கள் இல்லை என்று அவர் கூறவில்லை. அதற்கு அவசியம் இல்லை. அது ஒரு கடமை அல்ல, நீங்கள் ஒரு

புத்தருக்கு மரியாதை கொடுக்க வேண்டிய கட்டாயம் இல்லை. ஆனால் அப்படி அவசியம் இல்லை என்றாலும்கூட உங்களது ஒட்டுமொத்த உயிர் உணர்வும் மரியாதை கொடுப்பதற்கு உணரலாம். எந்த ஓர் அவசியமும் இல்லாவிட்டாலும் கூட, புத்தர் உங்களது எதிர்காலத்தின் பிரதிநிதியாக இருக்கிறார் என்பதற்காகவும், அவர் உங்களது தன் இயல்பை உங்களுக்கு நினைவூட்டுகிறார் என்பதற்காகவும் நீங்கள் உயரிய மரியாதையும், உயர்ந்த நன்றி உணர்வும் கொள்ளலாம்.

அவர் ஒரு நினைவூட்டல். அவர் உங்களை நோக்கி நீட்டிக் கொண்டிருக்கும் ஓர் அம்புக்குறி. எனவே மரியாதை கொடுக்க வேண்டிய அவசியம் இல்லை. ஆனால் எந்த விதமான புறத்தூண்டுதலும் இல்லாமல் தானே எழுகின்ற மரியாதை உணர்வு இருக்கலாம்.

மகா காஸ்யரும் கூட புத்தரின் காலடிகளைத் தொட்டு வணங்கினார். அதற்கு அவசியம் கிடையாது. போதி தருமருக்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு புத்தர் இறந்து விட்டாலும்கூட போதி தருமர் ஒவ்வொரு நாளும் சீனாவில் இருந்து கொண்டு, நிரஞ்ஜன நதிக்கரையில் உள்ள புத்தகயா என்கிற இடத்தில் புத்தர் மெய்ஞ்ஞானம் அடைந்த திசையை நோக்கி தலை சாய்த்து வணங்குவது வழக்கம்.

ஓராயிரம் ஆண்டுகளுக்கு முன்பு புத்தர் மெய்ஞ்ஞானம் அடைந்த இடத்தை வரைபடத்தில் கண்டுபிடித்து அந்த திசை நோக்கி சீன மண்ணில் அவரது தலை தொடும்படி வணங்குவதுண்டு. ஆனால் அவரோ மரியாதை கொடுக்க வேண்டிய அவசியம் இல்லை என்று கூறுகிறார்.

நிச்சயமாக அதற்கு அவசியம் கிடையாது. ஆனால் புறத்தூண்டுதல் எதுவும் இல்லாமல் தானே எழுகின்ற மரியாதை உள்ளது. மேலும் அதுதான் உண்மையான மரியாதை. அவசியம் மரியாதை கொடுக்க வேண்டும் என்பதற்காக நீங்கள் அதைச்செய்தால், அது பொய்யான மரியாதை. உங்களிடம் இருந்து மரியாதை எதிர்பார்க்கப்படுகிறது என்பதற்காக நீங்கள் மரியாதை செலுத்தினால் அதன்பின்னர் அது போலித்தனம்.

ஆனால் மரியாதை கொடுக்க வேண்டிய அவசியம் இல்லை என்று உங்களுக்கும் கூறப்பட்ட பின்பும்கூட மரியாதை உணர்வு உங்களுக்குள் எழுகிறது என்றால் அதன்பின்னர் அதில் ஓர் உண்மை இருக்கும். அதில் ஒரு நேர்மை இருக்கும். ஓர் அன்பு, ஒரு நன்றியுணர்வு, ஒரு சத்தியம் அதற்கே உரித்தான ஓர் அழகு இருக்கும்.

*நமது மனம் அற்ற நிலை வெற்றிடமாக உள்ளது. மேலும் அப்படிப்பட்ட எந்த ஓர் உருவத்தையும் அது தனக்குள் வைத் திருக்கவில்லை. தோற்றங்களைப் பிடித்துக் கொண்டிருப்பவர்கள் சாத்தான்கள்.*

புத்த மதத்தில் கடவுளும் இல்லை சாத்தானும் இல்லை என்பதை உங்களுக்கு சொல்லியாக வேண்டும். கடவுளும் சாத்தானும் ஒன்றாக மட்டுமே இருக்க முடியும். அவர்கள் ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள். சாத்தான் இல்லாமல் கடவுளால் எதுவும் செய்ய இயலாது. மேலும் கடவுள் இல்லாமல் சாத்தானாலும் எதுவும் செய்ய முடியாது. ஒரே வியாபாரத்தில் இருவரும் பங்குதாரர்கள். ஆனால் இரண்டுமே வெறும் கொள்கை அளவிலானவை. ஆகவே போதிதருமர் 'சாத்தான்' என்கிற வார்த்தையை பயன்படுத்தும்போது அதற்கு வெறுமனே 'இருள்' என்றுதான் அர்த்தம். இருளிற்கு மனித உருவம் கொடுப்பதாகும். சாத்தான் என்று ஓர் ஆள் கிடையாது. கடவுள் என்பதும் ஓர் ஆள் அல்ல. இங்கே இறைத்தன்மை, கடவுள்தன்மை என்பது மட்டுமே உள்ளது. மேலும் கெட்டது என்பது மட்டுமே உள்ளது. இவை எல்லாம் தன்மைகள், ஆட்கள் அல்ல.

*தோற்றங்களைப் பிடித்துக் கொண்டிருப்பவர்கள் சாத்தான்கள். அவர்கள் இருளில் வசிக்கின்றனர். அவர்கள் தீவினையின் வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருக்கின்றனர்.*

*அவர்கள் பாதைக்கு வெளியே வீழ்ந்து விடுகின்றனர். மனதினால் பிறந்த மாயையை ஏன் வழிபடுகிறீர்கள்? அதை வழிபடுபவர்கள் ஒன்றும் அறியாதவர்கள்.*

*ஆகவே, கோயில்கள், யூத கோயில்கள், மசூதிகள், தேவாலயங்கள் ஆகியவற்றில் நடைபெறுகின்ற எல்லா வழிபாடும்*

முழு அறியாமையினாலும், முழு இருளான நிலையிலும் தான் நடைபெறுகின்றன. அறிந்தவர்கள் வழிபடுவதில்லை. வாழ்க் கையே வழிபாடாக ஆகிவிடுகின்ற ஒரு வாழ்க்கையை அவர்கள் வாழ்கின்றனர். அவர்கள் தேவாலயத்திற்கு செல்வதில்லை. கோயிலுக்குப் போவதில்லை. இருபத்து நான்கு மணி நேரமும் வழிபாடு போன்ற வாழ்க்கையைத்தவிர வேறு ஒரு வாழ்க்கை அவர்கள் வாழ்வதில்லை. பிரார்த்தனை போன்ற வாழ்க்கையைத் தவிர வேறு ஒரு வாழ்க்கை அவர்கள் வாழவில்லை. அவர்கள் கருணை, அன்பு, நன்றியுணர்வு ஆகியவை நிறைந்த வாழ்க்கையை வாழ்கின்றனர். அவர்களின் ஒவ்வொரு செயலும் அவர்களின் மெய்ஞ்ஞானத்தைக் காட்டுகிறது.

*வழிபடுவதன் மூலம் நீங்கள் சாத்தான்களின் கவர்ச்சி ஆற்றலின் கீழ் வீழ்ந்து விடுகிறீர்கள். நான் இதைக் குறிப்பிட்டுச் சொல்கிறேன். ஏனெனில் இதுகுறித்து உங்களுக்கு விழிப்புணர்வு இல்லாததால் நான் பயப்படுகிறேன். ஒரு புத்தரின் அடிப்படை இயல்பிற்கு இப்படிப்பட்ட எந்த ஓர் உருவமும் கிடையாது. பழக்கத்திற்கு மாறாக ஏதாவது தோன்றினாலும் கூட இதை உங்கள் மனதில் வைத்திருங்கள். அதை ஆரத் தழுவாதீர்கள். மேலும் அதைக் கண்டு பயப்படாதீர்கள். மேலும் அடிப்படையில் உங்களது மனம் அந்த நிலையானது தூய்மையானது என்பதை சந்தேகிக் காதீர்கள். இப்படிப்பட்ட எந்த ஓர் உருவத்திற்கும் எங்கு இடம் இருக்க முடியும்? மேலும் ஆவிகள், பேய்கள் அல்லது தெய்விக ஆன்மாக்களின் தோற்றங்கள் குறித்துக்கூட மரியாதையோ அல்லது பயமோ கொள்ளாதீர்கள்.*

இவை எல்லாம் உங்கள் மனதில் உள்ள கற்பனைகள் மட்டுமேயாகும். அவை வெறும் மனத்தேற்றங்கள் மட்டுமே யாகும். இங்கே கிருஷ்ணரைப் பார்த்த மக்களும் இருக்கின்றனர், கிறிஸ்துவைப் பார்த்த மக்களும் இருக்கின்றனர். பேய்களைக் கண்ட மக்களும் இருக்கின்றனர். எல்லாவிதமான கற்பனைத் தோற்றங்களையும் பார்த்த எல்லாவிதமான மக்களும் இருந்து கொண்டே இருப்பார்கள். அவை உங்களது மனதின் படைப்புகள். அதைக்கண்டு மரியாதையோ அல்லது பயமோ கொள்ளத் தேவையில்லை. அடிப்படையில் உங்களது மனம் அற்ற

நிலையானது வெறுமையானது. எல்லாத் தோற்றங்களும் மாயைகள். தோற்றங்களைப் பிடித்துக்கொண்டு நிற்காதீர்கள்.

ஒரே ஒரு விஷயத்தை மட்டும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். உங்களது அடிப்படை இயல்பானது மௌனம், அமைதி, சாந்தி, கிட்டத்தட்ட ஒரு வெறுமை நிலை, ஒன்றுமில்லாத நிலையாகும். மேலும் இதுதான் உங்களது புத்த இயல்பு. அதுதான் உங்களது சொந்த சக்தியில் விழிப்படைந்த உங்களது இயல்பு. அதை உணர்ந்து கொள்வதுதான் வாழ்க்கையின் மிகப்பெரிய அனுபவமாகும். ஏனெனில் அது வாழ்க்கை, பிறப்பு, இறப்பு ஆகியவற்றில் இருந்து விடுதலையைக் கொண்டு வருகிறது. எல்லா வேதனைகளையும், எல்லாத் துன்பங்களையும் பிறப்பு இறப்பு என்பதையும் முடிவில்லாமல் உங்களுக்கு கொடுத்துக்கொண்டு இருக்கின்ற சக்கரத்தில் இருந்து உங்களை வெளியே எடுத்து விடுகிறது. அது உங்களை பரவசம், முடிவில்லாத பேரானந்தம் நிறைந்த உலகிற்கு எடுத்துச் செல்கிறது.

இந்த சூத்திரங்கள் வெறுமனே உங்களது பொழுது போக்கிற்கானவை அல்ல. இவை நீங்கள் மெய்ஞ்ஞானம் அடைவதற்கானவை. மேலும் இந்த மெய்ஞ்ஞானம் என்பது வெளியில் இருந்து வரப்போகிறது அல்ல என்பதையும் நினைவில் கொள்ளுங்கள். அது ஏற்கெனவே உங்களுக்குள் உள்ளது. அதை நீங்கள் வெறுமனே விழிப்படையச் செய்ய வேண்டும். பல லட்சம் பிறவிகளாக நீங்கள் உறக்கத்தில் இருந்து கொண்டு இருக்கிறீர்கள். இன்னும் எத்தனை பிறவிகள் நீங்கள் உறக்கத்தில் இருக்க விரும்புகிறீர்கள்? இதுதான் சரியான நேரம். உண்மையில் நீங்கள் ஏற்கெனவே தேவைக்கு அதிகமாக தூங்கி விட்டீர்கள். இப்போது உங்கள் மீது அன்பு செலுத்தி விழித்தெழுங்கள்.

○

ஒரு புத்தரை, ஒரு தருமரை, ஒரு போதி சத்வாவை மனக்கண்ணால் பார்த்து நீங்கள் அவர்களுக்கு மரியாதை கொடுக்க நினைத்தால், நீங்கள் அழிந்து போகிறவர்களின் கூட்டத்திற்கு உங்களை தரம் தாழ்த்தி விடுகிறீர்கள். நேரடியான புரிதலை நீங்கள் தேடினால், என்னவிதமான தோற்றங்களாக இருந்தாலும் அதைப்பற்றிக் கொண்டு இருக்காதீர்கள். அப்போது நீங்கள் வெற்றி பெறுவீர்கள். வேறு எந்த புத்திமதியும் நான் உங்களுக்கு சொல்லப் போவதில்லை. தோற்றங்களைப் பற்றிக்கொண்டு இருக்காதீர்கள். அப்போது நீங்கள் புத்தரோடு ஒருமனதாக இருப்பீர்கள்.

ஆனால், புத்தர்களையும், போதி சத்வர்களையும் நாம் ஏன் வழிபடக்கூடாது? சாத்தான்களும் பேய் உருவங்களும் மட்டுமே மீண்டும் வெளிப்படுகின்ற சக்தியைப் பெற்றிருக்கின்றன. அவை எல்லாவிதமான பாவனைகளோடும் போதிசத்வரின் தோற்றங் களை உருவாக்க முடியும். ஆனால் அவை பொய்யானவை. அவர்களில் யாரும் புத்தர்கள் அல்லர். புத்தர் என்பது உங்களது சொந்த மனம், உங்களது வழிபாட்டை தவறான திசையில் செலுத்தாதீர்கள். விழிப்புணர்வு, அதிகரிக்கும் விழிப்புணர்வு என்று நீங்கள் எதை அழைக்கிறீர்களோ அதன் சமஸ்கிருத வார்த்தைதான் புத்தர் என்பதாகும். நீங்கள் பதில் செயல் புரிந்து கொண்டும், உணர்ந்து கொண்டும், உங்களது புருவங்களை வளைத்துக் கொண்டும், கண்களை இமைத்துக் கொண்டும், கை, கால்களை அசைத்துக் கொண்டும் இருக்கின்ற இந்த செயல்கள் எல்லாம் உங்களின் அதிகரிக்கும் விழிப்புணர்வின் இயல்பேயாகும். மேலும் இந்த இயல்பு தான் மனம். மேலும் மனம்தான் புத்தர். புத்தர்தான் வழி. வழிதான் ஜென். ஆனால் ஜென் ஒன்றும் பார்த்த புதிர் நிறைந்த

ஒன்றாக இருக்கிறது. உங்களது இயல்பைக் கண்டு கொள்வதுதான் ஜென் ஆகும்.

ஆயிரக்கணக்கான சூத்திரங்களுக்கும், சாஸ்திரங்களுக்கும் உங்களால் விளக்கம் அளிக்க முடியும் என்றாலும் கூட நீங்கள் உங்களது சுய இயல்பை கண்டுகொள்ளாத வரையில் உங்களுடையவை அழிந்து போகக்கூடிய ஒருவரின் போதனையே அல்லாமல் ஒரு புத்தரின் போதனை ஆகாது. உண்மையான பாதையானது மிக உயர்ந்த நிலையில் உள்ளது. அதை மொழிகளினால் வெளிப்படுத்த முடியாது. அப்படி இருக்கும்போது புனித நூல்களால் என்ன பயன்? ஆனால் யார் ஒருவர் தனது சுய இயல்பை கண்டுகொள்கிறாரோ, அவரால் ஒரு வார்த்தைகூட படிக்க முடியாது என்றாலும்கூட பாதையைக் கண்டுகொள்ள முடியும். ஒரு புத்தர் வெளிப்படுத்துவது எல்லாமே அவரது மனதின் வெளிப்பாடுதான். ஆனால் அவரது உடலும் வெளிப்பாடுகளும் அடிப்படையில் வெறுமையானவையாக இருப்பதால் நீங்கள் வார்த்தைதனில் ஒரு புத்தரைக் காண முடியாது. பாதையானது அடிப்படையில் ஒழுங்கானதாக உள்ளது. அதை முழுமையடையச் செய்ய வேண்டியதில்லை. பாதைக்கு எந்த ஒரு வடிவமும், ஒலியும் கிடையாது. அது கண்களுக்குப் புலப்படாதது. மேலும் உணர்வதற்கு கடினமானது. அது நீங்கள் தண்ணீர் குடிப்பது போன்றது. தண்ணீரானது எந்த அளவுக்கு சூடாகவோ அல்லது குளிர்ச்சியாகவோ உள்ளது என்று அறிந்துகொள்ள முடியும். ஆனால் அந்த அனுபவத்தை நீங்கள் மற்றவர்களிடம் கூற முடியாது. ததாகதா மட்டுமே அறிந்து கொள்கின்ற ஒன்றாக உள்ளது. மனிதர்களுக்கும், கடவுள்களுக்கும் தெரியாத ஒன்றாக உள்ளது. அழிந்து போகக்கூடியவர்களின் விழிப்புணர்வு குறைவாக உள்ளது. அவர்கள் வெளித்தோற்றங்களை பற்றிக் கொண்டு இருக்கின்ற வரையில், தங்களின் மனம் வெறுமையானது என்பதை அவர்கள் உணர்ந்து கொள்ள மாட்டார்கள்.

மேலும் இப்படித் தவறாக வெளித்தோற்றங்களைப் பற்றிக்கொண்டு இருப்பதால், அவர்கள் பாதையை தவறவிட்டு விடுகிறார்கள். எல்லாமே உங்களது மனதில் இருந்துதான் வருகிறது என்பதை நீங்கள் அறிந்துகொண்டபின், பற்றோடு இருக்காதீர்கள்.

நீங்கள் அதோடு பற்று கொண்டு விட்டால் நீங்கள் விழிப்புணர்வு இல்லாதவர் ஆகிவிடுவீர்கள். ஆனால் நீங்கள் உங்களது சுய இயல்பை கண்டுகொண்டு விட்டால், மத சட்டதிட்ட நூல்கள் ஒட்டுமொத்தமாக ஓர் உரைநடைப்பகுதி போன்று ஆகிவிடும். அதன் ஆயிரக்கணக்கான சூத்திரங்களும் சாஸ்திரங்களும் ஒரு தெளிவான மனதிற்கு முழு பாதிப்பாக மட்டுமே ஆகிவிடுகிறது. வாக்கியத்தின் இடையில் தான் புரிதல் வருகிறது. அப்படி இருக்கும்போது மதக் கோட்பாடுகளினால் என்ன நன்மை உள்ளது?

முடிவான உண்மையானது வார்த்தைகளுக்கு அப்பால் இருக்கிறது. கோட்பாடுகள் வார்த்தைகளாக இருக்கின்றன. அவை வழிகள் ஆகாது. வழி என்பது வார்த்தையற்றது. வார்த்தைகள் மாயைகள் இரவில் உங்களது கனவில் தோன்றுகின்ற விஷயங்கள், அவை அரண்மனையாக இருந்தாலும், குதிரை வண்டியாக இருந்தாலும், அவற்றை விடவும் கோட்பாடுகள் வேறுபட்டதாக இல்லை. இப்படிப்பட்ட விஷயங்களில் எந்த ஒரு மகிழ்ச்சியும் கொள்ளாதீர்கள். அவை அனைத்தும் மறுபிறவியின் தொட்டில்கள். நீங்கள் மரணத்தை அணுகும்போது இதை மனதில் வைத்திருங்கள். வெளித்தோற்றங்களை பற்றிக்கொண்டு இருக்காதீர்கள். அப்போது நீங்கள் எல்லா தடைகளையும் உடைத்தெறிந்து விடுவீர்கள். ஒரு நொடிப்பொழுது தயக்கம் காட்டினாலும் கூட நீங்கள் சாத்தானின் பிடியில் இருப்பீர்கள். உங்களது உண்மையான உடல் தூய்மையானது. மேலும் எளிதில் மாற்றம் செய்யப்பட முடியாதது. ஆனால் மாயையினால் உங்களுக்கு அது குறித்த விழிப்புணர்வு இல்லை. இதனால்தான் நீங்கள் வீணாக கர்ம வினையினால் துன்பப்படுகிறீர்கள். எங்கெல்லாம் நீங்கள் மகிழ்ச்சியைக் காண்கிறீர்களோ அங்கெல்லாம் நீங்கள் அடிமைத்தளைகளைக் காண்கிறீர்கள். ஆனால் நீங்கள் உங்களது அசல் உடல் மற்றும் மனம் குறித்து விழிப்புநிலை அடைந்து விட்டால், அதன்பின்னர் நீங்கள் இதுபோன்ற பற்றுதல்களில் இருக்க மாட்டீர்கள்.

மானிட தன்னுணர்வு ரகசியங்கள் குறித்து போதிதருமரின் புரிதல் மற்றும் அவரது அகப்பார்வைகள் மிகவும் ஆபத்தானவை. எனவே அவை நிறைவடைந்தவை என்று நிச்சயமாகக் கூறமுடியும்.

அதில் நீங்கள் எதையும் சேர்க்கவும் முடியாது. மேலும் அதிலிருந்து நீங்கள் எதையும் நீக்கவும் முடியாது. அவர் தந்தி வாசகங்கள் போன்று பேசுகிறார். மிகவும் முக்கிகயமான வார்த்தைகளை மட்டுமே பயன்படுத்துகிறார்.

எப்போதுமே மனிதனால் வெளிப்படுத்த முடியாத ஒன்றினை அறியப்பட்ட ஒன்றினை எப்படி ஒரு மனிதர் வெளிப்படுத்துகிறார் என்பதை நீங்கள் கண்டுகொள்ள முடியும். ஆனால் போதி தருமர் அதை வெளிப்படுத்துவதில் மிகவும் நெருங்கி வருகிறார். நீங்கள் இதைப் புரிந்துகொள்ளவில்லை என்றால் அது உங்களின் தவறாகும்.

போதி தருமரின் நிலையில் உள்ள ஒரு குருவை கண்டு கொள்வது மிகவும் கடினம். கடந்த கால குருமார்களின் வரிசையில், போதி தருமர் தனிப்பட்டு நிற்கிறார், தனியானவராக நிற்கிறார்; அவரது வாழ்க்கை வழிகள், அவர் போதிக்கின்ற வழிகள், எல்லாமே அவருக்கு சொந்தமானது. இதற்கு முன்பு போதி தருமரைப் போன்ற ஒருவர் ஒருபோதும் இருந்தது கிடையாது. மேலும் அகப்பார்வையிலும், புரிதலிலும், ஆழ்ந்து கூறுவதிலும் இவருக்கு மிகச்சரியாக, இணையாக ஒருவர் இவருக்கு பின்னரும் ஒருபோதும் இருந்தது கிடையாது. என்றாலும்கூட அவர் பொருளற்ற வார்த்தைகளைப் பயன்படுத்துவதில்லை. அவர் ஒரு தத்துவமேதை அல்ல, ஒரு சமய இயலாளர் அல்லர். அவர் மிகவும் எளிமையான மனிதர். உங்களின் உள்ளத்திற்குள் துளைத்து செல்கின்ற அம்புகள் போன்று அவர் நேரடியான வார்த்தை களையே பயன்படுத்துகிறார். நிங்கள் உங்களது பங்கிற்கு செய்ய வேண்டியதெல்லாம் உங்களது உள்ளத்து கதவினை வெறுமனே திறந்து வைத்துக்கொண்டு இருப்பதே ஆகும். அழைக்காமல் அவர் உங்களுக்குள் வரமாட்டார். ஆனால், அழைத்தால் அவர் நிச்சயம் உங்களது உள்ளத்திற்குள் வந்து சேர்வார். உங்களது வரவேற்பு தான் இறுதி முடிவு எடுக்கின்ற காரணியாக இருக்கப் போகிறது. இந்த மாலைப் பொழுதில் இந்த சூத்திரங்களில் போதி தருமரின் பேச்சை குறிப்பெடுத்த சீடர்கள் செய்த சில தவறுகளைத் தவிர, கிட்டத்தட்ட எல்லாமே உண்மையிலேயே போதி தருமருடையது போன்று தெரிகிறது.

ஒரு புத்தரை, ஒரு தருமரை, ஒரு போதி சத்வரை மனக்கண்ணால் பார்த்து நீங்கள் அவர்களுக்கு மரியாதை கொடுக்க நினைத்தால் நீங்கள் அழிந்து போகிறவர்களின் கூட்டத்திற்கு உங்களைத் தரம் தாழ்த்தி விடுகிறீர்கள்.

போதி தருமரைப் பொறுத்தமட்டில் ஒவ்வொருவரும் அவசியம் ஒரு புத்தர்தான். ஆனால் நீங்கள் புத்தர்களை கற்பனை செய்ய ஆரம்பித்து அவர்களை வழிபட ஆரம்பித்தீர்கள் என்றால், அதன்பின்னர் நீங்கள் உங்களுக்கு அளவுகடந்த தீங்கு செய்கிறீர்கள். நீங்கள் அடிப்படை போதனையை புரிந்து கொள்ளவில்லை என்றுதான் அதற்கு அர்த்தமாகிறது. இங்கே வழிபட வேண்டியவர் யாரும் இல்லை. மனக்கண்ணால் பார்க்க வேண்டியவர் யாரும் இல்லை. ஏனெனில் நீங்களே ஒரு புத்தராகத்தான் இருக்கிறீர்கள்.

இந்த கருத்தினால் தான் கௌதம புத்தர் ஒரே கடவுள் இருப்பதை புத்தர் மறுக்கிறார். அவர் இப்படி மறுப்பது மிகவும் உயர்ந்தது. ஆனால் அதன் சிறப்பியல்பு புரிந்து கொள்ளப்பட வில்லை. அவர் ஒரே கடவுளை மறுப்பது அவர் நாத்திகர் என்பதனால் அல்ல. அவர் ஒரே கடவுளை மறுக்கிறார். ஏனெனில் அவர் உயிர் வாழ்கின்ற ஒவ்வொருவரையும் அவர் கடவுளைப் போன்று மதிக்கிறார். ஏனெனில் அவர் உயிர் வாழ்கின்ற ஒவ்வொருவரையும் அவர் கடவுளைப் போன்று மதிக்கிறார். இங்கு எத்தனை பேர் உயிர் வாழ்ந்து கொண்டு இருக்கிறார்களோ அத்தனை கடவுள்கள் இருக்கின்றனர். தாங்கள் யார் என்று அடையாளம் கண்டுகொள்கின்ற நிலையை ஒருசிலர் அடைந்து விட்டனர். ஆனால் உயிர் வாழ்கின்றவர்களில் அதிகம் பேர் இன்னமும் ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கின்றனர். தாங்கள் யார் என்பதை அவர்கள் அறிந்திருக்கவில்லை. ஆனால் அவர்களின் இந்த அறியாமை அவர்களின் இயல்பை மாற்றுவதில்லை.

ஆகவே முதல் சூத்திரமானது நீங்கள் ஒரு புத்தரை மனக்கண்ணால் பார்த்தால், நீங்கள் அழிந்து போகிறவர்களின் கூட்டத்திற்கு உங்களை தரம் தாழ்த்தி விடுகிறீர்கள் என்று

இருக்கிறது. நீங்கள் தேவையில்லாமல் உங்களைத் தரம் தாழ்த்திக் கொள்கிறீர்கள். கோயில், யூத ஆலயம், மற்றும் ஒவ்வொரு தேவாலயத்திலும் வழிபடுகின்ற ஒவ்வொருவரும் தங்களைத் தாழ்வுப்படுத்திக் கொள்கிறார்கள். மேலும் அவர்களுக்குள் உள்ள கடவுளையும் தாழ்வுப்படுத்திக் கொண்டு இருக்கிறார்கள். உங்களுக்குள் கடவுள் இருப்பதால் வேறு ஒரு கடவுளை வழிபட வேண்டிய அவசியம் இல்லை. அதற்கு உங்களுக்கு ஒரு விழித்தெழுதல், விழிப்புணர்வு, உங்களது சொந்த உயிர் உணர்வின் ஒரு தன்னுணர்வு மட்டுமே தேவைப்படுகிறது. ஒருவர் தன்னைப்பற்றிய தன்னுணர்வு கொண்டவராக ஆகிவிடுகின்ற அந்த நொடிப்பொழுதிலேயே அவர் மரணமடைகின்ற ஒருவராக இருப்பதில்லை; அவர் அழிவற்றவர் ஆகிவிடுகிறார். அவர் எப்போதுமே மரணம் என்பது இல்லாதவராகத்தான் இருக்கிறார். ஆனால் அவரது தவறான புரிதலின் காரணமாகத்தான் அவர் தன்னை ஒரு மரணமடைகின்ற மனிதராக, அழிந்து போகக்கூடிய ஒருவராக தரம் தாழ்த்திக் கொண்டிருக்கிறார். உங்களுக்குள் உள்ள உயிர் உணர்வு, மேலும் உங்களுக்குள் உள்ள தன்னுணர்வு முடிவில்லாதது மற்றும் அழிவற்றது என்றாலும்கூட நீங்கள் மரணத்தை கண்டு பயந்துகொண்டே இருக்கிறீர்கள். ஏனெனில் ஒவ்வொரு நாளும் வேறு ஒருவர் மரணமடைவதை நீங்கள் பார்க்கிறீர்கள். எனவே மற்றவர்களின் மரணம் உங்களது சொந்த மரணத்தை உங்களுக்கு நினைவூட்டுகிறது.

"யாருக்காக மணி அடிக்கப்படுகிறது என்பதை ஒருபோதும் கேட்காதீர்கள். அந்த மணி உங்களுக்காக அடிக்கப்படுகிறது" என்று ஒரு கவிஞர் பாடுகிறார். கிறிஸ்தவ கிராமங்களில் யாராவது ஒருவர் இறந்துவிட்டால் கிராமத்து தேவாலயத்தில் மணி அடிப்பது பழங்காலத்து வழக்கம். யாரோ ஒருவர் இறந்து விட்டார் என்று அந்த ஒட்டுமொத்த கிராமத்திற்கும், வயல்வெளிக்குச் சென்றுள்ள விவசாயிகளுக்கும், அல்லது பழத்தோட்டங்களுக்கும் சென்றுள்ள மக்களுக்கும், அல்லது திராட்சை ரசம் பிழிவதற்கு சென்றுவிட்ட மக்களுக்கும், அவர்கள் திரும்பி வரவேண்டும் என்கிற தகவலைத் தெரிவிப்பதற்கும், யாரோ ஒருவர் இறந்து விட்டார் என்று தெரிவிப்பதற்கும் தேவாலயத்தின் மணி அடிக்கப்பட்டது.

"யாருக்காக மணி அடிக்கப்படுகிறது என்று ஒருபோதும் கேட்காதீர்கள். அது எப்போதும் உங்களுக்காகவே அடிக்கப்படு கிறது" என்கிறார் கவிஞர். அவர் ஏதோ ஓர் உண்மையை உங்களுக்குத் தெரிவிக்கிறார். ஒவ்வொரு மரணமும் ஓர் அடை யாளக் குறியீடு. நீங்களும் அதே வரிசையில்தான் நின்றுகொண்டு இருக்கிறீர்கள். மேலும் அந்த நீண்ட வரிசையானது சிறியதாக, மேலும் சிறியதாக ஆகிக்கொண்டே போகிறது என்பதையே அது காட்டுகிறது. ஒவ்வொரு நாளும் மரணம் உங்களை நெருங்கி, நெருங்கி வந்து கொண்டிருக்கிறது. உண்மையில் நீங்கள் பிறந்த அந்த தினம் உங்களது பிறந்த தினம் அல்ல; அந்த தினத்தில் இருந்துதான் நீங்கள் மரணமடைய ஆரம்பித்தீர்கள். மேலும் அதிலிருந்து தினந்தோறும் நீங்கள் மரணமடைந்து கொண்டே இருக்கிறீர்கள். ஒவ்வொரு பிறந்த நாளின்போதும் உங்களது மரணம் ஒரு வருடம் உங்களை நெருங்கி வந்து கொண்டிருக்கிறது.

மக்கள் மரணமடைகின்றனர், விலங்குகள் சாகின்றன, மரங்கள் பட்டுப் போகின்றன, பறவைகள் இறந்து போகின்றன. இது நிச்சயமாக நடக்கின்ற முழுமையான உண்மை. நீங்களும் மரணமடையப் போகிறீர்கள் என்கிற உண்மையை நீங்கள் எப்படித் தவிர்க்க முடியும்? நாளைகூட நடக்கலாம். அல்லது நாளை மறுநாள்கூட நடக்கலாம். நேரம் எப்போது வருகிறது என்பது மட்டுமே கேள்வியாக இருக்கிறது.

ஆனாலும்கூட, தங்களின் உயிர் உணர்வு குறித்து விழிப் புணர்வு அடைந்தவர்கள் யாரும் மரணமடைவதில்லை என்பதை அறிந்து கொள்கிறார்கள். மரணம் என்பது கற்பனை.

மக்கள் மரணமடைவதை நீங்கள் பார்க்கிறீர்கள்; ஆனால் நீங்கள் மரணமடைவதை நீங்கள் எப்போதாவது பார்த்திருக் கிறீர்களா? மேலும் வேறு யாரோ ஒருவர் மரணமடைவதை நீங்கள் பார்க்கும்போது, உண்மையிலேயே வேறு யாரோ ஒருவர் மரணமடைவதைத்தான் நீங்கள் பார்க்கிறீர்களா? நீங்கள் பார்ப்பது எல்லாம் உங்களது மருத்துவ விஞ்ஞானம் பார்க்க முடிந்தது எல்லாம் அந்த மனிதன் மூச்சு விடுவதை நிறுத்திவிட்டான். அவரது நாடித்துடிப்பு மறைந்து விட்டது. அவரது இதயம் இப்போது

துடிப்பதில்லை என்பதை மட்டுமே பார்த்துவிட்டு அந்த மனிதர் இறந்து விட்டார் என்கின்றனர்.

சில தினங்களுக்கு முன்பு, பாகிஸ்தான் ஆக்கிரமிப்பு பகுதியில் உள்ள ஒரு மனிதர் மூன்றாம் முறையாக அவனது நண்பர்கள், அவனுடன் பணிபுரிபவர்கள், அவரது குடும்பத்தினர் அனைவரையும் ஏமாற்றிவிட்டார். தனது நூற்றுமுப்பத்து ஐந்தாம் வயதில் அவர் மூன்றாம் முறையாக இறந்து விட்டார். இதற்கு முன்பு இரண்டு முறை அவர் இதுபோன்ற தந்திரத்தைக் கையாண்டதனால் மக்கள் மிகவும் சந்தேகப்பட்டார்கள்; அவர் இறந்து விட்டார். மருத்துவர்களால் அவர் இறந்து விட்டார் என்று கண்டுபிடிக்கப் பட்டது. அவர் இறந்து விட்டார் என்று அவர்கள் சான்றளித்தனர். ஆனால் அவர் எழுந்து விட்டார், கண்களைத் திறந்து சிரிக்க ஆரம்பித்து விட்டார். இப்படி இரண்டு முறை நடந்து விட்டதால், இந்த முறை அவர் இறந்தபோது மக்கள் மிகவும் எச்சரிக்கையுடன் இருந்தனர். மருத்துவர்களும் எச்சரிக்கையுடன் இருந்தனர். ஆனால் அவர் இறந்து விட்டது நிச்சயம் என்பதற்கான காரணங்கள் இருந்தன; அதில் கேள்விக்கே இடமில்லை.

“ஒருவேளை முன்பு அவர் நம்மை ஏமாற்றி இருக்கலாம். ஆனால் இந்த முறை நிச்சயமாக அவர் இறந்து விட்டார்” என்று அவர்கள் கூறினார்கள். மருத்துவ விஞ்ஞானம் அறிந்த வரையில் அவர் மரணமடைந்து விட்டார் என்பதற்கு தேவையான அனைத்தையும் நிறைவு செய்து விட்டார். ஆனால் அதற்காக சான்றிதழ் மூன்று மருத்துவர்கள் கையெழுத்து போடும்போது அந்த மனிதர் தனது கண்களைத் திறந்து கொண்டு சிரிக்க ஆரம்பித்தார். அப்போது அவர், “கவனமாக கேளுங்கள், அடுத்த முறை நான் மரணமடையும்போது, நான் உண்மையிலேயே மரணமடையப் போகிறேன். இன்னும் ஒருமுறை விளையாடலாமே என்று நான் இப்படி செய்து விட்டேன்” என்று கூறினார்.

பாகிஸ்தானால் ஆக்கிரமிப்பு செய்யப்பட்ட காஷ்மீர் பகுதியில் இந்தியா மற்றும் பாகிஸ்தானிலேயே நீண்டநாட்கள் உயிர் வாழ்கின்ற மக்கள் வசித்துக்கொண்டு இருக்கின்றனர். நூற்று இருபது வயது என்பது அங்கு மிகவும் சாதாரணமானது.

நூற்றுஐம்பது வயதானவர்களைக் கூட நீங்கள் காணலாம். ஆனால் அது அந்த அளவுக்கு சாதாரணமானதல்ல. ஆனாலும்கூட நூற்று ஐம்பது வயதைக் கடந்த நூற்றுக்கணக்கான மக்கள் இன்னமும் அங்கு இருக்கின்றனர். அபூர்வமாக ஒருசிலர் நூற்று எண்பது வயதை அடைந்து விட்டனர். என்றாலும்கூட இன்னமும் அவர்கள் இளமையாக இருக்கின்றனர். அவர்கள் இன்னமும்கூட தங்களது வயல்களில் வேலை செய்து கொண்டு இருக்கின்றனர்.

அந்த மனிதர் ஓர் அபூர்வ மனிதராக இருந்தார்; எனவே உலகம் முழுவதிலும் இருந்து வந்த பத்திரிகையாளர்களும், செய்தித் தாள்களும் அவரிடம், "நீங்கள் என்ன செய்தீர்கள்? என்ன நடந்தது?" என்று கேட்டார்கள். ஏனெனில் மூன்று முறை அவர் இறந்து விட்டார் என்று சான்றளிக்கப்பட்டார். ஆனால் மூன்று முறையும் அவர் எல்லா மருத்துவ அறிவையும் முறியடித்து விட்டார்.

அதற்கு அவர், "ஒன்றும் இல்லை. இந்த உடல் நான் அல்ல என்பதனால்தான் அது முடிந்தது. அதை நான் அறிவேன். மேலும் எனது சுவாசமும்கூட நான் அல்ல என்பதையும் அறியேன். நான் எனது இதயம் அல்ல என்பதையும் நான் அறிவேன். நான் இவற்றை எல்லாம் கடந்து அப்பால் இருக்கின்ற ஒருவன். நான் கடந்து உள்ள ஒன்றில் வெறுமனே நழுவிச் சென்று விடுகிறேன். அப்போது இதயம் நின்றுவிடுகிறது. நாடித்துடிப்பு நின்றுவிடுகிறது. சுவாசம் நின்று விடுகிறது. எனவே நீங்கள் எல்லாரும் முட்டாள்கள் ஆக்கப்பட்டு விட்டீர்கள். அதன்பிறகு நான் மீண்டும் எனது உடலுக்குள் நழுவி வந்துவிடுகிறேன். ரத்தம் மீண்டும் ஓட ஆரம் பிக்கிறது. மீண்டும் நாடி துடிக்கிறது. மீண்டும் இதயமும் துடிக்கிறது" என்று கூறினார்.

அவர் ஒரு எளிமையான மனிதர். ஒரு விவசாயி.. அவர் ஒரு யோகி அல்ல. அவர் ஒருபோதும் எதையும் பயிற்சி செய்தது கிடையாது. ஆனால் அவர் மிகவும் சிறு குழந்தையாக இருந்த போது. அவருக்கு ஏழு அல்லது எட்டு வயது இருக்கும்போது ஒரு சூஃபி ஞானி ஒருவரை அவர் பார்த்திருக்கிறார். அந்த சூஃபி ஞானி இவரிடம் மரணம் என்பது ஒருவரை ஏமாற்றி தவறாக நினைக்க வைக்கும் ஒன்று என்று கூறி இருக்கிறார். மேலும் அவர்

மிகவும் கள்ளம் கபடமற்றவராக இருந்ததால் அதை அப்படியே ஏற்றுகொண்டு விட்டார்.

அந்த சூஃபி ஞானி அவரிடம், "உனது உடலில் இருந்து வெளியே நழுவிச் செல்வதற்கு ஒரு எளிய வழி உள்ளது. வெறுமனே உனக்குள் இருந்து உனது உடலைப் பார். அப்படி உனது உடலை நீயே பார்க்கும்போது திடீரென்று ஒருநாள் உனக்கும் உனது உடலுக்கும் இடையே உள்ள தூரம் மேலும் மேலும் அதிகமாகும். விரைவில் அந்த உடல் உன்னைவிட பல மைல் தூரத்தில் தள்ளி இருக்கும். உனது மனதையும் இதேபோன்று கவனி. அப்போது உனது மனதிற்கும் இதுபோன்று நடக்கும். நீ வெறுமனே ஒரு கவனிப்பாளனாக இருந்தால் நீ உனது உடலை விட்டு நழுவி வெளியேறிவிடலாம். உனது மனதை விட்டு நழுவி வெளியேறி விடலாம். இந்த ஒட்டுமொத்த தனிமனிதப் பண்பையும் விட்டு நழுவி வெளியேறிவிடலாம். மேலும் திரும்பவும் இந்த உடலுக்குள் வருவது உனது கட்டுப்பாட்டில்தான் இருக்கிறது. நீங்கள் உங்களுக்குள் இருந்து வெளியே நழுவி வந்துவிட்டதால், அப்படி நழுவி வந்த வழியானது உங்களுக்கு தெரியும். ஆகவே மீண்டும் உள்ளே திரும்பி வருவதற்கான வழியும் உங்களுக்கு தெரியும். அப்படி நீங்கள் வெளியே நழுவி வந்த அந்த வழியானது நீங்கள் உங்களுக்குள் இருந்துகொண்டு இடைவிடாமல் உங்களை கவனித்துக்கொண்டே இருந்ததாகும். இப்போது உள்ளே நுழைவதற்கு மீண்டும் உங்களது உடலோடு உங்களை ஐக்கியப்படுத்திக் கொள்ளுங்கள். "நானே இந்த உடல், நானே இந்த மனம், நானே இந்த சுவாசம், நானே இந்த துடிக்கும் இதயம்" என்று கூறுங்கள். உடனடியாக அந்த தூரம் குறைந்துவிடும். நீங்கள் நெருங்கி நெருங்கி வருவீர்கள். மேலும் விரைவில் நீங்கள் உங்கள் உடலுக்குள் மீண்டும் நழுவிச் சென்று விடுவீர்கள். உங்களை உங்களது உடலோடு நீங்கள் ஐக்கியப்படுத்திக் கொண்டால் நீங்கள் இந்த உடலாக ஆகிவிடுகிறீர்கள். அதன்பின்னர் நீங்கள் இறந்து போகின்ற ஒருவராக ஆகிவிடுகிறீர்கள். அப்போது அங்கே மரண பயம் இருக்கிறது. உங்களது உடலோடு உங்களை நீங்கள் ஐக்கியப்படுத்திக் கொள்ளாதபோது, நீங்கள் வெறுமனே உங்களது உடலை கவனிக்கின்ற ஒருவராக மட்டுமே இருக்கிறீர்கள். நீங்கள்

ஒரு தூய பேருணர்வாக, மனம் அற்ற நிலையில் இருக்கிறீர்கள். அப்போது அங்கே உங்களுக்கு மரணம் என்பது இல்லை, நோய் என்பது இல்லை, மேலும் வயதாகி விடுதல் என்பதும் கிடையாது. உங்களது சாட்சி பாவனைகளை பொறுத்தமட்டில் அது முடிவில்லாதது. மேலும் அது எப்போதுமே புத்துணர்வுடன் இளமையாக அப்படியே இருக்கிறது.

உண்மையான மதம் வழிபாடு என்பதை உங்களுக்கு கற்றுக் கொடுக்காது. உண்மையான மதம் உங்களது அழியாத்தன்மையை கண்டு கொள்ளவும், உங்களுக்குள் உள்ள இறைவனைக் கண்டுகொள்ளவும் கற்பிக்கிறது. மேலும் அதைத்தான் போதி தருமரும் கூறுகிறார். நேரடியான புரிதலை நீங்கள் தேடினால், என்னவிதமான தோற்றங்களாக இருந்தாலும் அதைப்பற்றிக் கொண்டு இருக்காதீர்கள்; அப்போது நீங்கள் வெற்றி பெறுவீர்கள். வேறு எந்த புத்திமதியும் நான் உங்களுக்கு சொல்லப் போவதில்லை.

அவரது புத்திமதி மிகவும் எளியது. ஆனால் அது ஒருபோதும் தோற்றுப் போகாது. எந்த ஒரு தோற்றத்தோடும் உங்களை நீங்கள் ஐக்கியப்படுத்திக் கொள்ளாதீர்கள் என்று அவர் புத்திமதி கூறுகிறார். இந்த உடல் ஒரு தோற்றம், இந்த மனம் ஒரு தோற்றம், இந்த உலகமே ஒரு தோற்றம். முழுமையான உண்மையாக இருக்கின்ற ஒரே விஷயம் உங்களது பேருணர்வு மட்டுமேயாகும். மற்றவை எல்லாம் மாறிக்கொண்டே இருக்கின்றன. எது மாறிக்கொண்டே இருக்கிறதோ அது ஒரு தோற்றம் என்பதாக ஆகிறது. அதோடு உங்களை ஐக்கியப்படுத்திக் கொள்ளாதீர்கள். மாற்றமே அடையாத தெய்விகமே நீங்கள், மாற்றமே அடையாத இறைத்தன்மையே நீங்கள். "தோற்றங்களைப் பற்றிக்கொண்டு இருக்காதீர்கள். அப்போது நீங்கள் புத்தரின் மனதோடு இருப்பீர்கள். இதைத்தவிர என்னிடம் வேறு எந்த புத்திமதியும் கிடையாது" என்று போதி தருமர் கூறுகிறார்.

அப்போது நீங்கள் புத்தரின் மனதோடு இருப்பீர்கள் என்று இந்த சூத்திரம் கூறுகிறது. இது போதி தருமர் கூறியதை குறிப்பெடுத்த அந்த மாணவரின் தவறான புரிதலாகும். 'மனம்' என்பதற்கு பதிலாக 'மனம் அற்ற நிலை' என்று நான் அதை திருத்தியாக வேண்டும்.

நீங்கள் ஒரு மனம் என்பதாக இருக்கும்போது உங்களால் ஒரு போதும் ஒரு புத்தரோடு ஒன்றாகி இருக்க முடியாது. இதை நன்றாக புரிந்து கொள்ள முயற்சி செய்யுங்கள். ஏனெனில் இது எல்லையற்ற சிறப்பு வாய்ந்ததாக உள்ளது. இங்கே நீங்கள் எல்லாரும் உங்களது மனம்தான் நீங்கள் என்று எண்ணிக் கொண்டிருந்தால், அதன் பின்னர் இங்கே எத்தனை மனிதர்கள் இருக்கிறீர்களோ, அத்தனை மனங்கள் இருக்கும். ஆனால் நீங்கள் அனைவரும் எந்தவிதமான எண்ணங்களும் இல்லாமல் அமைதி ஆகிவிட்டால் அதன்பிறகு இங்கே ஒரே ஒரு மனம் மட்டுமே இருக்கிறது. அதன்பிறகு எல்லா வேற்றுமைகளும் மறைந்து விடுகின்றன. நீங்கள் ஓர் ஆணா அல்லது ஒரு பெண்ணா, ஒரு சிறு குழந்தையா அல்லது வயதான வரா, கல்வி கற்றவரா அல்லது கற்காதவரா, ஏழையா அல்லது பணக்காரரா என்பது அப்போது ஒரு பொருட்டாக இருக்காது.

மனதைக் கடந்து அதற்கு அப்பால் சென்றுவிடுகின்ற அந்த நொடிப்பொழுதிலேயே எல்லா வேற்றுமைகளும் மறைந்து விடுகின்றன. மனதினால் தான் எல்லா வேறுபாடுகளும் உண்டாக்கப்பட்டுள்ளன. மனதிற்கு அப்பால் வெறுமனே ஓர் அமைதியான வானம், ஒரு தூய வெளி மட்டுமே இருக்கிறது. அந்த தூய வெளியில் புத்தரோடு நீங்கள் அனைவரும் இந்த பிரபஞ்சத் தோடு ஒன்றாகி இருக்கிறீர்கள். நீங்கள் இந்த முழுமையுடன் ஒன்றாகி இருக்கிறீர்கள். இப்படி நீங்கள் இந்த முழுமையோடு ஒன்றாகி இருப்பது மட்டுமே புனிதத்தன்மை என்று நான் அழைக்கிறேன்.

*"ஆனால் புத்தர்களையும் போதி சத்வர்களையும் நான் ஏன் வழிபடக்கூடாது?" என்று சீடர்கள் போதி தருமரிடம் கேட்கின்றனர்.*

அந்த சீடர் இரண்டாம் தர மாணவராக இருப்பார் போன்று தெரிகிறது. ஏனெனில் போதி தருமர் ஏற்கெனவே இதற்கு பதில் சொல்லிவிட்டார். எனவே இப்போது போதி தருமரின் பதில் என்று அந்த சீடர் எதைக் கொடுக்கிறாரோ அது நிச்சயமாக போதி தருமரின் பதிலாக இருக்க வேண்டும் என்பதை நான் மறுக்கிறேன். அது அந்த அளவுக்கு முட்டாள்தனமானதாக இருப்பதாகப் போதி தருமரால் அப்படி சொல்லியிருக்க முடியாது. ஆகவே, அந்த சீடர்

என்ன எழுதியிருக்கிறார் என்பதை முதலில் நான் படிக்கிறேன். அதன்பிறகு போதி தருமர் அதற்கு என்ன சொல்லி இருப்பார் என்பதை உங்களுக்கு கூறுகிறேன்.

சாத்தான்களும், பேய்களும் மட்டுமே மீண்டும் வெளிப்படு கின்ற சக்தியைப் பெற்றிருக்கின்றன. அவை எல்லாவிதமான பாவனைகளோடும் போதி சத்துவர்களின் தோற்றங்களை உருவாக்க முடியும். ஆனால் அவை பொய்யானவை. அவர்களில் யாரும் புத்தர்கள் அல்லர். புத்தர் என்பது உங்களது சொந்த மனம். உங்களது வழிபாட்டை தவறான திசையில் செலுத்தாதீர்கள்.

சாத்தான் ஆனால் புத்தர்கள் போன்று பாசாங்கு செய்து நடிக்க முடியும் என்பதால் புத்தரை வழிபடுவது மறுக்கப்பட்டது என்பது போன்று அந்த சீடர் கூறிக் கொண்டிருக்கிறார். நீங்கள் வழிபடும் போது அந்தத் தோற்றம் புத்தர் போன்று இருக்கும். ஆனால் உண்மையில் அந்தத் தோற்றத்தின் பின்னால் ஒரு சாத்தான் மறைந்து கொண்டு இருக்கும். இது போதி தருமரின் பதிலாக இருக்க முடியாது.

கடவுளை நம்பாத ஒரு மனிதன் சாத்தான்களையும் நம்ப முடியாது. கடவுளை மறுக்கின்ற ஒரு மனிதன் நிச்சயமாக எல்லா சாத்தன்களையும் மறுக்கின்ற தகுதியுடன்தான் இருந்தாக வேண்டும். மேலும் இதற்கான பதிலானது போதி தருமர் அடிப்படையான சூத்திரத்தில் கூறிய ஒன்றாக மட்டுமே இருக்க முடியும். "நீங்கள் எந்த ஒரு புத்தரையும் வழிபடக்கூடாது. ஏனெனில் நீங்கள் ஒரு புத்தர்" என்பதுதான் சந்தேகமின்றி போதி தருமரின் பதிலாக இருந்திருக்கும். ஒரு புத்தர் மற்றொரு புத்தரை வழிபடுவது வெறுமனே முட்டாள்தனமானது.

எனக்கு மற்றொரு ஜென் குருவின் ஞாபகம் வருகிறது. அவரும்கூட போதி தருமரைப் போன்றே சில குணங்களைப் பெற்றிருக்க வேண்டும். அவர் குளிர்காலத்தில் ஒரு புத்த கோயிலில் தங்கி இருந்தார். அவர் ஒரு மிகப்பெரிய குரு என்பதை அறிந்துகொண்ட அந்த கோயில் பூசாரியானவர் அந்த குருவை கோயிலுக்குள் தங்குவதற்கு அனுமதித்திருந்தார். ஆனால் நடு இரவில் அந்த பூசாரி எழுந்து பார்த்தார். திடீரென்று அங்கு அதிக

வெளிச்சம் தெரிந்தது. பூசாரியின் அறையானது கோயிலுக்குப் பக்கத்தில் இருந்ததால் அவர் கோயிலுக்குள் எட்டிப் பார்த்தார். அங்கே சிலர் தங்குவதற்கு அனுமதி கொடுத்த அந்த குரு அந்தக் கோயிலில் இருந்த கௌதம புத்தரின் ஓர் அழகான மரச்சிலையை எரித்துக்கொண்டு அந்த நெருப்பில் குளிர் காய்ந்து கொண்டு இருந்தார்.

அந்த பூசாரி பைத்தியக்காரர் போன்று ஆகிவிட்டார். அவர் அந்த குருவிடம், "உங்களுக்கு புத்தி கெட்டு விட்டதா? நீங்கள் எரிப்பது கௌதம புத்தரின் சிலை" என்று சத்தம் போட்டார். ஆனால் அந்த குருவோ தனது கைத்தடியை எடுத்து அந்த மரச்சிலையை எரிந்த சாம்பலில் எதையோ தேட ஆரம்பித்தார். அந்த பூசாரி அவரிடம், "நீங்கள் என்ன தேடுகிறீர்கள்?" என்று கேட்டார். அதற்கு அந்த குரு, "நான் புத்தரின் எலும்புகளைத் தேடிக் கொண்டிருக்கிறேன்" என்று பதிலளித்தார்.

ஓர் அழகான சிலை எரிக்கப்பட்டு விட்டதே என்கிற கோபத்தில் அந்த பூசாரி இருந்தாலும்கூட இதைக்கேட்ட அவர் சிரிக்க வேண்டியதாயிற்று: ஆனால் அந்த பூசாரி குருவிடம், "மரச்சிலைக்கு எப்படி எலும்புகள் இருக்க முடியும்" என்று கேட்டார்.

அதற்கு அந்த குரு பூசாரியிடம், "அதைத்தான் நான் உங்களுக்கு காட்டிக் கொண்டிருந்தேன்; அதற்குள் எலும்புகள் இல்லை என்றால் அது புத்தரின் சிலை அல்ல. அது புத்தர் அல்ல; அது மரத்தை ஒரு குறிப்பிட்ட உருவத்திற்கு செதுக்கியதாகும். அதைப் பார்த்து ஏமாற்றமடைந்து விடாதீர்கள். இன்று இரவு மிகவும் நீண்ட இரவாக, மிகவும் குளிராக உள்ளது. மேலும் அதிக தூரப் பயணம் செய்து வந்ததால் நானும் மிகவும் களைப்புடன் இருக்கிறேன். எனவே நீங்கள் எனக்கு கொஞ்சம் உதவலாமே. உங்களிடம் இன்னும் மூன்று மரச்சிலைகள் உள்ளன. வழிபடுவதற்கு ஒரு சிலை போதுமானது. எனவே மீதி இரண்டை நீங்கள் எனக்கு கொடுக்கலாம். இரவு உண்மையில் மிகவும் குளிராக உள்ளது. மேலும் நான் ஓர் உயிர் உள்ள புத்தர். ஓர் உயிருள்ள புத்தருக்காக கொஞ்சம் சூடேற்றுவதற்காக ஒரு மர

புத்தரை எரிப்பது முற்றிலும் சரியானதாகும். இந்த கோயிலில் அதிகக் குளிராக இருக்கிறது" என்று கூறினார்.

இதைக்கேட்ட அந்த பூசாரி பயந்து விட்டார். இவர் பயங்கரமான ஆள் போன்று தெரிகிறது என எண்ணிக்கொண்டார். "நான் தூங்குவதற்கு போய்விட்டால், இந்த ஆள் எனது எல்லா மரச்சிலைகளையும் எரித்து விடுவார்" என்று நினைத்தார். ஓர் இரவில் அந்த பூசாரி குருவை கோயிலில் இருந்து வெளியே தள்ளினார். அப்போது அந்த குரு இது சரியல்ல, இதற்காக நீங்கள் பின்னர் மனம் வருந்துவீர்கள். குளிர்கால இரவில் இருள் நிறைந்த ஓர் இரவில் நீங்கள் ஓர் உயிருள்ள புத்தரைத் தூக்கி வெளியே எறிகிறீர்கள். ஆனால் மரத்தினால் ஆன புத்தர்களை நீங்கள் பாதுகாப்பாக வைத்திருக்கிறீர்கள். உங்களுக்கு ஏதாவது பைத்தியம் பிடித்து விட்டதா?" என்று கேட்டார்.

உடனே அந்த பூசாரி, "இதுகுறித்து உங்களிடம் விவாதம் செய்ய நான் விரும்பவில்லை. யார் பைத்தியம் என்பதை நான் அறிவேன். நீங்கள் வெறுமனே வெளியே செல்லுங்கள்" என்று கூறினார்.

அந்த குருவிற்கு என்ன நடந்தது என்பதைப் பார்ப்பதற்கு அந்த பூசாரி காலையில் கோயில் கதவைத் திறந்தார். அந்த குரு சாலையின் ஓரத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தார். அவர் காட்டில் உள்ள சில பூக்களைப் பறித்து வந்து அந்த சாலையில் உள்ள மைல் கல்லில் வைத்துவிட்டு, "புத்தம் சரணம் கச்சாமி, சங்கம் சரணம் கச்சாமி, தம்மம் சரணம் கச்சாமி" என்று வழிபட்டுக் கொண் டிருந்தார்.

அந்த பூசாரியால் இதை நம்பமுடியவில்லை. "அவர் உண்மையிலேயே பைத்தியம்தான். நேற்று இரவு இந்த மனிதர் விலை உயர்ந்த அந்த மரத்தில் செய்த புத்தர் சிலையை எரித்தார். ஆனால் இப்போது அதே மனிதர் ஒரு மைல் கல்லை புத்தராக வழிபட்டுக் கொண்டு இருக்கிறாரே" என்று நினைத்தார். அந்த பூசாரி அவரிடம் நெருங்கி வந்து, "நீங்கள் என்ன செய்து கொண்டு இருக்கிறீர்கள்?" என்று கேட்டார்.

அதற்கு அந்த குரு, "இதுதான் எனது காலை நேர பிரார்த்தனை" என்றார். உடனே அந்த பூசாரி அவரிடம், "நீங்கள் ஒரு விநோதமானவர் போல் தெரிகிறது. நேற்று இரவு நீங்கள் என்னுடைய புத்தர் சிலையை எரித்தீர்கள். ஆனால் இப்போது ஒரு மைல் கல்லை புத்தராக வழிபடுகிறீர்களே?" என்று கேட்டார்.

அதற்கு அந்த குரு, "நீங்கள் புரிந்துகொள்ளவில்லை. அது நாம் காண்பதைப் பொறுத்து மட்டுமே உள்ளது. இதை நீங்கள் ஒரு புத்தர் என்று கண்டுகொண்டால், அதன் பின்னர் இது ஒரு புத்தர் ஆகிவிடும். நீங்கள் மரச்சிலையில் ஒரு புத்தரைக் கற்பனையாகக் கண்டீர்கள். அது ஒரு புத்தர் ஆகிவிட்டது. இவை எல்லாம் மனதின் விளையாட்டுகள். எனக்கு பிரார்த்தனைகளில் நம்பிக்கை இல்லை. உங்கள் வருகைக்காக நான் காத்திருந்து அதன் பின்னர்தான் இந்த மைல் கல்லை வழிபட்டேன். நீங்கள் எதை வழிபட்டாலும் தவறான ஏதோ ஒன்றைத்தான் வழிபடுகிறீர்கள் என்று உங்களுக்குக் காட்டுவதற்காகத் தான் நான் இப்படி செய்கிறேன். ஏனெனில் நீங்களே ஒரு புத்தர் தான். வழிபடுகிறவன் தான் புத்தரே தவிர வழிபடக்கூடியது புத்தர் அல்ல. எனவே இன்று இரவு நான் கோயிலுக்குள் வரலாமா?" என்று கேட்டார்.

உடனே அந்த பூசாரி, "வேண்டாம், நீங்கள் சொல்வது சரியானதாக இருந்தாலும்கூட ஒருவேளை நான் தவறு செய்தவன் ஆகிவிடலாம். உங்களது இந்த மாபெரும் புரிதலை என்னால் பின்பற்ற முடியாது. இது ஆபத்தானது. இந்த இடத்தை காலி செய்துவிட்டு நீங்கள் உங்களது செயல்களை வேறு ஏதாவது கோயில்களில் வைத்துக் கொள்ளுங்கள். நான் ஒன்றுமறியாத ஒரு பூசாரி; நீங்கள் ஏற்கெனவே எனது அழகான ஒரு புத்தரை அழித்து விட்டீர்கள்; இப்போது என்னால் முடியாது. நீங்கள் என்னை திருப்திப்படுத்தினாலும் கூட என்னால் உங்களை கோயிலுக்குள் அனுமதிக்க முடியாது" என்று கூறினார்.

அதற்கு அந்த குரு, "இது ஒரு கேள்வி அல்ல. ஆனால் நீங்கள் சரியானபடி புரிந்து கொண்டதை என்னால் காண முடிகிறது. மேலும் ஒருநாள் நீங்கள் என்னைத் தேடிக்கொண்டு வருவீர்கள். உங்களது கண்கள் நீஙகள் புரிந்து கொண்டதற்கான ஒளியை.

புரிந்து கொண்டதற்கான ஒளிக்கீற்றை என்னால் காண முடிகிறது. என்னை நீங்கள் உள்ளே விடவேண்டாம். ஆனால் நான் ஏற்கெனவே உங்களுக்குள் வந்து விட்டேன்" என்று கூறினார்.

இரண்டு வருடங்களுக்குப் பிறகு அந்த பூசாரி அந்த குருவிடம் மன்னிப்பு கேட்பதற்காக வந்தார். மேலும், "உங்களுக்குத் தேவைப்படும் போது நீங்கள் எரித்துக் கொள்ளுங்கள்" என்று கூறிக்கொண்டு தன்னுடன் மீதம் இருந்த மூன்று மரச் சிலைகளையும் எடுத்துக்கொண்டு வந்தார். நான் புரிந்து கொண்டேன். அன்று இரவில் இருந்து ஒரு நொடிப்பொழுது கூட உங்களை என்னால் மறக்க முடியவில்லை. உங்களது அழகு, உங்களது அருள், உங்களது அமைதி, உங்களது மௌனம், மேலும் நான் என்ன செய்து கொண்டிருந்தேனோ அது முட்டாள்தனமானது என்பதை எனக்குப் புரிய வைப்பதற்கு தாங்கள் எடுத்துக்கொண்ட மாபெரும் முயற்சி ஆகியவற்றை மறக்க முடியவில்லை. மேலும் நான் உங்களிடம் தவறாக நடந்து கொண்டேன். இருள் நிறைந்த இரவில், குளிர் நிறைந்த இரவில் நான் உங்களை வெளியே பிடித்து தள்ளிவிட்டேன். என்றாலும்கூட நான் புரிந்து கொள்வதற்கு எனக்கு மீண்டும் ஒரு சந்தர்ப்பம் கொடுக்க வேண்டும் என்பதற்காக நீங்கள் அந்த கடுங்குளிரில் எனக்காக காத்துக் கொண்டிருந்தீர்கள். ஆனால் அந்த சந்தர்ப்பத்தையும் கூட தவற விட்டுவிடுகின்ற அளவுக்கு நான் முட்டாளாக இருந்து விட்டேன்."

"ஆனால் இரண்டு வருடங்கள் போதும். நீங்கள் எனது மனதைப் பிடித்து ஆட்டிக் கொண்டிருந்தீர்கள். புத்தர் என்பவர் எனக்குள்ளே இருக்கிறார் என்பதை நன்றாக அறிந்துகொண்டு நான் இப்போது வந்திருக்கிறேன். கோயிலில் உள்ள சிலைகளில் அவர் இல்லை. மேலும் கோயில் சிலைகளும் மைல் கல்களும்கூட வேறானவை அல்ல என்பதை புரிந்து கொண்டேன்" என்று கூறினார்.

இது எனக்கு வேறு ஒரு விஷயத்தை நினைவுபடுத்துகிறது. இந்தியாவில் பிரிட்டிஷ் அரசாங்கம் முதல் முதலாக சாலைகளை உருவாக்கி அதில் மைல் கல்லை நட்டனர். அந்த மைல் கல்லிற்கு

சிவப்பு நிறத்தில் பெயிண்ட் அடித்தார்கள். ஏனெனில் சிவப்பு நிறமானது பளிச்சென்று தெரியும். வெகு தூரத்தில் இருந்தும்கூட நீங்கள் அதைக் காண முடியும். குறிப்பாக பசுமையான வயல்கள் மற்றும் காடுகளுக்கு முரணாக அவற்றின் சிவப்பு நிறம் தனியாக தெரிந்தது. வேறு ஏதாவது வண்ணம் அடித்திருந்தால் குழப்பமாகி இருக்கும். ஆனால் சிவப்பு நிறம் முற்றிலும் தனியாக தெரிந்தது.

ஆனால் கிராமத்தில் உள்ளவர்கள் அந்த மைல் கற்களை வழிபட ஆரம்பித்ததைப் பார்த்து சாலை அமைக்கும் பணியில் ஈடுபட்டிருந்த பொறியாளர்கள் ஆச்சரியமடைந்தனர். கிராம மக்கள், இவை அனுமானின் சிலைகள் என்று நினைத்துக் கொண்டனர். அந்த கற்கள் வெறும் மைல் கற்களே என்று கிராமத்தினரிடம் கூறுவது அந்த பொறியாளர்களுக்கு ஒரு மிகப்பெரிய பிரச்சினையாக ஆகிவிட்டது. ஆனால் கிராமத்து மக்கள், "நீங்கள் வேண்டுமானால் அதை மைல் கல் என்று நினைத்துக் கொள்ளுங்கள். ஆனால், எங்களுக்கு இது மிகவும் நல்லது. இவை மிகவும் அழகாக உள்ளன. மேலும் நாங்கள் உங்களுக்கு எந்தத் தீங்கும் செய்யவில்லை. நாங்கள் வெறுமனே அதை வழிபடுவதை மட்டுமே செய்கிறோம்" என்று கூறினார்கள்.

நான் சரித்திரத்தை படித்துப் பார்த்தேன். முதல்முதலாக இந்தியாவில் சாலைகள் உருவானபோது பிரிட்டிஷ் பொறி யாளர்கள் அதிர்ச்சி அடைந்தனர். "நீங்கள் வேண்டுமானால் அதை மைல் கல்லாக நினைத்துக் கொள்ளலாம். ஆனால் அதை வழிபடுவதில் என்ன கெடுதல் உள்ளது? எங்களுக்கு அவை வெறுமனே அனுமானின் சிலைகள் போன்று தெரிகிறது" கிராமத்தினர் கூறினார்கள்.

அந்த சீடர் இங்கு எதைக் குறிப்பெடுத்து கூறியிருக்கிறாரோ அது நிச்சயமாக போதி தருமரின் பதிலாக இருக்க முடியாது. அவரது பதில் கீழ்க்கண்டவாறுதான் இருந்திருக்கும். உங்களது புத்த நிலையை நீங்கள் நினைவு கூர்ந்து கொள்ளுங்கள், உங்களது சொந்த புத்த நிலை குறித்து விழிப்படையுங்கள். மேலும் அப்படி விழிப்படையும் போது உங்களது மனம் அற்ற நிலை உங்களை புத்தரோடு ஒன்றாக்கி விடும். உங்களது வழிபாட்டை தவறான

திசையில் மாற்றி விடாதீர்கள். உங்களுக்கு சொந்தமான உங்களுக்குள் உள்ள பேருணர்வைத்தான் நீங்கள் வழிபட வேண்டும். நீங்களே கோயில், நீங்களே வழிபடுபவர், நீங்களே வழிபடப்படுவதுமாக இருக்கிறீர்கள்.

*விழிப்புணர்வு, அதிசயிக்கும் விழிப்புணர்வு என்று நீங்கள் எதை அழைக்கிறீர்களோ அதன் சமஸ்கிருத வார்த்தைதான் புத்தர் என்பதாகும். நீங்கள் பதில் செயல் புரிந்து கொண்டும், உணர்ந்து கொண்டும், உங்களது புருவங்களை வளைத்துக் கொண்டும், கண்களை இமைத்துக் கொண்டும் கை கால்களை அசைத்துக் கொண்டும் இருக்கின்ற இந்த செயல்கள் எல்லாம் உங்களது அதிசயிக்கும் விழிப்புணர்வின் இயல்பேயாகும். மேலும் இந்த இயல்புதான் மனம் அற்ற நிலை. இந்த மனம் அற்ற நிலைதான் புத்தர். மேலும் புத்தர் தான் வழி. வழிதான் ஜென். ஆனால் ஜென் என்னும் வார்த்தை புதிர் நிறைந்த ஒன்றாக இருக்கிறது. உங்களது இயல்பைக் கண்டுகொள்வதுதான் ஜென் ஆகும்.*

ஜென் என்னும் வார்த்தை புதிர் போன்று இருக்கிறது. ஏனெனில் அது சமஸ்கிருத மூல வார்த்தையில் இருந்து வருகிறது; அது தியான் என்னும் வார்த்தையில் இருந்து வருகிறது. புத்தர் அவரது மக்களின் சமகாலத்து மொழியை பயன்படுத்தினார். ஏனெனில் சமஸ்கிருதம் எப்போதும் பண்டிதர்களின் மொழியாக இருந்தது. புத்தர் செய்தது ஒரு புரட்சிகரமான செயலாகும். பண்டிதர்களின் மொழியை பயன்படுத்தாமல், மக்களின் மொழியை பயன்படுத்தி புத்தர் ஒரு புரட்சியை கொண்டு வந்தார். அவர் பாலி மொழியை பயன்படுத்தினார். ஏனெனில் அப்போது தான் கிராமத்தில் உள்ளவர்களும் புரிந்துகொள்ள முடியும். பாலி மொழியில் தியான் என்பது கொஞ்சம் வேறுபட்ட வடிவத்தில் மாற்றப்பட்டது; அது ஜ்ஜான் (ZHAN) என்று ஆகியது.

மேலும் போதி தருமர் சீனாவை அடைந்தபோது, அவர் ஜ்ஜான் பற்றி பேசினார். ஆனால் சீன மொழியில் அது அடுத்த மாற்றத்தை அடைந்தது; அது ச்சான் (CHAN) என்றானது. அதன்பிறகு சீனாவில் இருந்து அது ஜப்பானைச் சென்றடைந்தது. ஜப்பானில் ச்சான் என்பது ஜென் (ZEN) என்று மாறியது. ஜப்பானியர்களுக்கு இது வெளிநாட்டில் இருந்து வந்த வார்த்தையாகும். ச்சான்

என்பதற்கு சீனத்திலும் மூல வார்த்தை கிடையாது; அவர்களுக்கும் இது அயல்நாட்டில் இருந்து வந்தது.

அதனால்தான் ஜென் என்றால் என்ன? என்று ஒரு புதிராக உள்ளது. ஆனால் நீங்கள் மூல வார்த்தைக்கு வரமுடிந்தால் விஷயங்கள் எளிமையாகி விடும். அந்த புதிர் அவிழ்ந்து விடும். தியான் (DHYAN) என்பதற்கு மனதினைக் கடந்து அதற்கு அப்பால் செல்தல், எண்ணங்களின் செயல்பாட்டைக் கடந்து அப்பால் செல்தல், அமைதியினுள் நுழைதல், நகர்தல் இல்லாமல், கலக்கம் இல்லாமல் எல்லாமுமே இல்லாமல், வெறுமனே தூய்மையான வெறுமை மட்டுமே இருக்கின்ற முழு அமைதி என்று அர்த்தமாகும். இந்த வெளி தான் ஜென்னாக இருக்கிறது. இந்த வெளிதான் தியானமாக உள்ளது. இதில் எந்த ஒரு புதிரும் இல்லை.

ஆனால் இந்த நாட்டில் மட்டுமே ஜென் என்பதற்கான மூல வார்த்தையை கண்டுகொள்ள முடியும். ஜென் என்பது இங்கே, இந்த நாட்டில் பிறந்தது, அது ஜப்பானில் மலர்ந்தது. ஜப்பானில் தான் மலர்கள் பூத்தன. எனவே அவை ஒரு புதிர் போன்று இருந்தன. ஏனெனில் அவர்களால் வேர் எங்கே உள்ளது, மரம் எங்கே உள்ளது என்று கண்டுகொள்ள முடியவில்லை. அவர்களால் அந்த மலர்களையும் அவற்றின் நறுமணத்தையுமே காண முடிந்தது. அதன் வேர்கள் வெகு தொலைவில் இந்த நாட்டில் இருந்தது. மேலும் தியானம் என்பது ஜப்பானில் அதன் முடிவான மலர்ச்சியை அடைந்து, இந்தியாவில் கிட்டத்தட்ட அது முற்றிலும் மறைந்து போய்விட்டது மிகவும் துரதிருஷ்டவசமானது ஆகும்.

உலகின் எந்த ஒரு நாட்டில் இருந்தும் யாராவது தியானம் கற்றுக்கொள்ள இந்தியா வர விரும்பினால் அவர்களுக்கு எந்த ஒரு சுற்றுலா விசாவும் கண்டிப்பாக கொடுக்கக் கூடாது என்று இந்திய அரசாங்கமானது அதன் எல்லா வெளிநாட்டு இந்திய தூதரங் களுக்கும் தகவல் அனுப்பியுள்ளது.

தியானத்தைப் பற்றி அரசாங்கம் எதையும் தெரிந்துகொள்ள முடியாது. அரசியல்வாதிகள் தியானம் செய்பவர்களாக இருக்க முடியாது. ஏனெனில் லட்சியங்கள் இல்லாமல், ஆசைகள் இல்லாமல், சாதனைகள் இல்லாமல் இருப்பதுதான் தியானத்தின்

அஸ்திவாரம் ஆகும். ஓர் அரசியல்வாதி தியானம் செய்பவராக இருக்க முடியாது. எனவே இந்திய பல்கலைக்கழகங்களில் தியானத்திற்கு இடமில்லை. ஆனால் தியானம் தான் இந்த உலகிற்கு இந்தியாவின் மிக உயர்ந்த பங்களிப்பாகும். ஆனால் தியானம் கற்றுக்கொள்வதற்கு இந்தியாவிற்கு வர விரும்புகிறவர்கள் உலகம் முழுவதும் உள்ள இந்திய தூதரகங்கள் தடுத்துக் கொண்டிருக் கின்றன. அயல்நாட்டினர் தாஜ்மகாலை பார்க்க விரும்பினாலோ. கஜுராஹோ கோயிலைப் பார்க்க விரும்பினாலோ, காஷ்மீர் தேனிலவுக்கு போக விரும்பினாலோ அல்லது வேறு ஏதாவது முட்டாள்தனமான காரணங்களுக்காக இந்தியாவிற்கு வர விரும்பி னால் அவர்களுக்கு விசா அனுமதிக்கப்படுகிறது. ஆனால் தியானத்திற்காக அவர்கள் இங்கு வருவதற்கு அனுமதிக்கப்படுவ தில்லை.

இந்தியாவில் நிகழ்ந்துவிட்ட துரதிருஷ்டவசமான நிகழ்வு களில் இதுவும் ஒன்றாகும். இந்த உலகிலேயே மிக உயர்ந்த தியானிகளை உருவாக்கியது இந்தியா மேலும் இந்தியாவில் இருந்து மட்டுமே இந்த ஒட்டுமொத்த ஆசியாவும் தியானத்தை கற்றுக்கொண்டது. ஜப்பானில் உள்ள மடாலயங்களில் அது இன்னமும் உயிர்த்துடிப்புடன் இருக்கிறது. ஆனால் மனித முன்னேற்றத்திற்கு இந்தியாவுடன் மிகப்பெரிய சொந்த பங்களிப்பிற்கு எந்த ஓர் இடத்தில் இருந்தும் இந்தியாவில் ஆதரவு இல்லை. ஆனால் இதற்கான காரணம் தெளிவாக உள்ளது. அதிகாரத்தில் உள்ள மக்களுக்கு அமைதியாக இருத்தல் என்பதன் அ. ஆவன்னா கூடத் தெரியாது. அவர்களுக்குத் தெரிந்தது எல்லாம் பரபரப்பான மனம், கவலைகள், துன்பங்கள், லட்சியங்கள், வஞ்சகம், ஒருவர் காலை அடுத்தவர் வாரி விடுதல், மற்றவர்களின் அதிகாரத்தில் மூச்சு முட்டச் செய்தல் ஆகியவைதானாகும். அவர்களது ஒட்டுமொத்த கவலையும் அதிகாரத்தில் இருக்க வேண்டும் என்கிற அபரிமிதமான ஆசை மட்டுமேயாகும். தியானம் என்பது முற்றிலும் வேறுபட்ட ஒரு விஷயம். வேறுபட்டது மட்டுமல்ல முற்றிலும் நேர் எதிரான ஒரு பரிமாணம். அது எளிய மனிதனின் பாதை, எளிய உள்ளத்தின் பாதை. அதை ஒரு பனித்துளி ஒன்று மகா சமுத்திரத்தில் மறைந்து போவதைப்

போன்று மறைந்து போவதில் மகிழ்ச்சி அடைய விரும்புகிறவர் களின் பாதையாகும்.

ஆயிரக்கணக்கான சூத்திரங்களுக்கும், சாஸ்திரங்களுக்கும் உங்களால் விளக்கம் அளிக்க முடியும் என்றாலும்கூட நீங்கள் உங்களது சுய இயல்பை கண்டுகொள்ளாத வரையில் உங்களது போதனைகள் அழிந்து போகக்கூடிய ஒருவரின் போதனையே அல்லாமல் ஒரு புத்தரின் போதனை ஆகாது.

நீங்கள் புனித நூல்களை புரிந்து கொள்ளலாம். நீங்கள் வேதங்களை அறிந்துகொள்ளலாம். நீங்கள் உபநிடதங்களை அறிந்து கொள்ளலாம். நீங்கள் புனித பைபிளை அறிந்து கொள்ள லாம். நீங்கள் புனித குர்ஆனையோ அல்லது புனிதகீதையையோ அறிந்து கொள்ளலாம். ஆனால் உங்களையே நீங்கள் அறிந்து கொள்ளவில்லை என்றால் உங்களது போதனைகள் வெறுமனே திரும்பச் சொல்லப்படுகின்ற ஒன்றாக, கிளிப்பிள்ளையானது சொல்லிக்கொடுப்பதை இயந்திரத்தனத்துடன் அப்படியே திரும்பச் சொல்வது போன்றதாகும். ஆனால் உங்களது பண்டிதர்களை விடவும் கிளிகள் ஒருவேளை அதிக புத்திசாலித்தனத்துடன் கூட இருக்கலாம்.

இது நான் கேள்விப்பட்ட கதை. ஒரு பாதிரியாரிடம் இரண்டு கிளிகள் இருந்தன. அதிகாரப்பூர்வ கிறிஸ்தவ பிரார்த்தனையை கூறுவதற்கு வருடக்கணக்கில் அவற்றுக்கு அவர் பயிற்சி அளித்திருந்தார். அந்த கிளிகளுக்காக அவர் சிறிய தங்க ஜெபமாலைகளை உருவாக்கி இருந்தார். அவையும் அந்த ஜெப மாலையைப் பிடித்துக்கொண்டு பிரார்த்தனைகளை கூறிவந்தன. அங்கு வருகின்ற விருந்தினர்கள் இதைக் கண்டு ஆச்சரிய மடைந்தனர். அவற்றின் கைகளில் ஜெபமாலை வைத்துக் கொண்டு கிட்டத்தட்ட புனிதர்கள் போன்று காணப்பட்டன.

கிளிகளுக்கு இந்த அளவுக்கு கற்றுக் கொடுத்ததற்காக மிகுந்த பாராட்டைப் பெற்றதால் அந்த பாதிரியார் மேலும் ஒரு கிளியை வாங்கி அதற்கும் பயிற்சி அளிக்க எண்ணினார். ஆகவே அவர் ஒரு புதிய கிளியைக் கொண்டுவந்து, ஜெப மாலையோடு பிரார்த்தனைகளை ஒப்பித்துக் கொண்டிருக்கிற அந்த இரண்டு

கிளிகளுக்கு இடையே வைத்தார். அந்த பாதிரியார் உள்ளே சென்ற உடன், ஒரு கிளி அடுத்த கிளியிடம், "ஜார்ஜ் இப்போது ஜெப மாலையை கீழே போட்டுவிடு. நமது பிரார்த்தனை கேட்கப்பட்டு விட்டது. நமது காதலி நம்மிடம் வந்து சேர்ந்துவிட்டாள்" என்று கூறியது. அது ஒரு பெண் கிளி. ஆகவே கிளிகளும் கூட அதிக புத்திசாலித்தனத்துடன் இருக்கின்றன.

தன்னைத்தானே அறிந்து கொள்ளாத ஒரு மனிதன் தான் புனித நூல்களை அறிந்திருக்கிறோம் என்பதற்காக மற்றவர்களுக்கு கற்றுக் கொடுப்பதற்காக வெட்கப்பட வேண்டும். உண்மையான மத உலகில் அறிவுஜீவி தனத்திற்கு அர்த்தம் இருக்காது. அது விளக்கங்களின் உலகம் அல்ல, அது அனுபவங்களின் உலகம். புனித நூல்களுக்கு தக்கபடி கற்பிக்கின்ற ஒரு மனிதன் அழிந்து போகக்கூடியவன். அவன் ஒரு புத்தன் அல்லன். உண்மையான பாதையானது உயர்ந்த நிலையில் உள்ளது. அதை மொழிகளால் வெளிப்படுத்த முடியாது. அப்படி இருக்கும் போது புனித நூல்களால் என்ன பயன்? ஆனால் யார் ஒருவர் தனது சுய இயல்பை கண்டுகொள்கிறாரோ அவரால் ஒரு வார்த்தைகூட படிக்க முடியாது என்றாலும்கூட பாதையைக் கண்டுகொள்ள முடியும். ஒரு புத்தர் கூறுவது எல்லாம் அவரது மனம் அற்ற நிலையின் வெளிப்பாடுதான். ஆனால் அவரது உடலும், வெளிப்பாடுகளும் அடிப்படையில் வெறுமையானவையாக இருப்பதால் நீங்கள் வார்த்தைகளில் ஒரு புத்தரைக் காண முடியாது. பாதையானது அடிப்படையில் ஒழுங்காக உள்ளது. முழுமை யடையச் செய்ய வேண்டியதில்லை. பாதைக்கு எந்த ஒரு வடிவமும், ஒலியும் கிடையாது. அது கண்களுக்குப் புலப்படாதது. உணர்வதற்கு கடினமானது. அது நீங்கள் தண்ணீர் குடிப்பது போன்றது. தண்ணீரானது எந்த அளவுக்கு சூடாகவோ அல்லது குளிர்ச்சியானதாகவோ உங்களது என்று நீங்கள் அறிந்து கொள்ள முடியும். ஆனால் அந்த அனுபவத்தை நீங்கள் மற்றவர்களிடம் கூறமுடியாது. ததாகதா மட்டுமே அறிந்து கொள்கின்ற ஒன்றாக உள்ளது. அது மனிதர்களுக்கும், கடவுளுக்கும் தெரியாத ஒன்றாக உள்ளது. அழிந்து போகக்கூடியவற்றின் விழிப்புணர்வு குறைவாக உள்ளது.

நீங்கள் கொஞ்சமாகத்தான், மிகவும் கொஞ்சமாகத்தான் விழிப்புணர்வை பெற்றிருக்கிறீர்கள். உங்களது முழு உயிர் உணர்வும் கணக்கில் எடுத்துக் கொண்டால், அதன்பின்னர் அதில் ஒன்பது பகுதிகள் இருளிலும், உணர்வு இழந்த நிலையிலும் உள்ளன. பத்தில் ஒரு பங்கு மட்டுமே விழிப்புணர்வுடன் உள்ளது. வெறுமனே மேலெழுந்தவாரியான ஓர் அடுக்கு மட்டுமே அப்படி உள்ளது. அதுவும் கூட எளிதில் கலக்கமடைந்து விடுகிறது. யாரோ ஒருவர் உங்களை அவமானப்படுத்தும் போது நீங்கள் பணிவைப் பற்றி எல்லாம் மறந்து விடுகிறீர்கள், மென்மையாக நடந்துகொள்ள வேண்டும் என்பதைப் பற்றி எல்லாம் மறந்து விடுகிறீர்கள். நீங்கள் உடனடியாக கோபம் அடைந்து விடுகிறீர்கள். திடீரென்று உங்களுக்குள் உள்ள காட்டுமிராண்டித்தனம் மேலே எழுந்து வருகிறது. உங்களைக் கொஞ்சம் சுரண்டிப் பார்த்தால் போதும். உங்களது உயிர் உணர்வில் இருந்து அந்த மிருகம் அதன் உண்மை முகத்தை காட்ட ஆரம்பிக்கிறது.

உங்களது நாகரிகம் மேலெழுந்தவாரியாக உள்ளது. அது உங்களது ஆடைகளைப் போன்றது; எந்த நேரத்திலும் நீங்கள் அதைக் கீழே போட்டுவிட முடியும். மேலும் உங்களது நாகரிகம், உங்களது கலாசாரம், உங்களது மதம், நீங்கள் பெருமைப்பட பேசிக் கொண்டிருக்கிற உங்களது குணநலன்கள் ஆகிய எல்லாவற்றையும் நீங்கள் கைவிட்டு விடுகின்ற அந்த நொடிப்பொழுதிலேயே அவை மறைந்து போவதை நீங்கள் அனைவரும் அறிவீர்கள். உங்களது பேருணர்வு மிகவும் சிறியது. அழிந்து போகக்கூடியவர்களின் விழிப்புணர்வு குறைவாக உள்ளது. முழுவதும் விழிப்பு நிலை அடைந்த மனித இனத்தின் சிகரங்களை அதனால் அடைய முடியாது. அதனால்தான் ஒரு புத்தர் தவறாகப் புரிந்து கொள்ளப் படுகிறார். அவர் செய்கின்றதெல்லாம் உங்களிடம் இருந்து வெகு தூரம் விலகி உள்ளது. அவர் கிட்டத்தட்ட சூரிய ஒளியில் பிரகாசிக்கும் இமய மலையின் சிகரம் போன்று இருக்கிறார். ஆனால் நீங்களோ இருள் நிறைந்த பள்ளத்தாக்குகளில் இருக்கிறீர்கள். அவர் என்ன கூறுகிறாரோ அது உங்களை வந்தடைந்தாலும் கூட அது ஒருபோதும் அவர் கூறியது போன்றே இருப்பதில்லை. பள்ளத்தாக்கின் எதிரொலிகளை மட்டுமே நீங்கள்

கேட்கிறீர்கள். அதில் ஒருசில மட்டுமே உங்களை வந்தடைகிறது. எனவே நீங்கள் அதை உங்களது மனதிற்கு தக்கபடி பொருள் விளக்கிக் கொள்கிறீர்கள்.

ஒருநாள் இரவு இப்படி நடந்தது. ஒவ்வொரு நாள் இரவும் தனது சொற்பொழிவு முடிந்த பிறகு கௌதம புத்தர் தனது சீடர்களிடம், "இப்போது அதற்கான நேரம்; நீங்கள் சென்று அவசியம் செய்ய வேண்டிய கடைசி விஷயத்தைச் செய்யுங்கள். நீங்கள் தூங்குவதற்கு போவதற்கு முன்பு அதை மறந்து விடாதீர்கள்" என்று கூறுவது உண்டு. அவர் அப்படி குறிப்பிடுவது, தூங்குவதற்கு போவதற்கு முன்பு செய்ய வேண்டிய கடைசி தியானம் பற்றியதாகும். ஆனால் ஒருநாள் இரவு ஒரு காரியம் நடந்தது. அந்த கூட்டத்தில் ஒரு திருடனும் வந்துவிட்டான். ஒரு விபச்சாரியும் கூட வந்திருந்தாள். "இப்போது அதற்கான நேரம். நீங்கள் தூங்குவதற்கு போவதற்கு முன்பு அவசியம் செய்ய வேண்டிய கடைசி விஷயத்தை செய்யுங்கள்" என்று புத்தர் கூறியபோது அந்த விபச்சாரி, "அடக் கடவுளே, நான் இங்கு இருப்பது அவருக்குத் தெரிந்து விட்டது. நான் வேகமாகச் செல்ல வேண்டும்" என்று நினைத்தாள். அந்தத் திருடன் தனக்குள்ளாக, 'யாரும் என்னைப் பார்த்து விடக்கூடாது என்பதற்காக நான் இருட்டில் இருக்கிறேன். ஆனால் இந்த மனிதர் நான் ஒரு திருடன் என்பதை அடையாளம் கண்டு கொண்டு விட்டார். இப்போது சென்று இரவில் தூங்குவதற்கு முன்பு செய்ய வேண்டிய கடைசி விஷயத்தை செய் என்று எனக்குத்தான் கூறுகிறார். அடக் கடவுளே, இந்த மனிதர் மிகவும் விநோதமானவராக இருக்கிறாரே; இப்போது நான் ஓடியாக வேண்டும்; இப்போது நேரமாகி விட்டது. எனவே எனது வேலையை முடிக்க வேண்டிய நேரம் இது; இல்லையென் றால் இன்று இரவு எனக்குத் தூக்கம் வராது" என்று நினைத்தான்.

ஆயிரக்கணக்கான சந்நியாசிகள் தியானம் செய்வதற்கு சென்றார்கள். அந்த விபச்சாரி தான் தொழில் செய்யும் இடத்திற்குச் சென்றாள். அந்த திருடன் தனது வேலையைத் தேடிச் சென்றான். புத்தர் ஒரே ஒரு விஷயத்தைத்தான் கூறினார். ஆனால் ஒவ்வொரு வரின் சொந்த மனதிற்கு தக்கபடி அதற்கு பொருள் விளக்கம் எடுத்துக்கொள்ளப்பட்டது. அவர்கள் வெளித்தோற்றங்களைப்

பற்றிக்கொண்டு இருக்கின்ற வரையில் தங்களது மனம் அற்ற நிலை வெறுமையானது என்பதை அவர்கள் உணர்ந்து கொள்ள மாட்டார்கள்.

மேலும் இப்படி தவறான வெளித்தோற்றங்களைப் பற்றிக் கொண்டு இருப்பதால் அவர்கள் பாதையை தவற விட்டு விடுகிறார்கள். எல்லாமே உங்களது மனம் அற்ற நிலையில் இருந்துதான் வருகிறது என்பதை நீங்கள் அறிந்து கொண்டபின் பற்றோடு இருக்காதீர்கள்.

எல்லாமே வெறுமையில் இருந்துதான் வருகிறது. மேலும் மீண்டும் வெறுமையினுள் மறைந்து போகிறது. மேலும் இப்படி நிகழ்வதை நீங்கள் ஒவ்வொரு நாளும் பார்க்கிறீர்கள்; ஒரு விதையில் இருந்து ஒரு மரம் வருகிறது. நீங்கள் வெறுமனே ஒரு விதையை வெட்டிப் பார்த்தால் அதற்குள்ளே உங்களால் எந்த ஒரு மரத்தையும் பார்க்க முடியாது. அதற்குள் எந்த ஒரு கிளையையும் நீங்கள் காண முடியாது. எந்த ஓர் இலைகளையும் காண முடியாது. எந்த ஒரு நறுமணத்தையும் எந்த பழங்களையும் உங்களால் காண முடியாது. எதையுமே காண முடியாது. ஒன்றும் இருக்காது. வெறும் வெறுமைதான் இருக்கும்.

ஆனால் இப்படி வெறுமையைத்தவிர வேறு எதுவும் இல்லாத அந்த ஒரு விதையில் இருந்து அநேக இலைகள், அநேக மலர்கள், லட்சக்கணக்கான விதைகளைக் கொண்ட அநேக பழங்களோடு கூடிய ஒரு மாபெரும் மரம் உருவாகிறது. மேலும் ஒவ்வொரு விதையில் இருந்தும் மீண்டும் லட்சக்கணக்கான விதைகள் உண்டாகின்றன. மரங்களைப் பற்றியும், தாவரங்களைப் பற்றியும் ஆராய்கின்ற விஞ்ஞானிகள், ஒரு சிறு விதை இருந்தாலே போதும். இந்த ஒட்டுமொத்த பூமியையும் பசுமையானதாக ஆக்கி விடலாம் என்று கூறுகின்றனர். ஒரு சிறு விதையை உடைத்துப் பார்த்தால் உங்களால் அதனுள் எதையுமே கண்டுகொள்ள முடி யாத போதிலும் அதற்குள் அந்த அளவுக்கு சக்தி புதைந்து கிடக் கிறது. உங்களால் அதற்குள் எதையும் கண்டுகொள்ள முடியாது.

எல்லாமே வெறுமையில் இருந்து வெளியே வருகிறது. அதன்பின் மீண்டும் வெறுமைக்குள் திரும்பிப் போய்விடுகிறது.

ஆகவே எதன் மீதும் பற்றுதல் கொள்ளவேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில் பற்றுதல் துன்பத்தை கொண்டு வருகிறது. அது விரைவில் போய்விடும். காலையில் மலர்ந்த ஒரு மலர் மாலை நேரம் வந்தவுடன் விழுந்து விடும். எனவே அதன்மீது பற்று கொள்ளாதீர்கள்; அப்படி அதன்மீது பற்று கொண்டால் மாலையில் அங்கு துன்பம் இருக்கும். அதன்பின்னர் உங்கள் கண்ணில் கண்ணீர் வரும். அதன்பின்னர் அந்த மலர் இல்லாமல் நீங்கள் வாடுவீர்கள். அந்த மலர் அங்கு இருக்கும்போது அதை சந்தோஷ மாக அனுபவியுங்கள். ஆனால் அந்த மலர் வெறுமையில் இருந்துதான் வந்துள்ளது என்றும் மீண்டும் வெறுமைக்குள் திரும்பவும் போய் விடும் என்பதையும் ஞாபகத்தில் வைத் திருங்கள். இதே உண்மையானது எல்லாவற்றிற்கும் பொருந்தும், மக்கள் குறித்தும்கூட இது பொருந்தும்.

நீங்கள் ஓர் ஆணைக் காதலிக்கிறீர்கள், நீங்கள் ஒரு பெண்ணைக் காதலிக்கிறீர்கள்; அவர்கள் எங்கிருந்து வந்திருக் கிறார்கள்? உங்களது வெற்றுக் கண்களால் பார்க்க முடியாத அளவுக்கு மிகவும் சிறியதாக உள்ள விதைகளில் இருந்துதான் அவர்கள் வந்திருக்கின்றனர். அந்த விதைகளை உங்கள் முன் வைத்தால் அது ஒரு முற்றுப்புள்ளியை விட பெரியதாகக் கூட இருக்காது. மேலும் அதுதான் நீங்களா என்று உங்களால் இப்போது அடையாளம் கண்டுகொள்ளவோ அல்லது ஒருநாள் நீங்கள் இது போன்றுதான் இருந்தீர்கள் என்றும், இது உங்களின் பழைய புகைப்படம் என்றும் அடையாளம் கண்டுகொள்ள முடியாது.

ஒருநாள் இறுதிச்சடங்கு நெருப்பில் நீங்கள் மறைந்து போய்விடுவீர்கள். ஒரு புகையாக ஒன்றுமில்லாத வெறுமையினுள் மறைந்து விடுவீர்கள். எனவே எதன்மீதும் பற்றுதல் கொள்ளா தீர்கள். இந்த பற்றுதல் தான் உங்களது உயிர் உணர்வில் இருந்து உங்களை வெகு தொலைவு எடுத்துச் சென்று விடுகிறது. நீங்கள் பற்றுதல் கொண்டுள்ள பொருளின் மீது உங்கள் கவனத்தை எல்லாம் குவித்து விடுகிறீர்கள். உங்களது விழிப்புணர்வானது, பொருள்களில், பணத்தில், மக்களில், அதிகாரத்தில் இழக்கப்பட்டு விடுகிறது. உங்களது விழிப்புணர்வு காணாமல் போய் விடுவதற்கு இப்படிப்பட்ட ஆயிரத்தோரு விஷயங்கள் உள்ளன. உங்களைச்

சுற்றிலும் ஒட்டுமொத்தமாக ஓர் அடர்ந்த காடு உள்ளதால் அதில் உங்களது விழிப்புணர்வு காணாமல் போவதற்கு வழி உள்ளது.

பற்றுதல் இன்றி இருப்பதுதான் உங்களை நீங்களே கண்டுகொள்வதற்கான ரகசியம் என்பதை ஞாபகத்தில் கொள்ளுங்கள். அதன்பின்னர் உங்களது விழிப்புணர்வானது உள்முகமாக திரும்பி விடும். ஏனெனில் வெளிப்புறத்தில் நீங்கள் பற்றிப் பிடிப்பதற்கு உங்களுக்கு எதுவும் இருக்காது. விழிப்புணர்வு இப்போது விடுதலை பெற்றுவிடும். மேலும் இந்த விடுதலையில் நீங்கள் உங்களது சுய இயல்பை அறிந்து கொள்ள முடியும்.

பற்றோடு இருக்காதீர்கள். நீங்கள் அதோடு பற்று கொண்டு விட்டால், விழிப்புணர்வு இல்லாதவர் ஆகிவிடுவீர்கள். ஆனால் நீங்கள் உங்களது சுய இயல்பை கண்டுகொண்டு விட்டால், மத சட்டதிட்ட நூல்கள் ஒட்டுமொத்தமாக ஓர் உரைநடைப் பகுதி போன்று ஆகிவிடும்.

அதன்பிறகு எல்லாப் புனித நூல்களும் பயனற்றவை ஆகிவிடும். இப்போது நீங்கள் புனிதத்திற்கெல்லாம் புனிதமான ஒன்றை கண்டு விட்டீர்கள். உபநிடதங்களின் மூலத்தை, வேதங் களின் மூலத்தை, புனித நூல்கள் என்று அழைக்கப்படுகின்றவற்றின் மூலத்தை கண்டுவிட்டீர்கள். மூலத்தைக் கண்டுகொண்ட பின்னர் புனித நூல்களைப் பற்றி யார் கவலைப்படுவார்கள்? அவை வெறும் உரைநடைப் பகுதிகளே தவிர வேறு எதுவும் ஆகாது.

அதன் ஆயிரக்கணக்கான சூத்திரங்களும், சாஸ்திரங்களும் ஒரு தெளிவான மனமற்ற நிலைக்கு பாதிப்பாக ஆகிவிடுகிறது. புரிதல் என்பது வாக்கியத்தின் இடையில்தான் வருகிறது.

இது ஓர் அழகான வாக்குமூலம். புரிதல் என்பது வார்த்தை களின் மூலம் வருவதில்லை. ஆனால் இடைவெளிகளின் மூலம்தான் வருகிறது. அமைதியான தருணங்களில் மட்டுமே வருகிறது.

புரிதல் என்பது வாக்கியத்தின் இடையில்தான் வருகிறது. அப்படி இருக்கும்போது மதக் கோட்பாடுகளால் என்ன நன்மை உள்ளது?

முடிவான உண்மையானது வார்த்தைகளுக்கு அப்பால் இருக்கிறது. கோட்பாடுகள் வார்த்தைகளாக இருக்கின்றன. அவை வழிகள் ஆகாது. வழி என்பது வார்த்தையற்றது. வார்த்தைகள் மாயைகள். இரவில் உங்களது கனவில் தோன்றுகின்ற விஷயங்கள். அவை அரண்மனைகளாக இருந்தாலும் குதிரை வண்டியாக இருந்தாலும். அவற்றை விடவும் கோட்பாடுகள் வேறுபட்டதாக இல்லை. இப்படிப்பட்ட விஷயங்களில் எந்தவிதமான மகிழ்ச்சியும் கொள்ளாதீர்கள். அவை அனைத்தும் மறு பிறவியின் தொட்டில்கள். நீங்கள் மரணத்தை அணுகும்போது இதை மனதில் வைத்திருங்கள். வெளித்தோற்றங்களைப் பற்றிக்கொண்டு இருக்காதீர்கள். அப்போது நீங்கள் எல்லாத் தடைகளையும் உடைத்தெறிந்து விடுவீர்கள்.

இது நினைவில் வைத்துக்கொள்ள வேண்டியதொரு மிகப்பெரிய வாக்குமூலம். ஏனெனில் நாம் ஒவ்வொருவரும் என்றாவது ஒருநாள் மரணத்தின் கதவுகளைக் கடந்து செல்லத்தான் போகிறோம். நீங்கள் தூய்மையான பேருணர்வு மட்டுமே என்பதை நினைவில் வைத்திருக்க முடியும் என்றால் அதாவது நீங்கள் என்பது இந்த உடல் அல்ல, இந்த மனம் அல்ல, இந்த உள்ளம் அல்ல, உங்களது பணம் அல்ல, உங்களது கௌரவம் அல்ல, உங்களது அதிகாரம் அல்ல, உங்களது வீடு அல்ல, ஆனால் அது வெறும் தூய்மையான பேருணர்வுதான் என்பதை நினைவில் வைத்திருந்தால் அதன்பிறகு மரணம் என்னும் தடையின் வழியாக எந்த ஒரு சிராய்ப்பும் இல்லாமல் கடந்து செல்ல முடியும். அதன்பிறகு மரணமானது உங்களிடம் எந்த ஒரு வடுவையும்கூட உண்டாக்க முடியாது.

நீங்கள் பற்றுதல் கொண்டால் மட்டுமே மரணம் உங்கள் மீது அதிகாரம் செலுத்த முடியும். மரணத்தைக் கண்டு நீங்கள் பயப்படுவதில்லை. ஆனால் இப்போது மரணத்தைக் கண்டு பயப்படுகிறீர்கள். ஏனெனில் அது உங்களது பற்றுதல்கள் எல்லாவற்றிலும் இருந்து உங்களை வெளியே எடுத்துக்கொண்டு வந்துவிடுகிறது என்பதுதான் அடிப்படை மனோதத்துவமாகும். நீங்கள் இறக்கும்போது உங்களது மனைவி, உங்கள் குழந்தைகள், உங்களது வீடு, உங்களது பணம், உங்களது அதிகாரம் மற்றும்

உங்களுக்கு சொந்தமான எல்லாவற்றையும் உங்களுடன் எடுத்துக்கொண்டு செல்வது சாத்தியப்படும் என்றால் நீங்கள் மரணத்தை கண்டு பயப்படுவீர்கள் என்று நான் நினைக்கவில்லை. இது ஒரு வீரதீரச் செயல் என்று நினைத்து நீங்கள் மகிழ்ச்சி அடைவீர்கள். உங்களது ஒட்டுமொத்த குழுவோடு போவதை நினைத்து மகிழ்ச்சி அடைவீர்கள். ஆனால் மரணம் எல்லா வற்றையும் உங்களிடம் இருந்து துண்டித்து விடுகிறது. உங்களை முற்றிலும் நிர்வாணமானவராக ஆக்கிவிடுகிறது. உங்களை ஒரு பேருணர்வாக மட்டுமே விட்டுவிடுகிறது.

உபநிடதத்தில் நான் எப்போதும் நேசித்த ஒரு பழைய கதை ஒன்று உள்ளது. யயாதி என்ற பெயருடைய மாபெரும் மன்னனுக்கு நூறு வயது ஆகிவிட்டது. இப்போது இது போதுமானது; அவர் அபரிமிதமாக வாழ்ந்து விட்டார். வாழ்க்கை கொடுக்கக்கூடிய எல்லாவற்றையும் அவர் சந்தோஷமாக அனுபவித்து விட்டார். அவரது காலத்தில் அவர் மாபெரும் மன்னர்களில் ஒருவராக இருந்தார். மேலும் இந்தக் கதை அழகானது.

மரணம் வந்தது. அது யயாதியிடம், "நீ தயாராயிரு. உனக்கான நேரம் வந்துவிட்டது. நான் உன்னைக் கொண்டு போக வந்திருக்கிறேன்" என்று கூறியது. யயாதி மரணத்தைப் பார்த்தார். அவர் சிறந்த போர் வீரர். மேலும் அவர் அநேக போர்களில் வெற்றி பெற்றிருக்கிறார். ஆனால் இப்போது யயாதி நடுங்க ஆரம்பித்தார். அவர் மரணத்திடம், "இது மிகவும் சீக்கிரம் போல தெரிகிறதே" என்றார். அதற்கு மரணம், "சீக்கிரமா! நீ நூறு ஆண்டுகள் உயிர் வாழ்ந்து விட்டாய். உனது குழந்தைகள் கூட மிகவும் வயதானவர் ஆகிவிட்டார்கள். உனது மூத்த மகனுக்கு எண்பது வயதாகிறது. இதற்கு மேல் நீ என்ன விரும்புகிறாய்?" என்று கேட்டது. யயாதிக்கு நூறு மகன்கள் இருந்தனர். ஏனெனில் அவருக்கு நூறு மனைவிகள். அவர் மரணத்திடம், "நீ எனக்கு ஓர் உபகாரம் செய்ய முடியுமா? நீ யாரையாவது கொண்டு செல்ல வேண்டும் என்பதை நான் அறிவேன். நான் எனது மகன்களில் ஒருவனை பேசி சம்மதிக்க வைத்தால் எனது மகன்களில் ஒருவனை நீ எடுத்துக்கொண்டு சென்றுவிட்டு என்னை மேலும் ஒரு நூறு ஆண்டுகள் வாழ்வதற்கு விடுவாயா?" என்று கேட்டார். அதைக் கேட்ட மரணம், "இது

முற்றிலும் சரியானது. யாராவது ஒருவர் போவதற்கு தயார் என்றால் சரிதான். ஆனால் அது நடக்கும் என்று நான் நினைக்கவில்லை. நீயே தயாராக இல்லை. மேலும் நீதான் தந்தை. நீ அதிக காலம் வாழ்ந்து விட்டாய். எல்லாவற்றையும் அனுபவித்து விட்டாய். அப்படி இருக்கும்போது உனது மகன் ஏன் தயாராக இருக்க வேண்டும்?'' என்று கேட்டது. யயாதி தனது நூறு மகன்களையும் அழைத்தார். மிகவும் வயதான மகன்கள் அமைதியாக இருந்தார்கள். அங்கே மாபெரும் அமைதி நிலவியது. யாரும் எதுவும் கூறவில்லை. ஒருவன் மட்டும், அதுவும் பதினாறு வயது மட்டுமே நிறைந்த எல்லாருக்கும் இளைய மகன் எழுந்து நின்று "நான் தயார்'' என்று கூறினான். அவனைப் பார்த்து மரணம் கூட பரிதாபப்பட்டு அந்த இளைஞனிடம், "ஒருவேளை நீ மிகவும் கள்ளம் கபடமற்றவனாக இருக்க வேண்டும். உனது தொண்ணூற்று ஒன்பது சகோதரர்களும் முழு மௌனத்தில் இருப்பதை நீ பார்க்கவில்லையா? ஒருவருக்கு எண்பது வயது, வேறு ஒருவருக்கு எழுபத்து ஐந்து வயது; வேறு ஒருவருக்கு எழுபத்து எட்டு, மற்றொருவருக்கு எழுபது, அடுத்தவருக்கு அறுபது வயது. அவர்கள் வாழ்ந்து விட்டார்கள். என்றாலும் கூட அவர்கள் வாழ்வதற்கு விரும்புகிறார்கள். ஆனால் நீயோ இன்னமும் வாழவே இல்லை. உன்னை எடுத்துக்கொண்டு செல்வதற்கு நானே கூட வருத்தமடைகிறேன். எனவே நீ மறுபடியும் யோசனை செய்'' என்றது. அதற்கு அந்த சிறுவன், "இல்லை, இங்குள்ள சூழ்நிலையை பார்க்கும்போது நான் நிச்சயத்துடன் இருக்கிறேன். அதற்காக நீ வருத்தமோ அல்லது துக்கமோ கொள்ள வேண்டியதில்லை. நான் முழு விழிப்புணர்வுடன் கூறுகிறேன். எனது தந்தை நூறு ஆண்டுகள் வாழ்ந்த பின்னரும் திருப்தி அடையவில்லை என்பதைப் பார்க்கும் போது நான் இங்கு இருப்பதில் என்ன அர்த்தம் உள்ளது? நான் மட்டும் எப்படி திருப்தி அடைய முடியும்? நான் எனது 99 சகோதரர்களையும் பார்க்கிறேன். யாருமே திருப்தி அடையவில்லை. எனவே ஏன் காலத்தை வீணாக்க வேண்டும்? குறைந்தபட்சம் நான் எனது தந்தைக்கு இந்த உபகாரத்தையாவது செய்கிறேன். இந்த வயதான காலத்திலும் அவர் இன்னும் நூறு ஆண்டுகள் வாழ்ந்து சந்தோஷமாக இருக்கட்டும். ஆனால் எனக்கு எல்லாம் முடிந்து விட்டது. யாருமே

திருப்தி அடையவில்லை என்கிற இந்த சூழ்நிலையைப் பார்த்த பின்னர், என்னால் ஒரு விஷயத்தை மட்டும் முழுவதுமாக புரிந்துகொள்ள முடிகிறது. அதாவது நானும் நூறு வருடங்கள் வாழ்ந்தாலும் கூட திருப்தி அடையப் போவதில்லை. ஆகவே நான் இன்று போகிறேனோ அல்லது தொண்ணூறு வருடத்திற்குப் பிறகு போகிறேனோ என்பது ஒரு பெரிய விஷயம் அல்ல. நீ என்னை எடுத்துச் செல்" என்று கூறினான்.

மரணம் அந்த சிறுவனை எடுத்துச் சென்று விட்டது. அதன்பிறகு மேலும் நூறு ஆண்டுகள் கழித்து மரணம் மீண்டும் வந்தது. ஆனால் அப்போதும்கூட யயாதி அதே நிலையில்தான் இருந்தார். அவர் மரணத்திடம், இந்த நூறு ஆண்டுகள் இவ்வளவு சீக்கிரம் ஓடிவிட்டதே. எனது எல்லா வயதான மகன்களும் இறந்து போய்விட்டார்கள். ஆனால் நான் அடுத்த படையை வைத்திருக் கிறேன். நான் எனது மகன்களில் யாரையாவது கொடுக்கிறேன். என்மீது கொஞ்சம் இரக்கம் காட்டு" என்று கூறினார்.

இந்தக் கதை இப்படியே செல்கிறது. இப்படியே ஓராயிரம் ஆண்டுகள் கழிகின்றன. பத்து முறை மரணம் வந்துவிட்டது. ஒன்பது முறை அவன் யாராவது ஒரு மகனை எடுத்துச் சென்று விடுவதால் யயாதி மேலும் நூறு ஆண்டுகள் வாழ்ந்தார். இந்த பத்தாவது முறை யயாதி மரணத்திடம், "முதல் முறை நீ வந்தபோது நான் திருப்தி அடையாமல் இருந்தாலும்கூட இப்போது விருப்பம் இல்லை என்றாலும்கூட, வேண்டா வெறுப்புடன் நான் வருகிறேன். ஏனெனில் எப்போதும் உபகாரம் செய்யும்படி கேட்டுக்கொண்டே இருக்க முடியாது. இதுவே மிகவும் அதிகப்படியானது. ஆனால் ஒரு விஷயம் மட்டும் எனக்கு நிச்சயமாகத் தெரிந்து விட்டது. அதாவது ஓராயிரம் ஆண்டுகள் வாழ்ந்து நான் திருப்தி அடையவில்லை என்றால், அதன்பின்னர் பத்தாயிரம் ஆண்டுகள் வாழ்ந்தாலும் கூட எனக்கு திருப்தி கிடைக்காது" என்று கூறினார். இதுதான் பற்றுதல். நீங்கள் வாழ்ந்துகொண்டே செல்கிறீர்கள். ஆனால் மரணம் என்னும் கருத்து வரும்போது, நீங்கள் நடுங்க ஆரம்பித்து விடுகிறீர்கள். ஆனால் நீங்கள் எது ஒன்றோடும் பற்றதல் இல்லாமல் இருந்து விட்டால், இந்த நொடிப்பொழுதே மரணம் வந்தாலும்கூட நீங்கள் அதை வரவேற்கின்ற மனநிலையோடு இருப்பீர்கள். நீங்கள்

செல்வதற்கு முற்றிலும் தயாராக இருப்பீர்கள். இப்படிப்பட்ட ஒரு மனிதனின் முன்பு மரணம் தோல்வி அடைந்து விடும். எந்த ஒரு நொடியிலும், எந்த விதமான தயக்கமும் இல்லாமல் மரணம் அடைவதற்குத் தயாராக உள்ள ஒருவரிடம் மட்டுமே மரணம் தோல்வி அடையும். அவர்கள் மரணமில்லாதவர்களாக, புத்தர்களாக ஆகிவிடுகின்றனர்.

ஒரு நொடிப்பொழுது தயக்கம் காட்டினாலும் கூட நீங்கள் சாத்தானின் பிடியில் இருப்பீர்கள். உங்களது உண்மையான உடல், உங்களது உண்மையான ஆன்மா, தூய்மையானது, மேலும் எளிதில் மாற்றம் செய்யப்பட முடியாதது. ஆனால் மாயையினால் உங்களுக்கு அதுகுறித்த விழிப்புணர்வு இல்லை. இதனால்தான் நீங்கள் வீணாக கர்ம வினையால் துன்பப்படுகிறீர்கள். எங்கெல்லாம் நீங்கள் மகிழ்ச்சியைக் காண்கிறீர்களோ அங்கெல்லாம் நீங்கள் அடிமைத்தளைகளைக் காண்கிறீர்கள். ஆனால் உங்களது அசல் உடல் மற்றும் மனம் அற்ற நிலை குறித்து விழிப்பு நிலை அடைந்து விட்டால், அதன் பின்னர் நீங்கள் இதுபோன்ற பற்றுதல்களில் இருக்க மாட்டீர்கள்.

இந்த விடுதலை தான் எல்லா மதத் தேடுதல்களின் இலக்காகும். பற்றுதல்களில் இருந்து விடுதலை அடைவதே மரணத்தில் இருந்து விடுதலை அடைவதாகும்.

பற்றுதல்களில் இருந்து விடுதலை அடைவதே பிறப்பு, இறப்பு என்னும் சக்கரத்தில் இருந்து விடுதலை அடைவதாகும்.

பற்றுதல்களில் இருந்து விடுதலை அடைவது நீங்கள் இந்த பிரபஞ்ச ஒளிக்குள் நுழைந்து அதோடு ஒன்றாகி விடுகின்ற தகுதியுடையவராக உங்களை ஆக்கிவிடுகிறது. மேலும் அது தான் மிகப்பெரிய ஆசீர்வாதம், இறுதிப் பரவச நிலை. அதற்கு அப்பால் எதுவும் இல்லை. நீங்கள் உங்களது வீட்டை சென்றடைந் திருப்பீர்கள்.

○

உலகம் சார்ந்த பொருள்கள், அவற்றின் பலவகை வடிவங்களில் எந்த வடிவத்தில் இருந்தாலும், அவற்றுக்காக, அவற்றைக் கடந்து உள்ள ஒன்றினை விட்டு விடுகின்றவர்கள் யாராக இருந்தாலும் அவர்கள் சாகும் இயல்புடையவர்கள். நல்ல அதிர்ஷ்டம் மற்றும் கெட்டவற்றில் விடுதலையைக் காண்கின்றவர் எவரோ அவரே ஒரு புத்தர். அவரது சக்தி இப்படிப்பட்டது, கர்மவினை அவரைப் பிடித்துக் கொள்ள முடியாது. என்ன வகையான கர்மாவாக இருந்தாலும் அதைப்பற்றி கவலையில்லை, ஒரு புத்தர் அதை உருமாற்றம் செய்துவிடுகிறார். சொர்க்கமும், நரகமும் அவரைப் பொறுத்தமட்டில் ஒன்றுமில்லாதவை. எதுவும் உங்களுக்கு நிச்சயமாகத் தெரியாத வரையில் செயல் புரியாதீர்கள். அப்படி செயல்பட்டால், நீங்கள் பிறப்பு, இறப்பு ஆகியவற்றின்மூலம் சுற்றித் திரிந்து அடைக்கலம் ஏதும் கிடைக்காமல் மனம் வருந்துவீர்கள். இத்தகைய மனதைப் புரிந்து கொள்வதற்கு நீங்கள் செய்யாமல் செய்ய வேண்டும். அதன் பிறகு மட்டுமே ஒரு ததாகதரின் கண்களால் விஷயங்களைப் பார்க்க முடியும்.

ஆனால் பாதையில் நீங்கள் முதலில் இறங்கும்போது, உங்களது விழிப்புணர்வு ஓரிடத்தில் குவிக்கப்படுவதில்லை. விநோதமான, கனவு போன்ற, எல்லாவிதமான காட்சிகளையும் நீங்கள் காண நேரிடலாம். ஆனால் இப்படிப்பட்ட காட்சிகள் யாவும் உங்களது சொந்தமனதில் இருந்துதான் வருகிறதே தவிர வேறு எங்கிருந்தும் இல்லை, என்பதில் நீங்கள் சந்தேகம் அடையக்கூடாது.

இந்தச் சூரியனை விடவும் அதிக பிரகாசமான ஒரு ஒளியை நீங்கள் பார்த்தால், உங்களிடம் மிச்சம்மீதி இருக்கின்ற பற்றுதல்கள் எல்லாம் ஒரு முடிவுக்கு வருகிறது, மேலும் உண்மைநிலையின் இயல்பானது வெளிப்படுத்தப்படும். இப்படிப்பட்ட ஒரு நிகழ்வு, மெய்ஞ்ஞானம் அடைவதற்கான அடிப்படையாக உதவுகிறது. ஆனால் இது நீங்கள் மட்டுமே அறிந்து கொண்ட ஒன்றாகும். இதை மற்றவர்களிடம் உங்களால் விவரிக்க முடியாது. அல்லது, நீங்கள் நடந்து கொண்டும், நின்று கொண்டும், அல்லது அமர்ந்து கொண்டும், இருள் நிறைந்த இரவில் அசையாமல் படுத்துக்கொண்டும் இருக்கும்போது, இவையெல்லாம் பட்டப்பகலில் நடப்பது போன்று தோன்றினால் திடுக்கிட்டு விடாதீர்கள். இது உங்களது சொந்த மனமே தன்னைப்பற்றி வெளிப்படுத்துவதாகும். நீங்கள் உங்களது இயல்பைக் கண்டு கொண்டால், நீங்கள் சூத்திரங்களைப் படிக்க வேண்டியதில்லை அல்லது புத்தர்களை ஆவாகனம் செய்ய வேண்டியதில்லை. ஆழ்ந்த கல்வியும், அறிவும் பயனற்றவை என்பதோடு மட்டுமல்ல, அவை உங்களது விழிப்புணர்வை மேகம் போல மறைத்து விடுகின்றன. கோட்பாடுகள் எல்லாம் மனதைச் சுட்டிக்காட்டுவதற்கு மட்டுமே இருக்கின்றன. நீங்கள் உங்களது மனதைப் பார்த்துவிட்ட பிறகு இந்த கோட்பாடுகள் மீது ஏன் கவனம் செலுத்த வேண்டும்?

சாகும் இயல்பில் இருந்து புத்தராக ஆவதற்கு, நீங்கள் உங்களது கர்மவினைகளுக்கு ஒரு முடிவு கட்டவேண்டும், உங்களது விழிப்புணர்வைப் பேணி வளர்க்க வேண்டும். மேலும்; வாழ்க்கை என்ன கொண்டுவருகிறதோ அதை ஏற்றுக்கொள்ள வேண்டும். சாகும் இயல்புடையவர்கள் தங்களின் சுய இயல்பை கண்டு கொண்ட பிறகு எல்லாப் பற்றுதல்களும் முடிந்து விடுகின்றன. விழிப்புணர்வு மறைந்து இருக்கவில்லை. ஆனால் இப்போதுள்ள இந்தப்பொழுதில் மட்டுமே கண்டு கொள்ளமுடியும். விழிப்புணர்வு எப்போதும் நிகழ்பொழுதில் மட்டுமே உள்ளது. உண்மையிலேயே நீங்கள் பாதையைக் கண்டு கொள்ள விரும்பினால் எதையும் பற்றிக்கொண்டு இருக்காதீர்கள். உங்களது கர்மவினைகளுக்கு முடிவுகட்டிவிட்டு, உங்களது

விழிப்புணர்வை பேணி வளர்க்கும்போது, உங்களிடம் மீதி இருக்கின்ற எந்த பற்றுதலும் முடிவுக்கு வந்துவிடும். புரிதல் என்பது இயல்பாகவே வருகிறது. நீங்கள் எந்த முயற்சியும் எடுக்க வேண்டியதில்லை. ஆனால் புத்தர் என்ன அர்த்தத்தில் கூறுகிறார் என்பதை மதப்பெரியவர்கள் புரிந்துகொள்ள மாட்டார்கள். மேலும் எந்த அளவுக்கு அவர்கள் கடின முயற்சி மேற்கொள்கிறார்களோ அந்த அளவுக்கு அவர்கள் ஞானியின் அர்த்தத்தில் இருந்து வெகுதூரம் விலகிச் சென்று விடுவார்கள். நாள் முழுவதும் அவர்கள் புத்தரை ஆவாகனம் செய்கின்றனர் மற்றும் சூத்திரங்களைப் படிக்கின்றனர். ஆனால் தங்களின் சொந்த தெய்விக இயல்பு குறித்து குருடர்கள் போன்று இருக்கின்றனர். எனவே அவர்கள் பிறப்பு இறப்பு என்னும் சக்கரத்தில் இருந்து தப்பிக்க முடியாது. புத்தர் ஒன்றுமே செய்யாமல் இருக்கின்ற ஒருவர். அவர் புகழ் மற்றும் அதிர்ஷ்டத்தைத் தேடி அதன் பின்னால் ஓடமாட்டார். இறுதியில் இப்படிப்பட்ட விஷயங்களால் என்ன நன்மை உள்ளது?

போதிதருமர், இந்த உலகத்தை, பொருள் மற்றும் ஆன்மா என்று பிரிப்பதில்லை. எல்லாப் பிரிவினைகளுக்கும் அவர் எதிரானவர். இந்த பிரபஞ்சமானது முழுமையாக ஒழுங்காக அமைக்கப்பட்ட ஒன்றாகும். ஆனால் அதில் பிரிவினைகள் இருப்பது போலத் தெரிகிறது. அப்படியானால் அந்த பிரிவினைகள் வேறு எங்கோ இருந்து தான் வந்திருக்க வேண்டும். ஏனெனில் இந்த உலகம் பிரிக்கப்படாமல் உள்ளது. அவை உங்களது பேருணர்வில் இருந்து வருகின்றன. நீங்கள் பேருணர்வுடன் இல்லை என்றால் நீங்கள் சாகும் இயல்புடைய ஒருவராக இருப்பீர்கள்; நீங்கள் பேருணர்வை இழந்தநிலையில் இருந்தால் இந்த உலகத்தை வெறும் பொருள் உலகமாகவும், இந்த உலகத்தை கடந்து அதற்கு அப்பால் இருப்பதை புனிதமானது என்றும் காண்பீர்கள். ஆனால் நீங்கள் பேருணர்வுடன், விழிப்புணர்வுடன், மெய்ஞ்ஞானத்துடன் ஒரு புத்தராக இருந்தால் இங்கே எதுவும் சாதாரணமானதாகவும் இருக்காது, எதுவும் புனிதமானதாகவும் இருக்காது. அதன்பிறகு எல்லாமே ஒன்றுதான். இந்த ஒன்றாக இருத்தல் ஆழமாகப் புரிந்து கொள்ளப்

பட வேண்டும். பிரிவுகள் நமது பேருணர்வுநிலை அல்லது பேருணர்வு இழந்தநிலையில் இருந்துதான் வருகின்றன. இது நமது கண்ணோட்டம். இது ஒரு குருடன் சூரிய வெளிச்சத்தில் நின்று கொண்டிருந்தாலும்கூட அவன் இன்னமும் இருட்டில் இருப்பது போன்றது. அவனுக்கு வெளியில் இருள் இருக்கிறது என்பதாகாது. அது பிரகாசமான வெளிச்சம், ஒரு அழகான காலைப்பொழுது, பறவைகள் வாழ்த்துகள் பாடி சூரியனை வரவேற்கின்றன. மேலும் மலர்கள் மொட்டிலிருந்து தங்களின் நறுமணத்தை காற்றில் வெளிவிடுகின்றன. இது அபரிமிதமான ஒரு அனுபவம். ஆனால் ஒரு குருடனுக்கு, நிறங்கள் தெரியாது, மலர்கள் கிடையாது, சூரியன் கிடையாது, ஒளி கிடையாது, அந்த குருடனின் கண்கள் குணப்படுத்தப்பட்டால், அவர் முன்பு வழக்கமாக பார்க்கின்ற இருள் நிறைந்த உலகமும் இப்போது அவன் பார்க்கின்ற ஒளி நிறைந்த உலகமும் அதே போன்றவை தான் என்பதை அறிந்து அவன் ஆச்சரியமடைவான். அவனது குருட்டுநிலையால் தான் அங்கு பிரிவினை இருந்ததே தவிர இந்த இயற்கையிலேயே இங்கு பிரிவினை என்பது இல்லாமல் இருந்தது.

இந்த கருத்து குறித்து போதிதருமர் அபரிமிதமான பங்களிப்பை உண்டாக்கியுள்ளார். இந்த உலகின் தத்துவ வாதிகளில் பெரும்பான்மையோரும், மற்றும் மதங்களை நிறுவியவர்களும் எப்போதும் இந்த உலகினை உலகம் சார்ந்த மற்றும் புனிதமான ஒன்றும், பொருள் மற்றும் ஆன்மா என்று பிரித்தே வந்திருக்கின்றனர். இந்த உலகை பொருள் மற்றும் ஆன்மிகம் என்று நீங்கள் பிரிக்கின்ற அந்த நொடிப் பொழுதே நீங்கள் மனிதனையும் கூட உடல் மற்றும் ஆன்மா என்று பிரித்து விடுகிறீர்கள் என்பதை அறியாமலேயே அவர்கள் பிரித்து வந்துள்ளனர். மேலும் தனக்குள்ளாகவே பிரிக்கப்பட்ட ஒருமனிதன் விரிசல் விழுந்த ஒரு வீடானது எந்த தருணத்தில் விழுந்து விடுவதைப் போன்று இருக்கிறான். தனக்குள்ளாகவே பிளவுபட்டுள்ள ஒரு மனிதன் எப்போதும் தன்னுடனேயே இடைவிடாமல் சண்டை போட்டுக்கொண்டு இருக்கிறான்; அவன் தன்னுடனேயே சண்டை போட்டுக் கொள்வதிலேயே அவனது

ஒட்டு மொத்த சக்தியும் வீணாகிறது. அவன் தனது சக்தியை ஒரு அழகான மலர்ச்சிக்காக பயன்படுத்த முடிவதில்லை, வசந்தம் வருகிறது, போகிறது, ஆனால் மலர்களைக் கொண்டுவருவதற்கு அவனிடம் சக்தி இல்லை, அவன் சக்தி தீர்ந்து போனவனாக இருக்கிறான்.

ஒரு வேளை இந்த உலக்கதின்மீது ஆர்வம் கொண்டவர்கள் மனிதன் எப்போதும் இப்படி களைப்புடனும், பலம் முற்றிலும் குன்றிய நிலையிலும் இருக்கவேண்டும் என்று விரும்புகிறார்கள் போலும். அவர்களின் ஆர்வத்தை பூர்த்தி செய்வதற்கு இது ஆதரவாக இருக்கிறது, ஏனெனில் சக்தியானது பொங்கி வழிந்தோடுகின்ற ஒரு மனிதனை, அவன் ஒரு கிளர்ச்சியாளன் ஆவதிலிருந்து தடுக்க முடியாது.

களைப்புடனும், பலம் குன்றியும் இருக்கின்ற ஒரு மனிதனை எந்த ஒரு அநீதிக்கு எதிராகவும், எந்த ஒரு சுரண்டலுக்கு எதிராகவும் கிளர்ந்து எழும்படி தூண்ட முடியாது. அதற்கான சக்தி அவனிடம் இல்லை. அதிகபட்ச சக்தியுடன் வாழ்ந்திருக்க வேண்டிய அவன், இப்போது குறைந்தபட்ச சக்தியுடன் மட்டுமே வாழ்ந்து கொண்டிருக்கிறான். ஆனால் மனிதனுக்கு எதிரான இந்த அடிப்படை சதித்திட்டம் பண்டைக்காலம் தொட்டே பழக்கத்தில் இருந்துள்ளது. பிரிவினையை உண்டாக்குதல், அதுதான் எல்லா ஆட்சியாளர்களின் அடிப்படைத் தத்துவமாக இருந்து வந்துள்ளது. பிரித்து ஆளுதல், மதபோதகர்களும், மதகுருக்களும் அரசியல் வாதிகள் போன்றவர்கள் தானே தவிர அவர்கள் வேறு யாராகவும் இல்லை. அவர்களின் ஒட்டுமொத்த ஆசையும் பிரித்து ஆள்கின்ற ஆசைதான்.

பிளவுபடாத தனிமனிதனை அடிமைப்படுத்த முடியாது. இப்படி பிரிவினையை உண்டாக்கியது மனிதனின் இனப்பெருக்க ஆற்றலை காயடிக்கின்றதாகும். ஒரு காளை மாட்டின் அழகினை வெறுமனே பாருங்கள். உங்களது வண்டியை இழுத்துக் கொண்டு செல்வதற்கு அந்தக் காளை மாட்டினை உங்களால் நிர்ப்பந்தம் செய்ய முடியாது. சாலையில் செல்லும்போது அதனை நீங்கள் உங்களது கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வரமுடியாது. அதனிடம் அதிக சக்தியும் அதிக தனித்தன்மையும் இருப்பதால் அது

தன்னுடைய பாதையை தானே தேர்ந்தெடுத்து செல்லும், இந்தப்பக்கமோ அல்லது அந்தப்பக்கமோ அது செல்லும். மேலும் அது தனது காதலியைப் பார்த்துவிட்டால், அதன் பின்னர் உங்களது உயிரும் மற்றும் உங்களது வண்டியும் ஆகிய இரண்டிற்கும் ஆபத்து வந்துவிடும்!

ஆனால் காளை மாடுகள் உங்களது வண்டிகளையும், உங்களது சுமைகளையும் சுமந்து கொண்டு செல்வதை வெறுமனே பாருங்கள். அந்த காளை மாட்டிற்கு காயடிப்பதன் மூலம் நீங்கள் அதன் அழகை, சக்தியை, தனித்துவத்தை அழித்துவிட்டீர்கள். அதே விலங்குதான், ஆனால் இப்போது அது சக்தி இல்லாமல் இருக்கிறது. அது மிகவும் சக்தியோடு இருந்தது ஆனால் நீங்கள் அதனை சக்தியிழக்கும்படி செய்துவிட்டீர்கள்.

விநோதமான விதத்தில் இதே செயல் மனிதனிடமும் செய்யப்பட்டுவிட்டது. இந்த உலகில் உள்ள எல்லா மதங்களும், எல்லா அரசியல்வாதிகளும், மனிதனையும் காயடித்து விட்டார்கள்; அப்படி செய்யாமல் இருந்திருந்தால் மனிதனும் கூட வண்டி இழுக்கும் மாடு போன்று அல்லாமல் ஒரு காளை மாட்டின் அழகுடனும், கம்பீரத்துடனும், இருந்திருப்பான். வண்டிமாடு என்பது ஒரு சோகச் சம்பவம். ஒரு வண்டிமாடு என்பது அதன் இயற்கையான அழகை, சக்தியை அழித்த அனைவரின் கண்டனங்களையும் வெளிப்படுத்துவதாக இருக்கிறது. ஆனால் ஒரு காளையை அடிமையாக ஆக்குவதற்கு இது தேவையான ஒரு வழிமுறை ஆகும்.

இப்படி எல்லாவிதமான சுரண்டல்களையும், தாழ்வுப்படுத்து தலையும், அடிமைத்தனத்தையும் மனிதன் ஏன் தாங்கவேண்டும்? அதன் காரணம் எளிமையானது. அவனிடம் சக்தி இல்லை என்பது தான் காரணம். அவனது சக்தி எங்கே போய்விட்டது? அவன், தன்னுடனேயே சண்டை போட்டுக் கொள்ளும் அளவுக்கு கற்பிக்கப்பட்டும், கட்டுத்திட்டம் செய்யப்பட்டும் இருக்கிறான். இந்த கூட்டுச்சதி உண்மையிலேயே மிகவும் கெட்டிக்காரத்தன மானது. நீங்கள் உங்களுடனேயே சண்டையிட்டுக் கொள்ளும் போது உங்களையே நீங்கள் அழித்துக் கொள்கிறீர்கள்.

போதிதருமரின் ஒரே போதனை என்னவென்றால் நீங்கள் உங்களது சுய இயல்பை அறிந்து கொள்ள வேண்டும் என்பது தான் ஆகும். உங்களது சுய இயல்பானது பிரிவினை இல்லாதது. அது தனியானதோ அல்லது தாழ்வானதோ அல்ல, அது பொருளோ அல்லது அன்போ அல்ல. அது எல்லாப் பிரிவினை களையும், எல்லா இரண்டுபட்ட தன்மைகளையும் கடந்து உள்ளதாகும். உங்களுக்கு உள்ள இந்த கடந்துள்ள ஒன்றுதான் உங்களது உயிர் உணர்வாகும். நீங்கள் கேட்காமலேயே உங்களுக்கு எல்லாவிதமான வரப்பிரசாதங்களையும் கொண்டு வருகின்ற அளவுக்கு அதிக அளவு சக்தியையும், பொங்கி வழியும் பலத்தையும் அது கொண்டுள்ளது. நீங்கள் கேட்காமலேயே உங்களது உயிர் உணர்விற்குள் எல்லாவிதமான மலர்களின் மலர்ச்சியையும் கொண்டு வருகிறது. அது வெறுமனே இயற்கை யாகவே நடக்கும்.

ஆனால் மனிதன் செயற்கையான ஒரு நிலையில் வைக்கப்பட்டுவிட்டான்; அதனால் தான் இந்த துன்பம், இந்த நரகம், இந்த வேதனை. செயற்கையாக இருப்பது என்பது நரகத்தில்; இருப்பது போன்றது, மேலும் உங்களது சுய இயல்பில் இருப்பது என்பது சொர்க்கத்தில் இருப்பது போன்றது. இங்கே வெறு எந்த சொர்க்கமும் இல்லை, வேறு எந்த நரகமும் இல்லை.

தங்களின் சுய இயல்பை அறிந்து கொள்ள விரும்பும் நபர்களுக்கு இந்த சூத்திரங்கள் அபரிமிதமான சிறப்புகளைக் கொண்டவை. ஏனெனில் அதுதான் இறுதி ஞானம், மேலும் அத்தகைய ஞானத்தில் இருந்து உங்களது செயல்கள் எல்லாம் உங்களது பங்குக்கு நீங்கள் எந்தவிதமான முயற்சியும் செய்யாமலேயே, வெறுமனே இயல்பாக, ஒரு ரோஜாச் செடியில் ஒரு ரோஜா மலர் இயற்கையாக வளர்வதைப் போல அழகு டையதாகவும், நன்மையுடையதாகவும், அருளுடையதாகவும் ஆகிவிடும். நீங்கள் உங்களது சுயஇயல்பை அறிந்து கொள்ளும் போது, நன்மை, அழகு, அருள், புண்ணியம் ஆகிய இவை எல்லாம், எந்த முயற்சியும் இல்லாமல், உங்களது பங்குக்கு நீங்கள் எதையும் செய்யாமலேயே வளர்கிறது.

இந்த ஒட்டுமொத்த உலகிலும் இதுதான் மாபெரும் அறிதலாகும். உலகம் சார்ந்த பொருள்கள், அவற்றின் பலவகை வடிவங்களில், எந்த வடிவத்தில் இருந்தாலும், அவற்றுக்காக, அவற்றைக் கடந்து உள்ள ஒன்றினை நீட்டு விடுகின்றவர்கள் யாராக இருந்தாலும் அவர்கள் சாகும் இயல்புடையவர்கள்.

கடந்து உள்ள ஒன்றினை விட்டுவிடுதல், எல்லா இரட்டைத் தன்மைகளையும் கடந்து உள்ள ஒன்று என்பது தான் கடந்து உள்ள ஒன்று என்பதன் அர்த்தமாகும் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். இந்த உலகில் ஒரே தன்மை என்கின்ற மொழியை மறந்து போகிறவர்கள் யாரோ அவர்கள் தேவையில்லாமல் சாகும் இயல்புடையவர்களாக ஆகிவிடுகிறார்கள். அதன் பின்னர் வாழ்வு என்பதற்கு எதிராக அங்கே சாவு என்பது நிகழ்கிறது. அதன்பிறகு ஆன்மா என்பதற்கு எதிராக உடல் என்பது வந்துவிடுகிறது. அதன் பின்னர் ஒவ்வொன்றும் அதற்குரிய எதிர்துருவத்தை பெற்று விடுகிறது. அதன்பின்னர் வெறுப்பு என்பதற்கு எதிராக அன்பு என்பது வந்து விடுகிறது. ஆனால் இந்த எதிர் துருவங்கள் எல்லாம் மாற்றிக் கொள்ளக்கூடியவை என்கின்ற ஒரு அடிப்படை விஷயத்தை நினைவில் வைத் திருங்கள். அன்பு, வெறுப்பாக மாறமுடியும், வெறுப்பானது அன் பாகவும் மாறமுடியும். இதை நீங்கள் அனைவரும் அறிவீர்கள்.

நட்பானது பகையாக மாறமுடியும், மேலும் பகையானது நட்பாக மாறவும் முடியும். இதை நீங்கள் எல்லாரும் அறிவீர்கள். சந்தோஷம் என்பது சோகமாக மாறமுடியும். மேலும் சோகமும்கூட சந்தோஷமாக மாறமுடியும். இவை எல்லாம் எதிர்எதிர் துருவங்கள் என்றாலும்கூட, அவை எல்லாம் கிட்டதட்ட இரட்டையர்கள் போன்றவை, மிகவும் நெருக்க மானவை. சூழ்நிலையில் ஒரு சிறிய மாற்றம் ஏற்பட்டு விட்டாலும் கூட ஒன்று மறைந்துவிடும். அடுத்தது வெறுமனே அதற்கு பின்னால் இருக்கும். ஆகவே கடந்து உள்ள ஒன்றினை நினைவில் வைத்திருங்கள். இந்த உலகம் கடந்து உள்ள ஒன்றிற்கு சொந்தமானது. இதைப் பிரிக்காதீர்கள். அப்படி பிரித்தால் அந்த இரட்டைத்தன்மையில் இடைவிடாமல் நீங்கள் துன்புறுத்தலுக்கு ஆளாவீர்கள்.

*நல்ல அதிர்ஷ்டம் மற்றும் கெட்டவற்றில் விடுதலையைக் காண்கின்றவர் எவரோ அவரே ஒரு புத்தர்.*

தாம் வெற்றி பெறுகிறோமா அல்லது வெற்றி பெறாமல் போகிறோமா, தாம் நன்றாக அறிந்து கொள்ளப்படுகின்றோமா அல்லது முற்றிலும் அறியப்படாத ஒருவராக இருக்கிறோமா, தாம் அதிகாரம் படைத்தவராக இருக்கிறோமா அல்லது ஒன்றுமில்லாத வராக, எதுவுமில்லாதவராக இருக்கிறோமா என்பதெல்லாம் விழிப்புணர்வு உள்ள ஒரு மனிதருக்கு ஒரு பெரிய விஷயமாக இருக்காது. விழிப்புணர்வு உள்ள ஒரு மனிதருக்கு இந்த இரட்டைத் தன்மைகள் எல்லாம் பெரிய விஷயமாக இருக்காது. ஏனெனில் விழிப்புணர்வு என்பது மிகப்பெரிய பொக்கிஷம். நீங்கள் அதை வைத்திருந்தால், நீங்கள் வேறு எதையும் விரும்பமாட்டீர்கள். ஒரு நாட்டின் குடியரசுத் தலைவராகவோ அல்லது நாட்டின் பிரதமராகவோ ஆவதற்கு நீங்கள் விரும்ப மாட்டீர்கள். அவை எல்லாம் குழந்தைகளுக்கு, மனநலம் குன்றிய குழந்தைகள், விளையாடுவதற்கு உரியவை.

பேராவலுக்கான லட்சியங்களின் பின்னால் ஓடிக்கொண் டிருக்கின்ற மக்கள், கால்பந்து விளையாட்டு வீரர்களை விடவும் ஒருபோதும் அதிக புத்திசாலித்தனம் நிறைந்தவராக இருக்க மாட்டார்கள். அப்படிப்பட்டவர்களின் விளையாட்டுகளுக்கு வெவ்வேறு பெயர்கள் இருக்கலாம். ஆனால் அவர்களின் உண்மை நிலை ஒரே போன்றுதான் இருக்கும். எனவே அவர்கள் இடைவிடாமல் கஷ்டப்படுகிறார்கள். அவர்கள், தங்களின் வெற்றியிலும் கூட கஷ்டப்படுகிறார்கள் ஏனெனில் வெற்றி பெற்ற இந்த நிலையை நாளைக்கும் நாம் வைத்திருக்க வேண்டுமே என்று அவர்கள் பயம் கொள்கின்றனர். முதலில் தாங்கள் வெற்றி பெறமுடியவில்லையே என்று வருத்தப்பட் டார்கள்; இப்போதும் கூட அவர்கள் வருத்தப்படுகிறார்கள் ஏனெனில் ஒவ்வொருவரும் அவர்களது இடத்தில் இருப்பதற்காக வெற்றி பெற்றவர்கள் காலைப்பிடித்து இழுத்துக் கொண்டிருப் பார்கள்.

அதிகாரம் நிறைந்த அரியணையில் இருப்பது என்பது மிகவும் நகைப்புக்குரிய நிலையில் இருப்பதாகும். ஒவ்வொரு வரும் உங்களை கீழே இருந்து கொண்டு இழுப்பார்கள். எனவே என்ன நடந்தாலும் நீங்கள் அந்த அரியணையில் பசை போட்டு ஒப்புக் கொண்டிருக்க வேண்டும். சிலர் உங்களது கைகளைப் பிடித்து இழுப்பார்கள், சிலர் உங்களது தலையைப் பிடித்து இழுப்பார்கள், சிலர் உங்களது கால்களைப் பிடித்து இழுப்பார்கள். இப்படி என்ன நடந்தாலும், உயிருடனோ அல்லது பிணமாகவோ நாம் அந்த அரியணையில் இருந்தே தீர வேண்டும் என்று நீங்கள் தீர்மானித்து விடுவீர்கள்.

வெற்றி பெற்ற ஒரு மனிதனின் வாழ்க்கையானது, ஒரு அமைதியான வாழ்க்கையாக இருக்காது. மேலும் வெற்றி பெற்றவரின் சூழ்நிலை இது என்றால் தோல்வியின் சூழ்நிலை எப்படி இருக்கும் என்பதை நீங்களே நினைத்துப் பாருங்கள். நல்லநேரம் என்று நீங்கள் அழைக்கின்ற சூழ்நிலையானது இப்படி இருக்கும்போது கெட்டநேரம் என்கிற சூழ்நிலை எப்படி இருக்கும் என்பதை உங்களைப் புரிந்து கொள்ள முடியும்.

ஆனால் விழிப்புணர்வு பெற்ற ஒரு மனிதனுக்கு இவை எல்லாம் ஒரே மாதிரியானவை. வெற்றி வரும் போகும், தோல்வியும் வரும் போகும்.

அவற்றால் நீங்கள் தொடப்படாமல், தனியாக இருப்பீர்கள்.

இந்த தனிமைதான், இந்த தொடப்படாத தன்மைதான், எல்லாவற்றையும் கடந்து உள்ள உங்களது சுய இயல்பாகும். எதுவும் உங்கள்மீது ஒரு சிறு கீறலையும் கூட உண்டாக்க முடியாது.

இந்திய ஞானிகளில் ஒருவராகிய, கபீர், ''ஜியோன் கீ தியோன் தர் தின்கி சடாரியா,'' என்று ஒரு பாடல் பாடுகிறார். இதன் அர்த்தமானது, ''இந்த உலகில் வாழ்வதற்கு கடவுள் கொடுத்த ஆடையை, எந்த மாற்றமும் இல்லாமல் நான் கடவுளுக்கு திருப்பிக் கொடுத்துவிட்டேன். அதை நான் அழுக் காக ஆக்கவில்லை, அதன்மீது ஒரு சிறு தூசு கூட சேரவில்லை.

அது எந்த அளவுக்கு புத்தம்புதிதாக எனது கைகளில் கொடுக்கப் பட்டதோ அதே போல புத்தம்புதிதாக நான் அவரது கைகளில் திரும்பவும் வைத்து விட்டேன்,'' என்பதாகும். விழிப்புநிலை அடைந்த ஒரு மனிதனின் அனுபவம் இதுதான். வெளிச்சம் நிறைந்த பகலில் அவர் எப்படி வாழ்கிறாரோ அதே அமைதி, அதே சாந்தியோடு அவர் இருள் நிறைந்த இரவிலும் வாழ்கிறார். அவர் ஒருபோதும் பிரிவினையை உண்டாக்குவது இல்லை. அவர் எப்போதும் எல்லாவற்றையும் கடந்து இருக்கிறார், அவர் எப்போதும் எல்லாப் பிரிவுகளுக்கும் மேலாக எழுந்து நிற்கிறார். பிரிவுகள் வெகு தொலைவில் விட்டுவிடப்படுகின்றன. அவரது சக்தி இப்படிப்பட்டது, கர்மவினை அவரைப் பிடித்துக் கொள்ள முடியாது. என்ன வகையான கர்மாவாக இருந்தாலும் அதைப் பற்றி கவலையில்லை, ஒரு புத்தர் அதை உருமாற்றம் செய்து விடுகிறார்.

இந்த போதனையை நீங்கள் உங்களது இதயத்திற்குள் ஆழமாக எடுத்து வைத்துக்கொள்ள வேண்டும். கடவுளிடம், ''நான் தொட்டவையெல்லாம் தங்கமாக மாறி விடுகின்ற ஒரே ஒரு வேண்டுதலை மற்றும் நிறைவேற்றுங்கள்,'' என்று தனது வாழ்நாள் முழுவதும் பிரார்த்தனை செய்துவந்த கிரேக்க புராணத்தில் வருகின்ற மிடாஸ் அரசரைப்பற்றிய கதையை நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். எனவே இடைவிடாத இப்படிப்பட்ட நச்சரிப்பினால் கடவுள் களைப்படைந்திருப்பார்போல தெரிகிறது. ஏனெனில் உங்களது பிரார்த்தனைகள் எல்லாம் இப்படிப்பட்ட நச்சரிப்புகள் தானே தவிர வேறு எதுவும் இல்லை.

மேலும் கடவுள் பாவம், அநேக மக்கள் அவரை நச்சரித்துக் கொண்டே இருக்கின்றனர், பல லட்சம் ஆண்டுகளாக அவர் இப்படி நச்சரிக்கப்பட்டு வருகிறார். இந்த நச்சரிப்பு தாங்க முடியாமல் அவர் மறைந்து போயிருந்தாலும், அல்லது தற்கொலை செய்து கொண்டிருந்தாலும், அல்லது அவருக்கு என்ன நடந்தது என்று தெரியாமல் போனதில் எந்த ஆச்சரியமும் கிடையாது. இந்த அளவு நச்சரிப்பை யாராலும் தாங்கிக் கொள்ள முடியாது.

எனவே இறுதியாக கடவுளும் கூட, ''நீ எதைத் தொட்டாலும் அது தங்கமாக மாறிவிடும். எனவே இப்போது என்னை அமைதியில் இருப்பதற்கு விட்டுவிடு!'' என்று மிடாஸின் விருப்பத்தை நிறைவேற்றினார்.

ஆனால் பேருணர்வு இழந்த ஒரு மனிதனால் இதைவிடச் சிறப்பாக எதையும் செய்ய முடியாது. உங்களது பிரார்த்தனைகள் எல்லாம் நிறைவேற்றப்பட்டு விட்டால், அதன் பின்னர் நீங்கள் முழுமையான நரகத்தில் இருப்பீர்கள் என்று பிரட்ரிக் நீட்சே கூறுவது சரியானது தான். உங்களது பிரார்த்தனைகள் எல்லாம் உங்களது பேருணர்வு அற்ப நிலையில் இருந்து தான் வரு கின்றன; நீங்கள் என்ன கேட்கிறீர்கள் என்பதும்கூட உங்களுக்கு தெரியாது, கடவுள் செவிடானவராக இருந்து எந்த ஒரு பிரார்த்தனையும் எப்போதும் நிறைவேற்றப்படாமல் இருந்தால் மிகவும் நல்லது. அப்படி இல்லையெனில், ''ஐயோ, நான் ஏன் அப்படி பிரார்த்தனை செய்தேன்?'' என்று நீங்கள் பின்னர் மனம் வருந்துவீர்கள்.

இதே சூழ்நிலைதான் மிடாஸ் அரசருக்கும் ஏற்பட்டது. தனது வாழ்நாள் முழுவதும் செய்து வந்த பிரார்த்தனையில் உள்ள சிக்கல்களைப்பற்றி அவர் ஒரு போதும் சிந்தித்துப் பார்க்க வில்லை. மிடாஸ் கடவுளிடம், ''நான் வேறு எதையும் விரும்ப வில்லை. வெறுமனே ஒரு எளிமையான விஷயத்தைத்தான் விரும்புகிறேன். நான் எதைத் தொட்டாலும் அது தங்கமாக மாற வேண்டும்,'' என்கிற ஒரே ஒரு விஷயத்தை மட்டுமே காலையும், மாலையும் பிரார்த்தனை செய்து கொண்டே இருந்தார்.

ஆனால் அந்த பிரார்த்தனை நிறைவேறிய போதுதான் அதில் உள்ள சிக்கல்கள் குறித்து அவர் விழிப்புணர்வு உடையவராக ஆனார். அவரால் எதையும் சாப்பிட முடியவில்லை. ஏனெனில் அவர் எதைத் தொட்டாலும் அது தங்கமாக மாறிவிட்டது. அவரால் எதையும் குடிக்க முடியவில்லை. ஏனெனில் அவரது உதடுகள் தண்ணீரைத் தொட்டவுடன், அந்தத் தண்ணீர் தங்கமாக மாறிவிடும். அவரது மனைவி மற்றும் குழந்தைகள் அவரை விட்டு விலகிப்

போய்விட்டனர், அவரது நண்பர்கள் அவரைப் பார்ப்பதற்கு வருவதை நிறுத்தி விட்டார்க்ள. அவரது வேலைக்காரர்களும் கூட மிகவும் உஷாராக இருந்தனர். அவரது அரச சபைக்கு வருகின்ற மிகப்பெரிய அரசவை உறுப்பினர்களும் கூட அரசவைக்கு வருவதை மறந்துவிட்டனர். பசியோடும், தாகத்தோடும் அவர் தனிமையில் உட்கார்ந்து கொண்டிருப்பது வழக்கமாயிற்று. ஆனால் இப்போது எதையும் செய்யமுடியாது. இந்த விருப்பத்தை அடைவதற்கு அவர் தனது வாழ்நாள் முழுவதும் பிரார்த்தனை செய்தார். இப்போது இதை ரத்து செய்ய வேண்டும் என்றால் அவர் மீண்டும் தனது வாழ்நாள் முழுவதும் பிரார்த்தனை செய்தாக வேண்டும்.

அவர் பிரார்த்தனை செய்ய ஆரம்பித்தார் ஆனால் எதுவும் நடக்கவில்லை. பசியினால் அவர் இறந்தார் மேலும் சில மக்களை தொட்டதன்மூலம் அவர்களை அவர் கொன்றுவிட்டார். அவர் தனது வீட்டைத் தொட்டதன்மூலம் நிச்சயமாக ஒரு தங்க அரண்மனை உண்டானது, அவரது அரண்மனையும் உபயோகப் படுத்தப்படுகின்ற பொருள்கள் யாவும் தங்கமாக மாறிவிட்டது. ஆனால் அதன் பயன் என்ன? யாருமே எப்போதும் கஷ்டப்படாத அளவுக்கு அவர் மிகவும் மோசமாக கஷ்டப்பட்டார். ஆனால் இந்த உலகிலேயே பணம் நிறைந்த மனிதராக அவர் இருந்தார்.

''பசுமைக்கரங்கள்'' பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக்க வேண்டும். தோட்டக்காரர்களுக்கு அந்த பசுமைக் கரங்கள் உண்டு. மிகப்பெரிய தோட்டக்காரர்கள் அவற்றைப் பெற்றிருப் பார்கள், அவர்கள் எதைத் தொட்டாலும் அது பசுமையானதாக, பச்சை நிறத்துடன் ஆகிவிடும். மிடாஸ் அரசருக்கு தங்க விரல்கள் இருந்தன; அவர் எதைத் தொட்டாலும் அது தங்கமாக மாறி விட்டது. ஆனால் அவர் தனது மனைவியை இழந்துவிட்டார், தனது நண்பர்களை இழந்துவிட்டார், தனது அரசவை உறுப்பினர்களை இழந்துவிட்டார், அவர் எல்லாவற்றையும் இழந்துவிட்டார். அவர் மிகுந்த செல்வச்செழிப்பு பெற்ற மனிதராக இருந்தும்கூட அவர் எல்லாவற்றையும் இழந்துவிட்டார்.

விழிப்புணர்வு உள்ள ஒரு மனிதர், ஒரு புத்தரும்கூட இப்படி உருமாற்றுகின்ற சக்தியைப் பெற்றிருக்கிறார். அவர் எதைத் தொட்டாலும் அது பேரானந்தமயமாக ஆகிறது. துன்பம் அவரிடம் வருகிறது ஆனால் அவர் அதில் ஆனந்தமான ஒன்றினைக் காண்கிறார்; சோகம் அவருக்கு வருகிறது ஆனால் அதில் அவர் அபரிமிதமான அழகும், அமைதியும் உடைய ஏதோ ஒன்றினைக் காண்கிறார். சாவு அவரிடம் வருகிறது. ஆனால் அவர் அதில் சாகாத இயல்பை மட்டுமே காண்கிறார். அவர் எதைத் தொட்டாலும் அது உருமாற்றம் அடைந்துவிடுகிறது, ஏனெனில் இப்போது அவர் எல்லாவற்றையும் கடந்து உள்ள தெளிவான தோற்றத்தைப் பெற்றிருக்கிறார். அது தான் இந்த உலகிலேயே மிகப் பெரிய அதிகாரமாக இருக்கிறது. அது யார்மீதும் செலுத்து கின்ற அதிகாரம் அல்ல அது வெறுமனே உங்களுக்குள் உறைந்துள்ள அதிகாரம்.

பகலைப் போலவே இரவும் அழகுமிக்கதாக ஆகிவிடுகிறது; சாவும் கூட வாழ்வைப்போன்று ஒரு கொண்டாட்டம் போன்று ஆகிவிடுகிறது, ஏனெனில் எல்லாவற்றையும் கடந்துவிட்ட ஒரு மனிதன் தான் முடிவில்லாதவன் என்பதை அறிந்து கொள்கிறான்.

வாழ்வு வரும் போகும், சாவும் வரும் போகும்.

அவர் எதனாலும் தொடப்படாமல் இருக்கிறார், அவர் எப்போதும் எல்லாவற்றிற்கும் அப்பால் இருக்கிறார்.

எப்போதும் எல்லாவற்றிற்கும் அப்பால் இருக்கின்ற தன்மைதான் உண்மையான மெய்ஞ்ஞானம் அதனால் தான், ஒருமுறை போதிதருமரிடம், ''சொர்க்கம் மற்றும் நரகம் பற்றி நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று கேட்டபோது அவர், ''அதைப் பற்றி நான் எதுவும் கூறமுடியாது ஏனெனில் அது எல்லாம் உன்னைப் பொறுத்துதான் இருக்கிறது,'' என்று கூறினார்.

அந்த மனிதர் ஆச்சரியமடைந்தார். சொர்க்கமும் நரகமும் ஒரு ஒன்றுமறியாத மனிதரைச் சார்ந்து எப்படி இருக்க முடியும்? அதற்கு போதிதருமர், ''இங்கே சொர்க்கமும் இல்லை. நரகமும் இல்லை, இவை எல்லாம் உங்களது உயிர் உணர்வின் நிலைகள்.

ஆழ்ந்த தூக்கத்தில் இருந்தால், நீங்கள் நரகத்தில் இருக்கிறீர்கள். எனவே பயங்கர கனவுகளால் நீங்கள் அவஸ்தைப் படுகிறீர்கள். விழிப்புடன் இருந்தால் நீங்கள் சொர்க்கத்தில் இருக்கிறீர்கள், அப்போது எல்லாத் துன்பங்களும் மறைந்து போகின்றன.

*சொர்க்கமும், நரகமும் அவரைப் பொறுத்தமட்டில் ஒன்று மில்லாதவை.*

எட்மண்ட பர்க் என்னும் ஆங்கிலேய தத்துவவாதியின் வாழ்க்கையில் நடந்த ஒரு அழகான சம்பவம் எனது நினைவுக்கு வருகிறது. இங்கிலாந்தின் ஆர்ச் பிஷப்போடு அவர் நெருங்கிய நட்பு கொண்டிருந்தார். மேலும் இங்கிலாந்தின் ஆர்ச்பிஷப், போப்பாண்டவருக்கு சமமானவர். இங்கிலாந்தில் உள்ள கிறிஸ்தவ திருச்சபைகளைப் பொறுத்தமட்டில், ஆர்ச் பிஷப்பாக இருப்பவர்தான் இயேசுகிறிஸ்துவின் பிரதிநிதி.

எட்மண்ட் பர்க்கும், இந்த ஆர்ச்பிஷப்பும் ஒரே கல்லூரியில் ஒன்றாகப் படித்ததனால் மிகவும் நண்பர்களாக இருந்தனர். மேலும் எட்மண்ட் பர்க்கின் சொற்பொழிவுகளைக் கேட்பதற்கு இந்த ஆர்ச்பிஷப் வருவதுண்டு. ஆனால் இந்த ஆர்ச்பிஷப்பின் பிரசங்கங்களுக்கு எட்மண்ட் பர்க் ஒரு போதும் சென்றதில்லை. ஒருமுறை கூட சென்றதில்லை. எனவே என்றாவது ஒருநாள் எட்மண்ட்டும் வருவார் என்று ஆர்ச்பிஷப் இயல்பாகவே காத்துக் கொண்டு இருந்தார்.

இறுதியாக அவர், ''இந்த ஞாயிற்றுக்கிழமை நீ வந்தே ஆகவேண்டும். எந்தவிதமான சாக்குப்போக்கும் கூறக்கூடாது,'' என்று கூறி அந்த ஆர்ச்பிஷப்பே எட்மண்ட் பர்க்கை அழைத்தார். மேலும்; அவர் தனது வாழ்நாளில் மிகச்சிறந்த பிரசங்கத்தினை தயார் செய்தார். அவர் எட்மண்ட் பர்க்கின் மனதைத் கவர வேண்டும் என்று விரும்பினார். எனவே அவர் இடைவிடாமல் எட்மண்டையே பார்த்துக் கொண்டு இருந்தார், ஏனெனில் அவர் முதல் வரிசையில் அமர்ந்திருந்தார். ஆனால் அந்த ஆர்ச் பிஷப்பிற்கு பயஉணர்வு வந்துவிட்டது. ஏனெனில் எட்மண்ட் பர்க் ஆடிப்போய்விட்டார் அல்லது மனம் கவரப்பட்டுவிட்டார்

என்பதற்கான எந்த ஒரு அறிகுறியும் அவரது முகத்தில் பார்க்க முடியவில்லை. கிறிஸ்தவ மதபோதகர்களுக்கு பயிற்சியின்போது சொல்லிக் கொடுக்கப்பட்ட எல்லாவகையான உடல் அசைவு களையும் செய்து கொண்டும், மேஜைமீது தட்டிக்கொண்டும், உரக்கப் பேசிக் கொண்டும் இருந்தாலும்கூட எட்மண்ட் பர்க் ஒரு வார்த்தைகூட கூறாமல் அமைதியாக உட்கார்ந்திருந்தார்.

பிரசங்கமும் முடிந்தது. அவர்கள் இருவரும் ஒரே காரில் கிளம்பினார்கள். அப்போது ஏதாவது சொல்வார் என்று ஆர்ச் பிஷப் எதிர்பார்த்தார். ஆனால் எட்மண்ட் பர்க் அப்போதும் கூட மௌனமாக வந்தார். எட்மண்ட் பர்க்கின் வீடு வந்தபோது அவர் காரைவிட்டு கீழே இறங்கினார். அப்போது தனது உணர்ச்சி தூண்டுதலை கட்டுப்படுத்த முடியாமல் அந்த ஆர்ச் பிஷப் எட்மண்ட்டிடம், ''எனது பிரசங்கத்தைப் பற்றி நீங்கள் எதுவுமே சொல்லவில்லையே. ஏதாவது சொல்லுங்கள். அது நன்றாக இல்லை என்றாலும் கூட அதை சொல்லவாவது செய்யுங்கள்; இல்லையெனில் உங்களது மனதில் உள்ளது என்ன என்று தெரியாமல் நான் அதைப்பற்றியே இடைவிடாமல் சிந்தித்துக் கொண்டு இருக்க வேண்டியதாகிவிடும்'' என்று கேட்டுவிட்டார்.

அதற்கு எட்மண்ட் பர்க், ''அது நல்லதாகவும் இல்லை அல்லது கெட்டதாகவும் இல்லை, அது வெறுமனே முட்டாள்தன மானதாக இருந்தது, அந்த அளவுக்கு நீங்கள் முட்டாள்தனமான வார்த்தைகளைப் பேசினீர்கள். உங்களைப் போன்ற ஒரு புத்திசாலி மனிதர் இப்படி பேசுவார் என்று நான் ஒருபோதும் நினைக்க வில்லை,'' என்று கூறினார்.

ஆர்ச்பிஷப், ''அந்த முட்டாள்தனமான வாக்குமூலங்கள் என்ன?'' என்று கேட்டார்.

அதற்கு எட்மண்ட் பர்க், ''இயேசு கிறிஸ்துவை நம்பி நற்காரியங்களைச் செய்பவர்கள் சொர்க்கத்திற்கு போவார்கள் என்று நீங்கள் கூறினீர்கள். மேலும் இயேசு கிறிஸ்துவை நம்பாமல், தீய செயல்களைச் செய்பவர்கள் நரகத்திற்கு போவார்கள் என்றும் கூறினீர்கள். அதில் உள்ள முட்டாள்

தனத்தை உங்களால் கண்டுகொள்ள முடியவில்லையா?'' என்று கேட்டார்.

அதற்கு அந்த ஆர்ச் பிஷப், ''இன்னமும் என்னால் அதைக் காணமுடியவில்லை,'' என்றார்.

உடனே எட்மண்ட் பர்க், ''அப்படியானால் நான் அதை உங்களுக்கு காட்டுகிறேன். இயேசு கிறிஸ்துவின் நம்பிக்கை இல்லாத ஆனால் நல்ல செயல்களைச் செய்கின்ற ஒருவன் எங்கு போகிறான்? இயேசுவின் மீது நம்பிக்கை கொண்டு கெட்ட செயல்களைச் செய்கிறவன் எங்கு போகிறான்? அப்படியானால் நல்ல செயல்களும், தீயச் செயல்களும் தான் தீர்மானிக்கின்றன? அப்படியானால் இயேசு கிறிஸ்துவின் மீதான நம்பிக்கையானது தேவைக்கு அதிகமானதாக ஆகிவிடுகிறது. அல்லது இயேசுவின் மீதுள்ள நம்பிக்கை தான் தீர்மானிக்கிறது என்றால் அதன்பிறகு நல்ல செயல்களும் தீயச் செயல்களும் சம்பந்தம் இல்லாதவை களாக ஆகிவிடுகின்றன.'' என்று கூறினார்.

அந்த ஆர்ச் பிஷப் இதைப்பற்றி ஒருபோதும் சிந்தித்தது இல்லை. ஒருவேளை எந்த ஒரு மதவாதியும் ஒருபோதும் இதைப் பற்றி சிந்தித்தது இல்லை போலும். எந்த ஒரு மதத்தின்மீதும் நம்பிக்கை வைக்காமல் ஒரு மனிதன் முற்றிலும் மதவாதியாக இருக்க முடியும் என்பதை, எந்த ஒரு கடவுளையும் நம்பாமல் ஒரு மனிதனின் வாழ்க்கையானது முற்றிலும் ஞானமும் நன்மைகளும் நிறைந்ததாக இருக்கமுடியும் என்பதை, எந்த ஒரு மதவாதியும் ஒரு போதும் சிந்தித்தது இல்லை போலும், மேலும் அதற்கு நேர்மாறாக கடவுளின் மீது, இயேசுவின் மீது நம்பிக்கையுள்ளவனாக ஒரு மனிதன் இருக்கலாம் ஆனால் இன்னமும் அவனது வாழ்க்கையானது ஒரு விலங்கின் வாழ்க்கை போன்றதைத்தவிர வேறு எதுவாகவும் இருக்கும் என்பதையும் அவர்கள் சிந்தித்து பார்ப்பதில்லை போலும்.

அதற்கு அந்த ஆர்ச் பிஷப், ''இந்தக் கேள்வி மிகவும் கடினமானது. இது குறித்து நான் ஒருபோதும் சிந்தித்தது கிடையாது, நீங்கள் எனக்கு ஏழு நாட்கள் கால அவகாசம் கொடுங்கள். அடுத்த ஞாயிற்றுக்கிழமை எனது பிரசங்கத்தில்

அதற்கு பதில் கூறுகிறேன். நீங்கள் மீண்டும் ஒருமுறை வரவேண்டும், ஏனெனில் எனது ஒட்டுமொத்த திருச்சபை கூட்டத்தினருக்கு மத்தியில் நான் எனது வாக்குமூலத்தை கூறவிரும்புகிறேன்,'' என்று கூறினார். எட்மண்ட் பர்க் அவருக்கு ஏழு நாட்கள் கொடுத்தார், ஆனால் அந்த ஏழு நாட்களும் அந்த ஆர்ச் பிஷப்பிற்கு மிகப்பெரிய துன்புறுத்தலாக இருந்தது. இப்படி அல்லது அப்படி அவர் செயல்புரிந்து பார்த்தார். ஆனால் அவரால் எந்த ஒரு தீர்வையும் கண்டு கொள்ளமுடியவில்லை. ஒன்று, இயேசு கிறிஸ்துவின் மீதுள்ள நம்பிக்கை மட்டுமே சொர்க்கத்தையும் நரகத்தையும், தீர்மானிக்கும் என்று அவர் வலியுறுத்த வேண்டும். அப்போது பாவமும், புண்ணியமும், நல்லதும் கெட்டதும் ஒரு பொருட்டாக ஆகாது. அதன் பின்னர் ஒட்டுமொத்த நல்ஒழுக்கமும் சாக்கடைக்குள் போய்விடும். ஆனால் நல்ஒழுக்கம் தான் அதை தீர்மானிக்கும் என்று அவர் கூறினால் அதன் பின்னர் இயேசு கிறிஸ்துவைப் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்? அதன் பின்னர் இயேசு கிறிஸ்து சாக்கடைக்குள் போய்விடுவார்.

ஆனால் இரண்டையும் ஒன்று சேர்ப்பதற்கு அவர் முயற்சி செய்தார். ஏழு நாட்களும் அவரால் தூங்க முடியவில்லை. இரவு முழுவதும் அதே கேள்வி அவரது மனதில் சுற்றிச் சுற்றி வந்தது. ஏழாவது நாள், கொஞ்சம் முன்னதாகவே அவர் தேவாலயத்திற்கு வந்தார், அவர் இன்னமும் அந்த பதிலை கண்டுபிடிக்கவில்லை என்றாலும் கூட ''அதிகாலை இருளில், மக்கள் வருவதற்கு முன்பே, தானே இயேசுவிடம் பிரார்த்தனை செய்வது சிறந்தது. இயேசுவிடம் எனக்கு வழிகாட்டுங்கள். இந்த புதிருக்கு என்னால் விடை காண முடியவில்லை. நான் என்ன முடிவு எடுத்தாலும் அது தவறானதாகத் தெரிகிறது. மேலும் இது போன்ற வேதனையில் நான் ஒருபோதும் இருந்ததில்லை. எனக்கு உதவுங்கள்,'' என்று பிரார்த்தனை செய்ய நினைத்தார்.

ஆனால் அவர் மிகவும் களைப்போடு இருந்தார். மேலும் ஏழு நாட்களும் அவர் தூங்கவே இல்லை, எனவே அவர் இயேசு கிறிஸதுவின் சிலையின் காலடியில் தலைவைத்தபடி அப்படியே தூங்கிவிட்டார். தூக்கத்தில் ஒரு அழகான கனவு கண்டார். அந்த

கனவில் அதிவேகமாக சென்று கொண்டிருக்கின்ற ஒரு ரயில் வண்டியில் அவர் அமர்ந்து கொண்டிருக்கிறார். அப்போது அதில் இருந்தவர்களிடம் அவர், ''நாம் எங்கு போகிறோம்?'' என்று கேட்டார். அதில் இருந்த மக்கள், ''உங்களுக்கு தெரியாதா? இந்த ரயில் சொர்க்கத்திற்கு போய்க் கொண்டிருக்கிறது'' என்று கூறினார்கள். ''அடக்கடவுளே, ஒரு வேளை இதுதான் இயேசு கிறிஸ்துவின் பதில் போலும். ''நீ உனது சொந்தக் கண் கொண்டு பார்'' என்பது தான் அவரது பதில் போலும். என்று அவர் கூறினார். அந்த ரயில் ஒரு நிலையத்தில் நின்றது. அங்கு வார்த்தைகள் மங்கிப்போய், மிகவும் கஷ்டப்பட்டு படிக்கும் படியாக ''சொர்க்கம்'' என்று எல்லா இடத்திலும் எழுதப்பட்டிருந்தது. அது ஒரு பாலைவனம் போன்று, தரிசு நிலமாக தோன்றியது.

சொர்க்கமானது இப்படி இருக்கும் என்று அவரால் நினைத்துப்பார்க்க முடியவில்லை. அவர் திரும்பவும் கேட்டார், ஆனால் மக்கள் இரயிலைவிட்டு இறங்கிக் கொண்டிருந்தார்கள். இதுதான் ''சொர்க்கம்'' என்று அவர்கள் கூறினார்கள். அவர் அதன் தெருக்களுக்கு சென்றார். அந்த தெருக்கள்; குப்பைகள் நிறைந்தும் துர் நாற்றம் அடித்துக் கொண்டும் இருந்தன. மிகவும் வரண்டுபோய், உயிரற்றுப் போன சில புனிதர்கள் அவர்களின் மரத்தின் அடியில் உட்கார்ந்து கொண்டு, இடைவிடாமல் அல்லேலூயா, அல்லேலூயா என்று திரும்பத்திரும்ப சொல்லிக் கொண்டு இருப்பதைக் கண்டார்.

அவர், அவர்களிடம், ''உண்மையில் இதுதான் சொர்க்கமா?'' என்று கேட்டார். அதற்கு அவர்கள், ''நாங்கள் இங்கு என்ன செய்து கொண்டு இருக்கிறோம் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்? நாங்கள் அனைவரும் மாபெரும் புனிதர்கள் மேலும் மாபெரும் தவத்தினால் இந்த சொர்க்கத்தை நாங்கள் அடைந்திருக்கிறோம்,'' என்று கூறினார்கள். ''விநோதமான சொர்க்கமாக உள்ளது. ஒரு சிறிய பூ கூட இல்லையே,'' என்று அவர் கூறினார். அவர் ஒரு துறவியிடம்,'' கௌதம புத்தர் இங்கு சொர்க்கத்தில் இருக்கிறாரா? சாக்ரட் பீஸ் இங்கு இருக்கிறாரா? எபிக்யூரஸ் இங்கு உள்ளாரா, என்பதை நான் அறிந்து கொள்ள முடியுமா?'' என்று கேட்டார். ஏனெனில் இவர்கள் அனைவரும் கடவுளை நம்பாதவர்கள்,

எனவே அவர்கள் இயேசு கிறிஸ்துவையும் நம்பாமல் இருந்திருப்பார்கள், அவர்கள் இயேசு கிறிஸ்துவிற்கு முன்பு பிறந்தவர்கள். அதற்கு அந்தத் துறவி, "இத்தகைய மக்களைப்பற்றி இங்கே ஒருபோதும் கேள்விப்பட்டதில்லை," என்று கூறினார். ஆனால்; அவர்கள் மிகவும் நல்லவர்களாகவும், நன்மையின் சாரம் நிறைந்தவர்களாகவும் இருந்தனர். உடனே அந்த பிஷப் ரயில் நிலையத்திற்கு ஓடிப்போய், "இங்கு நரகத்திற்கு செல்லக்கூடிய இரயிலும் கூட உண்டா?" என்று விசாரித்தார். அதற்கு அவர்கள் "அந்த இரயில் இப்போது புறப்படுவதற்கு தயாராக பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருக்கிறது" என்றார்கள். எனவே நரகம் நோக்கி செல்கின்ற ரயிலில் அவர் ஏறினார். அந்த ரயிலானது நரகம் என்னும் நிலையத்திற்குள் நுழைந்தபோது அவரால் நம்ப முடியவில்லை. இதுதான் சொர்க்கமாக இருந்திருக்க வேண்டும்! எங்கும் பசுமை, அநேக மலர்கள், மேலும் ஒவ்வொருவரும் பிரகாசமான முகத்துடனும், மகிழ்ச்சியுடனும், பாடல்கள் இசைத்துக் கொண்டும் இருந்தனர். ஏதோ ஒரு கொண்டாட்ட தினம் போன்று தெரிந்தது.

அங்குள்ளவர்களிடம், "இங்கு ஏதாவது கொண்டாட்டம் நடைபெற்றுக் கொண்டு இருக்கிறதா?" என்று விசாரித்தார். அதற்கு அவர்கள், " இல்லை, இதுதான் எங்களது அன்றாட வாழ்க்கை. கொண்டாட்டம் தான் எங்களது வாழ்க்கை." என்றனர். உடனே அவர், "கௌதமபுத்தர் இங்கு இருக்கிறாரா? சாக்ரட்பீர் இங்கு இருக்கிறாரா? எப்பிக்கியூரஸ் இங்கு இருக்கிறாரா? என்று நான் கேட்கலாமா? என்றார்.

அதற்கு அவர்கள், "அவர்கள் அனைவரும் இங்குதான் உள்ளனர். இந்த சாலையை ஒட்டி உள்ள தோட்டத்தைப் பாருங்கள். கௌதமபுத்தர் அதில் ஒரு தோட்டக்காரராக வேலை செய்து கொண்டு இருக்கின்றார். இந்த மக்கள் எல்லாம் வந்ததனால் எல்லாமே மாறிவிட்டது, அதற்க முன்பு இந்த நரகம் அந்த சொர்க்கத்தைப் போன்று தான் இருந்தது. ஆனால் கௌதமபுத்தர், சாக்ரட்பீஸ், ஹெராக்லிட்டஸ், எப்பிக்குயூரஸ், மகாவீரர் போன்ற கடவுளை நம்பாத மக்கள் இந்த நரகத்திற்குள் வந்ததில் இருந்து அவர்கள் இங்கு இருந்த ஒட்டுமொத்த

சூழலையும் மாற்றிவிட்டார்கள். இப்போது நரகம் என்பதுதான் உண்மையிலேயே சொர்க்கமாக உள்ளது. பழைய பெயர்கள்தான் உள்ளது. ஆனால் எல்லாமே மாறிவிட்டது. வாழ்க்கை என்பது இடைவிடாத நடனமாக இருக்கிறது. எல்லாமே பேரானந்தமய மாக ஆகிவிட்டது. அவர்கள் தங்களுடன், கவிதை, இசை மற்றும் கலைகளைக் கொண்டு வந்துவிட்டனர். எனவே அவர்கள் இந்த ஒட்டுமொத்த இடத்தையும் மாற்றிவிட்டார்கள்,'' என்று கூறினார்.

இந்த சூழ்நிலையை பார்த்ததும் அவர் அதிர்ச்சி அடைந்தார். அந்த நேரத்தில் அவர் கனவு கலைந்து கண்விழித்தார். மக்கள் தேவாலயத்திற்கு வர ஆரம்பித்தனர். எட்மண்ட் பர்க் ஏற்கனவே முதல் வரிசையில் அமர்ந்திருந்தார்.

அந்த ஆர்ச் பிஷப் ஒரு நேர்மையான மனிதராக இருந்தார். ''என்னால் எந்த ஒரு பதிலையும் காண முடியவில்லை. நான் இயேசுவிடம் பிரார்த்தனை செய்தேன். இந்த கனவு இயேசு வினால் கொடுக்கப்பட்டதா அல்லது நானே கண்ட கனவா என்று எனக்கு தெரியவில்லை, ஆனால் இந்த பதிலை மட்டுமே என்னால் உங்களுக்கு கொடுக்க முடியம்,'' என்று கூறினார்.

அவர் வெறுமனே தனது கனவைக் கூறிவிட்டு, ''ஒரு முட்டாள்தனமான வாக்குமூலத்தை சொன்னதற்காக தயவுசெய்து என்னை மன்னித்து விடுங்கள். நான் முன்பு கூறியதை திருத்து வதற்கு விரும்புகிறேன். உண்மையிலேயே நல்ல மனிதர்கள் எங்க இருக்கிறார்களோ அதுதான் சொர்க்கமாக இருக்கிறது. மேலும் எங்கு அடிப்படையில் தீமை செய்கின்ற மக்கள் இருக் கிறார்களோ அதுதான் நரகம். இவை மனோதத்துவ, ஆன்மிக ரீதியான இடங்கள்,'' என்று கூறினார்.

ஒரு புத்தர் எல்லாவற்றையும் மாற்றிவிடுகிறார்.

*எதுவும் உங்களுக்கு நிச்சயமாகத் தெரியாதவரையில் செயல் புரியாதீர்கள்.*

போதிதருமர் வேறு வார்த்தைகளில் கூறுகிறார். முழுமையான நிலையில் இருந்து மட்டுமே காரியங்களைச் செய்யுங்கள். ஆனால், உங்களது ஒட்டுமொத்த உயிர் உணர்வும் முழுமையாக

விழிப்புணர்வுடன் இருந்தால் மட்டுமே இந்தவிதமான செயல்கள் சாத்தியப்படும். மேலும் உங்களது செயல்கள் உங்களது ஒட்டு மொத்த உயிர் உணர்வில் இருந்து தான் வருகிறதே தவிர, உங்களது உயிர் உணர்வின் ஒரு சிறிய பகுதியில் இருந்து அல்ல, அப்படி வந்தால் அது முழுமையானதாக இருக்கவும் முடியாது மேலும் நிச்சயமானதாகவும் இருக்க முடியாது. முழுமையாக செயல்புரியுங்கள். ஆழ்ந்த தீவிரத்துடன் செயல்புரியுங்கள். மேலும் முழுமையான பேருணர்வுடனும், தானே நிகழ்கின்ற இயல்புடனும் செயலாற்றுங்கள். அதன்பின்னர் நீங்கள் எதைச் செய்தாலும் அது நல்லதாகவே இருக்கும், நீங்கள் நிச்சயமற்ற நிலையில் செயல்புரிந்தால் அதாவது பிரிவுபட்ட மனதோடு, இதுவா அல்லது அதுவா என்கிற மனதோடு, உங்களது மனதில் ஒரு சிறிய பகுதி மட்டும் விழிப்புணர்வுடன் இருந்து கொண்டு மிகப்பெரிய பகுதி விழிப்புணர்வு இல்லாத நிலையில், நீங்கள் எதைச் செய்தாலும் அது தவறாகவே இருக்கும். அது பார்ப்பதற்கு நல்லது போன்று தோன்றலாம். ஆனால் தோற்றங்களால் ஏமாற்றிவிட முடியாது.

உதாரணமாக, ஏழை ஒருவனுக்கு நீங்கள் தானம் செய்யலாம். பார்க்கின்ற யாருக்கும் அது ஒரு நல்ல செயலாகவே தெரியும்; நீங்கள் ஒரு ஏழைக்கு உதவி செய்து இருக்கிறீர்கள். ஆனால் ஒரு போதிதருமர் அல்லது ஒரு கௌதமபுத்தர் போன்ற மனிதர்களின் உணர்வின்படி நீங்கள் நிச்சயமற்ற தன்மையில் அந்த காரியத்தை செய்திருக்கிறீர்கள்; எனவே நீங்கள் உண்மையிலேயே அவனது ஏழ்மை குறித்து கருணையுடன் இருக்கவில்லை, நீங்கள் உங்களது கருணையைப் பற்றி, உங்களது அன்புடைமை பற்றி வெறுமனே தற்புகழ்ச்சியினால் செய்கிறீர்கள். நீங்கள் வெறுமனே உங்களது அகங்காரத்தை நிறைவேற்றிக் கொள்கிறீர்கள். யாராலும் அதைப் பார்க்க முடியாது. நீங்கள் ஒரு ஏழைக்கு உதவியதைத்தான் எல்லாரும் பார்ப்பார்கள். ஆனால், நீங்கள் பொதுமக்களின் சேவகன் என்று உங்களைப் பற்றி கருதிக்கொண்டு உங்களது சொந்த ஆணவத்தின் மூலமாக மட்டுமே நீங்கள் அப்படி சேவை செய்ததை உங்களால் கண்டு கொள்ள முடியும், அந்த ஒட்டுமொத்த அழகான செயலும்

இதனால் விஷமுள்ளதாக ஆகிவிடுகிறது, அப்படி நிச்சயமற்ற நிலையில் நீங்கள் செயல்பட்டால், நீங்கள் பிறப்பு இறப்பு ஆகியவற்றின் மூலம் சுற்றித் திரிந்துவிட்டு, அடைக்கலம் ஏதும் கிடைக்காமல் மனம் வருந்துவீர்கள்.

*இத்தகைய மனம் அற்ற நிலையைப் புரிந்து கொள்வதற்கு நீங்கள் செய்யாமல் செய்ய வேண்டும்.*

இது கொஞ்சம் தர்க்கவாதம் போன்று தெரியும்; ஆனால் தியானத்தை அடிப்படையாக கொண்ட தத்துவமானது இந்த செய்யாமல் செய்தல் என்பதை அதிக த்ர்க்கம் உள்ளதாகவே எடுத்துக் கொள்கிறது. போதிதருமரின் புரிந்து கொள்ளப்பட வேண்டிய அடிப்படை விஷயங்களில் இதுவும் ஒன்றாகும். வெளித்தூண்டுதல் இல்லாமல் தானாகவே செய்கின்ற செயல்கள் என்று நான் அழைப்பதுவும் இதுவும் ஒரே மாதிரியானவை. அதாவது உங்களது மனதில் ஒரு மோதலை உருவாக்காத விதத்தில், முழுமையான செயல் என்று நான் அழைப்பதும் ஒரே மாதிரியானவை.

புறத்தூண்டுதல் இல்லாமல் நீங்கள் தானாகவே செய்கின்ற செயல்களில் நீங்கள் அந்த செயல்களைச் செய்பவர் ஆக மாட்டீர்கள். அந்த செயலானது உயிர் மூலத்தில் இருந்து அதன் சொந்த இணக்கப் பெருத்தத்தோடு வருகிறது; அது செய்யாமல் செய்வதாகும். நீங்கள் செயல்புரிவதற்கு முடிவு செய்தால், நீங்கள் உங்களது மனதை அந்த செயலின் உள்ளே கொண்டு வந்தால், உங்களது கடந்தகால அனுபவங்களை நீங்கள் உள்ளே கொண்டுவந்தால், அதன்பின்னர் அந்த செயல் நீங்கள் செய்கின்ற செயல். நீங்கள்தான் அதைச் செய்ய வேண்டும் என்று முடிவெடுத்தீர்கள். ஆனால் உங்களது உயிர் உணர்வை அதற்கு பதில் செயல் புரியும்படி அனுமதிக்கும் போது உங்களது மனமானது ஒரு போதும் அதில் குறுக்கிடமுடியாது. அப்போது நீங்கள் மனமற்ற நிலையில் இருக்கிறீர்கள். முழுமையான அமைதியும், புறத்துணடுதல் இல்லாமல் எதையெல்லாம் உங்களது சுய இயல்பானது செய்கின்றதோ அதை நீங்கள் அனுமதியுங்கள்; நீங்கள் செய்யாமல் செய்கிறீர்கள். அது

கிட்டத்தட்ட ஒரு முகம் பார்க்கும் கண்ணாடி போன்றது. நீங்கள் ஒரு முகம் பார்க்கும் கண்ணாடியின் முன்பு வந்து நின்றவுடன் அந்த கண்ணாடியானது, ''இந்த மனிதரை நான் பிரதிபலிக்க வேண்டுமா அல்லது கூடாதா?'' என்று நினைத்துப்பார்க்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? ''இந்த மனிதன் பெரிய குளிர் கண்ணாடிகள் அணிந்து கொண்டு ஒரு மாஃபியா கும்பலைச் சேர்ந்தவன் போன்று தெரிகிறான், நான் இவனைப் பிரதிபலிக்க வேண்டுமா அல்லது கூடாதா,'' என்று அந்த கண்ணாடி நினைத்துப் பார்க்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? சிலர் அழகாக இருக்கிறார்கள். சிலர் அசிங்கமாக இருக்கிறார்கள், ஆனால் கண்ணாடிக்கு இது பெரிய விஷயம் அல்ல; முடிவெடுக்க வேண்டும் என்கிற கேள்விக்கே அங்கு இடமில்லை. அந்த கண்ணாடியின் சுய இயல்பானது பிரதிபலித்தல் என்பதால் அது வெறுமனே அவர்கள் யாராக இருந்தாலும் உடனே பிரதிபலிக்கிறது. கண்ணாடியின் இயல்பு பிரதிபலித்தல். அதற்கு முடிவெடுத்தல் அல்லது தீர்மானித்தல் என்கிற கேள்விக்கே இடமில்லை. ஒரு அழகான பெண்ணைக் கண்டு அது அவளைப் பாராட்டுவதில்லை அல்லது ஒரு ஒட்டகம் போன்று உள்ள ஒரு மனிதனைக் கண்டு, இவரைப் பிரதிபலிப்பதா அல்லது வேண்டாமா என்று அது சிறு நொடிப்பொழுது கூட தயக்கம் காட்டுவது கிடையாது.

மிகப்பெரிய ஞானிகளில் ஒருவராகிய அஷ்டவக்ரர் பற்றி ஒரு அழகான கதை உண்டு. அஷ்டவக்ரர் என்கிற வார்த்தைக்கு, நீங்கள் நினைத்துப் பார்க்க முடியாத அளவுக்கு மிகவும் அசிங்கமான ஒரு மனிதர் என்று அர்த்தம். அவரது உடலில் எட்டு இடங்களில் வளைந்து இருக்கும், அவர் ஒரு ஒட்டகம் போன்று அநேக வளைவுகளுடன் இருந்தார். அவரது உடலில் எதுவுமே, எப்படி இருக்க வேண்டுமோ அப்படி இல்லை. எல்லாமே கோணலாக இருந்தது. அவரது கண்கள் கூட ஒரு கண் இடது பக்கம் பார்க்கும், ஒருகண் வலதுபக்கம் பார்க்கும். அவரது கால்கள், ஒன்று ஒரு பக்கமும், அடுத்தது மறுபக்கமும் திரும்பி இருக்கும். அவர் ஒரு விநோதமான மனிதராக இருந்தார். அவர்

எப்படி சமாளித்து வாழ்ந்தார் என்பதை நினைத்து கூட பார்க்க முடியாது.

ஜனகரின் அரச சபையில் ஒரு மிகப்பெரிய ஆன்மிக விவாதம் நடந்தது. அப்போது நாட்டின் மிகப்பெரிய பண்டிதர்கள் எல்லாம் அங்கு வந்திருந்தனர். அஷ்டவக்ரரின் தந்தையும் அந்த விவாதத்திற்கு சென்றிருந்தார். அவர் பிரபலமான, அதிகம் படித்த பண்டிதர், மேலும் அவர் வெற்றிபெறுவதற்கு அதிக வாய்ப்புகள் இருந்தது. மேலும் வெற்றி பெறுகிறவருக்கு மிகப்பெரிய பரிசு காத்திருந்தது. ஆனால் நேரமாகிக் கொண்டு இருந்ததால் அஷ்டவக்ரரின் தாயார் அவரிடம், ''நேரம் ஆகிக்கொண்டு இருக்கிறது என்று நீ போய் உனது அப்பாவிடம் சொல். மேலும் சாப்பாடும் ஆறிக்கொண்டு இருக்கிறது. அவரை உடனடியாக வந்து சாப்பிட்டுவிட்டு அதன் பிறகு அரச சபைக்கு போகச்சொல். அந்த விவாதம் நாள் கணக்கில் தொடர்ந்து நடக்கும். அநேக பண்டிதர்கள் பங்கு பெறுவார்கள். அது ஒரு நாளில் முடிந்து விடாது,'' என்று கூறினாள்.

எனவே தனது தந்தையை அழைப்பதற்கு அஷ்டவக்ரர், அரசசபைக்கு சென்றார், அப்போது அங்கிருந்த பண்டிதர்கள் ஒவ்வொருவரும். இவரைப் பார்த்தவுடன் சிரிக்க ஆரம்பித்தனர். இது போன்றதொரு அசிங்கமான மனிதரை அவர்கள் பார்த்ததே கிடையாது. எல்லாமே கோணலாக இருந்தது. அவர்கள் அனைவரையும் பார்த்துவிட்டு அஷ்டவக்ரர் அந்த அரசரிடம், ''இந்த நாட்டில் மிகவும் புத்திசாலித்தனம் உள்ள பண்டிதர்களை அழைத்திருப்பீர்கள் என்று நான் நினைத்தேன். ஆனால் இந்த மக்களைப் பார்த்தால் செருப்பு தைப்பவர்கள் போன்று தெரிகிறது, ஏனெனில் அவர்களால் எனது உயிர் உணர்வை பார்க்க முடியவில்லை. அவர்களால் எனது தோலையும் எலும்புகளையும் மட்டுமே பார்க்க முடிகிறது. இந்த பண்டிதர்கள் எல்லாம் செருப்பு தைப்பவர்களா அல்லது கசாப்பு கடைகாரர்களா, நிச்சயமாக இவர்கள் மெய்ஞ்ஞானம் பெற்றவர்களாக இருக்க முடியாது, அவர்கள் மெய்ஞ்ஞானம் அடைந்திருந்தால் அவர்கள் சிரித்திருக்க மாட்டார்கள். அவர்களின் சிரிப்பு ஒரு விதமான தீர்ப்பு; இந்த அஷ்டகோணலான உடம்பை வைத்து என்னை

அவர்கள் தாழ்வுபடுத்துகின்றனர். ஆனால், உடல் தவறாக உள்ளதா அல்லது சரியாக உள்ளதா என்பது ஒரு விஷயம் அல்ல; முக்கியமான விஷயம் எனது பேருணர்வு தான்'' என்று கூறினார்.

இதனால் மனம் கவரப்பட்ட ஜனக மகாராஜா அந்த பண்டிதர்களின் சபையைக் கலைத்துவிட்டு அவர்களிடம், ''இப்போது நீங்கள் எனக்கு தேவை இல்லை. நான் யாருடைய பேச்சைக் காது கொடுத்து கேட்க விரும்பினேனோ அந்த மனிதர் வந்துவிட்டார். உள்ளுக்குள் இருக்கும் உயிர் உணர்வை, பேருணர்வை, விழிப்புணர்வை அறிந்து கொண்ட ஒரு மனிதரைத் தான் நான் விரும்பினேன். நீங்கள் அனைவரும் கற்றறிந்தவர்கள். ஆனால் நீங்கள் மெய்ஞ்ஞானம் அடைந்தவர்கள் அல்லர்,'' என்று கூறினார்.

மெய்ஞ்ஞானி எந்த ஒரு தீர்மானத்திற்கும் வரமாட்டார். அதைப்பற்றி எதுவும் சிந்திக்காமல் செயல்புரிவார். அவர் மனம் என்பது அற்ற நிலையில் செயல்புரிவார். ஆனால் அவரது செயலில் ஒரு அழகு, அருள், சத்தியம், நன்மை, மற்றும் தெய்விகத்தன்மை ஆகியவை இருக்கிறது. நீங்கள் செய்யாமல் செய்ய வேண்டும். அதன் பிறகு மட்டுமே ஒரு ததாகதரின் கண்ணோட்டத்துடன் உங்களால் விஷயங்களைப் பார்க்க முடியும்.

நீங்கள் விழிப்பு நிலைக்கு வரவில்லை என்றால், புறத்தூண்டுதல் இனறி தானே செய்தல், முழுமையாக செய்தல், செய்யாமல் செய்தல் போன்ற மெய்ஞ்ஞானம் அடைந்த ஒரு மனிதரின் கண்ணோட்டத்தை, பொருள்கள் மற்றும் வாழ்க்கை குறித்த அவரது பார்வையை உங்களால் அறிந்து கொள்ள முடியாது.

எல்லாவற்றையும், அதன் அடிப்படை இயல்புடன் அப்படியே ஏற்றுக் கொள்கிற ஒருவர் தான் ததாகதா என்று நான் விளக்கமளித்து இருக்கிறேன். அவர் எந்த விஷயத்தையம் கண்டனம் செய்வதும் இல்லை, எந்த விஷயத்தையும் பாராட்டுவதும் கிடையாது, எந்தவிதமான தீர்ப்புகளும் இன்றி, ஒவ்வொருவரையும் அவர் எப்படி இருக்கிறாரோ, அந்த

அடிப்படை இயல்பின்படியே ஏற்றுக் கொள்வது தான் ததாகதாவின் கண்ணோட்டம் என்பதன் அர்த்தம். ஒரு ததாகதா யாருடைய வாழ்விலும் ஒருபோதும் குறுக்கிடுவதில்லை, அவர் ஒருபோதும் உங்களது எல்லைக்குள் அத்துமீறி நுழைவதில்லை. இதுதான் அவரது அகிம்சை, இதுதான் அவரது அன்பு, இதுதான் அவரது கருணை.

ஆனால் அவரது கண்ணோட்டத்தை புரிந்து கொள்வதற்கு நீங்கள் அவரது உயிர் உணர்விற்கு கொஞ்சம் அருகில் வரவேண்டும். செய்யாமல் செய்வதை நீங்கள் கற்றுக் கொள்ள வேண்டும், அதில் உங்களது மனம் குறுக்கிடாமல் செய்ய வேண்டும், முழுமையாக செய்தல் வேண்டும். ஆனால் உங்களது உயிர் உணர்வு முழுவதும் ஒளி நிரம்பி இருக்கும்போது, நீங்கள் மெய்ஞ்ஞானம் அடையும்போது, எல்லா இருளும் உங்களிடம் இருந்து வெளியேற்றப்படும்போது மட்டுமே அது சாத்தியப்படும்.

இப்போது போதிதருமர் சில குறிப்புகளைக் கொடுக்கிறார். ததாகதாவாக இருக்கவேண்டும் என்கிற இறுதி எல்லையை அவர் உங்களுக்கு கொடுத்து விட்டார். இப்போது அந்த பாதையில் முதன்முதலாக செல்பவர்களுக்கு அவர் சில குறிப்புகளைக் கொடுக்கிறார்.

*ஆனால் பாதையில் நீங்கள் முதன்முதலாக இறங்கும்போது, உங்களது விழிப்புணர்வு ஓர் இடத்தில் குவிக்கப்படுவதில்லை. அது அலை பாய்ந்து கொண்டு இருக்கும். அப்போது, விநோதமான, கனவுபோன்ற, எல்லாவிதமான காட்சிகளையும் நீங்கள் காண நேரிடலாம். ஆனால் இப்படிப்பட்ட காட்சிகள் எல்லாம் உங்களது சொந்த மனதில் இருந்து தான் வருகிறதே தவிர, வேறு எங்கிருந்தும் இல்லை. என்பதில் நீங்கள் சந்தேகம் அடையக்கூடாது.*

எனவே, எவ்வளவுதான் இனிமையானதாக இருந்தாலும் கூட, எந்த ஒரு கனவு போன்ற காட்சியின் மீதும் பற்றுதல் கொண்டு விடாதீர்கள். ''வழியில் என்னை நீங்கள் சந்தித்தால், உடனடியாக என்னைக் கொன்று விடுங்கள்,'' என்று கௌதம புத்தர் கூறியதாக சொல்லப்பட்டுள்ளது. அவர் உங்களது தியானம்

குறித்து பேசிக் கொண்டிருக்கிறார். உங்களது தியானத்தின்போது நீங்கள் கௌதமபுத்தரைக் கண்டால், நீங்கள் அடைய வேண்டியதை அடைந்துவிட்டீர்கள் என்று உங்களை சமாதானப் படுத்துவதற்கு உங்களது மனமானது அதற்கு சாத்தியப்படுகின்ற எல்லாவழிகளிலும் முயற்சி செய்யும். இப்போது கௌதமபுத்தரே உங்களது பேருணர்வில் வந்துவிட்டார். இனிமேல் இதற்குமேல் இன்னும் அதிகமாக என்னவேண்டும்? கௌதமபுத்தரை வழிபடுவதை நிறுத்திவிடு என்று கூறும்.

மேலும், துறவிகள் என்று இந்த உலகில் அழைக்கப்படு பவர்கள் எப்போதும் இதுபோன்ற கனவு மாதிரியான விஷ யத்தில் மட்டுமே நின்றுவிட்டவர்களாகின்றனர். கிறிஸ்துவைக் கண்டு விட்ட கிறிஸ்துவ துறவிகள் உள்ளனர். அவர்களும் கூட தாங்கள் அடைந்துவிட்டதாக நினைக்கின்றனர். ஆனால் கிறிஸ்து என்பது அவர்களது சொந்த மனதின் திரையிடலே அன்றி வேறு எதுவும் அல்ல. ஒரு இந்து ஒருபோதும் கிறிஸ்துவைக் காண்பதில்லை; இந்து கிருஷ்ணரைக் காண்கிறார், இந்து ராமனைப் பார்க்கிறார், எந்த ஒரு கிறிஸ்தவரும் கிருஷ்ணரையோ அல்லது ராமரையோ ஒருபோதும் பார்ப்பது கிடையாது.

இவை எல்லாம் நமது கட்டுத்திட்டங்கள். மனமானது கிறிஸ்து அல்லது கிருஷ்ணர் அல்லது புத்தர் ஆகியவர்களின் கட்டுத்திட்டத்தை சுமந்து கொண்டே இருக்கிறது. மேலும் நீங்கள் அமைதியாக இருக்கும்போது அந்த கட்டுத்திட்டம் உங்களுக்கு முன்பு வருகிறது. அதை உண்மை என்று நம்பி நீங்கள் ஏமாந்துவிடும் அளவுக்கு அது உயிர்த்துடிப்புள்ளதாக இருக்கும். அதனால்தான், உங்களது தியானத்தின் பாதையில் எது நடந்தாலும் அது உங்களது மனதின் திரையிடலே தவிர வேறு எதுவும் இல்லை என்று போதிதருமர் உங்களுக்கு விழிப்புணர்வை உண்டாக்குகிறார். அதை வெளியேற்றிவிடுங்கள்; அது புத்தரோ அல்லது கிறிஸ்துவோ அல்லது கிருஷ்ணரோ, யாராக இருந் தாலும் அது ஒரு பொருட்டல்ல, நீங்கள் இன்னமும் வெகுதூரம் செல்ல வேண்டும்; உங்களது மனதின் எல்லா திரையிடல் களையும் பின்னால் ஒதுக்கிவிட்டு, எதுவுமே தோன்றாத ஒரு நிலைக்கு நீங்கள் போக வேண்டும்.

அதன் பின்னர் மட்டுமே நீங்கள் எல்லாவற்றையும் கடந்து உள்ள ஒன்றினை சென்றடைவீர்கள்.

அதன் பின்னர் மட்டுமே நீங்கள் உங்களது சுய இயல்பை சென்றடைவீர்கள். ஆனால் உங்களது சுய இயல்பானது வெளிப் படுத்தப்படுவதற்கு முன்பு, மேலும் ஒரு அனுபவத்தை போதி தருமர் அறிவுறுத்துகிறார். இதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.

இந்த சூரியனை விடவும், பிரகாசமான ஒரு ஒளியை நீங்கள் பார்த்தால் உங்களிடம் மிச்சம் மீதி இருக்கின்ற பற்றுதல்கள் எல்லாம் ஒரு முடிவுக்கு வருகிறது. மேலும் உண்மை நிலையின் இயல்பானது வெளிப்படுத்தப்படும். இப்படிப்பட்ட ஒரு நிகழ்வு; மெய்ஞ்ஞானம் அடைவதற்கான அடிப்படையாக உதவுகிறது.

அது மெய்ஞ்ஞானம் அல்ல, ஆனால் ஒரு அடிப்படை போன்று உதவுகிறது, இந்த சூரியனை விடவும், பிரகாசமான ஒரு ஒளியை நீங்கள் பார்த்தால்... ஏனெனில் அந்த ஒளியை உங்களது மனதினால் திரையிட்டு காட்ட முடியாது, மனம் எதை அறிந்துள்ளதோ அதை மட்டுமே திரையிட்டு காட்ட முடியும், வெறும் சூரியனை வேண்டுமானால் உங்களது மனம் திரையிட்டு காட்டலாம். ஆனால் அது ஒருபோதும் அறிந்திராத மிகவும் பிரகாசமான சூரியனை திரையிட்டு காட்டமுடியாது, சூரியனை விடவும் பிரகாசமான ஒரு ஒளியை நீங்கள் கண்டால்... தனது தியானத்தின்போது திடீரென்று தன்னைச் சுற்றிலும் ஓராயிரம் சூரியன்கள் உதித்துவிட்டது போன்று இருக்கும் என்று கபீர் கூறுகிறார். அந்த ஒளியானது அந்த அளவுக்கு கண்களைக் குருடாக்கி விடுவது போன்று இருக்கும். எனவே அதை பார்ப்பதற்கும் கூட பயமாக இருக்கும். இது மெய்ஞ்ஞானம் அல்ல, ஆனால் இது இரண்டு விஷயங்களின் ஆரம்பம். ஒன்று, இது உங்களது எல்லா பற்றுதல்களையும், அவை ஏதோ இந்த பேரொளியினால் எரித்துவிட்டதைப் போன்று, அவற்றை முடிவுக்கு கொண்டு வருகிறது. இரண்டாவதாக இது மெய்ஞ் ஞானத்திற்கான ஒரு அடிப்படையை உருவாக்குகிறது.

*ஆனால் இது நீங்கள் மட்டுமே அறிந்து கொண்ட ஒன்றாகும். இதை மற்றவர்களிடம் உங்களால் விவரிக்க முடியாது.*

உண்மையில் இதைப்பற்றி நீங்கள் மற்றவர்களிடம் பேசக்கூடாது. ஏனெனில் அவர்கள் இதைக்கேட்டு வெறுமனே சிரிப்பார்கள். இது முட்டாள்தனமானது என்று அவர்கள் எடுத்துக் கொள்வார்கள். நீங்கள் மெய்ஞ்ஞானி ஆவதற்கு தயாராக இருக்கிறீர்கள் என்பதை அவர்களால் ஏற்றுக்கொள்ள முடியாது. அதிலும் குறிப்பாக நீங்கள், அவர்களுக்கு நன்கு அறிமுகமான நீங்கள் மெய்ஞ்ஞானி ஆகப்போகிறீர்கள் என்பதை அவர்களால் ஏற்றுக் கொள்ள முடியாது. அவர்கள் எப்போதும் உங்களை விடவும் தாங்கள் தான் உயர்ந்தவர் என்றும் புனிதமானவர் என்றும் நினைத்துக் கொண்டு இருப்பார்கள், நீங்கள் ஏமாற்றுகிறீர்கள் என்று நினைப்பார்கள். நீங்கள் ஏமாற்றுவதற்கு முயற்சிப்ப தாகவும், ஆனால் யாரும் உங்களிடம் ஏமாறப் போவதில்லை என்றும் கூறுவார்கள். எனவே அந்த அனுபவத்தைப் பற்றி நீங்கள் யாரிடமும் பேசாமல் இருப்பது சிறந்தது. ஏனெனில் நீங்கள் பேசுவதால், அவர்கள் தங்களின் விமர்சனங்களால், கருத்துகளால் அதை அழித்துவிட முடியும். மெய்ஞ்ஞானத்திற்கான அடிப்படையே அவர்களால் அழித்து விடமுடியும். எனவே அந்த அனுபவத்தை உங்களது உள்ளத்தின் ஆழத்தில் ஒரு ரகசியம் போல வைத்திருப்பது சிறந்ததாகும். மற்றவர்கள் முன்பு அதை வெளியில் கொண்டுவரக்கூடாத அளவுக்கு அது மிகவும் மதிப்புள்ளது, *அல்லது நீங்கள் நடந்து கொண்டும், நின்று கொண்டும், அல்லது அமர்ந்து கொண்டும், இருள் நிறைந்த இரவில் அசையாமல் படுத்துக்கொண்டும் இருக்கும்போது, இவையெல்லாம் பட்டப்பகலில் நடப்பது போன்று தோன்றி னால் திடுக்கிட்டு விடாதீர்கள். இது உங்களது சொந்த மனம் அந்த நிலையானது தன்னைப் பற்றி வெளிப்படுத்துவதாகும்.*

வெவ்வேறு மனிதர்களுக்கு மெய்ஞ்ஞானம் என்பது வெவ்வேறு வாசல்களில் இருந்து வருகிறது. இது உங்களின் தனித்துவத்தை, உங்களின் தனித்தன்மையைப் பொறுத்து உள்ளது. ஒரு சிலருக்கு, ஒரு பிரகாசமான சூரிய ஒளி அல்லது ஆயிரம் சூரியன்களின் ஒளி தோன்றுவது போன்று நிகழ

ஆரம்பிக்கலாம். ஒரு சிலருக்கு நீங்கள் இரவில் படுக்கையில் படுத்திருக்கும்போது திடீரென்று பட்டப்பகல் போன்று எல்லாப் பொருள்களையும் பார்க்க ஆரம்பிக்கலாம். இதனால் திடுக்கிட்டு விடாதீர்கள், இதனால் பயந்து விடாதீர்கள். இது ஒரு நல்ல அறிகுறி. இது உங்களது மெய்ஞ்ஞானத்திற்கான அடிப்படையை உண்டாக்கும் மற்றும் இது உங்களது பற்றுதல்களை எல்லாம் அழித்துவிடும். *நீங்கள் உங்களது இயல்பைக் கண்டு கொண்டால், நீங்கள் சூத்திரங்களைப் படிக்க வேண்டியதில்லை, அல்லது புத்தர்களை ஆவாகனம் செய்ய வேண்டியதில்லை. ஆழ்ந்த கல்வியும், அறிவும் பயனற்றவை என்பதோடு மட்டுமல்ல விழிப்புணர்வை மேகம்போல மறைத்து விடுகின்றன.*

அவைகள் பயனற்றவை என்பதோடு மட்டுமல்ல, அவை தீங்கானவை, அதிக அளவு தீங்கானவையும் கூட.

*கோட்பாடுகள் எல்லாம் மனம் அற்ற நிலையைச் சுட்டிக் காட்டுவதற்கு மட்டுமே இருக்கின்றன. நீங்கள் உங்களது மனம் அற்ற நிலையைப் பார்த்துவிட்ட பிறகு இந்த கோட்பாடுகள் மீது ஏன் கவனம் செலுத்த வேண்டும்?*

மிகப்பெரிய குருமார்கள், தாங்கள் மெய்ஞ்ஞானம் அடைந்தபோது அவர்கள் செய்த முதல் காரியம் தங்களின் புனித நூல்களைப் போட்டு எரித்துவிட்ட சம்பவங்கள் அநேகம் நடந்துள்ளன. புனித நூல்களின் வேலை முடிந்துவிட்டது. புனித நூல்களின் ஒட்டுமொத்த வேலையும், எப்படியாவது உங்களுக்கு உங்களது ஆன்மாவை, உங்களது சுய இயல்பை சுட்டிக்காட்டுவது தான் ஆகும். எனவே நீங்கள் உங்களது சுய இயல்பை கண்டு விட்டால் இந்த கோட்பாடுகள் எல்லாம் வெறும் குப்பைகள்.

சாகும் இயல்பில் இருந்து ஒரு புத்தராக நீங்கள் ஆவதற்கு அதாவது மரணத்தில் இருந்து மரணமில்லா நிலைக்கு போவதற்கு, பிரிவுகளில் இருந்து அவற்றை கடந்து உள்ள ஒன்றிற்குள் செல்வதற்கு நீங்கள் உங்களது கர்மவினைகளுக்கு ஒரு முடிவுகட்ட வேண்டும். நீங்கள் செய்யாமல் செய்வதைக் கற்றுக் கொள்ள வேண்டும்.

விழிப்புணர்வை பேணி வளர்க்க வேண்டும் மேலும் வாழ்க்கை என்ன கொண்டு வருகிறதோ அதை ஏற்றுக் கொள்ள வேண்டும். ஆன்மிகப் பாதையில் நடந்து செல்கின்ற ஒவ்வொருவரும் இந்த குறிப்புகளை ஞாபகத்தில் வைத்திருக்க வேண்டும். விழிப்புணர்வை பேணி வளர்க்க வேண்டும்... ஒருவர் தனது விழிப்புணர்வை பேணி வளர்ப்பது எப்படி? விழிப்புணர்வுடன் இருப்பதற்கான எந்த ஒரு சந்தர்ப்பத்தையும் தவறவிட்டு விடாதீர்கள். நடக்கும்போது விழிப்புணர்வுடன் நடந்து செல்லுங்கள். நான் எனது கைகளை விழிப்புணர்வு இல்லாமலும் அசைக்கலாம் அல்லது விழிப்புணர்வுடனும் அசைக்கலாம். உங்களது கைகளை முழு விழிப்புணர்வுடன் அசையுங்கள். அது உங்களது கைகளுக்கு ஒரு புதிய நளினத்தைக் கொண்டுவரும், மேலும் உங்களுக்குள் மாபெரும் அமைதியும், சாந்தியும் உணரப்படும்.

சாப்பிடும்போது, விழிப்புணர்வோடு சாப்பிடுங்கள். பெரும்பாலான நேரங்களில் மக்கள் உணர்வு இல்லாமல் வெறுமனே உணவை விழுங்கிக்கொண்டு இருக்கின்றனர்; அதனால் தான் அவர்கள் அதிகம் உண்கின்றனர், ஏனெனில் அவர்களின் ருசி உணர்வு இன்னமும் திருப்தி அடையவில்லை. அவர்கள் விழிப்புணர்வுடன் சாப்பிட்டால், அப்போது அவர்கள் உணவை அசை போட்டு சாப்பிடுவார்கள்.

நீங்கள் உண்கின்ற ஒவ்வொரு கவளம் உணவையும், நாற்பத்து எட்டுமுறை அசை போட்டு சாப்பிடாவிட்டால், நீங்கள் உங்களது ஜீரண மண்டலத்தில் தேவையில்லாமல் சுமையை ஏற்றிக் கொண்டிருக்கிறீர்கள் என்று விஞ்ஞானிகள் கூறுகின்றனர். மேலும் உங்களது வாழ்நாள் உங்களது ஜீரண மண்டலத்தைச் சார்ந்தே இருக்கிறது. அது இளமையுடனும், உயிர்த்துடிப்புடனும் இருந்தால், இந்த உடலில் நீங்கள் நீண்ட காலம் இருக்கமுடியும். ஆனால் நீங்கள் இதை அறிந்து கொள்ளாமல் வெறுமனே உணவை விழுங்கிக் கொண்டு இருக்கிறீர்கள். உங்களது ஜீரண மண்டலத்திற்கு பற்கள் கிடையாது, அதனால் அசை போட முடியாது. அசை போடுதல் என்பது உங்களது வாயில் செய்யப் பட வேண்டியது; வாய்க்கு அப்பால், அசைபோடுதல் என்கிற

கேள்விக்கே இடமில்லை. மேலும் அசை போடாத உணவு ஒரு சுமையாக, ஒரு பாரமாக இருக்கிறது; அது உங்களது ஜீரண மண்டலத்தை துன்புறுத்துகிறது; அது உங்களது குடல்களைத் துன்புறுத்துகிறது. அது உங்களது வயிற்றுக்குள் எல்லாவிதமான தொந்தரவுகளையும் உருவாக்குகிறது.

ஒருநாள் வெறுமனே நாற்பத்து எட்டுமுறை எண்ணுங்கள் அப்போது நீங்கள் விழிப்புணர்வுடன் இருந்தாக வேண்டும். ஏனெனில் நீங்கள் எண்ணி ஆக வேண்டும். அசை போடும் போது நீங்கள் வேறு விஷயங்களை நினைத்துக் கொண்டு போக முடியாது. நீங்கள், உங்களது எண்ணிக்கையிலும், அசை போடுதலிலும் மனதை குவித்தாக வேண்டும் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு என்று நாற்பத்து எட்டு வரை எண்ண வேண்டும். அதன்பிறகு மட்டுமே நீங்கள் உணவை விழுங்குவதற்கு அனுமதிக்கப்படுவீர்கள்.

விழிப்புணர்வை பேணி வளர்த்தல் என்பதற்கு எல்லாவற்றையும் விழிப்புணர்வுடன் இருப்பதற்கான சந்தர்ப்பமாக ஆக்க வேண்டும் என்று அர்த்தமாகும். ஆகவே இருபத்து நான்கு மணி நேரமும் மேலும்மேலும் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும். நீங்கள் குளியலறையில் தூவானத்தின் கீழ் குளிக்கும்போது அந்த குளியலை உயர் இழந்த நிலையில், இயந்திரத்தனமாக செய்யாதீர்கள். ஏனெனில் நீங்கள் எப்போதும் அப்படித்தான் செய்வீர்கள், நீங்கள் குளிக்கும் போது தூவானத்தின் அடியில் நின்று கொண்டு ஆயிரத்தோரு விஷயங்களைப் பற்றி சிந்தித்துக் கொண்டு இருப்பீர்கள். தூவானத்தின் அடியில், நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டியது. அதிலிருந்து உங்களுக்கு வருகின்ற குளிர்ந்த நீரின் குளிர்ச்சியை, அதிலிருந்து உங்களுக்கு வருகின்ற புத்துணர்ச்சியை மட்டுமே உணர வேண்டும். அது குறித்து முழு விழிப்புணர்வுடனும் இருங்கள்.

உங்களது விழிப்புணர்வை பேணி வளர்த்தல் என்பதற்கு அது ஒரு பகல் மற்றும் இரவு ஆகிய இருபத்து நான்கு மணிநேர திட்டம் என்று அர்த்தமாகும். அது களைப்பானதாக இருக்காது; அதற்கு நேர் மாறாக அது மிகவும் புத்துணர்ச்சி அளிப்பதாகவும்,

புத்துயிர் அளிப்பதாகவும் இருக்கும். மேலும் இரண்டாவது விஷயமாவது: *மேலும் வாழ்க்கை என்ன கொண்டு வருகிறதோ அதை ஏற்றுக் கொள்ளுதல்.* அதுதான் ததாகதா. வாழ்க்கை என்ன கொண்டு வந்தாலும் அதை நிறைந்த நன்றியுடனும், நன்றிப் பெருக்குடனும் ஏற்றுக் கொள்ளுங்கள் ஏனெனில் அந்த விஷயத்தை உங்களுக்கு கொண்டுவர வேண்டும் என்று வாழ்க்கைக்கு எந்த அவசியமும் கிடையாது.

ஒரு குளிர்ந்த தென்றல் காற்று வருகிறது. அது நீங்கள் உழைத்து சம்பாதித்து என்று நீங்கள் நினைக்கிறீர்களா? அதற்கு நீங்கள் தகுதியானவர் என்று நினைக்கிறீர்களா? இந்த இயற்கை உங்களுக்கு கடன்பட்டிருக்கிறது என்று நீங்கள் நினைக்கிறீர்களா? ஒரு அழகான மேகம் கடந்து செல்கிறது, ஒரு அழகான சூரிய அஸ்தமனத்தின்போது அடிவானத்தில் எல்லா நிறங்களும் தெரிகின்றன. வானவில்லில் ஏழு நிறங்கள் தெரிகின்றன, இப்படி வாழ்க்கையானது உங்களுக்கு கொண்டு வருகின்ற ஒவ்வொன்றையும் நன்றிப் பெருக்குடனும், நன்றியுணர்வுடனும், மகிழ்ச்சியுடனும் ஏற்றுக் கொள்ளுங்கள். இது கொஞ்சம் கொஞ்சமாக உங்களுக்குள் எல்லாவற்றையும் ஆழ்ந்து ஏற்றுக் கொள்கின்ற பக்குவத்தை உருவாக்கிவிடும். அப்படி ஆழ்ந்து ஏற்றுக் கொள்வதில் தான் எல்லாவற்றையும் கடந்து உள்ள ஒன்று மறைந்திருக்கிறது. *சாகும் இயல்புடையவர்கள், தங்களின் சுய இயல்பைக் கண்டுகொண்ட பிறகு எல்லாப் பற்றுதல்களும் முடிந்துவிடுகின்றன. விழிப்புணர்வு மறைந்து இருக்கவில்லை. ஆனால் இப்போதுள்ள இந்தப் பொழுதில் மட்டுமே அதைக் கண்டு கொள்ள முடியும். விழிப்புணர்வு எப்போதும் நிகழ் பொழுதில் மட்டுமே உள்ளது.*

இந்த வாக்குமூலம் புரிந்துகொள்ளப்படவேண்டும். ''இப்பொழுது'' என்பதை வலியுறுத்துவது நீங்கள் இதை ஒத்திப்போடுவதில் இருந்து தடுப்பதற்காகத் தான். இந்த முப்பது ஆண்டுகளை நான் மக்களிடம் பழகும்போது ஆயிரக்கணக்கான மக்கள் என்னிடம், ''நான் தியானம் செய்ய ஆரம்பிப்பேன்'' என்று கூறுவார்கள். ஆரம்பிப்பார்களா? நீங்கள் தியானத்தின்

அர்த்தத்தை புரிந்து கொண்டால் அதன்பின்னர் இந்த நிகழ் பொழுது தான் அதற்குரிய தருணம், மற்றொரு தருணம் அல்ல.

மற்றொரு தருணம் என்பது வெறுமனே நீங்கள் புரிந்து கொள்ளவில்லை என்றுதான் அர்த்தமாகும். தியானம் என்பது உங்களது சலவைப்பட்டியலில் இன்னமும்கூட முதலாவதாக இல்லை, அது எங்கோ பட்டியலின் அடிப்பாகத்தில் உள்ளது. முதலில் நீங்கள் சம்பாதிக்க வேண்டும், அதன்பின்னர் உங்களது மகளின் திருமணத்தை முடிக்க வேண்டும், அதற்கு பிறகு உங்களது மகன் மருத்துவக்கல்லூரிக்கு போவான், அதன்பிறகு நீங்கள் ஒரு வீடு கட்டியாக வேண்டும், இப்படி போய்க்கொண்டே இருக்கும். உங்களது சலவைப் பட்டியலுக்கு முடிவே கிடையாது. மேலும் கடவுள் விரும்பினால், நீங்கள் அப்போதும் உயிருடன் இருந்தால், பெரும்பாலும் நீங்கள் இருக்கமாட்டீர்கள். ஏனெனில் உங்களது பட்டியல் மிகவும் நீளமானது ஆனால் உங்களது வாழ்க்கையோ குறுகியது, எனவே தியானம் செய்வதற்கு நேரம் இல்லாததால் அது உங்களது பட்டியலின் அடியில் இருக்கும். தியானம் வருவதற்கு முன்பு மரணம் வந்துவிடும்.

அதனால் தான் இந்த நிகழ்பொழுது என்பது வலியுறுத்தப் படுகிறது. ஏனெனில் குறைந்த பட்சம் மரணம் என்பது இன்னமும் வரவில்லை என்கிற ஒரு விஷயம் மட்டும் நிச்சயமானது. இந்த நொடிப்பொழுதில் நிச்சயமாக நீங்கள் உயிருடன் இருக்கிறீர்கள். அடுத்த நொடி என்ன நடக்கும் என்று யார் அறிவார்? எனவே ஒரு சிறு நொடிப்பொழுதுகூட இதை ஒத்திப் போடாதீர்கள். நீங்கள் மெய்ஞ்ஞானம் பெற்ற ஒரு உயிராக ஆவதற்கு விரும்பினால் அதன் பின்னர், இப்பொழுது என்பதுதான் அதற்காக தருணம், அதன்பிறகு இங்கேயே என்பது தான் அதற்கான இடமாகும். உண்மையிலேயே நீங்கள் பாதையைக் கண்டு கொள்ள விரும்பினால் எதையும் பற்றிக்கொண்டு இருக்காதீர்கள்.

எந்த தப்பெண்ணமும் வேண்டாம், உண்மையிலேயே நீங்கள் பாதையைக் கண்டுகொள்ள விரும்பினால் எந்தவிதமான கோரிக்கைகளையும் வைக்காதீர்கள். அந்த பாதையானது குறிப்பிட்ட இந்த கோரிக்கைகளை நிறைவேற்ற வேண்டும் என்று

சொல்லாதீர்கள், உங்களுக்குப் பாதை தெரியாது. அதில் கோரிக்கை எழுப்பும் அகங்காரத்தோடு செல்லாமல், பணிவுடன் செல்லுங்கள். அப்படி செல்லாவிட்டால் உங்களால் ஒருபோதும் பாதையைக் கண்டு கொள்ள முடியாது. தப்பெண்ணங்களால் நிறைந்த உங்கள் மனம் அதற்கு அப்பால் போவதற்கு உங்களை ஒருபோதும் அனுமதிக்காது. ஆனால் பாதையானது மனதிற்கு அப்பால் தான் செல்கிறது. எதையும் பற்றிக் கொண்டு இருக்காதீர்கள். உங்களது எல்லா செயல்களுக்கும், தானே எழுகின்ற செயல்களாக இல்லாமல் உங்களது மனதினால் முடிவெடுக்கப்படுகின்ற செயல்களுக்கும் ஒரு முடிவுகட்டிவிட்டு, உங்களது விழிப்புணர்வை பேணி வளர்க்கும்போது உங்களிடம் மீதி இருக்கின்ற எந்த பற்றுதலும் முடிவுக்கு வந்துவிடும். வெறுமனே அர்த்தமில்லாதவை என்று புரிந்து கொள்ளப் படுவதிலேயே அவை முடிவுக்கு வந்துவிடும்.

உங்களது விழிப்புணர்வு வளரும்போது, பற்றுதல்கள் குறையும். முழுமையான விழிப்புணர்வு என்றால் எந்த பற்றுதலும் இல்லை என்று அர்த்தம். அதற்காக நீங்கள் நண்பர்களை வைத்திருக்கமாட்டீர்கள் என்று அர்த்தமல்ல, அதற்காக நீங்கள் இந்த உலகினை துறந்து விடவேண்டும் என்று அர்த்தம் அல்ல. நீங்கள் மக்களிடம் வெறுமனே பசை போன்று ஒட்டிக்கொள் ளாதீர்கள் என்றுதான் அர்த்தம். அது ஒரு அசிங்கமான நிலை. நீங்கள் சந்தோஷத்தை அனுபவியுங்கள், நீங்கள் பகிர்ந்து கொள்ளுங்கள், ஆனால் ஒருபோதும் யாரையும், எதற்கும் சார்ந்து இருக்காதீர்கள். நீங்கள் ஒருபோதும் ஒரு அடிமையாக ஆகி விடாதீர்கள்.

பற்றுதல்களை விட்டுவிடுதல் என்பது உண்மையிலேயே உங்களது எல்லா அடிமைத்தனத்தையும், மக்கள் மற்றும் பொருள்களைச் சார்ந்து இருத்தலையும் விட்டுவிடுதல் என்பதாகும். அது உங்களுக்கு விடுதலையை, உண்மையான ஒரே விடுதலையைக் கொண்டுவரும். அரசியல் விடுதலைக்கு அதிக அர்த்தம் கிடையாது, பொருளாதார விடுதலை அதிக அர்த்தத்தைக் கொடுக்காது, உண்மையான விடுதலை ஆன்மிக விடுதலை மட்டுமேயாகும் மேலும் உங்களது பற்றுதல்களை

எல்லாம் விட்டுவிட்டு, ஒரு மிகப்பெரிய நெருப்பு தூண் போன்ற விழிப்புணர்வை உருவாக்குவதனால் மட்டுமே அந்த விடுதலை கிடைக்கும்.

புரிதல் என்பது இயல்பாகவே வருகிறது. நீங்கள் எந்த முயற்சியும் எடுக்க வேண்டியதில்லை. ஆனால் புத்தர் என்ன அர்த்தத்தில் கூறுகிறார் என்பதை மதவெறியர்கள் புரிந்து கொள்ள மாட்டார்கள். மேலும் அவர்கள் எந்த அளவுக்கு அவர்கள் கடினமுயற்சி செய்கிறார்களோ அந்த அளவுக்கு அவர்கள் ஞானியின் அர்த்தத்தில் இருந்து வெகுதூரம் விலகி விடுவார்கள். நாள்முழுவதும் அவர்கள் புத்தரை ஆவாகனம் செய்கின்றனர், மற்றும் சூத்திரங்களைப் படிக்கின்றனர். ஆனால் தங்களின் சொந்த தெய்விக இயல்பு குறித்து குருடர்கள் போன்று இருக்கின்றனர். எனவே அவர்கள் பிறப்பு இறப்பு என்னும் சக்கரத்தில் இருந்து தப்பிக்க முடியாது. புத்தர் ஒன்றுமே செய்யாமல் இருக்கின்ற ஒருவர். ஏனெனில் அவர் தனது சொந்த பங்குக்கு எதையும் செய்வதில்லை, அவர் சோம்பேறியாக இருப்பதால் எதையும் செய்யாமல் இருக்கவில்லை, அவர் ஒன்றுமே செய்யாமல் இருக்கின்ற மனிதர். ஏனெனில் அவர் எதையும் புறத்தூண்டுல்கள் இன்றி எதையும் தானாகச் செய்கின்றவர். அவர் பதில் செயல் ஆற்றவேண்டிய தேவை எழுந்தால்; அந்த சூழ்நிலையின்போது அவர் தனது பேருணர்விற்கு காத்துக் கொண்டு இருக்கிறார், எந்த முயற்சியும் இல்லாமல் அவரது சுய இயல்பு பதில் செயல் புரிவதற்கு காத்துக் கொண்டு இருக்கிறார். அவர் முயற்சியின்றி முயற்சிக்கின்ற, செய்யாமல் செய்கின்ற ஒரு மனிதர். அவர் இந்த இயற்கையை அவர் மூலமாக செயல்புரிவதற்கு வெறுமனே அனுமதித்து விட்டவர்.

அவர் அங்கு இல்லை.

அவர் வெறுமனே ஒரு வெற்று மூங்கில்

ஒரு பாடகர் அவரிலிருந்து ஒரு புல்லாங்குழலை உருவாக்கி பாடல்களைப் பாடலாம். அந்தப் பாடலுக்கு எந்த இடையூறும் செய்யாமல் இருப்பது மட்டுமே அந்த புல்லாங்குழலின் வேலை. ஒரு புத்தர் என்பவர் வெறுமனே ஒரு வெற்று மூங்கில்

போன்றவர். பாடல் என்பது இந்த பிரபஞ்சத்திலிருந்து தான் வருகிறது. புத்தர் ஒன்றுமே செய்யாமல் இருக்கின்ற ஒருவர். அவர் புகழ் மற்றும் அதிர்ஷ்டத்தை தேடி அதன் பின்னால் ஓடமாட்டார். இறுதியில் இப்படிப்பட்ட விஷயங்களால் என்ன நன்மை உள்ளது?

அவை யாவும் வெறுமனே உங்களது வாழ்க்கையை அழித்து விடுகின்றன. உங்களை நீங்களே அறிந்து கொள்வதற் கான எல்லா சந்தர்ப்பங்களையும் அவை அழித்து விடுகின்றன. அவை உங்களது வாழ்க்கையை மிகப்பெரிய வரப்பிரசாத மாகவும், மிகப்பெரிய பேரின்ப நிலையாகவும் ஆக்கக்கூடிய சந்தர்ப் பங்களை அழித்து விடுகின்றன.

போதிதருமரின் இந்த எளிய சூத்திரங்கள், இந்த இயற்கை உங்களுக்கு கொடுப்பதற்கு தயாராக வைத்துக் கொண்டிருந்த மாபெரும் பரவச நிலையை கொண்டு வரும். நீங்கள் தான் வெறுமனே தயாராக இல்லை.

எனவே உங்களது பரம்பரை செல்வத்தில் உரிமை கோர தயாராகுங்கள்.

○

சாக்கிய முனிவரின், மிகப்பெரிய பத்து சீடர்களில், கற்றுக் கொள்வதில் ஆனந்தா மிக முக்கியமானவராக இருந்தார். ஆனால் அவர் புத்தரை அறிந்திருக்கவில்லை. அவர் செய்தது எல்லாம் படிப்பது மற்றும் மனப்பாடம் பண்ணுவது ஆகியவை தான். அர்கதாக்கள் புத்தரை அறிந்ததில்லை. அவர்களுக்கு தெரிந்தது எல்லாம தன்னை உணர்வதற்கான அநேக பயிற்சிகள் மட்டுமே ஆகும். (எனவே அவர்கள் காரண காரியம் என்னும் பொறிக்குள் சிக்கிக் கொண்டார்கள்) சாகும் இயல்புடையவரின் கர்மங்கள் இப்படித்தான் உள்ளன. அவர்கள் பிறப்பு மற்றும் இறப்பில் இருந்து தப்பிக்க முடியாது. எதைச் செய்ய வேண்டுமோ, அதற்கு எதிரானதை செய்கின்றபடியால், இப்படிப் பட்ட மக்கள் புத்தருக்கு தெய்வநிந்தனை செய்துவிடுகிறார்கள். அவர்களைக் கொன்று போடுவது தவறானதாகாது. ''இச்சாந்திகர்கள் நம்புகின்ற திறன் இல்லாதவர்களாக இருப்பதால் அவர்களை கொன்று போடுதல் குற்றமற்றதாக இருக்கும். ஆனால் நம்புகின்ற மக்கள் புத்தத்தன்மை என்னும் நிலையை அடைகின்றனர்'' என்று சூத்திரங்கள் கூறுகின்றன. தங்களின் மனம் தான் புத்தர் என்பதைக் கண்டு கொள்கின்ற மக்கள் தங்களின் தலையை மொட்டை அடிக்கவேண்டிய அவசியம் கிடையாது. சாதாரண மனிதரும் கூட புத்தர்கள் தான். தங்களது இயல்பை அவர்கள் கண்டு கொள்ளாதவரையில் தங்களது தலையை மொட்டை அடித்துக்கொள்கின்ற மக்கள் வெறுமனே மத வெறியர்களாக இருக்கின்றனர்.

ஆனால் சாதாரண மக்கள் திருமணம் செய்து கொண்டதால் பாலியல் உறவை விட்டுவிடுவதில்லை. அவர்கள் எப்படி

புத்தர்களாக ஆகமுடியும்? உங்களது இயல்பைக் கண்டு கொள்வது பற்றி மட்டுமே நான் பேசுகிறேன். நான் காமத்தைப் பற்றி பேசவில்லை. ஏனெனில் நீங்கள் உங்களது இயல்பைப் பார்ப்பதில்லை. நீங்கள் உங்களது இயல்பைக் கண்டு கொண்டால் காமம் என்பது அடிப்படையில் முக்கியமற்றது. அதில் நீங்கள் அடைகின்ற மகிழ்ச்சியோடு அது முடிந்து போகிறது. அப்படியே சில பழக்கங்கள் மிஞ்சி இருந்தாலும் கூட, அவை உங்களுக்கு தீங்கு செய்ய முடியாது. ஏனெனில் உங்களது இயல்பானது முக்கியமாக தூய்மையானதாக இருக்கிறது. பஞ்ச பூதங்களால் ஒருங்கிணைக்கப்பட்ட உடலில் வாழ்ந்தாலும் கூட, உங்களது இயல்பு அடிப்படையில் தூய்மையாக உள்ளது. அதை மாசுபடுத்த முடியாது. எதையும் பற்றிக்கொண்டு அதில் இருப்பதை விட்டுவிட்டால் மேலும் விஷயங்களை அவற்றின் போக்கில் விட்டுவிட்டால் நீங்கள் பிறப்பு மற்றும் இறப்பிலும் கூட சுதந்திரமானவராக இருப்பீர்கள். நீங்கள் எல்லாவற்றையும் உருமாற்றம் செய்து விடுவீர்கள். தடுக்கமுடியாத ஆன்மிக சக்திகளை நீங்கள் பெற்றுவிடுவீர்கள். மேலும் நீங்கள் எங்கு இருக்கிறீர்களோ அங்கேயே அமைதியாக இருப்பீர்கள். இதை நீங்கள் சந்தேகித்தால், எதன்மூலமும் நீங்கள் ஒரு போதும் எதையும் பார்க்க மாட்டீர்கள். நீங்கள் ஒன்றுமே செய்யாமல் இருப்பது சிறந்தது. நீங்கள் எதையாவது செய்தால் பிறப்பு இறப்பு என்னும் சுழற்சியை தவிர்க்க முடியாது. ஆனால் நீங்கள் புலால் விற்கின்ற வேலையைச் செய்தாலும் கூட, நீங்கள் உங்களது இயல்பைக் கண்டு கொள்ளும்போது நீங்கள் ஒரு புத்தராக இருக்கிறீர்கள்.

ஆனால் விலங்குகளை வெட்டுவதன்மூலம் புலால் விற்பவர்கள் கர்மத்தை உருவாக்குகின்றனர். அவர்கள் எப்படி புத்தர்களாக இருக்கமுடியும்?

உங்களது இயல்பை கண்டு கொள்வது பற்றி மட்டுமே நான் பேசுகிறேன். கர்மத்தை உருவாக்குவதைப் பற்றி நான் பேச வில்லை. நாம் என்ன செய்கிறோம் என்கிற கவனம் இல்லா விட்டால் நமது செயல்கள் நம்மீது பிடிப்போடு இருப்பதில்லை. இந்தியாவில் இருபத்து ஏழு ஆண்மதக்குருக்களும் மனதின்

பதிவுகளை மட்டுமே மற்றவர்களிடம் ஒப்படைத்தார்கள். மேலும் நான் சீனா வந்துள்ளதன் ஒரே காரணம் மகாயானத்தின் போதனைகளை உடனடியாக ஒப்படைப்பதற்காகத்தான். இந்த மனமே புத்தர். கொள்கைகளையோ, பக்தியையோ அல்லது தவ பயிற்சிகளையோ பற்றி நான் பேசவில்லை.

மொழி மற்றும் நடத்தை, உணர்தல் மற்றும் ஏற்றுக்கொள்ளுதல் ஆகியவை எல்லாம் நகர்ந்து கொண்டிருக்கும் மனதின் செயல்கள். எல்லா நகர்வுகளும் மனதின் நகர்வுகள். ஆனால் மனமானது நகர்வதும் இல்லை அல்லது செயல்புரிவதும் இல்லை. ஏனெனில் அதன் செயல்களின் சாரம்சம் வெறுமை ஆகும். மேலும் வெறுமை என்பது முக்கியமாக அசைவற்றது.

எனவேதான் இந்த சூத்திரங்கள் அசையாமல் அசைதல், பயணிக்காமல் பயணித்தல், பார்க்காமல் பார்த்தல், சிரிக்காமல் சிரித்தல், கேட்காமல் கேட்டல், அறியாமல் அறிதல், சந்தோஷம் இல்லாமல் சந்தோஷமாக இருத்தல், நடக்காமல் நடத்தல், நிற்காமல் நிற்றல், ஆகியவற்றை நமக்கு கூறுகின்றன. மேலும் ''மொழிகளைக் கடந்து அதற்கு அப்பால் செல்லுங்கள், எண்ணங்களைக் கடந்து அதற்கு அப்பால் செல்லுங்கள,;'' என்று இந்த சூத்திரங்கள் கூறுகின்றன. என்னால் போய்விடமுடியும். ஆனால் இந்த சுருக்கமான பிரசங்கம் அதைச் செய்ய வேண்டும்.

இந்த சூத்திரங்களில் போதிதருமரின் போதனைகள், உண்மையைத் தேடி புனிதப்பயணம் செய்பவர்களுக்கு மாபெரும் முக்கியத்துவத்தையும், ஆழ்ந்த ஆர்வத்தையும் கொடுக்கக் கூடியவை. ஆனால் இதில் சில பொய்யான வாக்குமூலங்கள் உள்ளன. ஆனால் ஒருவேளை முதல்முறையாக இந்த வாக்குமூலங்கள் சீடர்களின் தவறான புரிதலினால் அல்லாமல், இந்த தவறான வாக்குமூலங்களை போதிதருமரே சொல்லியிருக்க வேண்டும். எனவே இந்த சூத்திரங்களுக்குள் செல்வதற்கு முன்பு சில விஷயங்களை நான் தெளிவுபடுத்த விரும்புகிறேன்.

முதலாவதாக, கௌதமபுத்தரின் போதனைகள் இரண்டு வகையான ஆன்மிகத்தை தேடுபவர்களை உருவாக்கிவிட்டது.

ஒன்று அர்கதா என்றும் அடுத்தது போதிசத்துவர் என்றும் அழைக்கப்படுகிறது.

அர்கதா என்பவர் மெய்ஞ்ஞானம் அடைவதற்கான எல்லா முயற்சிகளையும் செய்பவர். ஆனால் அவர் மெய்ஞ்ஞானம் அடைந்து விட்டபிறகு, இன்னமும் இருட்டில் துழாவிக் கொண்டிருப்பவர்களை அவர் முற்றிலும் மறந்துவிடுபவர். அவருக்கு மற்றவர்களைப் பற்றி கவலை கிடையாது, அவரைப் பொறுத்தமட்டில் தான் மெய்ஞ்ஞானம் அடைந்தால் போதும் என்பதுதான். உண்மையில் அர்கதர்களைப் பொறுத்தமட்டில் கருணை என்கிற மிகப்பெரிய விஷயமும் கூட மீண்டும் ஒரு வகையான பற்றுதல் தான் என்பதைத் தவிர வேறு ஒன்றும் கிடையாது என்பதாகும். மேலும் இதில் நாம் புரிந்து கொள்ள வேண்டிய சில சிறப்புகள் இருக்கின்றன.

கருணை என்பதும் கூட ஒரு உறவுதான்; அது எவ்வளவு தான் அழகானதாகவும், மிகப்பெரியதாகவும் இருந்தாலும் கூட அதுவும் கூட மற்றவர்களைப் பற்றி கவலைப்படுவதாகும். அதுவும்கூட ஒரு ஆசைதான். அது நல்ல ஆசை என்பதால் அது எந்த வேறுபாட்டையும் உண்டாக்கிவிடாது. அர்கதர்களைப் பொறுத்தமட்டில், அது நல்லதோ அல்லது கெட்டதோ, எதுவாக இருந்தாலும் ஆசை என்பது அடிமைத்தளைதான். சங்கிலிகள் தங்கத்திலோ அல்லது இரும்பிலோ செய்யப்பட்டு இருக்கலாம், ஆனால் அது ஒரு பொருட்டாகாது. சங்கிலிகள், சங்கிலிகள்தான். கருணை என்பது ஒரு தங்கச்சங்கிலி.

யாரும், யாருக்கும் உதவவே முடியாது என்பதை அர்கதாக்கள் வலியுறுத்துகின்றனர். மற்றவர்களுக்கு உதவ வேண்டும் என்கிற அந்த கருத்தே தவறான அஸ்திவாரத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளது. நீங்கள் உங்களுக்கு மட்டுமே உதவ முடியும். சாதாரண மனதிற்கு அர்கதா ஒரு சுயநலம் மிக்கவர் என்பது போன்று தெரியலாம். ஆனால் எந்த ஒரு தப்பெண்ணங்களும் இல்லாமல் உற்று நோக்கினால் ஒருவேளை அவரும்கூட இந்த உலகிற்கு முக்கியமான ஏதோ ஒரு விஷயத்தை அறிவிக்கிறார் என்பதாகும். மற்றவர்களுக்கு

உதவுவதும்கூட, அவரது வாழ்க்கையும், அவரது வாழ்க்கை முறையில், அவரது விதியில், அவரது எதிர்காலத்தில் நீங்கள் குறுக்கிடுவதாகும். அதனால் தான் அர்கதாக்கள் எந்தவிதமான கருணையையும் அவர்கள் நம்புவதில்லை. அவர்களுக்கு கருணை என்பதும்கூட பற்றுதல் என்னும் உலகோடு உங்களைக் கட்டிப் போடுகின்ற ஒரு அழகான ஆசை என்பதாகிறது. அது ஆசையின் மறுபெயர். அழகானது, ஆனாலும் கூட ஆசைப்படுகின்ற ஒரு மனதின் பெயர்.

யாரோ ஒருவர் மெய்ஞ்ஞானம் அடைவதில் நீங்கள் ஏன் ஆர்வத்துடன் இருக்கிறீர்கள் அது உங்களது வேலை அல்ல. தான், தானாகவே இருப்பதற்கு ஒவ்வொருவருக்கும் முழு சுதந்திரம் உள்ளது. அர்கதர் தனிமனிதத்தன்மை மற்றும் அதன் முழு சுதந்திரத்தையும் வலியுறுத்துகிறார் நன்மைக்காகவும் கூட யாரும், யாருடைய வாழ்க்கையிலும் குறுக்கிடுவதற்கு அனுமதிக்க முடியாது

எனவேதான், மெய்ஞ்ஞானம் பெற்ற அந்த நொடிப் பொழுதிலேயே அர்கதா சீடர்களை ஏற்றுக் கொள்வதில்லை, அவர் போதனைகள் செய்வதில்லை, எந்த விதத்திலும் அவர் ஒருபோதும் உதவுவதில்லை. அவர் வெறுமனே தனது பரவசநிலையில் வாழ்கிறார். ஆனால் யாராவது தனது சொந்த முயற்சியில் அவரது கிணற்றில் இருந்து தண்ணீர் எடுத்து குடிக்க முடிந்தால் அவரை அர்கதா தடுக்கமாட்டார்; ஆனால் அவர் உங்களுக்கு அழைப்பு அனுப்பமாட்டார் நீங்களாகவே உங்களது சொந்த எண்ணத்தில் அவரிடம் வந்து அவருக்கு அருகில் அமர்ந்து அவரது பிரசன்னத்தைப் பருகினால், அவரது பாதையில் நடந்தால், அது உங்களது வேலை. நீங்கள் வழிதவறிச் சென்றாலும், அவர் உங்களை நிறுத்தமாட்டார்

தர்க்கவாதத்தின் ஒரு எல்லைக்கு சென்று பார்த்தால், ஒரு குறிப்பிட்ட விதத்தில், இது தனிமனித சுதந்திரத்திற்கு கொடுக்கப் படுகின்ற மிகப்பெரிய மரியாதை ஆகும். நீங்கள் ஆழ்ந்த இருளில் விழுந்தாலும்கூட அர்கதா அமைதியாக காத்திருப்பார். அவரது இருப்புநிலை உங்களுக்கு உதவமுடியும் என்றால், அது

சரியானதாகும், ஆனால் உங்களுக்கு உதவுவதற்கு, உங்களுக்கு ஒரு கை கொடுப்பதற்கு, உங்களைக் குழிக்குள் இருந்து மேலே இழுப்பதற்கு அவர் தனது கைகளை ஒருபோதும் நகர்த்தமாட்டார். ஒரு குழிக்குள் விழுவதற்கு உங்களுக்கு முழுமையாக சுதந்திரம் உள்ளது. மேலும் உங்களால் ஒரு குழிக்குள் விழமுடியும் என்கிறபோது, நீங்கள் அதிலிருந்து வெளியே வருவதற்கான திறனையும் நீங்கள் பெற்றிருக்கிறீர்கள். அர்கதாக்கள் தத்துவத் திற்கு, கருணை என்னும் கருத்தானது அந்நியமானது.

ஒரு சிலர் அர்கதாக்களாக ஆவார்கள் என்று கௌதமபுத்தர் ஒத்துக்கொள்கிறார். மேலும் அவர்களின் வழியானது ''ஹீனயானம்'' என்று அழைக்கப்படுகிறது. அதற்கு ''ஒரு சிறிய வாகனம்,'' ஒரே ஒரு மனிதர் மட்டுமே அடுத்த கரைக்கு செல்லக்கூடிய ஒரு சிறிய படகு என்று அர்த்தம். அவர் ஒரு பெரிய கப்பலை உருவாக்கி நோவாவின் படகு போன்று ஒரு கூட்டத்தைச் சேர்த்து கொண்டு அடுத்த கரைக்கு அழைத்துக் செல்ல வேண்டும் என்று அவர் அக்கறை கொள்ள மாட்டார். அவர் வெறுமனே தான் மட்டுமே தனது சிறிய படகில் செல்கிறவர். அதில் இருவர்கூட இருக்கமுடியாது. அவர், இந்த உலகில் தனியாகவே பிறந்து, இந்த உலகில் பல லட்சம் தடவைகள் தனியாகவே வாழ்;ந்து, இறந்தவர், அவர் மட்டுமே தனியாகவே பிரபஞ்சத்தின் மூலத்தை நோக்கி போகிறவர்.

அர்கதாக்களின் இந்த வழியை புத்தர் மரியாதையுடன் ஏற்றுக் கொள்கிறார். ஆனால், அளவுகடந்த கருணை உள்ள மக்கள், மெய்ஞ்ஞானிகள் ஆகிவிடும்போது அவர்களின் முதல் விருப்ப மானது தங்களின் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்வதாகவும், தங்களின் உண்மையைப் பகிர்ந்து கொள்வதாகவும் தான் இருக்கும் என்பதையும் கூட புத்தர் அறிவார். கருணைதான் அவர்களின் வழி. அவர்களும்கூட மிகவும் ஆழ்ந்த உண்மைகளை வைத்திருக்கின்றனர்.

புத்தரிடம் விரிவான, பரந்த உணர்வு இருந்தால் அவர் இருவரையும் ஏற்றுக் கொண்டார். சிலரின் இயல்பு அர்கதாக் களாக இருப்பதாக இருக்கும், மேலும் வேறு சிலரின் இயல்

பானது போதித்தவர்களாக இருப்பதாக இருக்கும் என்பதை புத்தர் ஏற்றுக் கொண்டார்)

இதுதான் கௌதமபுத்தரின் நிலைப்பாடு, மேலும் விஷயம் இப்படிப்பட்டது எனும்போது அது குறித்து எதுவும் செய்ய முடியாது. ஒரு அர்கதா, அர்கதாவாகவே இருப்பார். மேலும் ஒரு போதிசத்வர், போதிசத்வராகவே இருப்பார். அவர்களின் இயல்புகள் இறுதியில் ஒரே குறிக்கோளைச் சென்றடைந்தாலும் கூட, வெவ்வேறு ஊழ்களைக் கொண்டிருக்கும். ஆனால் குறிக்கோளை அடைந்தவுடன் இந்தவழிகள் இல்லாமல் போய்விடும்.

இந்த அர்கதாக்கள், இந்தக் கரையில் ஒரு சிறு நொடிப் பொழுதும் கூட தங்கமாட்டார்கள். அவர்கள் சம்சார சக்கரத்தில் நீண்டகாலம் போதுமான அளவு சுழன்று, பல லட்சம் தடவைகள் பிறப்பு மற்றும் இறப்பில் நகர்ந்து, களைப்புடன் இருப்பார்கள். ஏற்கனவே அவர்கள் அதிகப்படியாக கஷ்டப்பட்டிருப்பார்கள். அவர்களுக்கு சலிப்பு ஏற்பட்டுவிடுவதால் இந்தக்கரையுடன் ஒரு நொடிப்பொழுதுகூட தங்கி இருப்பதற்கு விரும்பமாட்டார்கள். அவர்களின் படகு வந்துவிட்டதால், உடனடியாக அவர்கள் அடுத்த கரை நோக்கி நகர்ந்து செல்ல ஆரம்பித்து விடுவார்கள், இது தான் அவர்களின் அடிப்படை இயல்பு.

மேலும் படகுக்காரரிடம், ''கொஞ்சம் காத்திரு, அவசரப்பட வேண்டாம். இந்தக் கரையோடு நான் அதிக பற்றுதலோடு இருந்து விட்டேன். துன்பத்தில், கவலையில், வேதனையில் இருந்து விட்டேன். இப்போது அவை எல்லாம் மறைந்துவிட்டது. நான் முழுமையான பரவசம், அமைதி மற்றும் சாந்தியுடன் இருக் கிறேன். மேலும் அடுத்த கரையில் இதைவிட அதிகமானதாக எதுவும் இருப்பதை நான் காணவில்லை. எனவே என்னால் சமாளிக்க முடிந்தவரையில், மக்களுக்கு உதவுவதற்கு நான் இங்கு இருப்பேன்'' என்று கூறுகின்ற போதி சத்துவர்களும் இருக் கின்றனர்.

இப்படி, முரண்பாடுகளுக்கு இடையில் கூட உண்மையைக் காணக்கூடிய மக்களில், கௌதமபுத்தரும் ஒருவராக நிச்சயம்

இருக்கிறார். யாரையும் உயர்ந்தவர் அல்லது தாழ்ந்தவர் என்ற உணர்வை உண்டாக்காமல் அவர் இருவரையும் ஏற்றுக் கொள்கிறார். அர்கதாக்களுக்கு எதிரான தங்களது பாதையை போதிசத்வர்கள் மஹாயனம் என்று அழைக்கின்றனர். அதற்கு "மிகப்பெரிய வாகனம்," மிகப்பெரிய கப்பல் என்று அர்த்தம். அடுத்தவர்களுடையது வெறும் ஒரு சிறிய படகு. அப்பாவிகள், அவர்கள் வெறுமனே தனியாகச் செல்கின்றனர். மேலும் கௌதமபுத்தருக்கு பின்னர் இந்த இரண்டு வெவ்வேறு அணுகுமுறைகளுக்கும் இடையில் இருபத்தைந்து நூற்றாண்டு களாக இடைவிடாது சச்சரவு இருந்து வருகிறது.

போதிதருமர், போதிசத்வர்களைச் சார்ந்தவர். ஆகையினால் அவர் அர்கதாக்களுக்கு எதிராக உண்மையற்ற அநேக வாக்குமூலங்களை கொடுத்துக் கொண்டு இருக்கிறார்.

நான் அர்கதாக்களையோ அல்லது போதிசத்வர்களையோ சார்ந்தவன் அல்லன். கௌதமபுத்தரின் பாதையைக் கூட சார்ந்தவன் அல்லன். எனது சொந்த பார்வையை, எனது சொந்த உணர்தலை நான் பெற்றிருக்கிறேன். எனவே போதிதருமர் கூறுகின்ற எல்லா குறிப்புகளையும் ஒத்துக்கொள்ள வேண்டிய அவசியம் எனக்கு கிடையாது. அதிலும் குறிப்பாக இந்தக் குறிப்பின் மீது எனக்கு ஒப்புதல் கிடையாது; கௌதமபுத்தரும் கூட போதிதருமருடன் ஒத்துப்போகமாட்டார். போதிதருமர் ஒரு குறிப்பிட்ட பிரிவினைப் பின்பற்றுகிறார்.

இரண்டாவதாக, போதிதருமர் மிகவும் மூர்க்கத்தனமான, மிகவும் அச்சத்தை தருகின்ற மனிதர். நீங்கள் அவரது படத்தைப் பார்த்தாலே தெரியும். உங்களது குழந்தைகளைப் பயமுறுத்து வதற்கு நீங்கள் அந்த படத்தை பயன்படுத்தலாம். ஆனால் அது அவரது உண்மையான படம் அல்ல; அவர் ஒரு இளவரசராக இருந்தார். சுகவர்மன் என்கிற தென்னிந்திய அரசரின் மகனாக இருந்தார். அது பல்லவர்களின் மாபெரும் சாம்ராஜ்யம். அவர் கண்டிப்பாக ஒரு அழகான மனிதராக இருந்திருக்க வேண்டும். ஆனால் அந்த படங்கள் அவரது உண்மையான புகைப்படங்கள் அல்ல. அவை அவரது வினோதமான பண்பை, அவரது மூர்க்கத்தனத்தை குறிக்கின்றன.

எனவே, நீங்கள் ஒத்துக் கொள்ள வேண்டிய அவசிய மில்லாத சில விஷயங்களை அவரால் சொல்ல முடியும். ஒரு குறிப்பிட்ட, சட்டத்தை, ஒரு குறிப்பிட்ட கொள்கையான மஹாயானத்தை அவர் சார்ந்தவர் என்பதால் எங்கு அவர் தவறான விஷயங்களைச் சொல்கிறார் என்பதை நான் தெளிவுபடுத்துகிறேன். கௌதமபுத்தர் கொண்டிருந்ததைப் போலயே, நானும் அர்கதாக்கள் மற்றும் போதிசத்வர்கள் ஆகிய இருவரிடமும் நான் அளவுகடந்த மரியாதை வைத்திருக்கிறேன்.

*சாக்கியமுனியின் மிகப்பெரிய பத்து சீடர்களில்...* சாக்கிய முனி என்பது கௌதமபுத்தரின் பெயர்களில் ஒன்றாகும். ஏனெனில் அவர் சாக்கியர்களின் குலத்தை சார்ந்தவர். அவரது சாம்ராஜ்யம் சாக்கிய குலத்தினருக்கு சொந்தமான பழம்பெரும் சாம்ராஜ்ஜியம் ஆகும். அது போர் வீரர்களின் இனம். நேபாளத்திற்கும் இந்தியாவிற்கும் உள்ள எல்லைப்பகுதியில் அவர்கள் வசித்தனர். இந்த சாக்கிய குலத்தினால் அவர் சாக்கிய முனி என்று அழைக்கப்பட்டார். முனி என்றால் இறுதியான அமைதி நிலையை அடைந்துவிட்ட ஒருவர் என்று அர்த்தம் சாக்கியமுனியின் மிகப்பெரிய பத்து சீடர்களில், கற்றுக் கொள்வதில் ஆனந்தா மிக முக்கியமானவராக இருந்தார்.

இப்போது இந்த ஆனந்தா ஒரு சிறந்த எடுத்துக்காட்டு, எனவே அவரைப்பற்றி சில விஷயங்கள் புரிந்து கொள்ளப்பட வேண்டும். ஆனந்தா, கௌதமபுத்தருக்கு ஒன்றுவிட்ட சகோதரர் மேலும் புத்தரைவிடவும் அவர் சில வருடங்கள் மூத்தவர். கீழைநாட்டு கலாசாரத்தில் மூத்த சகோதரர் என்பவர், அவர் மூத்த ஒன்றுவிட்ட சகோதரராக இருந்தாலும் கூட அவர் ஒரு தந்தை போன்றவர்.

ஆனந்தா, கௌதமபுத்தரிடம் ஒரு சீடராக தீட்சை பெறுவதற்கு வந்தபோது அவர் ''இங்கே பார் சித்தார்த்தா'' என்றார். சித்தார்த்தா என்பது கௌதமபுத்தருக்கு அவரது பெற்றோர்கள் வைத்த பெயர். ஆனந்தா அவரை கௌதமபுத்தர் என்று கூறவில்லை அவர், ''இங்கே பார் சித்தார்த்தா, ஆன்மிக பாதையில் செல்வதற்கு உன்னிடம் சந்நியாச தீட்சை

வாங்கப்போகிறேன். நான் உன்னிடம் தீட்சை பெற்றுவிட்டால் அதன்பின்னர் நான் உனக்கு மூத்த சகோதரனாக இருக்க முடியாது. நான் உனது சீடன் ஆகிவிட்டால் நீ எனக்கு கட்டளை இடுகின்ற நிலையில் இருப்பாய். மேலும் அதற்கு நான் கீழ்ப்படிந்தாக வேண்டும். ஆனால் இப்போது உனக்கு நான் கட்டளை இடுகின்ற நிலையில் இருக்கிறேன். எனவே நீ இப்போது எனக்கு கீழ்ப்படிந்தாக வேண்டும். இந்த சூழ்நிலை மாறுவதற்கு முன்பு நீ நினைவில் வைத்துக் கொள்ள வேண்டிய சில நிபந்தனைகளை நான் கூறவிரும்புகிறேன்,'' என்று கூறினார்.

''அந்த நிபந்தனைகள் என்ன?'' என்று கௌதமபுத்தர் கேட்டார்.

அதற்கு ஆனந்தா, ''அவை பெரிய விஷயங்கள் அல்ல, ஆனால் எனக்கு அவை மிகுந்த அர்த்தமுள்ளவை. முதலாவது, இப்போது நான் உனது மூத்த சகோதரனாக இருப்பதைப் போலவே, நான் உனது சீடராக ஆன பின்பும் உன்னை விட்டு விலகிச் சென்று மக்களிடம் போதனைகளைப் பரப்புவதற்கு போகும்படி கூறமாட்டேன் என்று வாக்குறுதி கொடுக்க வேண்டும். நான் உனது வாழ்நாள் முழுவதும் இரவும் பகலும் உன்னுடனேயே இருக்கப்போகிறேன். உனது உடல், உனது ஆரோக்கியம், உனது சௌகரியங்கள் ஆகியவற்றை நான் கவனித்துக் கொள்ளப் போகிறேன். நீ என்னைத் தடுக்க கூடாது. எனவே நான் உன்னிடம் எதையும் சொல்லமுடியாத நிலைக்கு நான் போவதற்கு முன்பு, இப்போது நீ எனக்கு இந்த வாக்குறுதியைக் கொடுக்க வேண்டும்.

உடனே புத்தர், ''வாக்குறுதி அளிக்கிறேன்'' என்றார் ஏனெனில் கீழைநாடுகளில் ஒரு இளைய சகோதரனுக்கு வேறு வழி இல்லை. மூத்தவர்கள் கூறுவதை நீங்கள் மரியாதையுடன் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

அடுத்தபடியாக ஆனந்தா புத்தரிடம், ''இரண்டாவது நிபந்தனை என்னவென்றால், நான் என்ன கேள்வி வேண்டு மானாலும் கேட்பேன், சம்பந்தம் உள்ளது, சம்பந்தம் இல்லாதது அர்த்தமுள்ளது. அர்த்தமற்றது, எது வேண்டுமாலும் கேட்பேன்.

அப்போது நீ ''கொஞ்சம் பொறு, என்றாவது ஒருநாள் நீ புரிந்து கொள்வாய்,'' என்று கூறக்கூடாது. நீ எனக்கு உடனடியாக பதில் சொல்ல வேண்டும்; நீ ஒத்திப் போடுவதற்கு முயற்சி செய்யக் கூடாது. நாளைக்கு நாம் பார்த்துக் கொள்ளலாம் என்று நீ சாக்கு போக்கு கூறக்கூடாது. நான் கேள்வி கேட்கும் போதெல்லாம் உடனடியாக நீ எனக்கு பதில் கொடுக்க வேண்டும்,'' என்று கூறினார்.

உடனே புத்தர், ''நிபந்தனை ஏற்றுக் கொள்ளப்பட்டது'' என்றார்.

அதன்பிறகு ஆனந்தா கௌதமபுத்தரிடம், ''மூன்றாவதாக, உன்னைச் சந்திப்பதற்கு யாரையாவது நான் அழைத்துவந்தால், நடுஇரவில் நீ தூங்கிக் கொண்டிருக்கும் போதும் கூட நீ முடியாது என்று சொல்லக்கூடாது. அந்த மனிதர் யாராக இருந்தாலும் நீ அவரை சந்தித்தாக வேண்டும்,'' என்றார். கௌதமபுத்தர் சிரித்துக் கொண்டே, ''அப்படியே நடக்கும்,'' என்றார். ஆனால் ஆனந்தா புத்தரிடம், ''நீ ஏன் சிரிக்கிறாய்?'' என்று கேட்டார்.

உடனே கௌதமபுத்தர், ஆனந்தாவிடம், ''இது நிபந்தனை களில் ஒரு பகுதி அல்ல. இப்போது நீ தீட்சை பெற்றுக்கொள் அதன்பிறகு நான் ஏன் சிரித்தேன் என்கிற கேள்வியைக் கேள். நீ எப்போதெல்லாம் கேள்வி கேட்கிறாயோ அப்போது நான் பதில் கூறுவேன். ஆனால் மூன்று நிபந்தனைகள் முடிந்துவிட்டன.

ஆனந்தா கௌதமபுத்தரின் சீடராகி இரவிலும் பகலிலும் இடைவிடாது நாற்பத்து இரண்டு ஆண்டுகள் அவருடன் வாழ்ந்தார். வசந்தங்கள் வந்து போனது, பருவகாலங்கள் மாறின; அவர் கௌதமபுத்தருக்கு நிழல் போல் இருந்தார்.

ஆனால் ஆனந்தாவிற்கு பிறகு அநேகம் பேர் சீடர்களாக வந்து மெய்ஞ்ஞானம் அடைந்தனர். ஆனந்தா மட்டும் மெய்ஞ்ஞானம் அடையாமல் இருந்தார். இருபது ஆண்டுகளுக்கு பின்னர் அவர் கௌதமபுத்தரிடம், ''என்ன நடக்கிறது? எனக்கு பின்னர் வந்த மக்கள் மெய்ஞ்ஞானம் பெற்றுவிட்டனர். ஆனால் நான் உங்களுக்கு மிகவும் நெருக்கமாக இருந்தேன். நீங்கள்

பேசுவதை என்னை விடவும் அதிகமாக கேட்டவர்கள் யாரும் கிடையாது, நான் உன்னிடம் இருக்கின்ற நெருக்கம் யாருக்கும் கிடையாது, நான் ஏன் மெய்ஞ்ஞானம் அடையாமல் இருக்கிறேன்?'' என்று கேட்டார்.

அப்போது கௌதமபுத்தர் அவரிடம், ''நான் ஏன் சிரித்தேன் என்று இப்போது உன்னால் புரிந்து கொள்ளமுடியும். உனக்கு நினைவிருக்கிறதா? தீட்சை பெறுவதற்கு முன்பு, இருபது ஆண்டுகளுக்கு முன்பு, நீ மூன்று நிபந்தனைகளை என்னிடம் கேட்டபோது நான் சிரித்தேன். இதுதான் அதற்கு காரணம். ஏனெனில் நீ, மெய்ஞ்ஞானம் அடைவதற்கு உனது நிபந்தனைகள் தடையாக இருந்துவிடும். எனது மூத்த சகோதரன் என்பதை உன்னால் மறக்கமுடியாது. நீ எனது சீடனாக ஆகிவிட்டாலும் கூட, அடி ஆழத்தில் நீ எனது மூத்த சகோதரன் என்பதை நீ அறிவாய். அது உனது கண்களுக்குத் தெரியாத அகங்காரம். வேறு யாரை விடவும் நீ என்னுடன் அதிகநேரம் இருந்தாலும்கூட, மற்றவர்களை விடவும் நீ நான் போவதை நீ அதிகம் கேட்டிருந்தாலும் கூட உனக்கு மெய்ஞ்ஞானம் கிடைக்கவில்லை. நீ அதிக அறிவுமிக்கவனாக ஆகிவிட்டாய், அதிகம் கற்றுவிட்டாய், நான் கொடுத்த ஒவ்வொரு பிரசங்கத்தையும் நீ மனப்பாடம் செய்துவிட்டாய். உன்னிடம் அளவிடமுடியாத நினைவாற்றல் உள்ளது. ஆனால் உனது சொந்த அனுபவம் என்று எதையும் பெறவில்லை. நான் இந்த இருபது வருடங்களில் கூறியவை அனைத்தையும் உன்னால் இயந்திர கதியில் திருப்பிச் சொல்ல முடியும். ஆனால், நீ எனது மூத்த சகோதரன். மேலும் உனக்கு மூன்று நிபந்தனைகள் போன்ற தனிச்சிறப்பு மரியாதை ஆகிய கண்களுக்கு புலப்படாத ஆணவம் ஒரு தடையாக வேலை செய்துவிட்டது, நான் மரணம் அடையும் வரை நீ மெய்ஞ்ஞானம் அடையமாட்டாய்,'' என்று கூறினார்.

மேலும் உண்மையில் அப்படித்தான் நடந்தது. கௌதமபுத்தர் அவருக்கு தீட்சை கொடுத்து நாற்பத்து இரண்டு ஆண்டுகளுக்கு பின்னர் கௌதமபுத்தர் இறந்தர். மேலும் பத்தாயிரம் சீடர்களுக்கு மத்தியில் புத்தர், ''இப்போது நான் உங்களிடம் போய்வருகிறேன் என்று கூற விரும்புகிறேன். எனது உடல் வயதானதாகவும்,

களைப்பும் நிறைந்ததாகவும் ஆகிவிட்டது, மேலும் நான் என்ன வெல்லாம் சொல்ல வேண்டும் என்று விரும்பினேனோ அதையெல்லாம் நான் சொல்லிவிட்டேன். இப்போது நான் இறுதியான ஓய்வுக்குள் போக விரும்புகிறேன்,'' என்று கூறியபோது அத்தனை சீடர்களிலும் ஆனந்தா மட்டுமே முதலில் கண்ணீர்விட்டு கதறினார்.

கௌதம புத்தருக்கு வலதுபக்கத்தில் ஆனந்தா அமர்ந்திருந் தார். கௌதம புத்தரை விட அவர் மூத்தவர் என்றாலும் கூட ஒரு சின்னக்குழந்தை போன்று அவர் கதறி அழுதார். அதைப் பார்த்த கௌதமபுத்தர் அவரிடம், ''ஆனந்தா, நீ ஏன் அழுது கண்ணீர் வடிக்கிறாய்? நான் அறியாமையில் சாகவில்லை. நான் முற்றிலும் மனநிறைவுடன், மெய்ஞ்ஞானம் அடைந்து இறக்கப்போகிறேன். அதுவும் சாதாரணமான மெய்ஞ்ஞானம் அல்ல. ஒருபோதும் இதற்கு மிஞ்சிய மெய்ஞ்ஞானம் இல்லாத அளவுக்கு உயரிய மெய்ஞ்ஞானம் அடைந்து விட்டேன். மேலும் அளவுகடந்த மனநிறைவுடன் நான் இறக்கப் போகிறேன். ஏனெனில் இதற்குமுன்பு ஒரே குருவிடம் இவ்வளவு அதிகம் சீடர்கள் மெய்ஞ்ஞானம் பெற்றதில்லை'' என்று கூறினார்.

உடனே ஆனந்தா புத்தரிடம், ''நான் உங்களுக்காக அழ வில்லை. நீங்கள் என்னைத் தவறாக புரிந்து கொண்டுவிட்டீர்கள். நான் என்னை நினைத்து அழுது கொண்டிருக்கிறேன். நாற்பத்து இரண்டு ஆண்டுகள், பொழுது விடிந்து பொழுது அடைந்தால் ஒரு நிழல் போல நான் உங்களை பின் தொடர்ந்து வந்தேன். ஆனால் எப்போதும் போல இப்போதும் நான் இன்னமும் பேருணர்வை இழந்தநிலையில் தான் இருக்கிறேன். நீங்கள் போய்விட்ட பிறகு எனக்கு என்ன நடக்கும்? நான் இன்னமும் மெய்ஞ்ஞானம் அடையவில்லை. மேலும் இனிவரும் காலங் களிலும் உங்களைப் போன்று உயர்நிலையில் உள்ள யாரையும் என்னால் பார்க்கமுடியும் என்று நான் நினைக்கவில்லை. மேலும் இதுபோன்று அந்நியோன்யமும், நெருக்கத்துடனும் இருக்கின்ற சந்தர்ப்பம் கிடைக்கும் என்று நான் நினைக்கவில்லை. விடியலே இல்லாத ஒரு இருளில் நீங்கள் என்னை விட்டுச் செல்வது போன்று தெரிகிறது,'' என்றார்.

கௌதமபுத்தர் மீண்டும் சிரித்தார், அப்போது தனது கண்களில் கண்ணீர் இருந்தாலும், ''நீங்கள் ஏன் சிரிக்கிறீர்கள்? நீங்கள் விநோதமான தருணங்களில் மட்டுமே சிரிப்பீர்கள்'' என்று கேட்காமல் இருக்க முடியவில்லை.

உடனே கௌதமபுத்தர் அவரிடம், ''இருபத்து நான்கு மணி நேரத்திற்குள் அதை நீ அறிந்து கொள்வாய், ஏனெனில் நான் இறந்துவிட்டால், இருபத்துநான்கு மணிநேரத்திற்குள் நீயும் மெய்ஞ்ஞானம் பெற்றுவிடுவாய். நான் இறந்துவிட்டால், நீ எனது மூத்த சகோதரனாக இருக்கமாட்டாய். நான் இறந்த உடன் உனது மெல்லிய அகங்காரமும் மறைந்துவிடும். நான் உயிரோடு இருக்கும்போது அதனால் மறைந்து போகமுடியாது.'' என்று கூறினார்.

மேலும் உண்மையிலும் அதைப்போன்றே நடந்தது. இருபத்து நான்கு மணி நேரத்திற்குள் ஆனந்தா மெய்ஞ்ஞானம் அடைந்து விட்டார். அவர் அந்த இடத்தைவிட்டு நகர்ந்து செல்ல வில்லை, அவர் சாப்பிடவோ, அல்லது எதையும் குடிக்கவோ, அல்லது தூங்குவதற்கோ போகவில்லை. அவர் தனது கண்களை மூடிக் கொண்டு, எந்த இடத்தில் கௌதமபுத்தர் இறுதி உறக்கத்திற்குள் நுழைந்தாரோ அந்த இரண்டு சால் மரங்களுக்கு அடியில் உட்கார்ந்து கொண்டு இருந்தார்.

ஆனந்தா அதே இடத்தில் கண்களை மூடிக்கொண்டு, தனது அகக்கண்கள் திறந்தால் மட்டுமே தனது கண்களைத் திறப்பேன் என்றும் முழு தீர்மானத்துடன் இருந்தார். அவர் மெய்ஞ்ஞானம் அடைந்தால் மட்டுமே தனது கண்களால் இந்த வெளி உலகைப் பார்ப்பேன் என்றும் தீர்மானத்துடன் இருந்தார். அப்படி நடக்கவில்லையெனில் அவர் தனக்குள்ளேயே இருந்து கொண்டிருக்க தீர்மானித்தார்.

முதலில் அவர் தனது சொந்த ஆன்ம இயல்பை பார்க்க விரும்பினார், அதன் பின்னர் மட்டுமே அந்த இடத்தில் இருந்து தனது கண்கள் அல்லது உடலை அசைப்பதாக உறுதிபூண்டார். அப்படி நடக்கவில்லை என்பதால் அங்கேயே அவர் உயிரை விடவும் தீர்மானித்தார். இப்படிப்பட்ட மன உறுதியுடனும்,

முழுமையான அர்ப்பணிப்புடனும் இருந்ததால், அவருக்கு விடியலே இல்லாமல் இருந்த இரவு முடிவுக்கு வந்தது. இருபத்து நான்கு மணி நேரத்திற்குள் விரைவாக முடிவுக்கு வந்தது. அவர் மெய்ஞ்ஞானம் அடைந்தார். ஆனால் அவர் ஒரு அர்கதராகத்தான் இருந்தார். ஒரு அர்கதாராக இருந்ததுதான் அவரது தனித்தன்மை.

போதிதருமர், இப்படி ஆனந்தாவை கண்டனம் செய்தது ஒரு விதத்தில் சரியானது, மறுவிதத்தில் தவறானது. எதையும் கற்றுக் கொளவதில் ஆனந்தா மிகவும் முக்கியமானவராக இருந்தார். ஆனால் அவர் புத்தரை அறிந்திருக்கவில்லை என்று போதிதருமர் கூறுகிறார். அது உண்மைதான். அவர் செய்தது எல்லாம் படிப்பது மற்றும் மனப்பாடம் செய்வது ஆகியவைதான். இதுவும் உண்மைதான். அர்கதர்கள் புத்தரை அறிந்ததில்லை. இது தவறானது. அர்கதர்கள் தாங்களே புத்தராக ஆகியவர்கள்; புத்தரை அவர்கள் அறிந்ததில்லை என்கிற கேள்விக்கே இடமில்லை. ஆம், ஒரு பண்டிதராக, மிகப்பெரிய கற்றறிந்தவராக, மெத்தப்படித்த ஒரு மனிதராக, அளவுகடந்த நினைவாற்றல் உள்ளவராக, மெய்ஞ் ஞானத்தின் இயல்பு என்ன என்பதை அவர் அறிந்திருக்கவில்லை. புத்தத்தன்மை என்பது என்ன என்று அவர் அறிந்திருக்கவில்லை. ஆனால் மெய்ஞ்ஞானம் அடைந்த அந்த நொடிப்பொழுதில், அதன்பிறகு அவர் ஒரு அர்கதா ஆகிவிட்டார்.

நீங்கள் மெய்ஞ்ஞானம் அடையும்போது மட்டுமே, உங்களது இயல்பு என்ன என்று நீங்கள் அறிந்து கொள்ளமுடியும். அப்போது உங்களுக்கு கருணை கொள்வதற்கான ஆசை உள்ளதா அல்லது கருணையோடு இல்லாமல் இருப்பதற்கான ஆசை உள்ளதா? நீங்கள் இந்தக் கரையைவிட்டு உடனடியாக செல்வதற்கு தயாராக இருக்கிறீர்களா அல்லது இன்னும் ஒருசிலர் மெய்ஞ்ஞானம் அடைவதற்கு உதவுவதற்காக நீங்கள் இங்கே தங்கப்போகிறீர்களா?

அர்கதாக்கள் புத்தர்களை அறிந்ததில்லை என்கிற இந்த வாக்குமூலம், குறிப்புகள் எடுத்த அந்த மனிதரின் தவறு அல்ல என்பதை நான் அறிவேன். இது போதிதருமரின் வாக்குமூலம், ஏனெனில் அவர் ஒரு போதிசத்வர். மேலும் போதிசத்வர்

களுக்கும் அர்கதாக்களுக்கும் இடையிலான சண்டையானது இருபத்து ஐந்து நூற்றாண்டுகளாக நடந்து வருகிறது. அவர்கள் ஒருவரைஒருவர் கண்டனம் செய்து கொண்டே இருக்கின்றனர். மெய்ஞ்ஞனாம் அடைந்த ஒருவர் கருணை இல்லாமல் இருப்பதை அவர்களால் வெறுமனே புரிந்து கொள்ள முடியவில்லை.

கருணை என்பது இல்லாமலும் கூட மெய்ஞ்ஞானம். சாத்தியப்படும் என்பதை போதிசத்வர்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. மேலும் மெய்ஞ்ஞானம் அடைந்த ஒரு மனிதருக்கு இன்னமும் உதவ வேண்டும் என்கிற ஆசை இருப்பதை அவர் இன்னமும் ஆசையற்றவர் ஆகிவிடவில்லை என்பதை அர்கதாக்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. போதிசத்வர் இன்னமும் கூட மற்ற மக்களின் வாழ்க்கை முறை யில் குறுக்கிட விரும்புகிறார். அந்த மக்கள் விழிப்புநிலையை அடைய விரும்பாதபோது, அவர்களை விழிப்படையச் செய்வதற்கு நீங்கள் யார்? அப்படி இருக்கும்போது அவர்களின் தூக்கம் கெட்டுப் போகாத அளவுக்கு வெறுமனே அமைதியாக சென்றுவிடுவதுதான் நல்லது. அர்கதாக்களைப் பொறுத்தமட்டில் இதுதான் உண்மையான கருணை. யாருடைய வாழ்க்கையிலும் நீங்கள் குறுக்கிடுவதற்கு விரும்புவதில்லை, ஒவ்வொருவரும் அவர்களது சொந்த வாழ்க்கையை, அவரது சொந்த ஒளிக்கு தக்கபடி, தனது சொந்த தனித்தன்மைக்கு தக்கபடி வாழ்ந்தாக வேண்டும். மெய்ஞ்ஞானம் அடையும்படி நீங்கள் யாரையும் நிர்ப்பந்திக்க முடியாது. யாராலும் துண்டப்படுவதோ அல்லது யாராலும் தவறான நோக்குடன் கவர்ச்சியூட்டப்படவோ கூடியது அல்ல மெய்ஞ்ஞானம்.

அர்கதா, போதிசத்வாவை புரிந்துகொள்ள முடிவதில்லை அல்லது போதிசத்வாவும் அர்கதாவைப் புரிந்து கொள்ள முடிவதில்லை. அவர்கள் அந்த அளவுக்கு நேர் எதிரான எதிரெதிர் துருவங்கள். அதனால் தான் இந்தத் தவறு குறிப்பெடுத்தவரிடம் இருந்து வரவில்லை, இந்தத் தவறானது போதிதருமரிடம் இருந்து தான் வருகிறது என்று நான் கூறுகிறேன். அவர் ஒரு அர்கதா கிடையாது.

இப்போது, புத்தமத நாடுகள் பல பிரிவுகளாக பிரிந்துள்ளன. உதாரணமாக போதிசத்துவர்களின் பூமியாகிய ஜப்பான் மகாயானத்தை சார்ந்துள்ளது. மேலும் இலங்கை ஹீனயானத்தைச் சார்ந்துள்ளது. அது அர்கதாக்களின் பூமியாக உள்ளது. இலங்கையில் ஜென்னுக்கு மரியாதையே கிடையாது. நீங்கள் இலங்கையில் போதிதருமரைப்பற்றி பேசினால் அவர்கள் சிரிப்பார்கள். ''அந்த மனிதன் பைத்தியம்'' என்று கூறி சிரிப் பார்கள். மேலும் ஜப்பானில் ஆனந்தா போன்ற அர்கதாக்களைப் பற்றி பேசினால் அவர்கள் வெறுமனே, ''அந்த மனிதர் முற்றிலும் சுயநலம் மிக்கவர்; அவரது வாழ்நாள் முழுவதும் கண்மூடித்தன மான சுயநலத்துடன் இருந்தார். அவர் கௌதமபுத்தருக்கே நிபந்தனைகளை விதித்தார். மேலும் அவர் மெய்ஞ்ஞானம் பெற்றவுடன் அவர் மறைந்துவிட்டார். மேலும் மெய்ஞ்ஞானம் அடைவதற்கான எல்லைக்கோட்டில் கொஞ்சம் அவர்களைத் தள்ளிவிட்டால் போதும் அவர்கள் மெய்ஞ்ஞானம் அடைந்து விடுவார்கள் என்னும் நிலையில் உள்ள ஒரு சிலருக்குத் தேவை யான வழிகாட்டுதல்களையும், குறிப்புகளையும், கொடுப்பதற்கு ஒரு சிறு நொடி கூட அக்கறை எடுத்துக் கொள்ளாமல் ஆனந்தா அடுத்தக் கரைக்குள், முடிவற்ற நிலைக்குள் போய்விட்டார்,'' என்று கூறுவார்கள்.

ஆனால் போதிதருமர் தப்பான அபிப்பிராயம் கொள்ளாமல் இருந்தால், முற்றிலும் எதிரான நிலைப்பாட்டின் நிலையை அவர் புரிந்து கொள்பவராக இருந்தால் அவர், 'பண்டிதர்கள், கற்றறிந்தமக்கள், அறிவுஜீவிகள் புத்தரைப்பற்றி அறிந்திருக்க மாட்டார்கள்'' என்று கூறி இருப்பார். அப்படி செய்திருந்தால் அது சரியானதாக இருந்திருக்கும். அர்கதா என்கிற வார்த்தை தவறானது மட்டுமல்ல, ஆனால், ''நான் மட்டுமே சரியானவன், மற்ற அனைவரும் தவறானவர்கள்'' என்கிற வெறிகொண்ட நோக்கத்தைத்தான் காட்டுகிறது, அர்கதா என்கிற வார்த்தைக்கு பதிலாக பண்டிதர்கள், அறிவுஜீவிகள், கற்றறிந்தமக்கள் என்று மாற்ற விரும்புகிறேன்.

பண்டிதர்கள் புத்தரை அறிந்து கொள்வதில்லை. அவர் களுக்கு தெரிந்தது எல்லாம் தன்னை உணர்வதற்கான அநேக

பயிற்சிகள், மட்டுமேயாகும். எனவே அவர்கள் காரண காரியம் என்னும் பொறிக்குள் சிக்கிக்கொண்டார்கள். சாகும் இயல் புடையவரின் கர்மங்கள் இப்படித்தான் உள்ளன. அவர்கள், பிறப்பு மற்றும் இறப்பில் இருந்து தப்பிக்க முடியாது'' எதைச் செய்யவேண்டுமோ அதற்கு எதிரானவற்றை செய்கின்றபடியால்'' இப்படிப்பட்டவர்கள் புத்தருக்கு தெய்வநிந்தனை செய்து விடுகிறார்கள்.

பண்டிதர்கள் குறித்து இந்த வாக்குமூலம் உண்மையானதாக இருக்கமுடியும். ஆனால் அர்கதாக்கள் குறித்து இந்த வாக்குமூலம் முற்றிலும் தவறானது. மேலும் அவர்களைக் கொன்று போடுவது தவறானதாகாது என்று கூறுவது அவரது வெறித்தனத்தைத்தான் காட்டுகிறது.

என்னால், அவர் சொல்வதை ஒத்துக்கொள்ள முடியாது. ''அர்கதாக்களை கொன்று போடுவது தவறாகாது'' என்று அவர் கூறுகிறார். மேலும் கௌதமபுத்தரைப் பொறுத்தமட்டில் ஒரு எறும்பைக் கொல்வதும்கூட தவறானது. மேலும் அர்கதா என்பவர் குறைந்தபட்சம் ஒரு எறும்பை விடவும் சிறந்தவராக இருக்கிறார்.

ஆனால் இது வெறிகொண்ட நோக்கம். மேலும் போதி தருமரின் இந்த மூர்க்கத்தனமான நோக்கத்தினால் அவரது படம் அப்படி கொடூரமானவராக சித்திரிக்கப்பட்டுள்ளது. அவர் அதைப்பற்றி கவலைப்பட்டிருக்க மாட்டார் என்பது நிச்சயம். ஒரு அர்கதாவைக் கொல்ல வேண்டிய அவசியம் இருந்தால், அவர் கொன்று போட்டிருப்பார். அவர் வார்த்தை தவறாத மனிதர்; அவர் என்ன கூறுகிறாரோ அதை அவர் அப்படியே செய்வார். இது வெறும் அடையாளக் குறியீடு என்று நீங்கள் கூறுவதற்கு முயற்சி செய்ய முடியாது. போதிதருமர் அடையாளக் குறியீடுகள் மூலம் பேசமாட்டார், அவர் என்ன நினைக்கிறாரோ அதை மிகச்சரியாக அப்படியே கூறிவிடுவார்.

அவர்களைக் கொன்று போடுவது தவறானதாகாது. '' இச்சாந்திகர்கள் நம்பகின்ற திறன் இல்லாதவர்களாக இருப்பதால், அவர்களை கொன்று போடுதல் குற்றமற்றதாக இருக்கும்.

ஆனால் நம்புகின்ற மக்கள் புத்தத்தன்மை என்னும் நிலையை அடைகிறார்கள்,'' என்று சூத்திரங்கள் கூறுகின்றன.

இப்போது இன்னும் சில விஷயங்கள் புரிந்துகொள்ளப்பட வேண்டும். அது இந்த இச்சாந்திகர்கள். இதற்கு, ஒரே பரிமாணத்தை மட்டும் பார்க்கின்றவர்கள், உண்மையின் ஒரே ஒரு நோக்கினை மட்டுமே அறிந்தவர்கள் என்று அர்த்தமாகும். மேலும் இந்த இச்சாந்திகர்கள் என்பதற்கு எதிரான மக்கள், மகாவீரர் மற்றும் சமண தீர்த்தங்கரர்கள் போன்றவர்கள் ஆவார்கள். இவர்கள் உண்மையில் ஒவ்வொரு நோக்கினையும் பார்ப்ப வர்கள். மகாவீரர் பல பரிமாண நோக்கத்தில் ஆழமாக வேர் ஊன்றியவராக இருந்தார். ஒட்டுமொத்த வரலாற்றில், சார்பியல் தத்துவத்தை மனித இனத்திற்கு கொண்டுவந்த முதல் மனிதர் அவர்தான். மேலை நாட்டினர் அதைக் கண்டுபிடிப்பதற்கு இருபத்து ஐந்து நூற்றாண்டுகள் எடுத்துக் கொண்டனர்.

ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் என்கிற ஒருவர் மட்டுமே, ஒரு விஞ்ஞானியாக அவர் வேறுபட்ட பாதையின் மூலம் சார்பியல் தத்துவத்தின், அதே தத்துவத்தை, அதே செய்தியைக் கொண்டு வந்தார். நீங்கள் என்ன கூறினாலும் அது எதையாவது சார்ந்ததாக மட்டுமே இருக்கிறது என்று மகாவீரர் கூறுகிறார். அவர் தனது சார்பியல் தத்துவத்தில் அந்த அளவுக்கு அதிக உறுதியுடன் இருந்ததால் அவர் ஒருபோதும் எந்த ஒரு வாக்குமூலத்தையும் கொடுக்கவில்லை. ஏனெனில் எந்த ஒரு சிறு வாக்குமூலமும் கூட ஏதாவது ஒரு நோக்கத்தை மட்டுமே காட்டும். அப்படியானால் அடுத்த நோக்கங்கள் என்னாவது?

ஒவ்வொரு உண்மைக்கும் ஏழு நோக்கினைகள் இருப்பதை அவர் கண்டு கொண்டார். ஆகவே நீங்கள் அவரிடம் ஒரு கேள்வி கேட்டால் அவர் ஏழு பதில்களுடன் பதில் அளிப்பார் மேலும் அந்த ஏழு பதில்களும், ஒன்றுக்கொன்று முரண்பட்டதாக இருக்கும். நீங்கள் மகாவீரரை சந்தித்தபின் எப்போதையும்விட அதிக குழப்பத்தில் இருப்பீர்கள். ஆனால் இந்த பூமியில் நடந்த மக்களில் அவர் மிகவும் தெளிவான ஒரு மனிதர். ஆனால் அவரது அணுகுமுறையானது பல பரிமாணங்களை உடையது.

உதாரணமாக, நீங்கள் மகாவீரரிடம், ''கடவுளைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டால் முதல் விஷயமாக அவர் தனது பேச்சை ''ஒருவேளை'' என்ற வார்த்தை இல்லாமல் அவர் ஒருபோதும் ஆரம்பிக்கமாட்டார். ஒவ்வொரு வாக்குமூலமும் ''ஒருவேளை'' என்பதில் தான் ஆரம்பிக்கும் ஏனெனில் நிச்சயமாக என்று சொல்வது முட்டாள்தனமானது. 'ஒருவேளை' என்பது உங்களை திறந்த மனதுடன் வைக்கிறது; அடுத்தவருடையதும் கூட சரியானதாக இருக்கலாம், எதிராளியுடையதும் கூட சரியானதாக இருக்கலாம். 'ஒருவேளை' என்பது கதவினை மூடாதது, ஏனைய சாத்தியக்கூறுகள் குறித்து அது உங்களை விழிப்புணர்வுடனும், உஷாராகவும் வைத்திருக் கிறது.

நீங்கள் கடவுளைப்பற்றி கேட்கிறீர்கள். கிறிஸ்தவர்கள் இச்சாந்திகர்கள்; அவர்கள், ''ஆம், கடவுள் என்று ஒருவர் இருக்கிறார். மேலும் ஒரே ஒரு கடவுள்தான் இருக்கிறார்'' என்று கூறுவார்கள். நீங்கள் முகமதியர்களைக் கேட்டால் அவர்களும் ஒரே ஒரு கடவுள் மட்டுமே இருப்பதாக கூறுவார்கள். இவர்கள் எல்லாம் இச்சாந்திகர்கள். ஒரே ஒரு பரிமாணம் என்று அழைக்கப்படுகின்ற ஒரு பாதையில் மட்டுமே அவர்கள் நம்புவார்கள். அவர்கள் மற்ற சாத்தியக்கூறுகளைப் பார்க்க மாட்டார்கள். மற்ற சாத்தியக்கூறுகளைப் பார்ப்பதற்கு அவர்கள பயப்படுவார்கள். அதனால் தான் அவர்கள் ஒரே கடவுளையும், ஒரே இறைதூதரையும் வைத்திருக்கிறார்கள். முகமதியர்களுக்கு இரண்டு இறைதூதர்கள் கூட கிடையாது. ஏனெனில் அதில் ஆபத்து உள்ளது.. நீங்கள் இரண்டு இறைதூதர்களை வைத்துக் கொண்டால் அவர்கள் ஒருவருக்கு ஒருவர் முரண்படலாம், அவர்கள் வேறு எதையாவது கூறலாம், அவர்கள் ஒருவரோடு ஒருவர் ஒத்துப் போகமாட்டார்கள். அதில் சிக்கல் வந்துவிடும்.

எனவே ஒரே கடவுள், ஒரே இறைதூதர், ஒரே புனிதநூல் என்று இருந்து விடுவது சிறந்தது. இத்தகைய மக்கள் பல பரிமாண உண்மையைக் கண்டு பயப்படக் கூடியவர்கள்.

இந்த மக்களுக்கு எதிராக மகாவீரர் போன்றவர்கள் அடுத்த முனைக்கு செல்கிறவர்கள். அவர்கள் முழுமையான வழியில் எதையும் கூறமாட்டார்கள், அவர்கள் எதையுமே எப்போதும் சார்புடையதாகவே கூறுவார்கள். நீங்கள் மகாவீரரிடம கடவுளைப்பற்றி கேட்டால் அவர் ஏழு வாக்குமூலங்களைக் கொடுப்பார். எனவே உங்களால் கடவுள் இருக்கிறாரா அல்லது இல்லையா என்ற கண்டு கொள்ளமுடியாது.

அந்த ஏழு வாக்குமூலங்களில் முதல் வாக்குமூலமானது:

''ஒருவேளை கடவுள் இருக்கிறார். ஆனால் ஒருவேளை தான். நான் முழுமையாக கூறமுடியாது. நீங்களும் முழுமை யானவராக இருக்கமுடியாது. அதற்கான சாத்தியங்கள் உள்ளன'' ஒருவேளை இங்கு ஒரு கடவுள் இருக்கலாம்; இது ஒரு சார்புடைய வாக்குமூலம். இது அவரது முதல் வாக்குமூலம்.

அவரது இரண்டாவது வாக்குமூலம்: ''ஒருவேளை கடவுள் இல்லாமல் இருக்கலாம். ஏனெனில் யார் அறிவார்? நாத்திகர்கள் கூறுவது சரி என்பதற்கு எல்லா சாத்தியக்கூறுகளும் இருக்கின்றன. கடவுளை யாரும் இதுவரை பார்த்ததில்லை. ஆகவே நம்மால் சொல்ல முடிந்ததெல்லாம், ஒருவேளை கடவுள் இல்லாமல் இருக்கலாம் என்பதாகும்.''

ஆனால் இந்த இரண்டு வாக்குமூலங்களையும் கேட்டபிறகு அதாவது ஒருவேளை கடவுள் இருக்கலாம், ஒருவேளை கடவுள் இல்லாமல் இருக்கலாம் ஆகிய இரண்டையும் கேட்டபிறகு ஒருவர் இதில் எதை நான் நம்பப்போகிறேன்? என்று கண்டிப்பாக கேட்பார். அதனால்தான் வருகிறது அவரது மூன்றாவது வாக்கு மூலம்: ''ஒருவேளை இரண்டுமே உண்மையாக இருக்கலாம்''. அப்போது இயல்பாகவே, ''இரண்டுமே எப்படி உண்மையானதாக இருக்கமுடியும்?'' என்று கேட்பீர்கள்.

அதன்பிறகு வருகிறது நான்காவது வாக்குமூலம், அதாவது ''ஒருவேளை இரண்டுமே உண்மை இல்லாமல் இருக்கலாம்'' இப்படிப்பட்ட விதத்தில் மகாவீரர் ஏழு வாக்குமூலங்களைக் கொடுத்துக் கொண்டே போவார், எனவே நீங்கள் குழப்பம்

அடைந்து விடுவீர்கள். ''ஒருவேளை கேள்வி கேட்பது தவறான தாகவும் இருக்கலாம். நாம் முன்பே அமைதியாகிவிடுவது சிறந்தது'' என்று நீங்கள் நினைக்கலாம். இப்படிப்பட்ட பல பரிமாண, சார்புடைய அணுகுமுறையினால் மகாவீரருக்கு அநேக சீடர்கள் கிடையாது. அங்கும் இங்குமாக சில பைத்தியக்கார மக்கள், அது என்னவாக இருந்தாலும் கவலைப்படாமல், மகாவீரர் என்ற மனிதரின் தனிமனிதப் பண்பின்மீது வெறுமனே காதல் கொண்டவர்கள் இருந்திருக்கலாம். அவர் ஒரு அழகான, கம்பீரமான மனிதர். ஆகவே ஒரு சில பைத்தியக்காரர்கள் அவரை நேசித்து இருக்கலாம். அவர் என்ன கூறுகிறார் என்பதைப்பற்றி அவர்களுக்கு கவலை இல்லை. அவர் எப்படி இருக்கிறார் என்பதில் தான் அவர்கள் அக்கறை உள்ளவர்கள். ''அவர் என்ன சொல்கிறார் என்பது பற்றி கவலைப்படாதீர்கள்; வெறுமனே அவரது அழகை, அவரது ஒளியை, கம்பீரமும் ஆழமும் கொண்ட கண்களை, மட்டுமே பாருங்கள். அவரது ஒட்டுமொத்த வார்த்தையும் அந்த அளவுக்கு பாடல் போன்றும், அந்த அளவுக்கு பரவசத்தோடும் இருந்தது. அவர் என்ன சொல்கிறார் என்பதைப் பற்றி கவலைப்படாதீர்கள்; அது நமது வேலை அல்ல. பார்ப்பதற்கு அந்த மனிதர் நன்றாக இருக்கிறார். அவர் கூறுவது சரியாக இருக்கலாம், தவறானதாகவும் இருக்கலாம். அவரே ''ஒருவேளை'' என்று தான் சொல்கிறார்,'' என்ற அந்த மனிதர்கள் நினைக்கலாம்.

*''இச்சாந்திகர்கள் நம்புகின்ற திறன் இல்லாதவர்களாக இருப்பதால் அவர்களைக் கொன்று போடுதல் குற்றமற்றதாக இருக்கும். ஆனால் நம்புகின்ற மக்கள் புத்தத் தன்மையை என்னும் நிலையை அடைகின்றனர்''* என்று போதிதருமர் கூறுகிறார். இந்த கூற்றினை நான் ஏற்றுக் கொள்ள முடியாது.

உண்மையின் முழுமைத்தன்மையை நம்புகின்ற இச்சாந்தி கர்கள் வாழ்வதற்கு உரிமை உள்ளவர்கள். மேலும் அவர்களின் ஒளிக்கு தக்கபடி வாழ உரிமை உள்ளவர்கள். சத்தியத்தின் சார்புடைய உணர்வை நம்புகிற மக்களுக்கு, அவர்களின் சொந்த பார்வைக்கு தக்கபடி வாழ்வதற்கான உரிமை இருப்பதைப்

போலவே இச்சாந்திகர்களுக்கும் உரிமை உள்ளது. யாரும் யாரையும் கொல்வதற்கு உரிமை இல்லை.

ஆனால், ஒருவகையில் பார்த்தால் போதிதருமர் நேர்மை யானவர். அவர் எந்த அளவுக்கு நேர்மையுடன் உணர்கிறாரோ அதை வெறுமனே அப்படியே கூறுகிறார். அவரது நேர்மையை சந்தேகிக்க முடியாது. அவரது வாக்குமூலத்தை மறுக்க முடியும். ஆனால் அவரது உள்நோக்கத்தை மறுக்க முடியாது. கிறிஸ்தவர்கள், முகமதியர்களையும், யூதர்களையும் கொலை செய்தார்கள். முகமதியர்கள் இந்துக்களை கொன்று போட்டார்கள். இந்துக்கள் புத்தமதத்தினரைக் கொன்றார்கள். ''உங்களது தத்துவதத்தின் மீது நம்பிக்கை இல்லாதவர்களைப் போய் கொல்லுங்கள்'' என்று யாரும் சொல்லாமல் இருந்தாலும் கூட, இந்த நாடு முழுவதும் அதுதான் நடந்து கொண்டிருக்கிறது. ஆனால் போதிதருமர் மட்டுமாவது நேர்மையுடன் இருக்கிறார். அவர் யாரையும் ஒருபோதும் கொன்றதில்லை, ஆனால் அவர் தனது நோக்கத்தை தெளிவான முறையில் கூறுகின்றார். அவரது புனிதமானது அந்த அளவுக்கு அவருக்கு மதிப்புள்ளதாகவும், அந்த அளவுக்கு உண்மையானதாகவும் இருப்பதால் அவரது புரிதலைப் பின்பற்றாத மனிதனை கொன்றுவிடலாம், அது குற்றமற்றது என்று கூறுகிறார். யாரையும் அவர் ஒருபோதும் கொல்ல வில்லை என்றாலும்கூட அவர் பயங்கரமாக பேசுகின்ற, வாழ்கின்றவராக இருக்கிறார். ஆனால் அவருக்கு மிகவும் மென்மையான இதயம் உள்ளது.

ஆனால் மதங்கள் இதே காரியத்தை சொல்லாமலே செய்து கொண்டிருக்கின்றன. மற்றவர்களிடம், மரியாதையுடனும், அன்புடனும் நடந்து கொள்கின்ற ஒரு மதமும் இந்த உலகில் இல்லை. ஒவ்வொரு மதமும் தாங்கள்தான் சரியானவர்கள் என்று நினைக்கிறது. உண்மையின்மீது தங்கள் ஒருவருக்குதான் உரிமை உள்ளது மற்றவர்கள் எல்லாம் தவறானவர்கள் என்று எல்லா மதங்களும் நினைக்கின்றன.

ஒவ்வொருவரும் சரியானவராக இருப்பதற்கான அல்லது தவறானவராக இருப்பதற்கான உரிமையைப் பெற்றிருக்கிறார்

என்பதுதான் எனது சொந்த அணுகுமுறையாகும். மேலும் யாராவது ஒருவர் தவறானவராக இருப்பதற்கு முடிவெடுத்து விட்டால், அப்போதும்கூட அவருக்கு எல்லா மரியாதையும், எல்லா அன்பும் கொடுக்கப்பட வேண்டும். அது அவரது முடிவு, மேலும் அவர் தனது முடிவில் வாழ விரும்பினால், அவரது வாழ்க்கையிலும், அவரது தத்துவத்திலும் குறுக்கிடுவது யாருடைய வேலையாகவும் இருக்கக்கூடாது.

*தங்களின் மனம் அற்ற நிலைதான் புத்தர் என்பதைக் கண்டு கொள்கின்ற மக்கள் தங்களின் தலையை மொட்டை அடிக்க வேண்டிய அவசியம் கிடையாது.*

இந்த இடத்தில் போதிதருமருடன் நான் முழுமையாக ஒத்துப் போகிறேன். நீங்கள் உங்களது இயல்பைக் கண்டுகொண்டால்; அதன்பிறகு, தலையை மொட்டை அடித்தல், அல்லது நிர்வாணமாக இருந்தல், அல்லது தலையில் நிற்றல், அல்லது சத்தியத்தை தேடுதலில், உங்களது சுய இயல்பைத் தேடுதலில், கடவுளைத் தேடுதலில் ஒன்றாக இல்லாத ஆனால் சர்க்கஸில் மட்டுமே நன்றாக இருக்கும் அளவுக்கு உங்களது உடலை எல்லா விதத்திலும் வளைத்தல் போன்ற முட்டாள்தனமான விஷயங் களைச் செய்யவேண்டிய அவசியம் கிடையாது.

*சாதாரண மனிதரும் கூட புத்தர்தான்.*

இந்த இடத்தில் போதிதருமருடன் நான் முழுமையாக ஒத்துப்போகிறேன். உண்மையைக் கண்டு கொள்ளுதல் என்பது துறவிகளுக்கு மட்டுமே உரியதல்ல. ஒரு சாதாரண மனிதனும் கூட, அவனது சொந்த வீட்டிலோ, சந்தைக் கடையிலோ, கொஞ்சநேரம் அமைதியாக இருந்து தியானம் செய்து தனது ஆன்ம இயல்பை அவர் கண்டு கொண்டால், அவரும் ஒரு புத்த ராக ஆகிவிடுகிறார். அவர் ஒரு மடாலயத்தில் இருக்கவேண்டும், அல்லது அவர் இந்த உலகத்தை துறக்க வேண்டும் என்கிற பிரச்சினையே கிடையாது. யாரும் இந்த உலகில் துறவறம் கொள்ள வேண்டாம் என்பதுதான் எனது அணுகுமுறையும் கூட.

உலகம் பிரச்சினையானதாக இல்லை, உங்களது விழிப் புணர்வு இல்லாதநிலை தான் பிரச்சினை. இந்த உலகத்தைப்

பற்றி கவலைப்படாமல் உங்களது விழிப்புணர்வு இல்லாத நிலையை துறந்து விடுங்கள். இந்த உலகம் உங்களுக்கு என்ன செய்யமுடியும்? நீங்கள் ஒரு அரண்மனையிலும் வசிக்கலாம். அந்த அரண்மனையால் உங்களது மெய்ஞ்ஞானத்தை தடுக்க முடியாது. நீங்கள் முற்றிலும் ஏழ்மையில் வசிக்கலாம். ஏழ்மையால் உங்களது மெய்ஞ்ஞானத்திற்கு உதவ முடியாது. ஏழ்மையோ அல்லது செல்வச் செழிப்போ, ஏழையின் குடிசையோ அல்லது அரண்மனையோ, அடிப்படையான விஷயம் உங்களது தியானம்தான். உங்களது விழிப்புணர்வுதான். அது எங்கெல்லாம் நிகழ்கிறதோ, அங்கு நீங்கள் மெய்ஞ்ஞானி ஆகிவிடுவீர்கள். நீங்கள் எதையும் துறக்க வேண்டியதில்லை.

இது முற்றிலும் உண்மையானது.

*சாதாரண மனிதர்களும் கூட புத்தர்கள் தான். தங்களது இயல்பை அவர்கள் கண்டு கொள்ளாத வரையில், தங்களது தலையை மொட்டை அடித்துக் கொள்கின்ற மக்கள் வெறுமனே மதவெறியர்களாக இருக்கின்றனர்.*

போதிதருமரே மதவெறியர் போன்ற வாக்குமூலங்களை கொடுத்திருக்கிறார் என்பதை புரிந்து கொள்ள வேண்டும். ஆனால் அடுத்தவர்களின் கண்களில் உள்ள வைக்கோல் துரும்பை கண்டு கொள்வது சுலபம். ஆனால் உங்களது சொந்த கண்ணில் உள்ள ஒட்டகத்தைக்கூட கண்டுகொள்வது மிகவும் கடினம். மக்கள் தங்களது சொந்த வாக்குமூலங்களை பற்றி தங்களது சொந்த நடத்தை பற்றி, தங்களது சொந்த வாழ்க்கை பற்றி ஒருபோதும் சிந்திப்பதில்லை. அவர்கள் எப்போதும் மற்றவர்களையே பார்த்துக் கொண்டு இருப்பவர்கள். அவர்கள் மிகவும் கலைநயம் மிக்கவர்கள், மற்றவர்களிடம் என்ன தவறாக உள்ளது என்பதைக் கண்டு கொள்வதில் கில்லாடிகள், ஆனால் அவர்கள் தங்களிடம் ஆயிரக்கணக்கான தவறான விஷயங்களை வைத்துக் கொண்டு, அதைப்பற்றி முழுவதும் விழிப்புணர்வு இல்லாமல் இருப்பார்கள். ஆனால் இது மனித இயல்பு. இது மனித பலவீனம்.

ஆனால் சாதாரண மக்கள் திருமணம் செய்து கொள்வதால் பாலியல் உறவை விட்டுவிடுவதில்லை. அவர்கள் எப்படி புத்தர்களாக ஆகமுடியும்.

இங்கு, எனது முழு உயிர் உணர்வோடு போதிதருமருக்கு ஆதரவு கொடுப்பேன். அவர் கூறுவது அளவுகடந்த முக்கியத் துவம் வாய்ந்தது, ஏனெனில் இதை அவர் ஆயிரத்து நானூறு வருடங்களுக்கு முன்பே கூறி இருக்கிறார். சிக்மண்ட் பிராய்டு அப்போது பிறக்கவே இல்லை. ஆல்பர்ட் அட்லர் இன்னமும் எங்கோ எதிர்காலத்தில் வெகுதொலைவில் இருந்தார். ஹேவ்வாக் எல்விஸ், அல்லது கார்ல் குஸ்டவ் ஜங், அல்லது அசகோழி அல்லது மாஸ்டர்ஸ் அண்டு ஜான்சன், இப்படிப்பட்ட மக்கள் மனிதனின் காம உணர்வு பற்றிய ஆராய்ச்சியில் ஆழ்ந்து இறங்கியவர்கள். ஆனால் இவர்கள் எல்லாரும், பிறப்பதற்கு முன்பே போதிதருமர் இப்படி கூறி இருக்கிறார். ஆனால் போதிதருமர் கூறுவது அந்த அளவுக்கு பிரகாசமானதாகவும், மிகவும் பெரிய விஷயமாகவும் இருக்கிறபடியால் இந்த சிறிய வாக்குமூலம்கூட அவரை இந்த உலகில் ஒரு முன்னோடியாக ஆக்கி விடமுடியும்.

*உங்களது இயல்பைக் கண்டு கொள்வது பற்றி மட்டுமே நான் பேசுகிறேன். நான் காம உணர்வைப் பற்றி பேசவில்லை. ஏனெனில் நீங்கள் உங்களது இயல்பைப் பார்ப்பதில்லை. உங்களது இயல்பைக் கண்டு கொண்டால் காமம் என்பது அடிப்படையில் முக்கியத்துவம் அற்றது.*

இது மாபெரும் தீர்க்கதரிசனம், அதுவும் புத்தமதத்தில் மாபெரும் துறவிகளில் ஒருவரிடம் இருந்து வருவது மிகப்பெரிய விஷயம். நீங்கள் மெய்ஞ்ஞானம் அடைந்து விடும்போது காம உணர்வு முக்கியமற்றதாக ஆகிவிடும். கனவுகள் எந்த பொருளால் ஆக்கப்பட்டிருக்கிறதோ அதே பொருளால் தான் காமமும் உண்டாக்கப்பட்டுள்ளது. அது தானாகவே மறைந்துவிடும். நீங்கள் அதை அடக்கவேண்டியதில்லை, நீங்கள் அதற்கு எதிராக செல்ல வேண்டியதில்லை. அதில் நீங்கள் அடைகின்ற மகிழ்ச்சியோடு அது மறைந்து போகிறது. நீங்கள்

உங்களது தியானத்தில் மேலும்மேலும் பக்குவமடைந்தவர் ஆகிவிடும்போது, காம உணர்வு மீதான ஆர்வம் கொஞ்சம் கொஞ்சமாக குறைந்துவிடும். நீங்கள் இந்த பிரபஞ்சத்தோடு முழுமையாக உங்களை ஒன்றுபடுத்திக் கொள்ளும்போது, காம உணர்வானது அதிகாலை சூரியனில் பனித்துளி மறைவதுபோல மறைந்து போகிறது.

மேலும் இப்படி தானாகவே காம உணர்வானது மறையாத வரையில், அதைக் கைவிடுவதோ, அதை கட்டாயப்படுத்துவதோ மிகவும் ஆபத்தானது. ஏனெனில் அதன் பிறகு நீங்கள் எல்லாவிதமான நெறிகோணல்களையம் உருவாக்கி விடுவீர்கள். மேலும் உலகத்தின் எல்லா மதங்களும் நெறி கோணிய மனித இனத்தை உருவாக்கிவிட்டது. ஓரினச்சேர்க்கை, பெண் ஓரினச் சேர்க்கை, சோடமி இப்படி மக்கள் தங்களது காம உணர்வை வெளிப்படுத்துவதற்கு விநோதமான, நெறி கோணல்களை கண்டுபிடித்துக் கொள்கிறார்கள். ஏனெனில் அவர்களின் மதமானது காமத்தை கண்டனம் செய்கிறது.

காம உணர்வு என்பது இயற்கையானது, உடல் அளவி லானது. நீங்கள் உங்களது உடலைக் கடந்து செல்லாத வரையில், மனத்திற்கு அப்பால் உள்ள ஒன்றுடன் நீங்கள் ஒன்றுபடாத வரையில், காம உணர்வானது உங்களுக்குள் ஏதாவது ஒருவடிவத்தில் இருக்கும். மேலும் அது அப்படியே அங்கு இருந்தால், அது இயற்கையானதாகவும், உடல் அளவில் ஆனதாகவும் இருப்பது சிறந்தது. ஏனெனில் நெறி கோணிய காம உணர்வு நீங்கள் மோசமான நிலைக்கு செல்வதாகும். இயற்கை யான காம உணர்வை உயர்வுபடுத்த முடியும். நெறிகோணிய காம உணர்வை உருமாற்றம் செய்வது கடினம்.

ஒரு ஓரினச்சேர்க்கையாளர் எப்போதாவது மெய்ஞ்ஞானம் அடைந்தார் என்று நான் ஒருபோதும் கேள்விப்பட்டதில்லை. ஆண்மைக் குறைபாட உள்ள ஒரு மனிதன் மெய்ஞ்ஞானி ஆகிவிட்டார் என்பதை நான் ஒருபோதும் கேள்விப்பட்டதில்லை. சந்தர்ப்ப வசத்தால் இது முடியாது. உண்மையில், மற்றவர்களை விடவும் ஆண்மைக் குறைபாடு உள்ள மனிதன் விரைவாக

மெய்ஞ்ஞானம் அடைய வேண்டும். ஏனெனில் அவன் ஒரு பிறவி பிரம்மச்சாரி! ஏனைய பிரம்மச்சாரிகள் எல்லாம் வெறுமனே வெறுக்கத்தக்க பிரம்மச்சாரிகள். இங்கு கொஞ்சம், அங்கு கொஞ்சம் என்று கசிந்து கொண்டிருப்பவர்கள். ஆண்மைக்குறைபாடு உள்ள மனிதன் பிரமமச்சாரியாக முழுமையாக நிச்சயத்துடன் இருக்கிறான். ஆனால் அப்படிப்பட்ட ஆண்மை குறைவுள்ள மனிதர் ஒருபோதும் மெய்ஞ்ஞானம் பெறவில்லை.

உண்மையில், உங்களது காம உணர்வுதான் உங்களது மெய்ஞ்ஞானமாக உருமாற்றம் அடைகிறது. ஆண்மை குறைபாடு உள்ள மனிதனிடம் காம சக்தி இல்லாதபடியால், அவன் மோசமான நிலையில் இருக்கிறான்; அவனால் உயர்நிலைக்கு போகமுடியாது. சூரியனின் குறுக்கே ஒரு ராஜாளி போன்று பறப்பதற்கான சக்தியை அவன் பெற்றிருக்க மாட்டான். அவன் ஒரு கௌதமபுத்தராகவோ அல்லது போதிதருமராகவோ ஆக முடியாது.

காம உணர்வு முக்கியமற்றது என்று போதிதருமர் கூறுகிறார்; முக்கியமானது என்னவென்றால் உங்களது சுய இயல்பை அறிந்து கொள்தல், உங்களது உயிர் உணர்வை அறிந்து கொள்ளுதல் தான் என்கிறார். அதன் பின்னர், தேவையான எல்லாமும் தானாகவே நடக்கும். அப்படியே சில பழக்கங்கள் மிஞ்சி இருந்தாலும்கூட, அவை உங்களுக்கு தீங்கு செய்ய முடியாது. மெய்ஞ்ஞானம் பெற்ற ஒரு மனிதரிடம் இருந்து வருகின்ற சிறப்பு மிக்க வார்த்தைகள். அப்படியே சில பழக்கங்கள் மிஞ்சி இருந்தாலும் கூட அவை உங்களுக்கு தீங்கு செய்ய முடியாது.

உதாரணமாக, நீங்கள் புகைப்பிடிப்பவராக இருக்கலாம். புகைப்பிடிப்பதால் எந்த ஒரு மெய்ஞ்ஞானியும், எந்த விதத்திலும் அமைதி குலைந்துவிடுவார் என்று நான் பார்த்ததில்லை, புகைப்பிடிப்பதாலோ அல்லது காபி அல்லது டீ குடிப்பதாலோ அமைதி குலைந்து விடுகின்ற மெய்ஞ்ஞானத்திற்கு அதிக மதிப்பு கிடையாது. உங்களது சிறிய பழக்கங்கள், சீட்டாடுதல். அது

உங்களது மெய்ஞானத்திற்கு தீங்கு விளைவிக்கிற சாத்தியங்களை என்னால் பார்க்க முடியவில்லை.

இந்த இடத்தில் போதிதருமர் அளவுகடந்த புரிதலோடும், கருணையோடும் இருக்கிறார்.

ஏனெனில் உங்களது இயல்பானது முக்கியமாக தூய்மையானதாக இருக்கிறது. நீங்கள் என்ன செய்கிறீர்களோ அது எந்த ஒரு வித்தியாசத்தையும் ஏற்படுத்தாது. நீங்கள் உங்களது முக்கியமான தூய இயல்பை அறிந்து கொண்டால், அதன்பிறகு உங்களுக்கு எல்லாமே அனுமதிக்கப்படும். அதன்பின்னர் உங்களுக்கு எதுசரி மற்றும் எது தவறு என்று முடிவெடுக்கிற திறன் உள்ளவராக ஆகிவிடுவீர்கள். இதனால்தான் இப்படிப்பட்ட பிரச்சினைகள் இருந்து வந்தன. ஒருவரையொருவர் புரிந்து கொள்வதில் அநேக கஷ்டங்கள் இருந்தன. பழக்கவழக்கங்களில் உள்ள ஒரு சிறிய வேறுபாடானது புரிதலுக்கு இப்படிப்பட்ட மிகப்பெரிய தடையாக ஆகிவிட்டது.

முகமது நபிகள் இரவில் உண்பது வழக்கம். உண்மையில் முகமதியர்கள் பகலும் உண்ணா நோம்பு இருந்துவிட்டு, இரவில் சாப்பிடுவார்கள். அதவர்களின் மத நாட்களில், சூரிய உதயம் முதல் சூரிய அஸ்தமனம் வரை நாள்முழுவதும் அவர்கள் உண்ணா நோன்பு இருப்பார்கள், பின்னர் இரவில் அவர்கள் ஒரு நல்ல விருந்து சாப்பாடு சாப்பிடுவர்கள். இப்போது, இதைச் சமணர்களால் புரிந்து கொள்ள முடியாது. பகலில் நீங்கள் சாப்பிடலாம் ஆனால் இரவிலா? அதுவும் கூட மதசம்பந்தமான நாளிலா?

சமணர்கள் விரதம் இருக்கும்போது அவர்கள் நாட்கணக்கில் சாப்பிடுவதில்லை, மேலும் தண்ணீரையும்கூட பகல் நேரத்தில் மட்டுமே குடிப்பார்கள், இரவில் குடிக்கமாட்டார்கள். எனவே இயல்பாகவே முகமதியர்கள் ஏதோ ஒரு தவறான காரியத்தைச் செய்வதாக இவர்கள் நினைப்பார்கள். ஆனால் முகமதுநபிகள் எந்த சூழ்நிலையில் வாழ்ந்தார், எந்த சூழ்நிலையில் இஸ்லாம் பிறந்தது என்பதை சமணர்கள் அறிந்திருக்க மாட்டார்கள்.

இஸ்லாம் ஒரு பாலைவன மதம், அதில பகல்பொழுது மிகவும் வெப்பமாக இருப்பதால், பகல் நேரத்தில் விரதம் இருப்பது சுலபமானது. இரவில் எல்லாமே குளிர்ச்சியானபோது, வானம் முழுவதும் நிறைந்த நட்சத்திரங்களோடு அந்த பாலைவனம் அழகானதாக ஆகிவிடும்போது விருந்துண்பது சுலபமானது. பகல் பொழுதில் வெறுமனே வெயில் சுட்டெரிக்கும்.

ராமகிருஷ்ணர் மீன் சாப்பிடுவதை தொடர்ந்து வந்தார். இப்போது சமணர்களால் ராமகிருஷ்ணரை ஏற்றுக் கொள்ள முடியாது. ஏனெனில் ராமகிருஷ்ணர் தொடர்ந்து மீன் சாப்பிட்டார். மெய்ஞ்ஞானி ஒருவர் மீன் சாப்பிடலாமா? ஆனால் போதி தருமரின் இந்த வாக்குமூலத்தை நீங்கள் புரிந்துகொண்டால், உங்களால் ராமகிருஷ்ணரை மன்னித்துவிட முடியும். அது வெறுமனே ஒரு பழைய பழக்கவழக்கம். வங்காளத்தில் சோறும் மீனும் மட்டுமே உணவாகும். ராமகிருஷ்ணர் குழந்தைப் பருவத்தில் இருந்தே சோறும், மீனும் மட்டுமே சாப்பிட்டுவந்தார். மேலும் அனைவரும் கூட அதைத்தான் சாப்பிட்டு வந்தார்கள். அவர் மெய்ஞ்ஞானம் அடைந்தாலும்கூட இந்த பழைய பழக்கம் தொடர்ந்து இது முக்கியமற்றதாக ஆகிவிடுகிறது.

இந்த ஒட்டுமொத்த உலகிலும் சூழ்நிலைகள் வேறுபட்டு இருக்கின்றன. சீதோஷ்ணநிலைகள் வேறுபட்டு உள்ளன. இங்கே குளிர்ந்த சீதோஷ்ண நிலை இருக்கிறது. அதில் மது வகைகள் முக்கியமான தேவையாக இருக்கலாம். உதாரணமாக சோவியத் யூனியனில் ஒரு மெய்ஞ்ஞானியினாலும் கூட வோட்கா குடிக்காமல் இருப்பது சாத்தியப்படாது. அங்கு சீதோஷ்ணநிலை அந்த அளவுக்கு குளிரானதாக இருப்பதால், உங்களது ரத்தம்கூட உறைந்து போகின்ற அளவுக்கு குளிராக இருப்பதால் அங்கே கொஞ்சம் கதகதப்பு தேவைப்படுகிறது.

உண்மையான மதப்பற்றுடையவர் மிகவும் புரிதல் உள்ளவர். வெவ்வேறு மக்களைப்பற்றி, வெவ்வேறு நிலைமைகள் பற்றி, பல்வேறு சூழ்நிலைகள் பற்றி, வெவ்வேறு சீதோஷ்ண நிலைகள் பற்றி பல்வேறு காலங்கள் குறித்து, பல்வேறு அமைப்புமுறைகள், பல்வேறு பழக்கவழக்கங்கள் குறித்து புரிதலோடு இருப்பவர்.

மேலும் மெய்ஞ்ஞானம் போன்ற மாபெரும் அனுபவத்தை சிறிய விஷயங்களால் கலங்கச் செய்துவிட முடியாது.

பஞ்ச பூதங்களால் ஒருங்கிணைக்கப்பட்ட உடலில் வாழ்ந்தாலும் கூட, உங்களது இயல்பு அடிப்படையில் தூய்மை யானதாக உள்ளது. அதை மாசுபடுத்த முடியாது.

உங்களது பேருணர்வை எதனாலும் மாசுபடுத்த முடியாது. அது தனதளவில் மாசுபடுத்த முடியாதது.

நீங்கள் எதையும் பற்றிக் கொண்டு இருப்பதை விட்டு விட்டால் மேலும் விஷயங்களை அவற்றின் போக்கில் விட்டு விட்டால், நீங்கள் பிறப்பு மற்றும் இறப்பிலும்கூட சுதந்திரமான வர்களாக இருப்பீர்கள். நீங்கள் எல்லாவற்றையும் உருமாற்றம் செய்து விடுவீர்கள். தடுக்க முடியாத ஆன்மிக சக்திகளை நீங்கள் பெற்று விடுவீர்கள். மேலும் நீங்கள் எங்கு இருக்கிறீர்களோ அங்கேயே அமைதியாக இருப்பீர்கள். இதை நீங்கள் சந்தேகித்தால் எதன் மூலமும் நீங்கள் ஒருபோதும் எதையும் பார்க்க மாட்டீர்கள். நீங்கள் எதையும் செய்யாமல் இருப்பது நல்லது. நீங்கள் எதையாவது செய்தால், பிறப்பு மற்றும் இறப்பு என்னும் சுழற்சியைத் தவிர்க்க முடியாது. ஆனால் நீங்கள் புலால் விற்கின்ற வேலையைச் செய்தாலும் கூட, நீங்கள் உங்களது இயல்பைக் கண்டு கொள்ளும் போது நீங்கள் ஒரு புத்தராக இருக்கிறீர்கள்.

உண்மையில் இது நடந்துள்ளது, ஜப்பானில், புலாலுக்காக விலங்குகளைக் கொல்கின்ற ஒருவர் மெய்ஞ்ஞானியாக ஆகி இருக்கிறார். அவர் சக்கரவர்த்திக்காக விலங்குகளை வெட்டி புலால் தயாரிப்பவராக இருந்தார்; மேலும் அந்த மனிதர் மெய்ஞ்ஞானி ஆனவுடன் தனது மரியாதையைச் செலுத்துவதற்கு சக்கரவர்த்தியும் கூட வந்தார். அந்த சக்கரவர்த்தியால் இதை நம்புவதற்கு முடியவில்லை. ஏனெனில் அந்த மனிதர் தனது அரண்மனைக்கு பின்னால் விலங்குகளை வெட்டுவதை அவர் தனது கண்களால் பார்த்திருக்கிறார். அவர் மெய்ஞ்ஞானம் அடைந்த பின்னர் சக்கரவர்த்தி அவரிடம், ''இனிமேல் எனது சமையல் அறை என்னாவது? நீங்கள் மெய்ஞ்ஞானி

ஆகிவிட்டதால், இனிமேல் நீங்கள் உங்களது பழைய தொழிலை செய்யமாட்டீர்கள் அல்லவா?'' என்று கேட்டார்.

அந்த குரு சிரித்தார் உடனே அவர், ''இல்லை, நான் அதைத் தொடர்ந்து செய்வேன். இப்போது நான் விலங்குகளை அதிக கருணையோடும், அதிக அன்போடும், அதிக நளினத்தோடும், வெட்டமுடியும். எப்படி இருந்தாலும் அந்த விலங்குகள் யாரா லாவது கொல்லப்பட போகின்றன. அவர்கள் என்னைப்போல கருணை உள்ளவர்களாக இருக்கமுடியாது, என்னைப்போல அவர்கள் அந்த விலங்குகளுடன் அருள் உள்ளம் சார்ந்தவராக இருக்க முடியாது. அவை எப்படியும் வெட்டப்படும்போது, அது என்ன வேறுபாட்டை உண்டாக்கும்?'' என்று கூறினார்.

மேலும், ''எனது மெய்ஞ்ஞானத்தைப் பொருத்தமட்டில், அது எந்த சூழ்நிலையிலும் மாசுபடாததாக இருக்கிறது. எனக்குள் உள்ள வானத்தில் மீண்டும் மேகங்கள் சூழாது. ஒருவர் மீண்டும் கீழ்நிலையில் விழுந்துவிடாத ஒரு நிலைக்கு இப்போது நான் வந்திருக்கிறேன். எனவே நீங்கள் கவலைப்படவேண்டாம். நான் மீண்டும் நாளை, எனது தொழிலைப் பார்ப்பதற்கு வந்து விடுவேன்,'' என்று கூறினார். மேலும் அவர் மெய்ஞ்ஞானம் அடைந்த பிறகு கிட்டதட்ட இருபது ஆண்டுகள் உயிர் வாழ்ந்தார். காலையில் விலங்குகளை வெட்டுகின்ற தனது தொழிலைப் பார்ப்பார், அதன்பிறகு மாலையில் மெய்ஞ்ஞானத்தைப் பற்றி அவர் தனது சீடர்களுக்கு போதிப்பார். மேலும் அவர் மெய்ஞ்ஞானம் அடைந்தது மட்டுமல்ல, அவரது சீடர்களில் சிலரும் கூட மெய்ஞ்ஞானம் அடைந்தனர்.

போதிதருமர் கூறுவது சரியானதுதான். நீங்களும் ஒரு புத்தர் தான் என்பதைப் புரிந்து கொண்டால், நீங்கள் உங்களது இயல்பைக் கண்டு கொண்டால் அதன் பின்னர், நீங்கள் புலாலுக்காக விலங்குகளை வெட்டுகின்றவராக இருந்தாலும் கூட அது ஒரு பொருட்டாகாது.

இப்போது போதிதருமரிடம் சீடர் ஒருவர், ''ஆனால் விலங்குகளை வெட்டுவதன் மூலம் புலால் விற்பவர்கள் கர்மத்தை உருவாக்குகின்றனர். அவர்கள் எப்படி புத்தர்களாக

இருக்கமுடியும்? என்று கேட்கிறார். உங்களது இயல்பைக் கண்டு கொள்வது பற்றி மட்டுமே நான் பேசுகிறேன். கர்மத்தை உருவாக்குவது பற்றி நான் பேசவில்லை. நாம் என்ன செய்கிறோம் என்கிற கவனம் இல்லாவிட்டால், நமது செயல்கள் நம்மீது பிடிப்போடு இருப்பதில்லை.

நீங்கள் உங்களை அறிந்து கொண்டுவிட்டால், எதுவும் உங்களைப் பிடித்துக் கொண்டு இருக்காது, உங்களது சுதந்திரம் முழுமையாக மாசுபடாததாக இருக்கும். உங்களது சுதந்திரத்திற்கு எதிராக போகின்ற எதையும் உங்களால் செய்ய முடியாது.

இந்தியாவில் இருபத்துஏழு ஆண் மதகுருமார்களும் தங்களின் மனம் அற்ற பதிவுகளை மட்டுமே மற்றவர்களிடம் ஒப்படைத்தார்கள். மேலும் நான் சீனா வந்துள்ளதன் ஒரே காரணம் மகாயானத்தின் போதனைகளை உடனடியாக ஒப்படைப்பதற்காகத்தான். இந்த மனம் அற்ற நிலைதான் புத்தர். கொள்கைகளையோ, பக்தியையோ, அல்லது தவ பயிற்சிகளைப் பற்றியோ நான் பேசவில்லை.

மொழிகள் மற்றும் நடத்தை, உணர்தல் மற்றும் ஏற்றுக் கொள்ளுதல் ஆகியவை எல்லாம் நகர்ந்து கொண்டிருக்கும் மனதின் செயல்கள் ஆகும். எல்லா நகர்வுகளும் மனதின் நகர்வுகள். ஆனால் மனம் அற்ற நிலையானது நகர்வதும் இல்லை அல்லது செயல்புரிவதும் இல்லை. ஏனெனில் அதன் செயல்களின் சாரம் வெறுமை ஆகும். மேலும் வெறுமை என்பது முக்கியமாக அசைவற்றது.

எனவேதான், இந்த சூத்திரங்கள் அசையாமல் அசைதல், பயணிக்காமல் பயணித்தல், பார்க்காமல் பார்த்தல், சிரிக்காமல் சிரித்தல், கேட்காமல் கேட்டல், அறியாமல் அறிதல், சந்தோஷமின்றி சந்தோஷமாக இருத்தல், நடக்காமல் நடத்தல், நிற்காமல் நிற்றல், ஆகியவற்றை நமக்கு கூறுகின்றன. மேலும் ''மொழிகளைக் கடந்து செல்லுங்கள், எண்ணங்களைக் கடந்து அதற்கு அப்பால் செல்லுங்கள்'' என்று இந்த சூத்திரங்கள் கூறுகின்றன. என்னால் போய்விட முடியும். ஆனால் இந்த சூத்திரங்களைச் சுருக்கமாக பிரசங்கம் செய்ய வேண்டும்.

இந்த வாக்குமூலங்கள் கடினமானவை போன்று தெரிகிறது. நடக்காமல் நடத்தல், கேட்காமல் கேட்டல், பேசாமல் பேசுதல் போன்றவை கடினமானவை போன்று தெரிகிறது. ஆனால் இவை கடினமானவையே அல்ல. இதற்கு வெறுமனே கொஞ்சம் புரிதல் இருந்தால் போதும். புறத்தூண்டுதல் இன்றி நீங்கள் தன்னியல போடு பேசினால், எந்தவித தயார்படுத்துதலும் இல்லாமல், என்ன வார்த்தை உங்களால் சொல்லப்படப்போகிறது என்பதை அறியாமல் பேசும்போது, நீங்கள் பேசாமல் பேசுகிறீர்கள். தூண்டு தல் இன்றி தானே நடக்கின்ற செயல்கள் உங்களது பங்குக்கு எதையும் செய்யாத செயல் ஆகும். இந்த பிரபஞ்சமானது தனது சொந்தப் பாடலை பாடுவதற்கு நீங்கள் வெறுமனே அனுமதிக் கிறீர்கள்.

உதாரணமாக, இப்போது நான் பேசாமல் பேசிக்கொண்டு இருக்கிறேன். எனது அடுத்த வார்த்தை என்ன என்பதை நான் அறியாமலேயே எனது ஒட்டுமொத்த உயிர் உணர்வும் போதிதருமரின் இந்த சூத்திரங்களுக்கு பதிலளிக்கின்றது. இதை நீங்கள் கேட்பதை போலவே நானும் எனது காதுகளால் கேட்கிறேன். நீங்கள் இங்கே அமர்ந்திருப்பது போன்றே நானும் இங்கு அமர்ந்திருக்கிறேன். இந்த நாற்காலி காலியாக உள்ளது. நீங்கள் நன்றாக தயார் செய்து கொண்டு, நொடிக்கு நொடி உங்களது பொறுப்பை உணராமல் நீங்கள் பேசாதபோது ஆனால் வெறுமனே நீங்கள் பயிற்சி செய்து கொண்டு, ஒத்திகை பார்த்துக் கொண்டு, ஒரு கிளிப்பிள்ளை போன்று ஏதோ ஒன்றை திரும்பிச் சொல்வது ஒரு வகையான பேசுதல்.

இங்கே தனித்தனியாக குறிப்பிடப்படுகின்ற எல்லா செயல்களும் மற்றும் இன்னும் உங்களது வாழ்வில் மேலும் செய்யப்படுகின்ற செயல்களையும் நீங்கள் இரண்டு வழிகளில் செய்யலாம். ஒன்று, விழிப்புணர்விலிருந்து, இந்த நிகழ்காலத்தில், எந்தவிதமான தயார்படுத்தலும் இல்லாமல், தானே நிகழ்கின்ற, இந்த இயற்கை உங்களை ஆட்கொண்டுவிட அனுமதித்துக் கொண்டு, உங்கள் மூலமாக பேசவோ அல்லது செயல்புரியவோ செய்வது. அப்போது நீங்கள் உங்களது வார்த்தைகள் மற்றும் செயல்களின் பொறிக்குள் மாட்டிக் கொள்ளாமல் முழுமையாக

வெளியில் இருப்பீர்கள். நீங்கள் வெறுமனே கவனிப்பவராக மட்டுமே இருப்பீர்கள். நீங்கள் செயல்புரிவதில்லை, என்ன வெல்லாம் நடக்கிறதோ அதை வெறுமனே கவனித்துக் கொண்டு இருப்பீர்கள்.

இந்த முழுமையான கவனம், இந்த சாட்சி பாவனை தான் ஆன்மிக வாழ்க்கையை உருவாக்குவதற்கான, எல்லாவற்றையும் கடந்து செல்கின்ற வாழ்க்கையை, ஆன்மிக வாழ்க்கையை, மெய்ஞ்ஞான வாழ்க்கையை, புத்தத் தன்மை உள்ள வாழ்க்கையை உருவாக்குவதற்கான முடிவான இரகசியம் ஆகும்.

**போ**தி தருமரின் விழிப்புநிலை பிரசங்கம்.

பற்றற்ற நிலை தான் பாதையின் சாராம்சம். மேலும் அதில் பயணிப்பவர்களின் இறுதி குறிக்கோள் உருவத்தோற்றங்களில் இருந்து விடுதலை அடைவதாகும். ''பற்றற்ற நிலை என்பது மெய்ஞ்ஞானமாக உள்ளது. ஏனெனில் அது உருவத் தோற்றங்களை புறம்தள்ளி விடுகிறது.'' என்று சூத்திரங்கள் கூறுகின்றன. பேராசை, கோபம், மாயை ஆகியவை எல்லைகளாக உள்ளன. இந்த மூன்று எல்லைகளையும் விட்டுவிலகுதல் என்பதற்கு, பேராசை. கோபம், மாயை ஆகியவற்றில் இருந்து திரும்பி மரணமில்லாமை, தியானம் மற்றும் ஞானம் ஆகியவற்றிற்கு செல்லுதல் என்று அர்த்தமாகிறது புத்தர்கள் இந்த மூன்று விஷயங்களோடும் வாழ்ந்து கொண்டு, தங்களை தூய்மை யான தர்மத்தில் பேணி வளர்த்துக் கொண்டு வாழந்ததனால் மட்டுமே புத்தர்களாக ஆகியிருக்கிறார்கள். கோபம், பேராசை, மாயை ஆகியவை தான் அந்த மூன்று விஷங்கள்.

மாபெரும் வாகனம் எல்லா வாகனங்களை விடவும் மிகவும் பெரியது. அது தான், எதையுமே பயன்படுத்தாமல் எல்லா வற்றையும் பயன்படுத்துகின்ற, பயணம் செய்யாமலேயே நாள் முழுவதும் பயணிக்கின்ற போதிகித்துவர்களின் போக்கு வரத்து வாகனம். இப்படித்தான் புத்தர்களின் வாகனமும் இருக்கிறது. ''எந்த வாகனமும் புத்தர்களின் வாகனம் அல்ல'' என்று சூத்திரங்கள் கூறுகின்றன. பஞ்சபூதங்களின் ஒருங்கிணைப்பு குகை தான் ஜென்னின் முகப்புகூடமாக உள்ளது. அகக்கண் திறப்பதுதான் மாபெரும் வாகனத்தின் வாசலாக உள்ளது'' என்று

சூத்திரங்கள் கூறுகின்றன. இதைவிட தெளிவாக என்ன இருக்க முடியும்?

ஏதைப்பற்றியும் நினைக்காமல் இருப்பதே ஜென். இதை நீங்கள் அறிந்து கொண்ட பின்னர், நடத்தல், நிற்றல், அமர்தல், அல்லது படுத்தல் என்று நீங்கள் செய்கின்ற எல்லாமே ஜென்னாக இருக்கிறது. மனம் என்பது வெறுமையானதாக உள்ளது என்பதை அறிதலே புத்தரைக் காண்பது என்றாகிறது. பத்து திசைகளின் புத்தர்களும் மனம் என்பதை வைத்திருப்ப தில்லை. மனம் அற்ற நிலையைக் காண்பது தான் புத்தரைக் காண்பதாகும்.

எந்தவிதமான மனவருத்தமும் இன்றி உங்களை நீங்களே கொடுத்து விடுதலே மிகப்பெரிய தாராள மனப்பான்மை ஆகும். அசைதல் மற்றும் அசைவற்று இருத்தல் ஆகியவற்றை கடந்து செல்வதே மிகப்பெரிய தியானம். ஆகும்; இயல்புடையவர்கள் நகர்ந்து கொண்டிருப்பார்கள் ஆனால் அர்கதாக்கள் நகராமல் அப்படியே இருப்பவர்கள். ஆனால் உயர்ந்த நிலை தியான மானது சாகும் இயல்புடையவர்கள், மற்றும் அர்கதாக்கள் ஆகிய இருவரையும் தாண்டிச் சென்று விடுகிறது. புரிதலின் இந்த நிலையை அடைந்தவர்கள், எந்தவிதமான முயற்சியும் இன்றி எல்லாத் தோற்றங்களில் இருந்தும் தங்களை விடுவித்துக் கொள்கிறார்கள் மேலும் எந்தவிதமான சிகிச்சையும் செய்து கொள்ளாமல் எல்லா நோய்களையும் குணப்படுத்தி கொள்கின்றனர். மாபெரும் ஜென்னின் சக்தியானது இப்படிப் பட்டதாக உள்ளது.

ஏனைய மெய்ஞ்ஞானிகளை விடவும், போதிதருமர் மிகவும் தெள்ளத்தெளிவாக இருக்கிறார். மெய்ஞ்ஞானம் அடைந்த பின்னரும்கூட தவறுகளைச் செய்யமுடியும் என்பது மெய்ஞ் ஞானத்தின் அனுபவமாக உள்ளது. இது நீங்கள் புரிந்துகொள்ள வேண்டிய ஒன்றாகும். மெய்ஞ்ஞானிகளால் தவறுகளை செய்ய முடியாது என்று மக்கள் சாதாரணமாக நினைக்கின்றனர். அதுதான் சாதாரண மக்களின் எதிர்பார்ப்பு, ஆனால் உண்மைநிலையைப் பொறுத்தமட்டில் இது உண்மையானதல்ல.

ஏனைய மதங்களின் எதிர்பார்ப்பும்; இதே போன்றுதான் இருந்திருக்கிறது. அவர்களும் தங்களின் இறைதூதர்கள் தவறு செய்ய மாட்டார்கள் என்று நினைக்கின்றனர். குர் ஆண் முழுவதிலும் அநேக தவறுகள் இருந்தாலும்கூட தங்களின் இறைதூதராகிய முகமதுநபி அவர்களால் எந்த தவறையும் செய்யமுடியும் என்பதை முகமதியர்கள் ஏற்றுக்கொள்ள தயாராக இருப்பதில்லை. பைபிளிலும் நிறைய தவறுகள் உள்ளன. ஆனாலும்கூட போப்பாண்டவர்கள் இந்த இருபது நூற்றாண்டு களாக இடைவிடாது அவர்கள் தவறிழைக்காதவர்கள் என்று அறிவித்துக் கொண்டு இருக்கிறார்கள். ஆனால் அவர்களின் தவறுகள் அப்பட்டமாக வெளியில் தெரிபவை. ஒரே ஒரு உதாரணம், ஜோன் ஆஃப் ஆர்க் அப்போதிருந்த போப்பாண்ட வரால் ஒரு சூன்யக்காரியாக அறிவிக்கப்பட்டார். மேலும் சூன்யக்காரி என்பவர், சாத்தானுடன் பாலியல் உடலுறவு கொள்கின்றவர் என்று விவரித்தார். சூன்யக்காரி என்கிற வார்த்தைக்கு அர்த்தம் அதுவல்ல. சூன்யக்காரி என்பதன் அர்த்தம் புத்தசாலிப் பெண்மணி என்பதாகும். மேலும் மத்தியகாலம் வரையிலும் இதுதான் அந்த வார்த்தைக்கு அர்த்தமாக இருந்தது. ஆனால் போப்பாண்டவர்கள் இப்படிப்பட் புத்திசாலி பெண்மணிகள் சாத்தானின் பிடிக்குள் மாட்டிக்கொண்டவர்கள் என்று அறிவிப்பதற்கு ஆரம்பித்தனர். இது மிகவும் சுலபமானது. முதலில் அவர்கள் அந்த பெண்மணிகளை தாங்கமுடியாத அளவுக்கு துன்புறுத்துவார்கள். தினந்தோறும் அவர்கள் துன்புறுத்தப்பட்டனர்.

எனவே இறுதியில் அந்த பெண், தான் ஒரு சூன்யக்காரிதான் என்று ஒத்துக்கொள்ள வேண்டியதிருக்கும். தான் துன்புறுத்தப் படுவதைத் தடுப்பதற்கு அது ஒன்று மட்டுமே வழியாகும். மேலும் அவள், தான் ஒரு சூன்யக்காரி என்பதை ஒப்புக்கொண்டபின்னர், போப்பாண்டவரால் அமைக்கப்பட்ட ஒரு சிறப்பு நீதிமன்றத்திற்கு அவள் சென்றாக வேண்டும். அங்குதான் சாத்தானோடு உடலுறவு கொண்டேன் என்பதை அவள் அறிவித்தாக வேண்டும். இது அப்பட்டமான முட்டாள்தனம் ஏனெனில் இதற்கு முன்பும் யாரும் அறிந்ததில்லை, இதற்கு பின்பும் யாரும் அதை

ஒருபோதும் அறியமாட்டார்கள். ஏனெனில் யாரும் சாத்தானைப் பார்த்ததில்லை. ஆனால் அந்த அப்பாவி பெண்களோ சாத்தானுடன் உடலுறவு கொண்டவர்கள். மேலும் அவர்கள் அந்த ஒட்டுமொத்த அசிங்கமான விஷயத்தை விலாவாரியாக அறிவிக்க வேண்டும். அப்படி அவர்கள் ஒத்துக்கொண்டபிறகு, அந்த நீதிமன்றம் அவர்களை உயிரோடு எரித்துவிடும்படி ஆணையிடும். ஐரோப்பாவிலும் ஆயிரக்கணக்கான மக்கள் ஆபத்தில் இருந்தனர். மேலும் ஏற்கனவே ஆயிரக்கணக்கான பெண்கள் உயிரோடு எரிக்கப்பட்டு விட்டார்கள்.

ஜோன் ஆஃப் ஆர்க், அவளது நாட்டின் விடுதலைக்காக பாடுப்பட்ட ஒரு பெண்மணி. அளவுகடந்த தைரியம் கொண்ட இளம் பெண்ணாக இருந்தாள். மேலும் அவள் தனது நாட்டிற்கு விடுதலை பெற்றுத்தந்தார். ஆகையினால் ஜோன் ஆஃப் ஆர்க்கிற்கு அளவுகடந்த மரியாதை இருந்தது. ஆனால் பொறாமை கொண்ட போப்பாண்டவர் இப்படி ஜோன் ஆஃப் ஆர்க்கை தனியாக விட்டுவிட அனுமதிக்கவில்லை. இதில் போட்டி எழுந்து விட்டது. யார் அதிக மரியாதைக்குரியவர். ஜோன் ஆஃப் ஆர்கா அல்லது போப்பாண்டவரா? அதற்கு சுலபமான ஒரு வழி அவளை ஒரு சூன்யக்காரி என்று அறிவித்து விடுவது மட்டுமேயாகும். அவர் அந்தப் பெண்மணியை ஒரு சூன்யக்காரி என்று அறிவித்தார். மேலும் இறுதியில் அவள் அதை ஒத்துக் கொள்ளும் வரையில் அந்த அப்பாவி இளம் பெண் துன்புறுத்தப் பட்டாள். வேறு வழி இல்லாமல் அவள் உயிருடன் எரிக்கப் பட்டாள்.

ஆனால் போப்பாண்டவர் எதிர்பார்த்ததை விட இது வேறுபட்ட ஒரு விளைவை உருவாக்கப்பட்டது. அவள் மக்களின் கண்களில் விழுந்துவிட்டாள். எனவே அவள் ஒரு தியாகி ஆகிவிட்டாள். அவள் அதிகம் நேசிக்கப்பட்டாள். அவள்மீது அதிக இரக்கம் வந்தது. மக்கள் கிட்டத்தட்ட அவளை வழிபடு வதற்கு ஆரம்பித்துவிட்டனர். எனவே மூந்நூறு ஆண்டுகளுக்கு பின்னர், மற்றொரு போப்பாண்டவர் இது முன்பு இருந்த ஒரு போப்பாண்டவரின் தவறு என்பதை உணர்ந்து கொண்டார். அந்த போப் தேவையில்லாமல் ஒரு தியாகியை உருவாக்கிவிட்டார்.

அவர் கொஞ்சம் கவனமாக செயல்பட்டிருக்க வேண்டும். சாதாரணப் பெண்களை அழித்துவிடுவது சுலபம். ஆனால் ஜோன் ஆஃப் ஆர்க் போன்ற பெண்களை அழிப்பது மிகவும் கடினம். அவர் போதுமான கவனத்துடன் செயல்படவில்லை.

முந்நூறு ஆண்டுகளுக்கு பிறகு வேறு ஒரு போப்பாண்டவர் இந்த ஜோன் ஆஃப் ஆர்க் ஒரு சூன்யக்காரி அல்ல. அவள் புனிதர் பட்டத்துக்குரியவர் என்று அறிவித்தார். மேலும் அவளது கல்லறையில் இருந்து எலும்புகள் எடுக்கப்பட்டு வழிபடப்பட்டது. மாபெரும் நினைவு மண்டபம் ஒன்று அமைக்கப்பட்டது. ஏனெனில் இப்போது அவள் ''புனித ஜோன் ஆஃப் ஆர்க்'' ஆகிவிட்டாள். குறைந்தபட்சம் போப்பாண்டவர்கள் இருவரில் ஒருவராவது தவறு இழைக்க கூடியவராக இருப்பதை நீங்கள் காணமுடியும். அதிகபட்சம் இருவரும்கூட இருக்கலாம். ஆனால் ஒரு விஷயம் மட்டும் நிச்சயம். இருவருமே சரியானவர்களாக இருக்க முடியாது. மேலும் போப்பாண்டவர்கள் மெய்ஞ்ஞானி களாக இருக்கமுடியாது; மெய்ஞ்ஞானம் குறித்து அவர்களுக்கு எதுவும் தெரியாது.

கீழைநாடுகள் பத்தாயிரம் ஆண்டுகளாக இந்த மெய்ஞ் ஞானம் என்கின்ற விஷயம் குறித்து மிகவும் அக்கறை கொண்டுள்ளன. அது நிச்சயமாக உங்களுக்கு பேரொளியை, மாபெரும் தெளிவை, மாபெரும் பரவசத்தை மற்றும் சாகா இயல்பு உணர்வினைக் கொடுக்கிறது. ஆனால் இவ்வளவு விஷயங்களை அது கொண்டுவந்தாலும்கூட, இந்த பிரபஞ்சமானது மிகவும் பரந்து விரிந்து இருப்பதால் உங்களது மெய்ஞ்ஞானமானது இந்த பிரபஞ்சம் என்னும் மகாசமுத்திரத்தில் வெறுமனே விழுந்துவிட்ட ஒரே ஒரு பனித்துளி போன்றதாகும். உங்களது புரிதல் எந்த அளவுக்கு தெள்ளத் தெளிவாக இருந்தாலும் கூட தவறுகள் செய்வதற்கான சாத்தியங்கள் எப்போதும் இருக்கின்றன. மேலும் இந்த விஷயம் கீழை நாட்டினரால் அடையாளம் காணப்பட் டுள்ளது.

இந்த பிரபஞ்சமானது எல்லா பரிமாணங்களிலும் பரந்து விரிந்து இருப்பதால், ஒரு மெய்ஞ்ஞானியும் கூட தவறுகளைச்

செய்ய முடியும் என்று கௌதமபுத்தரே கூட கூறி இருக்கிறார். இதுதான் உண்மையான மதத்தன்மை மற்றும் பணிவுடைமை.

தவறிழைக்காமல் இருப்பது என்கிற கருத்தானது அசிங்கமான அகங்காரத்தை தவிர வேறு எதுவும் அல்ல.

எனவே போதிதருமர் கருத்தை தவறவிட்டு விட்டார் என்று நான் கூறும்போது என்னைத் தவறாக புரிந்து கொள்ளாதீர்கள். போதிதருமர் மெய்ஞ்ஞானம் அடையவில்லை என்று நினைத்து விடாதீர்கள். இதில் எந்த முரண்பாடும் இல்லை. அவர் மெய்ஞ்ஞானம் அடைந்தவர் தான். இந்த பூமியில் மெய்ஞ் ஞானம் அடைந்த மாபெரும் மனிதர்களில் அவரும் ஒருவர். ஆனால் மெய்ஞ்ஞானம் உங்களை மலரச்செய்து விடுகிறது, உங்களது ஒட்டுமொத்த சக்தியும் உண்மையான வசந்தத்தை அடைந்து விடுகின்றன; அதற்காக நீங்கள் தவறே செய்ய முடியாதவர் ஆகிவிட்டீர்கள் என்று அர்த்தமாகாது.

உண்மையில் மெய்ஞ்ஞானியிடம் நீங்கள் அவரது தவறுகளைச் சுட்டிக் காட்டினாலும் கூட அதை அவர் ஏற்றுக் கொள்கின்ற அளவுக்கு அவர் மிகவும் பணிவானவராக இருப்பார். அவர் தனது தனிமனிதப்பண்பில் இருந்து அந்த அளவுக்கு பற்றுதல் இன்றி இருப்பார். அது அவருக்கு ஒரு பொருட்டாகாது. அவருக்கு நான் என்னும் தன்முனைப்பு கிடையாது; அவர் மனம் வருந்தமாட்டார். மேலும் அதாவது ஒரு பக்கத்தை சார்ந்து இருக்கும்போது, பல பரிமாணங்கள் கொண்ட இந்த உலகில் ஒருசில குறிப்பிட்ட பரிமாணங்களோடு அவர் சாய்ந்து கொள்ளலாம், தனது சொந்த அனுபவங்களுக்கும், உணர்ச்சிகளுக்கும் எதிராக உள்ள பரிமாணங்களை விரும்பாத வராக இருக்கலாம். இந்த பிரபஞ்சம் எல்லா முரண்பாடுகளையும் தன்னிடத்தில் வைத்துள்ளது மேலும் மெய்ஞ்ஞானத்தில் மிகவுயர்ந்த இடத்திலும்கூட இந்த முரண்பாடுகளை தன்னகத்தே வைத்துக் கொள்வது மிகவும் கடினமானதாகும்.

தூங்கினாலும், விழிப்புநிலையிலும் மனிதன் வெறுமனே மனிதன் தான். முரண்பாடுகள் ஒன்று ஆழ்ந்து இருப்பது முரண் படுவதற்காக அல்ல. ஆனால் ஒன்றுக்கொன்று உதவுவதற்கு

மட்டுமே என்று கருத்தில் கொள்வது மிகவும் கடினமானது. இதில் சுலபமான விஷயம் என்னவென்றால் ஒருபக்கத்தை மட்டும் தேர்வு செய்துவிட்டு அடுத்த பக்கத்திற்கு எதிராக செல்வது மட்டுமேயாகும். ஆனால் அதற்காக மெய்ஞ்ஞானம் முழுமைய டையவில்லை என்று அர்த்தமாகிவிடாது; மெய்ஞ்ஞானம் அடைந்த ஒரு மனிதரும் கூட ஒருதலைபட்சமாக இருக்கலாம் என்றுதான் அர்த்தமாகும். மேலும் இது, இந்த பிரபஞ்சமானது அந்த அளவுக்கு பரந்துவிரிந்து இருப்பதால் நடக்கிறது.

கௌதமபுத்தரும் மகாவீரரும் சமகாலத்தவர்கள். மகாவீரரின் சீடர்கள், அவர் கடந்தகாலம், நிகழ்காலம் மற்றும் எதிர்காலத்தை அறிந்தவர் என்றும், இந்த உலகில் இதுவரை இருந்தவை மற்றும் இனி மேலும் இருக்கப்போகிறவை ஆகியவற்றையும் மகாவீரர் அறிவார் என்று கூறினார்கள். எங்கும் நிறைந்தவர், சர்வ வல்லமை படைத்தவர், எல்லாவற்றையும் உணர்ந்தவர் என்று மகாவீரரை கடவுளுக்கு இணையாகக் கூறினார்கள். இதுபற்றி கௌதமபுத்தரிடம் கேட்டபோது அவர் சிரித்துக் கொண்டே ''நீண்ட நாட்கள் யாருமே இல்லாத ஒரு வீட்டில் மகாவீரர் பிச்சை கேட்டுக் கொண்டு இருந்தார் என்று நான் கேள்விப்பட்டிருக் கிறேன். அவருக்கு கடந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் எல்லாம் தெரியும் என்று மக்கள் கூறுகிறார்கள். ஆனால் யாருமே இல்லாத வீட்டின் முன்னால் நாம் நின்று கொண்டிருக்கிறோம் என்பதைக் கூட அவரால் அறிந்து கொள்ள முடியவில்லையே!'' என்று கூறினார்.

மேலும் மகாவீரர் ஒருமுறை அதிகாலையில் நடந்து சென்ற கொண்டிருந்ததாகவும், அது கோடைகாலம் என்பதால் சூரிய உதயத்திற்கு முன்பு வேகமாக சென்றுவிடவேண்டும் என்று நடந்து சென்றபோது ஒரு நாயின் வாலை இருட்டில் மிதித்து விட்டார். அந்த நாய் குரைத்த பின்னர்தான் அங்கு ஒரு நாய் இருந்திருக்கிறது என்பதே அவருக்கு தெரிந்தது. முக்காலத் தையும் உணர்ந்தவர் என்று கூறுகின்ற இந்த மனிதருக்கு தனது காலடியில் உள்ள நாயின் வால் தெரியவில்லை என்று கௌதமபுத்தர், மகாவீரரைப் பற்று நகைச்சுவையாக கூறுவதுண்டு.

மேலும் நானும்கூட கௌதமபுத்தரோடு நிச்சயமாக ஒத்துப் போகிறேன்.

மகாவீரர் ஒருபோதும் தான் இப்படிப்பட்டவர் என்று கூறியது கிடையாது. இது அவரது சீடர்கள் அவரைப்பற்றி கூறியது. மகாவீரரைப் போன்ற மக்கள் எதையும் கோரமாட்டார்கள். கௌதமபுத்தரின் சீடர்கள் அவரிடம், ''முக்காலத்தையும் அறிவதில் உங்களது நிலை என்ன?'' என்று கேட்டார்கள். கௌதமபுத்தரின் பணிவானது அந்த அளவுக்கு இருந்ததால் அவர் சீடர்களிடம், ''நான் சர்வவல்லவனோ, அல்லது சர்வ வியாபியோ அல்லது சர்வக்ஞனோ அல்ல, என்னிடம் தெளிவான பார்வை உள்ளது. ஆனால் இந்த பரந்து விரிந்த பிரபஞ்சத்தோடு ஒப்பிடும்போது இது மிகவும் சிறிய விஷயம். ஆம், கடந்த காலத்தில் நான் எனது மனதைக் குவித்தால் என்னால் கடந்த காலத்தை அறியமுடியும்; அதை போன்று எதிர்காலத்தில் மனதைக் குவித்தால் என்னால் எதிர்காலத்தை அறியமுடியும். அதேபோன்று நிகழ்காலத்தில் மனதைக் குவித்தால் நிகழ் காலத்தை அறிந்து கொள்ள முடியும். ஆனால் நீங்கள் மெய்ஞ்ஞானம் அடைந்துவிடும் போது மனதைக் குவித்தல் என்பது சாத்தியப்படாமல் போய்விடுகிறது. ஏனெனில் மனதைக் குவித்தல் என்பது மனதை ஒருமுகப்படுத்துதல் என்பதன் மறுபெயராகும். அது மனதின் தன்மை, ஆனால் மெய்ஞ்ஞானம் என்பது மனம் அற்ற நிலை,'' என்று கூறினார். மனம் அற்ற நிலையில் ஓரிடத்தில் குவித்தல் என்பது முடியாது. அப்போது அதற்கு எல்லைகள் வைத்துக் கொள்ள முடியாது. ஆகவே சில சமயம் மெய்ஞ்ஞானம் அடைந்தவர்கள் சிறிய தவறுகளைச் செய்யலாம். ஆனால் அந்த செயல்கள் அவரது மெய்ஞ் ஞானத்திற்கு எதிராக சென்றுவிடாது. இதை நான் உங்களுக்கு தெளிவாக்க விரும்பினேன். ஏனெனில் இன்றைய சூத்திரங்களில், ஒரு போதிசத்துவருக்கு சரியானவற்றை போதிதருமர் கூறுகிறார். ஏனெனில் அவருக்கு அர்கதாக்களின் வழியைப் பற்றி தெரியாது. ஆனால் அவர் தவறாக எடுத்துக் கொள்ளப்படுகிறார். இதற்கு பதிலாக போதிதருமர், ''அர்கதாக்களின் அனுபவத்தைப் பற்றி எனக்கு தெரியாது ஏனெனில் நான் ஒரு அர்கதா அல்ல,'' என்று

கூறியிருக்க வேண்டும். அவர் மகாயானத்தைப் பற்றி, மிகப் பெரிய ''வாகனத்தைப் பற்றி,'' தற்பெருமை கொள்கிறார். மேலும் சில வழிகளில் அவர் ஹீனயானத்தை, அர்கதாக்களின் ''சிறிய வாகனத்தை'' கண்டனம் செய்கிறார்.

இதை நான் ஒத்துக்கொள்ள மாட்டேன். ஏனெனில் நான் இதில் எந்த ஒரு கூட்டத்தையும் சேர்நதவன் அல்லன். இது ஒருவிதத்தில் எனது வேலையை எளிமையானதாகவும், ஒருவிதத்தில் மிகவும் கடினமானதாகவும் ஆக்கிவிடுகிறது. எளிமையாகத் தெரிகிறது. ஏனெனில் வெகு தொலைவில் இருந்து என்னால் நாணயத்தின் இரண்டு பக்கங்களையும் பார்க்க முடியும். அதில் ஈடுபட்டுள்ள மக்களால் அதைக் காண முடியாது. மேலும் இது எனது வேலையைக் கடினமானதாக ஆக்கிவிடுகிறது. ஏனெனில் அது பல பரிமாணங்களை எடுக்க ஆரம்பித்து விடுகிறது, மேலும் சிலசமயம் நான் அளவுகடந்து நேசித்த மக்களுக்கு எதிராக நான் பேசவேண்டியதாக ஆகிவிடுகிறது.

ஆனால் சத்தியத்தை விடவும் அன்பு உயர்ந்த தன்மை அல்ல. உங்களது அன்பு மற்றும் உங்களது உண்மை ஆகிய இரண்டிற்கும் இடையே முடிவெடுக்க வேண்டும் என்னும்போது, உண்மைதான் தீர்மானிக்கும் காரணியாக இருக்க வேண்டும்.

இனி சூத்திரங்கள்.

*பற்றற்ற நிலை தான் பாதையின் சாராம்சம்.*

இது உண்மைதான். நமது துன்பங்கள் எல்லாம் பற்றுதல்கள் தானே தவிர வேறு எதுவும் இல்லை. நமது ஒட்டுமொத்த அறியாமை மற்றும் இருளானது, ஆயிரத்தியோரு பற்றுதல்களின் விநோதமான சேர்க்கையாக இருக்கிறது. ஆனால் நாம் சாகும் தருவாயில் நம்மிடம் இருந்து எடுத்துக் கொள்கின்ற பொருள்கள் மீது நாம் பற்றுதலோடு இருக்கிறோம் அல்லது அவை நமது மரணத்திற்கு முன்புகூட எடுக்கப்பட்டு விடலாம். நீங்கள் பணத்தின் மீது அதிக பற்று கொண்டு இருக்கலாம். ஆனால் நாளையே நீங்கள் திவாலாகிப் போய்விடலாம். நீங்கள் உங்களது அதிகாரம், உங்களது அந்தஸ்து, உங்களது தலைமை, உங்களது

பிரதமர் பதவி ஆகியவற்றின்மீது மிகவும் பற்றுதல் கொண்டு இருக்கலாம். ஆனால் அவை எல்லாம் சோப்புக் குமிழிகள் போன்றவை. இன்று அவை உள்ளன, நாளை அதன் அடையாளம்கூட அங்கு இருக்காது. ரஷ்யப் புரட்சிக்கு முன்பு இது நடந்தது. அப்போது கெரன்ஸ்கி ரஷ்யாவின் பிரதமராக இருந்தார். புரட்சி கலவரத்தின் போது, ஜார் மன்னரும் மொத்தம் பத்தொன்பது பேர் அடங்கிய அவரது ஒட்டுமொத்த குடும்பமும் கொன்று போடப்பட்டபோது ஒரு ஆறுமாதமே ஆன குழந்தையைக் கூட விட்டுவைக்காத அளவுக்கு பழிவாங்கும் மனதோடு புரட்சியாளர்கள் நடந்து கொண்டனர். இந்த உலகில் ஜார் மன்னரின் குடும்பத்தினரின் எந்த ஒரு சுவடும் கூட விட்டுவைக்கப்படக்கூடாது என்று அவர்கள் விரும்பினர். ஆனால் சரியான நேரத்தில் கெரன்ஸ்கி தப்பித்துவிட்டார். அவர் 1960-இல் இறந்தார். மேலும் அரை நூற்றாண்டுகளாக கெரென்ஸ்கிக்கு என்ன நடந்தது என்று யர்ருக்கும் தெரிய வில்லை. அவர் ஒரு மளிகைக்கடைக்காரராக இருந்தார். மாறுவேடம் பூண்டு நியூயார்க் நகரில் ஒரு மளிகைக் கடையை நடத்திவந்தார்.

உலகில் இருந்த மிகப்பெரிய பேரரசுகளில், ரஷ்யப் பேரரசும் ஒன்றாக இருந்தது. ஒரு கண்டத்தில் இருந்து அடுத்த கண்டம் வரை பரவி இருந்தது. ஆனால் மிகப்பெரிய அதிகாரம் படைத்த ஒரு பிரதமர், ஒருநாள் நியூயார்க் நகரில் உள்ள ஒரு மளிகைக்கடையின் சொந்தக்காரராக ஆகிவிட்டார். மேலும் கலவரக்காரர்கருக்கு பயந்து அவர் தனது பெயரையும், தனது அடையாளத்தையும் மாற்றிவிடுகிறார். அவர் மரணமடைந்த போது தான் அவரிடம் இருந்த காகிதங்கள் மற்றும் நாட் குறிப்புகளில் இருந்து அவர்தான் கெரன்ஸ்கி, ஜார்களில் காணாமல் போன பிரதமமந்திரி என்பது தெரிந்தது.

நமது பதவி, நமது அதிகாரம், நமது பணம், நமது புகழ், மரியாதை இவை எல்லாம் சோப்புக் குமிழிகள். ஆனால் நிச்சயமாக, பற்றற்ற நிலைதான் பாதையின் சாராம்சம். சோப்புக் குமிழிகளோடு பற்றுதலோடு இருக்காதீர்கள். அப்படி இருந்தால் நீங்கள் இடைவிடாது துன்பத்திலும், வேதனையிலும் இருப்பீர்கள்.

நீங்கள் அவற்றோடு பற்றுதலோடு இருப்பதைப்பற்றி அந்த சோப்புக் குமிழிகள் கவலைப்படுவதில்லை; அவை உடைந்து இந்த காற்றில் மறைந்து போய்க்கொண்டே இருக்கும். மேலும் உங்களை ஒரு காயம்பட்ட இதயத்தோடும், ஒரு தோல்வியோடும் உங்களது அகங்காரத்தின் ஆழ்ந்த அழிவோடும் உங்களை விட்டுவிட்டு சென்றுவிடும். அவை உங்களை சகப்புணர்வு, எரிச்சல், விரக்தி உள்ளவர்களாக ஆக்கிவிடும். அவை உங்களது வாழ்க்கையை ஒரு நரகமாக ஆக்கிவிடும்.

கனவுகள் எந்த வகைப் பொருளால் உண்டாக்கபப்டுள்ளதோ அந்த வகைப் பொருளால் தான் வாழ்க்கையும் உண்டாக்கப் பட்டுள்ளது என்பதை வெறுமனே புரிந்து கொள்வது மட்டுமே பாதையின் சாராம்சமாகும். பற்றற்றநிலை: இந்த உலகில் வாழுங்கள்; ஆனால் இந்த உலகமாகவே இருந்துவிடாதீர்கள். இந்த உலகத்தில் வாழுங்கள்; ஆனால் இந்த உலகம் உங்களை வாழ்வதற்கு விட்டுவிடாதீர்கள். இவை எல்லாம் ஒரு அழகான கனவு என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஏனெனில் எல்லாமே மாறிக் கொண்டும் மறைந்து கொண்டும் இருக்கின்றன. நாம் தன்னுணர்வு இழந்த நிலையில் இருப்பதற்கு பற்றுதலே காரணம்.

நீங்கள் பற்றுதலை விட்டுவிட்டால், உங்களுக்குள் ஒரு அபரிமிதமான சக்தியானது வெளிப்படுதல் நடக்கும். மேலும், இப்படி பொருள்களின் மீது பற்று கொள்வதில் ஈடுபட்டுவந்த அந்த சக்தியானது இப்போது உங்களது உயிர் உணர்விற்கு, ஒருபுதிய ஒளியை, ஒரு புதிய புரிதலை, சுமைகளை எல்லாம் இறக்கிவிட்ட சுகமான அனுபவத்தை, ஒரு புதிய விடியலை உங்களுக்கு கொண்டு வந்துவிடும். அதன் பின்னர் துன்பம், வேதனை, கவலை ஆகியவற்றிற்கான சாத்தியங்கள் இருக்காது.

இந்த விஷயங்கள் எல்லாம் மறைந்துவிட்ட பின்னர் அமைதியில், சாந்தியில், கண்களுக்கு புலப்படாத மகிழ்ச்சி நிறைவில் இருப்பதை நீங்களே காண்பீர்கள். உங்களது ஆன்மாவில் சிரிப்பு உள்ளது. அதனால் ஒரு புத்தர் சிரிக்காமல் சிரிக்கிறார் என்று போதிதருமர் கூறுகிறார். புத்தர் சிரித்துக் கொண்டு இருக்கின்ற எந்த ஒரு சிலையையும், யாரும்

பார்த்ததில்லை. அவர் சிரிக்க வேண்டிய அவசியமே இல்லை; அவரது ஒட்டுமொத்த ஆன்மாவும் சிரிப்பை உணர்ந்து கொண்டிருக்கிறது.

நீங்கள் சிரிப்பில் உள்ள மனோதத்துவத்தை புரிந்துகொள்ள வேண்டும். நீங்கள் சுலபமாக சிரித்து விடுகிறீர்கள். ஆனால் புத்தரின் சிரிப்பில் இருந்து உங்களது சிரிப்பு ஒரு வேறுபட்ட தன்மையைக் கொண்டுள்ளது. நீங்களும் சிரிக்கிறீர்கள் ஏனெனில் உங்களது வாழ்க்கையானது அந்த அளவுக்கு துன்பம் நிறைந்த தாக இருப்பதால், எந்த ஒரு தருணமும், முட்டாள்தனமாக தெரிகின்ற எந்த ஒரு நிகழ்வும், ஒரு நொடிப்பொழுது நீங்கள் உங்களது துன்பத்தை மறப்பதற்கு உதவுகிறது. உங்களது மன இறுக்கம் மறைந்து போகிறது. எனவே அங்கு சிரிப்பு நிகழ்கிறது. எனவே சிரிப்பு என்பது உங்களை ஓய்வுடன் தளர்த்திக் கொள் கின்ற ஒரு விஷயமாகும். அது அளவுகடந்த ஆரோக்கியமானது. ஒரு நொடிப்பொழுதில் உங்களது மன இறுக்கத்திற்கு அப்பால் உங்களை அது எடுத்துக்கொண்டு செல்கிறது. ஆனால் ஒரே ஒரு நொடிப்பொழுது மட்டுமே, அதன்பின்னர் நீங்கள் திரும்பவும் உங்களது இருள் நிறைந்த குகைக்குள் வந்து விடுகிறீர்கள். புத்தர் சிரிக்காமல் சிரிக்கிறார். ஏனெனில் அவருக்கு மன இறுக்கம் கிடையாது. மன இறுக்கத்தில் உள்ள சக்தியை அவர் சேர்த்து வைக்காத காரணத்தினால் அது சிரிப்பில் வெடித்து வெளிவருவது கிடையாது. மேலும் வாழ்க்கை நகைப்புக்குரியது என்பதை அவர் அறிவார். இங்கே மக்கள் செய்கின்ற காரியங்கள் எல்லாமுமே நகைப்புக்குரியவை. சிரிப்பு என்பது புத்தரின் உயிரின் ஒவ்வொரு அணுவிலும் பதிந்துள்ளது. அவரது சிரிப்பு அவரது உதட்டில் இருந்து மட்டும் வருவதில்லை. ஒருவேளை நீங்கள் பார்ப்பதற்கு தவறவிட்டுக் கொண்டே செல்கின்ற விஷயங்களை அவரது தெளிவான நிலையில் கண்டு கொள்ளலாம்.

இது நான் கேள்விப்பட்டது. தன்னோடு படுக்கையில் படுத்திருந்த ஆணிடம் ஒரு பெண்மணி திடீரென்று, ''விரைவாக எழுந்திருங்கள்! எனது கணவரின் கார் சப்தம் கேட்கிறது. அரைமைல் தூரத்திற்கு அப்பால் அந்த கார் வரும்போதே அதன்

சத்தம் இங்குவரை கேட்கும். இப்போதுதான் வீட்டின் முன் காரை நிறுத்தி இருக்கிறார். நீ உடனே எழுந்திரு!'' என்றாள்.

அந்த ஆண் எழுந்து, ''சரி இப்போது நான் எங்கு போவது?'' என்றான்.

அதற்கு அவள், ''ஜன்னல் வழியாக வெளியே குதி!'' என்றாள்.

அதிர்ஷ்டவசமாக அந்த வீடு அறுபது மாடி கட்டடத்தில் இல்லை. அதில் வெறும் தரைத்தளம் மட்டுமே இருந்தது. எனவே அவன் குதித்துவிட்டான். ஆனால் அவன் நிர்வாணமாக இருந்தான். மேலும் அப்போது மழை பெய்து கொண்டிருந்தது. ஆனால் அதிர்ஷ்டவசமாக அப்போது தெருவில் ஒரு கூட்டத்தினர் அதிகாலைப் பொழுதில் ஒரேசீராக ஓடிக்கொண்டிருந்தனர். எனவே இந்த ஆண் அவர்களுடன் சேர்ந்து கொண்டான். அவனுக்கு வேறு வழி இல்லை. அவன் அவர்களோடு சேர்ந்து ஒரேசீராக ஓடாமல் அங்கேயே நிர்வாணமாக நின்றிருந்தால் பிடிபட்டிருப்பான்.

அவன் ஒரே சீராக ஓடிக்கொண்டிருக்கிற இரண்டு டஜன் பேர்களுடன் சேர்ந்து ஓட ஆரம்பித்தான், மேலும் அந்த அதிகாலை இருட்டில் அவன் நன்றாக சமாளித்து ஓடினான். ஆனால் ஓடுபவர்களில் ஒருவன் மட்டும் இந்த ஆள் நிர்வாணமாக தங்களுடன் ஓடி வருவதைப் பார்த்துவிட்டான். அவனால் கேட்காமல் இருக்க முடியவில்லை. அவன், ''எப்போதுமே நீ நிர்வாணமாகத்தான் ஓடுவாயா?'' என்று கேட்டான்.

உடனே அந்த ஆள், ''ஆம்'' என்றான். அதன்பிறகு இருள் மறைந்து கொஞ்சம் வெளிச்சம் வர ஆரம்பித்தபோது, ஒரே சீராக ஓடிக்கொண்டிருப்பவர்களில் ஒருவன் தன்னுடன் நிர்வாணமாக ஓடிவந்து கொண்டிருப்பவர், பிஷப் என்பதை அடையாளம் கண்டு கொண்டான். மேலும் அந்த சிறு வெளிச்சத்தில், அந்த பிஷப் வெறும் நிர்வாணமாக மட்டுமல்லாமல், அவர் ஒரு ஆணுறையையும் கூட அணிந்து கொண்டிருந்தார்.

உடனே அவன், ''பங்குத்தந்தையே, இப்படி ஒரே சீராக ஓடிவரும்போது நீங்கள் எப்போதும் ஆணுறை அணிந்து கொண்டுதான் ஓடுவீர்களா?'' என்று கேட்டான்.

அதற்கு அந்த பிஷப், ''எப்போதும் கிடையாது; இப்படி மழை பெய்து கொண்டிருக்கும்போது மட்டுமே,'' என்று பதிலளித்தார்.

இப்படி நீங்கள் அதிகம் கவனிப்பவராக இருந்தால், இது போன்ற நகைச்சுவைகளை நீங்கள் அதிகம் காண்பீர்கள். அந்த அளவுக்கு உங்களைச் சுற்றிலும் விஷயங்கள் நடக்கின்றன. அந்த அளவுக்கு முட்டாள்தனமான, நகைப்புக்குரிய காரியங்கள் நடந்து கொண்டிருக்கின்றன. ஆனால் ஒரு புத்தர் சிரிக்கமாட்டார். ஏனெனில் ஒரு நாளில் இருபத்துநான்கு மணி நேரமும், அவரது தெள்ளத்தெளிவான பார்வையினால் அவரது உயிரின் ஒவ்வொரு அணுவும் சிரித்துக் கொண்டே இருக்கும். அவர், சத்தம் போட்டு சிரிக்க வேண்டிய அவசியம் கிடையாது. அமைதியாக அவர் சிரிப்பார். அதுதான் சிரிக்காமல் சிரித்தல்.

எனவே, நீங்கள் பற்றற்ற நிலையில் இருந்துவிட்டால், அற்பமான விஷயங்களின் மீதும்கூட மக்கள் எவ்வாறு பற்றுதலுடன் இருக்கிறார்கள் என்பதையும், மேலும் அவர்கள் எவ்வாறு கஷ்டப்படுகிறார்கள் என்பதையும், உங்களால் கண்டு கொள்ள முடியும். மேலும் நீங்களும் கூட உங்களைப் பார்த்து சிரித்துக் கொள்வீர்கள். ஏனெனில் நீங்களும் கூட முன்பு அதே படகில்தான் சவாரி செய்தீர்கள். எனவே நிச்சயமாக பற்றற்ற நிலைதான் பாதையின் சாராம்சமாகும். *மேலும் அதில் பயணிப்ப வர்களின் இறுதி குறிக்கோள் உருவத்தோற்றங்களில் இருந்து விடுதலை அடைவதாகும்.*

நீங்கள் இந்த உலகில் என்ன காண்கிறீர்களோ அது உண்மை யான நிலை அல்ல. அது வெறும் தோற்றம் மட்டுமேயாகும். அந்த தோற்றத்தின், அந்த முகமூடியின் பின்னால் ஆழத்தில் தான் உண்மைநிலை இருக்கிறது. ஆகவே நீங்கள் உண்மை நிலையை அறிந்து கொள்ளவேண்டும் என்றால் நீங்கள் உருவத் தோற்றங் களில் இருந்து விடுதலை பெற வேண்டும். ஆனால் உங்களது

எல்லாப் பற்றுதல்களும் உங்களைத் தடுத்து விடுகிறது; நீங்கள் முகமூடியின் மேல் பற்று கொண்டு விடுகிறீர்கள். நாம் அபூர்வமாகவே வளர்ச்சி அடைந்து, பக்குவம் அடைந்தவர்கள் ஆகிறோம். நாம் வெறுமனே நமது விளையாட்டு பொம்மைகளை மாற்றிக் கொண்டே போகிறோம். நாம் குழந்தைகளாகவே இருக்கிறோம்; நாம் நமது கரடி பொம்மைகளை மாற்றிக் கொண்டே போகிறோம். ரயில் நிலையங்களிலும், விமான நிலையங்களிலும், சிறு குழந்தைகள் தங்களது கரடி பொம்மைகளை இழுத்துக் கொண்டு செல்வதை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அவை அசிங்கமாகவும், அழுக்கடைந்தும் இருக்கும். ஆனால் குழந்தைகளுக்கு அவை மிகவும் முக்கியமானவை. அந்த பொம்மைகள் இல்லாமல் அவர்களால் தூங்கமுடியாது; அந்த கரடி பொம்மை தான் அவர்களின் தோழன். அவர்களுக்கு வயதாகும்போது அந்த கரடி பொம்மையை அவர்கள் கைவிட்டு விடுவார்கள். ஆனால் வேறு ஒரு கரடி பொம்மையை கண்டு கொண்ட பின்னர் மட்டுமே அவர்கள் இதை கைவிடுவார்கள். அந்த கரடி பொம்மையின் வடிவம் எப்படி உள்ளது என்பது ஒரு பெரிய விஷயம் அல்ல. அந்த கரடி பொம்மையானது பணமாகக் கூட இருக்க முடியும்.

என்னுடைய கிராமத்தில் எனக்கு ஒருவரைத் தெரியும். அவரை நான் ஒருபோதும் மறந்ததில்லை. மேலும் அவரை ஒருபோதும் மறக்கவும்; முடியாது என்று நினைக்கிறேன். அவர் தங்கநகைகள் செய்பவர். அவர் பெரிய பணக்காரர் ஆனால் மிகவும் நகைப்புக்குரிய வகையில் பேசுவதை வழக்கமாகக் கொண்டிருந்தார். அவர் தொடர்ந்து திக்குவாயோடு பேசுவார். மேலும் அவரது விநோதமான கருத்தைப் பற்றி அவர் தற்பெருமையாகப் பேசுவது வழக்கம். "எனது சட்டைப்பையில் ஒரு நூறு ரூபாய் கூட இல்லை என்றால் நான் சிறுநீர் கூட கழிக்கமாட்டேன்," என்று பெருமையாகக் கூறுவார். அந்த கிராமம் முழுவதும் அவர் புகழ்பெற்றவராக இருந்தார். சட்டைப்பையில் நூறு ரூபாய் இருந்தால்தான் சிறுநீரே கழிப்பாராம், என்ன மாபெரும் எண்ணம்! அவர் தனது பணக்காரத்தனத்தை காட்டு வதற்கு ஒரு விநோதமான வழியைக் கண்டு கொண்டிருக்கிறார்.

யாருக்கும் இது போன்றதொரு எண்ணம் இருந்திருக்காது என்று நான் நினைக்கிறேன். அந்த அளவுக்கு யாரிடமும் காப்பி அடிக்காமல் அசல் எண்ணமாக இருக்கிறது. ஆனால் இது சிரிக்கும்படியாக உள்ளது.

அந்தக் காலத்தில் ரூபாய் நோட்டுக்கள் கிடையாது. எனவே அவர் தங்க நாணயங்களாக அவர் நூறு ரூபாயை எடுத்துச் செல்வார். அந்த அளவுக்கு அவரது சட்டைப்பை கனமாக இருக்கும். மக்கள் அவரிடம், ''நீங்கள் எங்கு செல்கிறீர்கள்? நீங்கள் உங்களது பணத்தை எண்ணிப் பார்த்து விட்டீர்களா?'' என்று கேட்பார்கள், ஏனெனில் அவரிடம் தொண்ணூற்று ஒன்பது ரூபாய் மட்டுமே இருந்து அவர் சிறுநீர் கழிக்க விரும்பினால் உங்களால் சிறுநீர் கழிக்க முடியாது, என்று கூறுவார்கள். அவரும் உடனடியாக பணத்தை எண்ணிப்பார்த்துவிட்டு,'' அதில் பிரச்சினையே கிடையாது, நூறு ரூபாய் கண்டிப்பாக இருக்கும். அது இல்லாமல், சிறுநீர் கழிப்பது போன்ற எளிய காரியத்தைக்கூட என்னால் செய்ய முடியாது. அப்படி இருக்கும் போது என்னால் எப்படி பெரிய காரியங்களைச் செய்ய முடியும்?'' என்று கூறுவார். அதுதான் அவரது கரடி பொம்மை. அவர் அந்த நூறு ரூபாய் பணத்துடன் தான் தூங்குவார்.

நீங்கள் விழிப்புணர்வுடன் இல்லை என்பதால் உங்களுக்கு தெரியவில்லை. ஆனால் நீங்கள் கொஞ்சம் உற்று கவனித்தால் உங்களது கரடி பொம்மை என்ன என்பதை உங்களால் கண்டுகொள்ள முடியும்.

இந்த உலகில் உள்ள உருவத்தோற்றங்கள் எல்லாம், இந்த உலகின் உண்மை நிலையையும், உங்களது சொந்த உயிர் உணர்வையும் கண்டு கொள்ள விடாமல் தடுத்துக் கொண்டு இருக்கிறது. என்ன தோற்றமாக உள்ளதோ அது உண்மைநிலை அல்ல. உண்மைநிலை என்பது உருவத்தோற்றங்களுக்கு பின்னால் மறைந்துள்ளது. எனவே நீங்கள் அந்த உண்மை நிலையோடு உங்களை ஒத்திசைத்துக் கொள்ளாவிட்டால், வெறும் கனவுப் பொருள்களான அந்த உருவத்தோற்றங்கள் உங்களை இடைவிடாது துன்புறுத்திக் கொண்டே இருக்கும். ஆனால்

ஒவ்வொருவரும் அந்த வேதனையை, அந்த துன்பத்தை உணர்ந்து கொண்டுதான் இருக்கிறார்கள் ஆனால் அதோடு வாழ்ந்து கொண்டுதான் உள்ளனர். ஏனெனில் அதை கைவிட்டு விடுவதற்கான எந்த ஒரு வழியும் இருப்பதாகத் தெரியவில்லை.

போதிதருமர்; உங்களுக்கு அந்த வழியைக் கூறுகிறார், மேலும் அது எல்லா மதங்களின் முக்கியமான வழியாகவும் உள்ளது. அவை பற்றற்ற நிலை, உருவத் தோற்றங்களில் இருந்து விடுதலை ஆகியவையாகும். *''பற்றற்ற நிலை என்பது மெய்ஞ் ஞானமாக உள்ளது. ஏனெனில் அது உருவத் தோற்றங்களைப் புறந்தள்ளி விடுகிறது'' என்று சூத்திரங்கள் கூறுகின்றன. பேராசை, கோபம், மாயை ஆகியவை எல்லைகளாக உள்ளன.*

இந்த மூன்று எல்லைகளையும் நீங்கள் கவனிக்க வேண்டும். ஏனெனில் இவைகள் தான் தடைகள். மெய்ஞ்ஞானத்திற்கான மூன்று தடைகள். போதிதருமர் மிகவும் சுருக்கமாக கூறுகிறார். அவர் தத்துவார்த்த விவாதங்களுக்குள் செல்வதில்லை. அவர் வெறுமனே உண்மையை எடுத்துக்கூறுகிறார். அதுதான் அவரது அழகு. ஒட்டுமொத்த மதத்தையும், அதிலிருந்து வெளியே வருவதற்கான வழியையும் அவர் ஒரு சில வார்த்தைகளில் சுருக்கி விட்டார். பேராசை என்பது உங்களது கிளர்ச்சி.

ஏப்போதுமே, இன்னும் அதிகம் வேண்டும் என்கிற ஆசைதான் பேராசை. பேராசை ஒருபோதும் நிற்பதில்லை; அது இன்னும் அதிகம் வேண்டும் என்று கேட்டுக் கொண்டே போகும். மேலும் அது இன்னும் அதிகம் வேண்டும் என்று கேட்டுக் கொண்டே போவதால் நீங்கள் எப்போதுமே துன்பத்தில் இருப்பீர்கள். உங்களிடம் என்ன உள்ளதோ, அதை உங்களால் சந்தோஷமாக அனுபவிக்க முடியாது. ஏனெனில் நீங்கள் அதைவிட அதிகமாக வைத்திருக்கவில்லை. ஆனால் நீங்கள் அதைவிட அதிகம் அடைந்துவிடுகின்ற நேரத்தில், உங்களது பேராசையானது உங்களை விடவும் முன்னால் சென்றிருக்கும். அது எப்போதுமே இன்னும் அதிகம் வேண்டும் என்று கேட்டுக் கொண்டே உங்களுக்கு முன்னால் இருக்கும்.

கல்கத்தாவில் ஒரு மிகப்பெரிய பணக்கார குடும்பத்தில் நான் தங்குவது வழக்கம். விமானநிலையத்தில் இருந்து என்னை அழைத்துச் செல்வதற்கு கணவன், மனைவி இருவரும் வருவது வழக்கம். கணவர் எப்போதுமே சந்தோஷமாக இருக்கிற ஒரு மனிதர். ஆனால் ஒருமுறை அவர் மிகவும் சோகமாக இருப் பதைக் கண்டேன். காரை ஓட்டிச் சென்றார். ஆனால் மிகவும் சோகமாக இருந்தார்.

நான் அவரது மனைவியிடம், ''என்ன விஷயம்?'' என்று கேட்டேன். ஏனெனில் அவர் எப்போதுமே கலகலப்பாக பேசிக்கொண்டு சந்தோஷமாக இருப்பது வழக்கம். அவரது மனைவி சிரித்தார், உடனே அவளது கணவர் மிகவும் கோபத்துடனும், சிடுசிடுப்புடனும் மனைவியைப் பார்த்தார். உடனே மனைவி கணவரைப் பார்த்து, ''அவர் உங்களைப் பற்றிதான் கேட்கிறார். எனவே அதைப் பற்றி கூறவேண்டிய முழுப்பொறுப்பும் உங்களுடையது என்று நான் கூறுகிறேன். ஆனால் நான் ஏதோ பாவம் செய்துவிட்டவள் போன்று நீங்கள் என்னை பார்க்கிறீர்களே,'' என்று கூறிவிட்டு, என்னிடம், ''அவர் சோகமாக இருக்கிறார் ஏனெனில் அவர் ஐந்து லட்ச ரூபாயை இழந்துவிட்டார்,'' என்று கூறினார். நான் அவரது மனைவியிடம், ''உங்களது கணவர் ஐந்து லட்ச ரூபாயை இழந்துவிட்டார். ஆனால் நீங்களோ சிரித்துக் கொண்டு இருக்கிறீர்களே?'' என்று கேட்டேன்.

அதற்கு அவரது மனைவி, ''நான் சிரிக்கிறேன், ஏனெனில் உண்மையில் அவர் ஐந்து லட்ச ரூபாய் லாபம் அடைந்து இருக்கிறார். ஆனால் அவர் பத்து லட்ச ரூபாய் லாபம் கிடைக்கும் என்று எதிர்பார்த்தார். ஆனால் இதில் உள்ள சிக்கல் என்னவென்றால், வியாபாரத்தில் தான் ஐந்து லட்ச ரூபாயை சம்பாதித்து இருக்கிறோம் என்பதை அவரால் புரிந்துகொள்ள முடியவில்லை. அவர் பத்து லட்ச ரூபாய் கிடைக்கும் என்று எண்ணிக்கொண்டிருந்ததால் மீதி ஐந்து லட்சம் எப்படி கிடைக்காமல் போயிற்று என்பது பற்றி கவலைப்பட்டுக்கொண்டு இருக்கிறார். எனவே அவருக்கு போதுமான லாபம் கிடைத்தும்கூட அவர் சந்தோஷமாக இல்லை,'' என்று கூறினார்.

தான் ஐந்து லட்ச ரூபாய் நஷ்டம் அடைந்து விட்டதுதான் அவரது கவலை. ஆனால் ஒரு பைசா கூட அவர் நஷ்டம் அடையவில்லை. எனவே நான் அவரிடம், ''என்ன விஷயம்?'' என்று கேட்டேன்.

அதற்கு அவர், ''எனது மனைவி சொல்வது சரிதான், ஆனால் நான் உண்மையிலேயே வருத்தப்படுகிறேன். இந்த வியா பாரத்தில் நிச்சயம் பத்து லட்சம் கிடைத்திருக்கும். அதற்கு அதிகமாக கூட கிடைத்திருக்கும். ஆனால் ஐந்து லட்சம்; மட்டுமே கிடைத்தது. எனவே நான் இழந்துவிட்ட அந்த ஐந்து லட்சத்தை என்னால் மறக்க முடியாது,'' என்று கூறினார்.

இப்போது, எதிர்பார்ப்புகளை வைத்துக்கொண்டு சிந்திக்கின்ற ஒரு மனிதன் சந்தோஷமாக, மகிழ்ச்சியாக இருக்க முடியும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? உண்மை நிலை எவ்வளவு அனுமதிக்கிறதோ அதை விடவும் கூடுதலாகவே உங்களது எதிர்பார்ப்பு எப்போதும் இருக்கிறது. எனவே, எப்போதுமே தோற்றுவிட்டோம் என்கிற உணர்வு இருக்கிறது. ஒரு சோகம் எப்போதுமே உங்களது ஆன்மாவின் எங்கோ ஒரு இடத்தில் ஒளிந்து கொண்டு இருக்கிறது.

பேராசை என்பது அப்போது உள்ள நிலை குறித்து கிளர்ச்சியான மனப்பாங்குடன் இருப்பதாகும். உங்களால் எவ்வளவு பிடுங்க முடியுமோ அவ்வளவு பிடுங்குங்கள், மேலும் மேலும் பிடுங்கிக் கொண்டே செல்லுங்கள். மேலும் மேலும் அதிகம் பிடுங்குவதிலேயே உங்களது ஒட்டுமொத்த வாழ் வையும், ஒட்டுமொத்த புத்திசாலித்தனத்தையும் வீணாக்குங்கள். ஆனால் மரணம் என்பது ஒருசிறு நிமிடம் கூட தாமதிக்காது. அது எப்போதுமே சரியான நேரத்திற்கு வந்துவிடும், அப்போது நீங்கள் உங்களது வாழ்க்கையை வீணாக்கி நீங்கள் பிடுங்கி வைத்துள்ளவற்றை எல்லாம் நீங்கள் இங்கேயே விட்டுச்செல்ல வேண்டியதிருக்கும்.

போதிதருமர் கூறிய கதை இது. ஒரு மனிதன் மிகவும் பேராசை பிடித்தவனாக இருந்தான். அவனது மனைவி சாகும் தருவாயில் இருந்தபோது அவனது நண்பர்கள், ''இந்த நேரத்தில்

நீ ஒரு வைத்தியரைக் கூப்பிட்டு அவருக்கு சிகிச்சை அளிக்கலாம் அல்லவா,'' என்று கேட்டனர்.

''அதற்கு அதிகம் செலவாகும்,'' என்றான் அவன்.

உடனே அவர்கள், ''இது அசிங்கமானதாகவும், மனிதாபி மானம் அற்றதாகவும் உள்ளது. உனது மனைவி இறந்து கொண்டிருக்கிறாள் ஆனால் நீயோ மருத்துவருக்கு பணம் செலவழிப்பதைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்கிறாய்!'' என்று கேட்டனர்.

அதற்கு அந்த மனிதன், ''மனைவிகளால் அதிகம் ஒன்றும் கிடைத்துவிடாது. அவள் இறந்துவிட்டால் நான் மீண்டும் திருமணம் செய்து கொள்ள முடியும். மேலும் வாழ்வும், சாவும் மனிதனின் கைகளில் இல்லை, அவை விதியினால் தீர்மானிக்கப் படுகின்றன. அவள் மரணமடையவேண்டும் என்று இருந்தால் நான் மருத்துவரை அழைத்தாலும் அல்லது அழைக்காவிட்டாலும் கூட அவள் இறந்துவிடத்தான் போகிறாள். அப்படி இருக்க பணத்தை ஏன் வீணாக்க வேண்டும்? அவர் உயிர் பிழைத்து வாழ வேண்டும் என்று இருந்தால் அவள் வாழ்வாள். எப்படிப் பார்த்தாலும் மருத்துவரிடம் காட்டுவது முற்றிலும் தேவை யற்றது,'' என்று கூறினான்.

இதைக்கேட்ட நண்பர்கள் அவரிடம், ''நீ இந்த அளவுக்கு பேராசைப் பிடித்தவனாக இருப்பாய் என்று நாங்கள் ஒருபோதும் நினைத்தது கிடையாது. நீ பேராசைப் பிடித்தவன் என்று கேள்விப்பட்டிருக்கிறோம். அதற்காக இப்படியா! நீ சாகும்போது இந்த பணத்தை எல்லாம் நீ உன்னுடன் எடுத்து செல்லமுடியும் என்று நினைக்கிறாயா?'' என்று கேட்டனர்.

உடனே அவன், ''உண்மைதான், அதற்கு நான் ஒருதிட்டம் வைத்திருக்கிறேன்,'' என்றான். நண்பர்களால் இவன் கூறியதை நம்பமுடியவில்லை.

அதற்கு அவன், ''நான் இறப்பதற்கு முன்பு ஒரு படகில் என்னுடைய பணத்தை எல்லாம் எடுத்துக்கொண்டு, கடலின்

மிகுந்த ஆழத்திற்கு சென்று என்னுடைய இந்த பணத்துடன் குதித்துவிடுவேன்,'' என்றான்.

நண்பர்களால் தங்களது காதுகளை நம்பமுடியவில்லை. உடனே அவர்கள், ''உனக்கு பைத்தியம் பிடித்துவிட்டதா என்ன?அப்படியே இறந்தாலும் கூட உனது பணம் எல்லாம் கடலில் தான் கிடக்கும், நீ தனியாகத் தானே போகமுடியும்,'' என்று கூறினர். வேறு யாரும் அந்த பணத்தை அனுபவிக்க மாட்டார்கள் என்கிற திருப்தியாவது இருக்கும்.

இதுபோன்று விதம்விதமாக பேராசை பிடித்த மக்களை நீங்கள் காணலாம். மேலும் உங்களுக்குள்ளும் கூட எல்லா வகையான பேராசையும் இருப்பதை நீங்களும் கண்டு கொள்ள முடியும். பேராசையானது நிறைவுபெறாதபோது கோபம் வருகிறது, விரக்தி வருகிறது. அப்போது நீங்கள் இந்த உலகின்மீது கோபம் கொள்கிறீர்கள், உங்கள் மீதே உங்களுக்கு கோபம் வருகிறது, எல்லாரிடமும் நீங்கள் கோபப்படுவீர்கள்.

இதை நீங்கள் வயதான மனிதர்களிடம் காணமுடியும். வயதானவர்கள் ஏன் எப்போதும் எரிந்து விழுகிறார்கள்? அவர்கள் முன்னால் நிற்பது ஏன் கடினமானதாக உள்ளது? அவர்கள் விரக்தி அடைந்த மக்கள்; மேலும்மேலும் சேர்ப்ப திலேயே அவர்கள் தங்களின் வாழ்க்கையை வீணாக்கியவர்கள். ஆனால் இந்த அதிகம் என்பது ஒருபோதும் திருப்திப்படாது. இப்போது அவர்கள் வாழ்க்கை மீது கோபப்படுவார்கள், எனவே எந்த ஒரு விஷயம் கிடைத்தாலும் போதும் அதை வைத்துக் கொண்டு அவர்கள் கோபப்படுவார்கள். பேராசை தான் மூல காரணம். மேலும் அது நிறைவேறாத போது அது உங்களை கோபம், விரக்தி, எரிச்சல், தோல்வி ஆகியவற்றில் விட்டுச் செல்கிறது.

மேலும் உங்களது கோபம், விரக்தி மற்றும் தோல்வியில் மூன்றாவது ஒரு விஷயம் எழுகிறது. அதுதான் மாயை. (மாயை என்பது ஒருவிதமான ஆறுதல். உங்களை எப்படியாவது ஒருங்கிணைத்து வைப்பதற்கான ஒருவழி தான் மாயை.) பண்டித ஜவஹர்லால் நேரு இந்தியாவின் பிரதமராக இருந்தபோது.

தாங்களும் பண்டித ஜவஹர்லால் நேருதான் என்று நம்பிக் கொண்டிருந்தவர்களில் குறைந்தபட்சம் பத்து பேரையாவது எனக்கு தெரியும். குறைந்தபட்சம் ஒருவரை எனக்கு தனிப்பட்டமுறையில் தெரியும். ஏனெனில் அவர் பக்கத்து மாவட்டத்தில் வசித்தார் மேலும் அந்த நகரத்தில் உள்ள கல்லூரிகளில் சொற்பொழிவாற்ற நான் போவது வழக்கம். அந்த மனிதரை எனக்கு மிகவும் பிடிக்கும் ஏனெனில் அவர் மிகச்சரியாக ஜவஹர்லால் நேரு போன்றே உடைகளை அணிவது வழக்கம். காந்தி குல்லாவோடு, கையினால் நெய்த கதர் ஆடை, அதன்மீது ஜவஹர் ஜாக்கட் ஒன்று. மேலும் அவர் ஜவஹர்லால் போன்றே பேசுவார்.

அவரைப் பார்த்து எல்லாரும் சிரிப்பார்கள். ஆனால் அவர் ஒருபோதும் கவலைப்பட்டதில்லை. அவர் என்னிடம், ''இந்த மக்கள் அனைவரும் முட்டாள்கள்,'' என்று கூறுவார். அந்த நகரத்திற்கு அருகில் இருந்த, ஆயிரக்கணக்கான மான்கள் நிறைந்த அழகான காட்டுப்பகுதியாகிய கான்காகிஸ்லி என்கிற அழகான இடத்திற்கு போகவிரும்பினால் அவர் அங்கு தந்தி அனுப்புவது வழக்கம். ''பண்டித ஜவஹர்லால் நேரு வருகிறார்,'' என்று மாவட்ட ஆட்சித்தலைவருக்கு தந்தி ஒன்றை அனுப்பி விடுவது வழக்கம்.

இப்படி அவர் அநேகமுறை மக்களை ஏமாற்றி இருக்கிறார். பண்டிட் ஜவஹர்லால் நேரு வருகிறார் என்று அரசு பயணியர் விடுதி காலி செய்யப்பட்டு, சுத்தப்படுத்தப்படும். அதன் பின்னர்தான் இந்த மனிதர் ஒரு போலி என்பதை அவர்கள் கண்டு கொள்ள முடிந்தது. இறுதியில் அவர் பைத்தியக்கார விடுதியில் சேர்க்கப்பட்டார்.

இது ஒன்றும் புதிய விஷயம் அல்ல. இங்கிலாந்தில் வின்ஸ்டன் சர்ச்சில் உயிரோடு இருந்த போதே அங்கு குறைந்தபட்சம் மேலும் மூன்று வின்ஸ்டன் சர்ச்சில்கள் இருந்தனர். அவர்கள் தங்களை வின்ஸ்டன் சர்ச்சில் என்று முழுமையாக நம்பிக்கொண்டு இருந்தனர். காலிஃப் ஒமரின் வாழ்க்கையில் பதிவான வழக்கு ஒன்று உள்ளது. கடவுளிடம்

இருந்து நான் ஒரு புதிய செய்தியோடு வந்திருக்கிறேன் என்று அறிவித்துக் கொண்டிருந்த ஒரு ஆள் அவர் முன்பு கொண்டு வந்து நிறுத்தப்பட்டார். அந்த மனிதர், ''இப்போது முகமது நபிகளின் செய்திகள் காலம் கடந்தவை ஆகிவிட்டன. இதுதான் நேரம், ஏனெனில் ஓராயிரம் ஆண்டுகள் கடந்துவிட்டன. எல்லாமே மாறிவிட்டது. எனவே கடவுள் ஒரு புதிய செய்தியுடன் என்னை அவரது தூதராக அனுப்பி இருக்கிறார்,'' என்று கூறிக் கொண்டிருந்தார்.

முகமதியர்கள் மிகவும் மதவெறி பிடித்தவர்கள். இந்த மனிதனை ஏழு நாட்கள் துன்புறுத்தும்படி ஓமர் உத்தரவிட்டார். ''இந்த மனிதரை நிர்வாணமாக ஒரு தூணில் கட்டிவைத்து அடியுங்கள், மேலும் சாப்பிடுவதற்கு அவருக்கு எதுவும் கொடுக்காதீர்கள். ஏழு நாட்களுக்கு பிறகு நான் வந்து பார்க்கிறேன்'' என்று ஓமர் கூறினார்.

எனவே ஏழு நாட்களுக்கு பிறகு அவர் அங்கு சென்றார். அந்த மனிதர் கிட்டத்தட்ட இறந்து கொண்டிருந்தார். அதிக ரத்தம் வழிந்து கொண்டிருந்தது, ஏனெனில் அவரை இடைவிடாமல் அடித்துக்கொண்டு இருந்தனர். மேலும் உணவும் கொடுக்கப்பட வில்லை. ஓமர் அவரிடம், ''இப்போது நீ என்ன நினைக்கிறாய்? உனது மனதை மாற்றிக்கொண்டு விட்டாயா அல்லது இல்லையா?'' என்று கேட்டார்.

அந்த மனிதன் சிரித்துவிட்டு, ''எனது மனதை மாற்றி விடுவதா? நான் கடவுளிடம் இருந்து வரும்போது அவர் என்னிடம், ''எனது தீர்க்கதரிசிகள் எப்போதுமே துன்புறுத்தப்படு வார்கள் என்பதை நினைவில் கொள்;'' என்று கூறி இருக்கிறார். நீங்கள் துன்புறுத்தியது நான் ஒரு இறைதூதர் என்பதை முழுமையாக நிரூபித்துவிட்டது.

அந்த நேரத்தில், தன்னை ஒரு கடவுள் என்று அறிவித்துக் கொண்டிருந்த ஒரு மனிதன் அடுத்த தூணில் கிட்டத்தட்ட ஒரு மாதமாக கட்டப்பட்டிருந்துடன். ஓமரைப் பார்த்து, ''அந்த முட்டாள் சொல்வதைக் கேட்காதீர்கள். முகமதுவிற்கு பின்னர் நான் எந்த ஒரு இறைதூதரையும் அனுப்பவில்லை. முகமது

நபிகள் மட்டுமே எனது ஒரே இறைதூதர் மேலும் இந்த மனிதன் ஒரு ஏமாற்றுக்காரன்,'' என்று கத்தினான்.

இப்போது இப்படிப்பட்ட மக்களை பற்றி என்ன சொல்வது? மேலும் இவர்கள் விதிவிலக்கானவர்கள் அல்லர். ஒவ்வொருவரும் ஏதாவது ஒரு மாயையில் இருக்கிறோம். ஒவ்வொருவரும் அவர் எதுவாக இல்லையோ அதையே தானாக இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறார். ஆனால் இந்த கற்பனைகள், இயந்திரத்தில் உராய்வை தடுப்பதற்கு ஊற்றப்படும் மசகு எண்ணெய் போன்று உதவுகின்றன. உங்களது வாழ்க்கை எப்படியோ நகர்ந்து செல்வதற்கு அது உதவுகிறது.

இவை எல்லாம் மிகப்பெரிய மன ஆறுதல்கள். உங்களால் பிரதமராக ஆகமுடியவில்லை என்றால் குறைந்தபட்சம் நீங்கள் ஒரு பிரதமர் என்று கற்பனையாவது செய்து கொள்ள முடியும். நீங்கள் அதிக பணம் படைத்தவராக ஆக முடியாவிட்டால், நீங்கள் தான் பெரிய பணக்காரன் என்று இன்னமும் நம்பிக் கொண்டிருக்க முடியும். உங்களது இந்த கற்பனைகளை யாரும் மாற்றிவிடாதபடிக்கு மிகவும் திடமானதாக நீங்கள் ஆக்கிக் கொள்ள முடியும்.

மனநோய் மருத்துவரிடம் ஒரு பைத்தியக்காரன் கொண்டு வரப்பட்டான். அவனது பைத்தியம் மிகவும் சிறப்பானது; அவனது பைத்தியம் என்னவென்றால் அவன் தான் இறந்து விட்டதாக எண்ணிக்கொண்டு இருந்ததுதான் ஆகும். எனவே அவனது குடும்பத்தினர், அவனிடம் கடைக்குப்போய் ஏதாவது வாங்கிக்கொண்டு வரும்படி கூறும்போது, அவர்களிடம் அவன், ''நீங்கள் புரிந்துகொள்ள மாட்டேன் என்கிறீர்கள். இறந்துவிட்ட மக்கள் கடைக்குப்போக மாட்டார்கள். அவர்கள் கடைக்குப்போய் எதையும் வாங்க மாட்டார்கள்,'' என்று கூறுவான்.

அவன் முழுமையான உயிர்த்துடிப்புடன் இருக்கிறான் என்று அவனைத் தூண்டுவதற்கு எல்லா வழிகளிலும் கடினமாக முயற்சி செய்தனர். ஆனால் அவனோ, ''நான் இறந்துவிட்டேன் என்று எனக்கு தெரியும்போது உங்களை நான் எப்படி நம்புவது?'' என்று கேட்பான்.

இறுதியாக அவர்கள் அவனை மனநோய் மருத்துவரிடம் கொண்டு வந்தனர். அந்த மனநோய் மருத்துவர் அவர்களிடம், ''கவலைப்படாதீர்கள், நான் அவனைக் குணப்படுத்தி விடுகிறேன்,'' என்று கூறினார். அவர் அந்த பைத்தியத்திடம்,'' இறந்து விட்ட மனிதர்களுக்கு இரத்தம் சிந்துவதுண்டா?'' என்று கேட்டார்.

உடனே அந்த பைத்தியக்காரன், ''கிடையாது. இறந்த மனிதர்கள் ரத்தம் சிந்துவதில்லை,'' என்றான்.

எனவே அந்த மனநோய் மருத்துவர், ''ஒரு சின்ன பரிசோதனை செய்து பார்க்க வேண்டும்,'' என்றார். அவர் ஒரு கத்தியை எடுத்து அந்த இறந்துவிட்ட மனிதனின் கைவிரல்களில் கொஞ்சம் வெட்டினார்; உடனே ரத்தம் வெளியே பாய்ந்து வந்தது. இந்த மருத்துவர், ஒரு நொடியில் ஒட்டுமொத்த சூழ்நிலையுமே மாற்றிவிட்டாரே என்று அந்த குடும்பத்தினர் மிகவும் மகிழ்ச்சி அடைந்தனர். ஆனால் கற்பனைகளை அவ்வளவு எளிதில் ஒழித்துவிட முடியாது என்பதை அவர்கள் ஒருபோதும் அறிந்திருக்க வில்லை.

அந்த பைத்தியக்காரன் சிரித்தான். மருத்துவர் அவனிடம், ''இந்த ரத்தம், நீ இறக்கவில்லை என்பதைக் காட்டுகிறது,'' என்று கூறினார்.

உடனே அவன், ''இல்லை, இப்போது வடிகின்ற ரத்தமானது, இறந்துவிட்ட மனிதர்கள் ரத்தம் சிந்தமாட்டார்கள் என்கிற பழமொழியானது தவறு என்பதைக் காட்டுகிறது; அவர்களும் ரத்தம் சிந்துவார்கள். நானே அதற்கு உதாராணம். இப்போது நீங்கள் என்ன செய்ய முடியும்? அந்த பழமொழி தான் தவறானது. மேலும் அது தவறானது என்பதற்கு நானே நிரூபணம் ஆகிவிட்டேன். இறந்துவிட்ட மனிதர்களும் கூட ரத்தம் சிந்துவார்கள்!'' என்று கூறினான்.

மாயைகள், கற்பனைகள், உங்களுக்குள் மிகவும் ஆழமாக தங்கிவிடுகின்றன. மேலும் நீங்கள் இடைவிடாமல் விரக்தியில் வாழ்வது மிகவும் கடினமான காரியம் என்பதே அதற்கு

காரணமாகும். நீங்கள் பெற்றிருக்காத விஷயங்களில் நீங்கள் நம்பிக்கை கொள்ள ஆரம்பிக்கிறீர்கள். நீங்கள் உங்களது சொந்த மனதிற்குள் உற்றுநோக்கி எத்தனை விஷயங்கள் கற்பனைகள், மாயைகள் என்பதை நீங்கள் காண வேண்டும். ''பேராசை, *கோபம், மாயை ஆகியவை எல்லைகளாக உள்ளன. இந்த மூன்று எல்லைகளையும் விட்டுவிலகுதல் என்பதற்கு பேராசை, கோபம், மாயை ஆகியவற்றில் இருந்து திரும்பி நல்ஒழுக்கம், தியானம் மற்றும் ஞானம் ஆகியவற்றிற்கு செல்லுதல் என்று அர்த்தம். நல்ஒழுக்கம், தியானம், ஞானம் ஆகியவை உண்மையில் மூன்று விஷயங்கள் அல்ல, ஆனால் மூன்று பெயர்கள் மட்டுமேயாகும்.*

மிகவும் சரியான விஷயம் தியானம் ஆகும். அது ஒருபக்கம் உங்களது வாழ்க்கையில் நல்ஒழுக்கத்தை கொண்டு வருகிறது; அடுத்தப் பக்கம் உங்களது வாழ்க்கையில் அது ஞானத்தைக் கொண்டு வருகிறது. ஆனால் ஞானத்தை நேரடியாக பெறுவதற்கு உங்களால் எதுவும் செய்ய முடியாது. அதே போன்று நல்ஒழுக்கத்தை பெறுவதற்கும் உங்களால் எதுவும் நேரடியாக செய்யமுடியாது. ஆனால் தியானத்திற்கு நீங்கள் நேரடியாக ஏதாவது செய்யலாம்; நீங்கள் நேரடியாக தியானம் செய்தால் அதன் பின்னர் நல்ஒழுக்கமும், ஞானமும் அதிலிருந்து கிடைக்கும் உபபொருள்கள் ஆகிவிடும். உங்களது செயல்களில் நல்ஒழுக்கம் இருக்கும் ஞானம் என்பது உங்களது புத்திசாலித்தனமாக, உங்களது விழிப்புணர்வாக, உங்களது இறுதி மெய்ஞ்ஞானமாக இருக்கும்.

*புத்தர்கள், இந்த மூன்று விஷங்களோடும் வாழ்ந்து கொண்டு தங்களை தூய்மையான தர்மத்தில் பேணி வளர்த்ததனால் மட்டுமே புத்தர்களாக ஆகி இருக்கிறார்கள்.*

கோபம், பேராசை, மாயை ஆகிய மூன்று விஷங்கள் குறித்து கவலைப்பட வேண்டாம் என்று போதிதருமர் கூறுகிறார். புத்தர்களும்கூட நீங்கள் கடந்து செல்கின்ற அதே அனுபவங் களோடு தான் வாழ்ந்து வந்திருக்கிறார்கள்; ஆனால் அவர்கள் தியானத்தின் மூலம் அவர்கள் தங்களை பேணி வளர்த்ததன்மூலம் அவர்கள் தங்களின் சுய இயல்பு குறித்த விழிப்புணர்வை

பெற்றுவிட்டதால் இந்த விஷங்கள் எல்லாம் மறைந்து விட்டன. அவர்கள் நச்சுமுறிவு மருந்தைக் கண்டு கொண்டுவிட்டனர். உங்களது வாழ்க்கையில் உள்ள எல்லா விஷங்களுக்கும் உரிய விஷமுறிவு மருந்து தியானமாகும். அதுவே உங்களது உண்மையான இயல்பை பேணி வளர்க்கிறது.

*கோபம், பேராசை, மாயை ஆகியவைதான் அந்த விஷங்கள், மாபெரும் வாகனம் எல்லா வாகனங்களையும் விட மிகவும் பெரியது.*

இதைத்தான் நான் ஒரு தப்பெண்ணம் என்று நான் அழைக்கிறேன். அவர் இடைவிடாமல் மகாயானம் தான் மிகப் பெரிய வாகனம் என்று வலியுறுத்துகிறார். மாபெரும் வாகனம் எல்லா வாகனங்களையும் விட மிகவும் பெரியது. அதுதான் எதையுமே பயன்படுத்தாமல் எல்லாவற்றையும் பயன்படுத்து கின்ற, பயணம் செய்யாமலேயே நாள் முழுவதும் பயணிக் கின்ற போதிசத்துவர்களின் போக்குவரத்து வாகனம். இப்படித் தான் புத்தர்களின் வாகனமும் இருக்கிறது. ''எந்த வாகனமும் புத்தர்களின் வாகனம் அல்ல'' என்று சூத்திரங்கள் கூறுகின்றன.

சாதாரணமான, தர்க்கவாதம் மிக்க மனதிற்கும் பகுத்தறி வோடு வாழ்க்கையைப் பார்க்கின்றவர்கள் யாருக்கும், இது ஒரு அர்த்தமற்ற வாக்குமூலமாகத் தெரியும். முதலில் அவர், இந்த மாபெரும் வாகனம் எல்லா வாகனங்களையும் விட மிகவும் பெரியது. இதுதான் எதையுமே பயன்படுத்தாமல், எல்லா வற்றையும் பயன்படுத்துகின்ற, பயணம் செய்யாமலேயே நாள் முழுவதும் பயணிக்கின்ற போதிசத்துவர்களின் போக்குவரத்து வாகனம், புத்தர்களின் வாகனமும் இப்படித்தான் இருக்கிறது என்று கூறுகிறார்.

ஆனால் அதன்பிறகு, ''எந்த வாகனமும் புத்தர்களின் வாகனம் அல்ல'' என்று சூத்திரங்கள் கூறுகின்றன,'' என்றும் கூறுகிறார். இது அவர் ஏற்கனவே கூறிய அதே வாக்குமூலம் போன்றதாகும். நடக்காமல் நடத்தல், செய்யாமல் செய்தல், பேசாமல் பேசுதல் போன்றதாகும். ஆகவே இதில் எந்த ஒரு முரண்பாடும் இல்லை. அதே வெளிப்படுத்துதலை அவர் இந்த

'வாகனம்' என்பதற்கும் பயன்படுத்துகிறார். எனவே மிகப்பெரிய வாகனம் என்பது ''வாகனம் இல்லாமை'' என்பதாகும். பஞ்ச பூதங்களின் ஒருங்கிணைப்பு குகைதான் ஜென்னின் முகப்பு கூடமாக உள்ளது என்று சூத்திரங்கள் கூறுகின்றன.

பஞ்ச பூதங்களின் ஒருங்கிணைப்பு என்பது இந்த உடலானது நிலம், காற்று, நெருப்பு, நீர் மற்றும் ஆகாயம் என்ற பஞ்ச பூதங்களால் உண்டாக்கப்பட்டுள்ளது என்பதைக் குறிக்கிறது. இந்த ஐந்து பொருள்களும் 'ஸ்கந்தாஸ்' அதாவது உங்களது உடல் உண்டாக்கப்பட்டுள்ள மூலப்பொருள்கள். இந்த பஞ்ச பூதங்களுக்கு அப்பால்தான் உங்களது பொக்கிஷமாகிய ஜென்னின் முகப்புக்கூடம் மறைந்துள்ளது. வெறுமனே இந்த பஞ்சபூதங்களால் உண்டாக்கப்பட்டுள்ள ஆலயத்திற்கு உள்ளே தான் உங்களது விழிப்புணர்வு என்னும் நெருப்பு உள்ளது.

இந்த உடல்தான் ஆலயம், மேலும் பேருணர்வுதான் அந்த ஆலயத்தில் உள்ள கடவுள்.

*அகக்கண் திறப்பது தான் மாபெரும் வாகனத்தின் வாசலாக உள்ளது. இதைவிட தெளிவானதாக என்ன இருக்கமுடியும்?*

நீங்கள் மேலும்மேலும் விழிப்புணர்வு உள்ளவராக ஆகிவிடும்போது, நீங்கள் மூன்றாவது கண்ணை பெற ஆரம்பித்துவிடுகிறீர்கள். இந்த இரண்டு கண்களும் வெளியே பார்க்கின்றன. அந்த மூன்றாவது கண் உள்முகமாகப் பார்க்கிறது.

மேலும் உங்களை நீங்களே காண்பது என்பது மிகப்பெரிய அனுபவம், ஏனெனில் நீங்கள் உங்களது அழகை கண்டுவிடும்போது, வெளி உலகில் உள்ள அழகுகள் எல்லாம் நிறம் வெளிறிப்போகின்றன. நீங்கள் உங்களது மாசற்ற தன்மையை கண்டுவிடும்போது, அதன்பிறகு வெளியில் உள்ள எல்லாமே மாசுபடிந்ததாக ஆகிவிடுகிறது. நீங்கள் உங்களுக்குள் உள்ள உங்களது தனச்சிறப்பை கண்டுகொண்டபின் ஒரு அழகான சூரிய உதயமோ அல்லது பிரமாண்டமான சூரிய அஸ்தமனமோ அல்லது நட்சத்திரங்கள் நிறைந்த ஒரு இரவு நேரத்து வானமோ, உங்களது ஆன்மாவின் கம்பீர அழகோடு

ஒப்பிடமுடியாததாக ஆகிவிடும். நீங்கள் தான் பரிணாம வளர்ச்சியின், ஒளியின், பேருணர்வின் மிக உயர்ந்த சிகரம்.

*எதைப் பற்றியும் நினைக்காமல் இருப்பதே ஜென். தியானம் என்பதற்கு எந்தஒரு எண்ணமும் இல்லாமல் வெறுமனே அமைதியாக இருத்தல் என்பதுதான் அர்த்தமாகும். இதை நீங்கள் அறிந்து கொண்டபின்னர், நடத்தல், நிற்றல், அமர்தல், படுத்தல் என்று நீங்கள் செய்கின்ற எல்லாமுமே ஜென்னாக இருக்கிறது.*

இது மிகவும் சிறப்பான வாக்குமூலம். ஒரு நாளில் இருபத்து நான்கு மணிநேரமும், உங்களது ஒட்டுமொத்த வாழ்க்கை யையுமே, ஒரு தியான அனுபவமாக ஆக்கிய வேறு எந்த மதமும் ஒருவேளை இல்லாமல் இருக்கலாம். காலையில் ஒரு மணிநேரமும், அல்லது இரவில் ஒருமணி நேரமும் தியானம் செய்தால் போதும் என்பதை ஜென் நம்புவதில்லை. அது தியானத்தை ஒரு தனிப்பட்ட, குறிப்பிட்ட செயலாக ஆக்குவது கிடையாது. தியானம் என்பது உங்களது உயிர் உணர்வின் ஒரு தன்மையாக ஆக வேண்டும் என்று அது விரும்புகிறது.

ஆகவே நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள், அதாவது நடத்தலா, அமர்தலா, நிற்றலா, கீழே படுத்தலா, விறகு வெட்டுதலா, கிணற்றில் இருந்து தண்ணீர் கொண்டு வருதலா, என்பது ஒரு பொருட்டாகாது. நீங்கள் எதைச் செய்தாலும், அதை அமைதியாகவும், சாந்தமாகவும், உங்களது மனதில் எந்த ஒரு கலக்குகின்ற எண்ணமும் இல்லாமல் செய்கிறீர்கள்.

அதன்பின்னர் உங்களது ஒட்டுமொத்த வாழ்க்கையுமே தியானமாக ஆகிவிடும். நீங்கள் அமைதியாக படுக்கச் செல்வீர்கள், அமைதியுடன் விழித்து எழுவீர்கள், மேலும் ஒருநாள் நீங்கள் ஆழ்ந்து தூங்குவதையும் கூட அறிந்து கொள்வீர்கள். எண்ணங்கள் மறைவது போல கனவுகளும் கூட மறைந்துவிடும். அதன்பின்னர் வட்டமானது பூர்த்தியாகி விடுகிறது.

ஜென்னிற்கு தியானம் என்பது இருபத்து நான்குமணி நேர வேலையாக இருக்க வேண்டும். நீங்கள் செய்ய வேண்டிய

அதிகப்படியான வேலை அல்ல தியானம். இது ஒரு ஞாயிற்று கிழமை மதம் அல்ல. ஆறுநாட்கள் நீங்கள் செய்ய விரும்பவதை எல்லாம் செய்யுங்கள் ஆனால் குறைந்தபட்சம் ஏழாவது நாளில், ஞாயிற்றுக்கிழமை மட்டுமாவது தேவாலயத்திற்கு நீங்கள் ஒருமணி நேரம் சென்று வந்தால் போதும். நீங்கள் ஒரு மிகப்பெரிய கிறிஸ்தவர் என்பது போன்றது அல்ல. அது முற்றிலும் அர்த்தமற்றது, தர்க்கவாதமற்றது. வெறுமனே தேவாலயத்திற்கு ஒருமணிநேரம் மட்டும் போய்விட்டு அதன் பின்னர் உங்களது சாதாரண வாழ்க்கையை, பேராசை, கோபம், மாயை ஆகியவற்றோடு வாழ்தல் உங்களை மாற்றிவிடாது. மேலும் எந்த ஒரு இயேசுவும் உங்களைக் காப்பாற்ற முடியாது.

இந்த கம்யூனில் உள்ள எனது மக்கள் கார்களில் ஒட்டு வதற்கான வாசகங்கள் அடங்கிய வாசகத்தை உருவாக்கி உள்ளனர். இயேசு காப்பாற்றுகிறார் (சேமிக்கிறார்), மோசஸ் முதலீடு செய்கிறார், ஒஷோ செலவு செய்கிறார். இதை நான் விரும்புகிறேன். சேமிப்பதில் என்ன விஷயம் உள்ளது? இயேசு ஏதோ ஒரு வங்கியாளர் போன்று தெரிகிறது. ஆனால் மோசஸ் முதலீடு செய்கிறார். மோசஸிற்கு எல்லாமே வியாபாரம்தான். ஆனால் என்னைப் பொறுத்தமட்டில் எல்லாப் பணமும் வெளியே எடுக்கப்படப் போகிறது. அது எடுக்கப்படுவதற்கு முன்பு அதை பயன்படுத்துங்கள், அதை செலவு செய்யுங்கள், அதை சந்தோஷமாக அனுபவியுங்கள். மரணம் அதை பறித்துக் கொண்டு செல்லும்வரை ஏன் காத்திருக்கிறீர்கள்? நிச்சயமாக இது முற்றிலும் சரியானது. ஒருமணி நேர மதமோ அல்லது ஒரு நாளில் ஐந்துமுறை தொழுகை செய்கின்ற முகமதிய மதமோ கூட உதவப்போவது கிடையாது.

மதம் என்பது உங்களது இதயத்துடிப்பு போன்று ஆக வேண்டும். தியானம் என்பது உங்களது சுவாசம் போன்று ஆகவேண்டும். நீங்கள் என்ன செய்து கொண்டிருந்தாலும், நீங்கள் சுவாசித்துக் கொண்டுதான் இருக்கிறீர்கள். சுவாசித்தல் என்பது தனிப்பட்ட ஒரு செயல் அல்ல. அதன்பிறகு மட்டுமே நீங்கள் தியானத்தின் தனிமையால் உங்களது உயிர் உணர்வின்

ஒவ்வொரு இழையிலும் கரைந்து போகிறீர்கள். மனம் என்பது வெறுமையானதாக உள்ளது என்பதை அறிதலே புத்தரைக் காண்பதாகும். பத்து திசைகளின் புத்தர்களும் மனம் என்பதை வைத்திருப்பதில்லை. மனம் அற்ற நிலையைக் காண்பதுதான் புத்தரைக் காண்பதாகும்.

சீடர்கள் தவறுதலாக குறிப்புகள் எடுத்து வந்துள்ளனர் என்று நான் வலியுறுத்தியதை நீங்கள் இப்போது காணலாம். இது போதிதருமரின் சரியான வாக்குமூலம். புத்தர்கள் மனம் அற்ற நிலையில் இருக்கின்றனர். மனம் அற்ற நிலையைக் காண்பது தான் புத்தரைக் காண்பதாகும். ஆனால் இந்த சூத்திரங்கள் ஓராயிரம் ஆண்டுகள் இருந்தும் கூட யாரும் இந்த முரண்பாட்டை கண்டு கொள்ளாதது மிகவும் விநோதமாக உள்ளது. ஒருவேளை மதப்பற்றுள்ளவர்கள் அந்த அளவுக்கு குருடர்களாகவும், அந்த அளவுக்கு நம்பிக்கையுள்ளவர்களாகவும் இருக்கின்றனர். முரண்பாடுகள், தெளிவாக வெளியில் தெரியும்படி இருந்தும்கூட அவர்கள் இந்த முரண்பாட்டினை பார்க்காமல் உள்ளனர்.

*எந்தவிதமான மனவருத்தமும் இன்றி உங்களை நீங்களே கொடுத்துவிடுதலே மிகப்பெரிய தாராள மனப்பான்மையாகும்.*

ஆனால், இந்திய அரசியலமைப்பு சட்டம் இதை நம்புவதில்லை. தாராள மனப்பான்மை என்பதை இந்திய அரசியல் சட்டம் கிறிஸ்தவர்களின் கருத்துப்படி எடுத்துக் கொள்கிறது. அது ஒரு விநோதமான அரசியல் சட்டம். அது ஒரு ஏமாற்றுவேலை.

இந்தியில் இதை நாங்கள் கிச்ரி, மோசடி செயல் என்று அழைக்கிறோம். இந்திய அரசியல் சட்டத்தை உண்டாக்கியவர்கள் செய்தது என்னவென்றால் அவர்கள் உலகில் உள்ள அரசியல் சட்டங்களை எல்லாம் சேகரித்து, அதில் உள்ள அழகான பகுதிகளை, அந்த பகுதிகள் தங்களது அரசியல் சட்டத்தில் குறிப்பிட்ட நிலைப்பாடுகளில் ஏற்கனவே உயிரோட்டத்துடன் இருக்கிறது என்பதை அறியாமலேயே எடுத்து கையாண்டுள்ளனர். நீங்கள் அவற்றை வெளியே எடுத்துவிட்டால், அவை உயிரற்று போய்விடும்.

இந்த உலகிலேயே, இந்திய அரசியலமைப்பு சட்டம்தான் மிகவும் உயிரற்ற சட்டம் ஏனெனில் அதில் எல்லாமே மற்றவர்களிடம் இருந்து எடுத்து கையாளப்பட்டுள்ளது. அது ஒரு வளர்ச்சி அல்ல, அது வெறுமனே ஒருவகை ஒன்று சேர்த்தல். நன்றாக இருப்பதை எல்லாம் எடுத்துக் கொள்ளுதல். சிலரின் கண்கள் நன்றாக உள்ளதா அதை எடுத்துக் கொள்ளுங்கள்; சிலரின் காதுகள் நன்றாக இருந்தால் அதை எடுத்துக் கொள்ளுங் கள்; சிலரது மீசை நன்றாக இருந்தால் அதை எடுத்துவிடுங்கள்.

எந்த இடத்திலும் இருந்து அழகான விஷயங்களை எடுத்து நீங்கள் ஒரு மனிதனை உண்டாக்கலாம். கிளியோபாத்ராவின் கண்கள், அம்ரபாலியின் மூக்கு, மாவீரன் அலெக்ஸாண்டரின் உடல், மற்றும் ஆல்பர்ட் ஐன்ஸ்டீனின் மனம் ஆகியவற்றை கொண்டு ஒரு மனிதனை உண்டாக்கலாம்; ஆனால் சிறந்த மக்களின், சிறந்த உறுப்புகளை நீங்கள் எடுத்திருந்தாலும்கூட நீங்கள் ஒரு பிணத்தை தான் உருவாக்கி இருக்கிறீர்கள் என்பதை நினைவில் கொள்ளுங்கள். அதற்கு உயிர் இருக்காது.

தாராள மனப்பான்மை குறித்து போதிதருமர் கூறுவது என்ன? தாராள மனப்பான்மை குறித்து இந்திய அரசின் கருத்து மிகவும் செழுமை அற்றதாகவும், அவர்களின் கருத்து மிகவும் வரையறுக்கப்பட்டதாகவும் உள்ளது என்று நாங்கள் இந்திய அரசிடமும், இந்திய நீதிமன்றங்களிலும் கிட்டத்தட்ட பத்து ஆண்டுகளாக போராடிக்கொண்டு இருக்கிறோம். ஏழைகளுக்கு உதவுதல், மருத்துவமனைகளை உருவாக்குதல், பள்ளிகள் கட்டுதல், இதுதான் தாராள மனப்பான்மை. தாராள மனப்பான்மை குறித்த அவர்களின் கருத்தில் எந்த ஒரு அடிப்படை கருத்தும் இல்லை. போதிதருமரின் ஒரு சிறிய வாக்குமூலம் மிகவும் சிறப்பான இயல்புடன் உள்ளது. எந்தவிதமான மனவருத்தமும் இன்றி உங்களை நீங்களே கொடுத்துவிடுதலே மிகப்பெரிய தாராள மனப்பான்மை ஆகும். உங்களை நீங்கள் யாருக்கு விட்டுவிடவேண்டும்? இந்த பிரபஞ்சத்திற்கு விட்டுவிட வேண்டும்.

நீங்கள் தனியான ஒரு இருப்பாளராக இருக்காதீர்கள். இந்த பிரபஞ்சம் என்னும் மகா சமுத்திரத்தில் விழுந்து அதோடு ஒன்றாகி விடுங்கள். இதுதான் மிகப்பெரிய தாராள மனப்பாங்கு. நீங்கள் வேறு எதைக் கொடுக்க முடியும்? இந்த உலகிற்கு வெறும் கையோடுதான் வந்தீர்கள். மேலும் இந்த உலகில் இருந்து வெறும் கையோடுதான் செல்வீர்கள். நீங்கள் வைத்திருக்கின்ற எல்லாமும் உங்களுடையது அல்ல. உங்களது வீடானது நீங்கள் இடையில் தங்குகின்ற ஒரு சத்திரமே அன்றி வேறல்ல, உங்களது பணம் உங்களின் பணம் அல்ல. அதற்காக நீங்கள் சுரண்டி இருக்கிறீர்கள். உங்களது நிலம் உங்களுடையது அல்ல. நீங்கள் வருவதற்கு முன்பும் அது இங்கே இருந்தது. மேலும் நீங்கள் போய்விட்ட பின்னரும் கூட அது இங்கே இருக்கும்.

உங்களுடையது என்ன? உங்களுடையது எதுவோ அதைத்தான் நீங்கள் கொடுக்கமுடியும், உங்களுடையது அல்லாத ஒன்றினை உங்களால் கொடுக்க முடியாது, இருக்கின்ற நட்சத்திரங்களை எல்லாம் நீங்கள் ஏழைகளுக்கு வாரி வழங்கிட முடியாது, இந்த சூரியனை நீங்கள் ஏழைகளுக்கு தானமாக கொடுக்க முடியாது. இந்த நிலவை நீங்கள் ஏழைக்கு தானமாக கொடுக்க முடியாது. முதலில் அது உங்களுக்கு சொந்தமானது அல்ல.

உங்களால் கொடுக்க முடிந்தது எல்லாம் உங்களது உயிர் மட்டுமேயாகும். எனவே எந்தவிதமான மனவருத்தமும் இல்லாமல் உங்களை நீங்களே கொடுத்து விடுதல் மட்டுமே தாராள மனப்பான்மையாகும் என்று போதிதருமர் கூறுவது முற்றிலும் சரியானது. உண்மையில் மனவருத்தம் இல்லாமல் மிகுந்த மகிழ்ச்சியோடும், சந்தோஷத்தோடு இந்த உலகிற்கு நீங்கள் உங்களைக் கொடுத்துவிட வேண்டும். இந்த முழுமையில் ஒரு பகுதியாக ஆகிவிடுங்கள்.

*அசைதல் மற்றும் அசைவற்று இருத்தல் ஆகியவற்றை கடந்து செல்வதே மிகப்பெரிய தியானம்.*

நீங்கள் அமைதியாக அமர்ந்து கொண்டிருந்தாலும், அல்லது அமைதியாக நடந்து கொண்டிருந்தாலும், நீங்கள் எல்லா

உருவங்களையும், அசைதல் மற்றும் அசைவற்று இருத்தலையும், செய்யாமல் செய்தலையும், பகலையும், இரவையும், வாழ்வையும் சாவையும் கடந்து சென்றாக வேண்டும். எல்லாவற்றையும் கடந்து சென்றுவிட்டால், நீங்கள் உங்களுக்குள் தியானத்தின் மிகவுயர்ந்த நறுமணத்தை பெறுவீர்கள். சாகும் இயல்புடையவர்கள் நகர்ந்து கொண்டிருப்பார்கள். மீண்டும் போதிதருமர் தனது தப்பெண்ணத்திற்கு வருகிறார். ஆனால் அர்கதாக்கள் நகராமல் அப்படியே இருப்பார்கள். ஆனால் உயர்நிலை தியானமானது சாகும் இயல்புடையவர்கள் மற்றும் அர்கதாக்கள் ஆகிய இருவரையும் தாண்டிச் சென்று விடுகிறது.

அவருக்கு அர்கதாக்கள் பற்றி எதுவும் தெரியவில்லை. அர்கதாக்கள் எதுவும் கூறுவதில்லை. ஆனால் அவர்களும்கூட, அசைதல் மற்றும் அசைவற்ற நிலையைக் கடந்து சென்றுள்ளனர். அவர்கள் வெறுமனே எதுவுமே சொல்லாதே காரணத்தினால் அவர்கள் கடந்து செல்லவில்லை என்று அர்த்தமாகிவிடாது. உண்மையில் அவர்கள் கடந்து சென்ற விதமானது. மிகப்பெரியது என்பதால் அது சொல்லப்படவோ அல்லது வார்த்தைகளால் கூறப்படவோ முடியாதது. எனவே நான் போதிதருமர் கூறுவதை ஒத்துக் கொள்ள மாட்டேன். அவர் என்னை மன்னித்தாக வேண்டும். அர்கதாக்கள் பற்றிய அவரது புரிதல் முற்றிலும் பூஜ்யமானது என்பதை நான் அவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு கூற விரும்புகிறேன். அர்கதாக்கள் என்பதற்குப் பதிலாக அவர் 'இச்சை அகற்றி உடலை வருத்துபவர்கள்' என்கிற வார்த்தையை பயன்படுத்தியிருக்க வேண்டும். சாகும் இயல்புடையவர்களும், இச்சை அகற்றி உடலை வருத்துபவர்களும் இப்படி கடந்து செல்லுதல் பற்றி எதுவுமே அறியாதவர்கள்.

புரிதலின் இந்த நிலையை அடைந்தவர்கள், எந்தவிதமான முயற்சியும் இன்றி, எல்லாத் தோற்றங்களில் இருந்தும் தங்களை விடுவித்துக் கொள்கிறார்கள். மேலும் எந்தவிதமான சிகிச்சையும் செய்து கொள்ளாமல் எல்லா நோய்களையும் குணப்படுத்தி கொள்கின்றனர். மாபெரும் ஜென்னின் சக்தியானது இப்படிப் பட்டதாக இருக்கிறது.

மாபெரும் தியானத்தின் சக்தியானது இப்படிப்பட்டதாக இருக்கிறது. உங்களை நீங்களே அறிந்து கொள்வதன் சக்தியானது இப்படிப்பட்டதாக உள்ளது. எல்லா நோய்களும் குணப்படுத்தப் படுகிறது; அதாவது ஆன்மாவின் நோய்கள், எல்லாக் காயங்களும் திடீரென குணமாகிவிடும்; அதாவது ஆன்மாவின் காயங்கள் குணமாகிவிடும். எல்லாத் தோற்றங்களும், மாயைகள், பேராசை, மற்றும் கோபம் ஆகியவற்றை காணமுடியாது, அவற்றின் காலடித் தடம் கூட இருக்காது. ஆழ்ந்த தியானத்தில் ஒருவர் தன்னை அறிந்து கொள்ளுதலின் சக்தியானது இப்படிப் பட்டதாக உள்ளது.

அர்கதாக்கள் பற்றி கூறுவதைத் தவிர, போதிதருமர் கூறுகின்றவை எல்லாம் முற்றிலும் சரியாக உள்ளது. அது மாற்றப்பட வேண்டும். உண்மையில் நான் போதிதருமருக்கு எதிரானவன் அல்லன். நான் அவருக்கு மிகப்பெரிய நன்மை செய் கிறேன். நான் அவரது தவறுகளை வெளியே எடுத்துவிடுகிறேன். கிட்டத்தட்ட தவறிழைக்காதவராக அவரை நான் ஆக்கி விடுகிறேன். அர்கதாக்களுக்கு எதிரான அவரது தப்பான எண்ணம், போதிதருமரின் வீடாகிய சூரிய ஒளியில் மின்னும் மிகப்பெரிய சிகரத்தில் இருந்து அவரை கீழே இழுத்துக் கொண்டு வந்து விடுகிறது.

எங்காவது, எந்த ஒரு பிறவியிலாவது, நீங்கள் போதி தருமரைப் பார்த்தால் சில திருத்தங்கள் தேவைப்பட்டது என்று அவரிடம் நினைவுபடுத்துங்கள். மேலும் அவரது பெரிய கண்களால் அவர் என்னை பயமுறுத்த முடியாது. நானும் எனது பெரிய கண்களினால் அவரை பயமுறுத்தமுடியும்.

○

உண்மை நிலையைக் காண்பதற்கு மனதைப் பயன் படுத்துவது மாயை என்றாகிறது. உண்மை நிலையைக் காண்பதற்கு மனதைப் பயன்படுத்தாமல் இருப்பது விழிப்புணர்வு என்றாகிறது. ஒருவன் தன்னை வார்த்தைகளில் இருந்து விடுதலையாக்கி கொள்வதே முக்தியாகிறது. புலன்களின் உள்ளெழுச்சி என்னும் தூசியினால் மாசுபடாமல் இருப்பதுடன் தர்மத்தைக் காப்பதாகும். பிறப்பு, இறப்பை கடந்து செல்வதே வீட்டைவிட்டு வெளியேறுவதாகும். மற்றொரு பிறவியில் கஷ்டப்படாமல் இருப்பதே பாதையைச் சென்றடைவதாகும். மாயத் தோற்றங்களை உருவாக்காமல் இருப்பதே மெய்ஞ்ஞானம் ஆகும். அறியாமையில் ஈடுபடுத்திக் கொள்ளாமல் இருப்பதே ஞானம் ஆகும். பெரும் மனவேதனை இல்லாமல் இருப்பதே நிர்வாணம் ஆகும். மேலும் மனது என்பதன் தோற்றம் இல்லாமல் இருப்பதே அடுத்த கரை ஆகும்.

பாகுபாடற்ற தர்மத்தின் ஒளியில், சாகும் இயல்புடைய வர்கள் ஞானிகளில் இருந்து வேறுபட்டவராகத் தெரிவதில்லை. பாகுபாடற்ற தர்மம் என்பது சாகும் இயல்புடையவர்களால் ஊடுருவிச் செல்ல முடியாத ஒன்றாகும். மேலும் ஞானிகளால் பயிற்சி செய்ய முடியாததும் ஆகும். பாகுபாடற்ற தர்மம் என்பது மாபெரும் போதிசத்வர்கள் மற்றும் புத்தர்களால் மட்டுமே கடைபிடிக்கக்கூடியதாகும். வாழ்வு என்பது சாவு என்பதை விடவும் வேறுபட்டதல்ல என்றோ அல்லது அசைதல் என்பது அசைவற்று இருத்தலை விடவும் வேறுபட்டதல்ல என்றோ கண்டு கொள்வதே பாகுபாடற்று இருத்தல் என்பதன் அர்த்தமாகும். துன்பத்தை, நிர்வாண நிலையில் இருந்து வேறுபட்டது அல்ல

என்று கண்டுகொள்வதே பாகுபாடற்று இருத்தல் என்பதன் அர்த்த மாகும், ஏனெனில் இரண்டின் இயல்பும் வெறுமை என்பதுதான்.

அவை துன்பத்திற்கு முடிவு கட்டுகின்றன என்றும் ஆனால் நிர்வாண நிலையினுள் நுழைய முடியும் என்றும் கற்பனை செய்வதால், அர்கதாக்கள் நிர்வாண நிலை என்னும் பொறிக்குள் சிக்கி முடிந்துபோய் விடுகிறார்கள். ஆனால் துன்பம் என்பது முக்கியமாக வெறுமையானது என்பதை போதிசத்வர்கள் அறிந்து கொள்கிறார்கள். எனவே அவர்கள் வெறுமையில் இருப்பதன் மூலம் அவர்கள் நிர்வாண நிலையில் இருக்கிறார்கள். நிர்வாண நிலை என்பதற்கு பிறப்பும் இல்லாதது, இறப்பும் இல்லாதது என்று அர்த்தமாகும். அது பிறப்பு மற்றும் இறப்பிற்கு அப்பாற்பட்டது. மேலும் நிர்வாண நிலைக்கும் அப்பாற்பட்டது. மனம் என்பது நகர்ந்து செல்வதை நிறுத்திவிடும்போது, அது நிர்வாண நிலைக்குள் நுழைந்து விடுகிறது. நிர்வாண நிலை என்பது வெறுமையான மனம்.

யாருமே குடிபுகாத இடம் என்பது பேராசை, கோபம், மற்றும் மாயை இல்லாமல் இருக்கின்ற இடமே ஆகும்.

மனம் என்பது ஒரு கற்பனை என்றும், மேலும் அதில் உண்மையான எதுவும் இல்லை என்றும் அறிந்து கொள்கின்ற ஒருவர் தனது சொந்த மனமானது இருக்கிறது என்றோ அல்லது இல்லை என்றோ அறிந்து கொள்கிறார். சாகும் இயல்புடைய வர்கள் மனதை உருவாக்கிக் கொண்டே இருக்கிறார்கள். அதன் இருப்பை ஏற்றுக் கொண்டே இருக்கிறார்கள். அர்கதாக்கள் மனம் என்பது இல்லை என்றும் ஏற்றுக் கொண்டு இருக்கிறார்கள். ஆனால் போதிசத்வர்களும், புத்தர்களும் மனதை உருவாக்கு வதும் இல்லை அல்லது மனதை ஒதுக்குவதும் இல்லை. மனம் என்பது இருக்கவும் இல்லை அல்லது இல்லாமலும் இல்லை என்பதற்கு இதுதான் அர்த்தமாகும். இருக்கவும் இல்லாத அல்லது இல்லாமலும் இருக்கின்ற அந்த மனம்தான் நடுப்பாதை என்று அழைக்கப்படுகிறது.

மனம் உங்களுக்குள் உணர்ச்சியூட்டவில்லை என்றால் வெளியில் இந்த உலகம் என்பது எழாது. இந்த உலகம், மனம்

ஆகிய இரண்டும் தெள்ளத்தெளிவாக ஆகிவிடும்போது அது உண்மையான பார்வை என்றாகிறது. மேலும் இப்படிப்பட்ட புரிதலே உண்மையான புரிதலாகவும் இருக்கிறது.

ஒரே ஒரு விஷயத்தைத் தவிர போதிதருமரின் இந்த சூத்திரங்கள் சுத்தமான தங்கம் போன்றவை. அவர் அர்கதாக்கள் பற்றி எங்கெல்லாம் குறிப்பிடுகிறாரோ அந்த இடங்களில் அவர் திடீரென்று முற்றிலும் குருடர் போன்று ஆகிவிடுகிறார். அர்கதாக்கள் பற்றிய அவரது கருத்து மட்டுமே தவறானது. மேலும் அவரால் அந்த கருத்தை கைவிட்டுவிடவும் முடியவில்லை. அவர் தனது முடிவான ஞானநிலையில் இருந்து கீழே விழுந்து தனது கருத்தின்மீது பற்றுதல் கொண்டுவிடும் இடங்களில் நான் உங்களுக்கு நினைவுப்படுத்துகிறேன். போதிதருமர் போன்று உயர்நிலையில் இருப்பவர்களும் கூட சில குறிப்பிட்ட சூழ்நிலை களில் ஒன்றுமறியாத மனிதர்கள் போன்று நடந்துகொள்ள முடியும் என்பது மிகவும் ஆச்சரியப்பட வைக்கிறது. ஆனால் இது மனித இனத்தின் தவறுகளை நமக்கு நினைவூட்டுகிறது. மேலும் உங்களது கருத்துகளின் மீது நீங்கள் அதிக பற்றுதல் கொண்டவர் ஆகிவிடக்கூடாது என்பதற்கு இது உங்களுக்கு உதவியானதாக இருக்கும், ஏனெனில் உங்களது ஒவ்வொரு கருத்துகளும் உங்களை குருடராக ஆக்கவிடப்போகிறது, உங்களது கருத்திற்கு எதிரான கருத்திற்கு குருடராக ஆகிவிடும்படி செய்து விடுகிறது.

தூய்மையான புரிதலுடன் கூடிய ஒரு மனிதன் எதையும் தேர்வு செய்யாமல், எல்லாவிதமான முரண்பாடுகளுக்கும் கிடைக்கக்கூடியவராக இருக்கவேண்டும். அவர் எதையும் தேர்வு செய்யாமல், வெறுமனே அமைதியாக விழிப்புணர்வுடன் இருப்பது அவை எல்லாம் முரண்பாடுகள் தான். ஆனால் இறுதியில் எங்கோ ஒரு இடத்தில் அவை சந்திக்கும் என்று அறிந்து கொண்டு இருப்பார். வாழ்வு, சாவைச் சந்திக்கிறது, பகல் இரவைச் சந்திக்கிறது, அன்பு வெறுப்பை சந்திக்கிறது, ஆம் என்பது இல்லை என்பதை சந்திக்கிறது. எல்லா கருத்துகளுக்கும் அப்பாற்பட்டு இருக்கின்ற ஒரு மனிதனுக்கு இல்லை என்பது ஒரு பாகுபாடாக உள்ளதோ அதேபோன்று ஆம் என்பதும் கூட ஒரு பாகுபாடாகவே இருக்கும். உண்மையில், அவை இரண்டும்

சந்தித்து ஒன்றோடு ஒன்று கலந்துவிடும்போது, ஆம் என்பது அதன்பின்னர் ஆம் என்பதாக இல்லாதபோது, மேலும் இல்லை என்பதும்கூட இல்லை என்பதாக இல்லாதபோது, ஆம் என்பது இல்லை என்பதும் சந்திப்பதால் அதை விவரிக்க முடியாத போது, அது கருத்து உருவாக்கதை தாண்டி அதற்கு அப்பால் சென்று விடுகிறது. இதுதான் கடந்து செல்லுதல், மனதிற்கு அப்பால் செல்லுதல்.

ஆனால் போதிதருமர் போன்ற மனிதர்களும் கூட சில கறுப்பு புள்ளிகளைப் பெற்றிருக்கின்றனர். இது எதைப் போன்று உள்ளது என்றால் இந்த உலகில் குறைந்தபட்சம் பத்து சதவிகித மக்கள் நிறக்குருடு குறைபாடு உள்ளவர்களாக இருக்கின்றனர் என்று விஞ்ஞானிகள் கூறுவதைப் போன்றுள்ளது. அது அவர்களுக்கு தெரியவே தெரியாது. இது ஒரு பெரிய சதவிகிதமாக இருக்கிறது; பத்து பேரில் ஒருவர் நிறக்குருடு உள்ளவராக இருக்கிறார் என்று அதற்கு அர்த்தமாகிறது. மேலும் இந்த நிறக்குருடு என்பதற்கு அந்த மனிதரால் ஒரு குறிப்பிட்ட நிறத்தை பார்க்கவே முடியாது என்று அவர்கள் அர்த்தம் கொள்கின்றனர்.

ஒருவர் தனது நிறக்குருடு குறைபாட்டை மிகவும் அபூர்வ மாகவே கண்டு கொள்கிறார். இது ஜார்ஜ் பெர்னாட்ஷாவின் வாழ்க்கையில் நடந்தது. அவருக்கு நிறக்குருடு நோய் இருப்பது அறுபது ஆண்டுகளாக அவருக்கு தெரியவில்லை. அவரது அறுபதாவது பிறந்த நாளின்போது அவரது நண்பர் ஒருவர் அவர் அணிவதற்குரிய ஒரு அழகான சூட் ஒன்றினை பரிசாக அனுப்பி இருந்தார். ஆனால் அதோடு அந்த சூட்டிற்கு பொருத்தமான டை ஒன்றினை அவர் அனுப்ப மறந்துவிட்டார். எனவே பெர்னாட்ஷா அந்த சூட்டினை மிகவும் நேசித்தார், உடனடியாக சென்று அந்த சூட்டிற்கு பொருத்தமான டை ஒன்றினை கண்டுபிடித்து வாங்க வேண்டும் என்று தனது செயலாளரிடம் கூறினார். ஏனெனில் அன்று மாலை அவரது பிறந்த நாளைக் கொண்டாடுவதற்கு அநேக நண்பர்கள் வருவார்கள் என்றும் அப்போது அந்த மாலைப்பொழுதில் தான் அந்த சூட்டினை அணிந்து கொள்ள விரும்புவதாகவும் கூறினார்.

மிகவும் தரமான டைகள் கிடைக்கின்ற ஒரு கடைக்கு அவர்கள் சென்றனர். அங்கு அநேக நிறங்களில் டைகளை பார்த்துவிட்டு இறுதியாக அவர் ஒன்றினைத் தேர்வு செய்தார். அப்போது, அவர் தேர்வு செய்திருந்த டையைப் பார்த்து அந்த கடைக்காரர் அதிர்ச்சி அடைந்தார். அவரது செயலாளரும் கூட அதிர்ச்சி அடைந்தார். பெர்னாட்ஷா என்ன செய்கிறார் என்பதை அவர்களால் நம்பமுடியவில்லை. அது மிகவும் அர்த்தமற்றதாக இருந்தது. அவரது சூட்டின் நிறம் பச்சை ஆனால் அவரோ மஞ்சள் நிற டை ஒன்றினை தேர்வு செய்திருந்தார். இதைப் பார்த்த கடைக்காரரும், அவரது செயலாளரும், ஒரே நேரத்தில் அவரிடம், ''இது கொஞ்சம் பொருத்தமற்றதாக தெரிகிறது. நீங்கள் ஒரு விநோதமான நிறத்தை தேர்வு செய்திருக்கிறீர்கள்.

பச்சை நிறத்தோடு இந்த மஞ்சள் நிறம் நன்றாக இருக்காது,'' என்று கூறினார்கள். அதற்கு ஜார்ஜ் பெர்னாட்ஷா அவர்களிடம், ''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? இரண்டும் ஒரே நிறமாகத் தானே உள்ளது,'' என்று கூறினார். அவருக்கு மஞ்சள் நிறக்குருடு இருந்துள்ளது, மஞ்சள் அவருக்கு பச்சை போன்று தெரிந்துள்ளது. அவரால் மஞ்சள் நிறத்தை பார்க்கவே முடியவில்லை. ஆனால் இது ஏதேச்சையாக நடந்தது. ஒருவேளை பல லட்சம் மக்கள் தங்களுக்கு நிறக்குருடு இருப்பது தெரியாமலேயே வாழ்ந்து மடியலாம். இந்த குறிப்பிட்ட சூழ்நிலை ஏற்படாவிட்டால் ஜார்ஜ் பெர்னாட்ஷாவும் கூட தனக்கு நிறக்குருடு உள்ளது என்பதை அறியாமலேயே இறந்திருப்பார். ஏற்கனவே அவர் அறுபது ஆண்டுகள் வாழ்ந்துவிட்டார். இன்னமும் நாற்பது ஆண்டுகள் அவர் வாழ்ந்திருக்க முடியும். அவர் நூறு வயதை அடைந்திருக்க முடியும். ஆனால் அவர் தனது கண்களில் உள்ள குறிப்பிட்ட சில குருடான பகுதிகளை அறிந்து கொள்ளாமலேயே இருந்து விட்டார்.

இதே போன்ற அனுபவங்கள் மக்களுக்கு நடக்கிறது. அவர்கள் மாபெரும் விழிப்புணர்வுடன் இருந்தாலும் கூட, அவர்கள் குருடர்களாக இருந்து விடுகின்ற சில விஷயங்கள் இருக்கின்றன. மேலும் இதுபோன்ற குருட்டுப்புள்ளிகள் மறையாத வரையில், ஒரு மனிதனின் மெய்ஞ்ஞானமானது

முழுமை பெற்றுவிட்டதாக அழைக்கமுடியாது. அது முழுமை யடையாததாக, குறையுள்ளதாக இருக்கிறது. இதில் ஆச்சரியப்படத்தக்க விஷயம் என்னவென்றால், மாபெரும் விஷயங்களைப்பற்றி பேசும்போது போதிதருமர் அந்த அளவுக்கு துல்லியமானவராகவும், குறைகளற்ற முழுமையுடனும் பேசுகிறார். ஆனால் ஒரு சில விஷயங்களில் அவர் எல்லா வற்றையும் வெறுமனே மறந்துவிட்டு மக்களின் தப்பெண்ணங் களும், கருத்துவயப்படுதலும் கொண்டதொரு சாதாரண மனநிலைக்கு கீழே விழுந்து விடுகிறார்.

நீங்கள் இதை நினைவில் வைத்திருக்க வேண்டும். மேலும் இந்த ஒரு ரகசியத்தை அவரிடமிருந்து நீங்கள் கற்றுக் கொள்ள வேண்டும். ஏனெனில் அப்போது தான் இதுபோன்று உங்களுக்கும் நடக்காது.

இப்போது சூத்திரங்கள்:

*உண்மை நிலையைக் காண்பதற்கு மனதைப் பயன் படுத்துவது மாயை என்றாகிறது.*

ஆனால் எல்லா தத்துவவாதிகளுக்கும் இதைத்தான் செய்து வருகின்றனர். மேலும் எல்லா மறைஇயல் அறிஞர்களும் இதைத்தான் செய்து வந்துள்ளனர். மாபெரும் சிந்தனையாளர்கள் வார்த்தைகளோடு விளையாடுவதைத் தவிர வேறு எதையும் செய்வதில்லை. உண்மை நிலையைக் காண்பதற்கு மனதைப் பயன்படுத்துவது மாயை என்றாகிறது. மனதினால் உண்மை நிலையை அறிய முடியாது. இது எதைப் போன்றது என்றால், நீங்கள் உங்களது கண்களின் மூலம் இசையைக் கேட்பதற்கு விரும்பினால் உங்களால் அதைச் செய்ய முடியாது, ஏனெனில் கண்கள், கேட்பதற்கானவை அல்ல. அல்லது நீங்கள் காதுகளின் மூலமாக ஒளியைக் காண விரும்பினால் உங்களால் முடியாது; ஏனெனில் காதுகள் ஒளியைக் காண்பதற்கானவை அல்ல. காதுகள் ஒலியைக் கேட்பதற்காக உள்ளன. கண்கள் ஒளியைப் பார்ப்பதற்காக உள்ளன. அவை ஒவ்வொன்றும் ஒரு குறிப் பிட்ட பரிமாணத்திற்கான செயல்பாட்டினைக் கொண்டுள்ளன.

எண்ணங்கள், கனவுகள், கற்பனைகள், மாயத்தோற்றங்கள், கற்பனைத் தோற்றங்கள், இப்படி எல்லாவிதமான கானல் நீரையும் உருவாக்குவது தான் மனதின் செயல்பாடாக உள்ளது. உண்மைநிலையைக் காண்பது அதன் செயல்பாடு அல்ல. உண்மைநிலையைக் காண்பதற்கு மனதைப் பயன்படுத்தாமல் இருப்பது விழிப்புணர்வு என்றாகிறது.

மனதைப் பயன்படுத்தாமல் இருப்பதே உண்மை நிலையைக் காண்பதற்கான வழியாக இருக்கிறது. முற்றிலும் அமைதி யாகவும், எந்த ஒரு எண்ணங்களும் இல்லாமலும், வெறுமனே ஒரு சுத்தமான எழுது பலகை போன்று ஆகிவிட்டால், அந்த தெளிவு நிலையில், அப்படிப்பட்ட உணர்வு நிலையில் ஒருவர் வெளியேயும், உள்ளேயும் உண்மை நிலை என்றால் என்ன என்பதை அறிந்து கொள்கிறார், ஏனெனில் உண்மை நிலை என்பது ஒன்றேயாகும்.

உள்ளேயும், வெளியேயும் அதைப் பிரிப்பது இந்த மனம்தான். மனம் என்பது விலக்கிக் கொள்ளப்பட்டுவிட்டால், அந்த பிரிவினை கைவிடப்பட்டு விடுகிறது. அதன் பிறகு நீங்கள் தான் உண்மைநிலை, அதன் பின்னர் தொலைதூரத்து நட்சத்திரமும்கூட உங்களோடு இணைக்கப்பட்டுவிடும். மேலும் புல்லின் சிறு இதழ்கூட உங்களோடு இணைக்கப்பட்டுவிடும். அவை எல்லாம் ஒரே இருப்புநிலையில் உள்ளவை. திடீரென்று நீங்கள் அவற்றினின்று பிரிந்தவராக இருக்கமாட்டீர்கள். நீங்கள் முழுமைக்குள் வீழ்ந்து விடுவீர்கள். இந்த பிரபஞ்சத் திற்கும் உங்களுக்கும் இடையே உள்ள சுவர்கள் எல்லாம் மறைந்து போய்விடும்.

இந்த அனுபவத்தை உபநிஷத்துக்களில் ஞானிகள் அகம் பிரம்மாஸ்மி அதாவது நான் கடவுள் என்று அறிவித்து உள்ளனர். இது ஆணவத்தினால் வந்த அறிவிப்பு அல்ல; இது முழுமையான பணிவில் வந்த அறிவிப்பு. அப்போது வேறு என்ன செய்ய முடியும்? மனம் என்பது மறைந்துவிடும்போது நீங்கள் இந்த முழுமையோடு ஒன்றாகி இருக்கிறீர்கள். அப்படித்தான் சொல்லியாக வேண்டும்.

*ஒருவன் தன்னை வார்த்தைகளினின்று விடுதலையாக்கி கொள்வதே முக்தியாகிறது.* இந்த சிறிய வாக்கியத்தில் புனித நூல்கள் எல்லாம் மறைந்துள்ளன. போதிதருமர் ஒரு எளிமையான மனிதர்; கற்றறிந்த வார்த்தைகளை, மிகப்பெரிய வார்த்தைகளை அவர் பயன்படுத்துவதில்லை. அசாதாரணமான உண்மை களையும், முடிவான அனுபவங்களையும் அவர் எளிமையான, மிகவும் சாதாரணமான வார்த்தைகளில் கூறுகிறார்.

*ஒருவன் தன்னை வார்த்தைகளின்று விடுதலையாக்கி கொள்வதே முக்தியாகிறது.*

உங்களை இந்த உலகில் இருந்து விடுதலையாக்கி கொள்வதால் அல்ல, உங்களது மனைவி அல்லது கணவன் ஆகியோரிடமிருந்து விடுதலை பெற்றுவிடுவது அல்ல, உங்களது வீடு அல்லது செல்வம் ஆகியவற்றில் இருந்து விடுதலை பெற்று விடுவது அல்ல, ஆனால் வெறுமனே உங்களை வார்த்தைகளி னின்று விடுதலையாக்கி கொள்வதே முக்தி என்றாகிறது. மேலும், நிச்சயமாக உங்களது உண்மையான உலகம் வெறும் வார்த்தைகளைத் தவிர வேறு எதுவாகவும் இல்லை.

மனைவி என்பது ஒரு வார்த்தை என்பதை விடவும் வேறு என்னவாக இருக்கிறது? கொஞ்ச காலத்திற்கு முன்பு அவள் உங்களது மனைவியாக இல்லை; திடீரென்று ஒருநாள் சில முட்டாள் புரோகிதர்கள், அவர்களும் புரிந்து கொள்ளாத மேலும் திருமணம் செய்து கொள்பவர்களும் புரிந்து கொள்ளாத மந்திரங் களைச் சொல்ல ஆரம்பிக்கிறார். மேலும் அங்கு நடக்கின்ற அந்த முழு சடங்கின் அர்த்தம் என்ன என்று யாருக்கும் தெரியாது.

சில தினங்களுக்கு முன்பு எனது சந்நியாசிகளில் ஒருத்திக்கு திருமணம் நடந்தது. அப்போது அந்த புரோகிதரைப் பார்த்து அவள் ஆச்சரியம் அடைந்ததாகக் கூறினார். அந்த திருமணச் சடங்கானது ஒன்றரை மணிநேரம் நடக்கக்கூடியது. ஆனால் அவளது கணவர் அந்த புரோகிதருக்கு ஐந்து ரூபாய் கொடுத்து சீக்கிரம் முடிக்கும்படி அவரிடம் கூறினார். உடனே அந்த முழு சடங்கும் மிகவும் வேகமாக நடந்தது; அந்த புரோகிதர் மந்திரங்களை மிகவும் விரைவாகச் சொல்லி முழு சடங்கையும்

பதினைந்து நிமிடங்களில் முடித்துவிட்டார். மேலும் அந்த பதினைந்து நிமிடங்களில், ''ஒருநிமிடம்'' என்று புகைப்படக்காரர் கூறுகின்ற நேரங்களும் அடங்கும். புகைப்படம் எடுக்கப்படும் போது அந்த புரோகிதர் மந்திரத்தை நிறுத்திவிடுவார். மேலும் புகைப்படம் எடுத்து முடிக்கப்படும்போது மீண்டும அவர் அந்த சடங்கின் மந்திரத்தை ஆரம்பிப்பார். வார்த்தைகளின் விளை யாட்டைத் தவிர, ஒரு கணவன் என்பதோ அல்லது ஒரு மனைவி என்பதோ வேறு என்னவாக இருக்கின்றது?

நீங்கள் இந்த உலகிற்கு எந்த ஒரு உடைமைகளும் இல்லாமல் வந்தீர்கள். மேலும் எந்த ஒரு உடைமைகளும் இல்லாமலேயே நீங்கள் இந்த உலகைவிட்டு போகப் போகிறீர்கள். ஒருநாள் இந்த ஒட்டுமொத்த விஷயமும், ஒரு காலத்தில் நீங்கள் பார்த்த ஒரு கனவு போல ஆகிவிடப்போகிறது. உங்களது மரணத்தின்போது அந்த விஷயங்கள் எல்லாம் ஏதோ கனவில் கண்டதுபோல நீங்கள் நினைவு கூரலாம். அவை நிகழும்போது அவை அந்த அளவுக்கு உண்மையானவை போன்று இருந்தன. ஆனால் இறக்கும் தருவாயில் எல்லாமே உண்மையற்றதாக, மனதில் வெறும் வார்த்தைகளாக மட்டுமே ஆகிவிடுகிறது.

உண்மையான துறவறம் என்பது இந்த உலகை துறவு கொள்வது அல்ல. இந்த உலகைத் துறந்துவிட்டு இமய மலைக்கோ, அல்லது மடாலயங்களுக்கோ தப்பித்து செல்வது அர்த்தமற்றது. உண்மையான விஷயம் என்னவென்றால் நீங்கள் உங்களது மனதில் இருந்து வார்த்தைகளை கீழே போட்டுவிட்டு, ஒரு மௌன கவனிப்பாளியாக, ஒரு தூய சாட்சியாக ஆகி விடுவதே ஆகும். மேலும் அதைத்தான் போதிதருமர் முக்தி என்று அழைக்கிறார்.

*புலன்களின் உணர்வெழுச்சி என்னும் தூசியினால் மாசுபடாமல் இருப்பதே தர்மத்தை பாதுகாப்பதாகும்.*

நீங்கள் அவசியம் செய்யவேண்டியதெல்லாம் நீங்கள் ஒரு உண்மையான சமயவாதியாக இருப்பதும், உணர்ச்சிகள், புலன் எழுச்சிகள், மனநிலைகள் ஆகியவற்றினால் அடித்துச்

செல்லப்படாமல் பாதுகாப்புடன் இருப்பதுமேயாகும். மனமானது உங்களை கீழே இழுக்கின்ற அதன் எந்த ஒரு தந்திரத்திற்கும் அப்பால் நீங்கள் மேலே எழுந்து நிற்பதுமேயாகும். உண்மை யான சமயவாதியாக இருப்பதற்கு தேவையானது எல்லாம் விழிப்புணர்வுடன் இருப்பதும், உஷாராக இருப்பதுமேயாகும்.

நீங்கள் தேவாலயத்திற்கோ, அல்லது எந்த ஒரு யூத ஆலயத்திற்கோ அல்லது எந்த ஒரு கோயிலுக்கோ போக வேண்டியது இல்லை. நீங்கள் வெறுமனே உங்களுக்குள் சென்று, விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும்.

*பிறப்பு இறப்பை கடந்து செல்வதே வீட்டைவிட்டு வெளியேறுவதாகும்.* இந்த சூத்திரத்துடன், மேலும் இரண்டு வார்த்தைகளை நான் சேர்க்க விரும்புகிறேன். அப்படி இல்லை எனில் இந்த சூத்திரம் உங்களைத் தவறாக வழிநடத்தி சென்றுவிடும். பிறப்பு இறப்பை கடந்து செல்வதே இந்த உலகை விட்டு வெளியேறுவதாகும். வீட்டைவிட்டு அல்ல என்று நான் கூற விரும்புகிறேன். ஏனெனில் நீங்கள் எங்கு செல்லப் போகிறீர்களோ அதுதான் உங்களது உண்மையான வீடு. இந்த உலகம் உங்களது உண்மையான வீடு அல்ல. இது வெறுமனே வீடு என்று அழைக்கப்படுகின்ற ஒன்றாகும். இதை வீடு என்று அழைப்பது வெறுமனே மன ஆறுதலுக்காக மட்டுமேயாகும்.

ஒரு சூஃபி ஞானியின் கதையை நான் உங்களுக்கு கூறியிருக்கிறேன். பாக்தாத்தில் ஒருநாள் இரவில், தனது அரண்மனையின் கூரைமீது யாரோ நடந்து செல்லும் சத்தத்தைக் கேட்டார். உடனே அவர், ''யார் அங்கே? அங்கு நீ என்ன செய்கிறாய்?'' என்று கத்தினார்.

அந்த மனிதர் ஒரு திருடர் அல்லர். எனவே அவர் பயம் ஏதும் இல்லாமல், ''கத்தாதீர்கள், அது மற்றவர்களின் தூக்கத்தை கலைத்துவிடும். அது உங்களது வேலை அல்ல. நான் எனது ஒட்டகத்தைத் தேடிக்கொண்டு இருக்கிறேன். எனது ஒட்டகம் காணாமல் போய்விட்டது மேலும் நீங்கள் தூங்குவதற்கு செல்கின்ற நேரமிது'' என்று கூறினார்.

அரண்மனையின் மொட்டைமாடியில் தனது ஒட்டகத்தைத் தேடுகின்ற அந்த மனிதன் எப்படிப்பட்டவனாக இருப்பான் என்பதை அரசரால் நம்பமுடியவில்லை. அவர் காவலர்களை அழைத்தார். உடனே அவர்கள் அரண்மனை முழுவதும் தேடினார்கள். ஆனால் அந்த மனிதரைக் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆனால் மறுநாள் அரசர் தனது அரசசபையில் உட்கார்ந்து கொண்டிருக்கும்போது அதே குரலை திரும்பவும் அவர் கேட்டார். அவர் அதை அடையாளம் கண்டு கொண்டார்.

அரசர் உடனடியாக, ''அந்த மனிதரை உள்ளே கொண்டு வாருங்கள்,'' என்று கூறினார். ஏனெனில் அவர் அரண்மனை முன்வாசலில் உள்ள பாதுகாவலரோடு தான் அங்குள்ள சத்திரத்தில் தங்க விருமபுவதாக விவாதம் செய்து கொண்டிருந்தார்.

அதற்கு அந்த பாதுகாவலர், ''நீங்கள் தேவை இல்லாமல் பிரச்சினையில் மாட்டிக் கொள்வீர்கள். இது அரசரின் அரண்மனை; இது ஒரு சத்திரம் அல்ல.'' என்று கூறினார்.

உடனே அந்த மனிதர், ''இது ஒரு சத்திரம் என்பதை நான் அறிவேன், மேலும் நீ வெறுமனே அதன் பாதுகாவலன் மட்டுமே. என்னை தொந்தரவு செய்யாதே. என்னை உள்ளே செல்ல அனுமதி. இந்த விஷயத்தை நான் அரசரிடமே நேரடியாக விவாதிக்க விரும்புகிறேன். இது ஒரு சத்திரம் தான் என்று அரசரை என்னால் ஏற்றுக்கொள்ள வைக்க முடிந்தால் அதன்பின்னர் நான் இங்கு தங்குகிறேன். இது ஒரு சத்திரம் அல்ல என்று அவரால் என்னை சமாதானப்படுத்த முடிந்தால், அதன் பின்னர் நான் வெளியேறி விடுவேன். ஆனால் நீ சொல்வதை நான் கேட்கமாட்டேன்; நீ வெறுமனே ஒரு பாதுகாவலன் மட்டுமே,'' என்று கூறினார்.

அந்த தருணத்தில் தான் அரண்மனை உள்ளே இருந்து, ''அந்த ஆளைத் தடுக்காதே. நாங்கள் அவனைத்தான் தேடிக் கொண்டு இருக்கிறேன். அவனை உள்ளே கொண்டுவா,'' என்று செய்தி வந்தது.

அந்த சூஃபி ஞானி உள்ளே அழைக்கப்பட்டார். அரசர் அவரிடம், ''நீங்கள் ஒரு விநோதமான மனிதர் போன்று

தெரிகிறது. என்னால் உங்களது குரலை அடையாளம் கண்டு கொள்ள முடிகிறது. எனது அரண்மனை கூரையின்மீது உங்களது ஒட்டகத்தைத் தேடிக்கொண்டிருந்த மனிதர் நீங்கள்தான் மேலும் இப்போது எனது வீட்டை, எனது அரண்மனையை நீங்கள் ஒரு சத்திரம் என்று அழைக்கிறீர்கள்,' என்று கூறினார்.

உடனே, அந்த மனிதர் சிரித்துவிட்டு, ''நீங்கள் கொஞ்சம் புரிந்து கொள்ளக்கூடிய மனிதராக இருக்கிறீர்கள். உங்களோடு பேசுவது சாத்தியப்படும். அரண்மனைக்கூரை மீது ஒட்டகத்தை தேடிய அந்த மனிதர் நான் தான். என்னை பைத்தியம் என்று நினைத்துவிடாதீர்கள். ஒரு தங்க சிம்மாசனத்தில் உட்கார்ந்து கொண்டு பேரானந்தத்தை உங்களால் தேட முடிகிறபோது, இடைவிடாமல் போரில் வெற்றி பெற்றுக்கொண்டு அதில் மனிதர்களை வெட்டிக்கொலை செய்து கொண்டும், உயிருடன் மக்களை எரித்துக்கொண்டும் இருந்து கொண்டு உங்களால் கடவுளைத் தேட முடிகிறதுபோது உங்களது அரண்மனை மாடியில் நான் எனது ஒட்டகத்தை தேடியதில் என்ன தவறு உள்ளது? நீங்களே என்னிடம் கூறுங்கள்!'' என்று கேட்டார்.

நான் முரண்பாடானவன் என்றால் நீங்களும்கூட முரண்பாடானவர்தான். மேலும் இந்த இடத்தை உங்களது வீடு என்று நீங்கள் அழைப்பதற்கு உங்களுக்கு என்ன உரிமை உள்ளது. ஏனெனில் இதற்கு முன்பும் கூட நான் இங்கு வந்திருக்கிறேன் அப்போது இந்த தங்கசிம்மாசனத்தில் வேறு ஒரு மனிதர் உட்கார்ந்து கொண்டு இருந்ததை நான் பார்த்திருக்கிறேன். அவரும் உங்களைப் போன்றே இருந்தார் ஆனால் கொஞ்சம் வயதானவராக இருந்தார் என்று அந்த ஞானி கூறினார்.

அதற்கு அரசர் அவரிடம், ''அவர் எனது தந்தை. இப்போது அவர் இறந்துவிட்டார்.'' என்று கூறினார். உடனே அந்த ஞானி, ''நான் அவர் இருப்பதற்கு முன்பும் கூட இங்கு வந்திருக்கிறேன். அப்போதும் நான் வேறு ஒரு மனிதர் உட்கார்ந்திருப்பதை பார்த்தேன். அவரும்கூட உங்களைப் போன்றே இருந்தார். ஆனால் மிகவும் வயதானவராக இருந்தார்'' என்று கூறினார். அதற்கு அவர், ''நீங்கள் சொல்வது சரிதான், அவர் எனது தாத்தா,''

என்றார். உடனே ஞானி அவரிடம், ''அவருக்கு என்ன ஆயிற்று'' என்று கேட்டார். அதற்கு அரசர், ''அவர் இறந்துவிட்டார்'' என்றார்.

உடனே ஞானி அவரிடம், நீங்கள் எப்போது சாகப் போகிறீர்கள்? அவர்களும்கூட இது அவர்களின் வீடு என்று தான் நம்பிக்கொண்டு இருந்தார்கள். நான் உங்களது தாத்தாவிடம் விவாதித்து இருக்கிறேன். ஆனால் இப்போது அந்த ஒன்று மறியாத மனிதர் கல்லறைக்குள் இருக்கிறார். நான் உனது தந்தையிடமும் கூட விவாதித்து இருக்கிறேன். அந்த ஒன்றுமறியா மனிதரும் கூட இப்போது கல்லறைக்குள் இருக்கிறார். இப்போது நான் உங்களோடு விவாதம் செய்து கொண்டிருக்கிறேன் மேலும் என்றாவது ஒருநாள் நான் மீண்டும் திரும்பி வருவேன் அப்போது நான் உங்களது மகனோடு விவாதிப்பேன். ஆனால் நீங்கள் ஒரு கல்லறைக்குள் இருப்பீர்கள். எனவே மக்கள் மாறிக்கொண்டே இருக்கின்ற இந்த இடம் என்ன விதமான வீடாக இருக்கமுடியும்? இது வழிப்போக்கர் வந்து செல்லும் ஒரு சத்திரம் தானே. ஒருநாள் இரவு ஒருவர் வெறுமனே இங்கே தங்கிவிட்டு அதன்பின்னர் ஒருவர் போய்த்தானே ஆகவேண்டும்,'' என்று கூறினார்.

அந்த அரசர் அதிர்ச்சி அடைந்தார். ஆனால் அமைதியானார். அந்த அரச சபையே அமைதியாக இருந்தது. அந்த மனிதர் கூறியது சரிதான். மேலும் இறுதியாக அந்த ஞானி அரசரிடம், ''உண்மையிலேயே உங்களது வீடு எங்கு உள்ளது என்ன நீங்கள் அறிய விரும்பினால், உங்களது தாத்தா இருக்கின்ற, உங்களது தந்தை இருக்கின்ற, இறுதியில் நீங்களும் கூடப்போய் இருக்கப் போகின்ற கல்லறைத் தோட்டத்திற்கு செல்லுங்கள். உங்களது வீடு என்று நீங்கள் அழைக்கக்கூடிய உண்மையான இடம் அதுதான், இந்த அரண்மனை உங்களது உண்மையான வீடு அல்ல. இது ஒரு வழிப்போக்கர்களின் சத்திரம் என்பதால் நான் இங்கு தங்குவதற்கு போகிறேன்,'' என்று கூறினார்.

அந்த அரசர் நிச்சயம் சாதாரணமான மனிதர் அல்லர். அவர் எழுந்து நின்று அந்த ஞானியிடம், ''என்னை மன்னித்து விடுங்கள். நான் சொன்னது தவறுதான். நீங்கள் சொல்வது தான் சரியானது. நீங்கள் விரும்பும் வரை இங்கு தங்கலாம். நான் எனது

உண்மையான வீட்டினைத்தேடி செல்கிறேன். இது எனது உண்மையான வீடு அல்ல,'' என்று கூறினார்.

இந்த உலகம் ஒரு சத்திரம் தான்.

*பிறப்பு இறப்பை கடந்து செல்வதே வீட்டைவிட்டு வெளி யேறுவதாகும் என்று இந்த சூத்திரத்தில் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் பிறப்பு இறப்பை கடந்து செல்வதே வீட்டை ''நோக்கி'' வெளியேறுவதாகும் என்று நான் கூற விரும்புகிறேன்.* இந்த உலகை விட்டு வெளியேறி, வீட்டை நோக்கி செல்வதற்கு, நீங்கள் மீண்டும் எங்கேயும் செல்ல வேண்டியதில்லாத உண்மையான வீட்டை நோக்கி செல்ல வெளியேற வேண்டும். அதுதான் உங்களது முடிவில்லாத, இறுதியான மற்றும் முழுமையான தஞ்சமடைகின்ற இடமாக இருக்கும். *மற்றொரு பிறவியிலும் கஷ்டப்படாமல் இருப்பதே பாதையைச் சென்றடைவதாகும். மாயத் தோற்றங்களை உருவாக்காமல் இருப்பதே மெய்ஞ்ஞானம் ஆகும்.*

இதை ஒரே வாக்கியத்தில் சுருக்கமாக சொல்ல வேண்டும் என்றால் ''மனம் என்பதில் இல்லாமல் இருப்பதே எல்லாமும் ஆகும். அதாவது முக்தி, உண்மையான வீட்டை கண்டுபிடித்தல், மெய்ஞ்ஞானம், பாதையைக் கண்டு கொள்ளல் என்பதாகும்.

*அறியாமையில் ஈடுபடுத்திக் கொள்ளாமல் இருப்பதே ஞானம் ஆகும்.* இந்த வாக்கியம் கொஞ்சம் விநோதமானதாக உள்ளது. ஏனெனில் மக்கள் தங்களை அறியாமையில் ஈடுபடுத்திக் கொள்வது கிடையாது. யாரும் ஒன்றும் அறியாதவராக இருப்பதற்கு விரும்புவதில்லை. அவர்கள் ஏன் அறியாமையில் தங்களை ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும்? ஆகவே, அர்த்தம் அப்படியே இருந்தாலும் கூட நான் அதை மாற்றம் செய்ய விரும்புகிறேன். மாற்ற விரும்புகிற வார்த்தையானது அறியாமை என்பதாக இருக்காது. *அந்த வார்த்தை கல்வி அறிவில் ஈடுபடுத்திக் கொள்ளாமல் இருப்பதே ஞானம் ஆகும் என்பதாகும்.*

கல்வி அறிவில் உங்களை ஈடுபடுத்திக் கொள்வது என்பது உண்மையிலேயே நீங்கள் உங்களது அறியாமையை மறைப்ப

தாகவே இருக்கிறது. இதுதான் உண்மையான ஈடுபடுத்துதல், அறியாமையில் ஈடுபடுத்துதல். ஆனால் மேற்பரப்பில் நீங்கள் அதிகக் கல்வி கற்றவராக, அதிகம் படித்தவராக, ஒரு அறிவு ஜீவியாக, ஒருபண்டிதராக ஆவதில் தான் உங்களை ஈடுபடுத்திக் கொள்கிறீர்கள். மேலும் இப்படி கல்வி அறிவில் அதிகம் ஈடுபடுத்திக் கொள்வது ஞானத்திற்கு ஒரு தடையாக இருக்கிறது. எல்லா கல்வி அறிவுகளைப் பற்றியும் ஒன்று அறியாதவராக இருப்பவருக்கே ஞானம் வருகிறது.

கல்வி அறிவை நீங்கள் கைவிட்டு விடும்போது நீங்கள் எல்லா அறியாமையையும் கூட கைவிட்டு விடுகிறீர்கள். அவை இரண்டும் ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள் போன்றே உள்ளன. அதன் பின்னர் உங்களிடம் இருப்பது எல்லாம் தூய கள்ளம் கபடமற்ற தன்மையே ஆகும். பெரும் மனவேதனை இல்லாமல் இருப்பதே நிர்வாண நிலை ஆகும். எந்த ஒரு கோபத்தினாலும், எந்த ஒரு கஷ்டத்தினாலும், எந்த ஒரு துன்பத்தினாலும்,. எந்த ஒரு பேராசையினாலும் பெரும் மனவேதனை அடையாமல் இருப்பதே நிர்வாண நிலையாகும். நீங்கள் வீட்டினை வந்தடைந்து விட்டீர்கள். அந்த வீட்டின் பெயர் நிர்வாணம்.

மனம் மறைந்து விடும்போது, அந்த மனதோடு இந்த ஒட்டுமொத்த உலகமும் மறைந்து விடுகிறது. மனம் என்பதோடு, இந்த ஒட்டுமொத்த அறியாமையும்;, இந்த ஒட்டுமொத்த கற்றறிவும், வாழ்க்கையின் இந்த பயங்கர கனவுகள் யாவும் மறைந்து போகிறது. நீங்கள் பார்த்துக் கொண்டே இருக்கின்ற இந்த ஒட்டு மொத்த நாடகத்தின் படைப்பாளியே மனம் தான். எனவே இந்த மனம் என்பது மறைந்து விடும்போது அடுத்த கரையானது உடனடியாக தோன்றுகிறது. அடுத்த கரையானது நெருங்கி, நெருங்கி வருகிறது.

அடுத்த கரை தான் உங்களது உண்மையா!!ன வீடு.

அடுத்த கரைதான உங்களது சாகாஇயல்பு, உங்களது முடிவில்லாத நிலை.

இந்தக் கரையானது மரணம், நோய், முதுமை ஆகிய எல்லாவிதமான துன்பங்களையும் கொண்டுள்ளது. அடுத்த கரை என்பது நம்பிக்கை என்பதாக இருக்கிறது. இப்போது நாம் வாழ்ந்து கொண்டிருக்கின்ற பயங்கரமான கனவில் இருந்து மீட்கப்படுகின்ற நம்பிக்கை, பாதுகாக்கப்படுவதன் நம்பிக்கை, முக்தி அடைகின்ற நம்பிக்கையாக உள்ளது. இதன் ரகசியம் மிகவும் எளியது. ஒரு மனம் என்பதாக இல்லாமல், ஆனால் வெறுமனே ஒரு துாய பேருணர்வாக, எண்ணங்கள் இல்லாத ஒரு பேருணர்வாக, மேகங்கள் இல்லாத ஒரு வானமாக இருப்பதே அந்த ரகசியம் ஆகும்.

*பாகுபாடற்ற தர்மத்தின் ஒளியில், சாகும் இயல்புடைய வர்கள் ஞானிகளில் இருந்து வேறுபட்டவராகத் தெரிவதில்லை. பாகுபாடற்ற தர்மம் என்பது சாகும் இயல்புடையவர்களால் ஊடுருவிச் செல்லமுடியாத ஒன்றாகும். மேலும் ஞானிகளால் பயிற்சி செய்யமுடியாதும் ஆகும். பாகுபாடற்ற தர்மம் என்பது மாபெரும் போதிசத்வர்கள் மற்றும் புத்தர்களால் மட்டுமே கடைபிடிக்கக் கூடியதாகும்.*

ஆனால், போதிதருமர் அர்கதாக்களை சேர்க்கவில்லை. அதுதான் அவரது குருட்டுப்பகுதி. போதிதருமருக்கு மிகப்பெரிய கண்கள் இருந்தாலும்கூட, மாபெரும் அர்கதாக்களும்கூட, மாபெரும் போதிசத்துவர்களும், புத்தர்களும் சார்ந்துள்ள அதே பிரிவைச் சார்ந்தவர்கள் தான் என்கிற ஒரு எளிமையான விஷயத்தை அவரால் கண்டு கொள்ள முடியவில்லை.

வாழ்வு என்பது சாவு என்பதை விடவும் வேறுபட்டதல்ல என்றோ அல்லது அசைதல் என்பது அசைவற்று இருப்பதை விடவும் வேறுபட்டதல்ல என்றோ கண்டு கொள்வதே பாகுபாடற்று இருத்தல் என்பதன் அர்த்தமாகும். துன்பத்தை நிர்வாண நிலையில் இருந்து வேறுபட்டது அல்ல என்று கண்டு கொள்வதே பாகுபாடற்று இருத்தல் என்பதன் அர்த்தமாகும். ஏனெனில் இரண்டின் இயல்பும் வெறுமை தான்.

அவை துன்பத்திற்கு முடிவுகட்டுகின்றன என்றும் ஆனால் நிர்வாண நிலைக்குள் நுழைய முடியும் என்றும் கற்பனை

செய்வதால் அர்கதாக்கள் நிர்வாண நிலை என்னும் பொறிக்குள் சிக்கி முடிந்து போய்விடுகிறார்கள்.

இது முற்றிலும் தவறானது. போதிசத்வர்கள் அடைகின்ற அதே உயர்நிலையை அர்கதாக்களும் அடைகின்றனர். அவர்களின் பாதைகள் வேறானது, ஆனால் ஒருவர் மலையின் உச்சியை வெவ்வேறு பாதைகளில் சென்றடைய முடியும். துறவிகள் மற்றும் புனிதர்கள் என்று அழைக்கப்படுபவர்கள் மட்டுமே நிர்வாணம் என்னும் பொறிக்குள் சிக்கி முடிந்து போய் விடுகின்றனர். ஆனால் அர்கதாக்கள் அப்படி முடிந்து போவதில்லை என்று கூறி இருக்க வேண்டும். போதிசத்வர்களைப் போலவே அர்கதாக்களும் உண்மையிலேயே புத்தர்கள் தான். அவர்களிடையே உள்ள ஒரே வேறுபாடானது. அர்கதர்ககள் மற்றவர்கள் யாரையும் பற்றி கவலைப்படமாட்டார்கள் என்பதே ஆகும். மற்றவர்களும் அவர்களின் மெய்ஞ்ஞானத்திற்கு உதவப்படவேண்டும் என்றும் அவர்களுக்கும் ஆதரவு அளிக்க வேண்டும் என்றும் அவர்கள் கவலைப்படமாட்டார்கள். அர்கதாக்கள் தங்களின் சொந்த மெய்ஞ்ஞானம் குறித்து மட்டுமே அக்கறை கொள்வார்கள். போதிசத்துவர்கள் மற்றவரின் மெய்ஞ்ஞானம் குறித்தும்கூட அக்கறை கொள்வார்கள். அது ஒன்று மட்டுமே வித்தியாசம். மற்றபடி அவர்களின் அனுபவங்கள் எல்லாம் ஒரே மாதிரியானவை; அவர்களின் உயர்நிலைகள் ஒரே மாதிரியானவை, அவர்களின் நிலைகள் ஒரே மாதிரியான இறுதித் தன்மையுடன் இருக்கின்றன.

ஆனால் இங்கு அர்கதாக்கள் போன்றோ அல்லது போதிசத்வர்கள் போன்றோ அல்லாத துறவிகளும், புனிதர்களும் அநேகம் பேர் இருக்கின்றனர். அவர்கள் தங்களை கட்டுப் படுத்துகின்ற ஒழுக்கவிதிகளை கடைபிடித்துக் கொண்டும், தங்களைத் தாங்களே துன்புறுத்திக் கொண்டும், மனிதனின் தகுதிக்குள் செய்ய முடிகின்ற எல்லாவற்றையும் செய்து கொண்டும் இருக்கின்றனர்; ஆனால் இவை எல்லாம் அவர்களின் மனதினால் மட்டுமே செய்யப்படுகிறது. அதுதான் எல்லா வித்தியாசங்களையும் உண்டாக்கி விடுகிறது. அது, தானே நிகழ்கின்ற ஒன்றாக, இயற்கையான வளர்ச்சியாக இல்லாமல்

இருக்கிறது. அவர்கள் அந்த நிலையை வலுக்கட்டாயமாகக் கொண்டு வந்துள்ளனர். அவர்கள் ஒழுங்குடன் கடைபிடித்து, நிர்வகித்து, பயிற்சி செய்துள்ளனர். அவர்கள் எப்போதும் சரியான காரியங்களையே செய்வார்கள். ஆனால் அவர்கள் சரியாகச் செய்வதெல்லாம் தானாகவே இயல்பாகவே செய்யப்படுபவை அல்ல. அது அப்பட்டமாக சிந்தித்து செயல்படுவதாகும். அவர்கள் எதுசரி மேலும் எது தவறு என்ற இடைவிடாமல் அவற்றின் நன்மை, தீமைகளை எடை போட்டு பார்க்கின்றனர். எதுசரி அல்லது எது தவறு என்பதற்கு அவர்கள் எப்போதும் புனித நூல்களிடம் ஆலோசனையைத் தேடுபவர்கள். அவர்களுக்கென்று தனியான, சொந்தமாக உள் ஒளி கிடையாது.

அவர்களை பெயரளவில் மட்டுமே துறவிகள், மற்றும் புனிதர்கள் என்று நான் அழைக்கிறேன். அவர்கள் கிட்டத்தட்ட புத்தர்கள் போன்றே தென்படுகின்றனர். ஆனால் அவர்களுக்குள் அடி ஆழத்தில் மிகப்பெரிய இருள் உள்ளது. அவர்களின் சுய தன்னியல்பு இன்னமும் அறியப்படவில்லை. அவர்கள் சமாதி நிலையை அடையவில்லை. அவர்கள் இன்னமும் இந்த புதிர் நிறைந்த மனம் மற்றும் அதன் பல லட்சம் வழிகளிலேயே சுற்றித்திரிந்து கொண்டிருக்கின்றனர். அவர்கள் மாபெரும் பயிற்சிகள், அவர்களது தன்னைத் தானே வருத்திக் கொள்ளுதல், அவர்களின் நல்லொழுக்க கட்டுப்பாடுகள் ஆகியவை அவர்களின் மனதினுடைய திரையிடலே தவிர வேறு ஒன்றும் இல்லை.

ஆகவே, பெயரளவில் துறவிகள் மற்றும் புனிதர்கள் என்று அழைக்கப்படுபவர்கள் மட்டுமே நிர்வாணம் என்னும் பொறிக்குள் சிக்கிக் கொள்கின்றனர் என்று கூறலாம். அவர்களின் ஒட்டுமொத்த ஆசையும் மெய்ஞ்ஞானம் அடைதல் ஒன்றேயாகும். ஆனால் அதுதான் பிரச்சினையாகி விடுகிறது. மெய்ஞ்ஞானியாக இருப்பதற்கு நீங்கள் ஆசைப்பட முடியாது. ஆசை என்பது அதற்கு தடையாக இருக்கும். நீங்கள் மெய்ஞ்ஞானி ஆகலாம் ஆனால் மெய்ஞ்ஞானி ஆவதற்கு நீங்கள் ஆசைப்பட முடியாது. நீங்கள் ஆசைப்படுகின்ற அந்த நொடிப்பொழுதே நீங்கள் பொறிக்குள் சிக்கிக் கொள்கிறீர்கள். உங்களது சொந்த ஆசையினாலேயே நீங்கள் வலைக்குள் சிக்கிக் கொள்கிறீர்கள்.

மெய்ஞ்ஞானம் அடைவதை உங்களது ஆசைக்குரிய விஷயமாக ஆக்கமுடியாது. நீங்கள் ஆசைப்படுகின்ற அந்த நொடியிலேயே நீங்கள் பொறிக்குள் மாட்டிக்கொள்கிறீர்கள். உங்களது சொந்த ஆசையினாலேயே நீங்கள் சிக்கிக் கொள் கிறீர்கள். நீங்கள் அதை உங்களது லட்சியப் பொருளாக ஆக்க முடியாது.

ஆனால் அந்த இடத்தில் தான் பெயரளவில் மட்டுமே துறவிகளாகவும், புனிதர்களாகவும் இருக்கின்றவர்கள் உள்ளே வருகின்றனர். அவர்கள் மெய்ஞ்ஞானத்தை, முக்தியை, மோட்சத்தை, நிர்வாண நிலையை ஒரு குறிக்கோளாக, சாதிக்கவேண்டிய ஒன்றாக ஆக்கிவிடுகிறார்கள். அதன் பின்னர் அது ஆணவத்தின் ஒரு பயணமாக ஆகிவிடுகிறது. அவர்கள் சிக்கிக் கொள்கிறார்கள், மிகவும் மோசமாக சிக்கிக் கொள் கிறார்கள்.

நிர்வாண நிலை என்பது உங்களுக்குள் மலர வேண்டும். நீங்கள் உங்களது மனதினை அதன் எல்லா ஆசைகளோடும், அதன் எல்லா லட்சியங்களோடும், சாதிக்க வேண்டும் என்கிற அதன் எல்லா திட்டங்களோடும், கைவிட்டுவிடும்போது அது உள்ளுக்குள் மலரும். பேராசையினால் நிறைந்துள்ள ஒட்டுமொத்த மனதையும், கைவிட்டு விடவேண்டும். அந்தப் பேராசையானது பணம் குறித்ததா அல்லது அந்த பேராசையானது மெய்ஞ்ஞானம் குறித்ததா என்பது எந்தவிதமான வித்தியாசத் தையும் உண்டாக்கி விடாது. மனமானது ஒரு பொருளில் இருந்து அடுத்த பொருளுக்கு மாறிக்கொண்டே இருப்பதாகும். ஆனால் அது பேராசை நிறைந்த அதே மனமாகத்தான் இருக்கிறது. மனம் என்பது முற்றிலும் கைவிடப்பட்டு விடும்போது மெய்ஞ்ஞானம் அடைதல் என்பது ஒரு குறிக்கோள் அல்ல என்பதை நீங்கள் திடீரென்று கண்டு கொள்வீர்கள். மெய்ஞ்ஞானம் என்பது உங்களது சுய இயல்பு. திடீரென்று தாமரை மலரானது மலர்ந்த அதன் இதழ்களை திறக்கும். அப்போது நீங்கள் நறுமணம் நிறைந்து இருப்பீர்கள். மேலும் இந்த நறுமணமானது அர்கதாக்களிடமோ அல்லது போதிசத்வர்களிடமோ வேறுபட்டு

இருக்காது. அவர்கள் இருவரும் புத்தர்கள் தான்; அவர்கள் இருவரும் மெய்ஞ்ஞானம் அடைந்தவர்கள்தான்.

நான் எந்த ஒரு மதத்தையும் சார்ந்தவன் இல்லை என்பதாலும், எந்த ஒரு குறிப்பிட்ட பிரிவையும் சேர்ந்தவன் இல்லை என்பதாலும், நான் வெறுமனே யாருக்கும் சொந்தமானவன் இல்லை என்பதாலும், எனக்கு நானே சொந்தமானவன் என்பதாலும், மக்கள் எங்கு தங்களது சொந்த கருத்துகளில் சிக்கிக் கொள்கிறார்கள் என்பதை என்னால் தெளிவாகப் பார்க்க முடியும். அர்கதாக்களும், போதிசத்துவர்கள் போன்றவர்கள் தான் என்கின்ற கருத்தை போதிதருமர் போன்றவர்களினாலேயே கூட தாங்கிக் கொள்ள முடியவில்லை. அவர் போதிசத்வர்களின் பிரிவைச் சார்ந்தவர்.

மேலும் இது அவருக்கு மட்டுமே உள்ள ஒரு நிலை அல்ல. இதே வழியில் போதிசத்வர்களை கண்டனம் செய்கின்ற அர்கதாக்களும் இங்கு இருந்துள்ளனர். ஆனால் என்னைப் பொறுத்தமட்டில் யாரோ ஒருவர் ஒரு பிரிவைச் சேர்ந்தவராகவோ அல்லது அடுத்த பிரிவைச் சார்ந்தவராகவோ இருந்தாலும் கூட அது ஒரு பொருட்டாகாது. என்னால் முற்றிலும் பாகுபாடின்றி இருக்க முடியும். மேலும் இப்படி நான் பாகுபாடின்றி இருப்பது தான் எனது பிரச்சினையாக இருக்கிறது. ஏனெனில் எனது வாக்குமூலங்களால் மகிழ்ச்சி கொள்ளப் போகிறவர்கள் யார், எனது வாக்குமூலங்களால் மகிழ்ச்சி கொள்ளாமல் இருக்கப் போகிறவர்கள் யார் என்பதைப் பற்றி கவலைப்படாமல் நான் விஷயங்களைக் கூறுகிறேன்.

இது ஒரு விநோதமான உலகமாக இருக்கிறது. உங்களை மகிழ்விக்கின்ற ஏதோ ஒரு விஷயத்தை நான் கூறினால் நீங்கள் அதை எல்லாம் மறந்து விடுவீர்கள். ஆனால் உங்களை மகிழ்ச்சி அடையச் செய்யாத ஏதோ ஒரு விஷயத்தை நான் கூறினால், நீங்கள் அதை மறக்கப்போவதும் இல்லை, மேலும் என்னை நீங்கள் மன்னிக்கப் போவதும் இல்லை.

இயேசுவைப்பற்றி எந்த ஒரு கிறிஸ்தவரும் கூறாத கருத்துகளை நான் கூறி இருக்கிறேன். இந்த இரண்டாயிரம்

ஆண்டுகளில் எந்த ஒரு கிறிஸ்தவரும் செய்யாத அளவுக்கு நான் அவரை பாராட்டி இருக்கிறேன். ஆனால் இயேசு பற்றி சில விஷயங்களை விமர்சிக்கும் போது, உடனடியாக இந்த ஒட்டுமொத்த கிறிஸ்தவ உலகமும் எனக்கு எதிராக திரும்பி விடுகிறது. அவர்கள் சந்தோஷமாக இருந்தார்கள். ஆனால் யாரும் ஒருவார்த்தை கூட கூறவில்லை. ஆனால் நான் சில விஷயங் களை விமர்சனம் செய்தபோது, இந்த ஒட்டுமொத்த கிறிஸ்தவ உலகம், அதாவது கிட்டத்தட்ட இந்த உலகில் பாதிப்பேர், உடனடியாக எனது இயக்கத்தை அழிப்பதற்கு திரும்பிவிட்டனர்.

எனது புத்தகங்கள் போப்பாண்டவரால் தடை செய்யப் பட்டுள்ளன. இயேசுவைப் பற்றிய எனது புத்தகங்களை சில கிறிஸ்தவ அமைப்புகள் பதிப்பித்து வெளியிட்டன. ஆனால் நான் இயேசுவை விமர்சனம் செய்தவுடன், நான் இயேசுவைப் புகழ்ந்துள்ள அந்த புத்தகங்களையே கூட எரித்து விட்டன.

மக்கள் மிகவும் எளிதில் சினம் கொள்பவர்கள். நீங்கள் எதைப்பற்றியாவது பாராட்டினால் அவர்கள் எதுவும் சொல்ல மாட்டார்கள். அவர்களின் மனம் பாராட்டப்படுகிறது என்கிற உண்மைக்காக அவர்கள் வெறுமனே சந்தோஷப்படுவார்கள். அது இயேசுவைப் பற்றியதா அல்லது அது கிறிஸ்தவர்களின் மனம் என்பதா என்கிற கேள்விக்கே அங்கு இடமில்லை. இயேசுவிடம் தவறாக உள்ள சில விஷயங்களை நான் தெளிவாகப் பார்த்து நான் ஏதாவது கூறும்போது, அது கிறிஸ்தவ மனதை காயப்படுத்துகிறது. உதாரணமாக போதிதருமருக்கு எதிராக நர்ன் சில விஷயங்களை கூறிக்கொண்டு இருக்கிறேன். ஆனால் அவருக்கு ஆதரவாக மேலும் பல விஷயங்களையும் கூட கூறிக் கொண்டிருக்கிறேன். ஆனால் அவை எல்லாம் மறக்கப்பட்டு விடும். ஆனால் நான் அவருக்கு எதிராக என்ன கூறுகிறேனோ அதற்கு மகாயான புத்தமதப்பிரிவைச் சார்ந்த நாடுகள் உடனடியாக கலக்கமடைகின்றன.

எனது ஒட்டுமொத்த வாழ்க்கையும், என் ஒட்டுமொத்த வாழ்க்கையின் செயல்பாடும் மக்களிடம் செல்வாக்கை பெறுவது எப்படி என்பதிலேயேயும், மேலும் பகையாளிகளை உருவாக்கு

வது எப்படி என்பதிலேயேயும் இருந்து வருகிறது. ஆனால் துன்பம் என்பது முக்கியமாக வெறுமையானது என்பதை போதிசத்துவர்கள் அறிந்து கொள்கிறார்கள். எனவே அவர்கள் வெறுமையில் இருப்பதன் மூலம், நிர்வாண நிலையில் இருக்கிறார்கள். நிர்வாண நிலை என்பதற்கு பிறப்பும் இல்லாதது, இறப்பும் இல்லாதது என்று அர்த்தமாகும். அது பிறப்பு மற்றும் இறப்பிற்கு அப்பாற்பட்டது மேலும் நிர்வாண நிலைக்கும் அப்பாற்பட்டது.

ஆனால் இதில் போதிசத்துவர்களைப் பற்றி மட்டுமே சொல்லப்பட்டுள்ளது. அர்கதாக்களைப் பற்றி சொல்லப்பட வில்லை. ஆனால் போதிசத்வர்களைப் பற்றி இது எந்த அளவுக்கு குறிக்கிறதோ அதே அளவுக்கு அர்கதாத்களைப் பற்றியும் குறிக்கிறது என்பதை நான் தெளிவாக்க விரும்புகிறேன். மனம் என்பது நகர்ந்து செல்வதை நிறுத்திவிடும்போது அது நிர்வாண நிலைக்குள் நுழைந்து விடுகிறது. நிர்வாண நிலை என்பது வெறுமையான மனம்.

வெறுமையான மனதை தவறாக திரித்துக் கூறமுடியாது. அதை ''மனம் அற்ற நிலை'' என்று அழைப்பது சிறப்பாக இருக்கும் என்று நான் அறிவுறுத்த விரும்புகிறேன்; ஏனெனில் மனம் என்பது ஒருபோதும் வெறுமையாக இருக்காது. மனம் என்பது வெறுமையானதாக ஆகிவிடும்போது அது அங்கு இருப்பதில்லை. வெறுமையான மனம் என்பது வார்த்தைகளின் முரண்பாடான பயன்பாடு ஆகிவிடுகிறது. வெறுமையான மனம் என்று எதுவும் இல்லை; மனம் என்பது எப்போதும் எண்ணங்களின் செயல்பாட்டிலேயே இருக்கிறது. அதில் எப்போதும் எண்ணங்கள், உணர்ச்சிகள், கனவுகள், கற்பனைகள் ஆகியவற்றின் போக்குவரத்து நடந்து கொண்டே இருக்கிறது.

மனம் என்பது வெறுமையானதாக ஆகிவிடும்போது, அங்கே மனம் அற்ற நிலை வந்து விடுகிறது. எனவே மனம் அற்ற நிலை என்கிற வார்த்தையை பயன்படுத்துவதே சிறந்தது. வெறுமையான மனம் என்பது தவறாக வழிநடத்தி சென்றுவிடும். மனதைக்

காலியாக்க வேண்டியது ஒன்று தான் தாங்கள் செய்யவேண்டிய விஷயம் என்று மக்கள் நினைக்க ஆரம்பித்து விடுவார்கள்.

நீங்கள் முடிவில்லா காலம் வரையில் செயல்பட்டாலும் உங்களால் மனதை காலியானதாக ஆக்குவதற்கு முடியாது. ஒட்டுமொத்தமாக நீங்கள் அதை கைவிட்டுவிட வேண்டும். தவணை முறையில் நீங்கள் அதை காலி செய்து கொண்டு போகமுடியாது, ஏனெனில் இங்கு நீங்கள் காலி செய்து கொண்டிருப்பீர்கள். ஆனால் எல்லாத் திசைகளில் இருந்தும் விஷயங்கள் அதற்குள் வந்து கொண்டிருக்கும்.

உங்களால் மனதை காலியானதாக ஆக்க முடியாது.

ஒன்று நீங்கள் அதை பிடித்து தொங்கிக் கொண்டிருக்கலாம் அல்லது நீங்கள் அதை வெறுமனே கீழே போட்டு விடலாம்.

இதில் மத்திமமான பாதை என்பது கிடையாது.

*யாருமே குடிபுகாத இடம் என்பது பேராசை, கோபம், மற்றும் மாயை இல்லாமல் இருக்கின்ற இடமே ஆகும்.*

*மனம் என்பது ஒரு கற்பனை என்றும் மேலும் அதில் உண்மையான எதுவும் இல்லை என்றும் அறிந்து கொள்கின்ற ஒருவர் தனது சொந்த மனமானது இருக்கிறது என்றோ அல்லது இல்லை என்றோ அறிந்து கொள்கிறார். சாகும் இயல்புடைய வர்கள் மனதை உருவாக்கிக் கொண்டே இருக்கிறார்கள். அதன் இருப்பை ஏற்றுக் கொண்டே இருக்கிறார்கள். அர்கதாக்கள் மனம் என்பது இல்லை என்று ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் போதிசத்வர்களும், புத்தர்களும், மனதை உருவாக்குவதும் இல்லை அல்லது மனதை ஒதுக்குவதும் இல்லை. மனம் என்பது இருக்கவும் இல்லை அல்லது இல்லாமலும் இல்லை என்பதற்கு இதுதான் அர்த்தமாகும். இருக்கவும் இல்லாத அல்லது இல்லாமலும் இருக்கின்ற அந்த மனம் தான் நடுப்பாதை என்று அழைக்கப்படுகிறது.*

போதிதருமர் அர்கதாக்களை கண்டனம் செய்வதற்கு ஒருபோதும் மறந்துவிடவில்லை. ஏதோ ஒன்று அவரை இடைவிடாமல் காயப்படுத்திக் கொண்டே இருப்பது போன்று

தெரிகிறது. சூழ்நிலையானது மீண்டும் அதே போன்று ஆகிவிட்டது. அர்கதாக்கள் என்பதற்கு பதிலாக பெயரளவில் தங்களைத் துறவிகள் மற்றும் புனிதர்கள் என்று அழைத்துக் கொள்பவர்கள் தான் மனதை ஒதுக்கித் தள்ளுகின்றனர் என்று அவர் சொல்லி இருக்க வேண்டும். ஆனால், போதிசத்வர்களும், அர்கதாக்களும், மற்றும் புத்தர்களும் மனதை உருவாக்குவதும் இல்லை அல்லது ஒதுக்குவதும் இல்லை. அவர்கள் வெறுமனே அதைக் கடந்து அதற்கு அப்பால் போய்விடுகின்றனர்; அவர்கள் அதோடு சண்டை போடுவதில்லை. ஏனெனில் மனதோடு போராடுதல் என்பது அதற்கு ஓர் உண்மையான நிலையைக் கொடுப்பதாகி விடுகிறது. அதன் சக்தியை அங்கீகரிப்பதாக ஆகிவிடுகிறது. அதோடு போராட வேண்டிய அவசியம் கிடையாது. ஒருவர் வெறுமனே ஒரு சாட்சியாக மட்டுமே இருக்கவேண்டும்.

எந்த போராட்டமும் இல்லாமல், வெறுமனே சாட்சியாக இருக்கும்போது மனம் என்பது மறைந்து போய்விடுகிறது.

சாட்சி பாவனை என்னும் நெருப்பின் முன்னால், மனமானது ஒரு நொடிப்பொழுதுகூட உங்களுக்குள் இருப்பதற்கான சாத்தியங்கள் கிடையாது. சாட்சிபாவனை என்னும் நெருப்பை உருவாக்குங்கள், விழிப்புணர்வு என்னும் ஒளிச்சுடரை உருவாக்குங்கள். இந்த காரியம் அர்கதாக்கள், போதிசத்வர்கள், மற்றும் புத்தர்கள் ஆகிய அனைவராலும் எந்த ஒரு வித்தியாசமும் இன்றி செய்யப்படுகிறது.

*மனம் உங்களுக்குள் உணர்ச்சியூட்டவில்லை என்றால், வெளியில் இந்த உலகம் என்பது எழாது.* இது ஒரு அழகான வாக்குமூலம், அளவுகடந்த கருத்துகளை கொண்டது. வெளியில் உள்ள இந்த உலகமானது உங்களது மனதின் திரையிடல் தானே தவிர அது வேறு எதுவாகவும் இல்லை. உங்களது மனமானது உங்களுக்குள் உணர்ச்சியூட்டப்படும்போது, வெளியில் இந்த உலகம் உருவாக்கப்படுகிறது.

ஒருமுறை இப்படி நடந்தது. கெயின்ரிக் கெயின் என்கிற ஜெர்மானிய கவிஞர் காட்டில் வழி தவறிவிட்டார். அவர்

வேட்டைக்கு சென்றிருந்தார். அப்போது அவர் வழி தவறியதோடு மட்டுமல்ல அவரது தோழரையும் விட்டு பிரிந்துவிட்டார். மூன்று நாட்களுக்கு அவரால் எந்த ஒரு மனிதரையும் அந்தக் காட்டில் காண இயலவில்லை. அவர் முற்றிலும் களைப்புடனும், பசியுடனும் மேலும் வன விலங்குகளைப் பற்றி இடைவிடாமல் கவலைப்பட்டுக் கொண்டும் இருந்தார்.

இரவு நேரத்தில் அவர் கஷ்டப்பட்டு ஒரு மரத்தின் மீது ஏறி உட்கார்ந்து கொண்டு வனவிலங்குகளிடமிருந்து தன்னை எப்படியோ பாதுகாத்துக் கொண்டார். மூன்றாம் நாள் இரவு ஒரு பௌர்ணமி இரவாக இருந்தது. அப்போது அவர் ஒரு மரத்தின் மீது உட்கார்ந்து கொண்டிருந்தார். மூன்று நாட்களாக பசி, பட்டினி களைப்பு ஆகியவற்றினால் அவர் தூங்கவே இல்லை. அப்போது அவர் அந்த அழகான முழு நிலவைப் பார்த்தார். அவர் நிலவைப்பற்றி அநேக அழகான கவிதைகளை எழுதி இருக்கிறார். ஆனால் இந்த நாள் மிகவும் வித்தியாசமாக இருந்தது. ஏனெனில் அவரது மனம் வேறுபட்ட ஒரு சூழ்நிலையில் இப்போது இருந்தது.

வானத்தில் நிலவு நகர்ந்து செல்வதற்கு பதிலாக வட்டமாக ரொட்டித்துண்டு ஒன்று நகர்ந்து செல்வது போன்று அவர் பார்த்தார். அவரது நாட்குறிப்பேட்டில், ''என்னால் எனது கண்களையே நம்ப முடியவில்லை. எப்போதும் நான் எனது அன்புக்குரியவளின் முகத்தைத் தான் நிலவில் காண்பதுண்டு. அதை ஒரு ரொட்டித் துண்டாக ஒருபோதும் நான் நினைத்துப் பார்த்தது கூட கிடையாது,'' என்று அவர் எழுதினார்.

எனவே மூன்று நாட்கள் பசியோடு இருக்கின்ற ஒருவரின் மனமானது உணவு என்னும் ஒரே ஒரு விஷயத்தை மட்டுமே திரையிட்டுப் பார்க்கும். நிலவு மறைந்து போய் வட்ட வடிவ ரொட்டித் துண்டு ஒன்று வானத்தில் மிதப்பது போன்று இருந்தது. அங்கு என்ன இல்லையோ அதைத்தான் நீங்கள் பார்க்கிறீர்கள். மனம் எதைத் திரையிட்டு காட்டுகிறதோ அதையே நீங்கள் பார்க்கிறீர்கள்.

நான் முல்லா நஸ்ருதீன் பற்றிய ஒரு கதையை உங்களுக்கு சொல்லி இருக்கிறேன். அவருக்கு மலைமீது ஒரு அழகான வீடு இருந்தது. அந்த வீட்டினை கவனித்துக் கொள்வதற்கு, இருப்பதிலேயே மிகவும் அசிங்கமான ஒரு பெண்மணியை அவர் சம்பளத்திற்கு அமர்த்தி இருக்கிறார். முல்லாவின் நண்பர்கள் அனைவரும் அவரிடம், ''முல்லா, இதற்கு ஏதாவது ஒரு காரணம் இருக்கும். நீ ஏன் இப்படிப்பட்ட மிகவும் அசிங்கமான பெண்மணியைத் தேர்ந்தெடுத்தாய்?,'' என்று கேட்டனர். அதற்கு முல்லா, ''அதற்கு ஒரு காரணம் உள்ளது. மேலும் அதற்கான நேரம் வரும்போது அதை நான் உங்களுக்கு கூறுகிறேன்,'' என்றார். அவர் இப்படிக் கூறியது அவரது நண்பர்களுக்கு மேலும் ஆர்வத்தை தூண்டியது. எனவே அவர்கள் திரும்பத் திரும்ப கேட்டார்கள். அந்த அசிங்கமான பெண்மணி பற்றி இடைவிடாது ஆர்வத்தூண்டுதலால் முல்லாவிடம் விசாரித்தனர். ஓய்வெடுப் பதற்கு எப்போதாவது முல்லா அந்த மலைக்கு செல்வதுண்டு. அப்போது அவர் தனது நண்பர்களிடம், ''நான் மூன்று வாரங்கள் ஓய்வெடுக்கப் போகிறேன்,'' என்று நண்பர்களிடம் கூறிவிட்டு செல்வார், ஆனால் அவர் ஒரு வாரத்தில் திரும்பி வந்துவிடுவார்.

முல்லாவின் நண்பர்கள் அவரிடம், ''நீ மூன்று வாரங்கள் ஓய்வெடுக்கப் போவதாக கூறினாயே?'' என்று கேட்பார்கள். அதற்கு அவர், ''ஆம், நான் மூன்று வாரங்கள் ஓய்வெடுக்கத்தான் சென்றேன். ஆனால் ஒரு விஷயம் நடந்துவிட்டது எனவே நான் திரும்பி வரவேண்டியதாயிற்று,'' என்று கூறினார்.

இப்படி மீண்டும் மீண்டும் நடந்தது. ஆறு வாரங்கள் ஓய்வெடுக்கப் போகிறேன் என்று அவர் கூறிவிட்டு போவார் ஆனால் இரண்டு வாரங்களுக்குள் அவர் திரும்பி வந்துவிடுவார். இறுதியாக அவரது நண்பர்கள் அவரிடம், '' நீ செய்கின்ற காரியம் புதிர் போன்று உள்ளது. ஒரு அசிங்கமான பெண்மணியை நீ அங்கு வைத்திருக்கிறாய், மூன்று வாரங்கள் தங்கப் போகிறேன் என்று கூறிவிட்டு நீ செல்கிறாய், ஆனால் நீ ஒரு வாரத்தில் வந்து விடுகிறாய். நீ சொன்ன வார்த்தையை ஒருபோதும் காப்பாற்று வதில்லையே,'' என்று கேட்டனர்.

உடனே முல்லா அவர்களிடம், ''இப்போது நான் உங்களிடம் உண்மையை சொல்லி விடுவது நல்லது. உண்மை என்னவென்றால், ஒரு குறிப்பிட்ட காரணத்திற்காகத் தான் நான் அந்த அசிங்கமான பெண்மணியை வேலைக்கு வைத்திருக்கிறேன். நான் அந்த மலை வீட்டிற்கு போனவுடன் அந்த பெண்மணி அசிங்கமாகத் தெரிவாள். அசிங்கம் மட்டுமல்ல, பார்க்கவும் சகிக்காது. ஆனால் அங்கு வேறு பெண்கள் இல்லாத காரணத்தினால், ஆறு அல்லது ஏழு நாட்களுக்கு பிறகு அவள் அசிங்கமாகவும் கூட தெரியமாட்டாள். நான்கு வாரங்களுக்கு பிறகு அவள் அழகாக இருப்பதாகக் கூட தெரிவாள். அந்த நேரத்தில் தான் நான் கிளம்பி வந்து விடுவேன். இப்போது ஆபத்து அருகில் வந்துவிடுகிறது. அந்தப் பெண் அழகானவளாகத் தெரிய ஆரம்பிக்கின்ற போது, நான் உடனடியாக மலையை விட்டு கீழே வந்துவிடுவேன் ஏனெனில் அப்போது ஆபத்து ஆகிவிடும்.

மனம் எப்போதும் அதற்கு சொந்தமான உண்மை நிலைகளை உருவாக்க ஆரம்பிக்கிறது. உண்மையிலேயே எது உண்மை நிலை என்பதைப் பற்றி அப்போது அது கவலைப்படுவதில்லை. அப்போது அது தனது சொந்த கற்பனையை உருவாக்கிக் கொள்ளும். அந்த மனமானது நான்கு வாரங்களாக ஒரு பெண்ணிடம் உறவு கொள்ளாமல் இருந்து விட்டதால், அதற்கு குறிப்பிட்ட பசி, உடல்பசி வந்து விடுகிறது. எனவே அந்த பசிதான் ஒரு ரொட்டித் துண்டை உருவாக்கி விடுகிறது.

மக்கள் அழகான பெண்களை, ''போஜனம்'' (சாப்பாடு) என்ற அழைப்பது எதிர்பாராமல் நடந்தது அல்ல. ஒரு அழகான பெண், கிட்டத்தட்ட எல்லா மொழிகளிலும், ''ஒரு அழகான போஜனம்'' என்று அழைக்கப்படுவது ஏன்?

ஒருவேளை, உணவானது பசியாகவும், உடல்பசியாகவும் இருப்பதைப் போன்று, காமம் என்பதும் பசியாகவும், உடல்பசியாகவும் இருப்பதனால் அப்படி அழைக்கப்படலாம். இரண்டுமே வெவ்வேறு பசிகள்; ஆனால் இரண்டுமே பசிகள் தான். உங்களைச் சுற்றிலும் நீங்கள் காண்கின்ற இந்த உலகம் பெரும்பாலும் உங்களது மனதின் ஒரு திரையிடல் போன்றுதான்

உள்ளது. மனமானது முற்றிலும் மறைந்துவிடும்போது, நீங்கள் முற்றிலும் வேறுபட்ட ஒரு உலகத்தை காண்பீர்கள். மனதின் திரையிடல்கள் எல்லாம் போய்விடும் போது, அதன்பின்னர் அங்கு உண்மைநிலை, உண்மையான புலன் உணர்வு பொருளாக மட்டுமே இருக்கும். மேலும் உண்மைப் புலன் உணர்வுப் பொருளோடு பற்றுதல் இருக்காது. பற்றுதல் என்பது உங்களது திரையிடும் மனதினால் மட்டுமே எழுகிறது.

மனம் உங்களுக்குள் உணர்ச்சியூட்டவில்லை என்றால், வெளியில் இந்த உலகம் என்பது எழாது. உலகம், மனம் ஆகிய இரண்டும் தெள்ளத் தெளிவாக ஆகிவிடும்போது, அது உண்மையான பார்வை என்றாகிறது. மேலும் இப்படிப்பட்ட புரிதலே உண்மையான புரிதலாக இருக்கிறது.

அடிப்படை விஷயங்களில் போதிதருமர் சரியாகவே இருக்கிறார். எனவே அவரை, எந்த அளவுக்கு சாத்தியப்படுமோ அந்த அளவுக்கு ஆழ்ந்து புரிந்து கொள்ளவேண்டும். ஏனெனில் நீங்கள் நடந்து செல்லும் பாதையில் அவர் உங்களுக்கு அபரிமிதமாக உதவ முடியும். ஆனால் அவரது குருட்டு இடங்களையும் நினைவில் வைத்திருங்கள்.

அந்த குருட்டு இடங்களை தவிர்த்து விடுங்கள், ஏனெனில் அந்த குருட்டு இடங்கள், அவரது அழகான தோற்றத்தை கொஞ்சம் குறைவாக காட்டுகிறது. அந்த இடங்கள் இல்லாமல் இருந்திருந்தால் இதைவிடவும் அவர் அழகான தோற்றமுள்ள வராக இருந்திருப்பார். அந்த இடங்கள் அவரது ஞானத்தினை கொஞ்சம் களங்கமுள்ளதாகவும், கொஞ்சம் பாதிக்கப்பட்ட தாகவும் ஆக்கிவிடுகிறது. அதனால் அது குறைகள் அற்றதாக இல்லை. அது முழுமையானதாகவும், குறைகள் அற்றும் இல்லை. ஏதோ ஒன்று இல்லாமல் உள்ளது; அவர் தப்பெண்ணம் கொண்டுவிட்டார். அவர் ஒரு கட்சியில் சேர்ந்துவிட்டார்.

உண்மையான புரிதல் உள்ள ஒருமனிதன் தனிமையாக இருப்பான். அவன் எந்த ஒரு கட்சியையும், எந்த ஒரு அமைப்பையும், எந்த மதத்தையும், எந்த திருச்சபையையும் சேர்ந்தவனாக இருக்க மாட்டான். புரிதலின் எல்லா

வடிவங்களுக்கும் அவன்; கிடைக்கக் கூடியவனாக இருப்பான். ஆனால் அவன் பாகுபாடற்று இருப்பான். என்னைப் பொறுத்த மட்டில் இந்த பாகுபாடற்ற தன்மையானது மதத்தின் அடிப்படைகளில் ஒன்றாகும்.

ஒரு கிறிஸ்தவன் மதப்பற்றாளனாக இல்லை ஏனெனில் அவன் வெறுமனே ஒரு கிறிஸ்தவனாக இருக்கிறான். ஒரு இந்து சமயப்பற்றாளனாக இல்லை ஏனெனில் அவன் ஒரு அமைப்பு ரீதியான கோட்பாட்டின் ஒரு அங்கமாக ஆகிவிட்டான். ஒரு சமணன் சமயப்பற்றாளனாக இல்லை ஏனெனில் அவன் ஒரு குறிப்பிட்ட கட்சியைச் சேர்ந்தவனாக ஆகிவிட்டான்.

உண்மையான சமயப் பற்றுடையவன் தனிமனிதனாகவே இருக்கிறான். அவன் தனிமையில் இருக்கிறான். மேலும் அவனது தனிமையில் மாபெரும் அழகும், மாபெரும் கம்பீரமும் இருக்கிறது.

நான் உங்களுக்கு தனிமையைக் கற்றுக் கொடுக்கிறேன். நான் தனிமையின் அழகை, அதன் கம்பீரத்தை, அதன் நறுமணத்தை உங்களுக்கு கற்றுக் கொடுக்கிறேன்.

உங்களது ஏகாந்தத்தில் நீங்கள் எவரெஸ்ட்டின் உச்சியைச் சென்றடைவீர்கள். உங்களது ஏகாந்தத்தில் நீங்கள் தொலைதூர நட்சத்திரத்தையும்கூட தொடுவீர்கள். உங்களது ஏகாந்தத்தில் நீங்கள் உங்களது முழு சக்தியுடன் மலர்ச்சி அடைவீர்கள்.

ஒருபோதும் ஒரு நம்பிக்கையாளனாக ஆகிவிடாதீர்கள், எதையும் பின்பற்றுபவராக ஒருபோதும் ஆகிவிடாதீர்கள், எந்த ஒரு அமைப்பின் அங்கமாகவும் ஆகிவிடாதீர்கள். உங்களுக்கு நீங்களே உண்மையான அதிகாரத்துடன் இருங்கள். உங்களுக்கு நீங்களே நம்பிக்கைத் துரோகம் செய்து விடாதீர்கள்.

○

“ஞானத்தை அதன் போக்கில் விட்டுவிடாமல் இருப்பது முட்டாள்தனமாகும்” என்று சூத்திரங்கள் கூறுகின்றன. மனம் என்பது இல்லாமல் இருக்கும்போது, புரிதல் மற்றும் புரியாமை ஆகிய இரண்டுமே உண்மையானவைதான். மனம் என்பது இருக்கும்போது, புரிதல் மற்றும் புரியாமை ஆகிய இரண்டும் பொய்யானவை.

நீங்கள் புரிந்து கொண்டால், உண்மை நிலையானது உங்களைச் சார்ந்து இருக்கிறது. நீங்கள் புரிந்து கொள்ளவில்லை என்றால், நீங்கள் உண்மை நிலையைச் சார்ந்து இருக்கிறீர்கள்.

உண்மை நிலையானது உங்களைச் சார்ந்து இருக்கும்போது, உண்மை அல்லாதது உண்மையானதாக ஆகிவிடுகிறது. நீங்கள் உண்மை நிலையைச் சார்ந்து இருக்கும்போது, உண்மையானது பொய்யானதாக ஆகிவிடுகிறது. நீங்கள் உண்மைநிலையைச் சார்ந்து இருக்கும்போது, எல்லாமே பொய்யானதாக இருக்கிறது. உண்மை நிலையானது உங்களைச் சார்ந்து இருக்கும்போது, எல்லாமே உண்மையானதாக இருக்கிறது.

இவ்வாறாக, ஞானி உண்மைநிலையைக் கண்டுகொள்ள அவரது மனதைப் பயன்படுத்த மாட்டார். அல்லது உண்மை நிலையானது அவரது மனதைக் கண்டு கொள்ள பயன்படுத்த மாட்டார் அல்லது அவரது மனம், அவரது மனத்தையே கண்டு கொள்ளவும் பயன்படுத்தமாட்டார். அல்லது உண்மைநிலையைக் கண்டுகொள்ள உண்மைநிலையில் பயன்படுத்தவும் மாட்டார். அவரது மனமானது உண்மைநிலை எழுவதற்கு விடுவதில்லை. மேலும் உண்மை நிலையும் அவரது மனம் எழுவதற்கு

விடுவதில்லை. எனவே அவரது மனம் மற்றும் உண்மை நிலை ஆகிய இரண்டும் அசையாமல் இருப்பதால், அவர் எப்போதும் சமாதிநிலையில் இருக்கிறார்.

''எதுவுமே அதற்கென்று சொந்தமான இயல்பைப் பெற்றிருக்கவில்லை,'' என்று சூத்திரங்கள் கூறுகின்றன. செயல் படுங்கள். கேள்வி கேட்காதீர்கள். கேள்வி கேட்கும்போது நீங்கள் தவறு செய்து விடுகிறீர்கள். நீங்கள் மதி மயக்கத்தில் இருக்கும் போது, ஆறு புலன்களும், ஐந்து நிழல்களும் துன்பத்தையும், அழிவையும் உருவாக்கி விடுகின்றன. நீங்கள் விழித்தெழுந்து விடும்போது, ஆறு புலன்களும், ஐந்து நிழல்களும் நிர்வாணம் மற்றும் அழிவில்லாமையை உருவாக்கி விடுகின்றன.

பாதையைத் தேடுகின்ற ஒருவர் தனக்கு அப்பால் எதையும் பார்ப்பதில்லை. மனம் தான் வழி என்பதை அவர் அறிந்து கொள்கிறார் ஆனால் அவர் மனதைக் கண்டு கொள்ளும்போது அவர் எதையுமே கண்டு கொள்வதில்லை. மேலும் அவர் வழியைக் கண்டு கொள்ளும்போது, அவர் எதையுமே கண்டு கொள்வதில்லை. வழியைக் கண்டு பிடிப்பதற்கு மனதைப் பயன்படுத்த முடியும் என்று நீங்கள் நினைத்தால், நீகங்கள் ஏமாற்றமடைவீர்கள். நீங்கள் ஏமாந்துவிடும்போது புத்தநிலை இருக்கிறது. நீங்கள் விழிப்புடன் இருக்கும்போது அது இருப்பதில்லை. ஏனெனில் விழிப்புணர்வுதான் புத்தநிலை.

வாழ்வையம் சாவையும் வெறுக்காதீர்கள்; அல்லது வாழ்க்கை மற்றும் மரணத்தை நேசிக்காதீர்கள். உங்களது ஒவ்வொரு எண்ணமும் மாயை இல்லாமல் இருக்கும்படி பார்த்துக் கொள்ளுங்கள். அப்போது நிர்வாண நிலையின் ஆரம்பத்தை வாழ்விலேயே நீங்கள் கண்டு கொள்வீர்கள், மேலும் மரணத்தில், மறுபிறவி கிடையாது என்பதற்கான உறுதிப்பாட்டினை அனுபவிப்பீர்கள்.

ஒரு வடிவத்தைப் பார்க்கும்போது அந்த வடிவத்தினால் அசுத்தப்படுத்தப்படாமல் பார்ப்பது அல்லது ஒரு ஒலியைக் கேட்கும்போது அந்த ஒலியினால் மாசுபடுத்தப்படாமல் கேட்பது தான் விடுதலையாகும். உருவங்களின் மீது பற்று கொள்ளாத

கண்கள் தான் ஜென்னின் கதவுகளாக இருக்கின்றன. ஒலியின் மீது பற்று கொள்ளாத காதுகளும் கூட ஜென்னின் கதவுகளாக உள்ளன. சுருக்கமாக கூறவேண்டும் என்றால் விஷயங்களின் இருப்பு நிலையை உணர்ந்து கொண்டு அதன் மீது பற்று இல்லாமல் இருப்பவர்கள் முக்தி அடைகிறார்கள்.

மாயை இல்லாதபோது மனம் என்பது புத்தர்களின் பூமியாக இருக்கிறது. மாயை இருக்கும்போது மனம், நரகமாக இருக்கிறது.

ஒரு சில விஷயங்களைப் புரிந்து கொண்டால் போதி தருமரின் போதனைகளைப் புரிந்து கொள்வது சுலபமாக இருக்கும். முதலாவதாக மறுபிறவிக் கொள்கை உள்ளது. இந்தியாவிற்கு வெளியே தோன்றிய மதங்கள் எல்லாம் ஒரே ஒரு பிறவியை மட்டுமே நம்புகின்றன. இந்தியாவில் பிறந்த மதங்கள் ஒவ்வொரு விஷயத்திலும் வேறுபடுகின்றன. ஆனால் மறு பிறவியைப் பொறுத்தமட்டில் வேறுபடுவதில்லை. உங்களுக்கு ஒரே ஒரு பிறவி மட்டும் கிடையாது என்று அவை எல்லாம் வலியுறுத்து கின்றன. இதற்கு முன்பு நீங்கள் ஆயிரக்கணக்கான பிறவிகள் எடுத்திருக்கிறீர்கள். மேலும் நீங்கள் உங்களது சுய இயல்பை உணராத வரையில் மீண்டும் மீண்டும் பிறவிகள் எடுத்துக் கொண்டே செல்வீர்கள்.

வாழ்க்கை என்பது ஒரு பள்ளிக்கூடம் மட்டுமேயாகும். எனவே நீங்கள் மெய்ஞ்ஞானத்தைக் கற்றுக் கொள்ளாத வரையும் நீங்கள் பிறப்பு, இறப்பு என்னும் வட்டத்தில் நகர்ந்து கொண்டே இருப்பீர்கள்.

இது மிகவும் முக்கியமான ஒன்றாகும்.

ஒரு பிறவியில் சராசரியாக எழுபது ஆண்டுகள் மட்டுமே இருக்கிறது என்னும் போது, நீங்கள் பாதையைத் தேடுவதற்கும், உங்களது ஆன்மாவைத் தேடுவதற்கும், தியானம் செய்வதற்கும் அதிக நேரம் உங்களுக்கு இருக்காது. எழுபது ஆண்டுகள் என்பது மிகவும் குறுகிய காலம். அதில் மூன்றில் ஒரு பகுதி தூக்கத்தில் வீணாகி விடுகிறது; நீங்கள் உயிர்வாழ்வதற்கான பணத்தை சம்பாதிப்பதற்கான கல்வியில் மேலும் மூன்றில் ஒருபகுதி காலம்

வீணாகி விடுகிறது. அதன் பிறகு மீதமிருக்கிற மூன்றில் ஒருபகுதி அநேக வழிகளில் உங்களால் வீணாக்கப்பட்டு விடுகிறது. ஏனெனில் அந்த நேரத்தில் என்ன செய்வது என்று உங்களுக்கு எதுவும் தெரியாது.

சீட்டு விளையாட்டு மற்றும் சதுரங்க விளையாட்டு விளையாடுகின்ற மனிதர்களை நான் பார்த்திருக்கிறேன். நான் அவர்களிடம், ''இதை விட சிறந்த ஒரு வேலையை உங்களால் கண்டு கொள்ள முடியாதா?'' என்று கேட்டிருக்கிறேன். அதற்கு அவர்களின் பதில் எப்போதும் ஒரே மாதிரிதான் இருக்கிறது. அவர்கள் நேரத்தை கொன்று போட்டுக் கொண்டு இருக்கிறார்கள். இப்படித்தான் மனிதனின் விழிப்புணர்வற்ற நிலை உள்ளது.

உங்களிடம் அதிக நேரம் இல்லை.

நேரத்தை கொன்று போடுவதை உங்களால் செய்ய முடியாது.

அதற்கு மேலாக நேரம் உங்களை கொன்று கொண்டு இருக்கிறது. நேரத்தை உங்களால் கொல்ல முடியாது. ஒவ்வொரு நொடிப்பொழுதும் காலமானதும், உங்களது மரணத்தை நெருக்கத்தில் கொண்டு வருகிறது.

உங்களது செயல்களை எல்லாம் நீங்கள் எண்ணிப் பார்த்தால், உதாரணமாக ஒரு நாளைக்கு இரண்டுமுறை உங்களது தாடியை மழிப்பதில் எவ்வளவு நேரம் வீணடிக்கப்படுகிறது! வானொலியைக் கேட்டல் அல்லது தொலைக்காட்சியைப் பார்த்தல் ஆகியவற்றில் எவ்வளவு நேரம் வீணடிக்கப்படுகிறது. ஒவ்வொரு அமெரிக்கரும், ஒவ்வொரு நாளும் தொலைக் காட்சியைப் பார்ப்பதில் ஏழரை மணிநேரம் வீணாக்குகிறார் என்று ஒரு அமெரிக்க கணக்கெடுப்பு காட்டுகிறது. அதாவது வாழ்க்கையில் மூன்றில் ஒரு பகுதியை அவர் வெறுமனே நாற்காலியில் பசைபோட்டு ஒட்டிக்கொண்டு எல்லாவிதமான முட்டாள்தனங்களையும் தொலைக்காட்சியில் பார்த்துக் கொண்டு நேரத்தை வீணாக்கிக் கொண்டு இருக்கிறார்.

சிகரெட், மற்றும் சுருட்டு பிடிப்பதில் நீங்கள் எவ்வளவு நேரத்தை வீணடிக்கிறீர்கள்? இடைவிடாமல் சங்கிலித்

தொடர்போல புகைப்பிடிப்பவர்கள் இங்கு இருக்கிறார்கள். ஒருபோதும் எந்த ஒரு செய்தியையும் கொண்டுவராத செய்தித்தாள்களைப் படிப்பதில் நீங்கள் எவ்வளவு நேரத்தை வீணடிக்கிறீர்கள்! அவை கொண்டு வருகின்ற செய்திகள் எல்லாம் சுகமற்றவை அதாவது கொலைகள், கற்பழிப்புகள், தற்கொலைகள், போர்கள் போன்ற செய்திகளைத்தான் அதில் வருகின்றன. இதுதான் உலகம். இதுதான் நமது வாழ்க்கை என்று நீங்கள் நம்பும்படி அவை செய்துவிடுகின்றன. உங்களது பொறுப்பில் இருந்து அவை உங்களை விடுவித்து விடுகின்றன. இந்த ஒட்டுமொத்த உலகமும் இப்படித்தான் உள்ளது என்று அவை சமாதானப்படுத்துகின்றன. இங்கு எதுவுமே தவறு இல்லை, எல்லாரும் அதைத்தான் செய்து கொண்டு இருக் கிறார்கள் என்று கூறி உங்களை சமாதானப் படுத்துகிறது.

யாரோ ஒருவர் மெய்ஞ்ஞானம் அடைந்துவிட்டார் என்கிற செய்தியை அவை ஒருபோதும் கொடுப்பதில்லை. ஒருவேளை அது ஒரு செய்தியாக இல்லாமல் இருக்கலாம். யாரோ ஒருவர் தியானத்தின் ஆழ்ந்த பகுதிக்குள் நுழைவது செய்தியாகாது. ஒருவேளை அது செய்தி அல்ல போலும். யாரோ ஒருவர் அமைதியும் மௌனமும் நிறைந்தவராகி கோபம், பேராசை, வேதனை ஆகியவற்றை கடந்து சென்று இருக்கலாம். அது செய்தியாக வருவதில்லை.!

''செய்தி என்பது என்ன?'' என்று ஒருமுறை பெர்னாட் ஷாவிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர், ''நாய் ஒன்று ஒரு மனிதனைக் கடித்தால் அது செய்தி அல்ல. ஒரு மனிதன் ஒரு நாயைக் கடித்துவிட்டால் அது ஒரு செய்தி,'' என்று கூறினார். எத்தனை மனிதர்கள் நாய்களை கடித்துக் கொண்டு இருக்கிறார்கள் என்பதைப் படித்துக் கொண்டு நீங்கள் எவ்வளவு நேரத்தை வீணாக்கி கொண்டு இருக்கிறீர்கள்! நீங்கள் கவனமாக எண்ணிக்கை செய்து பார்த்தால், உங்களது எழுபது வருட வாழ்க்கையில், உங்களுக்காக ஏழு நிமிடங்கள் கூட செலவழிப்பதற்கு உங்களுக்கு நேரம் இல்லை என்பதைக் கண்டு

நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். இது ஒரு முட்டாள்தனமான சூழ்நிலை.

ஆனால், ஒரே ஒரு பிறவி மட்டுமே உள்ளது என்றாகி விட்டால், அப்போது அதில் மாபெரும் வேகம் இருக்கிறது. மேலை நாடுகள் வேகத்திற்கு அடிமையாகி இருப்பது ஏன்? யூதமதம், கிறஸ்தவமதம், இஸ்லாம் ஆகியவற்றால் கொடுக்கப் பட்ட ஒரே ஒரு பிறவி என்னும் கொள்கையானது மக்களை வேகமானவர்களாக ஆக்கிவிட்டது. அவர்கள் எப்போதும் ஓடிக்கொண்டே இருக்கின்றனர். ஏனெனில் வாழ்க்கை என்பது குறுகியது; ஆனால் அதில் நிறைவேற்றப்பட வேண்டிய ஆசைகள் அநேகம் இருக்கின்றன. அந்த குறுகிய காலத்தில் அவர்கள் பணக்கார மனிதராக ஆகவேண்டும். மிகப்பெரிய அதிகாரத்தை அவர்கள் அடையவேண்டும். அவர்கள் பெருமைக்குரியவர் ஆகவேண்டும். இப்படி அவர்கள் ஆயிரத்தோரு காரியங்களைச் செய்தாக வேண்டும். ஆனால் வாழ்க்கையோ மிகவும் குறுகியது. எனவே எல்லாவற்றையும் முடிந்த அளவுக்கு வேகமாக செய்து முடிப்பது மட்டுமே ஒரே வழியாகும்.

மேலைநாட்டில் உள்ள இல்லத்தரசிகளில் அநேகம் பேருக்கு சமையல் என்றால் என்ன என்று தெரியாது. உணவுப் பொருள்கள் அடைக்கப்பட்ட டப்பாக்களை திறப்பது எப்படி என்று அறிந்து கொண்டவர் மட்டுமே சிறந்த இல்லத்தரசியாக இருக்கிறார். எல்லாமே விரைவாகவும், வேகமாகவும் செய்யப்பட வேண்டும். எனவே சமைப்பதைப் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்?

அமைதியான, அசையாத நிலையில் யாருமே இல்லை; அவர்களால் இருப்பதற்கு முடியாது. அது காலத்தை வீணடிப்பதுபோல் தெரிகிறது. அமைதியாக அமர்ந்து கொண்டு, எதுவுமே செய்யாமல் இருப்பது தான் தியானத்திற்கான அஸ்திவாரம். ஒரு பிறவி என்பது மிகவும் குறுகிய காலம் மட்டுமே இருக்கின்ற காரணத்தினால், மேலை நாடுகளில் தியானம் என்பது சாத்தியப்படுவதில்லை. மேலும் மரணம் வேகமாக வந்து விடுகிறது. அது உங்களுக்கு போதுமான காலத்தை கொடுப்பதில்லை.

கீழை நாடுகளின் கருத்துகள் உங்களது ஆன்மிக வளர்ச்சியில் அக்கறை எடுத்துக் கொள்கிறது. மறுபிறவி கொள்கை, இடைவிடாத, முடிவில்லாத பிறப்பு இறப்பு என்னும் சுழற்சியானது உங்களுக்கு போதுமான கால அவகாசத்தை கொடுக்கிறது. நீங்கள் மணிக்கணக்காக அமைதியாக உட்கார்ந்து இருக்கமுடியும்; அதில் எந்த அவசரமும் கிடையாது. வேகமாக இருக்கவேண்டிய அவசியம் கிடையாது. எழுபது வருடங்கள் மட்டுமல்லாமல் உங்களுக்கு முடிவில்லாத காலம் கிடைக்கிறது.

மேலை நாடுகள் மிகவும் செழிப்பற்றவை. அவை ஒவ்வொரு மனிதனுக்கும் எழுபது ஆண்டுகளை மட்டுமே கொண்டுள்ளன. வெளியில் இருந்து பார்ப்பதற்கு கீழை நாடுகள் ஏழ்மை யானவையாக தோன்றலாம். ஆனால் அதனுள் செய்யப் பட்டுள்ள ஏற்பாடுகள் மிகவும் செழிப்பானவை. பின்னாலும் முடிவில்லாத காலம் - முன்னாலும் முடிவில்லாத காலம் உள்ளது.

இரண்டாவதாக, உங்களை சலிப்படையச் செய்வதற்கு ஒரு பிறவி மட்டுமே போதுமானதல்ல. எழுபது ஆண்டுகள் என்பது மிகவும் வேகமாக சென்று விடுவதால் அதில் சலிப்பு என்பது சாத்தியப்படாது. ஆனால் பிறவிக்குப் பிறவி பணத்தின் பின்னால் ஓட முடியும், பிறவிக்குப் பிறவி அதிகாரத்தின் பின்னால் ஓட முடியும்; ஆண் அல்லது பெண்ணின் பின்னால் ஓட முடியும். இப்படி எல்லாவற்றின் பின்னாலும் ஓடுவதில் நீங்கள் அநேக முறை வெற்றி பெற்றிருக்கலாம். ஆனால் அதனால் நீங்கள் எந்த லாபமும் அடைந்திருக்க மாட்டீர்கள். எனவே இதுபோன்று ஒரே விதமான முட்டாள்தனங்களில் நீண்டகாலம் ஈடுபடுவதால் உங்களுக்கு அதுகுறித்த விழிப்புணர்வு ஏற்பட்டுவிடும்.

ஒவ்வொரு பிறவியிலும் நீங்கள் மீண்டும் அ, ஆவில் இருந்து ஆரம்பிக்க வேண்டியதிருக்கும். உங்களுக்குப் பின்னால் உள்ள பல லட்சம் பிறவிகளை கண்டுக் கொண்டுவந்து பாருங்கள். நீங்கள் அநேக பெண்களை நேசித்திருக்கிறீர்கள், ஒவ்வொரு பெண்ணிடமும், ''நான் உன்னை காலா காலத்திற்கும் நேசிப் பேன்'' என்று நீங்கள் கூறி இருக்கிறீர்கள். மேலும் ஒவ்வொரு பெண்ணிடமும், ''இந்த உலகிலேயே நீ தான் மிகவும் அழகான

பெண்,'' என்றும் கூட கூறி இருக்கிறீர்கள். மேலும் இதை நீங்கள் பல லட்சம் பிறவிகளாக, பல லட்சம் ஆண்களிடமும் பல லட்சம் பெண்களிடமும் கூறி இருக்கிறீர்கள். இது நிச்சயம் களைப்பான தாக இருக்கிறது. இந்த கருத்தே உங்களை களைப்படையச் செய்கிறது.

இப்படி குழந்தைத்தனமாக இருப்பதை நிறுத்துவதற்கு இதுதான் நேரம் என்ற குறிப்பிட்ட பக்குவத்தை, முதிர்ச்சியை அது உங்களுக்கு கொடுக்கிறது. இத்தயை விளையாட்டுகளை நீங்கள் நீண்ட காலம் விளையாடி விட்டதால், இதுதான் நீங்கள் வளர்ச்சி அடைவதற்கான நேரம்; இதற்கு முன்பு செய்யாததை இப்போது செய்வதற்கான நேரம் இதுதான்.

வாழ்க்கை குறித்த கீழைநாட்டு பார்வையில், தியானம் என்பது முற்றிலும் நன்றாக பொருந்துகிறது. அது ஒன்று மட்டுமே இதற்கு முன்பு நீங்கள் செய்யாத ஒரு செயல் ஆகும். நீங்கள் பணத்தை சம்பாதித்தீர்கள், நீங்கள் பணக்காரர் ஆகி இருந்தீர்கள், நீங்கள் அரசியலில் இருந்தீர்கள், நீங்கள் மந்திரி மற்றும் பிரதமராகவும் ஜனாதிபதியாகவும் இருந்துவிட்டீர்கள். நீங்கள் பெருமை மிக்கவர்களாக ஆகி இருந்தீர்கள். நீங்கள் எல்லா வற்றையும் செய்து விட்டீர்கள், ஏனெனில் அநேக பிறவிகளும், அதிக காலம் இருந்ததால், அதில் அதிக சந்தர்ப்பம் இருந்தது. இப்படி ஒரே விஷயத்தை இன்னமும் செய்து கொண்டிருப்பதை, மீண்டும் மீண்டும் செய்து கொண்டிருப்பதை நீங்கள் புரிந்து கொள்வீர்கள். ஒரு தவறை ஒருமுறை செய்வது நல்லது. ஆனால் அதே தவறை மீண்டும் மீண்டும் செய்து கொண்டே போவது உங்களது முட்டாள்தனத்தை நிரூபிக்கிறது.

இதுவரை நீங்கள் ஒருபோதும் செய்யாத ஒன்றினை செய்வதற்கான மிகப்பெரிய அவசியமும், அவசரமும் இப்போது உள்ளது. உங்களது சொந்த ஆன்மாவுக்கான தேடுதல் இப்போது அவசியமானது. இந்த உலகில் உள்ள எல்லாவற்றின் பின்னாலும் நீங்கள் ஓடிவிட்டீர்கள். ஆனால் அது உங்களை எந்த இடத்திற்கும் வழிநடத்தி செல்லவில்லை. இந்த உலகில் எல்லா சாலைகளும் சுற்றிச் சுற்றியே வருகின்றன; அவை எந்த ஒரு இடத்தையும்

ஒருபோதும் அடைந்ததில்லை. அவற்றுக்கு சேரும் இடமே கிடையாது.

இப்படிப்பட்ட நீண்டகால அனுபவங்களை ஒருவர் கண்முன் நிறுத்தி பார்க்கும்போது, அவர் தனது ஒட்டு மொத்த செயல்களைக் கண்டு திடீரென்று நோயுற்றவர் ஆகிறார்; காதல் விவகாரங்கள், சண்டைகள், கோபம், பேராசை பொறாமை இப்படி எல்லா செயல்களையும் கண்டு கொள்கிறார். அதன் பின்னர் முதல் முறையாக ஒருவர், ''யார் பின்னாலும் ஓடாத ஒரு புதிய பரிமாணத்தை நான் இப்போது கண்டாக வேண்டும்; அதில் நான் எனது வீட்டிற்கு திரும்பவும் வந்து சேர்வேன். இத்தனை கோடி பிறவிகளில் நான் எனது சொந்த வீட்டைவிட்டு வெகுதூரம் சென்றுவிட்டேன்,'' என்று சிந்திக்க ஆரம்பிக்கிறார்.

இதுதான் கீழைநாட்டு ஞானத்தின் அஸ்திவாரமாகும். இது பிறப்பு, இறப்பு என்கிற இந்த தொடர் சுழற்சியினால் ஒரு மிகப்பெரிய சலிப்பை உருவாக்குகிறது. ''சம்சாரா'' என்கிற வார்த்தைக்கு அசல் அர்த்தம் இதுதான்; இதற்கு பிறப்பு இறப்பு என்னும் சக்கரமானது மாறி மாறிச் சுழன்று கொண்டே இருக்கிறது. அது நிற்பதில்லை என்று அர்த்தமாகிறது. நீங்கள் அதிலிருந்து வெளியே குதித்துவிட முடியும், ஆனால் நீங்கள் அதைப் பிடித்து தொங்கிக் கொண்டு இருக்கிறீர்கள். இது உங்களை உங்களது புலன்களின் உணர்வுக்கு கொண்டு வருகின்ற அடிப்படை உபாயமாக உள்ளது. நீங்கள் இதுவரை முட்டாள் ஆக்கப்பட்டது போதும்.

இதை இப்போது நிறுத்திவிடுங்கள். பல நூற்றாண்டுகளாக நீங்கள் செய்யாமல் தவிர்த்துவந்த, நாளை செய்யலாம் என்று ஒத்தி போட்டுவந்த ஒன்றினை இப்போது செய்யுங்கள்.

இவை மிகவும் அழகான சூத்திரங்கள், கீழை நாடுகளில் மக்கள் புரிந்து கொள்ளாமல் எதையும் ஒருபோதும் பேசுவ தில்லை. உங்களுக்கு தெரியாத ஒன்றினைப் பற்றி அதற்கு ஆதரவாகவோ அல்லது எதிராகவோ பேசுவது மிகப்பெரிய குற்றம், மிகப்பெரிய நேர்மையற்ற செயல்.

கீழைநாடுகளில் அறிந்துகொண்ட மக்களும் கூட, ஆன்மாவின் இறுதி மலர்ச்சியை அடைந்தவர்களும் கூட, எதையும் பேசுவதில்லை. ஏனெனில் தங்களது அனுபவத்தை சொல்வதற்கு சரியான வார்த்தைகளை கண்டு கொள்ள முடியவில்லை. அவர்கள் சொற்பொழிவாளர்கள் அல்லர். ஆனால் அவர்கள் அமைதியாக இருப்பதற்கு முடிவெடுத்துவிட்டனர். மக்களுக்கு தவறான கருத்துகளைக் கொடுப்பதைவிட அமைதியாக இருந்து விடுவது சிறந்தது. எனவே மிகச்சிலர் மட்டுமே தங்களது அந்த இறுதி ஆன்ம அனுபவத்தை பேசி இருக்கிறார்கள். மேலும் அவர்களின் பேச்சானது காலம் காலமாக பல கோடி மக்களுக்கு உதவும் என்பதை முற்றிலும் உறுதிப் படுத்திக் கொண்ட பின்னர் மட்டுமே அவர்கள் பேசினார்கள்.

தினசரி செய்தித்தாள்களில் கீழைநாடுகள் ஒருபோதும். ஆர்வத்துடன் இருந்தது கிடையாது. எல்லா காலத்திற்கும், எல்லா நேரத்திற்கும், செல்லத்தக்கதாக, உள்ள விஷயங்களின்மீது மட்டுமே அவர்கள் ஆர்வம் காட்டினார்கள். இந்த பூமியும் மனிதன் இருக்கும் வரை இந்த விஷயங்களின் நியாயத்தை யாராலும் சவாலாக ஏற்கமுடியாது.

ஒரு செய்திப் பத்திரிகை மாலையில் பயனற்றதாக ஆகி விடுகிறது. மேலை நாடுகளில் காலைப்பதிப்பு மற்றும் மாலைப்பதிப்பு செய்தித்தாள்கள் உள்ளன. ஏனெனில் மாலையும், காலைப்பதிப்பானது பயனற்றதாக ஆகிவிட்டது. மாலையில் மத்தியானப் பதிப்புகள் பயனற்றதாக ஆகிவிடுவதால் மாலைப் பதிப்புகள் வருகின்றன. இரவில், மாலைப்பதிப்புகள் பயனற்றவை ஆகிவிடுவதால், இரவுப்பதிப்புகள் வருகின்றன.

ஆனால், இந்த சூத்திரங்களோ, முதல்முறையாக உச்சரிக்கப்பட்ட போது எவ்வளவு புத்துணர்வோடும், இளமை யோடும் இருந்தனவோ அதே புத்ததுணர்வு மற்றும் இளமை யோடு எப்போதும் இருக்கும். ஆனால், இந்த சூத்திரங்களில் என்ன உள்ளது என்பதை அனுபவித்து பார்க்க முடிந்தவர்களுக்கு மட்டுமே அது புத்துணர்வு மற்றும் இளமையோடு இருக்கும். அப்படி இல்லாத போது இது வெறும் உரைநடை போன்றதாகும்.

நீங்கள் இதை அனுபவித்து பார்த்துவிட்டால் அதன்பின்னர் இந்த உரைநடை கவிதையாக மாறிவிடும். வார்த்தைகள் மௌனங்களாக மாறிவிடும். இந்த சூத்திரங்கள், இந்த பிரபஞ்சத்தின் முடிவில்லாத நடனத்தின் உணர்வுகளை உங்களுக்கு கொடுப்பதற்கான ஒரு உபாயம் என்பதாக மட்டுமே நிருபனம் ஆகி உள்ளன.

மேலை நாட்டிலும் புத்தகங்கள் உள்ளன. நான் எல்லா தத்துவாதிகள் மற்றும் சமய இயலாளர்களின் புத்தகங்கள் முழுவதையும் படித்திருக்கிறேன். அது ஒரு சிரமமான பயணம். கீழை நாட்டின் இந்த சூத்திரங்களுக்கு இணையாக வேறு எந்த மேலைநாட்டு புத்தகமும் கிடையாது. ஏனெனில் அவை வெறும் மனதை நிரப்புகின்ற விஷயங்கள் மட்டுமேயாகும். கீழைநாட்டு சூத்திரங்கள் தன்மையில் வித்தியாசம் உண்டு. அவற்றுக்கும் மனதிற்கும் சம்பந்தம் கிடையாது. அவை உங்களின் உள்ளே உள்ள ஆன்மா மற்றும் அதன் அனுபவங் களான பேரானந்தம், பரவசநிலை, இந்த பரந்த பிரபஞ்சத்தில் ஊடுருவி உள்ள அந்த பிரபஞ்ச மகிழ்ச்சி ஆகியவற்றிற்கும் அவற்றுக்கும் சம்பந்தம் உண்டு. மனிதன் மட்டுமே அந்த பேரானந்தத்தை தவற விட்டுக் கொண்டு இருக்கிறான். மேலும் மனிதன் தனது கல்வி அறிவினால் அதை தவறவிட்டுக் கொண்டு இருக்கிறான்.

மரங்கள் அதைத் தவறவிடவில்லை. ஏனெனில் அவை கள்ளம் கபடமற்று உள்ளன. மகாசமுத்திரங்கள் அதைத் தவறவிடவில்லை. மலைகள் அதைத் தவறவிடவில்லை. நட்சத்திரங்கள் அதைத் தவறவிடவில்லை. அவை முற்றிலும் கள்ளம் கபடமற்றவை. அவை கற்றறிவு என்னும் பொறிக்குள் மாட்டிக் கொள்ளவில்லை.

போதிதருமரின் முதல் சூத்திரம் கூறுகிறது :

*''ஞானத்தை அதன் போக்கில் விட்டுவிடாமல் இருப்பது முட்டாள்தனமாகும்.''*

நீங்கள் ஞானம் என்று அழைப்பது எல்லாம் ஞானம் அல்ல. அவை எல்லாம் வெளியில் இருந்து பெறப்பட்டவை. பதிலாக

நீங்கள் ஞானியாக இருந்தால் நீங்கள் வேறுவிதமாக இருக் கிறீர்கள். இப்போது, நீங்கள் புரிந்துகொள்ளாத விஷயங்களை திரும்பத்திரும்பச் சொல்லிக் கொண்டு இருக்கிறீர்கள்; உங்களது சொந்த ஆன்மாவில் விஷயங்கள் வளரவில்லை. உங்களது சொந்த இருப்புநிலை மற்றும் உங்களது சொந்த உயிருக்கு முற்றிலும் அந்நியமான விஷயங்களைக் கூறிக்கொண்டு இருக்கிறீர்கள். சிறு குழந்தைகள் கடற்கரை மணலில் கடல் சிப்பி களை மிகப்பெரிய பொக்கிஷங்கள் போல நினைத்துக்கொண்டு அவற்றை சேகரிப்பது போன்று நீங்களும் விஷயங்களை சேகரித்துக் கொண்டு இருக்கிறீர்கள். ஆம், இப்படி நீங்கள் மற்றவர்களையும் ஏமாற்றிக் கொண்டு, உங்களையும் ஏமாற்றிக் கொண்டு இருப்பது சாத்தியப்படும்.

எனது பேராசிரியர்களில் ஒருவர், மிகவும் புகழ்பெற்ற லண்டன் பல்கலைக்கழகத்தில் ஒரு விநோதமான கட்டுரை விஷயத்திற்காக அவர் டாக்டர் பட்டம் பெற்றவர். பேருணர்வின் வளர்ச்சி வழிகள் என்பதுதான் அவரது கட்டுரையின் விஷயமாகும். நான் அவரது மாணவனாக இருந்தேன். அவரது புத்தகம் வெளியிடப்பட்டபோது அவர் அதை எனக்கு கொடுத்து, ''உனது கருத்தை அறிவதற்கு நான் மிகவும் விரும்புகிறேன்'' என்று கூறினார்.

அதற்கு நான் அவரிடம், ''அந்த புத்தகத்தை நான் படிக்க வேண்டியதில்லை. உங்களைப் பற்றி எனக்கு தெரியும்'' என்று கூறினேன்.

உடனே அவர், ''நீ என்ன கூறுகிறாய்?'' என்றார்.

அதற்கு நான் அவரிடம், ''பேருணர்வின் வளர்ச்சிக் குறித்து உங்களுக்கு எதுவும் தெரியாது என்பதை நான் அறிவேன். எனவே நீங்கள் இந்த புத்தகத்தில் எழுதி இருப்பது எல்லாமே மற்றவர்களிடமிருந்து பெற்றது. நீங்கள் உங்களையும் ஏமாற்றிவிட்டீர்கள். உங்களது கட்டுரையை ஆராய்ந்த லண்டன் பல்கலைக்கழகத்தின் பேராசிரியர்களையும் ஏமாற்றிவிட்டீர்கள். மேலும் இப்போது இந்த புத்தகத்தை பிரசுரித்தும் விட்டதால், இதை பல லட்சம் பேர் படிக்கப்போகிறார்கள், மேலும் அவர்களும்

ஏமாற்றப்படப் போகிறார்கள். பேருணர்வு குறித்த இந்த புத்தகத்தை எனக்கு அன்பளிபாபக கொடுப்பதற்கு மாறாக உங்களிடம் உள்ள பேருணர்வைக் கொஞ்சம் என்னிடம் காட்டுங்கள்,'' என்று கூறினேன்.

அவர் மிகவும் அதிர்ச்சி அடைந்தார் மேலும் நான் என்ன கூறினேனோ அதுசரியானது தான் என்பதையும் அவர் அறிவார். அவர் ஒரு குடிகாரர். ஒவ்வொரு நாள் மாலையிலும் மது அருந்தாமல் அவரால் உயிர்வாழ முடியாது.

நான் அந்த புத்தகத்தை அவரிடம் திருப்பிப் கொடுத்து விட்டேன். உடனே அவர், ''எனது புத்தகத்தை பரிசோதித்து ஆராய்பவராக நீ இல்லாமல் போனது எனது அதிர்ஷ்டம்; அப்படி இருந்திருந்தால் நான் இந்த டாக்டர் பட்டத்தை ஒருபோதும் பெற்றிருக்க முடியாது,'' என்று கூறினார். அதற்கு நான் அவரிடம், ''நம் இருவருக்கும் இடையில் உங்களால் அதை ஒருபோதும் பெறமுடியாது. நீங்கள் இந்த உலகத்தை முட்டாள் ஆக்கலாம் ஆனால் என்னை முட்டாள் ஆக்க முடியாது'' என்று கூறினேன்.

மக்கள் அறிவை சேகரித்துக் கொண்டு, அதில் கலந்து கொண்டு, இந்த கற்றறிவு தான் ஞானம் என்று நினைத்துக் கொண்டு இருக்கிறார்கள். கற்றறிவு ஞானம் அல்ல.

ஞானம் என்பது உங்களது தன் உணர்வின் வளர்ச்சியின் மூலம் வருகிறது. ஆனால் கற்றறிவு என்பது புனிதநூல்களில் இருந்தும், கற்றறிந்தவர்களிடம் இருந்தும் விஷயங்களை சேகரித்து அதன் மூலம் ஒரு வகையான அமைப்பு முறையை உண்டாக்குவதன் மூலம் வருகிறது. ஆனால் நீங்கள் அப்படியே தான் இருப்பீர்கள். நீங்கள் எந்த ஒரு மாற்றமும் அடைய மாட்டீர்கள்.

அதனால் தான் முதல் சூத்திரம் :

*ஞானத்தை அதன் போக்கில் விட்டுவிடாமல் இருப்பது முட்டாள்தனம் என்கிறது.* எனவே உங்களது ஞானத்தை வெறுமனே கைவிடுங்கள். மேலும் உங்களது ஞானம் போன பின்னால் உங்களது முட்டாள்தனமும் போய்விடும். நீங்கள்

ஞானம் என்று நினைத்துக் கொண்டிருக்கிற உங்களது கற்றறிவை நீங்கள் பிடித்துக் கொண்டு இருந்தால், நீங்கள் காலா காலத்திற்கும் முட்டாளாகவே இருப்பீர்கள்.

*மனம் என்பது இல்லாமல் இருக்கும்போது, புரிதல் மற்றும் புரியாமை ஆகிய இரண்டும் உண்மையானவைதான்.*

மனம் வேலை செய்யாமல், அமைதியாகிவிடுகின்ற அந்த நொடிப்பொழுதில் எல்லாமே உண்மையானது தான். மனம் தான் எல்லாவற்றையும் கலைத்து எல்லாவற்றையும் உண்மையற்றதாக ஆக்குகிறது. கல்வி அறிவு என்பது மனதின் மூலம் வருகிறது. ஆனால் ஞானம் என்பது மனம் அற்ற நிலையில் இருந்து வருகிறது. இந்த வித்தியாசத்தை கீழை நாட்டு ஞானிகளைத் தவிர இந்த உலகின் மாபெரும் தத்துவ மேதைகள் யாராலும் கூறமுடியவில்லை.

ஞானம் என்பது கல்வி அறிவு என்று அகராதிகள் கூறும், ஆனால் அதன் உண்மைநிலை மற்றும் அதன் அனுபவம் ஒரு அகராதி அல்ல. கல்வி அறிவும், ஞானமும் ஒன்றானவை மட்டுமல்ல, அவை ஒன்றுக்கொன்று எதிரானவை என்று மிகவும் தெளிவான வித்தியாசத்தை அது உண்டாக்குகிறது. உங்களது மனமானது கற்றறிவு நிறைந்து இருந்தால், நீங்கள் ஞான மற்றவராக, முட்டாளாக இருப்பீர்கள்.

ஆனால், உங்களது மனமானது கைவிடப்பட்டு, நீங்கள் அதற்கு அப்பால் சென்றால், நீங்கள் ஞானம் என்னும் உலகினுள் நுழைந்து விடுவீர்கள். விழிப்புணர்வு என்னும் உலகில் நுழைந்து விடுவீர்கள். அந்த விழத்தெழுதலில் எல்லாமே உண்மையான தாக இருக்கிறது. நீங்கள் உண்மையாக இருப்பதால், எல்லாமே உண்மையானதாக உள்ளது. ஏனெனில் நீங்கள் உண்மையாக இருக்கிறீர்கள். மனதோடு இருக்கும் போது நீங்கள் உண்மை யற்றவர்கள், நீங்கள் பொய்யானவர்கள் அதனால் தான் மனதின் மூலமாக என்ன நடந்தாலும் அது பொய்யானதாக, போலி யானதாக மாறிவிடுகிறது.

மனம் தான் மனிதனின் மிகப்பெரிய எதிரி.

*மனம் என்பது இருக்கும்போது புரிதல் மற்றும் புரியாமை ஆகிய இரண்டும் பொய்யானவை.*

*நீங்கள் புரிந்து கொண்டால் உண்மைநிலை உங்களைச் சார்ந்து இருக்கிறது.*

இந்த வாக்கியங்கள் அதிக அர்த்தம் நிறைந்தவை என்பதால் இதை நீங்கள் வெறுமனே கேட்பதை விடவும் நீங்கள் இதை கண்டிப்பாக உணர்ந்து கொள்ள முயற்சிக்க வேண்டும்.

*நீங்கள் புரிந்து கொண்டால், உண்மைநிலை உங்களைச் சார்ந்து இருக்கிறது.*

ஆனால் நீங்கள் எப்போது புரிந்து கொள்வீர்கள்?

உங்களது மனதை தூக்கி அருகில் வைத்துவிட்டு, உங்களது ஆன்மாவானது உண்மைநிலையை நேரடியாக, எந்த ஒரு மனம், அல்லது இடைத்தரகர் இல்லாமல் நேருக்குநேர் எதிர் கொள்ளும் போது உண்மைநிலை உங்களைச் சார்ந்து இருக்கிறது. நீங்கள் உண்மைநிலையை விடவும் உயரத்தில் எழுந்துவிட்டீர்கள். நீங்கள் இறுதியான உண்மைநிலைக்கு எழுந்துவிட்டீகள்;. அப்படி இல்லாதபோது உண்மைநிலை என்பது எதையாவது சார்ந்த ஒரு உண்மைநிலையாகவே இருக்கிறது.

*நீங்கள் புரிந்து கொள்ளாதபோது நீங்கள் உண்மை நிலையைச் சார்ந்து இருக்கிறீர்கள்.*

நீங்கள் புரிந்து கொள்ளாதபோது, அதாவது நீங்கள் மனம் என்பதில் இருக்கும்போது, நீங்கள் இப்போது சுற்றிலும் பார்க்கின்ற இந்த சாதாரண உண்மைநிலைக்கு இரையாகி விடுகிறீர்கள். பணம் உங்களை ஏமாற்றுகிறது. அதிகாரம் உங்களை ஏமாற்றகிறது, புகழ் கௌரவம் உங்களை ஏமாற்று கிறது, இப்படி எதுவும் உங்களை ஏமாற்றுகிறது.

இப்படி அநேக தவறான புரிதல்களில் வாழ்ந்து கொண் டிருப்பதை நீங்கள் காண நேரிட்டால், பொய்யானவற்றை உருவாக்குவதில் நீங்கள் எப்படிப்பட்ட திறமைசாலியாக இருக்கிறீர்கள் என்பது குறித்து ஆச்சரியமடைவீர்கள்.

உங்களது மனதின் மூலம் கடந்து செல்வது எதுவானாலும், அது கிட்டத்தட்ட ஒரு நேரான கைத்தடியை எடுத்து நீங்கள் தண்ணீரில் வைப்பது போன்று இருக்கிறது. அப்போது அந்த நேரான கைத்தடி, ஒருபோதும் நேரான ஒன்றாக இருக்காது. அந்த கைத்தடியானது தண்ணீரில் உள்ள இடத்தில் வளைந்தது போன்று இருக்கும் ஏனெனில் தண்ணீரானது வித்தியாசமாக செயல் படுகிறது. நீங்கள் அந்த கைத்தடியை வெளியே எடுத்தால் அது மீண்டும் நேரானதாக இருக்கிறது. நீங்கள் மீண்டும் அதை தண்ணீரில் நுழைத்தால், அது தனது நேரான தன்மையை இழந்து விடுகிறது. இதே சூழ்நிலைதான் உங்களது மனதோடு நடக்கிறது. மனதிடம் ஒரே ஒரு திறமை மட்டுமே இருக்கிறது. விஷயங்களை பொய்யாக ஆக்குகின்ற திறமை மட்டுமே உள்ளது.

துரதிர்ஷ்டவசமாக நாம் என்பது நமது மனம் என்பதாகத்தான் கற்பிக்கப்பட்டு இருக்கிறோம். எனவே இந்த உலகம் போலித்தனத்தில், துன்பத்தில், துக்கத்தில் வாழ்கிறது என்றால் அது ஒரு அற்புதம் அல்ல. இந்த உலகமானது சண்டையிட்டுக் கொண்டும், கொன்று போட்டுக் கொண்டு போகிறது. மேலும் ஒரு உலகளாவிய தற்கொலைக்கு தயார் ஆகிக்கொண்டு இருப்பது ஒன்றும் ஆச்சரியமானதல்ல. மனதினால் வேறு எதையும் செய்ய முடியாது. அது எல்லாவற்றையும் விஷமாக்கி விடுகிறது.

எனவே ஒட்டுமொத்த போதனையும், இந்த மனதிற்கு அப்பால் போவது குறித்ததாக இருக்கிறது. அதன்பின்னர் எல்லாமே மிகவும் தெள்ளத்தெளிவாக இருக்கிறது. அதன்பின்னர் நீங்கள் எந்த கேள்வியும் கேட்கமாட்டீர்கள். நீங்கள் வெறுமனே உங்களது தெளிவில், உங்களது தெளிவான பார்வையின் மூலம் செயல்புரிவீர்கள். அப்போது உங்களது ஒவ்வொரு செயலும் ஒரு அழகினைப் பெற்றிருக்கும். அதற்கே உரித்தான அபரிமிதமான அழகினைப் பெற்றிருக்கும். அது கடவுளின் எல்லையற்ற அன்பாக இருக்கும். இந்த ஒட்டுமொத்த உலகின் மீதும் ஆசீர்வாதத்தை பொழிகின்ற சக்தி அதற்கு இருக்கும்.

*உண்மை நிலையானது உங்களைச் சார்ந்து இருக்கும்போது, உண்மை அல்லாதது உண்மையானதாக ஆகிவிடுகிறது.*

ஆனால் இப்போது, இது இயற்கைக்கு ஒவ்வாத ஒரு சூழ்நிலையாக உள்ளது. உண்மை அல்லாத எல்லாம் உண்மையானதாக இருக்கிறது. மேலும் உண்மையானவை எல்லாம், உண்மையற்றவையாக உள்ளன. உங்களுக்கு சொந்தமான புத்த இயல்பும் கூட உண்மையற்றதாக இருக்கிறது. ஆனால் சலவைக்கல்லினால் செய்த ஒரு சிலை உங்களுக்கு உண்மையானதாக தெரிகிறது. பொய்யான ஒன்றின் முன்பு, நீங்கள் சிரம் தாழ்த்தி வணங்குகிறீர்கள். நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்பதை அறியாமலேயே, பொய்யானவற்றை நீங்கள் வழிபடுகிறீர்கள். இதன்மூலம் நீங்கள் உங்களை அவமானப்படுத்துவதோடு மட்டுமல்லாமல், கடந்த காலத்தில் இருந்த, இப்போது இருக்கின்ற, மேலும் எதிர்காலத்தில் வரப் போகின்ற புத்தர்களையும் கூட நீங்கள் அவமானப்படுத்துகிறீர்கள்.

நீங்கள் ஒரு புத்தராக இருக்கிறீர்கள். நீங்கள் வழிபட வேண்டியதில்லை. உங்களை விடவும் மேலானவர்கள் யாரும் இல்லை; உங்களை விடவும் தாழ்வானவர்கள் யாரும் இல்லை, நீங்கள் யாரையும் வழிபடவேண்டியதில்லை. அதேபோன்று யாரும் உங்களை வழிபடுவதையும் நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டியதில்லை. இந்த ஒட்டுமொத்த பிரபஞ்சமும் தெய்விகத் தன்மையில் சமமானது.

*நீங்கள் உண்மை நிலையைச் சார்ந்து இருக்கும்போது உண்மையானது பொய்யானதாக ஆகிவிடுகிறது. நீங்கள் உண்மை நிலையைச் சார்ந்து இருக்கும்போது எல்லாமே பொய்யானதாக இருக்கிறது.*

அதாவது, நீங்கள் இதுவரை உண்மையானது என்று அறிந்து கொண்டுள்ளவை எல்லாம் பொய்யானதாக இருக்கிறது.

இது நான் கேள்விப்பட்ட கதை. ஒரு மிகப்பெரிய நகரத்தில் ஒருவர் மிகச்சிறந்த அரண்மனையை வைத்திருந்தார். மக்கள் அதைப் பார்ப்பதற்கு வருவது வழக்கம். அது கட்டடக்கலையின் ஓர் அற்புதமாக இருந்தது. ஆனால் ஒரு நாள் இரவு அது திடீரென்று தீப்பற்றிக் கொண்டது. அப்போது அந்த மனிதர் ஒரு நண்பரின் வீட்டிற்கு சென்றிருந்தார். உடனே யாரோ ஒருவர்

அவருக்கு, ''நீங்கள் என்ன செய்து கொண்டு இருக்கிறீர்கள்? இங்கு உங்களது அரண்மனையில் தீப்பற்றி எரிகிறது,'' என்று தெரிவித்தார். இதைவிட பேரதிர்ச்சி அவருக்கு எதுவும் இல்லை, எனவே அவர் ஓடி வந்தார். அவரை அறியாமலேயே அவரது கண்களில் கண்ணீர் வழிந்தோடியது. அவரது விலைமதிப்பு மிக்க கட்டடம், அவரது மிகப்பெரிய பற்றுதல், அவரது கண் முன்னாலேயே அழிந்து கொண்டிருந்தது. ஆனால் அவரால் எதுவும் செய்ய முடியவில்லை. நெருப்பானது நிறைய இடங்களுக்கு பரவிவிட்டது.

அப்போது, அவரது இளைய மகன் ஓடிவந்து அவரிடம், ''அப்பா, கவலைப்படாதீர்கள் நேற்று நான் அந்த வீட்டை விற்று விட்டேன். நீங்கள் ஒரு சிறந்த அரண்மனையை வைத்திருப்பது அரசருக்கு தர்மசங்கடமாக இருப்பதாக அவர் தொடர்ந்து கூறிவந்தார். எனவே இறுதியாக நான் இதை விற்பதற்கு முடிவு செய்தேன் மேலும் அரசர் இந்த வீட்டிற்கு என்ன விலையானாலும் கொடுப்பதற்கு தயாராக இருந்தார்'' என்று கூறினான்.

உடனடியாக தந்தையின் கண்ணீர் வற்றி அந்த மனிதர் சிரிக்க ஆரம்பித்தார். இப்போது எதுவும் மாறவில்லை. அந்த வீடு எரிந்து கொண்டிருந்தது. ஆனால் இப்போது அது அவரது வீடு அல்ல. எனவே அதைப்பற்றி யார் கவலைப்படுவார்கள்? எனவே அந்த வீடு அவரது மனதைக் காயப்படுத்தவில்லை, அது தன்னுடைய வீடு என்னும் ஆணவம் தான் மனதைக் காயப்படுத்திக் கொண் டிருந்தது. அதன்பின்னர் அவரது இளையமகன் மீண்டும் வந்து அவரிடம், ''அப்பா, இங்கு என்ன செய்கிறீர்கள்? இந்த அரண்மனையை விற்பதற்கு நாம் சம்மதித்தாலும் கூட, விற்பனைப் பத்திரம் இதுவரை எழுதப்படவில்லை. எனவே அரசர் நமக்கு பணத்தை கொடுக்கப் போவதில்லை. இதில் நெருப்பு வைத்ததன் பின்னணியில் அரசர் இருப்பார் என்று நான் சந்தேகப்படுகிறேன்,'' என்று கூறினான்.

இதைக் கேட்டவுடன் தந்தைக்கு மீண்டும் கண்ணீர் வர ஆரம்பித்தது. ஆனால் அங்கிருந்த சூழ்நிலை அப்படியேதான் இருந்தது; எதுவும் மாறவில்லை. வெறுமனே கருத்துகள் மட்டுமே

மாறின; அந்த வீடு மீண்டும் அவருடையதாக ஆகி விட்டது; ஆனால் அவருக்கு துக்கம் வந்துவிட்டது. அந்த வீடு அவருடையது அல்ல என்று கூறியபோது, எல்லா துக்கமும் மறைந்துவிட்டது.

அப்போது அரசரே தனது ரதத்தில் அங்கு வந்து அவரிடம், ''நீங்கள் கவலைப்படாதீர்கள். நான் சொன்ன சொல்லைக் காப்பவன். இதை நான் வாங்கிவிட்டேன் என்று கூறியதால் இதை நான் வாங்கி விட்டதாகத் தான் அர்த்தம். விற்பனைப் பத்திரம் எழுதப்படவில்லை. முன்பணம் ஏதும் கொடுக்கப்படவில்லை. ஆனால் நேற்று நாம் வாய்மொழியாக சம்மதம் தெரிவித்துக் கொண்டோம். அதுவே போதுமானது. எனது வீடுதான் எரிந்து கொண்டிருக்கிறது. நீங்கள் கவலைப்படவேண்டிய அவசியம் கிடையாது,'' என்று அரசர் கூறினார்.

உடனே, திடீரென்று, கண்ணீர் வடிப்பதற்கு பதிலாக அந்த மனிதர் சிரித்தார்.

*உண்மை நிலையானது உங்களைச் சார்ந்து இருக்கும்போது எல்லாமே உண்மையானதாக இருக்கிறது.*

*இவ்வாறாக, ஞானி, உண்மைநிலையைக் கண்டு கொள்ள அவரது மனதைப் பயன்படுத்த மாட்டார் அல்லது உண்மை நிலையானது அவரது மனதைக் கண்டு கொள்ளவும் பயன்படுத்தமாட்டார் அல்லது அவரது மனம், அவரது மனதையே கண்டு கொள்ளவும் பயன்படுத்தமாட்டார்.*

இது ஒரு சுற்று வட்டப்பாதை: மனமும், உண்மை நிலையும், மனமும் இந்த உலகமும் சுற்று வட்டப்பாதையில் வருபவை. மனமானது ஒரு குறிப்பிட்ட உலகை உருவாக்குகிறது. ஆனால் அந்த உலகம் நீங்கள் திரையிட்டு பார்க்கின்ற ஒரு உலகமே தவிர வேறு ஒன்று அல்ல. மேலும் அதன்பின்னர், அந்த குறிப்பிட்ட திரையிடல் உங்களது மனதை உருவாக்குகிறது. எனவே இப்படிப் பட்ட ஒரு வழியில், இந்த சுற்று வட்டப்பாதையில் ஒன்றை மற்றொன்று ஆதரித்துக் கொண்டு சுற்றிவருகிறது. எனவே நீங்கள் ஒரு மாயத் தோற்றத்தில் வாழ்ந்து கொண்டே செல்கிறீர்கள்.

இவ்வாறாக, ஞானி உண்மைநிலையைக் கண்டு கொள்ள அவரது மனதைப் பயன்படுத்தமாட்டார் அல்லது உண்மை நிலையானது அவரது மனதைக் கண்டு கொள்ளவும் பயன்படுத்தமாட்டார் அல்லது அவரது மனம், அவரது மனதையே கண்டுகொள்ளவும் பயன்படுத்தமாட்டார். அவரது மனம் உண்மைநிலை எழுவதற்கு விடுவதில்லை. மேலும் உண்மை நிலையும்; அவரது மனம் எழுவதற்கு விடுவதில்லை. எனவே அவரது மனம் மற்றும் உண்மைநிலை ஆகிய இரண்டும் அசையாமல் இருப்பதால், அவர் எப்போதும் சமாதி நிலையில் இருக்கிறார்.

சமாதி நிலைக்கு இது அழகான விளக்கமாக இருக்கிறது. மனமும் அசையாமல், உண்மைநிலையும்; அசையாமல் இருக்கும்போது எல்லாமே அமைதியாக, மிக ஆழ்ந்த அமைதியாக இருக்கிறது. நீங்கள் இந்த சுற்று வட்டப்பாதையில் இருந்து வெளியே வந்துவிடும்போது எல்லாமே அமைதியாக இருக்கிறது. 'சமாதி' என்கிற வார்த்தையை புரிந்து கொள்ள வேண்டும். அதற்கு, முழுமையான சமநிலைக்கு, நடுநிலைக்கு வந்து விடுதல் என்று அர்த்தமாகும். இந்த வார்த்தை சமஸ்கிருதத்தில் இருந்து வருகிறது. மேலும் இந்த உலகில் வார்த்தைகளுக்க மிகவும் ஆழமான அர்த்தம் உள்ள மொழிகளில் சமஸ்கிருதமும் ஒன்றாகும். வெறுமனே அகராதியில் உள்ள அர்த்தம் மட்டுமல்ல, ஆனால் இருப்புநிலை சார்ந்தும் அதிக ஆழம் நிறைந்தவை. ஏனைய மொழிகள் வெறும் அகராதியில் உள்ள அர்த்தங்களை மட்டுமே கொண்டுள்ளன.

இந்த உலகில் மெய்ஞ்ஞானம் அடைந்த மக்களால் உருவாக்கப்பட்ட மொழி சமஸ்கிருதம் மட்டுமேயாகும். இது உருவாக்கப்பட்ட ஒருமொழி. இது மக்களின் மொழியாக ஒருபோதும் இருந்தது கிடையாது. இந்த ஒட்டுமொத்த நாடும் சமஸ்கிருத மொழியை பேசிய காலம் என்பது கிடையாது. இந்த உலகின் ஏனைய மொழிகள் எல்லாம் ஏதோ ஒரு காலக்கட்டத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளன. லத்தீன் அல்லது ஹீப்ரு அல்லது பாலி அல்லது பிரகிருத் போன்று அநேக மொழிகள் உயிரற்று

போய்விட்டன. ஆனால் சமஸ்கிருதம் ஒருபோதும் மக்களின் மொழியாக இருந்தது கிடையாது.

இது மிகவும் விநோதமான ஒரு விஷயம். இது மெய்ஞ் ஞானிகளின் மொழியாக இருந்துவிட்டது. எனவே ஒவ்வொரு வார்த்தைக்கும் இரண்டு அர்த்தங்கள் உண்டு; ஒன்று, பண்டிதர்களுக்கான அகராதியில் உள்ள அர்த்தம், மேலும் அடுத்தது, சத்தியத்தை தேடிச் செல்கின்றவர்களுக்கான இருப்பியல் சார்ந்த அர்த்தமாகும்.

சமஸ்கிருதத்தில் 'வியாதி' மற்றும் 'சமாதி' ஆகிய இரண்டு வார்த்தைகள் உள்ளன. வியாதி என்பதற்கு ''ஆன்மாவின் நோய்'' என்று அர்த்தம். மேலும் 'சமாதி' என்பதற்கு ''ஆன்மாவின் ஆரோக்கியம் மற்றும் முழுமை'' என்று அர்த்தம். ஆனால் இவை உண்மையான இருப்புநிலை சார்ந்த அர்த்தங்கள். சமாதிநிலையை அனுபவிக்காத ஒரு மனிதன் ஆன்மிகத்தில் நோயுற்று இருப்பவன். உடலளவில் அவன் தகுதி உடையவனாக இருக்கலாம். ஆனால் அவன் ஆன்மிகத்தில் தகுதி அற்றவன். உடலளவில் ஒரு மனிதன் நோயுற்றவனாக இருக்கலாம். ஆனால் அவனால் சமாதி நிலையை அடைய முடியும். உங்களது வாழ்வின் கடைசி தருணத்திலும் கூட நீங்கள் சமாதி நிலையை அடையமுடியும். உங்களது ஆன்மிக உயிர் உணர்வு முழு ஆரோக்கியத்தோடும், முழுமையோடும் அப்போது வந்து விடுகிறது. நீங்கள் ஒரு சிறு நொடிப்பொழுது மட்டுமே சமாதி நிலையை அறிந்து கொண்டாலே போதும் நீங்கள் இந்த பிரபஞ்சத்தின் மாபெரும் ரகசியத்தை நீங்கள் அறிந்து கொண்டு விடுவீர்கள்

சமாதிக்கு இணையாக, எந்த மொழியிலும், எந்த ஒரு வார்த்தையும் கிடையாது. ஜப்பானிய வார்த்தை ஒன்று மட்டுமே அதற்கு நெருங்கி விடுகிறது. ஆனால், அது அதே அர்த்தத்தை கொடுப்பதில்லை. அந்த வார்த்தை 'சட்டோரி' என்பதாகும். ஆனால் ஜப்பானியர்கள் துரதிருஷ்டவசமாக சட்டோரியை சமாதிநிலை என்று நினைத்துக் கொண்டு சட்டோரியோடு நின்றுவிட்டனர்.

சட்டோரி என்பது சமாதிநிலையின் ஒரு சிறிய காட்சி மட்டுமேயாகும். வெகு தொலைவில் இருந்து பார்க்கின்ற ஒரு சிறுகாட்சி. உதாரணமாக, நூற்றுக்கணக்கான மைல்களுக்கு அப்பால் இருந்து கொண்டு உங்களால் இமயமலைச் சிகரங்களைப் பார்க்க முடியும்; ஆனால் அந்த சிகரத்தில் அமர்ந்து கொண்டு அதைப் பார்ப்பது முற்றிலும் மாறுபட்ட ஒரு அனுபவமாகும். சட்டோரி என்பது சமாதி நிலையை தூரத்தில் இருந்து பார்க்கும் பார்வை; ஒரு சிறுகாட்சி, அதனளவில் அது அழகானதுதான். ஆனால் அது சமாதி நிலைக்கு சமமானதாக ஆகாது.

சமாதி என்பது முழுமையான தெளிவுடன் கூடிய உங்களது இயல்பு, மிகவும் தூய்மையான உங்களது இயல்பு, முழுமையான விழிப்புணர்வுடன் கூடிய உங்களது இயல்பு.

சமாதி நிலை தான் உங்களது உண்மையான வீடு.

எனவே, சமாதி நிலையை அறிந்து கொள்ளாத மக்கள், ஒரு வீடு இல்லாமல் சுற்றித் திரிகின்றவர்கள் ஆகி விடுகின்றனர். அவர்கள் வீடற்றவர்கள், வேர்கள் இல்லாத மக்கள், மேலும் அவர்களின் வாழ்க்கை முழுவதும் துன்பம் என்பதைத் தவிர வேறு எதுவும் கிடையாது. சமாதி நிலை இந்த பிரபஞ்சத்தில் உங்களுக்கு வேர்களைக் கொடுக்கிறது. மேலும் அது உங்களது வீட்டிற்கான கதவுகளைத் திறக்கிறது. உங்களது சக்தியை இறுதியாக செயல் வடிவம் ஆக்குவதுதான் சமாதி நிலை.

மேலும் சமாதி நிலைக்கான வழி மிகவும் எளிமையானது. மனதை கைவிட்டு விடுங்கள், மனதிற்கு அப்பால் போய் விடுங்கள், அப்போது நீங்கள் சமாதி நிலைக்குள் நுழைந்து விடுவீர்கள். மனம் மட்டுமே அதற்குள்ள ஒரே இடையூறு. ஆனால் விநோதமான விதமாக நாம் மனதை மேலும் மேலும் சக்தி நிறைந்ததாக ஆக்கவேண்டும் என்று தொடர்ந்து கற்றுக் கொடுத்து கொண்டிருக்கிறோம். உலகம் முழுவதும் உள்ள ஒட்டுமொத்த கல்விமுறையும் உங்களது எதிரியான மனதை பேணி பாதுகாத்துவருகிறது. அதை பலம் நிறைந்ததாக

ஆக்குகிறது. அதிக தகவல்களை உடையதாகவும், அதிக கல்வி அறிவு மிக்கதாகவும் ஆக்குகிறது.

மிகவும் புத்திசாலித்தனமான ஒரு உலகில், தியானம் என்பது ஒவ்வொரு பள்ளி, கல்லூரி மற்றும் பல்கலைக்கழகங்களிலும் முற்றிலும் உரிமையான கட்டளையாக ஆக்கப்பட வேண்டும். மேலும் ஒரு மனிதன் சமாதி நிலையின் ருசியை கொஞ்சமாவது அறியாத வரையில் அவன் பல்கலைக்கழகத்தை விட்டு வெளியேற அனுமதிக்கக்கூடாது. அவன் வெளியேறுவதற்கான சான்றிதழ்கள் கொடுக்கப்படக்கூடாது.

மேலும், எல்லாக் கல்விமுறைகளிலும் நாம் தியானத்தை உள்ளடக்குகின்ற பகுதியாக ஆக்கிவிட்டால், அதன்பின்னர் இயல்பாகவே இந்த மக்கள் அரசியல்வாதிகளாக ஆகப் போகிறார்கள், இந்த மக்கள் வியாபாரிகளாக ஆகப் போகிறார்கள். இந்த மக்கள் தொழில் அதிபர்களாக ஆகப் போகிறார்கள். இவர்கள் இசைக் கலைஞர்களாக, ஓவியர்களாக, நடிகர்களாக, நடனக்கலைஞர்களாக ஆகப் போகின்றனர். ஆனால் இந்த மக்களிடையே தியான அனுபவம் என்பது பொதுவான ஒரு விஷயமாக இருக்கும். மேலும் தியானமானது இந்த ஒட்டுமொத்த மனித இனத்தையும் ஒரே முழுமைக்குள் ஒன்று சேர்க்கின்ற பொதுவான ஒரு பொருளாக இருக்கும்.

தியானம் செய்கின்ற ஒரு மனிதன் வேறுபட்டு செயல் புரிகிறான். அவன் எந்தத் தொழிலைத் தேர்வு செய்தாலும் அது ஒரு பொருட்டல்ல, அவன் தனது தொழிலுக்கு சில புனிதத் தன்மைகளைக் கொண்டு வந்து விடுவான். அவன் செருப்பு தைப்பவனாக இருக்கலாம், அல்லது அவன் சாலைகளைச் சுத்தம் செய்பவனாக இருக்கலாம். ஆனால அவன் தனது வேலைக்கு சில தன்மைகளை, சில அருளை, சில அழகை கொண்டுவந்து விடுவான். சமாதி நிலையை அடையாமல் இது சாத்தியப்படாது.

இந்த ஒட்டுமொத்த உலகையும், பேரானந்தம் மிக்க மக்களால் நாம் நிரப்பி விடமுடியும். வெறுமனே தியானம் என்கிற ஒரு எளிமையான விஷயம் மட்டும் ஏற்றுக் கொள்ளப்பட்டால் போதுமானதாகும். நீங்கள் ஒரு மருத்துவராகவோ அல்லது

பொறியாளராகவோ அல்லது ஒரு விஞ்ஞானியாகவோ ஆகலாம். ஆனால் நீங்கள் என்னவாக ஆகப் போகிறீர்கள் என்பது முக்கியமல்ல. ஒவ்வொரு தொழிலுக்கும், கல்வியின் ஒவ்வொரு பரிமாணத்திற்கும், தியானம் தான் கண்டிப்பாக அஸ்திவாரமாக இருந்தாக வேண்டும்.

அதன்பின்னர் போர்கள் தானாகவே மறைந்துவிடும். நீங்கள் அணு ஆயுதங்களுக்கு எதிராக போராட வேண்டியதில்லை. நாட்டின் ஜனத்தொகை தானாகவே குறைய ஆரம்பித்துவிடும். ஏனெனில் தியானம் செய்கின்ற ஒரு மனிதன் விழிப்புணர்வுடன் செயல்புரிவான். இந்த உலகில் மக்கள்தொகை அதிகம் உள்ளது என்பதை அவன் கண்டு கொண்டால், அவனால் குழந்தைகளை பெற்றெடுக்க முடியாது. யாரும் அவனுக்கு சொல்ல வேண்டிய தில்லை. ஒவ்வொரு நாளும் அழிவை நோக்கி போய்க்கொண்டு இருக்கிற உலகில் அவன் தனது குழந்தைகளை ஏன் பெற்றெடுக்க வேண்டும்? தனது குழந்தைகளை மூன்றாம் உலகப் போரில் மாட்டிக்கொள்ள யார் விரும்புவார்கள்? தனது குழந்தைகள் தெருக்களில் பட்டினியால் மரணமடைய யார் விரும்புவார்கள்?

மனிதனுக்கு ஏற்படக்கூடிய எல்லா சுகவீனங்களையும் தியானம் ஒன்று மட்டுமே குணப்படுத்தும். அதுதான் ஒரே மருந் தாகும். தியானம் மற்றும் மருந்து ஆகிய இரண்டு வார்த்தைகளும் ஒரே மூல வார்த்தையில் இருந்துதான் வருகின்றன. மருந்தானது உடலுக்கு, தியானமானது ஆன்மாவுக்கு. அவை இரண்டும் ஆரோக்கியத்தைக் கொண்டு வருகின்றன.

*''எதுவுமே அதற்கென்று சொந்தமான இயல்பை, குணத்தை பெற்றிருக்கவில்லை''* என்று சூத்திரங்கள் கூறுகின்றன.

இது கௌதமபுத்தர் மற்றும் போதிதருமர் போன்ற அவரது சீடர்களால் கொடுக்கப்பட்ட மாபெரும் பங்களிப்புகளில் ஒன்றாகும்.

*எதுவுமே அதற்கென்று சொந்தமான இயல்பை பெற்றிருக்க வில்லை.*

இதற்கு உங்களது தன்னுணர்வானது ஒரு தூய்மையான பரந்த வெளியில் இருக்கிறது என்று அர்த்தம். அதற்கென்று எந்த குறிப்பிடத்தக்க பண்பையும் பெற்றிருக்கவில்லை. அது முற்றிலும் வெறுமையாக, காலியாக இருக்கிறது, என்றாலும் கூட நிறைந்து இருக்கிறது. அதாவது, மகிழ்ச்சி நிறைந்து, ஒளி நிறைந்து, நறுமணம் நிறைந்து உள்ளது. ஆனால் முற்றிலும் காலியாக உள்ளது.

மக்களை வேறுபடுத்தி காட்டுகின்ற சுயஇயல்பானது கிடையாது. நீங்கள் சமாதிநிலையில் இருக்கின்ற அந்த நொடிப்பொழுதில், மரங்களும் கூட சமாதிநிலையில் இருப்பதை நீங்கள் காண்பீர்கள். மலைகள் சமாதி நிலையில் இருப்பதை, நட்சத்திரங்கள் சமாதி நிலையில் இருப்பதை காண்பீர்கள். இந்த முழு பிரபஞ்சமும் சமாதி நிலையில் இருக்கிறது. நீங்கள் மட்டும் வழிதவறி சென்றுவிட்டீர்கள். சமாதி நிலையில், நீங்கள் திரும்பிவந்து இந்த பிரபஞ்சத்தின் முழுமையோடு உருகி ஒன்று கலந்துவிட்டீர்கள்.

*''எதுவுமே அதற்கென்று சொந்தமான இயல்பை பெற்றிருக்க வில்லை'' செயல்படுங்கள். கேள்வி கேட்காதீர்கள்.*

போதிதருமர் ஒரு தத்துவவாதி அல்ல. மேலும் எந்தவிதமான தத்துவங்களையும் கூறுவதில் அவருக்கு ஆர்வம் கிடையாது. அவர் செயல்களை செய்கின்ற எளிமையான மனிதர். *செயல்படுங்கள். கேள்வி கேட்காதீர்கள்,* என்று அவர் கூறுகிறார். ஏனெனில் கேள்விகள் உங்களை எங்கும் வழிநடத்தி செல்லாது. ஒவ்வொரு பதிலும் மேலும் பத்து கேள்விகளைத் தான் உரு வாக்கும். மேலும் பிறவிக்கு மேல் பிறவிகளில் நீங்கள் கேள்விகள் கேட்டுக்கொண்டே போகலாம். ஆனால் பதிலை உங்களால் கண்டு கொள்ள முடியாது. எனவே செயல் படுத்துங்கள்.

*நீங்கள் கேள்வி கேட்கும்போது, நீங்கள் தவறு செய்து விடுகிறீர்கள்.*

நீங்கள் என்ன கேள்வி கேட்கிறீர்கள் என்பது ஒரு பொருட்டல்ல. நீங்கள் கேள்வி கேட்கும்போது நீங்கள் தவறு செய்து விடுகிறீர்கள். எனவே நீங்கள் கேள்வி கேட்காமல், அமைதியாக செயல்பட ஆரம்பித்தால், சமாதிநிலை என்பது வெகுதொலைவில் இல்லை. கேள்விகள் மனதில் இருந்து வருகின்றன. மேலும் அதற்கு என்னதான் பதில்கள் கொடுக்கப் பட்டாலும், உங்களது மனமானது மேலும் மேலும் கல்வி அறிவுள்ளவராக ஆவதில் தான் மகிழ்ச்சி அடைகிறது. அதில் தான் அது மேலும் மேலும் பலம் வாய்ந்ததாக ஆகிறது. ''தயவுசெய்து எதையும் கேட்காதீர்கள். பதில் தெரிந்து கொள்ள நீங்கள் விரும்பினால், கேள்வி கேட்காதீர்கள். செயல்படுங்கள்'' என்று போதிதருமர் கூறுகிறார்.

செயல்புரிதல், மனதைக் கடந்து செல்கிறது. மேலும் 'நீங்கள்' தான் அதற்கான பதில் என்பதையும் கண்டுகொள்வீர்கள். உங்களது ஆன்மா தான் பதில்.

*நீங்கள் மதிமயக்கத்தில் இருக்கும்போது, ஆறுபுலன்களும், ஐந்து நிழல்களும் துன்பத்தையும், அழிவையும் உருவாக்கி விடுகின்றன.*

சிறிய சூத்திரங்களில், அபரிமிதமான அர்த்தமுள்ள விஷயங் களைக் கூறுவதில் அவர் மாபெரும் அறிவுக் கூர்மையைப் பெற்றிருக்கிறார். நீங்கள் மதிமயக்கத்தில் இருக்கும்போது, வேறு வார்த்தையில் கூறவேண்டும் என்றால், நீங்கள் மனம் என்பதில் இருக்கும்போது, பஞ்சபூதங்கள் இந்த உலகையும் உங்களது புலன்களையும் உருவாக்குகின்றன.

இது ஒரு வித்தியாசமான விஷயம், ஏனெனில் அறிவிய லானது இந்த நூற்றாண்டில் மட்டுமே ஆறாவது புலனைக் கண்டு பிடித்துள்ளது. இல்லையெனில், பழைய புனித நூல்களில் ஐந்து புலன்கள் பற்றியே பேசப்படுகிறது. போதிதருமர் மட்டுமே ஆறாவது புலன் பற்றி பேசுகிறார். அவர் அதைப் பற்றி அறிந்து கொண்டது ஒரு அற்புதம் என்னும் அளவுக்கு ஆறாவது புலன் உள்ளது. அது இப்போதுதான் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

அது உங்களது காதின் உள்ளே இருக்கிறது. காது என்பது எப்போதும் ஐம்புலன்களில் ஒன்றாக ஏற்றுக் கொள்ளப் பட்டுள்ளது. ஆனால் காதின் உள்ளே இரண்டு புலன்கள் உள்ளன என்பதை நாம் அறிந்திருக்கவில்லை. அதில் ஒன்று கேட்கின்ற புலன் மற்றும் அடுத்தது சமநிலையில் வைக்கின்ற புலன். உங்கள் காதின்மீது பலமாக அடித்தால் நீங்கள் உடனடியாக சமநிலை இழந்துவிடுவீர்கள். பின்னிரவில் குடிகாரன் ஒருவன் சமாளித்து வீட்டிற்கு வருவதைப் பார்க்கும்போது அவன் எப்படி சமாளித்து வந்தான் என்பதை உங்களால் நம்ப முடியாது. அவன் எல்லா கட்டுப்பாடுகளையும், எல்லா சமநிலைகளையும் இழந்து விடு கிறான். ஏனெனில் மதுவானது ஆறாவது புலனை பாதிக்கிறது. ஒவ்வொரு போதைப் பொருளும் ஆறாம் புலனை பாதிக்கிறது எனவே உடனடியாக நீங்கள் சமநிலையை இழந்து விடுகிறீர்கள்.

குடிகாரன் ஒருவன் பின் இரவில் வீட்டிற்கு வந்து பூட்டைத் திறப்பதற்கு முயற்சி செய்தான். ஆனால் அவனது கையும் ஆடிக்கொண்டிருந்தது, பூட்டும் ஆடிக்கொண்டிருந்தது; அவனது அடுத்த கையும் ஆடிக்கொண்டு இருந்ததால் சாவியை பூட்டினுள் அவனால் நுழைக்க முடியவில்லை. இரண்டுமே ஆடிக்கொண் டிருந்தன. உடனே அவன், ''அட கடவுளே, என்ன நடக்கிறது? கண்டிப்பாக இது பூமி அதிர்வாகத்தான் இருக்கவேண்டும். எல்லாமே ஆடுகிறது,'' என்று கூறினான்.

சாலையில் இருந்து இதைக் கவனித்த ஒரு போலீஸ்காரர் அவன்மீது இரக்கப்பட்டார். அவர் நல்ல மனிதர்தான். ஆனால் உங்களைப் போல தவறான ஆளுடன் சேர்ந்து விட்டார். நீங்கள் அனைவரும் தவறான ஆளுடன் சேர்ந்து விட்ட நல்ல மனிதர்கள். கூடிய விரைவில் நீங்கள் ஒரு குடிகாரன்போல நடந்து செல்வீர்கள். அந்த போலீஸ்காரர் அவரிடம் வந்து, ''நான் உனக்கு உதவட்டுமா?'' என்று கேட்டார். உடனே அவர், ''ஆமாம், கண்டிப்பாக உதவ வேண்டும். நீங்கள் ஒரு நொடிப்பொழுது இந்த வீட்டினை கெட்டியாகப் பிடித்துக் கொண்டால், நான் எனது சாவியை, பூட்டின் துவாரத்தில் நுழைத்துவிடுவேன். வெறுமனே வீட்டினைக் கொஞ்சம் பிடித்துக் கொள்ளுங்கள். இங்கு பெரிய பூகம்பம் வந்து விட்டது போல தெரிகிறது,'' என்று கூறினான்.

இது மிகவும் விநோதமானது ஏனெனில் அந்த ஆறாவது புலன் காதின் உட்புறத்தில் மறைந்து இருக்கிறது. அதனால்தான் யாரும் அதுபற்றி ஒருபோதும் பேசவில்லை. ஏனெனில் அது இருப்பது ஒருபோதும் யாருக்கும் தெரியவில்லை. இந்த நூற்றாண்டில் தான் அறுவை சிகிச்சையாளர்கள், உங்கள் உடலை சமநிலையில் வைத்திருக்கின்ற ஆறாவது புலன் காதில் இருக்கிறது என்று தெரிந்து கொண்டனர்.

ஆனால், போதிதருமர் ஆறு புலன்களும் ஐந்து நிழல்களும் தான் துன்பத்தையும் அழிவையும் உண்டாக்குகின்றன என்று கூறுகிறார். நீங்கள் மனமயக்கத்தில் இருக்கும்போது நீங்கள் மனம் என்பதில் இருக்கும்போது, உங்களது உடலின் பஞ்சபூதங்களும், ஆறுபுலன்களும், துன்பத்தையும், மரணத்தையும் உருவாக்கு கின்றன.

ஆனால், நீங்கள் விழித்தெழுந்து விடும்போது. அதாவது, நீங்கள் மனதைக் கடந்து சென்று விடும்போது, ஆறு புலன்களும், ஐந்து நிழல்களும், நிர்வாணம் மற்றும் அழவில்லாமையை உருவாக்கி விடுகின்றன.

எல்லாமே ஒரே மாதிரியானவைதான்; அதே ஆறு புலன்களும் மற்றும் அதே பஞ்சபூதங்களும் சேர்ந்துதான் இந்த உலகமாக ஆகி இருக்கிறது. நீங்கள் மனதிற்கு அப்பால் சென்றுவிடும்போது, அவை நிர்வாணம் மற்றும் அழிவின்மையை உருவாக்குகின்றன.

ஆகவே, போதிதருமர் இந்த உடலுக்கு எதிரானவர் அல்லன். மேலும் அவர் இந்த உலகிற்கும் எதிரானவர் அல்லர். அவர் உங்களது தூக்கத்திற்கு தான் எதிரானவர். நீங்கள் இந்த உலகை துறந்துவிடவேண்டும் என்று அவர் விரும்பவில்லை. நீங்கள் இந்த உடலை துன்புறத்தவேண்டும் என்று அவர் விரும்ப வில்லை. ஏனெனில் இந்த உடல் மற்றும் இந்த உலகம் இரண்டும் முற்றிலும் வேறுபட்ட விதத்தில் நடந்துகொள்ளும். நீங்கள் வெறுமனே விழித்துக் கொண்டிருக்க வேண்டும். எனவே ஒட்டுமொத்த விடையானது கீழ்க்கண்டவாறு இருக்கிறது.

தூக்கத்தை துறந்து விடுங்கள், உங்களது தூக்கத்திற்கு பாதுகாப்பு அரணாக இருக்கிற மனதைத் துறந்துவிடுங்கள்.

உங்களுக்குள் வேலை செய்யாமல் இருக்கும் விழிப் புணர்வை வெளியிடுகின்ற அமைதிக்குள் போய்விடுங்கள். அப்போது உங்களது ஒட்டுமொத்த ஆன்மாவும் பேருணர்வினால் பிரகாசமானதாக ஆகிவிடும்.

அதன்பிறகு, அதேஉடல், அதே புலன்கள், மற்றும் அதே உலகம் ஒரு வித்தியாசமான சிறப்பியல்பை பெற்றிருக்கும். அது நிர்வாணம் ஆகிவிடுகிறது. அது அழிவற்ற நிலையாக ஆகி விடுகிறது.

*பாதையைத் தேடுகின்ற ஒருவர் தனக்கு அப்பால் எதையும்; பார்ப்பதில்லை. மனம் தான் வழி என்பதை அவர் அறிந்து கொள்கிறார். ஆனால் அவர் மனதைக் கண்டு கொள்ளும்போது அவர் எதையுமே கண்டு கொள்வதில்லை. மேலும் அவர் வழியைக் கண்டுகொள்ளும்போதும் எதையும் கண்டு கொள்வதில்லை. வழியைக் கண்டு பிடிப்பதற்கு மனதைப் பயன்படுத்தமுடியும் என்று நீங்கள் நினைத்தால் நீங்கள் ஏமாற்றமடைவீர்கள். நீங்கள் ஏமாந்து இருக்கும்போது புத்தநிலை இருக்கிறது.*

இது மிகவும் அழகான வாக்குமூலம். இப்படிப்பட்ட வாக்குமூலங்களைக் காண்பது மிகவும் அபூர்வம்.

*நீங்கள் ஏமாந்து இருக்கும் போது, புத்தநிலை இருக்கிறது. ஏனெனில் நீங்கள் விழிப்புடன் இருக்கும்போது அது இருப்ப தில்லை.*

இது மிகவும் விநோதமான வாக்குமூலம். நீங்கள் இதை வேறுவிதமாக நினைத்திருப்பீர்கள். நீங்கள் மயக்கத்தில் இருக்கும்போது புத்தநிலை இருக்காது மற்றும் நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்கும்போது அது இருக்கிறது என்று நினைத்திருப்பீர்கள். ஆனால் போதிதருமர் இதற்கு நேர் எதிரான ஒன்றைச் சொல்கிறார். அவர் செல்வது சரியானதுதான்.

நீங்கள் ஏமாற்றப்பட்டு விடும்போது, இந்த உலகில் எல்லாவிதமான மாயைகளில் நீங்கள் சுற்றித்திரியும்போது உங்களுக்குள் ஆழத்தில் ஒரு ஆசை ஒன்று இருக்கிறது. சிலசமயம் அதுகுறித்து நீங்கள் அறிந்து கொள்கிறீர்கள். சிலசமயம் அதைப்பற்றி நீங்கள் மறந்து விடுகிறீர்கள். ஒரு புத்தராக இருக்கவேண்டும் என்ற ஆசை, விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும் என்கிற ஆசை, மெய்ஞ்ஞானம் அடையவேண்டும் என்கிற ஆசை உங்களுக்குள் இருக்கிறது.

ஆழ்ந்த உறக்கத்திலும்கூட, உங்களுக்குள் உள்ள இருளின் ஏதோ ஒரு மூலையில், விழிப்புடன் இருப்பதற்கான, மெய்ஞ் ஞானம் அடைவதற்கான ஒரு சிறிய ஆசை தொடர்ந்து இருந்துகொண்டு தான் இருக்கிறது. ஏனெனில் எப்போதும் துன்பம், வேதனை, துயரம் இவற்றோடு யாருமே திருப்தி அடைந்து விடமுடியாது. ஒருவர் இதிலிருந்து வெளியே வர விரும்புவார். அதனால் தான் போதிதருமர், "நீங்கள் மாயையில் இருக்கும்போது, புத்தநிலை இருக்கிறது. நீங்கள் விழிப்புணர் வுடன் இருக்கும்போது அது இல்லாமல் போய்விடுகிறது. ஏனெனில் விழிப்புணர்வு தான் புத்தநிலையாக உள்ளது" என்று கூறுகிறார்.

நீங்கள் விழிப்புணர்வு அடையும்போது, நீங்கள் ஒரு புத்தராக இருப்பதால், புத்தநிலைக்கான ஆசை மறைந்து போகிறது. மேலும் நீங்கள் ஒரு புத்ததராக இருக்கும்போது, நீங்கள் ஒரு புத்தர் என்கிற விழிப்புணர்வை நீங்கள் பெற்றிருக்க மாட்டீர்கள். விழிப்புணர்வை, விழிப்புணர்வை உணர முடியாது. கள்ளம் கபடமற்ற தன்மையால், அந்த தன்மையை அறிந்து கொள்ள முடியாது. ஆகவே விழிப்புணர்வில் இருந்து வெகு தொலைவில் இருப்பவர்களுக்கு மட்டுமே புத்தநிலை என்பது இருக்கிறது. வீட்டினை சென்றடைந்தவர்களுக்கு புத்தநிலை என்பது மறைந்துவிடுகிறது. ஒரு புத்தர், தான் ஒரு புத்தர் என்பதை அறிந்து கொள்ள மாட்டார். அறிவு என்பது எப்போதும் அடுத்ததைப் பற்றியதாகவே இருக்கும். முகம் பார்க்கும் கண்ணாடியானது தன்னைத் தவிர இந்த உலகில் உள்ள அனைத்தையும்

பிரதிபலிக்கும். தான் இருக்கிறோம் என்பது அந்த கண்ணாடிக்கு தெரியாது.

வாழ்வையும், சாவையும் வெறுக்காதீர்கள் அல்லது வாழ்வையும், மரணத்தையும் நேசிக்காதீர்கள். உங்களது ஒவ்வொரு எண்ணமும் மாயையில் இல்லாமல் இருக்கும்படி பார்த்துக் கொள்ளுங்கள். அப்போது நிர்வாண நிலையின் ஆரம்பத்தை நீங்கள் வாழ்விலேயே கண்டு கொள்வீர்கள், மேலும் மரணத்தில், மறுபிறவி கிடையாது என்பதற்கான உறுதிப் பாட்டினை அனுபவிப்பீர்கள்.

இந்த ஒட்டுமொத்த மேலைநாட்டுப்பகுதியும், மறுபிறவி பற்றி ஒருபோதும் சிந்திக்காதது மிகப்பெரிய ஆச்சரியத்தில் என்னை நிரப்புகிறது. பிளாட்டோவில் இருந்து கண்ட் வரையில், பியூபர் பாக், பெர்ட்ரண்ரஸ்ஸல், ஜுன் பால் சாத்ரே என்று அளவுகடந்த புத்திக்கூர்மையுள்ள அறிவுஜீவி தத்துவமேதைகள் இருந்தனர், ஆனால் ஒருவர்கூட மறுபிறவி பற்றி ஒருபோதும் சிந்தித்ததில்லை. வெறும் ஒரு பிறவி என்பதிலேயே அவர்களின் ஒட்டுமொத்த கருத்தும் இருந்துவிட்டது. இது மிகவும் கஞ்சத் தனமானது.

இந்த பிரபஞ்சம் கஞ்சத்தனமானது அல்ல; இது அளவுக்கு அதிகமாக நிரம்பி வழிகிறது. வெகு அபூர்வமாக மெய்ஞ்ஞானம் அடைந்து விடுகின்றவர்களை தவிர, ஒவ்வொரு மரணமும் ஒரு புதிய வாழ்க்கையின் ஆரம்பமாக இருக்கிறது. மெய்ஞ்ஞானம் அடைந்தவர்களின் மரணம் இறுதியான மரணமாக இருக்கிறது. அவர் மீண்டும் பிறவி எடுக்க மாட்டார். அவர் மீண்டும் ஒரு உடலுக்குள் புகுந்துகொள்ள மாட்டார்; அவர் அடுத்து ஒரு மனம் என்னும் வேதனையினால் கஷ்டப்பட மாட்டார். அவரது தன்னுணர்வானது, மகாசமுத்திரத்தில் ஒரு பனிக்கட்டியானது உருகி அந்த சமுத்திரத்தோடு ஒன்றாகி விடுவதைப்போல ஆகிவிடும். அவர் எங்கும் இருப்பார், ஆனால் அவர் ஒரு குறிப்பிட்ட இடத்தில், குறிப்பிட்ட உருவத்தில் இருக்க மாட்டார். அவர் எங்கும் இருப்பார், ஆனால் உருவம் இல்லாமல் இருப்பார். அவர் இந்த பிரபஞ்சமாகவே இருப்பார்.

ஒவ்வொரு முறையும் ஒரு மனிதர் மெய்ஞ்ஞானம் அடையும்போது, இந்த ஒட்டுமொத்த பிரபஞ்சமும் பேருணர்வில் கொஞ்சம் உயரமடைகிறது. ஏனெனில் இந்த மனிதரின் தன்னுணர்வானது இந்த பிரபஞ்சம் முழுவதும் பரவி விடுகிறது. அதிக மக்கள் மெய்ஞ்ஞானம் அடையும்போது, இந்த பிரபஞ்சம் மேலும் அதிகமாக செழிப்படைகிறது. எனவே ஒரு தனி மனிதன் மெய்ஞ்ஞானம் அடைவது மட்டுமல்லாமல் அவர் அடையும் மெய்ஞ்ஞானத்தினால் இந்த ஒட்டுமொத்த பிரபஞ்சமும் அளவுகடந்த லாபம் அடைகிறது. அது செழிப்பானதாகவும், அதிக அழகானதாகவும், அதிக மகிழ்ச்சி. அதிக கொண்டாட்டம் நிறைந்ததாக ஆகிறது.

ஒரு வடிவத்தினைப் பார்க்கும்போது அந்த வடிவத்தினால் அசுத்தப்படாமல் பார்ப்பது, அல்லது ஒரு ஒலியைக் கேட்கும்போது அந்த ஒலியினால் மாசுபடுத்தப்படாமல் கேட்பது தான் விடுதலையாகும். உருவங்களின்மீது பற்றுக் கொள்ளாத கண்கள் தான் ஜென்னின் கதவுகளாக உள்ளன. சுருக்கமாக சொல்லவேண்டும் என்றால், விஷயங்களின் இருப்பு நிலையை உணர்ந்து கொண்டு, அதன்மீது பற்று கொள்ளாமல் இருப்பவர்கள் தான் முக்தி அடைகிறார்கள்.

மாயை இல்லாதபோது, மனம் என்பது புத்தர்களின் பூமியாக இருக்கிறது. மாயை இருக்கும்போது மனம் நரகமாக இருக்கிறது.

எனக்கு, மிகவுயர்ந்த ஜென் குருவின் நினைவு வருகிறது. ஜப்பான் நாட்டின் பேரரசர் அவரைப் பார்ப்பதற்கு வந்தார். அவரை வந்து பார்க்கவேண்டும் என்று பேராவலுடன் இருந்தார். ஆனால் அந்த மடாலயத்திற்கான பாதை மிகவும் ஆபத்தானதாக இருந்தது. அந்தப் பாதை அடர்ந்த காட்டுப் பகுதியிலும், ஆபத்தான மலைப்பகுதியிலும் இருந்தது. ஆனால் முடிவாக அந்த பேரரசர் போய்ப்பார்த்து விடுவது என்று முடிவுசெய்தார். மரணம் நெருங்கி வந்ததால் அவர் அந்த ஆபத்தை எடுக்க தயாராக இல்லை. மரணம் வருவதற்கு முன்பு, மரணத்தினால் அழிக்க முடியாத ஒன்றினைப் பற்றி கொஞ்சம் புரிந்துகொள்ள நினைத்தார்.

ஒரு மரத்தின் அடியில் அமர்ந்திருந்த அந்த ஜென் குருவை, அவர் சென்று பார்த்தார். அவர் பாதங்களைத் தொட்டு வணங்கிவிட்டு அவரிடம், ''நான் ஒரு கேள்வி கேட்பதற்தாக வந்திருக்கிறேன். சொர்க்கம், நரகம் என்பது உண்மையிலேயே இருக்கிறதா? ஏனெனில் மரணம் என்னை நெருங்கி வந்து கொண்டு இருக்கிறது. எனவே நான் எங்கே போகப்போகிறேன், நரகத்திற்கா அல்லது சொர்க்கத்திற்கா? என்பது தான் எனது கவலையாக உள்ளது,'' என்று கேட்டார். உடனே குரு சிரித்துக் கொண்டே, ''நமது பேரரசர் இந்த அளவுக்கு முட்டாளாக இருப்பார் என்று நான் ஒருபோதும் நினைக்கவில்லை,'' என்றார். பேரரசரைப் பார்த்து, ''ஒரு முட்டாள்....'' என்று சொல்வதா! ஒரு நொடிப்பொழுதில் அந்த பேரரசர் தன்னை மறந்து தனது வாளை வெளியே எடுத்து அந்த ஜென் குருவின் தலையை வெட்டப் போனார். அதற்கு அந்த ஜென் குரு சிரித்துக் கொண்டே, ''இதுதான் நரகத்திற்கான வாசல்,'' என்றார்.

உடனே, அந்த பேரரசர் நிறுத்திவிட்டு, தனது வாளை மீண்டும் உறையில் போட்டார், அப்போது அந்த குரு, ''நீ சொர்க்கத்திற்குள் நுழைந்துவிட்டாய். இப்போது நீ போகலாம். கோபம், வன்முறை, அழித்தொழித்தல் இவற்றை வெறுமனே நினைவில் வைத்துக்கொள். இவை தான் நரகத்தின் வாசல்கள். மேலும் நரகம் என்பது உனது மனதில் தான் இருக்கிறது. ஆனால், புரிந்து கொள்ளுதல், கருணை, அமைதி ஆகியவை சொர்க்கத்தின் வாசல்கள். அவை உனது மனதிற்கு அப்பால் இருக்கின்றன. எனவே நான் உனக்கு அந்த இரண்டின் அனுபவத்தையும் கொடுத்துவிட்டேன். நான் உன்னை முட்டாள் என்று அழைத்ததற்கு என்னை மன்னித்துவிடு. நான் அப்படி செய்ய வேண்டியதாயிற்று. அது வெறுமனே உனது கேள்விக்கு பதில் கூறுவதற்காக செய்தது. ஏனெனில் நான் ஒரு சிந்தனாவாதி அல்ல, எனவே சிந்தனையாளர்கள் ஒரு கேள்விக்கு பதில் அளிப்பது போன்று நான் பதில் அளிப்பதில்லை. நான் ஒரு ஞானி, நீ பதிலுக்குரிய ருசியை கொஞ்சம் ருசித்துப் பார்க்கும். அளவுக்கு ஒரு உபாயத்தை நான் உருவாக்கினேன். இப்போது போய் வா,'' என்று கூறினார்.

அப்போது அந்த பேரரசர், கண்களில் நன்றி உணர்வு நிறைந்த கண்ணீரோடு குருவின் பாதம் தொட்டு வணங்கினார். ஏனெனில் இதைத்தவிர வேறு எந்த பதிலும் அவருக்கு அதிகம் உதவி இருக்கமுடியாது. வேறு பதில்களைக் கூறி இருந்தால் அது வெறும் கொள்கையாக மட்டுமே இருந்திருக்கும். ஆனால்; இந்த மனிதர் அபரிமிதமான அகப்பார்வை நிறைந்த ஒரு குரு. வெறுமனே அவரை முட்டாள் என்று அழைப்பதன் மூலம் உடனடியாக அவர் பதிலுக்கான சூழ்நிலையை உருவாக்கிவிட்டார். மேலும் அவர் அந்த அரசருக்கு நரகத்தின் வாசல், மற்றும் சொர்க்கத்தின் வாசல் ஆகிய இரண்டையும் காட்டினார். உங்களது மனம் தான் நரகம். மனதைத் தாண்டி அதற்கு அப்பால் செல்வது தான் சொர்க்கம்.

மனதிற்கு அப்பால் செல்லுங்கள். விழித்தெழுந்த மனிதர்களின் ஒட்டுமொத்த போதனையின் சாராம்சம் அதுதான்.

பின் தொடர்ந்து வருபவை, பாதையில் காணக்கூடியவை இது அர்கதர்கள் மற்றும் மரணிப்பவர்களின் அறிதலுக்கு அப்பாற்பட்டது.

மனமானது நிர்வாண நிலையை அடையும்போது நீங்கள் நிர்வணன நிலையைப் பார்ப்பது கிடையாது. ஏனெனில் மனம் தான் நிர்வாணமாக இருக்கிறது. நிர்வாண நிலையை, மனதிற்கு வெளியே வேறு எங்காவது நீங்கள் கண்டால், உங்களை நீங்களே ஏமாற்றிக் கொள்கிறீர்கள்.

ஒவ்வொரு துன்பமும் புத்தருக்கான விதை. ஏனெனில் துன்பமானது ஞானத்தை தேடுவதற்கு தூண்டுகிறது. ஆனால் துன்பமானது புத்தநிலைக்கு எழுகிறது என்று மட்டுமே உங்களால் கூறமுடியும். துன்பமே புத்தநிலையாக உள்ளது என்று உங்களால் கூறமுடியாது. உங்களது உடல் மற்றும் மனம் தான் விளைநிலம். துன்பம்தான் விதை, ஞானம் என்பது முளை விடுதல் மற்றும் புத்தநிலை என்பது விளைகின்ற தானியம். உங்களது மனதில் மூன்று விஷங்கள் இருக்கும்போது, நீங்கள் இழிவான நிலத்தில் வாழ்கிறீர்கள். உங்களது மனதில் இருந்து மூன்று விஷங்களும் இல்லாமல் போய்விடும் போது, நீங்கள் தூய்மையான நிலத்தில் வாழ்கிறீர்கள். தர்மம் இல்லாத மொழி இல்லை. எதுவுமே சொல்லாமல் நாள் முழுவதும் பேசுவது தான் பாதையாகும். நாள் முழுவதும் மௌனமாக, இருந்தாலும் கூட ஏதாவது ஒன்றைச் சொல்லுதல் பாதை ஆகாது. ஆகையினால் ஒரு ததாகதரின் பேச்சு மௌனத்தை சார்ந்து இருப்பதில்லை அல்லது அவரது மௌனமும் பேச்சை சார்ந்து இருப்பதில்லை அல்லது அவரது பேச்சு மௌனத்திலிருந்து தனியாக இருப்பதில்லை. பேச்சையும்,

மௌனத்தையும் புரிந்து கொள்பவர்கள் சமாதி நிலையில் இருக்கின்றனர். நீங்கள் அறிந்து கொண்டபோது பேசினால், உங்களது பேச்சு சுதந்திரமானதாக இருக்கிறது. நீங்கள் அறிந்து கொள்ளாதபோது, நீங்கள் மௌனமாக இருந்தால், உங்களது மௌனம் கட்டப்பட்டு உள்ளது. மொழியானது அத்தியா வசியமாக சுதந்திரமானதாக உள்ளது. பற்றுதலுக்கும் அதற்கும் சம்பந்தமில்லை. மேலும் பற்றுதலுக்கும் மொழிக்கும் சம்பந்தம் இல்லை.

அவர் இடைவிடாமல் வலியுறுத்துகின்ற இரண்டு விஷயங் களைத் தவிர போதிதருமர் சுத்தமாக ஒரு தங்கச் சுரங்கமாக இருக்கிறார். கவனமாக கேட்பதற்கும், புரிந்து கொள்வதற்கும், எந்த அளவு முடியுமோ அந்த அளவுக்கு உங்களது உள்ளத்தில் ஆழமாக ஈர்த்துக்கொள்ள வேண்டிய மனிதர் அவர். ஆனால் அந்த இரண்டு விஷயங்களை நினைவில் வைத்திருக்க வேண்டும்.

அந்த இரண்டு தவறுகளையும், போதிதருமரோடு சமகாலத்தில் வாழ்ந்தவர்கள் யாரும் ஏன் சுட்டிக்காட்டவில்லை என்ற நான் ஆச்சரியப்படுகிறேன். அதற்கான ஒரே விஷயம், தனிமனிதரான போதிதருமர் மிகவும் பலம் வாய்ந்தவராக இருந்தார், பின்னர் ஆட்படுத்தும் தனிமனிதப் பண்பாளராக இருந்தார் என்பதாக மட்டுமே இருக்கும் என்று நான் நினைக்கிறேன். ஆகவே அவர் முன்பு கண்டிப்பாக மக்கள் முற்றிலும் அமைதியாக இருந்திருக்க வேண்டும். அவரது பலம் வெற்றி கொள்வதாக இருந்திருக்க வேண்டும்; அப்படி இல்லையென்றால், அந்த குறைகள் மிகத் தெளிவானதாக இருந்தும் யாரும் அதைக் கவனிக்காமல் விட்டுவிடுவது சாத்தியமில்லாததாகும்.

அவர் இறுதி மலர்ச்சியை அடைந்துவிட்டார்; அவர் வீடு பேற்றினை அடைந்துவிட்டார். பாதையில் சில வேளைகளில் அவர் வழி தவறி சென்றுவிட்டது குறித்து அவர் கவலைப்பட்ட தில்லை. அவர் எப்போதும் திரும்பி வந்துவிட்டார். யாராவது ஒருவர் காலையில் வழிதவறிச் சென்றுவிட்டு மாலையில் திரும்பவும் வந்துவிட்டவர்களை காணாமல் போனவர்கள் என்று

நினைக்கக்கூடாது என்று கீழை நாடுகளில் ஒரு பழங்கால பழமொழி உள்ளது.

மக்கள் எப்போதாவது ஒருமுறை தாமாகவே வழிதவறி போய் விடுவது மிகவும் இயற்கையானது; ஏனெனில் அவர்கள் ஏற்கனவே தயார் செய்து வைக்கப்பட்டுள்ள பாதையை அவர்கள் பின்பற்றுவதில்லை. அவர்கள் ஒரே தடத்தில் இடைவிடாமல் சென்று கொண்டிருக்கிற ரயில் வண்டிகள் அல்ல. அவர்கள் எந்தவித வரைபடமும் இல்லாத, எந்தவிதமான வழிகாட்டுதலும் இல்லாத காட்டாற்றினை போன்றவர்கள். நதியானது வெகு தொலைவில் இமயமலையில் தோன்றி மலைகளில் தனது பயணத்தை ஆரம்பித்து பள்ளத்தாக்குகள், சமவெளிகள் ஆகியவற்றில் இப்படியும் அப்படியும் இடைவிடாமல் ஓடிக்கொண்டே இருக்கின்றன. ஆனால் இறுதியில் அந்த நதி கடலில் விழுகிறது. எனவே கடலைச் சென்றடைந்த பிறகு, வரும் வழியில் தேவையற்ற சில பாதைகளில் சென்றதற்காக யார் கவலைப்படுவார்கள்?

ஒருவர் சென்றடைந்து விட்டபொழுதில், அவரது கொண்டாட்டத்தில், அவரது நீண்ட பயணத்தில், தான் யார் என்று அறிந்து கொள்வதற்கான தேடுதலில் கிட்டத்தட்ட அவர் தனது தவறுகளை மறந்து விடுவார். போதிதருமரும் கூட இந்த இரண்டு தவறுகளைக் கண்டு கொள்ள முடியாமல் போனதற்கு ஒருவேளை இதுவும் ஒரு காரணமாக இருந்திருக்கலாம். அந்த இரண்டு தவறுகளைத் தவிர அவரது ஒவ்வொரு வார்த்தையும் முற்றிலும் நேர்மையானது, உண்மையானது. அது அறிவைக் கொடுக்கக்கூடிய வார்த்தை அல்ல; அது தனது கள்ளம் கபடமற்ற தன்மையை வெளியே கொட்டுவதாகும். அவர் பேசவில்லை, அவர் தனது ஒட்டுமொத்த ஆன்மாவையும் உங்களுக்கு வெளிக்காட்டுகிறார்.

ஆனால் அந்த இரண்டு விஷயங்கள் குறித்து நான் உங்களை எச்சரிக்கிறேன். அதில் ஒன்று, அவர் இடைவிடாமல் அர்கதர்களை எதிர்த்து வருவதாகும். மேலும் நானும் கூட முதலில் அந்த தவறானது குறிப்புகள் எடுத்த சீடருடையதாக இருக்கும்

என்று நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் அந்த விஷயம் இடைவிடாமல் திரும்பத்திரும்ப கூறப்படுவதால், அது சீடரின் தவறாக இல்லாமல் போவதற்கான சாத்தியங்கள் உள்ளது. அந்த இரண்டாவது விஷயம் என்னவென்றால், அவர் மனம் என்னும் வார்த்தையைத் தவறான வழியில் பயன்படுத்திக் கொண்டு இருக்கிறார்.

ஏனெனில் ஆங்கிலத்தில் மனம் என்பதற்கு 'Mind' என்னும் ஒரே வார்த்தை மட்டுமே உள்ளது. எனவே கிறிஸ்தவர்களும், பிரமம் ஞான சபையினரும் ஒரு குறிப்பிட்ட யுக்தியை கையாண்டனர். அவர்கள் சாதாரண மனித மனதைக் குறிப்பதற்கு 'm' என்னும் சிறிய எழுத்தை பயன்படுத்தினர். மேலும் இந்த பிரபஞ்ச மனதைக் குறிப்பதற்கு, மனம் அற்ற நிலைக்கு சமமான ஒன்றைக் குறிப்பதற்கு, அவர்கள 'M'; என்னும் பெரிய எழுத்தை பயன்படுத்துகின்றனர். இந்த பிரபஞ்சமனமானது நிச்சயமாக உங்களது மனம் அல்ல. உங்களைப் பொறுத்தமட்டில், உங்களது மனம் என்பது மறைந்துவிட்டது. மேலும் நீங்கள் மனம் அற்ற ஒரு நிலைக்குள் நுழைந்துவிட்டீர்கள். இந்த விஷயங்களில் அவரது சூத்திரங்களை நான் திருத்தப்போகிறேன். உண்மை குறித்து இப்படிப்பட்ட ஒரு அழகான வாக்குமூலத்தில் ஒரு சிறிய களங்கம்கூட இருப்பதை என்னால் அனுமதிக்க முடியாது.

இனி சூத்திரம் :

*பின்தொடர்ந்து வருபவை, பாதையில் காணக்கூடியவை.*

பின்தொடர்ந்து வரப்போகின்ற இந்த சூத்திரங்கள் அவரது தத்துவார்த்த நிலைப்பாடு அல்ல என்று அவர் கூறுகிறார்; அவை பாதையில் அவருக்கு ஏற்பட்ட அனுபவங்கள். பின் தொடர்ந்து வருபவை பாதையில் காணக்கூடியவை. சாட்சியாக பார்த்த வற்றை மட்டுமே நான் கூறப்போகிறேன். இது எனது நம்பிக்கை அல்ல, இது எனது கொள்கை அல்ல, இது எனது கோட்பாடு அல்ல. இது எனது முழுமையான ஐயமற்ற அனுபவமாகும். அதில் அதிகாரம் உள்ளே உறைந்துள்ளது. இந்த சூத்திரங்களைப் பின்பற்றுபவர் யாராக இருந்தாலும் அவர் சரியான பாதையில் சென்றால், இதே சூத்திரங்கள் அவற்றின் கதவுகளை, அவற்றின்

ரகசியங்களை, அவற்றின் நறுமணத்தை, பாதையில் பயணிப் பவருக்கு கொடுக்கும்.

இந்த சூத்திரங்களை ஒரு அடிப்படை தத்துவமாக பயன்படுத்த முடியும். இதில் கூறியுள்ளது போன்று உங்களுக்கு எதுவும் நடக்கவில்லை என்றால், நீங்கள் சரியான பாதையில் செல்லவில்லை என்று அர்த்தமாகும். அதன் பின்னர் உங்களது நதியானது ஏதோ ஒரு பாலைவனத்திற்குள் நுழைந்து விடுவதால், அந்த நதியானது கடலைச் சென்றடையாமல், பாலைவனத்தில் காணாமல் போய்விடலாம்.

இது அர்கதர்கள் மற்றும் மரணிப்பவர்களின் அறிதலுக்கு அப்பாற்பட்டது என்று அவர் கூறுகிறார்.

நான் இதை திருத்தியாக வேண்டும். என்னைப் போன்ற ஒரு மனிதர் அவருக்கு தேவை. இது அர்கதர்களின் அறிதலுக்கு அப்பாற்பட்டது அல்ல. தங்களை புனிதர்கள் மற்றும் மரணிப் பவர்கள் என்று அழைத்துக் கொள்பவர்களின் அறிதலுக்கு நிச்சயமாக இது அப்பாற்பட்டது. அதாவது எல்லாமே முடிந்துவிடுகிறது என்கிற எண்ணத்தோடு வாழ்ந்து கொண்டிருப்பவர்கள் யாராக இருந்தாலும் இவர்கள் எல்லாரும் மரணிப்பவர்கள். சந்தேகப்படமுடியாத குறிக்கோள்களைக் கொண்ட இவர்கள் நேர்மையான மக்கள், ஆனால் இவர்கள் தவறான பாதையில் அடிஎடுத்து வைத்துவிட்டவர்கள். அவர்கள் பாசாங்குகாரர்களாகவும், பின்பற்றி நடப்பவர்களாகவும் ஆகிவிட்டனர். புத்தர் ஒரே ஒருமுறைதான் பிறக்கிறார் என்பதை இவர்கள் முற்றிலும் அறிந்து கொண்டாலும்கூட இவர்கள், இந்த பாரம்பரியம், இந்த சமுதாயம் ஆகியவற்றால் வளர்த்து எடுக்கப்பட்ட கொள்கைகளை மனதில் வைத்துக்கொண்டு அந்த கொள்கைகளை சாத்தியப்படுகின்ற ஒவ்வொரு வழியிலும் நிறைவேற்றுவதற்கு முயற்சித்துக் கொண்டு இருக்கிறார்கள்.

கௌதம புத்தரைப் போன்று, ஒருபோதும், வேறு ஒரு மனிதர் இங்கு இருக்கப்போவதில்லை. இங்கு அநேக புத்தர்கள் இருக்கலாம், ஆனால் ஒவ்வொரு புத்தரும் தனக்கு சொந்தமான வாக்குமூலங்களை, தனக்கு சொந்தமான தனித்தன்மையை,

தனக்கு சொந்தமான வெளிப்படுத்துதலை கொண்டிருப்பார்கள். அவர் கௌதம புத்தரின் உண்மை நகலாக இருக்க மாட்டார். எல்லா உண்மை நகல்களும், எப்படிப் பார்த்தாலும் கார்பன் நகல்கள் தான். அசலுக்கான அழகு அவற்றில் இருக்காது. ஆனால் மக்கள் புனித நூல்களில் கொடுக்கப்பட்டுள்ள நல்ஒழுக்க விதிமுறைகளைப் பின்பற்றி நடந்து கொண்டே இருப்பார்கள். அந்த நல்ஒழுக்க விதிமுறைகள் உயிரற்றவை. நீங்கள் புனிதநூல்களில் வைக்கப்பட்டு, வாடிப்போன, உயிரற்ற அழகான ரோஜாக்களைத்தான் வெறுமனே காண்பீர்கள். மக்கள் ரோஜா மலர்களை புனித பைபிளிலும், புனித குர்ஆனிலும், புனித கீதையிலும் வைத்திருப்பார்கள், ஆனால் அந்த ரோஜாமலர்கள் அதன்பிறகு உயிர்த்துடிப்புடன் இருப்பதில்லை.

நான் ஒரு அழகான பூந்தோட்டம் வைத்திருந்தேன். நான் எங்கு இருந்தாலும் அங்கு ஒரு அழகான பூந்தோட்டத்தை வைத்திருப்பேன். எனது பூந்தோட்டத்திற்கு அருகில் இரண்டு கோயில்கள் இருந்தன. அந்த கோயிலை வழிபட வருபவர்கள் எனது தோட்டத்திற்கு வந்து கடவுளை வழிபடுவதற்கான மலர்களை பறித்துக்கொண்டு செல்ல ஆரம்பிப்பார்கள். இந்தியாவில், கடவுள் வழிபாட்டிற்கு பூக்களைப் பறிக்கின்ற யாரையும் தடுத்து நிறுத்துவது முற்றிலும் முடியாதது. நான் எனது தோட்டத்தின் முன்பு, மதவழிபாட்டு மக்களைத் தவிர வேறு அனைவரும் பூக்களைப் பறிப்பதற்கு அனுமதிக்கப்படுகிறார்கள் என்கிற அறிவிப்பு பலகையை வைத்திருந்தேன். சமய வழிபாட்டாளர்கள் அதிர்ச்சி அடைந்தார்கள். ''நீங்கள் என்ன மனிதர்? மதவழிபாட்டு மக்களை வேறு எங்கும் பூக்களைப் பறிப்பதற்கு தடுப்பதில்லை. ஏனெனில் அந்த பூக்கள் கடவுளுக்கு காணிக்கையாக்கப்படுகின்றன,'' என்று கூறிக்கொண்டு அவர்கள் ஒரு குழுவாக சேர்ந்து கொண்டு இதை கிட்டத்தட் ஒரு புகார் போன்று என்னிடம் கொண்டு வந்தார்கள்.

நான் அவர்களிடம், ''இந்த தோட்டத்தில் உள்ள அந்த மலர்கள் ஏற்கனவே கடவுளுக்கு அர்ப்பணிக்கப்பட்டுவிட்டன. எனவே கடவுளின் இந்த பூக்களை, காற்றிலும், சூரிய ஒளியிலும் நடனமாடிக் கொண்டு இருக்கின்ற இந்த மலர்கள் உங்களைப்

போன்ற முட்டாள்களால் அழிக்கப்படுவதற்கு என்னால் அனுமதிக்க முடியாது. இந்த பூக்கள் எல்லாம் உயிருள்ள கடவுள்கள். ஆனால் நீங்களோ உங்களது உயிரற்ற கடவுள்களுக்காக அவற்றின் உயிரைப் பறிக்கிறீர்கள். அதனால் தான் நான் எனது அறிவிப்பு பலகையில், மத வழிபாடு மக்களைத் தவிர வேறு யார் வேண்டுமானாலும் பூக்களைப் பறிக்கலாம் என்று தெளிவாக எழுதி இருந்தேன். யாராவது ஒருவர் தனது பெண் தோழிக்கோ அல்லது அவளின் ஆண்தோழருக்கோ இவை தெய்விக மலர்கள் எனவே ஒருவேளை இவை அவர்களின் காதலை ஒரு தெய்விக காரியமாக மாற்றினாலும் மாற்றலாம். ஆனால் இதில் ஒன்று மட்டும் நிச்சயம்; உயிருள்ள யாரோ ஒருவருக்குத்தான் அவர்கள் இந்த மலரை கொடுக்கப் போகிறார்கள். நீங்களோ இந்த மலர்களை உயிரற்ற சிலைகளுக்கு கல்லுக்கு, போடுவதற்கு பறித்து செல்கிறீர்கள். இது சகித்துக் கொள்ள முடியாதது.'' என்று கூறினேன்.

புனிதர்கள் என்று தங்களை அழைத்துக் கொள்பவர்கள், புனித நூல்களில் இருந்து நல்ஒழுக்க விதிகளை, கட்டுப்பாடுகளை பொறுக்கி எடுத்துக் கொள்கின்றனர். அவை, ஆயிரம் ஆண்டு களுக்கு மேலாகி, வாடிப்போன உயிரற்ற மலர்கள் போன்றவை. அவற்றிடம் இப்போது எந்த ஒரு நறுமணமும் இருப்பதில்லை.

ஒவ்வொரு நல்ஒழுக்க விதிமுறையும் ஒரு உயிருள்ள குழுவினால் கொடுக்கப்பட்ட ஒரு உபாயம் என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுதல் சிறப்பானதாகும். ஒவ்வொரு நல்ஒழுக்க விதிமுறையும், ஒரு உயிருள்ள குருவினால் கொடுக்கப்பட்ட ஒரு வகையான தந்திரமாக உள்ளது; அந்த குரு இல்லாமல் அந்த உபாயங்கள், நல்ஒழுக்கவிதிகள், கட்டளைகள் எல்லாம் உயிரற்றவை ஆகிவிடுகின்றன. அதன்பின்னர் நீங்கள் அதை முற்றிலும் நேர்மையுடன் பின்பற்றிக் கொண்டே செல்வீர்கள். ஆனால் அவை உங்களுக்கு தொல்லை மற்றும் துன்பத்தைத் தான் கொண்டு வருமே தவிர வேறு எதையும் கொண்டு வராது. உயிரற்றவர்கள் பின்பற்றும்போது நீங்களும் கூட கொஞ்சம் கொஞ்சமாக உயிரற்றவராக ஆகிவிடுவீர்கள். நீங்கள் புனிதர்கள்

என்று அழைப்பவர்கள் எல்லாம் கிட்டத்தட்ட உயிரற்றவர்கள், வற்றிப் போனவர்கள். அவர்கள் வாழ்க்கையோடு உள்ள தொடர்பை இழந்துவிட்டவர்கள். அவர்கள் தங்களுக்கும் இந்த பிரபஞ்சத்திற்கும் இடையே ஆயிரம் விதமான இடையூறுகளை உருவாக்கிவிட்டார்கள். மேலும் அந்த இடையூறுகளை அவர்கள் நல்ஒழுக்கம், தவம், மற்றும் சமயப்பயிற்சி என்று அழைக் கின்றனர்.

எனவே, இப்படிப்பட்ட புனிதர்கள் மற்றும் மரணிப்பவர்கள் மற்றும் தங்களது மரணமில்லாத தன்மையை அறியாதவர்கள் ஆகியோரின் அறிதலுக்கு அப்பாற்பட்டவை இந்த சூத்திரங்கள் என்று நான் கருதுகிறேன். ஆனால் அவர்கள் அர்கதர்களின் அறிதலுக்கு அப்பாற்பட்டவர்கள் அல்லர். அர்கதர்கள், எந்த ஒரு போதிசத்வரைப் போன்றும் முற்றிலும் அதே உயரத்தில் இருப்பவர். அர்கதர்களிடம் இருப்பதை விடவும் அதிகமாக எதையும் போதிசத்துவர்கள் பெற்றிருக்கவில்லை. அவர்கள் வெவ்வேறு பாதைகளைப் பின்பற்றி, வெவ்வேறு திசைகளில் சென்றவர்கள். ஆனால் அவர்கள் அதே சிகரத்தை அடைந்த வர்கள். சிகரம் எப்போதும் ஒன்றே ஒன்று மட்டுமேயாகும்; உங்களை வழிநடத்தி செல்கின்ற பாதைகள் வேண்டுமானால் ஆயிரக்கணக்கில் இருக்க முடியும்.

*மனமானது நிர்வாண நிலையை அடையும் போது...........*

இது இரண்டாவது தவறு; ஏனெனில் மனமானது ஒருபோதும் நிர்வாண நிலையை அடைவதில்லை. உண்மையில் மனதினால் நிர்வாணம் என்னும் கருத்தைக் கூட புரிந்து கொள்ளமுடியாது. நிர்வாணம் என்கிற இந்த வார்த்தைக்கே மனதை நிர்மூலமாக்குதல், மனதை நிறுத்துதல் என்று அர்த்தமாகும். நிர்வாணம் என்கிற வார்த்தையின் உண்மையான அர்த்தத்தை புரிந்துகொள்ள வேண்டும். ''மெழுகுவர்த்தியை ஊதி அணைத்தல்'' என்பது அதன் சொல்லுக்கு சொல் சரியான அர்த்தமாகும். மனம் என்பது விழிப்புணர்வு என்னும் ஒரு சிறிய சுடரோடு எரிந்து கொண்டிருக்கின்ற ஒரு சிறிய மெழுகுவர்த்தியாகும். ஆனால்

அந்த சிறிய ஒளிச்சுடரும் கூட அளப்பரிய கெடுதலை செய்துவிட முடியும்.

ரவீந்திரநாத் தாகூரின் வாழ்க்கையில் இருந்து ஒரு நிகழ்ச்சியை நான் உங்களுக்கு கூறுகிறேன். அவரது தந்தை மிகப்பெரிய நிலச்சுவான்தார். அவர்களின் நிலபுலன்கள் ஆயிரக்கணக்கான நகரங்களையும், ஆயிரக்கணக்கான மைல்கள் தூரம் கொண்டது. அந்த நிலபுலன்களின் வழியாக ஒரு அழகான ஆறு ஓடிக்கொண்டிருந்தது. ரவீந்திரநாத் அந்த அழகான நதியில் சென்று தனது சிறிய படகுவீட்டில் மாதக்கணக்கில் வசிப்பதுண்டு. அந்த நதியானது அடர்ந்த காடுகள் சூழப்பட்டு, முழுமையான அமைதியுடன் இருப்பதால், தனிமையில் இருப்பதற்கு அழகானது. ஒரு பௌர்ணமி தினத்தில், அவர் குரோசே (Croce)யின் கலைஉணர்வு தத்துவத்தின் மிகச்சிறந்த பங்களிப்பான நூல் ஒன்றைப் படித்துக் கொண்டு இருந்தார்.

குரோசே, அழகைப் பற்றி சிந்தித்த மிகச்சிறந்த தத்துவ மேதையாவார். அவரது ஒட்டுமொத்த வாழ்க்கையிலும் அவர் சத்தியம் அல்லது நல்லது என்பதன் அர்த்தத்தை கண்டு பிடிக்காமல் அழகு என்பதன் அர்த்தத்தை கண்டுபிடிப்பதாகவே இருந்தது. அழகு என்பது என்ன என்பதுதான் அவரது முழு அக்கறையாக இருந்தது. அழகு என்றால் என்ன என்று நாம் கண்டுபிடித்துவிட்டால், அதன்பின்னர் நாம் சத்யம் என்பது என்ன என்று கண்டுபிடித்துவிடலாம் என்று அவர் நினைத்தார். ஏனெனில் சத்யம் என்பது அசிங்கமானதாக இருக்க முடியாது மேலும் நாம் நல்லது என்றால் என்ன என்றும் கண்டுபிடித்துவிட முடியும் ஏனெனில் அழகானது கெட்டதாக இருக்கமுடியாது. இது ஒரு அழகான கருத்து, அவர் இந்த அஸ்திவாரத்தோடு, அழகு என்றால் என்ன என்பதை வெவ்வேறு கோணங்களில் கண்டு கொள்வதற்காக அவரது ஒட்டுமொத்த வாழ்க்கையிலும் செயல்புரிந்தார்.

ரவீந்திரநாத்தும் கூட அழகை வழிபடுகின்ற ஒருவர். அவர் மிகவும் அழகான மற்றும் கலை உணர்வு கொண்ட வாழ்க்கையை வாழ்ந்தார். அவர் கவிதையை மட்டும் படைக்கவில்லை. அவரது

வாழ்க்கையே ஒரு அழகான கவிதையாக இருந்தது. அவர் மிகவும் அருள்நிறைந்த மனிதர்.

அந்த பௌர்ணமி இரவில், தனது படகுவீட்டில் ஒரு சிறிய மெழுகுவர்த்தி வெளிச்சத்தில் அவர் குரோசேயின் புத்தகத்தை படித்துக்கொண்டு இருந்தார். நடு இரவில், குரோசேயின் சிக்கலான விவாதங்களைப் படித்ததால் களைப்படைந்த அவர் புத்தகத்தை மூடிவைத்துவிட்டு அந்த மெழுகுவர்த்தியை ஊதி அணைத்துவிட்டார். அவர் தனது படுக்கைக்கு தூங்கச் சென்றார். ஆனால் அப்போது ஒரு சிறிய அற்புதம் நடந்தது. அந்த மெழுகு வர்த்தியின் வெளிச்சம் போனபின்னர், அந்த படகுவீட்டின் ஒவ்வொரு ஜன்னல் மற்றும் கதவுகளின் வழியாக நிலவானது நடனமாடிக்கொண்டு உள்ளே வந்தது. நிலாவான தனது அற்புத ஒளியால் அந்த சிறிய படகு வீட்டை நிரப்பியது.

ரவீந்திரநாத் ஒரு நொடிப்பொழுது அமைதியாக இருந்தார். அது அந்த அளவுக்கு புனிதமான அனுபவமாக இருந்தது. அவர் படகுவீட்டை விட்டு வெளியே வந்தார். அமைதியான இரவில், அமைதியான மரங்களுக்கு நடுவில், நதியானது எந்த சப்தமும் எழுப்பாமல் மெதுவாக ஒடிக் கொண்டிருக்கும்போது, அந்த நிலவானது அளவுகடந்த அழகுடன் இருந்தது. அடுத்தநாள் காலையில் அவர் தனது நாட்குறிப்பில், ''அழகானது என்னைச் சுற்றிலும் இருந்தது. ஆனால் ஒரு சிறிய மெழுகுவர்த்தி அதை தடுத்துக் கொண்டு இருந்தது. அந்த மெழுகுவர்த்தியின் வெளிச்சத்தினால், நிலவின் வெளிச்சம் உள்ளே நுழைய முடியவில்லை'' என்று எழுதினார்.

நிர்வாணா என்பதற்கு இதுதான் மிகச்சரியான அர்த்தம். உங்களது நான் என்னும் ஆணவத்தின் சிறிய வெளிச்சம், உங்களது மனம் மற்றும் அதன் தன்னுணர்வின் மிகச்சிறிய வெளிச்சமானது, இந்த ஒட்டுமொத்த பிரபஞ்சமும் உங்களுக்குள் நுழைவதைத் தடுத்துக் கொண்டு இருக்கிறது; அதனால் தான் இந்த நிர்வாணா என்னும் வார்த்தை வந்துள்ளது. எனவே மெழுகுவர்த்தி சுடரை ஊதி அணைத்துவிடுங்கள். அப்போது ஒவ்வொரு மூலை முடுக்கில் இருந்தும் இந்த ஒட்டுமொத்த

பிரபஞ்சமானது உங்களுக்குள் ஊடுருவிச் செல்லட்டும். நீங்கள் எதையும் இழந்துவிடுபவராக இருக்க மாட்டீர்கள். உங்களது தீர்ந்து போகாத அழகின் பொக்கிஷத்தை, நன்மையை, சத்தியத்தை, இப்படி மதிப்புமிக்க அனைத்தையும், முதல் முறையாக நீங்கள் காண்பீர்கள். ஆகையினால் மனமானது நிர்வாணத்தை அடையும் என்று கூறமுடியாது. மனம் அற்ற நிலை மட்டுமே நிர்வாண நிலைக்கு சமமானதாக இருக்கிறது.

மனம் அற்ற நிலையானது நிர்வாணா நிலையை அடைய வேண்டிய அவசியம் கிடையாது. மனம் அற்ற நிலையே நிர்வாண நிலை.

போதிதருமர் கூறியதை நான் திருத்திக் கூறுகிறேன். *மனம் அற்ற நிலை நிர்வாண நிலையை அடையும்போது, நீங்கள் நிர்வான நிலையைக் காண்பதில்லை..........* ஏனெனில் நிர்வாண நிலை வேறு, நீங்கள் வேறு அல்ல. உங்களிடம் இருந்து தனியாகப் பிரிந்து உள்ள ஒன்றை மட்டுமே உங்களால் பார்க்கமுடியும். நீங்கள் அதோடு ஒன்றாகி இருப்பதால், அதைப் பார்ப்பதற்கான சாத்தியங்கள் கிடையாது. *ஏனெனில் மனம் அற்றநிலை நிர்வாண நிலையாக இருக்கிறது. மனம் அற்ற நிலைக்கு வெளியே வேறு எங்காவது நீங்கள் நிர்வாண நிலையைக் கண்டால், உங்களையே நீங்கள் ஏமாற்றிக் கொள்கிறீர்கள்.* சுருக்கமாகச் சொன்னால், மனம் என்பதுதான் இந்த உலகமாக இருக்கிறது. எனவே மனம் அற்ற நிலைதான் இந்த உலகில் இருந்து விடுதலை அடைவதாக உள்ளது. மனம் என்பது தான் துன்பம் என்பதாக உள்ளது. எனவே மனம் அற்ற நிலைதான் துன்பத்தின் முடிவாகவும் இன்பத்தின் ஆரம்பமாகவும் இருக்கிறது.

ஒவ்வொரு துன்பமும் புத்தருக்கான விதை. இது போதி தருமரிடமிருந்து வருகின்ற மிகவும் முக்கியமான உறுதிப் படுத்துதல். *ஒவ்வொரு துன்பமும் புத்தருக்கான விதை. ஏனெனில் துன்பமானது ஞானத்தை தேடுவதற்கு தூண்டுகிறது. ஆனால் துன்பமானது புத்தநிலைக்கு எழுகிறது என்று மட்டுமே*

உங்களால் கூறமுடியும். துன்பமே புத்தநிலையாக உள்ளது என்று உங்களால் கூறமுடியாது.

பெர்ட்ரண்ட் ரஸ்ஸல், தனது சுயசரிதையில், மிகவும் ஆழமான ஒரு விஷயத்தை சொல்கிறார். ''இந்த உலகில் துன்பம் என்பது முடிவுக்கு வந்துவிட்டால், எல்லா மதங்களும் அவை களாகவே முடிவுக்கு வந்துவிடும். துன்பம் தான் மதங்களை உயிர்த்துடிப்புடன் வைத்துக்கொண்டு இருக்கிறது'' என்று அவர் கூறுகிறார். அவர் மிகவும் வேறுபட்ட ஒரு கோணத்தில் இருந்து பேசுகிறார். அவர் ஒரு நாத்திகர்; எல்லா மதங்களும் மறைந்து போக வேண்டும் என்று அவர் விரும்பினார்.

நான் ஒரு நாத்திகன் அல்லன். நானும் கூட எல்லா மதங்களும் மறைந்து போக வேண்டும் என்று விரும்புகிறேன். ஆனால் அது வேறு ஒரு காரணத்திற்காக மறைய வேண்டும் என்று விரும்புகிறேன். அவர் மதங்கள் மறைய வேண்டும் என்று விரும்புகிறார். ஏனெனில் மனிதனின பரிணாம வளர்ச்சிக்கு மதங்கள் தீங்கு செய்பவையாக இருப்பதாக அவர் நினைக்கிறார். ஆனால் மதங்கள் மறைந்து போய், அந்த மதங்களால் ஆட்கொள்ளப்பட்டிருந்த அந்த ஒட்டுமொத்த இடத்திலும் மதத்தன்மையின் முன்னேற்றத்திற்கு மதங்கள் தீங்காக இருந்துவிட்டன. மேலும் என்னைப் பொறுத்தமட்டில் மதத் தன்மை என்பது தான் பரிணாம வளர்ச்சியின் மிக உயர்ந்த மலர்ச்சி ஆகும்.

துன்பத்தைக்கூட நன்றிப் பெருக்குடன் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று போதிதருமர் கூறும்போது, சரியாகத் தான் கூறுகிறார், ஏனெனில் அதுதான் நீங்கள் புத்தர் ஆவதற்கான விதையாகும். துன்பம் என்பது இங்கு இல்லை என்றால், நீங்கள் ஒருபோதும் சத்தியத்தை அடைய மாட்டீர்கள். துன்பம் தான், அதைக் கடந்து செல்வதற்கு உங்களை தூண்டிக் கொண்டே இருக்கிறது. துன்பமும் வேதனையும் தான் அந்த துன்பம் மற்றும் வேதனையைக் கடந்து அதற்கு அப்பால் செல்வதற்கான பாதையைத் தேடிக் கண்டுபிடிக்கும்படி உங்களை இறுதியாக கட்டாயப்படுத்துகிறது. பேரானந்தத்தையும் முடிவில்லா

மகிழ்ச்சியையும் அடைகின்ற ஒரு வழியைக் கண்டு கொள் வதற்கு உங்களை கட்டாயப்படுத்துகிறது.

துன்பத்திற்கு எதிராக இருக்காதீர்கள்; பதிலாக துன்பத்திற்கு நன்றி உணர்வு கொள்ளுங்கள் என்று போதிதருமர் கூறுகிறார். இது ஒரு மாபெரும் கருத்து. வேதனை, துன்பம், வயதான காலம், மரணம் ஆகியவை குறித்து நன்றி உணர்வு கொள்ளுங்கள், ஏனெனில் இவை அனைத்தும் மட்டுமே நீங்கள் உண்மையைத் தேடிச் செல்வதற்கான ஒரு சூழ்நிலையை உங்களுக்கு உருவாக்குகிறது. இல்லையெனில் நீங்கள் ஆழ்ந்த உறக்கத்தில் மூழ்கி விடுவீர்கள்; இல்லையெனில் நீங்கள் மிகவும் சௌகரிய மானவராக, ஒரு காய்கறி போன்று ஆகிவிடுவீர்கள். அதற்கான அவசியம் இருக்காது. துன்பம் தான் தேடுதலுக்கான அவசியத்தை உருவாக்குகிறது.

*உங்களது உடல் மற்றும் மனம்தான் விளைநிலம். துன்பம் தான் விதை. ஞானம் என்பது முளைவிடுதல், மற்றும் புத்தநிலை என்பது விளைகின்ற தானியம்.*

ஒரு மனிதன் இந்த வாழ்க்கையில் ஒரு ஒழுங்காக அமைக்கப்பட்ட ஒற்றுமையை காண்பதற்கு இதுதான் வழியாகும். தற்போது மதம் என்று அழைக்கப்படுபவை எல்லாம் அவற்றின் உயிருள்ள நிறுவனர்களோடு தொடர்பை இழந்துவிட்டதால், அவை உடலுக்கு எதிராக இருக்கின்றன. உடலுக்கு நன்றி உணர்வுடன் இருப்பதற்கு மாறாக அவை உடலை துன்புறுத்துகின்றன, ஏனெனில் உடல்தான் விளைநிலம், இந்த உடல் என்னும் கோயிலில் தான் புத்தர் கண்டுபிடிக்கப்பட வேண்டும், துன்பம், வேதனை, கூட போதிதருமர் போன்ற மனிதர்களால் கண்டனம் செய்யப்படவில்லை. அதுவும் கூட நாடகத்தில் நடிக்க வேண்டியதன் ஒரு பகுதியாகும். அது உங்களை விழிப்புடன் இருக்கச் செய்கிறது. துன்பம்தான் உங்களை இடைவிடாது எச்சரிக்கையுடன் இருக்கவும், உங்களைத் தூண்டி, அந்த துன்பத்திற்கு அப்பால் கடந்து செல்கின்ற ஒரு வழியை கண்டுகொள்ள உங்களுக்கு சவால் விடுகிறது.

உங்களது மனதில் மூன்று விஷங்கள் இருக்கும்போது, நீங்கள் இழிவான நிலத்தில் வாழ்கிறீர்கள். உங்களது மனதில் இந்த மூன்று விஷங்களும் இல்லாமல் போய்விடும்போது, நீங்கள் தூய்மையான நிலத்தில் வாழ்கிறீர்கள்.

ஆகவே, உண்மையில், சொர்க்கமும் நரகமும் ஒன்றுக் கொன்று தனியாக பிரிந்து இருப்பவை அல்ல; அவை ஒரே வாழ்க்கையில் நடக்கின்றன. அமைப்பு மட்டுமே மாற வேண்டியதுள்ளது. பேராசை, கோபம், மாயை என்னும் மூன்று விஷங்கள் எங்கெல்லாம் இருக்கிறதோ, அங்கு நீங்கள் உங்களுக்கு உள்ளேயே ஒரு நரகத்தை உருவாக்கி விடுகிறீர்கள். பேராசை, கோபம், மாயை என்கிற விஷங்களை நீங்கள் கைவிட்டு விடுகின்ற போது உங்களது உயிரே சொர்க்கமாக ஆகிவிடுகிறது. அந்த மூன்று விஷங்கள் தான் உண்மையிலேயே உங்களது மனதை உருவாக்குகின்றன.

மரணத்திற்கு பிறகு, நல்லவர் ஒருவர் சொர்க்கத்தை அடைவார் என்றும், மரணத்திற்கு பிறகு கெட்டவர் ஒருவர் நரகத்தை அடைவார் என்றும், நினைக்கின்ற கருத்தானது இந்த உலகில் வழக்கத்தில் இருக்கிறது. இந்த கருத்து முற்றிலும் தவறானது. நல்லவர்கள் ஏற்கனவே சொர்க்கத்தை அடைந்துவிட்டார்கள், அவர்கள் மரணம் வரையில் காத்திருக்க வேண்டிய அவசியம் இல்லை. சொர்க்கம் என்பது வேறு எங்கோ இல்லை. அது வெறுமனே உங்களிடம் ஏற்படுகின்ற உருமாற்றம். கோபம் என்பதாக இருக்கின்ற அதே சக்தியானது கருணையாக ஆகிறது. பேராசை என்னும் அதே சக்தியானது பகிர்ந்து கொள்ளுதல் என்பதாக ஆகிறது, மாயை என்பதாக இருக்கின்ற அதே சக்தியானது விழிப்புணர்வாக ஆகிறது. சக்தி என்பது அதே தான், வெறுமனே அதன் திசைகள் மாறுகின்றன.

உங்களது சக்திகளின் திசையை மாற்றுவது, உங்களது சக்திகளில் இருந்து ஒரு புதிய இசைக் குழுவிற்காக உருவாக்கப்பட்ட ஒரு நுட்பமான இசை அமைப்பை உருவாக்குவது ஆகியவை தான் மதம் என்பதன் ஒட்டுமொத்த கலையாக உள்ளது. இதைத் தவிர வேறு எதையும் மதம் என்று

போதிக்கின்றவர்கள், தானும் குருடராக இருந்து கொண்டு, ஏனைய குருடர்களையும் இருள் நிறைந்த இரவில் அழைத்துச் செல்பவர்கள் ஆகின்றனர். எங்காவது ஒரு இடத்தில் அவர்கள் அனைவரும் ஒரு கிணற்றில் விழத்தான் போகிறார்கள்.

இயற்கையினால் மனிதனுக்கு எல்லாமே கொடுக்கப் பட்டுள்ளது. அதை சரியாக வைத்துவிட்டால் மனிதன் ஒரு புத்தராக ஆகிவிடுகிறான். அந்த சக்தியை தூக்கி எறிந்துவிட்டு, அந்த சக்தியினால் ஒரு இன்னிசை ஒருங்கிணைப்பை உங்களால் உருவாக்க முடியாவிட்டால், உங்களது வாழ்க்கையானது ஒரு நரகமாக ஆகிவிடுகிறது. சொர்க்கம், நரகம் ஆகிய இரண்டும் சாத்தியப்படுகின்ற ஒரு பரந்தவெளி தான் நீங்கள். கொஞ்சம் விழிப்புணர்வு இருந்தால் போதும், நரகத்தை உங்களால் சொர்க்கமாக மாற்றிவிட முடியும். வெறுமனே சிறிய மாற்றத்தை, கொஞ்சம் வேறுபட்ட ஒரு ஏற்பாட்டினை செய்துவிட்டால் போதும். ஆனால் சக்தியானது அதே சக்திதான்; வேறு எதுவும் உங்களிடம் கூட்டப்பட வேண்டியது கிடையாது, உங்களிட மிருந்து எதுவும் விலக்கிக் கொள்ளவும் வேண்டியதில்லை.

இது சாத்தியப்படுகின்ற அகப்பார்வைகளில் மிக உயர்ந்த ஒன்றாகும். இது மனிதனை அவனது சொந்த வாழ்க்கைக்கு எஜமான் ஆக்கிவிடுகிறது. அவன் நரகத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறான் என்றால், அதற்கான பொறுப்பினை அவன் தனது சொந்த தோள்களில் சுமந்தாக வேண்டும், ''இது கடவுளின் செயல்'' என்று அவன் கூறக்கூடாது. ''இது எனது தலைவிதி, இது எனது ஊழ்வினை,'' என்று அவன் கூறக்கூடாது. ''இது எனது தன்னுணர்வு இழந்த நிலையினால் ஏற்பட்டது, இதற்கு நான்தான் காரணம்,'' என்று அவன் கூறவேண்டும்.

இப்படி பொறுப்பினை நீங்கள் உங்களது தோள்களில் எடுத்துக் கொள்கின்ற அந்த நொடிப்பொழுதிலேயே நீங்கள் மாற்றம் அடைவதற்கான சாத்தியங்கள் வந்து விடுகிறது, ஏனெனில் வேறு யாரும் உங்களை நரகத்தில் போடவில்லை. உங்களை மாற்றுவதற்கு, உங்களைக் காப்பாற்றுவதற்கு நீங்கள் யாருக்காகவும் காத்திருக்க வேண்டியதில்லை. நீங்கள் வெறுமனே

உங்களது அந்த சக்தியானது எப்படி நரகத்தை உருவாக்குகிறது, எப்படி துன்பத்தை உருவாக்குகிறது என்பதை கவனிக்க ஆரம்பித்தால் போதுமானதாகும். அதே போன்று சில தருணங்களில் நீங்கள் எப்படி அமைதியாக இருக்கிறீர்கள், சில தருணங்களில் எப்படி சந்தோஷமாக இருக்கிறீர்கள். சில தருணங்களில் மகிழ்ச்சி எப்படி உங்களை ஆட்கொள்கிறது என்பதையும் நீங்கள் கண்டு கொள்ள முடியும். அந்த சக்திகள் என்ன செய்கின்றன என்று நீங்கள் கவனியுங்கள். அவை எல்லாம் ஒரேவிதமான அதே சக்தி தான். உங்களிடம் அந்த ஒரே சக்தியைத் தவிர வேறு எந்த சக்தியும் கிடையாது. எனவே ஒருவர் தனது சக்திகள் எவ்வாறு வேலை செய்கின்றன என்பதை வெறுமனே புரிந்து கொள்ளவேண்டும்.

யாராவது ஒருவர் நரகத்தில் வாழவேணடும் என்று விரும்பினால் அது அவராகத் தேர்ந்தெடுத்துக் கொள்வது தான் ஆகும்; அது அவரது பிறப்புரிமை. யாருக்கும் அவரை தொந்தரவு செய்வதற்கான உரிமை கிடையாது. அவர் நரகத்தில் வாழ்ந்துவிட்டு போகட்டும். மேலும் அவர் மாற்றமடைய விரும்பினால், அவரிடம் தன்னை மாற்றிக் கொள்வதற்கான எல்லா சாத்தியங்களும் உள்ளன. ரட்சகர் ஒருவருக்காக, ஒரு இயேசு கிறிஸ்து அல்லது ஒரு கிருஷ்ணருக்காக காத்துக்கொண்டு இருக்கவேண்டிய அவசியம் கிடையாது. நீங்களே உங்களது சொந்த ரட்சகராக ஆகிவிட வேண்டும். இதுதான் போதிதருமரின் அடிப்படை போதனையாகும்.

*தர்மம் இல்லாத மொழி இல்லை.* இங்க போதிதருமர் மிகவும் வினோதமான ஆனால் மிகவும் சிறப்பான ஒரு திருப்பத்தைக் கொடுக்கிறார். போதிதருமர் இந்த சூத்திரங்களில் கூறப்போவதை, வேறு எந்த ஒரு ஞானியும் கூறியதாக நான் ஒருபோதும் கண்டதில்லை. *தர்மம் இல்லாத மொழி இல்லை. எதுவுமே சொல்லாமல் நாள்முழுவதும் பேசுவதுதான் பாதையாகும். நாள்முழுவதும் மௌனமாக இருந்தாலும்கூட ஏதாவது ஒன்றைச் சொல்வது பாதை ஆகாது.*

சிலசமயம், மனிதனின் உண்மை நிலைக்குள் போதி தருமரின் ஊடுருவல் மிகவும் உயர்ந்ததாகவும், மிகவும் ஆச்சரியத்துக்குரிய தாகவும் இருக்கிறது. ஒரு மனிதன் உண்மையைப்பற்றி எதுவுமே கூறமுடியாது என்று நன்றாக அறிந்து கொண்டபின்னரும் கூட நாள்முழுவதும் பேசிக்கொண்டே இருப்பது அந்த மனிதனால் சாத்தியபடும் என்று அவர் கூறுகிறார். அப்படியானால் அவர் ஏன் பேசுகிறார்? ஒருவேளை பேசுவதன்மூலம் அவர் அமைதியாக இருப்பதற்கான ஒரு சூழ்நிலையை உருவாக்கலாம். புயலுக்கு பின்னர் அமைதி என்பதுபோல அவர் பேசலாம்.

ஒரு குரு பேசிக்கொண்டு இருக்கும்போது, ஒரு நொடிப்பொழுது நிறுத்தும்போது, திடீரென்று அங்கு மிகப்பெரிய அமைதி ஏற்படுகிறது. அவர் சத்யத்தைப் பற்றி கூறுவதற்காக பேசவில்லை; ஏனெனில் சத்தியத்தை வார்த்தைகளால் கூறமுடியாது. உங்களது மனதை ஈடுபடச் செய்வதற்காகவே அவர் பேசுகிறார். மேலும் அவரது பேச்சில் நீங்கள் உங்களை ஈடுபடுத்திக் கொண்டதை அவர் கண்டுகொண்ட பின்னர் திடீரென்று அவர் வெறுமனே ஒரு சிறிய இடைவெளியைக் கொடுக்கிறார். எனவே அந்த சிறிய இடைவெளியில் தான் ஒளிவிளக்கானது அவரது கையில் இருந்து அவரது பேச்சைக் கேட்பவரின் கைக்கு மாற்றப்படுகிறது. அந்த இரண்டு வார்த்தைக்கு இடையே உள்ள அந்த நொடிப்பொழுதில், மிகவும் அற்புதமான ஏதோ ஒன்றானது குருவின் உயிர் உணர்வில் இருந்து உங்களது உயிர் உணர்வின் அமைதிக்குள் குதித்து விடுகிறது.

எனவே, ஒரு கௌதம புத்தர், காலை, மதியம், மாலை என்று நாற்பது வருடங்கள் இடைவிடாமல் பேசி இருக்கலாம். ஆனாலும்கூட அவர் சத்தியத்தைப் பற்றி எதுவும் கூறவில்லை. ஆனால் அவர் ஒளிவிளக்கை கைமாற்றி கொடுத்துவிட்டார். சிறு இடைவெளியில் அமைதியை உருவாக்குகின்ற அந்த விதத்தில் அவர் மொழியை பயன்படுத்திவிட்டார். எனவே அந்த இடைவெளிகள் தான் அவரது உண்மையான பிரசங்கங்கள்.

மௌன விரதம் இருப்பதாக சபதமேற்கொள்கின்ற மக்கள் இருப்பதாக போதிதருமர் கூறுகிறார். மேலும் அப்படி பேசாமல் இருக்கின்ற புனிதர்களை நானும் அறிவேன், ஆனால் அவர்களின் அந்த மௌனமானது மிகவும் சிரிப்புக்குரியதாக இருக்கும். ஏனெனில் அவர்கள் வேறு வழிகளை கண்டுபிடித்துக் கொள்வார்கள். எல்லா எழுத்துக்களும் கொண்ட ஒரு அட்டையை அவர்கள் எடுத்துக் கொண்டு செல்வதை நான் பார்த்திருக்கிறேன். அவர்கள் பேச மாட்டார்கள். ஆனால் அவர்களின் தலைமை சீடர் அவர்களின் அருகில் இருப்பார். அவர்கள் அந்த அட்டையில் உள்ள எழுத்துக்களில் y, e, s என்பதில் கையை வைப்பார்கள். உடனே அருகில் உள்ள அந்த சீடர் 'yes' என்று கூறுவார். இது நகைப்புக்குரியது. நீங்கள் 'ஆம்' என்ற சொல்லவிரும்பினால், இப்படி ஏன் சுற்றிக்கொண்டு செல்கிறீர்கள், தேவையில்லாமல் ஒரு சர்க்கஸ் வேலை செய்கிறீர்கள்? மேலும் இப்படி அட்டையில் உள்ள எழுத்துக்களை சுட்டிக்காட்டி ஒரு புத்தகத்தையே எழுதியவர்களும் இருக்கிறார்கள். இதைவிட தட்டச்சு செய்வதை கற்றுக் கொள்வது சுலபமானது, ஏனெனில் இது கற்காலத்தின் வழியில் தட்டச்சு செய்வதாகும். இதற்கு மிகவும் நீண்டநேரம் பிடிக்கும்.

மேலும் இப்படிப்பட்ட அட்டையைப் பயன்படுத்தாமல் தங்களது கைகளால் ஜாடை செய்து பேசுகின்ற மக்களையும் நான் பார்த்திருக்கிறேன். ஆனால் அந்த கைஜாடையை புரிந்து கொள்ளவே முடியாது. அவர்கள் கைமுஷ்டியை காட்டுவதற்கு என்ன அர்த்தம், அவர்கள் ஐந்துவிரல்களைக் காட்டுவதற்கு என்ன அர்த்தம் என்பதை அதற்காக பயிற்சி பெற்ற அவர்களது சீடர் மட்டுமே அறிந்து கொள்கிறார். இவர்கள் புனிதர்கள் அல்லர், இவர்கள் வேடிக்கை காட்டுபவர்கள். மேலும் இவர்களது மௌனம் முற்றிலும் முட்டாள்தனமானது. ஆனால் மதத்தின் பெயரால் எல்லாவிதமான முட்டாள்தனங்களும் என்றென்றும் தொடர்ந்திருக்குமாறு செய்யப்படுகின்றன.

நான் பம்பாயில் இருக்கும்போது ஒரு மனிதர் என்னைப் பார்ப்பதற்கு வந்தார். அவர் மிகவும் நன்கு அறியப்பட்ட ஒரு புனிதமானவர்; அவர் இமயமலையில் வசிப்பவர், மேலும்

என்னைப் பார்ப்பதற்காகவே அவர் வந்திருந்தார். வழக்கமாக இப்படிப்பட்ட புனிதர்கள், துறவிகளை நான் பார்ப்பதை தவிர்த்து விடுவேன். இந்த விதமான முட்டாள்களை நான் விரும்புவ தில்லை. ஆனால் வெகு தொலைவில் இமயமலையில் இருந்து என்னைப் பார்ப்பதற்காகவே அவர் பம்பாய் வந்திருக்கிறார் என்று எனக்கு தகவல் தெரிவிக்கப்பட்டதால், ''அவர் எந்த அளவுக்கு கஷ்டத்தைப் பட்டிருக்கிறார், எனவே நானும் கொஞ்சம் கஷ்டப்படவேண்டும்,'' என்று கூறினேன். எனவே நான் அவரை உள்ளே அழைத்தேன். அவர் தனது சீடர்களுடன் உள்ளே வந்தார்; அவர் தியானத்தை பற்றி அறிந்து கொள்ள விரும்பினார்.

நான் அவரிடம், ''நாளைக் காலையில் இருந்து ஏழு நாட்களுக்கு, ஒவ்வொரு நாளும் தியான வகுப்பை நடத்தப் போகிறேன். நீங்கள் சரியான நேரத்தில் தான் வந்திருக்கிறீர்கள், ஏனெனில் தியானம் என்பது விளக்கக்கூடிய ஒன்று அல்ல, அது அனுபவித்துப் பார்க்கவேண்டிய ஒன்றாகும். ஆகவே நாளைக் காலை எட்டுமணிக்கு, ஏழு நாட்கள் என்னோடு நீங்கள் தியானம் செய்யுங்கள். அதன்பின்னர், உங்களிடம் ஏதாவது கேள்விகள் இருந்தால், நான் உங்களை தனித்தனியாக சந்திக்கிறேன், அப்போது நீங்கள் உங்களது எல்லாக் கேள்விகளையும் கேட்கலாம்,'' என்று கூறினேன்.

அதற்கு அவர், ''நாளைக்கு வருவதற்கு எனக்கு கொஞ்சம் கடினம்'' என்றார். உடனே நான் அவரிடம், ''என்ன பிரச்சினை?'' என்னைப் பார்ப்பதற்கு தானே நீங்கள் வந்திருக்கிறீர்கள்,'' என்று கூறினேன்.

அதற்கு அவர், ''எனக்கு எந்தப் பிரச்சனையும் கிடையாது, பிரச்சினை என்னவென்றால், எனது சீடர் யாரையோ அதாவது அருகில் கல்யாண் பகுதியில் வசிக்கின்ற அவரது உறவினரைப் பார்க்கப் போக வேண்டும்,'' என்று கூறினார்.

உடனே நான் அவரிடம், ''நீங்கள் சொல்வது எனக்கு புரியவில்லை. உங்களது சீடர் போகட்டும், நீங்கள் தியானம் செய்ய வாருங்கள்,'' என்று கூறினேன்.

அதற்கு அவர், ''எனது பிரச்சினையை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். நான் பணத்தை தொடமாட்டேன். டாக்ஸி ஓட்டுபவருக்கு கொடுக்க வேண்டிய பணத்தை அவர்தான் வைத்திருக்கிறார். எனவே எப்போதுமே நான் அவரை என்னுடன் வைத்திருக்கிறேன். அப்படி இல்லாமல் என்னால் இங்கு எப்படி வரமுடியும்?'' என்று கூறினார்.

உடனே நான் அவரிடம், ''இது விநோதமாக உள்ளது. இது உங்களது பணம். அவர் அதை வெறுமனே வைத்திருக்கிறார். பணத்தை கையால் தொடாமல் இருப்பதால் நீங்கள் புகழ்பெற்றவராக இருக்கிறீர்கள். ஆனால் அதற்காக இந்த ஒன்றுமறியாத உங்களது சீடர் நரகத்தில் விழப்போகிறார். அவர் உங்களது பணத்தை தொட்டுக் கொடுக்கிறார்! அது அவரது பணம்கூட கிடையாது. அவர் செய்வது என்னவிதமான கர்மா? ஒருவர் தனது பணத்தை கையால் தொடுவதே பாவம் என்னும்போது அடுத்தவர் பணத்தைத் தொடுவது அதைவிட மோசமானது. எனவே இந்த அப்பாவி மனிதரைப் பற்றியும் சிந்தித்து பாருங்கள். இது உங்களது பணம் அதை நீங்கள் தொடலாம் அல்லது தொடாமல் இருக்கலாம் அல்லது கைகளில் ரப்பர் கையுறை மாட்டிக்கொண்டு தொடலாம். உங்களது பணத்தை தொடுவதை எளிமையாக்கி கொள்ளுங்கள், அப்போது நீங்கள் பணத்தை தொடமாட்டீர்கள்,'' என்றேன்.

ஆனால் இப்படி நடந்து கொள்வது ஒருவரை புனிதர் ஆக்கிவிடாது. ஒருவர் கையில் ரப்பர் உறை அணிந்து கொண்டு, எல்லாப் பணத்தையும் தன்னிடம் வைத்துக் கொள்பவரை, நீங்கள் ஒரு புனிதர் என்று அழைக்க மாட்டீர்கள். இது அவர் வஞ்சகம் நிறைந்த மனிதர் என்பதைக் காட்டுகிறது. எனவே அந்தப் பணத்தைக் கொடுப்பதற்கு வேறு ஒருவரை வைத்துக் கொள்வதும் கூட அதிலிருந்து வேறுபட்டது அல்ல.

ஆகவே, வெளியில் மௌனமாக இருந்து கொண்டு, ஆனால் உள்ளுக்குள் கொதித்துக் கொண்டு இருக்கின்ற மக்கள் இங்கு இருக்கிறார்கள். அப்படி மௌனமாக இருப்பவர்கள் பேசுவதற்கு விரும்புகிறார்கள். எனவே அவர்கள் கைகளால்

ஜாடை செய்து பேசுகின்ற வழியை கண்டு பிடிக்கிறார்கள். அது மிகவும் கடினமான விஷயம். ஏனெனில் அவர்களின் கைஜாடைகளின் அர்த்தத்தை புரிந்துகொண்டு அதை மற்றவர்களுக்கு எடுத்துக் கூறுகின்ற அவரது சீடர்களையே அவர்கள் முழுமையாக சார்ந்து இருக்கின்றனர். இவர்கள் கிட்டத்தட்ட அந்த சீடரின் அடிமைகள் போன்று உள்ளனர், மேலும் இதை அவர் எப்படி புரிந்துகொண்டு மற்றவர்களுக்கு எடுத்து கூறுகிறார் என்பதும்கூட அந்த மனிதரைப் பொலுத்துதான் இருக்கிறது. ''நீ சொல்வது சரியல்ல,'' என்றும்கூட அவர்கள் கூற முடியாது. அவர்களை தடுக்கவும் முடியாது. அந்த சீடர் என்ன கூறுகிறாரோ அதை அவர்கள் ஏற்றுக்கொண்டாக வேண்டும்.

அடி இரானி என்கிற ஒருமனிதர், கிட்டத்தட்ட மெகர்பாபாவின் வாழ்நாள் முழுவதும் அவரது செயலாளராக இருந்தார். எனவே நான் அகமது நகர் போகும் போதெல்லாம், அடி இரானி அங்கு இருந்தால், அவர் என்னை வந்து பார்ப்பது வழக்கம். அவர்தான் மெகர் பாபாவின் புத்தகங்களை எல்லாம் எழுதியவர். மெகர் பாபா வெறுமனே கைஜாடைகளை, குறியீடுகளை மட்டுமே காட்டுவார். முதலில் அவர் அட்டைகளைப் பயன்படுத்துவது வழக்கம், அதன்பின்னர் அதை அவர் கைவிட்டுவிட்டார், ஏனெனில் மக்கள் அவரை விமர்சனம் செய்ய ஆரம்பித்துவிட்டனர். ''இவர் இப்படி செய்வது ஒரு தட்டச்சு செய்வது போன்ற விஷயமாகும். இது கொஞ்சம் மெதுவாக செய்கின்ற செய்முறை. இந்த ராக்கெட் உலகில் இது ஒரு மாட்டுவண்டி செயல்முறை. இது என்ன முட்டாள்தனம்?'' என்று விமர்சனம் செய்தார்கள்.

ஆகவே மெகர்பாபா, எழுத்துக்கள் உள்ள அட்டையை பயன்படுத்துவதை விட்டுவிட்டு, அடி இரானிக்கு அவர் பயிற்சி அளித்தார். அவர் தனது கைகளினால் ஜாடை செய்வது வழக்கம்; அவர் என்ன செய்கிறார் என்று யாருக்கும் தெரியாது. அடி இரானிக்கு மட்டுமே தெரியும். எனவே அவர் தான் புத்தகங்களை எழுதினார். நான் அடி இரானியிடம், ''நீங்கள் எழுதுவது எல்லாம் உண்மையில் மெகர்பாபா கூறுவதற்கு விரும்பியவை தான் என்று உங்களுக்கு நிச்சயமாகத் தெரியுமா?'' என்று கேட்டேன்.

அதற்கு அவர் என்னிடம், ''நான் பொய் பேசக்கூடாது, குறைந்தபட்சம் உங்களிடம் மட்டுமாவது நான் பொய் பேசக்கூடாது. எனக்கு அது தெரியாது. நான் எழுதுவது சரிதான் என்று நான் நினைக்கிறேன். ஏனெனில் அவர் ஒருபோதும் நான் எழுதியதை மறுத்தது கிடையாது,'' என்று கூறினார்.

இப்போது, இது சிரிப்பிற்குரியதாக தெரிகிறது. மெகர்பாபா கூறுவதை இவர் சரியாக அர்த்தம் புரிந்துகொண்டு எழுதுகிறாரா அல்லது வெறுமனே இவர் சமாளித்து கொண்டு இருக்கிறாரா என்பது அவருக்கே தெரியவில்லை. மேலும் மெகர்பாபா ஒருபோதும் மறுப்பேதும் கூறவில்லை என்பது தான் அடி இரானி தான் எழுதுவது சரிதான் என்ற நினைத்துக் கொள்வதற்கான ஒரே காரணமாக இருக்கிறது.

நான் அவரிடம், ''அவர் காட்டுவதை நீங்கள் மிகச்சரியாக உண்மையிலேயே புரிந்து கொள்கிறீர்களா?'' என்று கேட்டேன். ஏனெனில் கைஜாடைகளின்மூலம் எளிய விஷயங்களை விளக்கி கூறமுடியும். நீங்கள் பசியோடு இருக்கிறீர்கள் என்றால் நீங்கள் உங்களது வயிற்றில் கைவைத்து காட்டலாம்; நீங்கள் தாகமாக இருக்கிறீர்கள் என்றால் நீங்கள் தண்ணீர் குடிக்கவேண்டும் என்பதை உங்களது கைகளின் மூலம் காட்டலாம். ஆனால் மிகப்பெரிய தத்துவார்த்தமான கருத்துகளை எப்படி சொல்வது? நீங்கள் அதற்கு கை அடையாளங்களை உண்டாக்க முடியும் என்று நான் நினைக்கவில்லை, மேலும் அதற்கு எத்தனை குறியீடுகள் தேவைப்படும்? உங்களுக்கு இருப்பதோ பத்து விரல்கள் மட்டுமேயாகும். ஆனால் அடி இரானி கிட்டத்தட்ட ஐம்பது புத்தகங்களை எழுதி இருக்கிறார். மேலும் அந்த புத்தகங்கள் சிறியவை அல்ல. அவை ஐநூறு பக்கங்கள், ஆயிரம் பக்கங்கள் உள்ள புத்தகங்கள்.

நான் அடி இரானியிடம், ''இது எல்லாம் உங்களது கற்பனை மட்டுமேயாகும். நீங்கள் ஒரு நல்ல எழுத்தாளர். எனவே அந்த புத்தகங்கள் நீங்கள் எழுதியவைதான். அவை மெகர் பாபா வினுடையது அல்ல. ஆனால் மெகர்பாபா அமைதியாக இருக்கிறார். ஏனெனில் நீங்களும் நன்றாக எழுதுகிறீர்கள். மேலும்

மக்களும்கூட அவரது பெயரில் எழுதப்படுகின்றவற்றை எல்லாம் ஏற்றுக்கொண்டு இருக்கிறார்கள்,'' என்று கூறினேன். மெகர்பாபாவை உலகம் முழுவதும் பலர் பின்பற்றி வந்தனர். ஆனால் அவரால் அடி இரானி இல்லாமல் எங்குமே நகரமுடியாது. அவர் அடிஇரானியை முற்றிலும் சார்ந்து இருந்தார். மெகர்பாபா தனியாக சென்று கைஜாடை காட்டினால் அவரை பைத்தியம் என்று நினைத்துக் கொள்வார்கள். அவர் என்ன சொல்ல வருகிறார் என்று யாராலும் புரிந்து கொள்ள முடியாது.

ஆனால், நீங்கள் பேசவேண்டும் என்று விரும்பினால், உங்களது உதடுகள் மற்றும் நாவினால் பேசுவதில் என்ன தவறு இருக்கிறது? உங்களது விரல்களால் பேசுவது எந்த விதத்தில் சரியானது? உங்களது உதடுகளும் நாக்கும் உங்களது உடலின் ஒரு அங்கம் போன்று, உங்களது கை விரல்களும் உங்களது உடலின் ஒரு அங்கமாகத்தானே இருக்கிறது. மேலும் கைவிரல்கள் பேசுவதற்கு உரியவை அல்ல. அப்படி இருக்கும்போது இயற்கை கொடுத்துள்ள சரியான கருவியை ஏன் பயன்படுத்தக்கூடாது? குறியீடுகள் ஆபத்தானவை.

முதல் முறையாக ஜப்பான் சந்நியாசிகள் இங்குவர ஆரம்பித்தபோது நான் மிகவும் சங்கடத்தில் மாட்டிக் கொண்டேன். ஏனெனில் இந்த ஒட்டுமொத்த உலகிலும் அவர்கள் மட்டும்தான் ஒரு வித்தியாசமான குறியீட்டை வைத்திருக்கிறார்கள். இதை அவர்கள் எப்படி கண்டுபிடித்தார்கள் என்பது விநோதமாக இருக்கிறது. இந்த உலகம் முழுவதும், ஒவ்வொரு நாட்டிலும், ஒவ்வொரு இனத்திலும், கற்கால மனிதர்களில் இருந்து தற்கால நாகரிக மனிதர்கள் வரையும் நீங்கள் 'ஆம்' 'என்று கூற விரும்பினால், நீங்கள் உங்களது தலையை மேலும் கீழும் ஆட்டுகிறீர்கள். ஆனால் இந்தக் குறியீட்டை ஜப்பானியர்கள் செய்தால் அதற்கு 'இல்லை' என்று அர்த்தம். நான் எதையாவது கேட்கும்போது அந்த அப்பாவி ஜப்பானியர் 'ஆம்' என்று கூறுவார். ஆனால் அதை நான் 'இல்லை' என்று புரிந்து கொள்வேன். ஏனெனில் அவரது 'ஆம்' என்பது தலையை பக்கவாட்டில் வலது, இடதாக திருப்பவதாகும். அதுதான் அவர் 'ஆம்' என்று கூறுவதாகும். ஆரம்பத்தில் நான் ஒரு

ஜப்பானியரிடம், "நீ ஒரு சந்நியாசியாக ஆவதற்கு விரும்பு கிறாயா? என்று கேட்பது வழக்கம். அவர் அதற்கு ஆம் என்பதற்கான அர்த்தத்தில் தலையை ஆட்டுவார். ஆனால அவர் அதை விரும்பவில்லை என்று நான் புரிந்துகொண்டு அவரிடம், "நீ விரும்பவில்லை என்றால், இங்கு நீ ஏன் வந்தாய்?" என்று கேட்பதுண்டு.

இப்படி, ஜப்பானியர்கள் ஒரு விநோதமான வழியை வைத்திருக்கிறார்கள். யாராவது இதை ஆராய்ந்து பார்க்க வேண்டும். ஏனெனில் ஜப்பானியர்கள் மட்டுமே இப்படி செய்கிறார்கள். எனவே அதன்பின்னர் ஜப்பானிய மொழி பெயர்ப்பாளர் ஒருவரை நான் வைத்துக் கொள்ள வேண்டிய தாயிற்று. ஏனெனில் அவர்கள் கூறுவதை தொடர்ச்சியாக தவறாக புரிந்து கொள்ளும்படி ஆயிற்று. அவர்கள் 'ஆம்' என்று தலையை அசைக்கும்போது நான் 'இல்லை' என்று புரிந்து கொள்வேன். மேலும் அவர்கள் 'இல்லை' என்று கூறும்போது, நான் 'ஆம்' என்று புரிந்து கொள்வேன்.

*நான் முழுவதும் மௌனமாக இருந்தாலும் கூட ஏதாவது ஒன்றைக் கூறுவது பாதை ஆகாது.* நீங்கள் மௌனமாக இருக்கிறீர்கள் என்றால் உங்களால் பேசமுடியாது என்று அர்த்தமாகாது. நீங்கள் மௌனமாக இருந்து கொண்டும்கூட உங்களால் பேசமுடியும். நீங்கள் மௌனமாக இருந்தாலும் கூட உங்களால் நடந்து செல்லமுடியும் என்பதைப் போல உங்களால் பேசவும் முடியும். நீங்கள் மௌனமாக இருக்கலாம். ஆனாலும் கூட உங்களால் சாப்பிட முடியும். எனவே மௌனம் என்பது உங்களுக்குள் உள்ள ஒரு அமைதி, ஒரு சாந்தம், ஒரு சலனமற்றநிலை.

உண்மையில், உள்ளுக்குள் மௌனமாக இருக்கின்ற ஒரு மனிதரால் மற்ற யாரையும் விடவும் நன்றாக பேசமுடியும், ஏனெனில் அவரது மனம் அவருக்கு ஒருபோதும் ஒரு தொந்தரவாக இருக்காது. அவரால் நேரடியாகவும், அதிக முக்கியத்துவம் கொடுத்தும் பேசமுடியும். அவரால் உங்களது இதயத்தை சென்றடையமுடியும். ஏனெனில் அவரது வார்த்தைகள்

ஒரு ஆழத்தில் இருந்து வருகின்றன. மேலும் மிக ஆழத்தில் இருந்து வருகின்ற ஒன்று. நீங்கள் திறந்த மனதுடன் இருந்தால் உங்களுக்குள்ளும் அதே ஆழத்திற்குள் சென்றடைகின்ற திறமை படைத்தது. ஆனால் மௌனம் என்பது பேச்சிற்கு எதிரான ஒன்று அல்ல. மௌனம் என்பது பேச்சு அல்லது மொழியை விடவும். மிக உயர்ந்த அனுபவமாகும். மேலும் நீங்கள் பேசும்போதும் கூட மௌனமாக இருந்தால், அதன்பின்னர் உங்களது வார்த்தைகள் ஒரு அழகையும், அவற்றில் ஒரு அபரிமிதமான அதிகாரத்தையும் கொண்டிருக்கும். ஏனெனில் அவை ஒரு தூய அதிகாரத் தையும் கொண்டிருக்கும். ஏனெனில் அவை ஒரு தூய இதயத்தில் இருந்து. ஒரு அமைதி பூமியில் இருந்து, கௌதம புத்தரின் தாமரைச் சொர்க்கத்தில் இருந்து வருகிறது.

ஆகையினால் ஒரு ததாகதரின் பேச்சு, மௌனத்தை சார்ந்து இருப்பதில்லை. அல்லது அவரது மௌனமும், பேச்சை சார்ந்து இருப்பதில்லை. ததாகதர் என்பது கௌதம புத்தரின் மறுபெயர். அல்லது விஷயங்களின் இயல்பான தன்மை குறித்து விழிப்பநிலை அடைந்தவர்கள் யாராக இருந்தாலும் அவர் ததாகதர் என்று அழைக்கப்படுவார்.

ஆகையினால் ஒரு ததாகதரின் பேச்சு, மௌனத்தை சார்ந்து இல்லை, அல்லது அவரது மௌனமும், பேச்சை சார்ந்து இருப்பதில்லை. அல்லது அவரது பேச்சு, மௌனத்தில் இருந்து தனியாகவும் இருப்பதில்லை. பேச்சையும், மௌனத்தையும் புரிந்து கொள்பவர்கள், சமாதிநிலையில் இருக்கின்றனர். நான் இதைத் திரும்பவும் கூறுகிறேன். பேச்சையும், மௌனத்தையும் புரிந்து கொள்பவர்கள் சமாதிநிலையில் இருக்கின்றனர். ஏனெனில் சமாதிநிலை என்பது பேச்சு மற்றும் மௌனம் இவற்றிற்கு இடையேயான சமநிலையாகும். சமாதிநிலையானது பேச்சும், மௌனமும் சந்திக்கின்ற, மௌனமும் சப்தமும் சந்திக்கின்ற மிகச் சரியான நடுப்பகுதியாகும். மிகச்சரியான அந்த நடுநிலையானது பேச்சிற்கும், மௌனத்திற்கும் அப்பாற்பட்டதாக இருக்கிறது. அது சப்தங்கள் இல்லாத வெறும் அமைதியாகவும் இல்லை. அல்லது அது வெறும் பேச்சாகவும், பயனற்ற பேச்சாகவும், கூச்சலாகவும் இல்லை. அது இரண்டிற்கும்

அப்பாற்பட்டது. அது பாடலுடன் கூடிய ஒரு அமைதியாக இருக்கிறது. ஆனால் அந்தப் பாடல் சப்தங்கள் இல்லாதது. அது இசையோடு கூடிய ஒரு அமைதி, ஆனால் எந்த ஒரு இசைக்கருவியினாலும் இசைக்கப்படாத, உங்களது இயல்பில் இருக்கின்ற ஒரு இசையாக இருக்கிறது.

இந்த பூமியில் உள்ள ஞானிகள் அதை ஓம்காரம் என்று அழைத்தனர். ஓம் என்னும் ஒலி என்றனர். அது நீங்கள் ஓம், ஓம் என்று கூறிக்கொண்டு அதை வெறுமனே கேட்டுக் கொண்டு இருப்பதாகாது. ஓம் என்பதற்கு சமமான ஒலியானது உங்களைச் சூழ்ந்து கொண்டு இருப்பதற்கு நடுவில் நீங்கள் அமைதியாக இருப்பீர்கள். அதனால் தான் ஓம் என்பது சமஸ்கிருதத்தில் ஒரு எழுத்தாக ஆக்கப்படவில்லை. அது ஒரு வார்த்தை அல்ல. அது ஒரு குறியீடு. ஒருவேளை இந்த உலகிலேயே, எழுத்தின் ஒரு அங்கமாக இல்லாமல், ஒரு குறியீட்டை அங்கமாக கொண்ட ஒரே வார்த்தை ஓம் என்பதுதான். எனவே ஒவ்வொரு உபநிடதமும் ஓம் என்று ஆரம்பித்து ஓம் என்பதில் முடிவுபெறும். மேலும் வெறுமனே அந்த ஓம் என்ற வார்த்தை மட்டுமல்ல, அதோடு கூட அமைதி என்பதற்கான சமஸ்கிருத வார்த்தையாகிய சாந்தி என்பது மூன்றுமுறை அந்த ஓம் என்பதற்கு பிறகு கூறப்படும். ஓம் சாந்தி, சாந்தி, சாந்தி என்று கூறப்படும்.

அது சப்தமுள்ள ஒரு மௌனம். அதை எந்த ஒரு கருவியினாலும் உண்டாக்க முடியாது. மேலும் அதை மிகவும் சரியாகப் பேசவும் முடியாது. எனவே நாங்கள் அதற்காக ஒரு குறியீட்டை உண்டாக்கி இருக்கிறோம். அது மொழிக்கு, எழுத்துக்கு, பேச்சுக்கு, மௌனத்திற்கு அப்பாற்பட்டது.

இந்த பிரபஞ்சமானது ஓம் என்னும் பொருளால் உண்டாக்கப்பட்டுள்ளது என்று அழைக்கப்படுகிறது. அது இந்த பிரபஞ்சத்தின் இசையாகும்.

*நீங்கள் அறிந்து கொண்டபோது பேசினால், உங்களது பேச்சு சுதந்திரமானதாக இருக்கிறது. நீங்கள் அறிந்து கொள்ளாதபோது, நீங்கள் மௌனமாக இருந்தாலும் கூட, உங்களது மௌனம்*

கட்டப்பட்டு உள்ளது. மேலும் அந்த மௌனம் உயிரற்றதாக, வெறுமையானதாக, அர்த்தமற்றதாக உள்ளது.

மொழியானது அத்தியாவசியமாக சுதந்திரமானதாக உள்ளது. பற்றுதலுக்கும் அதற்கும் சம்பந்தம் இல்லை. மேலும் பற்றுதலுக்கும் மொழிக்கும் சம்பந்தமில்லை.

இவை எல்லாம் உங்களது மனம் அல்லது மனம் அற்ற நிலையைச் சார்ந்தே இருக்கிறது. மனமானது மொழியை பயன்படுத்தினால், அது பொய்யான உண்மைநிலையை, மாயையை உருவாக்குகிறது. ஆனால் மனம் அற்ற நிலையானது மொழியை பயன்படுத்தினால், மற்றவர்களும் அதே இடத்திற்குள் நுழைவதற்கு அவர்களுக்கு உதவுகிற ஒரு உபாயத்தை உருவாக்குகிறது. நீங்கள் எதை உண்டாக்குகிறீர்கள் என்பது உங்களைச் சார்ந்தே உள்ளது. நீங்கள் ஒரு மனம் என்பதாக செயல்புரிகிறீர்களா அல்லது நீங்கள் மனம் அற்ற நிலை என்பதில் இருந்து செயல்புரிகிறீர்களா என்பதைப் பொறுத்து உள்ளது. நீங்கள் மனதின் மூலமாக பேசும்போது நீங்கள் விஷயத்தை தவறவிட்டு விடுகிறீர்கள். மனதின் எந்த குறுக்கீடும் இல்லாமல் இந்த பிரபஞ்சமானது உங்கள் மூலமாக பேசுவதற்கு நீங்கள் அனுமதித்தால், மொழி என்பது சத்தியத்தின் தூய்மையான வெளிப்படுத்துதல் ஆகும்.

சுருக்கமாக, ஒரே வாக்கியத்தில் இந்த ஒட்டுமொத்த விஷயத்தையும் சுருக்கிக் கூறுவது இதுதான்:

மனம் உங்களது சிறையாக இருக்கிறது. மனம் அற்ற நிலை உங்களது விடுதலையாக இருக்கிறது.

மனம் உங்களது அறியாத நிலை, மனம் அற்றநிலை தான் உங்களது மெய்ஞ்ஞான நிலை.

எனவே மனம் என்பதில் இருந்து மனம் அற்றநிலைக்கு நகர்ந்து செல்லுங்கள். இதுதான் ஒட்டுமொத்த வழியாகும். இதுதான் ஒட்டுமொத்த மதமாகும்.

○

‘‘மனம் என்பது இல்லாமல் புத்தர் என்பவர் இல்லை’’ என்பதற்கு ஒரு புத்தர் மனம் என்பதில் இருந்துதான் வருகிறார் என்று அர்த்தமாகும். ஒரு புத்தரைக் காண விரும்புபவர்கள் யாராக இருந்தாலும் அவர் புத்தரைப் பார்ப்பதற்கு முன்பு மனதைப் பார்க்கிறார். புத்தரை நீங்கள் பார்த்துவிடும்போது, நீங்கள் மனம் என்பதைப்பற்றி மறந்து விடுகிறீர்கள். அப்படி நீங்கள் மனம் என்பதைப் பற்றி மறக்கவில்லை என்றால், அந்த மனமானது உங்களை குழப்பத்தில் ஆழ்த்திவிடும்.

மரணமும், புத்தநிலையும், தண்ணீரும், பனிக்கட்டியும் போன்றவை. மூன்று விஷங்களால் வேதனை அடைவது மரணமாகும். மூன்று வெளியீடுகளால் சுத்தப்படுத்தப்படுவது புத்தநிலை ஆகும். மழைக்காலத்தில் பனிக்கட்டியாக உறைந்து போகின்ற ஒன்று கோடையில் தண்ணீராக உருகிவிடுகிறது. பனிக்கட்டியை விலக்கிவிட்டால், அங்கு தண்ணீர் என்பது இருக்காது. மரணத்தை விட்டு ஒழித்துவிட்டால், அங்கு ஒருபோதும் புத்தநிலை கிடையாது. எனவே தெளிவாக, பனிக்கட்டியின் இயல்புதான் தண்ணீரின் இயல்பாக இருக்கிறது.

மரணிப்பவர்கள் புத்தர்களை விடுதலை அடையச் செய்கின்றனர். புத்தர்கள் மரணிப்பவர்களை விடுதலை அடையச் செய்கின்றனர். பாகுபாடு இல்லாமை என்பதற்கு இதுதான் அர்த்தமாகும். மரணிப்பவர்கள் புத்தர்களை விடுதலை அடையச் செய்கிறார்கள். ஏனெனில் மனவேதனை விழிப் புணர்வை உருவாக்குகிறது. புத்தர்கள் மரணிப்பவர்களை விடுதலை அடையச் செய்கின்றனர். ஏனெனில் விழிப் புணர்வானது மனவேதனையை இல்லாததாக்கி விடுகிறது. மனவேதனை

இல்லாமல் அங்கு உதவி கிடைக்காது. மேலும் விழிப்புணர்வு இல்லாமல் அங்கு உதவி கிடைக்காது. மனவேதனை என்பது இல்லாமல் இருந்தால், இங்கு விழிப்புணர்வு என்பதை உருவாக்குவதற்கு எதுவும் இருக்காது. விழிப்புணர்வு என்பது இல்லாமல் இருந்தால் இங்கு மனவேதனையை இல்லாத தாக்குவதற்கு எதுவும் இருக்காது. நீங்கள் மாயையில் இருக்கும்போது புத்தர்கள் மரணிப்பவர்களை விடுதலை பெறச் செய்கிறார்கள். நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்கும்போது, மரணிப்பவர்கள் புத்தர்களை விடுதலை செய்கின்றனர். புத்தர்கள் தங்களது சொந்த முயற்சியில் புத்தராக ஆவது கிடையாது. அவர்கள் மரணிப்பவர்களால் விடுதலை பெறுகிறார்கள். புத்தர்கள் மாயையை தங்களது தந்தையாகவும், பேராசையை தங்களது தாயாகவும் கருதுகின்றனர். மாயை மற்றும் பேராசை என்பது மரணம் என்பதற்கான வெவ்வேறு பெயர்களாக உள்ளன.

நீங்கள் மாயையில் இருக்கும்போது இக்கரையில் இருக்கிறீர்கள். நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்கும்போது அக்கரையில் இருக்கிறீர்கள். ஆனால் உங்களது மனம் வெறுமையாக இருக்கிறது என்று நீங்கள் அறிந்து கொண்டு, தோற்றங்கள் இல்லாமையை நீங்கள் கண்டுகொண்டால், நீங்கள் மாயை மற்றும் விழிப்புணர்விற்கு அப்பால் சென்று விடுகிறீர்கள். மாயை மற்றும் விழிப்புணர்விற்கு அப்பால் நீங்கள் இருந்துவிடும்போது, அடுத்த கரை என்பது இருக்காது. ததாகதர் என்பவர் இந்தக் கரையிலும் இருப்பதில்லை அல்லது அடுத்த கரையிலும் இருப்பதில்லை. அவர் நீர் ஓடையின் நடுவிலும் இருப்பதில்லை. அர்கதர்கள் நடு ஓடையில் இருக்கின்றனர். மரணிப்பவர்கள் இந்தக் கரையில் இருக்கின்றனர். அடுத்த கரையில் புத்தநிலை உள்ளது.

போதிதருமர் இணையற்ற அகப்பார்வையைப் பெற்றிருக் கிறார். கௌதம புத்தரிடம் மெய்ஞ்ஞானம் அடைந்த அநேக சீடர்கள் இருந்துள்ளனர். ஆனால் யாரும் இந்த அளவுக்கு மிக உயர்ந்த அகப்பார்வையை பெற்றதில்லை. ஒன்று அவர்கள் அமைதியாக இருந்திருக்கிறார்கள் அல்லது அவர்கள் பேசி இருக்கிறார்கள். ஆனால் அவர்களின் அமைதியோ அல்லது

அவர்களின் பேச்சோ பேருணர்வின் ஆழத்தையும் உச்சத்தையும் அடையவில்லை.

ஒருவேளை, போதிதருமர் தான் என்ன கூறுகிறோம் என்பதைப் பற்றி கவலைப்படாதவராக இருந்தது காரணமாக இருக்கலாம். அவர் பயம் என்பதை அறியாதவர். அவரது பேச்சைப்பற்றி மக்கள் என்ன நினைப்பார்கள் என்று அவர் கவலை கொண்டதில்லை. அவர் பேசும்போது யாரையும் கணக்கில் எடுத்துக் கொள்வதில்லை. அவர் பேசுவது கிட்டத்தட்ட அவருக்காகவே அவர் பேசிக் கொள்வது போன்றது.

ஒன்பது ஆண்டுகளாக அவர் ஒரு சுவரின் முன்பு உட்கார்ந்து கொண்டு இருந்தார். எனவே மக்கள் வந்தால், அவர்கள் அவருக்கு பின்னால் தான் உட்கார வேண்டும். அவர்கள் கேள்வி கேட்கலாம். ஆனால் போதிதருமர் சுவருக்கு மட்டுமே பதில் சொல்வார். யார் அந்த கேள்வியைக் கேட்கிறார்கள் என்பது பற்றி அவர் கவலைப்பட்டதே கிடையாது; அவர் தனது சொந்த அகப்பார்வை பற்றியே அதிகம் கவலைப்பட்டார்.

நேற்று இரவு நான் ஜே.கிருஷ்ணமூர்த்தியின் கடைசி புத்தகத்தை பெற்றேன். அதில் அவர் யாரைப் பார்த்தும் பேசவில்லை. அதாவது அவர் அவருக்காகவே பேசிக் கொள்கிறார். வார்த்தைகள் பதிவு செய்யப்பட்டுள்ளன. ஆனால் பார்வையாளர்கள் கிடையாது. மேலும் அவரது ஏனைய புத்தகங்களை விடவும் இந்த புத்தகத்தில் ஒருவேளை, சத்தியத்திற்கு மிகவும் நெருக்கமாக அவர் வந்திருக்கிறார் போன்று தெரிகிறது. பார்வையாளர்கள் என்பது நமது பேச்சை வரையறை செய்து விடுகிறது.

இது எனது அனுபவமாகவும் கூட இருந்திருக்கிறது. நான் எனது மக்களிடம் பேசிக் கொண்டிருந்தால் அதன்பின்னர் அதில் எல்லைகள் கிடையாது, அப்போது ஏதாவது ஒன்றைக் கூறுவதா அல்லது ஏதாவது ஒன்றைக் கூறாமல் இருந்துவிடலாமா என்று நான் உணர்வதில்லை. அப்போது எனக்கு நானே பேசிக் கொள்வது போன்றே நான் பேசிக் கொள்கிறேன். என்னைப் பற்றி அறியாத மக்களிடமும், என்னைப் புரிந்து கொள்ளாமல், தவறாக

புரிந்து கொள்கின்ற மக்களிடமும் பேசும்போது, அங்கு மிகப்பெரிய எல்லைக்கோடு இருக்கிறது. அப்போது எனக்கு பேசுவதற்கு சுதந்திரம் கிடையாது. அவர்களின் முகங்கள், அவர்களின் கண்கள், அவர்களின் உடல் அசைவுகள், ஆகியவை அவர்கள் மனம் வேதனை அடைகின்ற ஒன்றினை கூறுவதில் இருந்து என்னை தடுத்து விடுகிறது.

சில தினங்களுக்கு முன்பு டைம்ஸ் ஆஃப் இந்தியா என்னும் பத்திரிகை குழுமத்தில் இருந்து எழுபது பேர் எனது தனிப்பட்ட பிரத்யேகமான பேட்டிக்காக வந்திருந்தனர். டைம்ஸ் ஆஃப் இந்தியா குழுமத்தின் சொந்தக்காரர்களாகிய, சமீர்ஜெயின், நந்திதா ஜெயின், மேலும் அவர்களின் தாயார் இந்துஜெயின் ஆகியவர்களும் கூட வந்திருந்தனர். ஆனால் இதில் விநோதமான விஷயம் என்னவென்றால், அந்த அரங்கத்திற்குள் நுழைந்த வுடன் மிகவும் அசிங்கமான, மிகவும் மனிதாபிமானமற்ற, பண்பாடற்ற செயலை நான் உணர்ந்தேன். நான் இருகரம் கூப்பி அவர்களை வரவேற்றபோது இந்துஜெயினையும் சேர்த்து அங்கிருந்த எழுபது பேரும் அதற்கு பதில் வணக்கம் கூட கொடுக்கவில்லை. இது, இந்தியாவில் மிகவும் எளிய காரியம். தெருவில் செல்கின்ற அந்நியர்களும் கூட கைகளை கூப்பி வணங்குவார். அவர் யார் என்று நீங்கள் அறிந்திருக்க வேண்டிய அவசியம் இல்லை; ஆனால் அதற்கு நீங்கள் பதில் வணக்கம் தெரிவிக்கிறீர்கள். ஏனெனில் கைகளை கூப்பி வணங்குவதில் ஒரு ஆன்மிக அர்த்தம் இருக்கிறது.

கைகுலுக்குவதில் எந்த ஒரு ஆன்மிக அர்த்தமும் கிடையாது; கைகுலுக்குவதில் ஒரு சாதாரண அர்த்தம் மட்டுமே உள்ளது. நீங்கள் உங்களது வலது கையைக் கொண்டு தான் கைகுலுக்க வேண்டும். உங்களது வலது கையில் நீங்கள் எந்த ஒரு ஆயுதத்தையும் வைத்திருக்கவில்லை என்று காட்டுவதற்காக மேற்கத்திய நாடுகளில் இப்படி கைகுலுக்கும் தந்திரம் உருவாக்கப்பட்டது. அது ஒரு வரவேற்பு அல்ல, அது ஒரு தேடுதல். கைகுலுக்குகின்ற அந்த மனிதர் நமது எதிரி அல்ல, அவரால் நமக்கு எந்தத் தீங்கும் செய்ய முடியாது. ஏனெனில் அவரது வலது கை காலியாக உள்ளது என்று கண்டு கொண்டு

கொஞ்சம் ஜாக்கிரதையாக இருப்பதாகும். கைகுலுக்குவதற்கான காரணம் மற்றும் அதில் உள்ள மனோதத்துவம் முற்றிலும் வேறு பட்டதாக உள்ளது; ஒருவகையில் அது மிகவும் கீழ்த்தரமானது, அரசியல் செய்வது போன்றது.

ஆனால் இரண்டு கைகளையும் கூப்பிக்கொண்டு ஒருவரை வரவேற்பதற்கு ஒரு ஆன்மிக அர்த்தம் உள்ளது. நான் உங்களது கடவுள் தன்மைக்கு தலைவணங்குகிறேன் என்பது முதல் அர்த்தம். நீங்கள் அந்நியரா அல்லது நண்பரா அல்லது விரோதியா என்பது ஒரு விஷயம் அல்ல; இன்னமும் நீங்கள் ஒரு கடவுளின் ஆலயம், ஒரு உயிருள்ள கடவுள். அப்படி கூப்பிய கைகள் உயிருள்ள கடவுளுக்கான மரியாதையைக் காட்டுகிறது. நீங்கள் ஒரு நண்பரா அல்லது விரோதியா அல்லது அந்நியரா என்கிற இந்த விஷயங்கள் ஒரு பொருட்டல்ல.

மேலும் இரண்டாவதாக, கூப்பிய கைகள், நான் அரைகுறை உள்ளத்தோடு வரவேற்கவில்லை என்பதைக் காட்டுகிறது. நான் முழுமையாக இருக்கிறேன் என்பதைக் காட்டுகிறது. இரண்டு கைகளும், எனது இடது அரைக் கோளமும், எனது வலது அரைக்கோளமும், இரண்டும் ஒன்று சேர்ந்து, உங்களை வரவேற்கிறது. நான் உங்களை உடல்உறுப்புகளின் ஒரு ஒற்றுமையில் வரவேற்கிறேன்.

ஆனால், நல்ல கல்வி அறிவுள்ள, மிகப்பெரிய செய்தித் தாள், வாரப் பத்திரிகை மற்றும் மாதம் இருமுறை வருகின்ற இதழ்கள் ஆகியவற்றிற்கு சொந்தக்காரர்கள், மற்றும் பத்திரிகையாளர்கள் ஆகிய டைம்ஸ் ஆஃப் இந்தியாவில் இருந்து வந்திருந்தவர்களைக் கண்டு நான் ஆச்சரியமடைந்தேன். அவர்கள் எனக்கு பதில் வணக்கம் அளிக்கவில்லை. அவர்கள் அனைவரும், இந்து ஜெயின் உட்பட கற்சிலைகள் போன்று அமர்ந்திருந்தனர்.

எனக்கு பதில் வணக்கம் தெரிவித்த ஒரே மனிதர் சமீர் ஜெயின் அவர்தான்; இப்போது டைம்ஸ் ஆஃப் இந்தியா பத்திரிகையின் பொறுப்பாளராக இருக்கிறார் மற்றும் அவரது தங்கை நந்திதா ஜெயினும் வணக்கம் தெரிவித்தார். ஆனால்

அவள் முழுமையாக வணக்கம் தெரிவிக்கவில்லை. அவள் தயங்கினாள், எனவே பாதி வணக்கம்தான் தெரிவித்தார். அவளால் முழுமையாக வரவேற்க முடியவில்லை. ஆனால் அவளால் ஒரு மரசிற்பம் போன்றும் உட்கார முடியவில்லை. அவள் இரண்டு பக்கமும் திரும்பிப் பார்த்தாள். அவரது தாயாராகிய இந்து ஜெயின் என்னைத் தனியாக சந்திக்கும்போது எனது காலைத் தொட்டு வணங்குவார். ஆனால் அவரும்கூட பொது இடத்தில் ஒரு மரசிற்பம் போன்று இருந்தார். எனவே அவரது மகள் தனது தாயார் பக்கமும் பார்த்தார். தனது சகோதரர் பக்கமும் பார்த்தார். இரண்டுபக்கமும் பார்த்துவிட்டு பாதி வணக்கமும், பாதி வரவேற்காமலும் இருந்தார்.

இப்படிப்பட்ட மக்களிடையே பேசுவது ஒரு சுவரிடம் பேசுவதை விடவும் மோசமானது. முதலில் நான் அவர்களுக்கு வணக்கம் தெரிவித்தேன். ஆனால் அவர்களோ பதில் வணக்கம் தெரிவிப்பதற்கான, மனிதத்தன்மை இல்லாமல் இருந்தனர். கீழை நாடுகளில் இப்படிப்பட்டவை மன்னிக்க முடியாதவை. ஆனால் அவர்கள் என்னிடம் பேட்டியை வலியுறுத்தினார்கள். நான் முதலில் தயங்கினேன். அவர்கள் முட்டாள்தனமான கேள்விகளைக் கேட்பார்கள் என்பதற்காக தயங்கினேன். ஆனால் டைம்ஸ் ஆஃப் இந்தியா பத்திரிகையின் அனைத்து ஊழியர்களும் வந்திருந்ததால், நான் சம்மதித்தேன்.

ஆனால், உண்மையில் நான் சமீர் ஜெயினுக்காவே சம்மதித்தேன் அவர் ஒரு இளைஞர். அவர் ஆஸ்ரமத்திற்கு முன்பு வந்திருக்கிறார். அவர் தியானம் செய்திருக்கிறார். அவர் எனது சந்நியாசியாக விரும்பினார் ஆனால் அவரது தந்தை முற்றிலும் அதை எதிர்த்தார். அவர் சந்நியாசியாக ஆகிவிட்டால் அவரது தந்தை அவரை தனது பிள்ளை இல்லை என்று சொல்லிடும் அளவுக்கு எதிர்த்தார். இப்போது அவர்கள் மிகப்பெரிய பணக்காரர்களில் சிலராக உள்ளனர். அவர் தனது தந்தையிடம், ''சரி, நீங்கள் என்னை உங்களது மகன் இல்லை என்று ஒதுக்கிவிடுங்கள்,'' என்று கூறுகின்ற தைரியம் இல்லாதவர். ஆனால் அவர் ஒருவர் தான் இரக்க உள்ளம் கொண்டவர் என்பதால் அவர் மட்டும் தனது கைகளை உயர்த்தி வணங்கினார்.

எனவே, இப்போது, இப்படிப்பட்ட மக்களிடம் பேசுவது மிகவும் சாத்தியமில்லாதது. அவர்கள் இருக்கிறார்களா அல்லது இல்லையா என்பது போன்று நீங்கள் அவர்களை முற்றிலும் மறந்துவிட்டால் மட்டுமே பேசமுடியும். அதைத் தான் நானும் செய்ய வேண்டியதாயிற்று. நான் அவர்களைப் பார்க்கவே இல்லை. நான் எனது மக்களைப் பார்த்து எனது மக்களிடம் பேசினேன். மேலும் அவர்கள் எனது பேச்சை கலைத்துவிடக் கூடாது என்றும் ஒரு நிபந்தனை அவர்களுக்கு விதித்தேன். நான் பேசிய அனைத்தையும் அப்படியே பிரசுரிக்க வேண்டும் என்று கூறினேன். ஆனால் அவர்களின் சொந்த கேள்விகளுக்கான எனது பதிலைக்கூட பிரசுரிக்கின்ற அளவுக்கு அவர்களிடம் தைரியம் இல்லை. ஏனெனில் எனது பேச்சானது அழுக்கடைந்த அரசியலைப்பற்றியும் மேலும் அதைப் பின்தொடர்கின்ற அசிங்கமான பத்திரிகை இயல்பற்றியும் இருந்தது.

எனவேதான் போதிதருமர் தமக்காகவே பேசிக்கொள்வது போன்று பேசிக்கொண்டார். அப்படி செய்யும்போது அவர் தனது உள்ளத்தை முழுமையாக திறந்துவிடலாம். யார் அவரது பேச்சை கவனிக்கப் போகிறார்கள், யார் அவரது பேச்சை படிக்கப் போகிறார்கள் என்பது பற்றி அவர் முற்றிலும் கவலைப்பட வில்லை. மனித இயல்பினுள் அவர் இந்த அளவுக்கு ஆழ்ந்த அகப்பார்வையை ஏன் அடைந்தார் என்பதற்கு ஒருவேளை அதுவே ஒரு காரணமாக இருக்கலாம். இதுவரை சொல்லப்படாத வாக்குமூலங்களை நீங்கள் காண்பீர்கள். ஆனால், போதிதருமர் அந்த வாக்குமூலங்களை யாரும் எதிர்க்கவும், மறுக்கவும் முடியாதபடி மிகவும் தெளிவாக அளித்தார்.

இந்த சூத்திரங்கள் குறைந்தபட்சம் ஆயிரம் ஆண்டுகளாக உள்ளன. ஆனால் எந்த ஒரு புத்த பண்டிதரும் இதுகுறித்து விமர்சனம் செய்தது இல்லை. இந்த புத்தகம் புத்தர்களின் கோயில்களில் மறைத்து வைக்கப்பட்டிருந்தது. இது ஒரு சில ஆண்டுகளுக்கு முன்புதான் மேலைநாட்டு அறிஞர்களால் கண்டுபிடிக்கப்பட்டது. ஆனால் இந்த புத்தகத்தில் உள்ள அளவுகடந்த சிறப்பு வாய்ந்த விஷயங்களை இந்த உலகம் அறிந்துகொள்ள புத்தமதத்தினர் அனுமதிக்கவில்லை என்பதை

அவர்களால் நம்பமுடியவில்லை. புத்தமதத்தினரின் பயத்தை என்னால் புரிந்துகொள்ள முடியும். புத்த மதத்தினர் ஆயிரக் கணக்கான புத்தகங்களை ஆங்கிலம், ஜெர்மன், மற்றும் ஏனைய பன்னாட்டு மொழிகளில் மொழிபெயர்த்துள்ளனர். ஆனால் போதிதருமரின் போதனைகள் மட்டும் முற்றிலும் மறுக்கப்பட்டு விட்டது.

இது ஒரு விநோதமான உலகம். இதில் நேர்மையாகவும் உண்மையாகவும் இருப்பது மிகவும் ஆபத்தான விஷயமாகும். சில தினங்களுக்கு முன்பு, இங்கு பூனாவில், ஜோதிர் மடத்தின் சங்கராச்சாரியார் ஆகிய சுவாமி ஸ்வரூபானந்தா அவர்கள் பத்திரிகையாளர் சந்திப்பு ஒன்றில், ''ஓஷோ, இணையற்றவர், மனித இன வரலாற்றில் மிகவும் ஆபத்தான மனிதர்,'' என்று அறிவித்து இருக்கிறார்.

நான் எனது வீட்டைவிட்டு வெளியே செல்வதில்லை. நான் ஒரு தீவிரவாதி அல்ல. எந்த ஒரு அதிகார அரசியலிலும் எனக்கு ஆர்வம் கிடையாது. என்னிடம் அணு ஆயுதங்கள் இல்லை. எனவே இந்த மனிதர், மனித வரலாற்றில் ஆபத்தானவர்களில் நான் மிகவும் ஈடு இணை இல்லாதவன் என்று எதை வைத்து கூறுகிறார்? இங்கு என்ன ஆபத்து இருக்கிறது?

ஆபத்து என்னவென்றால், சத்யத்தைப் பற்றி கூறும்போது, நான் யாரைப்பற்றியும் கவலைப்பட மாட்டேன்.

நான் ஆபத்தான மனிதன் அல்லன்.

சத்யம் தான் ஆபத்தானதாக இருக்கிறது.

மக்களுக்கு மன ஆறுதல் பெற வெறுமனே பொய்களை கூறுங்கள். அவர்கள் தங்களது கல்லறையை நோக்கி தங்களது வாழ்க்கையை இழுத்து செல்வதற்கு தேவையான நம்பிக்கையை அவர்களுக்கு கொடுத்துக் கொண்டே போகிறார்கள். அப்படி இல்லை எனில் இயேசு ஒரு ஆபத்தான மனிதர் அல்லர்; அவர் சிலுவையில் அறையப்படும்போது, ஒரு இளைஞராக, முப்பத்து மூன்று வயது நிரம்பியவராக இருந்தார். படிப்பறிவில்லாதவர், யாருக்கும் எந்தத் தீங்கும் செய்யாதவர். ஆனால் சத்தியத்தை

கூறினார். இஸ்ரேலின் யூத மதக்குருக்களால் இயேசுவை சகித்துக்கொள்ள முடியவில்லை. அவர்களின் பொய்யான ஜோடனைகளை இவர் கலைத்துக் கொண்டிருந்தார். அவர்கள் இந்த இளைஞனை சிலுவையில் அறைந்தனர். சாக்ரட்டீஸ் யாருக்கும் தீங்கு செய்யவில்லை. ஆனால் உண்மையைப் பேசியதுதான் அவரது மாபெரும் குற்றமாகும். அவர் விஷம் கொடுக்கப்பட்டு கொல்லப்பட்டார்.

போதிதருமருக்கும் கூட விஷம் கொடுக்கப்பட்டது. அவருக்கு விஷம் கொடுத்தவர்கள் அவர் கொல்லப்பட்டு விட்டார் என்று நினைத்தாலும் கூட, அவர் சாகவில்லை. அவர் வேறு விதமான ஒரு வஸ்துவினால் உருவாக்கப்பட்டவர். அவர் வெறுமனே கோமா நிலைக்கு சென்று, அதன்பின்னர், தனது செருப்புகளில் ஒன்றினை கல்லறையில் விட்டுவிட்டு, மற்றொரு செருப்பை தனது கைத்தடியில் தொங்கவிட்டுக்கொண்டு, இரவில் கல்லறையில் இருந்து வெளியே மறைந்துவிட்டார்.

மூன்று ஆண்டுகளுக்கு பிறகு, அவர் இறந்துவிட்டார் என்று மக்கள் முழுமையாக நம்பிக்கை கொண்டபோது, சீன எல்லையைக் கடந்து இமயமலைப் பகுதிக்குள் நுழைந்த ஒரு உயர் அரசு அதிகாரி அவரைப் பார்த்துவிட்டார். அந்த அதிகாரியால் தனது கண்களை நம்ப முடியவில்லை. போதிதருமர் விஷம் வைத்து கொல்லப்பட்டுவிட்டார் என்று அவர் கேள்விப்பட்டிருக்கிறார். அவர் போதிதருமரிடம் கேட்டபோது போதிதருமர் அவரிடம், ''நான் கோமா நிலையில் இருந்தேன். இரவு வரும்வரை காத்திருந்தேன். கோமா நிலை கொஞ்சம் மறைந்த உடன் என்னால் எழுந்திருக்க முடிந்தது. நான் கல்லறையில் இருந்து தப்பித்துவிட்டேன். நான் அந்த கல்லறையில் இருந்தேன் என்பதை நிரூபிப்பதற்கு நான் எனது கால் செருப்புகளில் ஒன்றினை அங்கு விட்டுவிட்டு வந்தேன். மேலும்; மற்றொரு செருப்பினை, நான்தான் போதிதருமர் என்று நிரூபிப்பதற்கு எனது கைத்தடியும் தொங்க விட்டுக்கொண்டு இருக்கிறேன். இது தான் எனது அடையாள அட்டை,'' என்று கூறினார்.

அந்த அதிகாரி உடனடியாக, போதிதருமருக்கு விஷம் கொடுக்கப்பட்ட மலைக்கு விரைந்து சென்று அவரது சீடர்களிடம் கூறினார். அவர்கள் கல்லறையை காட்டினார்கள். அப்போது அந்த அதிகாரி, ''இந்த கல்லறையை திறந்து பார்க்க விரும்புகிறேன். ஏனெனில் அந்த மனிதர் தனது கைத்தடியில் ஒரு செருப்பை தொங்கவிட்டுக் கொண்டு சென்றார். மேலும் அவர் தனது மற்றொரு செருப்பை தனது கையெழுத்து போன்று அந்த கல்லறையில் விட்டுவிட்டு வந்திருக்கிறேன், என்று கூறினார். நான் பார்த்த அந்த மனிதர் போதிதருமர் தானா அல்லது வேறு யாராவது என்னிடம் ஏதாவது, தந்திரமாக விளையாடி இருக்கிறார்களா என்று பார்ப்பதற்கு விரும்புகிறேன்,'' என்று கூறினார். அந்த கல்லறை திறக்கப்பட்டது, மேலும் அதில் ஒரே ஒரு செருப்பு மட்டுமே இருந்தது, வேறு எதுவும் இல்லை.

போதிதருமருக்கு விஷம் கொடுக்கவேண்டிய அவசியம் என்ன? இப்படிப்பட்ட மனிதர்களிடம் மக்கள் எப்படி இந்த மாதிரியாக நடந்து கொண்டார்கள் என்பதை கருத்தில் கொள்ள முடியவில்லை. உங்களை விழிப்புநிலை அடையச் செய்வதற்கு அவர்கள் எல்லா முயற்சியும் செய்தார்கள். ஆனால் பதிலுக்கு நீங்கள் அவரைக் கொன்றுவிட்டீர்கள். புத்திபேதலித்தவர் யார்? சாக்ரட்டீஸ் புத்த பேதலித்தவரா? அல்லது அவரைக் கொன்று போட்ட மக்கள் புத்தி பேதலித்தவர்களா?

இந்த காலைப்பொழுதில், பொய்களை எல்லாம் கைவிட்டு, உண்மையைப் புரிந்து கொள்ள விரும்பி, அதற்கு தயாராக இருப்பவர்களுக்கு இங்கே சில சூத்திரங்கள் உள்ளன.

*மனம் என்பது இல்லாமல் புத்தர் என்பவர் இல்லை என்பதற்கு, ஒரு புத்தர் மனம் என்பதில் இருந்துதான் வருகிறார் என்று அர்த்தமாகும்...........*

ஆனால் புத்தர் என்பவர் மனம் அல்ல. மனம் என்பது புத்தரின் அடிமைத் தளையாக இருக்கிறது. எனவே அவர் மனதிற்கு அப்பால் கடந்து சென்று மனம் அற்ற நிலைக்குள் நுழைகிறபோது, அவர் புத்தர் ஆகிறார். ஆனால் அவர் மனம் என்பதில் இருந்துதான் வருகிறார். எனவே நீங்கள் அனைவரும்

மனம் என்பதைப் பெற்றிருக்கிறீர்கள், எனவே நீங்கள் குறைந்த பட்சம் பாதி வழியில் ஏற்கனவே பயணம் செய்து கடந்து விட்டீர்கள்.

அடுத்த பாதியில் நீங்கள் மனம் என்பதில் இருந்து வெளியேறி, உங்களது புத்தநிலையை அறிவிக்க வேண்டியதுதான். நீங்கள் அதை உரக்க கூறவேண்டியதில்லை. மேலும் நீங்கள் அதை மெல்லிய குரலில் கூட சொல்ல வேண்டியதில்லை. உங்களது இருப்பில், உங்களது வார்த்தைகளில், உங்களது மௌனத்தில், உங்களது கண்களின் ஆழத்தில், உங்களது தனிமனிதத் தன்மையின் அழகு மற்றும் அருளில், உங்களை சூழ்ந்திருக்கும் நறுமணத்தில், தானாகவே உங்களது புத்தநிலை தன்னை அறிவித்துவிடும். நீங்கள் ஒரு குளிர் தென்றல் போல் இருப்பீர்கள்.

கௌதமபுத்தர் என்பதற்கு பதிலாக பயன்படுத்தப்படுகின்ற ததாகதர் என்னும் வார்த்தைக்கு இரண்டு அர்த்தங்கள் உள்ளன. ஒரு அர்த்தத்தை நான் ஏற்கனவே உங்களுக்கு விளக்கி இருக்கிறேன். அதற்கு இந்த பிரபஞ்சத்தையும், அதன் இயல்பையும் திடமாக நம்புகிற ஒரு மனிதர் என்று அர்த்தம். நல்லது அல்லது கெட்டது, துன்பம் அல்லது இன்பம், எது நடந்தாலும் அவர் கவலை அற்றவராக இருக்கிறார். இதுதான் விஷயங்களின் இயல்பு என்று கூறுகிறார். ஆகவே துன்பத்தினால் கலக்கமடையவோ அல்லது இன்பத்தினால் கலக்கமடையவோ தேவையில்லை. இவை எல்லாம் இயல்பான விஷயங்கள். நீங்கள் இவற்றில் இருந்து தனித்து நிற்கவேண்டும். ததாகதர் என்பதற்கு உரிய அர்த்தங்களில் இது ஒன்றாகும்.

வேறு ஒரு அர்த்தமும் கூட இருக்கிறது. அந்த அடுத்த அர்த்தமானது இந்த சூத்திரங்களைப் புரிந்து கொள்வதற்கு சிறப்புடையதாகும். ததாகதர் என்பதற்கு, குளிர் தென்றல் போல வந்துவிட்டு, ஒரு குளிர் தென்றல் போல சென்றுவிடுகிற ஒரு மனிதர் என்று அர்த்தமாகும். வார்த்தைகளின் அர்த்தப்படி இதற்கு, ''எப்படி வந்தாரோ, அப்படியே சென்று விடுகிறார்'' என்று அர்த்தமாகும். அவர் உங்களது அழைப்பிற்காக காத்துக்கொண்டு

இருப்பதில்லை. திடீரென்று அவர் வருகிறார். நீங்கள் அவரைத் தடுக்கும்வரை அவர் காத்துக்கொண்டு இருக்கமாட்டார்; திடீரென்று அவர் போய் விடுவார். ஆனால் அவர் தனக்கு பின்னால் ஒரு குளிர்ந்த அனுபவத்தையும், அமைதியையும், கலக்கமின்மையையும் விட்டு சென்று விடுவார்.

அந்த அமைதியும், குளிர்ச்சியும், மௌனமும், ஒரு புத்தர் வந்து விட்டார் என்பதை எல்லாவற்றையும் விட அதிகம் உரத்தகுரலில் இந்த ஒட்டுமொத்த பிரபஞ்சத்திற்கும் அறிவித்துவிடும். எனவே இப்போது எல்லா மதகுருக்களும் ஆபத்தில் இருப்பார்கள், எல்லா அரசியல்வாதிகளும் உள்ளுக்குள் நடுங்கிக் கொண்டு இருப்பார்கள். பொய்களில் வாழ்ந்து கொண்டிருப்பவர்கள் அனைவரும் மரணத்திற்காக பயப்படுவார்கள். உண்மைக்கு அப்படிப்பட்ட சக்தி உள்ளது. அது ஒருபோதும் யாருக்கும் தீங்கு செய்யாது. ஆனால் இந்த உலகத்தை சுற்றிலும் உண்டாக்கப்பட்டுள்ள அந்த ஒட்டுமொத்த பொய்யான ஜோடனைகளையும் நடுங்க வைத்துவிடும். உண்மை உள்ள ஒரு மனிதனே அதற்கு போதும்.

எனக்கு ஒரு யூதக்கதை நினைவிற்கு வருகிறது. பழைய வேதாகமத்தில் கடவுள் மிகவும் கோபப்பட்டதாக கூறப்படுகிறது. யூதக்கடவுள் மிகவும் கோபக்கார கடவுள். அவர் கோமோரா மற்றும் சோடோம் ஆகிய இரண்டு நகரங்கள் குறித்து கோபம் அடைந்தார். ஏனெனில் அந்த இரண்டு நரகங்களிலும் மக்கள் நெறி தவறிய பாலியல் விஷயங்களை செய்து வந்தனர். எனவே அவர் அவற்றை அழிப்பதற்கு தயாரானார். பழைய வேதாக மத்தில் அவர் உண்மையிலேயே அவற்றை அழித்துவிட்டார். அவை நமக்கு ஹிரோஷியா மற்றும் நாகசாகியை நினைவு படுத்துகிறது. அவை முழுமையாக அழிக்கப்பட்டன. அந்த இரண்டு நகரங்களும் கிட்டத்தட்ட ஹிரோசிமா மற்றும் நாகசாகி போன்று மிகச்சரியாக அதே பரப்பளவை கொண் டிருந்தன. எனவே கடவுள் அவற்றை முற்றிலுமாக அழித்து விட்டார். ஏனெனில் அந்த இரு நகரங்களும் நெறி கோணியவைகளாக ஆகிவிட்டன.

ஆனால் யூதமதத்தில், உண்மையான ஞானிகளின் ஒரு சிறிய கூட்டம் உள்ளது. அது ஒன்று மட்டுமே, யூதமதம், இந்த உலகிற்கு அளித்த அழகான ஒன்றாகும். அவர்கள் பழைய மதக்கோட்பாடுகளைக் கொண்ட யூதமதத்தினரால் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. அவர்கள் கண்டனம் செய்யப்பட்டனர். ஆனால் அவர்கள்தான் சத்தியத்தின் மக்கள். கோபம் கொள்கின்ற ஒரு கடவுளை அவர்களால் எண்ணிப்பார்க்க முடியவில்லை. எனவே அவர்கள் தங்களது சொந்த கதையை எழுதிவிட்டனர். பழைய வேதாகமம் என்ன சொல்கிறது என்பதைப்பற்றி அவர்களுக்கு கவலை இல்லை. அவர்களின் கதை என்னவென்றால், ஒரு ஹாசித் ஞானியானவர், கடவுள் இப்படி சோடோம், மற்றும் கோமோரா ஆகிய இரு நகரங்களையும் அழிக்கப்போகிறார் என்பதைக் கேள்விப்பட்டவுடன், அவர் கடவுளிடம் சென்று, ''நீங்கள் இவற்றை அழிப்பதற்கு முன்பு என்னுடைய சில கேள்விகளுக்கு ப்தில் சொல்லியாக வேண்டும். முதலாவதாக, இந்த இரு நகரங்களிலும் நெறி கோணாமல் நடந்து கொண்ட, மிகவும் நல்ல, தூய ஆன்மாவை உடைய, நேர்மையான, தங்களை உணர்ந்து கொண்ட, இருநூறு மக்கள் இருக்கிறார்கள் என்றால் நீங்கள் இந்த இரு நகரங்களையும், அந்த நல்ல மக்களையும் இன்னமும் அழிக்கப் போகிறீர்களா?'' என்று கேட்டார்.

கடவுள் கொஞ்சம் பின்வாங்கினார். தங்களை உணர்ந்து கொண்ட இருநூறு மக்களை அழிக்கப் போகிறேன் என்று அவரால் கூறமுடியவில்லை. எனவே கடவுள் அந்த ஞானியிடம், ''இது எனக்கு தெரியாமல் போய்விட்டது. இதை எனக்கு தெரிவித்ததற்கு உங்களுக்கு நன்றி, நான் அவர்களை அழிக்க மாட்டேன். அந்த இருநூறு மக்களும் அங்குள்ள இரண்டு லட்சம் மக்களைக் காப்பாற்றப் போகிறார்கள்,'' என்று கூறினார்.

அந்த ஹாசித் ஞானி கடவுளிடம் மீண்டும், ''இரண்டாவது கேள்வி; அங்கு இருநூறு மக்கள் இல்லாமல் வெறும் இருபது பேர் மட்டுமே இருந்தால், நீங்கள் அவர்களை அழிக்கப் போகிறீர்களா? குணத்தை விடவும் மக்களின் எண்ணிக்கையை நீங்கள் அதிகம் சிறந்ததாக கருதுகிறீர்களா?'' என்று கேட்டார்.

எனவே, கடவுள் மீண்டும் தோற்கடிக்கப்பட்டார். நிச்சயமாக குணம்தான் எண்ணிக்கையை விடவும் உயர்ந்த மதிப்புள்ளது. அங்கு தங்களை உணர்ந்து கொண்ட இருநூறு மக்கள் இருந்தால் என்ன அல்லது இருபது மக்கள் இருந்தால் என்ன, அதனால் என்ன ஆகிவிடப்போகிறது? கடவுள் அவரிடம், ''உங்களது வாதத்தை நான் ஏற்றுக்கொள்கிறேன். அங்கு இருபது பேர் இருந்தாலும் கூட, அந்த இருபது பேர் நல்லவர்களாக உள்ளனர் என்று உங்களால் நிரூபிக்க முடிந்தால், அந்த நகரங்கள் காப்பாற்றப்படும்,'' என்று கூறினார்.

ஹாசித் சிரித்துக்கொண்டு கடவுளிடம் திரும்பவும், ''எனது கடைசி வாதம். அங்கு தங்களை உணர்ந்து கொண்ட இருபது பேர் இல்லாமல் ஒரே ஒரு மனிதர் மட்டும், ஆறு மாதம் சோடோம் நகரத்திலும், ஆறுமாதம் கோமோரா நகரத்திலும் வசித்து வந்தால், நீங்கள் அந்த நகரங்களை அழிப்பீர்களா? இன்னமும் கூட நீங்கள் குணத்தைவிட எண்ணிக்கைத்தான் அதிக அர்த்தமுள்ளது என்று நினைக்கிறீர்களா?'' என்று கேட்டார்.

இந்த மனிதரால் கடவுள் சலிப்படைந்துவிட்டார்; அவர் உண்மையான ஒரு யூதராக இருந்தார். அவர் கடவுளை கொஞ்சம் கொஞ்சமாக கீழே இறக்கி கொண்டுவந்து விட்டார். மேலும் இப்போது அவர் கடவுளை இருநூறு பேர்களில் இருந்து ஒரு மனிதர் இருந்தால் போதும் என்று கொண்டுவந்துவிட்டார். உடனே கடவுள், ''சரி, அப்படியானால் நீங்கள் அந்த ஒரு மனிதரை இங்கு ஆஜர்படுத்த வேண்டும்!'' என்று கூறினார்.

''நான் தான் அந்த மனிதன்!'' என்று ஹாசித் கூறினார்.

யூதர்கள் இந்த அழகான கதையை அனுமதிப்பதில்லை. இது ஒரு கற்பனைக் கதை என்று அவர்கள் கூறுகிறார்கள். ஆனால் என்னைப் பொறுத்தமட்டில், கடவுள் கோபமடைந்து அந்த கோமோரா மற்றும் சோடோம் ஆகிய இரு நகரங்களையும் அழித்தார் என்பதுதான் கற்பனைக் கதை என்பேன். எனக்கு, ஹாசித் கூறிய கதை அதிக உண்மை உள்ளதுபோல் தெரிகிறது.

இந்த உலகை காப்பாற்ற ஒரு சத்தியவான் போதும். ஆனால் இந்த உலகம் காப்பாற்றப்பட வேண்டும் என்று விரும்பவில்லை.

அந்த ஒரு மனிதனை கடவுள் கொல்ல வேண்டிய அவசியம் இல்லை. இந்த உலகம் அந்த ஒரு மனிதனைக் கொன்றுவிடும். அந்த ஒருவரைக் கொன்ற மக்களைத்தான் கடவுள் காப்பாற்ற போகிறார்.

*''மனம் என்பது இல்லாமல், புத்தர் என்பவர் இல்லை'' என்பதற்கு, ஒரு த்தர் மனம் என்பதில் இருந்துதான் வருகிறார் என்ற அர்த்தமாகும்......* ஆனால் அவர் அந்த மனம் அல்ல. இது ஒரு தாமரை மலரைப் போன்றது. சேற்றில் இருந்துதான் தாமரை வருகிறது. ஆனால் அந்த தாமரை சேறாகிவிடாது. சேறு வேறு தாமரை வேறு என்று, இரண்டு இரண்டு வேறுபட்ட விஷயங்களை உங்களால் நினைத்துப் பார்க்க முடியுமா? ஆனால் அந்தத் தாமரை மலர் சேற்றில் இருந்துதான் வருகிறது. அது தண்ணீருக்கு மேல் எழுந்து நிற்கிறது. தாமரை மலர் என்பது அப்படிப்பட்ட ஒரு உருமாற்றம். ஆனால் சேறு இல்லாமல் தாமரை மலர்கள் இல்லை.

தாமரை மலர்கள் இல்லாமல் வெறும் சேறு மட்டும் இருக்கமுடியும். இது நீங்கள் புரிந்துகொள்ள வேண்டிய ஒன்றாகும். உயர்ந்தது மிகவும் மென்மையானது. தாழ்ந்தது மிகவும் கெட்டியானது. தாழ்ந்தது ஒரு பாறை போன்று இருக்கிறது. ஆனால் உயர்ந்தது ஒரு ரோஜா மலர் போன்று இருக்கிறது. நீங்கள் உயரத்தில் நகர்ந்து போகும்போது, அதிக மென்மையானவர்களாக ஆகிவிடுகிறீர்கள். இந்த மக்கள், சாக்ரட்டீஸ், இயேசு, அல்லது போதிதருமர் ஆகியோருக்கு விஷம் கொடுக்க முடியும். இவர்கள் தாமரை மலர்கள். ஆனால் சேறு போன்ற மனமுடையோர் மிகவும் கோபமடைகின்றனர். சேறு போன்ற அவர்களிடமிருந்து தாமரை போன்ற மலர்கள் வருவதைப் பார்த்தால் அவர்களுக்கு வருகின்ற கோபம் புரிந்து கொள்ளக்கூடியதுதான். தாமரை மலர் என்பது அந்த அளவுக்கு அழகு நிறைந்தது. தாமரை மலரின் அழகுடன் இந்த உலகில் வேறு எந்த மலரையும் ஒப்பிட்டு பார்க்கமுடியாது; எனவேதான் புத்தர் தனது சொர்க்கத்தை ''ஒரு தாமரைச் சொர்க்கம்'' என்று அழைக்கிறார். அதனை இறுதியான அழகை உடையதாக

ஆக்குவதற்குத்தான் அவர் ''தாமரை'' என்கிற வார்த்தையை பயன்படுத்தினார்.

ஆனால் இந்த உலகைப் பொறுத்தமட்டில் இதுதான் மிகவும் விநோதமான ஒரு விஷயம். எந்த ஒரு தாமரையும் இல்லாமல் வெறும் சேறு மட்டும் இருக்கமுடியும். ஆனால் சேறு இல்லாமல் எந்தத் தாமரையும் இருக்கமுடியாது. ஒரு தனி புத்தர்கூட இல்லாமல் பல கோடி மனங்கள் இருக்கமுடியும். ஆனால் எல்லா மனங்களும் இல்லை என்றால் ஒரு புத்தர் இருக்கமுடியாது. மனங்கள், சேறு போன்று செயல்படுகின்றன. புதத்ர் என்பவர் அந்த சேற்றினைக் கடந்து, தண்ணீரின்மீது எழுந்து நின்று, சூரியனைக் காண வேண்டும். சூரியனைச் சந்திக்க வேண்டும். ஆகவே புத்தர் மனம் என்பதில் இருந்துதான் வருகிறார். ஆனால் அவர் மனம் அல்ல என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.

*ஒரு புத்தரைக் காண விரும்புகிறவர் யாராக இருந்தாலும் அவர் யுத்தரைப் பார்ப்பதற்கு முன்பு மனதைப் பார்க்கிறார்.*

ஏனெனில் புத்தர் கண்களுக்கு தெரியமாட்டார். வெளியில் உள்ள கண்களுக்கு தெரிகிற மாதிரி பூக்கின்ற ஒரு மலர் அல்ல. அது அகக்கண்களில் மட்டுமே மலர்கின்ற ஒரு மலர். உங்களது அகக்கண் திறக்கவில்லை எனில் உங்களால் ஒரு புத்தரை அடையாளம் கண்டு கொள்ள முடியாது.

ஒருவர் ஒரு புத்தரைக் காண்பதற்கு முன்பு மனம் அற்ற நிலை தேவை.

மிகவும் அழகான கதை என்னவென்றால், புத்தர் மெய்ஞ்ஞானம் அடைந்தபோது, அவருக்கு உதித்த முதல் எண்ணமானது அவரது சாம்ராஜ்ஜியத்திற்கு திரும்பவும் போக வேண்டும் என்பதாகும்; அவரது தந்தை இறக்கவில்லை என்றால் அவர் மிகவும் வயதானவராக இருப்பார். அவர் இன்னமும் உயிரோடு இருந்தால், புத்தர் அவருக்கு ஏதோ கடமைப் பட்டிருந்தார்; அவர் தனது தந்தைக்கு ஒரே மகனாக இருந்தார். மேலும் அவருக்கு அளவுகடந்த துன்பத்தைக் கொடுத்தார். அவரது

வயதான காலத்தில் புத்தர் தான் அவருக்கு ஆதரவாக இருந்திருக்க வேண்டும். மேலும் புத்தர் தான் அவருக்கு பின்னர் அரசராக வந்திருக்கவேண்டும். ஆனால் புத்தர் தப்பி ஓடிவந்துவிட்டார். ஆகவே அவரது முதல் எண்ணமானது தனது சாம்ராஜ்யத்திற்கு சென்று தனது சொந்த பரவசநிலையை, சொந்த பேரானந்தத்தை, தனது தந்தைக்கு அளிக்க வேண்டும் என்பதாகத் தான் இருந்தது.

ஆனால், அவரது தந்தை அவரை ஒரு புத்தராக அடையாளம் கண்டுகொள்ள மாட்டார் என்பது புத்தருக்குத் தெரியவில்லை. அவரது தந்தையின் அகக்கண் திறக்கவில்லை. அவர் மனதின் மூலமே சிந்தித்தார். மனம் அற்ற நிலையின் மூலம் எந்த அணுகுமுறையும் அவருக்குத் தெரியாது. எனவே அவர் தனது வயதான தந்தையைப் பார்த்தபோது அவரது தந்தை உண்மையில் கோபம் கொண்டார். மேலும் நீங்கள் அவரது கோபத்தைக் குறை கூறவும் முடியாது.

புத்தரின் தந்தை அவரிடம், ''எனது வயதான காலத்தில் நீ என்னை ஏமாற்றி விட்டாய், பன்னிரண்டு ஆண்டுகளாக நீ எங்கு இருந்தாய்? நீ என்ன செய்து கொண்டிருந்தாய்? இவையெல்லாம் என்ன முட்டாள்தனங்கள்? ஒரு பேரரசரின் மகன் பிச்சைப் பாத்திரத்தை ஏந்திக்கொண்டு செல்வதா! இந்த உலகின் மிகப்பெரிய சக்கரவர்த்திகளில் ஒருவனாக இருப்பதற்காக நீ பிறந்தாய். நீ பிறந்தபோது ஜோதிடர்கள் கூறியபடி உலகையே வெற்றி கொண்டவன் ஆவதற்கான திறமை உன்னிடம் இருந்தது. ஆனால் நீயோ இந்த முட்டாள்தனமான வாழ்க்கையை தேர்ந்தெடுத்துவிட்டாய்,'' என்று கூறினார்.

ஒரு வார்த்தைகூட சொலலாமல், புத்தர் அமைதியாக நின்றார். முதலில் அந்த மனிதர் அவரது கோபத்தை வெளியேற்றி விடட்டும் என்ற அவர் விரும்பினார். ஆனால் அரைமணி நேரம் கடந்த பின்னர் அந்த வயதான மனிதர், தான் கத்திக்கொண்டு, திட்டிக்கொண்டு, கண்டனம் செய்து கொண்டு இருந்தாலும், தனது மகன் அமைதியாக, முற்றிலும் கலங்காமல், அங்கு வெறுமனே நின்று கொண்டு இருந்ததை அறிந்து கொண்டார். அவர் மிகவும் உற்றுப் பார்த்தார்.

இதைக்கண்ட புத்தர், தந்தையிடம், ''இதுதான் சரியான செயல், நன்றாக உற்றுப்பாருங்கள். உங்களை விட்டுச்சென்ற மனிதன் நான் அல்ல. அந்த மனிதன் நீண்ட காலத்திற்கு முன்பே இறந்துவிட்டான். ஆம், நான் அதே தொடர்ச்சியில் தான் இருக்கிறேன். ஆனால் முன்பு அது சேறாக இருந்தது; இப்போது நான் தாமரையாக இருக்கிறேன். ஆகவே இந்தத் தாமரையை பழிவாங்காதீர்கள், ஏனெனில் நீங்கள் சேற்றின் மீது கோபத்துடன் இருக்கிறீர்கள். உங்களது கண்ணீரை நான் துடைப்பதற்கு விடுங்கள். கொஞ்சம் அமைதியாகி வெறுமனே மறுமுறை உற்றுப்பாருங்கள். இந்த அரண்மனையை விட்டு வெளியேறிய அந்த மனிதன் நான் அல்ல. ஒரு மிகப்பெரிய உருமாற்றம் நடந்து விட்டது; மரணமடைந்து போகிற ஒருவனாக நான் அரண்மனையை விட்டு வெளியேறினேன். ஆனால் மரண மில்லாதவனாக இந்த அரண்மனைக்கு திரும்பவும் வந்திருக் கிறேன். நான் ஒரு சாதாரண மனிதனாக இந்த அரண்மனையை விட்டு வெளியேறினேன். ஒரு தெய்விகமானவனாக திரும்பவும் இந்த அரண்மனைக்கு வந்திருக்கிறேன். வெறுமனே என்னை உற்றுப் பாருங்கள்,'' என்று கூறினார்.

தந்தையும் அவரை உற்றுப்பார்த்தார். நிச்சயமாக புத்தரிடம் ஒரு மிகப்பெரிய மாற்றம் இருந்தது. ஒருசில நொடிப் பொழுதுகள் அங்கு முழுமையான அமைதி நிலவியது. தந்தையார் அவரை வெறுமனே உற்றுப்பார்த்து கொண்டே இருந்தார். அப்போது ஏதோ ஒன்று தந்தைக்கும், மகனுக்கும் இடையில் நடந்தது. உடனே தந்தையானவர் புத்தரிடம், ''என்னை மன்னித்துவிடு. எனது கோபத்தில், எனது கண்ணீரில், வயதான எனது கண்களினால், என்னால் அந்த உருமாற்றத்தை அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. எனவே இப்போது, சேற்றை தாமரையாக ஆக்குகின்ற அதே பாதையில் நானும் செல்வதற்கு நீ எனக்கு தீட்சை கொடுக்க வேண்டும் என்பது மட்டுமே எனது ஒரே ஆசை. நிச்சயமாக நீ தாமரை போன்று ஆகிவிட்டாய். இப்படிப்பட்ட அழகுடனும், மிகுந்த அருளுடனும் நான் முன்பு ஒருபோதும் உன்னைப் பார்த்ததில்லை,'' என்று கூறினார்.

எதுவுமே சொல்லப்படவில்லை, தந்தையானவர் தீட்சையளிக்கப் பட்டார்.

நீங்கள் அறிந்து கொள்கின்ற அந்த நொடிப்பொழுதில் நீங்கள் அதை அறிவிக்க வேண்டியதில்லை. அது தானாகவே அறிவித்துவிடும். ஆனால் குறிப்பிட்ட புலன் உணர்வு உள்ளவர்களும், தங்களது இதயத்தில் கொஞ்சம் இசையுணர்வு உள்ளவர்களும், தங்களது உயிர் உணர்வில் கவிதை நயம் உடையவர்களும், மட்டுமே உன்னை அடையாளம் கண்டுகொள்ள முடியும். வெறுமனே கணக்காளர்களாகவும், வங்கியாளர்களாகவும், பணத்தின் பின்னால் ஓடுபவர்களாகவும், அதிகாரத்தின் பின்னர் ஓடுபவர்களும், ஒரு புத்தரை அடையாளம் கண்டு கொள்கின்ற விஷயத்தில் முற்றிலும் குருடானவர்களாக இருப்பார்கள். *புத்தரை நீங்கள் பார்த்து விடும்போது, நீங்கள் மனம் என்பதைப் பற்றி மறந்து விடுகிறீர்கள்.*

தாமரை மலரைப் பார்த்த உடன் நீங்கள் சேற்றினை மறந்து விடுகிறீர்கள். *அப்படி நீங்கள் மனம் என்பதைப்பற்றி மறக்க வில்லை என்றால், அந்த மனமானது உங்களை குழப்பத்தில் ஆழ்த்திவிடும்.*

மிகப்பெரிய உருமாற்றத்தை அடையாளம் கண்டு கொள்வதற்கு அது உங்களை அனுமதிக்காது. அப்படிப்பட்ட ஒரு மாபெரும் உருமாற்றம் ஒருவேளை உங்களது மகனிடம், உங்களது நண்பரிடம், அல்லது ஒரு அந்நியரிடம் ஏற்பட்டிருந்தால் அதை அடையாளம் கண்டு கொள்ள அந்த மனம் அனுமதிக்காது. மாற்றமடைந்த அந்த மனிதர் உங்களுக்குள் தனது அடையாளத்தை விட்டுச்செல்ல அனுமதிப்பதற்கு, உங்களுக்கு ஒரு குறிப்பிட்ட மனப்பாங்கும், திறந்த உள்ளமும் அவசியம் தேவைப்படும்.

அப்படி நீங்கள் அடையாளம் கண்டு கொள்வது தான் உங்களுக்குள் உருமாற்றம் ஏற்படுவதற்கான ஒரு விதையாக ஆகப்போகிறது. அதன் பின்னர் உங்களால் ஒருபோதும் உங்களது மனதில் இருக்கமுடியாது; அதன்பின்னர் நீங்கள் சேறு போன்ற

உலகில் இருப்பதில் திருப்தியோடு இருக்கமுடியாது; நீங்கள் மற்றொரு தாமரை மலராக ஆவதற்கு விரும்புவீர்கள். அந்த சவால் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருந்தீர்கள். இப்போது நீங்கள் தாமரை மலரை உங்களுக்குள் வைத்திருக்கிறீர்கள் என்கிற உண்மை நிலையைக் கண்டு கொண்டீர்கள், ஆனால் அது குறித்து உங்களுக்கு எதுவும் தெரியவில்லை. அது உங்களுக்குள் செயல்படாமல் அப்படியே இருந்துவிட்டது.

ஒவ்வொருவரும் ஒரு புத்தர் தான், ஆனால் சேற்றில் மறைந்திருக்கின்ற ஒரு விதையில் மட்டுமே இருக்கிறோம். ஒரு தாமரை மலரை அடையாளம் கண்டு கொள்வது என்பது உங்களது சொந்த எதிர்காலத்தை, உங்களது சொந்த சாத்தியங்களை, உங்களது சொந்த கம்பீரத்தை அடையாளம் கண்டு கொள்வதாகும்.

*மரணமும், புத்தநிலையும், தண்ணீரும், பனிக்கட்டியும் போன்றவை.*

மரணிப்பவர்களுக்கும், மரணமில்லாதவர்களுக்கும் இடையே அதிக வித்தியாசம் கிடையாது. அந்த வித்தியாசம் வெறுமனே தண்ணீர் மற்றும் பனிக்கட்டி போன்றதாகும்.

*மூன்று விஷங்களால் வேதனை அடைவது மரணமாகும். மூன்று வெளியீடுகளால் சுத்தப்படுத்தப்படுவது புத்தநிலை ஆகும்.*

பேராசை, கோபம், மாயை ஆகிய மூன்றும்தான் மூன்று விஷங்கள் என்று போதிதருமர் கூறுகிறார். இந்த மூன்று விஷங்களினால், நீங்கள் மரணிப்பவராக இருக்கிறீர்கள். இந்த விஷங்கள் நீக்கப்பட்டு நீங்கள் சுத்தப்படுத்தப்பட்டு விட்டால் நீங்கள் மரணம் இல்லாதவர் ஆகிவிடுகிறீர்கள். நீங்கள் மரணமில்லா பெருவாழ்வை அடைந்து விடுகிறீர்கள். இப்போது உங்களுக்கு மரணம் கிடையாது.

*மழைக்காலத்தில் பனிக்கட்டியாக உறைந்து போகின்ற ஒன்று, கோடையில் தண்ணீராக உருகிவிடுகிறது.*

தண்ணீர், பனிக்கட்டி, அல்லது நீராவி ஆகியவற்றிற்கு இடையில் குணத்தளவில் வேறுபாடுகள் இல்லை. வெப்பத்தின் அளவு மட்டுமே வேறுபாடாக இருக்கிறது. ஒவ்வொரு மனிதனும், அவன் மிகப்பெரிய குற்றவாளியாக, அடால்ப் ஹிட்லராக இருந்தாலும்கூட, அவனிடம் ஒரு புத்தராக இருப்பதற்கான சக்தி உறைந்துள்ளது. நீங்கள் எவ்வளவுதான் உணர்விழந்த நிலையில் இருந்தாலும், உங்களது தூக்கமானது எவ்வளவுதான் ஆழமான தாக இருந்தாலும், உங்களை விழித்தெழச் செய்துவிடமுடியும்.

விழித்தெழுதல் என்பது தன்மையில், ஏற்படுகின்ற ஒரு வேறுபாடு அல்ல. வேறுபாடானது, முன்னேற்றத்தின் பல படிகளில் மட்டுமே இருக்கிறது. தூங்குகின்ற மனிதன் விழிப்புநிலை குறைந்து இருக்கிறான். ஆனால் விழிப்படைந்த மனிதன், தூக்கநிலை குறைந்து இருக்கிறான். எனவே மக்களிடையே உள்ள வேறுபாடானது ஒரு சில படிகளில் மட்டுமே உள்ளது என்பதை நினைவில் கொள்ளுங்கள். அது ஒரு மிகப்பெரிய வேறுபாடு அல்ல. கொஞ்சம் புரிதல் இருந்தால் போதும், அந்த வேறுபாட்டை களைந்துவிட முடியும்.

*மரணத்தை விட்டு ஒழித்துவிட்டால், அதன்பிறகு ஒருபோதும் புத்தநிலை கிடையாது.*

இப்படித்தான் போதிதருமர் சிறப்புமிக்கவராக இருக்கிறார். *மரணத்தை விட்டு ஒழித்துவிட்டால், ஒருபோதும் புத்தநிலை கிடையாது* என்று அவர் கூறுகிறார். மரணமடைபவர்களின் கண்களுக்கு மட்டுமே புத்தர்கள் மிக உயர்ந்தவர்களாக தோன்று கின்றனர். அவர்களின் மரணத்தன்மை முடிந்துவிடும்போது, அவர்களின் சொந்த புத்தநிலையானது அடையப்படுகிறது. மேலும் விழிப்புணர்வு என்பதன் முக்கியமான தன்மை என்னவென்றால், அது உங்களுக்குள் இருக்கிறது. ஆனால் நீங்கள் அது குறித்து அறிந்திருக்கவில்லை.

விழிப்புணர்வு குறித்து நீங்கள் விழிப்புடன் இருக்க முடியாது.

தன்உணர்வு குறித்து நீங்கள் தன்னுணர்வுடன் இருக்க முடியாது.

நீங்கள் உண்மையில் அறிந்து கொள்ளும்போது உங்களால் அறிபவராக இருக்க முடியாது. அதன்பிறகு நீங்கள் அதோடு ஒன்றாகி விடுகிறீர்கள். உங்களுக்கு மட்டுமே புத்தநிலை நிகழ்கிறது. ஏனெனில் நீங்கள் மரணிப்பவர்; புத்தர் என்பவர் மிகுந்த தொலைவில் இருப்பவராக உங்களுக்குத் தெரிகிறது. நீங்கள் சேற்றினில், வெறும் ஒரு விதையாக இருக்கிறீர்கள். எனவேதான் தாமரையானது வெகுதொலைவில் இருப்பதாகவும், மிகவும் வேறுபட்டு இருப்பதாகவும் தெரிகிறது. உங்களுக்கும் தாமரைக்கும் ஆன தொடர்பை உங்களால் நினைத்துப் பார்க்க முடியவதில்லை. ஆனால் நீங்களே ஒரு தாமரையாக ஆகிவிடும் போது, எல்லா வேறுபாடுகளும் மறைந்து விடுகின்றன. தாமரைக்கும் கூட அதன் அழகு தெரியாது. அதன் நறுமணத்தை அது அறியாது, அது வெறுமனே அதன் இயல்பாக இருக்கிறது.

போதிதருமரைத் தவிர, வேறு யாரும் இந்த வகையான வாக்குமூலங்களை கொடுக்க முடியாது. அதற்கான காரணம் என்னவென்றால் இந்த வாக்குமூலங்கள் அந்த அளவுக்கு விநோதமானவை, அவை பகுத்தறிவிற்கு ஏற்றதாக, தர்க்க அறிவிற்கு ஏற்றதாக இல்லை. ஆனால் இந்த பிரபஞ்சம் தர்க்க அறிவுக்கு ஏற்றதாக இல்லாமல் உள்ளது. அது பகுத்தறிவு அற்றதாக உள்ளது. நீங்கள் மனதினால் மட்டுமே சிந்தித்துக் கொண்டிருந்தது, அதன்பின்னர் அது ஒரு விஷயமாக உள்ளது, ஆனால் நீங்கள் சேறானது, தாமரை மலராக உருமாறுகின்ற அந்த செயல்முறையை அனுபவித்து விட்டால், எந்த கஷ்டமும் இல்லாமல் நீங்கள் போதிதருமரை புரிந்து கொள்வீர்கள். அவரது வித்தியாசமான வாக்குமூலங்களால் நீங்கள் மகிழ்ச்சி அடைவீர்கள்.

மீண்டும், மிகவும் வித்தியாசமான ஒரு வாக்குமூலம்: *மரணிப்பவர்கள் புத்தர்களை விடுதலை அடையச் செய்கின்றனர்.*

*மேலும் புத்தர்கள் மரணிப்பவர்களை விடுதலை அடையச் செய்கின்றனர்.*

பௌத்தர்கள், இந்த சூத்திரங்களை ஆயிரம் ஆண்டுகளாக ஏன் மறைத்து வைத்தார்கள் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. ஏனெனில் மரணிப்பவர்கள் புத்தர்களை விடுதலை அடையச் செய்கின்றனர். புத்தர்கள் மரணிப்பவர்களை விடுதலை அடையச் செய்கின்றனர் என்கிற கருத்தே மிகவும் தைரிய மானதாக இருக்கிறது. ஆனால் போதிதருமர் சரியாகத்தான் கூறுகிறார்.

ஒவ்வொரு புத்தரும் மரணமடைவர்களில் இருந்துதான் வருகிறார். மரணிப்பவர்களின் வேதனையை, துன்பத்தை, கஷ்டத்தை, அவர்களின் தொடர்ந்த அர்த்தமில்லாத தன்மையை பார்ப்பது தான் அவரது விடுதலைக்கு காரணமாக இருக்கிறது. இங்கு மரணமடைபவர்கள் இல்லை என்றால், எந்த ஒரு புத்தரும்கூட இருக்கமாட்டார்கள்.

நான் பல்கலைக்கழகத்தில் இருந்து வெளியே வந்தபோது, இயற்கையாகவே எனது பெற்றோர்கள், நான் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று ஆர்வம் கொண்டார்கள். நான் அந்த வகையைச் சேர்ந்தவன் அல்ல என்பதால் அவர்கள் மிகவும் பயப்பட்டனர். மேலும் நான் ஏதாவது ஒரு விஷயத்தை முடியாது என்று கூறிவிட்டால் அதன்பின்னர் அதற்கு சரி என்று என்னை சம்மதிக்க வைப்பதற்கு ஒரு வழியும் கிடையாது என்பதால் எனது தந்தை மிக மிக ஜாக்கிரதையாக இருந்தார். ஆகவே அவர் தனது நண்பர்களிடம், ''அவனது மனதில் என்ன உள்ளது என்பதை நீங்கள் வெறுமனே கண்டு பிடியுங்கள். அவன் அதற்கு சரி என்று கூறினான் என்றால், அதன்பின்னர் மட்டுமே நான் அவனிடம் அதைப்பற்றி கேட்பேன். என்னிடம் அவன் வேண்டாம் என்று சொல்லிவிட்டால், அதன்பின்னர் அந்த விஷயம் அதோடு முடிந்துபோய்விடும்,'' என்று கூறினார்.

ஆகவே, அவரது நண்பர்கள் என்னிடம் கேட்க ஆரம்பித்தனர். அவரது நண்பர்களில் ஒருவர் அந்தப் பகுதியிலேயே மிகச்சிறந்த மருத்துவர். அவர் தன்னோடு

ஒருநாள் மதிய உணவு அருந்துவதற்கு என்னை அழைத்தார். அந்த வேளையில், ''திருமணம் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?'' என்று அவர் என்னிடம் கூறினார்.

நான் அவரிடம், ''மாமா, நான் திருமணம் ஆகாதவன்; எனக்கு எந்த அனுபவமும் கிடையாது. நீங்கள் மூன்று முறை திருமணம் செய்தவர், மற்றவர்களை விடவும் உங்களுக்கு மூன்று மடங்கு அதிக அனுபவம் உள்ளது. திருமணம் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்று நீங்கள் என்னிடம் கூறுங்கள்?'' என்று கூறினேன்.

அவர் மிகவும் இக்கட்டில் மாட்டிக்கொண்டவர் போன்று காணப்பட்டார். அவர் என்னிடம், ''எனது அனுபவமா? நான் ஒரு முட்டாள்! நான் எனது முதல் மனைவி இறந்த உடனேயே திருமணம் செய்வதை நிறுத்தி இருக்கவேண்டும். ஆனால் முட்டாள்கள் எல்லாரும் முட்டாள்கள்தான். எல்லாப் பெண்களும் ஒரே மாதிரி இருக்கமாட்டார்கள் என்று நினைத்துக் கொண்டு நான் மீண்டும் திருமணம் செய்து கொண்டேன். ஆனால் கொஞ்ச நாட்களிலேயே, அந்த பெண் வேறுதான் ஆனால் பிரச்சினைகள் அப்படியே இருப்பதை கண்டு கொண்டேன். மேலும் கடவுள் என்மீது மிகவும் அன்புடையவராக இருந்ததால், அந்த இரண்டாவது மனைவியும்கூட இறந்து விட்டாள். ஆனால் எனது முட்டாள்தனத்தினால், நான் மீண்டும் திருமணம் செய்து கொண்டு, இப்போது நான் கஷ்டப்படுகிறேன். ஆனால் நீயோ என்னிடம், ''திருமணம் பற்றி என்ன நினைக்கிறீர்கள் என்று கேட்கிறாய்?'' என்று கூறினார்.

உடனே, நான் அவரிடம், ''இதுபோதும். நீங்கள் வெறுமனே உங்களது அனுபவத்தை எனது தந்தையிடம் கூறுங்கள். திருமணத்தில் இருந்து நீங்கள் என்னை விடுதலை அடையச் செய்துவிட்டீர்கள்,'' என்று கூறினேன்.

அதற்கு அவர், ''நீ இப்படி ஏன் அர்த்தம் கொள்கிறாய்? உனது தந்தை என்னிடம் கேட்டுக் கொண்டதற்கு எதிரான ஒரு காரியத்தை செய்துவிட்டேன். எனவே நான் உன்னை சமாதானம் செய்யப்போகிறேன்,'' என்று கூறினார்.

உடனே நான் அவரிடம், ''நீங்கள் என்னை சமாதானம் செய்துவிட்டீர்கள்! நடந்த ஒட்டுமொத்த விஷயத்தையும் வெறுமனே எனது தந்தையிடம் கூறுங்கள். எனவே நீங்கள் சரி என்று சொன்னால் மட்டுமே நான் திருமணம் செய்து கொள்வேன்,'' என்று கூறினேன்.

அதற்கு அவர், ''என்னால் முடியாது. முடியாது, நான் வாழ்ந்த அதே நரகத்திற்குள் உன்னை நான் இழுக்கமாட்டேன். என்னால் சரி என்று கூறமுடியாது,'' என்று கூறினேன். உடனே அவர் என்னிடம் ''நீ இப்படிப்பட்ட ஒரு சிக்கலில் என்னை மாட்டி விட்டாயே. உனது அப்பா என்னைத் தானே சார்ந்து இருக்கிறார்'' என்று கூறினார்.

அவர் எனது அப்பாவிடம் கூறினார். எனது அப்பா, அவரிடம், ''நீங்கள் அவனிடம் கொஞ்சம் அதிக எச்சரிக்கையுடன் இருந்திருக்க வேண்டும். திருமணத்திற்கு அவனை சம்மதிக்க வைப்பதற்கு பதிலாக, நீங்கள் ஒட்டுமொத்த விஷயத்தையும் பாழாக்கி விட்டீர்களே!'' என்று கூறினார்.

அதற்கு அவர், ''என்னால் என்ன செய்யமுடியும்? அந்த மதிய விருந்திற்கான நோக்கம் என்ன என்பதையே நான் மறந்து விடும்படி அவன் இப்படிப்பட்ட விதமாக சமாளித்துவிட்டான்,'' என்று கூறினார்.

மரணிப்பவர்கள், புத்தர்களை விடுதலை அடையச் செய்கின்றனர். வெறுமனே, சுற்றிலும் உள்ள மரணமடைபவர் களைப் பாருங்கள். அப்போது உங்களால் ஒரு புத்தராக ஆகாமல் இருக்கமுடியாது. எவ்வளவு விரைவில் புத்தர் ஆகிறீர்களோ அவ்வளவு நல்லது! புத்தர்கள், மரணிப்பவர்களை விடுதலை அடையச் செய்கின்றனர். இது மரணிப்பவர்களுக்கு புத்தர்கள் தங்களது கடனைத் திருப்பி செலுத்துவதாகும். அவர்கள் புத்தர்களாக ஆகிவிடும்போது, அவர்கள் மரணிப்பவர்களை தாக்க ஆரம்பித்துவிடுகின்றனர். எனது வாழ்நாள் முழுவதும் நான் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறேன். முதலில் மரண மடைபவர்கள் என்னை விடுதலை அடையச் செய்தார்கள்.

இப்போது மரணிப்பவர்களை நான் விடுதலை அடையச் செய்ய முயற்சித்துக் கொண்டு இருக்கிறேன்.

இந்த வாக்குமூலம் மிகவும் வித்தியாசமானது. ஒருவேளை புத்தமத பண்டிதர்கள் இதை எப்படி விளக்குவது என்பதை கண்டுபிடிக்க முடியாமல் போயிருக்கலாம். எனவே இதை வெளியில் கொண்டு வராமல் மறைவிடத்தில் வைத்து விடுவது நல்லது என்று அவர்கள் நினைத்திருக்கலாம். அப்படி இல்லை யெனில் புத்தர்கள், மரணிப்பவர்களை விடுதலை அடையச் செய்கின்றனர் என்பது சரிதான். ஆனால் மரணிப்பவர்கள், புத்தர்களை விடுதலை அடையச் செய்கினறனர் என்பது எப்படி? படித்தவர்களால், பண்டிதர்களால். இதை புரிந்து கொள்ள முடியாது.

*பாகுபாடு இல்லாமை என்பதற்கு இதுதான் அர்த்தமாகும்.*

மரணிப்பவர்கள் புத்தர்களை விடுதலை அடையச் செய்வதும், புத்தர்கள், மரணிப்பவர்களை விடுதலை அடையச் செய்வதுமாகிய, இதுதான் பாகுபாடு இல்லாமை என்று அழைக்கப்படுகிறது. இப்போது எல்லாமே சமநிலைப் படுத்தப்பட்டுவிட்டது. யாருக்கும் எதுவும் கடன்பட்டவில்லை. புத்தர்களும் உங்களுக்கு உதவவேண்டியதில்லை. அல்லது நீங்களும் புத்தர்களுக்கு உதவ வேண்டியதில்லை. இருவரும் தங்களது கடன்களை ஒருவருக்கொருவர் தீர்த்துவிட்ட ஒரு நிலைக்கு நீங்கள் வந்திருக்கிறீர்கள்.

*மரணிப்பவர்கள் புத்தர்களை விடுதலை அடையச் செய்கின்றனர். ஏனெனில் மனவேதனை விழிப்புணர்வை உருவாக்குகிறது.*

மரணிப்பவர்களையும், அவர்களது மனவேதனையையும் பார்க்கும்போது, நீங்கள் போதுமான புத்திசாலித்தனத்துடன் இருந்தால், நீங்கள் கண்டிப்பாக மரணிப்பவர்களின் பாதையைப் பின்பற்ற மாட்டீர்கள். அந்த வழியை அநேகம் பேர் பின்பற்றிக் கொண்டு இருக்கின்றனர். அவர்கள் ஒவ்வொருவரும் குழியில்

விழுந்துகொண்டு இருக்கின்றனர். ஒவ்வொரு வரும் துன்பப்படு கின்றனர்.

எனது அப்பா, அந்த மருத்துவரை வைத்து முயற்சி செய்ததில் தோல்வி அடைந்துவிட்டதால், அவர் தனது மற்றொரு நண்பரை அணுகினார். அவர்தான் கடைசி முயற்சியாக இருப்பார் என்று அவர் நினைத்தார். ஏனெனில் அவர் ஒரு உச்சநீதிமன்ற வழக்கறிஞர். அவர் எந்த வழக்கிலும் ஒருபோதும் தோற்றதில்லை. ஆகவே எனது அப்பா அவரிடம், ''நீங்கள் மட்டும் இந்த வழக்கில் வென்றுவிட்டால், உண்மையிலேயே உங்களை மிக உயர்ந்த உச்சநீதிமன்ற வழக்கறிஞராக நான் ஏற்றுக்கொள்வேன்,'' என்று கூறினார்.

அந்த வழக்கறிஞர் அப்பாவிடம், ''இது ஒன்றுமில்லாத வழக்கு. இதை நான் வெறுமனே எனது இடது கையாலேயே செய்துவிடமுடியும். நான் நாளை உங்களது வீட்டிற்கு வருகிறேன்,'' என்று கூறினார்.

எனது அப்பா அவரிடம், ''நன்றாக தயார் செய்து கொண்டு வாருங்கள்,'' என்று கூறினார்.

அதற்கு அவர், ''கவலைப்படாதீர்கள். உங்களது மகனை எனக்குத் தெரியும். வாதத்தில் அவன் என்னை தோற்கடித்து விடுவான் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?'' என்று கேட்டார்.

உடனே எனது அப்பா, ''வாதத்தில் அவன் உங்களை தோற்கடித்து விடுவான் என்ற நான் நினைக்கவில்லை. ஆனால் அவன் வித்தியாசமான வழிகளை வைத்திருப்பான். இந்தப் பகுதியில் மிகுந்த அறிவுள்ள மனிதர் என்று அறியப்பட்ட அந்த மருத்துவர் அவனை சமாளித்து சம்மதிக்க வைக்க பாடுபட்டார். ஆனால் இப்போது அவர் அவனுக்கு ஆதரவாக இருக்கிறார்'' என்று கூறினார்.

அந்த வழக்கறிஞர் மிகவும் கர்வம் மிக்கவர், அவர் கர்வம் மிக்கவராக இருப்பதற்கு காரணங்கள் உள்ளன. அவர் எனது தந்தையிடம், ''கவலைப்படாதீர்கள்'' என்றார்.

ஆனால் எனது தந்தையோ, ''என்றாலும் கூட நீங்கள் வீட்டில் கொஞ்சம் தயார் செய்து கொண்டு வாருங்கள். தயார் செய்யாமல் வந்துவிடாதீர்கள். நான் உங்களை எச்சரிக்கிறேன். நீங்கள் இந்த வழக்கில் தோற்றுப் போகலாம். எனது பையன் வித்தியாசமானவன்,'' என்றார். அதற்கு அந்த வழக்கறிஞர், ''நீங்கள் அமைதியாக இருங்கள், கவலைப்படாதீர்கள் நாளை நான் எல்லாவற்றையும் தீர்த்து வைத்துவிடுகிறேன்,'' என்று கூறினார்.

எனவே, மறுநாள் அவர் வந்தார். நான் அவரை வரவேற்றேன். அவரிடம் நான், ''நீங்கள் எதற்கு வந்திருக்கிறீர்கள் என்பது எனக்குத் தெரியும். நன்றாக தயார் செய்து கொண்டு வாருங்கள், என்று தந்தை கண்டிப்பாக உங்களிடம் கூறியிருப்பார் என்று நான் நினைக்கிறேன்'' என்றேன். அவர் என்னை உற்றுப்பார்த்துவிட்டு, ''உனக்கு எப்படி தெரியும்?'' என்றார். நான் அவரிடம், ''அதைத்தான் அவர் அந்த மருத்துவரிடமும் கூறினார். எனவே அதே விஷயத்தை உங்களிடமும் கண்டிப்பாக சொல்லி இருப்பார் என்பது எனக்குத் தெரியும். நீங்கள் தான் கடைசி முயற்சி. எனவே நீங்கள் தோற்றுப் போய்விட்டால், அதன்பின்னர் திருமணம் என்கிற அந்த ஒட்டுமொத்த கேள்வியும் முடிந்துவிடும்,'' என்று கூறினேன்.

ஆனால் அதற்கு, அவர், ''நான் தோற்கப்போகிறேன் என்று யார் சொன்னது?'' என்றார்.

உடனே நான், ''நான் அப்படி சொல்லவில்லை, ஆனால் நான் தோற்றுப்போய்விட்டால் நான் திருமணம் செய்து கொள்வேன். ஆனால் நீங்கள் தோற்றுப் போய்விட்டால், உங்களது மனைவியை நீங்கள் விவாகரத்து செய்ய தயாராக இருக்கிறீர்களா? என்பதை நான் வெறுமனே தெளிவாக்கிக் கொள்ள விரும்பினேன்,'' என்று கூறினேன்.

அதற்கு அவர், ''அட கடவுளே! உனது தந்தை கூறியது சரிதான். நான் அதைப்பற்றி ஒருபோதும் சிந்திக்கவில்லை. இப்படி ஒரு கேள்வி வரும் என்று நினைக்கவில்லை. நிச்சயமாக நீ கூறுவது சரிதான். நானும் பந்தயத்தில் எதையாவது வைத்தாக வேண்டும். ஆனால் கொஞ்சம் கவனி, எனக்கு குழந்தைகள்

உள்ளன. எனது மனைவியை உனக்கு தெரியும். அவர் என்னை அடிக்கவும் கூட செய்வாள். எனவே அவள் முன்னால், 'விவாகரத்து' என்கிற வார்த்தையைக் கூட நான் கூறமுடியாது,'' என்று கூறினார்.

எனவே நான் அவரிடம், ''நீங்கள் தயாராக வரவில்லை. எனவே எனக்கு எந்த நீதிபதியும் தேவை இல்லை. நான் உங்களை நம்புகிறேன். வாதத்திலும் நீங்கள் ஒரு நபராக இருந்து கொண்டாலும்கூட தீர்ப்பையும் நீங்கள் தான் நீதிபதியாக இருந்து தீர்ப்பளிக்க வேண்டும்,'' என்றேன். உடனே அவர், ''நான் வாதம் செய்வதற்கே விரும்பவில்லை,'' என்றார். நான் அவரிடம், ''அப்படியானால், எனது அப்பாவிடம் நீங்கள் என்ன பதில் கூறப்போகிறீர்கள்?'' என்று கேட்டேன்.

அதற்கு அவர், ''அதைப்பற்றி தான் நான் சிந்தித்து கொண்டு இருக்கிறேன்,'' என்றார். வாதம் தொடங்கவே இல்லை. ஆனால் நான் ஒவ்வொரு நாளும் அவரது வீட்டிற்கு போவது வழக்கம். அவர் வீட்டு கதவை தட்டியவுடன் அவர் உடனேயே, ''நான் உன்னிடம் சண்டை போட விரும்பவில்லை. நான் ஏற்கனவே அதிகப்படியாக துன்புறத்தப்பட்டு விட்டேன்,'' என்று கூறுவார்.

ஆனால் ஒரு நாள் அவரது மனைவி வெளியே வந்து என்னிடம், ''அவர் ஏன் உன்னைப் பார்த்து இப்படி பயப்படு கிறார்?'' என்று கேட்டார்.

உடனே நான், ''உங்களால் தான் பயப்படுகிறார்,'' என்றேன். அவர் குளியலறையில் ஒழிந்து கொள்ள ஆரம்பித்துவிட்டார், அவர் வெளியே வரமாட்டார். எனவே அவரது மனைவி என்னிடம், ''இது ஆச்சரியமாக உள்ளது. அவர் ஒருபோதும் யாருக்கும் பயப்பட்டது கிடையாது. அவர் குளியலறையில் மறைந்துகொண்டு அவர் வீட்டில் இல்லை என்று கூறுகிறார். என்ன விஷயம்? என்ன தவறு நடந்தது?'' என்று கேட்டார்.

அதற்கு அவர், ''எனக்கு எதுவும் புரியவில்லை. இங்கு என்ன நடக்கிறது? என்ன பிரச்சினை? எந்த விதத்தில் நான் ஆதரவாக இருக்கிறேன்?'' என்று கேட்டார்.

உடனே நான், ''நீங்கள் அவரிடமே கேளுங்கள். அவர் உங்களை விவாகரத்து செய்வதற்கு நினைத்துக் கொண்டு இருக்கிறார்,'' என்றேன்.

அப்போது, உடனடியாக அவர் குளியலறையில் இருந்து வெளியே வந்தார். அவர் என்னிடம், ''பொய் சொல்லாதே! நான் அவளை ஒருபோதும் விவாகரத்து செய்யப் போவதில்லை. நான் அவளை நேசிக்கிறேன். எனது வாழ்நாள் முழுவதும் நான் அவளை நேசிப்பேன்,'' என்றார்.

உடனே நான் அவரிடம், ''அது உங்களது முடிவு. ஆனால் வாதத்தைக் குறித்து என்ன செய்வது?'' என்று கேட்டேன். அதற்கு அவர், ''முடிந்துவிட்டது. நான் உன்னைப் பார்க்கவே விரும்பவில்லை. நீ என்னை அந்த அளவுக்கு நடுங்க வைத்து விட்டாய். நீதிமன்றத்திலும்கூட, உன்னை நினைத்து அந்த நொடிப்பொழுதிலேயே பயப்படுகிறேன். எனது குடும்ப வாழ்க்கையை கலைத்து விடாதே,'' என்று கூறினார்.

உடனே நான் அவரிடம், ''நீங்கள் தானே எனது ஒட்டுமொத்த வாழ்க்கையையும் கலைக்கப்பார்த்தீர்கள்,'' என்று கூறினேன். *மரணிப்பவர்கள், புத்தர்களை விடுதலை அடையச் செய்கின்றனர். ஏனெனில் மனவேதனையாவது விழிப்புணர்வை உருவாக்கு கிறது. புத்தர்கள் மரணிப்பவர்களை விடுதலை அடையச் செய்கிறார்கள். ஏனெனில் விழிப்புணர்வானது மனவேதனையை இல்லாததாக்கி விடுகிறது.*

எல்லா புத்தர்களும் மரணமடைவர்களிடமிருந்தே வருகிறார்கள். உங்களை விடவும் அவர்கள் அதிக கவனம் நிறைந்து இருக்கின்றனர். அவர்கள் சுற்றுமுற்றும் பார்க்கிறார்கள். சுற்றிலும் உள்ள ஒட்டுமொத்த காட்சியும் சோகமானதாகவும், பரிதாபமானதாகவும் இருக்கிறது. அது அவர்களுக்குள் மிகப்பெரிய விழிப்புணர்வை உருவாக்குகிறது. அவர்கள் தங்களின் விழிப்புணர்வின் உயர்ந்த சிகரத்தை தொட்டு விடும்போது, நீங்களும் விழிப்புணாவுடன் இருப்பதற்கு உதவுவதற்கான எல்லா முயற்சியையும் எடுக்கின்றனர்.

ஏனெனில் அப்போதுதான் நீங்களும் இந்த மனவேதனையில் இருந்து வெளியேற முடியும்.

ஆண் மட்டும்தான் துன்பத்தில் இருக்கிறான் என்பது மட்டுமல்ல. பெண்ணும் அதிக துன்பத்தில் இருக்கிறாள். எனவே இங்கு ஒவ்வொருவரும் மற்றவர்களுக்கு துன்பத்தை உருவாக்கி கொண்டே போகவேண்டும் என்று ஒரு ரகசிய ஒப்பந்தம் செய்து கொண்டதுபோல தெரிகிறது. நான் ஏன் திருமணம் செய்து கொள்ளவில்லை என்று அநேகமுறை என்னிடம் கேட்டார்கள். ''திருமணம் ஆனவர்களால் தான் நான் திருமணம் செய்து கொள்ளவில்லை. அவர்களில் அநேகரை எனக்குத் தெரியும் அவர்கள் என்னை எச்சரிக்கை செய்தார்கள்'' என்று நான் கூறினேன்.

எனவே, நீங்கள் ஒரு கணவனோ அல்லது மனைவியோ, உங்களை அதிக விழிப்புணர்வுடன், அதிக ஜாக்கிரதையுடன் இருக்கச் செய்வதன்மூலம், எப்படியாவது உங்களை அந்த எலிப்பொறிக்குள் இருந்து வெளியே கொண்டு வருவது தான் இப்போது எனது வேலையாக இருக்கிறது. உங்களது விழிப்புணர்வின் மூலம் உங்களது துன்பம் மறைந்து போகிறது. ஒளியானது, இருளை விரட்டுவதுபோல, விழிப்புணர்வானது துன்பத்தை விரட்டி விடுகிறது.

*மனவேதனை இல்லாமல் இங்கு உதவி இருக்கமுடியாது. மக்கள் தன்னுணர்வை இழந்த நிலையில் இருப்பதால், விழிப்புணர்வுடன் இருப்பதைத் தவிர வேறு உதவி கிடைக்காது.*

எப்போதுவது ஒருமுறை யாராவது சுற்றுமுற்றும் பார்ப்ப தற்கு போதுமான விழிப்புணர்வுடன் இருக்கப்போகிறார்கள். அப்படி விழிப்புணர்வு அடைந்த அந்த மனிதர், விழிப்புணர்வு இல்லாத மக்களிடம் அதைப் பகிர்ந்து கொள்ள விரும்புகிறார்.

*மனவேதனை என்பது இல்லாமல் இருந்தால், இங்கு விழிப்புணர்வு என்பதை உருவாக்குவதற்கு எதுவும் இருக்காது. விழிப்புணர்வு என்பது இங்கு மனவேதனையை இல்லாத*

தாக்குவதற்கு எதுவும் இருக்காது. நீங்கள் மாயையில் இருக்கும்போது புத்தர்கள் மரணிப்பவர்களை விடுதலை பெறச் செய்துவிடுகிறார்கள். நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்கும்போது மரணிப்பவர்கள், புத்தர்களை விடுதலை அடையச் செய்து விடுகின்றனர். புத்தர்கள் தங்களது சொந்த முயற்சியில் புத்தர்களாக ஆவது கிடையாது.

இதுதான் போதிதருமரின் உயர்ந்த பண்பு. அது எப்படி உங்களைத் தாக்குவதாக இருந்தாலும், அதை மிகச்சரியாக அவரால் தான் கூற முடிகிறது. புத்தர்கள் தங்களது சொந்த முயற்சியில் புத்தர்களாக ஆவது கிடையாது என்று அவர் கூறுகிறார். அவர்களைச் சுற்றிலும் இந்த ஒட்டுமொத்த உலகமும் துன்பத்தில் இல்லாமல் இருந்தால், அவர்கள் ஒருபோதும் புத்தர்கள் ஆக மாட்டார்கள். துன்பப்படுகிறவர்கள் அனை வருக்கும் புத்தர்கள் நன்றி உடையவர்களாக இருக்கவேண்டும். ஏனெனில் இத்தகைய மக்கள் தான் தாங்கள் மாட்டிக் கொண்டதைப் போல, தாங்களும் எலிப்பொறிக்குள் மாட்டிக் கொள்ள கூடாது என்று அவர்களை சிந்திக்கத் தூண்டுகிறார்கள்.

*புத்தர்கள், மாயையை தங்களது தந்தையாகவும், மற்றும் பேராசையை தங்களது தாயாகவும் கருதுகின்றனர்.*

போதிதருமரால் மட்டுமே இப்படிப்பட்ட விஷயங்களைக் கூறமுடியும். மக்களின் பேராசையை, அந்த பேராசை யினால் உருவாக்கப்பட்ட வேதனை மற்றும் கவலையைப் பார்த்தபின்னர், மக்களின் மாயையை பார்த்த பின்னர், போதிதருமரால் மட்டுமே இப்படிப்பட்ட விஷயங்களைக் கூறமுடியும். ஒருவர் தான் மிகச்சரியாக என்னவாக இருக்கிறாரோ, அவ்விதம் தன்னைப் பற்றி சிந்திப்பதில்லை. ஒவ்வொருவரும் தங்களது தனிமனிதப் பண்பை, தங்களது ஆணவத்தை, தங்களது அறிவாற்றலை பெருக்கிக் கொண்டே இருக்கிறார்கள். தனக்கு எதுவுமே தெரியாத விஷயங்களை தங்களுக்கு - தெரிந்ததாக பாசாங்கு செய்து கொண்டு இருக்கிறார்கள்.

எனது பேராசிரியர்களில் ஒருவர், முப்பது ஆண்டுகளுக்கு முன்பு பல்கலைக்கழகத்தை விட்டு வெளிவந்தவுடன் ஒருபோதும் எதையுமே படிக்காமல் இருப்பதை நான் கண்டேன். அவர் கூறுகின்றவை எல்லாம் காலத்திற்கு பொருந்தாதவைகளாக இருந்தன. மனோதத்துவம் தான் அவர் எடுத்த பாடம். மனோதத்துவம் என்பது வேகமாக வளர்ந்து வருகின்ற ஒரு பாடம்; முப்பது ஆண்டுகளில் சரி என்று இருந்தவை எல்லாம் இப்போது சாக்கடைக்குள் போய்விட்டன. ஆனால், இன்னமும் அவர் தனது முதுகலை வகுப்புகளில் படித்த அதே புத்தகங்களை மேற்கோள் காட்டிக்கொண்டு இருக்கிறார்.

என்னைச் சமாளிப்பது அவருக்கு கடினமாக இருந்தது. ஏனெனில், நான் மிகவும் சமீபத்தில் வந்த மனோதத்துவ புத்தகங்களையும் படித்துவிடுவேன். தற்போதைய ஆராய்ச்சி களில் இருந்து நான் மேற்கோள் காட்டுவேன். அவர் ஒரு அப்பாவி மனிதர். ''என்னை மன்னித்து விடுங்கள். இப்படிப்பட்ட ஆராய்ச்சிகளைப் பற்றி எனக்குத் தெரியாது'' என்று அவரால் சொல்லவும் கூட முடியாது. தனது கர்வத்தை விட்டுக் கொடுக்காமல், ''ஆம், நான் அந்த செய்திகளைப் பார்த்திருக் கிறேன்,'' என்று கூறுவார். ஆனால் அவர் அந்த செய்திகளையோ அல்லது அந்த புத்தகங்களையோ பார்த்திருந்தால், அவர் மனித மனம் மற்றும் தன்னுணர்வு சம்பந்தமாக காலாவதி ஆகிவிட்ட கொள்கைகளை சொல்லிக் கொடுத்துக் கொண்டு இருக்கமாட்டார்.

நான் துணைவேந்தரிடம் முறையிட்டேன். நான் அவரிடம், ''ஒவ்வொரு பேராசிரியரும், ஒவ்வொரு நாளும், நூலகத்தில் குறைந்தபட்சம் இரண்டு மணிநேரமாவது செலவழிக்க வேண்டும் என்பதை கட்டாயமாக்க வேண்டும்,'' என்று முறையிட்டேன்.

அதற்கு அவர், ''எந்த பல்கலைக்கழகத்திலும் இதுபோன்ற எதுவும் வழக்கத்தில் இல்லையே. எல்லாப் பேராசிரியர்களும் இதற்கு எதிர்ப்பு தெரிவிப்பார்கள். இதை நீ ஏன் கூறுகிறாய்,'' என்று கேட்டார்.

உடனே நான் அவரிடம், ''எல்லாப் பேராசிரியர்களும் இருபது, முப்பது வருடங்களுக்கு முன்பு கல்வி கற்றவர்கள், அவர்கள் கற்றது எல்லாம் இப்போது உள்ள முன்னேற்றமடைந்த கல்விக்கு சம்பந்தம் இல்லாதது. நான் எந்தெந்த பேராசிரியர் நூலகத்தில் இருந்து புத்தகங்களை எடுத்துப் படிக்கிறார்கள் என்று சரிபார்த்தேன். நான் குறிப்பிடுகின்ற அந்த பேராசிரியர், ஒருபோதும் ஒரு சிறு புத்தகத்தை கூட நூலகத்தில் இருந்து எடுத்து படிக்கவில்லை. அவர் ஒருபோதும் நூலகத்திற்கே வந்ததில்லை,'' என்று கூறினேன். அந்த பல்கலைக்கழகத்தின் நூலகமானது மிகவும் அதிக புத்தகங்கள் நிறைந்தது. இன்றைய தேதிவரை உள்ள புத்தகங்கள் எல்லாம் அங்கு இருந்தன. ஏனெனில் அந்த பல்கலைக் கழகத்ததை நிறுவியவர் நிறைய படித்த ஒரு மனிதர். எல்லாவற்றையும்விட புத்தகங்களை அவர் அதிகம் நேசித்தவர்.

ஆகவே, நான் துணைவேந்தரிடம், ''அந்த பேராசிரியரை எனக்கு முன்னால் அழையுங்கள், அப்போது, இந்த கோரிக்கையை நான் ஏன் வைக்கிறேன் என்பதை நான் உங்களுக்கு காட்டுகிறேன். நான் கூறுவதை நீங்கள் கேட்கவில்லை என்றால், அதன்பின்னர் நான் மாணவர்களின் சங்கத்திற்கு சென்று, நூலகத்திற்கு குறைந்தபட்சம் இரண்டு மணிநேரம் போகாத பேராசிரியர்கள் அனைவரின் வகுப்புகளைப் புறக்கணிக்க வேண்டும் என்று எல்லா மாணவர்களிடமும் பேசப்போகிறேன்,'' என்று கூறினேன்.

அவருக்கு என்னைப்பற்றி தெரியும், இதை நான் செய்து விடுவேன் என்பதையும் அவர் அறிவார். ஆகவே அவர் என்னிடம், ''நீ அந்த அளவுக்கு போகவேண்டாம். அந்த பேராசிரியரை இங்கு அழைத்துக் கொண்டு வா,'' என்று கூறினார்.

உடனே நான், ''நான் அழைத்து வரமாட்டேன். நீங்கள் அவரை கூப்பிடுங்கள். நான் இங்கேயே உட்கார்ந்திருக்கிறேன்,'' என்றேன்.

அவர் பேராசிரியரை அழைத்தார். பேராசிரியரும் உள்ளே வந்தார். அப்போது நான் இரண்டு கற்பனையான மனோ

தத்துவவாதிகளின் பெயரையும், இதுவரை ஒருபோதும் எழுதப்படாத இனிமேலும் எழுதமுடியாத இரண்டு புத்தகங்களின் பெயர்களை கற்பனையாக கண்டுபிடித்து வைத்துக்கொண்டேன். நான் அந்த பேராசிரியரிடம் ''நீங்கள் இந்த புத்தகங்களை படித்திருக்கிறீர்களா?'' என்று கேட்டேன்.

அதற்கு அவர், ''அடக் கடவுளே, நீ இதை எப்படி கண்டுபிடித்தாய்? அவை எனது அறையில் எனது மேஜைமீது இருக்கின்றன. நான் அவற்றைப் படித்திருக்கிறேன்; அவை தான் புதிதாக வந்த புத்தகங்கள்,'' என்று கூறினார்.

உடனே நான், துணைவேந்தரிடம்,''இந்த இரண்டு பெயர்களும் கற்பனையானவை, இரண்டு புத்தகங்களும் கற்பனையானவை; அவை இல்லவே இல்லை. இப்போது இந்த மனிதரை அந்த புத்தகங்களை உங்களது அலுவலகத்திற்கு கொண்டுவரச் சொல்லுங்கள். அவை அவரது மேஜைமீது இருக்கின்றன அல்லவா,'' என்று கூறினேன். அதன்பின்னர் அந்த பேராசிரியர் பயந்துவிட்டார். கற்பனையான அந்த இரண்டு புத்தகங்களையும் அவர் எங்கிருந்து கொண்டு வரப்போகிறார்? ஆனால் அந்த புத்தகங்கள் அவரது மேஜையின்மீது கிடப்பதாகவும், அவர் அதைப் படித்ததாகவும், அவை மிகவும் உயர்ந்தவை என்றும் கூறினார்.

உடனே நான் துணைவேந்தரிடம், ''இதுதான் இப்போது உள்ள சூழ்நிலை. இந்த மக்கள்தான் மாணவர்களுக்கு கற்றுக்கொடுக்கின்றனர். மேலும் இவர்களின் மாணவர்கள் தான் நாளை பேராசிரியர்களாக வருவார்கள். மேலும் அவர்கள் ஐம்பது வயதுவரை தொடர்ந்து, நாற்றமடிக்கின்ற பழைய பரிசோதனை களைப் பற்றி கற்பித்துக் கொண்டு இருப்பார்கள். ஆனால் அந்த பரிசோதனையை தோல்வி அடைந்து அதற்கு பதிலாக புதிய கொள்கைகள் வந்திருக்கும்,'' என்று கூறினேன்.

அதற்கு துணைவேந்தர், ''நீ கூறுவதை நான் ஒத்துக் கொள்கிறேன்,'' என்றார். அதன்பின்னர், ஒவ்வொரு பேராசிரி யரும் நூலகத்திற்கு சென்று புதிய வரவான, இதழ்கள், புத்தகங்கள், பத்திரிகைகள் ஆகியவற்றைப் படித்து, இன்றைய

தேதிவரை உள்ள விஷயங்களைக் கற்றுக்கொள்ள வேண்டும் என்பதை கட்டாயமாக்கினார்.

பேராசிரியர்கள் கோபமடைந்தார்கள், அவர்கள் அனைவரும் என்மீது கோபம்; கொண்டார்கள். ஆனால் நான் அவர்களிடம், ''கோபப்படுவதால் எந்த உதவியும் கிடைக்காது. ஒவ்வொரு நாளும், நூலகத்திற்கு யார் வருகிறார், யார் வரவில்லை என்பதை நான் குறித்து வைக்கப்போகிறேன். யார் நூலகத்திற்கு வரவில்லையோ, அவர்களின் துறைக்கு எதிர்ப்பு தெரிவித்து நான் எல்லா மாணவர்களையும் ஊர்வலமாக கொண்டு வருவேன். அதன்பிறகு நீங்கள் என்னிடம், ''நீ குழப்பத்தை உண்டு பண்ணுகிறாய், நீதான் இதற்கெல்லாம் காரணம்!'' என்று கூறாதீர்கள்,'' என்று கூறினேன்.

நூலகர் ஆச்சரியமடைந்தார். எல்லாப் பேராசிரியர்களும் வந்தார்கள், படித்தார்கள், புத்தகங்களை வீட்டிற்கும் எடுத்து சென்றார்கள். ஆனால் நான் அந்த பல்கலைக்கழகத்ததை விட்டு வெளியேறிய தினத்தில் அந்த சட்டம் விலக்கிக் கொள்ளப் பட்டதாக எனக்கு தகவல் கிடைத்தது. ஏழு அல்லது எட்டு ஆண்டுகளுக்கு பின்னர், சொற்பொழிவு ஒன்றிற்காக அந்த பல்கலைக்கழகத்திற்கு நான் சென்றேன். நான் நூலகத்திற்கு சென்றேன். அப்போதும் அந்த நூலகரே தான் அங்கு இருந்தார் ஆனால் நூலகம் யாரும் இல்லாமல் காலியாக இருந்தது. அங்கு யாருமே இல்லை. நான் அவரிடம், ''என்ன நடந்தது?'' என்று கேட்டேன்.

அதற்கு அவர், ''அந்த பேராசிரியர்கள் இப்போது வருவதில்லை. நீங்கள் இந்த பல்கலைக்கழகத்தை விட்டு சென்ற பின்னர் அந்த சட்டம் விலக்கிக் கொள்ளப்பட்டது; நீங்கள் ஏதாவது சிக்கலை உருவாக்கி விடுவீர்களோ என்ற பயத்தினால் தான் அவர்கள் வந்தனர். துணைவேந்தரும்கூட நூலகத்திற்கு வர ஆரம்பித்தார். ஆனால் இப்போது யாருமே வருவதில்லை,'' என்று கூறினார்.

மக்கள் மாயைகளை உருவாக்கி கொண்டே போகிறார்கள். அதைப் பெரிதுபடுத்துகிறார்கள், அவற்றை மிகைப்படுத்து

கிறார்கள். பேராசை தான் புத்தர்களின் தந்தை. என்று போதிதருமர் கூறுகிறார்.

மாயை மற்றும் பேராசை என்பது மரணம் என்பதற்கான வெவ்வேறு பெயர்களாக உள்ளன.

நீங்கள் மாயையில் இருக்கும்போது, இக்கரையில் இருக்கிறீர்கள். நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்கும்போது, அக்கரையில் இருக்கிறீர்கள்.

இவை இங்கே நீங்கள் மாயையில் இருக்கும்போது நீங்கள் துன்பத்தில் இருக்கிறீர்கள்; விழிப்புணர்வோடு இருக்கும் போது பேரானந்ததத்தில் இருக்கிறீர்கள் என்பதை குறியீடுகளால் கூறுகின்ற ஒருவழி மட்டுமேயாகும்.

ஆனால், உங்களது மனம் வெறுமையாக உள்ளது என்பதை நீங்கள் அறிந்து கொண்டு, தோற்றங்கள் இல்லாமையை நீங்கள் கண்டுகொண்டால், நீங்கள் மாயை மற்றும் விழிப்புணர்விற்கு அப்பால் சென்று விடுகிறீர்கள்.

ஒவ்வொரு வாக்கியத்தையும் விளக்குவது பண்டிதர்களுக்கு மிகவும் கடினம். ஒரு புத்தர் மட்டுமே இந்த வாக்குமூலங்களுக்கு விளக்கமளிக்க முடியும். உங்கள் மனமானது வெறுமையாக, காலியாக இருக்கிறது என்பதை நீங்கள் அறியும்போது, அல்லது வேறு வார்த்தைகளில் கூறவேண்டும் என்றால், நீங்கள் உங்களது மனம். அற்ற நிலையை எதிர்கொள்ளும்போது, நீங்கள் தோற்றங்களை பார்க்காதபோது, நீங்கள் மாயை மற்றும் விழிப்புணர்விற்கு அப்பால் இருக்கிறீர்கள் என்று அவர் கூறுகிறார்.

விழிப்புணர்விற்கு அப்பால் நீங்கள் இருக்கிறீர்கள் என்று கூறுகின்ற எந்த ஒரு வாக்குமூலத்தையும் நான் இதுவரை கண்டதில்லை. ஆனால் அவர் கூறுவது, பகுத்தறிவானது, தர்க்க அறிவுடன் கூடியது. உண்மையில் இருக்கின்ற ஒன்று. ஏனெனில் உங்களுக்கு நோய் என்பது இல்லாதபோது நீங்கள் உங்களோடு மருந்து மாத்திரைகளை எடுத்துக்கொண்டு செல்வீர்கள் என்று நான் நினைக்கவில்லை. நீங்கள் ஆரோக்கியம் அடைந்துவிட்ட

அந்த நொடிப்பொழுதே, உங்களது நோய் போய்விட்டபோது, உங்களிடம் மிச்சம் உள்ள மருந்து மாத்திரைகளை லையன்ஸ் கிளப்பிற்கு நீங்கள் தானமாக கொடுத்துவிடுவீர்கள். அதை வைத்துக்கொண்டு நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்? இந்த உலகத்தில் தங்களது ஸ்தாபனம் தான் மிக உயர்ந்த தர்ம ஸ்தாபனம் என்று காட்டிக்கொள்வதற்கு அவர்களுக்கு அது தேவைப்படும். அது உங்களுக்கு பயன்படாது, நீங்கள் எப்படியும் அதை வெளியில் தூக்கி எறியப்போகிறீர்கள்; அதை லையன்ஸ் கிளப்பிற்கு தானமாகக் கொடுத்து ஏன் அதனால் சந்தோஷம் அடையக்கூடாது? ஒரு நல்ல பயன். பயன்படாததை நீங்கள் லயன்ஸ் கிளப்பிற்கு தானம் செய்கிறீர்கள். லையன்ஸ் கிளப், எந்த செலவும் செய்யாமல் அதை ஏழை மக்களுக்கு கொடுத்துவிட்டு அது ஒரு தர்ம ஸ்தபானமாக ஆகிவிடுகிறது.

துன்பம் மற்றும் விழிப்புணர்வு ஆகிய இரண்டிலும் கூட அதே சூழ்நிலை தான் இருக்கிறது. மாயை என்பது இல்லை என்றாகி விடுகின்ற அந்த நொடிப்பொழுதிலேயே, அங்கு விழிப்புணர்வு ஏன் தேவைப்படுகிறது? அதற்காக நீங்கள் ஆழ்ந்த உறக்கத்தில் வீழ்ந்து விட்டீர்கள் என்று அர்த்தமாகிவிடாது. விழிப்புணர்வானது உங்களது இயல்பாக ஆகிவிடுகிறது. அந்த விழிப்புணர்வு குறித்து நீங்கள் அதன்பிறகு விழிப்புடன் இருப்பதில்லை, என்றுதான் அர்த்தமாகும்.

*மாயை மற்றும் விழிப்புணர்விற்கு அப்பால் நீங்கள் இருந்துவிடும்போது, அடுத்த கரை என்பது இருக்காது.*

அடுத்த கரையின் தேவை எதற்கு? அடுத்த கரை என்பது ஒரு அடையாளக் குறியீடு, கருத்து மட்டுமே ஆகும். இக்கரை என்பது இந்த உலகாக உள்ளது, அக்கரை என்பது சொர்க்கமாக உள்ளது. இந்த உலகமும், இந்த உலகத்தோடு கூடிய பற்றுதலும் போய்விடும்போது, சொர்க்கத்தைப் பற்றி யார் கவலைப் படுவார்கள்? நீங்கள் ஏற்கனவே அதில் இருக்கிறீர்கள். நீங்கள் எங்கிருந்தாலும் சொர்க்கத்தில் இருக்கிறீர்கள். "எங்கெல்லாம் ஒரு மெய்ஞ்ஞானம் அடைந்த மனிதர் இருக்கிறாரோ, அங்கே சொர்க்கம் உள்ளது" என்று ஒரு சூஃபி பழமொழி உள்ளது.

சொர்க்கம் என்பது உங்களது உயிர் உணர்வினுள் உள்ள ஒன்றாகும்.

*ததாகதர் என்பவர், இந்தக் கரையிலும் இருப்பதில்லை, அல்லது அடுத்த கரையிலும் இருப்பதில்லை, அவர் நீரோடையின் நடுவிலும் இருப்பதில்லை.*

இவை மட்டுமே சாத்தியப்படுபவை. ஒன்று இக்கரையில் இருக்கலாம் அல்லது அக்கரையில் இருக்கலாம் அல்லது நீரோடையின் நடுவில் இருக்கலாம். ததாகதர் இதில் எங்கும் இருப்பதில்லை. யார் ஒருவர் தன்னைப் புரிந்து கொண்டார்களோ அவர்கள் எங்கும் இருக்கிறார்கள் என்றோ அல்லது எங்கும் இல்லை என்றோ கூறமுடியும்; இரண்டுமே சமமானவை தான்.

ஆனால் இந்த கடைசி சூத்திரத்தில், போதிதருமர், அர்கதர்கள் மீது தனக்குள் வெறுப்பை நினைவுப்படுத்தி கொள்கிறார்.

*மரணிப்பவர்கள் இந்தக் கரையில் இருக்கிறார்கள்.*

*அடுத்த கரையில் அர்கதர்களும். மரணிப்பவர்களும் இருக்கின்றனர்.*

*அர்கதர்கள் அடுத்த கரைக்கு போகின்ற நீரோடையின் நடுவில் இருக்கிறார்கள். அது இல்லாத ஒன்றாகும். அவர்கள் இன்னமும் ஒரு எதிர் மாயையை சுமந்து கொண்டு இருக்கிறார்கள்.*

*மரணிப்பவர்கள் இந்தக் கரையில் உள்ளனர். அடுத்த கரையில் புத்தநிலை உள்ளது.*

ஆனால், நீங்கள் அடுத்த கரையில் இருக்கின்ற அந்த நொடிப்பொழுதிலேயே, அடுத்த கரையானது மறைந்து விடுகிறது. நீங்கள் வெறுமனே உங்களுக்கு நீங்களே ஒளியாக இருக்கிறீர்கள்.

ஆனால் அர்கதர்களை அவரால் மறக்க முடியவில்லை. அவர், அவர்களை நீரோடையின் நடுவில் வைக்கிறார். இக்கரையிலும் அல்ல, அக்கரையிலும் அல்ல, புத்தர்களும்,

போதிசத்துவர்களும் இருப்பதைப் போல அர்கதர்களும் கூட அடுத்த கரையில் இருக்கின்றனர்.

அடுத்த கரையை அவர்கள் அடைந்து விடுகின்ற அந்த நொடிப்பொழுதே; இரண்டு கரைகளும் ஒரே நேரத்தில் மறைந்து விடுகிறது. திடீரென்று அவர்கள் விழிப்புநிலை அடைந்து, அவர்கள் தங்களை இந்த முழுமையின் ஒரு அங்கமாக கண்டு கொள்கின்றனர். அவர்களின்மீது ஆசீர்வாதத்தின் மிகப்பெரிய பொழிவு வருகிறது.

போதிதருமர், அர்கதர்களுக்கு எதிரான தனது பகையை மறந்துவிட்டு, 'மனம்' என்பதற்கு பதிலாக 'மனம் அற்றநிலை' என்பதை பயன்படுத்தி இருந்தால் இந்த சூத்திரங்கள், எந்த தவறும் இல்லாமல் குறைகளற்றவையாக இருந்திருக்கும். ஆனால் இந்த இரண்டு தவறுகள் இருந்தாலும்கூட இவை மிகவுயர்ந்தவை. புரிந்து கொண்டவர்கள் யாராக இருந்தாலும், அவர்கள் இந்த இரண்டு தவறுகளையும் உங்களுக்கு தெரியும்படி செய்து விடுவார்.

எந்த ஒரு பகையையும் சுமந்து கொண்டு செல்லாதீர்கள். சாத்தியப்படும் போதெல்லாம், உண்மை நிலைக்கு மிகவும் அருகில் வருகின்ற வார்த்தையை பயன்படுத்துங்கள். மனம் என்பது தியானத்திற்கு மிகவும் நெருக்கமான வார்த்தை இல்லை. மனம் அற்றநிலை என்பதுதான் நெருக்கமான வார்த்தையாக உள்ளது.

அர்கதர்கள், போதிதருமரை வெறுப்படையச் செய்திருக்கலாம். ஏனெனில் அவர்கள் மெய்ஞ்ஞானம் அடைந்தார்கள். ஆனால் அவர்கள் மற்றவர்களைப் பற்றி ஒருபோதும் கவலைப்பட வில்லை. அவர்கள் பேசியது கூட கிடையாது. அர்கதர்களிட மிருந்து எதையும் பெறுதல் மிகவும் கடினம், ஆனால் எனது சொந்த உணர்வு என்னவென்றால், ஒவ்வொருவரும் அவரது சொந்த ஆன்மாவில் இருக்கவேண்டும். தனது சொந்த தனித் தன்மையில் இருக்கவேண்டும். தனது சொந்த தனித்துவத்தில் இருக்கவேண்டும் என்பது தான் ஆகும். அர்கதர்கள் அவர்களுக்கே உரிய தனித்துவத்தைப் பெற்றிருக்கிறார்கள்.

மெய்ஞ்ஞானம் அடைந்த பின்னர் அவர்கள் முற்றிலும் அமைதியாகி விட்டனர்.

அவர்கள் அதிக கருணையோடு இருந்திருக்க வேண்டும் என்பதுதான் போதிதருமரின் கடும் பகைமைக்கு காரணமாகும். மற்றவர்களும் மெய்ஞ்ஞானம் அடைவதற்கு அவர்கள் கண்டிப்பாக உதவ வேண்டும். ஆனால், இரண்டு பக்கத்தினரின் வாதங்களையும் நீங்கள் பார்த்தால், இருவருமே அவரவருக்கு உரிய சொந்த வழியில் சரியானவர்களாகவே இருப்பதை நீங்கள் காண்பீர்கள், ''அது அடுத்தவரின் வாழ்க்கையில் குறுக்கிடு வதாகும். அவர் மெய்ஞ்ஞானம் அடையாமல் இருப்பதற்கு விரும்பினால், அது அவரது உரிமை. அடுத்தவரின் வாழ்க்கையில் குறுக்கிடாமல் இருப்பது தான் எங்களின் கருணையாகும்,'' என்று அர்கதர்கள் கூறுகின்றனர்.

ஆனால், ''மற்றவர்கள் மெய்ஞ்ஞானம் அடைவதற்கான எல்லா முயற்சிகளையும் நாங்கள் எடுப்பதுதான் எங்களது கருணை. இதுதான் எங்களது கருணை'' என்று போதிசத்துவர்கள் கூறுகின்றனர்.

அவர்கள் இருவரும் அழகான வாதத்தை வைக்கின்றனர். அவர்கள் ஒவ்வொருவரின் வாதத்திலும் எதுவும் தவறானது அல்ல என்று நான் நினைக்கிறேன் பிரபஞ்சமானது பல பரிமாணங்களைக் கொண்டது, அது அநேக தோற்றங்களைக் கொண்டுள்ளது.

இறுதியான புரிதலை அடைந்த ஒருமனிதன், எங்கும் எந்த ஒரு முரண்பாட்டையும் காண மாட்டான். அவனது புரிதல் மற்றும் தெளிவில், எல்லா முரண்பாடுகளும் ஒன்றுக்கொன்று உதவக் கூடியதாக ஆகிவிடுகின்றன.

○

புத்தர்கள் மூன்று உடல்களைக் கொண்டுள்ளனர். ஒரு உருமாற்றமடைந்த உடல், ஒரு வெகுமதி உடல். ஒரு உண்மை உடல். உருமாற்றம் அடைந்த உடலானது மறுபிறவி உடல் என்றும் கூட அழைக்கப்படுகிறது. மரணிப்பவர்கள் நல்ல செயல்களைச் செய்யும்போது உருமாற்றமடைந்த உடல் தோன்றுகிறது; அவர்கள் ஞானத்தை பேணிவளர்க்கும் போது வெகுமதி உடலும், உயர்நிலை குறித்து அவர்கள் விழிப்புணர்வு கொண்டவர்களாக ஆகும்போது உண்மை உடலும் தோன்றுகிறது. ஆனால் உணமையில், மூன்று உடல்களுக்கும் குறைவாக ஒரே ஒரு புத்த உடல் கூட கிடையாது. மூன்று உடல்கள் பற்றிய இந்தப் பேச்சானது வெறுமனே மனிதனின் புரிதலை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. அந்தப்புரிதல், ஆழமற்றதாக, நடுநிலை யானதாக அல்லது ஆழமானதாக இருக்கமுடியும்.

ஆழமற்ற புரிதல் உள்ள மக்கள் தாங்கள் வரங்களைக் குவித்துக் கொண்டிருப்பதாக கற்பனை செய்கிறார்கள். தங்களின் உருமாற்றமடைந்த உடலை அவர்கள் புத்தர் என்று தவறாக எடுத்துக் கொள்கிறார்கள். நடுநிலையான புரிதல் கொண்ட மக்கள், தாங்கள் துன்பத்திற்கு முடிவு கட்டிவிட்டதாக கற்பனை செய்கின்றனர். தங்களின் வெகுமதி உடலை புத்தர் என்று தவறாக எண்ணிக் கொள்கிறார்கள். ஆழ்ந்த புரிதல் உள்ள மக்கள் தாங்கள் புத்தநிலையை அனுபவிப்பதாக கற்பனை செய்கிறார்கள். உண்மை உடலை புத்தர் என்று தவறாக நினைத்துக் கொள்கிறார்கள். ஆனால் மிகவும் ஆழ்ந்த புரிதல் உள்ள மக்கள் எதனாலும், கவனம் சிதறாமல் தங்களுக்குள் உற்றுப்

பார்க்கிறார்கள். ஆகவே ஒரு தெளிவான மனம் தான் புத்தர், அவர்கள் ஒரு புத்தரின் புரிதலை தங்களின் மனதைப் பயன்படுத்தாமலேயே அடைகின்றனர்.

தனிமனிதர்கள் கர்மாவை உருவாக்குகிறார்கள். கர்மா தனிமனிதர்களை உருவாக்குவதில்லை. இந்தப் பிறவியில் குறைகளற்றத் தன்மை கர்மா எதையும் உருவாக்காமல், எந்த ஒரு வெகுமதியும் பெறாமல் யார் ஒருவர் இருக்கிறாரோ அவர் மட்டுமே கர்மத்தை அடைகிறார். ''கர்மாவை யார் உருவாக்குவதில்லையோ அவர் கர்மத்தை அடைகிறார்'' என்று இந்த சூத்திரங்கள் கூறுகின்றன. நீங்கள் கர்மாவை உருவாக்கும்போது, நீங்கள் உங்களது கர்மாவோடு மறுபிறவி எடுக்கிறீர்கள். நீங்கள் கர்மாவை உருவாக்காதபோது, நீங்கள் உங்களது கர்மாவோடு மறைந்து விடுகிறீர்கள். ஒரு ஞானியின் போதனையைப் புரிந்து கொள்கின்ற ஒருவர் ஞானியாக இருக்கிறார். மரணமடைபவர்களின் போதனைகளை புரிந்து கொள்கிற ஒருவர் ஒரு மரணிப்பவராக இருக்கிறார். மரணம் அடைகின்ற ஒருவர் மரணிப்பவரின் போதனைகளை விட்டு விட்டு ஞானிகளின் போதனைகளைப் பின்பற்றும்போது அவர் ஒரு ஞானியாக ஆகிறார். ஆனால் இந்த உலகின் முட்டாள்கள் வெகு தொலைவில் உள்ள ஆழ்ந்த அறிவுடையவற்றவர்களை பார்ப்பதற்கே முன்னுரிமை அளிக்கின்றனர். தங்களது சொந்த மனதின் ஞானம் தான் ஞானியாக இருக்கிறது என்பதை அவர்கள் நம்புவதில்லை. ''புரிதல் இல்லாத மனிதர்களுக்கும் மத்தியில், இந்த சூத்திரத்தை போதிக்காதீர்கள்'' என்று இந்த சூத்திரங்கள் கூறுகின்றன. ''எல்லாத் தோற்றங்களும், தோற்றங்கள் அல்ல என்று நீங்கள் கண்டு கொள்ளும்போது, நீங்கள் ததாகதரைப் பார்க்கிறீர்கள்'' என்று சூத்திரங்கள் கூறுகின்றன.

சத்தியத்திற்கான மிகப்பல வாசல்கள் எல்லாம் மனதில் இருந்துதான் வருகின்றன. மனதின் தோற்றங்களானது பரந்த வெளி போன்று தெள்ளத்தெளிவாக இருக்கும்போது, அவை போய்விடுகின்றன...........

*மரணிப்பவர்கள் உயிரோடு இருக்கும்போது, அவர்கள் மரணம் பற்றி கவலைப்படுகின்றனர். அவர்கள் நிறைந்து இருக்கும்போது, அவர்கள் பசி குறித்து கவலைப்படுகின்றனர். அவர்களுடையதுதான் மிகப்பெரிய நிச்சயமற்ற நிலையாக இருக்கிறது. ஆனால் ஞானிகள் கடந்த காலத்தை நினைத்து பார்ப்பதில்லை. அவர்கள் எதிர்காலம் பற்றி கவலைப்படுவ தில்லை. அல்லது அவர்கள் நிகழ்காலத்தையும் கூட பிடித்து தொங்கிக் கொண்டிருப்பதில்லை. நொடிக்கு நொடி அவர்கள் வழியைப் பின்பற்றுகின்றனர்.*

போதிதருமர், முதல்முறையாக, இந்த சூத்திரங்களில், மெய்ஞ்ஞானம் அடையமுடியாத மக்களையும், அவரை தவறாகப் புரிந்துகொள்ளக்கூடிய மக்களையும் பார்க்கிறார். ஆனால் தான் அவர் சாதாரண, மெய்ஞ்ஞானம் அடையாத மனதின் சாத்தியங்களைப் பற்றியும், அது விஷயங்களை எப்படி பார்க்கிறது என்பது பற்றியும் பேசுகிறார். அவராகவே இதைப்பற்றி பேசுகிறார். அப்போதுதான், இந்த மனதின் புரிதல்கள் எப்படிப்பட்டவை என்பதை அவர்கள் தெளிவாக்க முடியும். மனதின் புரிதலானது ஆழமற்றதாகவோ, அல்லது ஆழமான தாகவோ அல்லது மிகவும் ஆழமானதாகவும் இருந்தாலும்கூட அவை எல்லாம் தவறானவை என்பதை தெளிவாக்க முடியும்.

இது மிகவும் அபூர்வமானது, ஏனெனில் தனது சொற் பொழிவுகளை கேட்கவருகின்ற மக்கள் எப்படி இருப்பார்கள் என்று அவர் ஒருபோதும் சிந்திக்கவில்லை. அவர் சத்தியத்தைப் பற்றி மட்டுமே நினைத்தார். ஆகவே தனது போதனைகளை யார் கேட்கிறார்கள் அல்லது யார் படிக்கிறார்கள் என்பதைப் பற்றி எந்த எண்ணமும் இல்லாமல் அவர் அதைப்பற்றி பேசினார். இது அவரது கருணையின் ஒருபகுதி; இதுதான் அர்கதர்களையும், போதிசத்துவர்களையும் தனியாக பிரிக்கின்ற பகுதியாகும்.

அர்கதர்கள் ஒருபோதும் மற்றவர்களைப் பற்றி நினைப்ப தில்லை. அவர்கள் பேசினாலும் கூட, அவர்கள் வெறுமனே தங்களுக்காகவே பேசிக்கொண்டார்கள். அநேகமாக அவர்கள் அமைதியாகவே இருந்தார்கள். அவர்கள் மற்றவர்கள்மீது மிகுந்த

மரியாதை வைத்திருந்தனர். ஆனால் இறுதியானதைப் பற்றி அவர்களிடம் பேசுவது, அவர்களின் சாதாரணத் தன்மையை கலைப்பதாகிவிடும் என்பதை அவர்கள் அறிவார்கள். அது அவர்களின் சொந்த நன்மைக்குத்தான் என்றாலும்கூட, அது அவர்களின் சாதாரண மனதிற்கு ஒரு குறுக்கீடாக இருக்கிறது. ஆனால் அவர்கள் அதைக் கேட்கவில்லை, அவர்கள் சத்தியத்தை வரவேற்காத வரையில், சத்தியமானது அவர்களின் கதவைத் தட்டப்போவது கிடையாது.

சத்தியம் என்பது கிட்டத்தட்ட காலைக் கதிரவனைப் போன்றது. அது எழுகிறது, ''நான் இங்கு இருக்கிறேன். இரவு முடிந்துவிட்டது எனவே நீங்கள் விழித்தெழுங்கள்'' என்று கூறிக்கொண்டு அது உங்களது கதவுகளைத் தட்டுவதில்லை. அந்தக் கதிரவன், ஒவ்வொரு பறவையின் கூட்டிற்கும் சென்று அவற்றிடம், ''நான் வந்துவிட்டேன். இப்போது நீங்கள் பாடவேண்டிய நேரமிது'' என்று கூறுவதில்லை. அல்லது அது ஒவ்வொரு மலரிடமும் சென்று அவற்றின் இதழ்களைத் திறந்து அதன் நறுமணத்தை வெளியிடுவது கிடையாது, அது வெறுமனே வருகிறது. அதைப் பெறக்கூடியவர்கள் பெறுவார்கள். விழித்துக் கொண்டவர்கள், காலை நேரம் வந்துவிட்டது என்பதை அறிந்து கொள்வார்கள். ஆனால் ஆழ்ந்த தூக்கத்தில் இருப்பவர்கள் அவர்களின் கனவுகளிலும்கூட இரவு முடிந்துவிட்டது என்பதை அறிந்து கொள்ள மாட்டார்கள். ஆனால் சூரியன் அதில் குறுக்கிடுவதில்லை.

அர்கதர்களின் புரிதலின்படி கருணை என்பதற்கு குறுக்கிடாமல் இருத்தல், அத்துமீறி நுழையாது இருத்தல் என்று அர்த்தம். நீங்கள் யாரிடம் அத்துமீறி நுழைகிறீர்களோ, அவர்களின் நன்மைக்காக அத்துமீறி நுழைந்தாலும் கூட அது கருணை ஆகாது. அத்துமீறுதல் என்பதே தனிமனிதர்களின் மரியாதைக்கு எதிரானது. அது மனதில் வெறுப்பை உண்டாக்குவ தாகும். யாரோ ஒருவரிடம், ''நீங்கள் ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கிறீர்கள்'' என்று நீங்கள் கூறுவதற்கு, நீங்கள் உங்களை ஒரு உயர்ந்த இடத்தில வைத்துக்கொள்கிறீர்கள் என்று அர்த்தமாகும். ''நான் விழித்தெழுந்துவிட்டேன், நீங்கள் ஆழ்ந்து

தூங்குகிறீர்கள்,'' என்று நீங்கள் கூறுகிறீர்கள். ''உங்களை விடவும் நான் புனிதமானவன், உங்களை விடவும் உயர்ந்தவன்: நான் பேருணர்வின் இறுதி சிகரத்தை அடைந்துவிட்டேன். ஆனால் நீங்களோ இன்னமும் இருட்டு உலகில், எல்லா இடங்களிலும் துழாவிக்கொண்டு, கால் தடுக்கிவிழுந்து கொண்டு, வெளியே வருவதற்கு வழிதெரியாமல், சுற்றிக்கொண்டு இருக்கிறீர்கள்,'' என்று கூறுகிறீர்கள்.

யாருக்காவது புத்திமதி கூறுவதும்கூட, ''எனக்கு தெரியும் ஆனால் உனக்கு தெரியவில்லை,'' என்கிற குறிப்பிட்ட நிலைப்பாட்டை எடுப்பதாகும். இப்படி செய்வது கருணைக்கு எதிரானது. இது உயிர்களின் மீதான மரியாதைக்கு எதிரானது, என்பது அர்கதர்களின் நிலைப்பாடாகும். அதனால் தான் அவர்கள் அமைதியாக இருந்துவிட்டனர். அவர்கள் இருப்பதை உணர்ந்து கொண்டு. யாராவது தானாகவே அவர்களிடம் நெருங்கிவந்து அவர்களின் அனுபவத்தின் ஜீவ நீரை பருக விரும்பினால், அவர்களுக்கு அர்கதர்கள் கிடைப்பார்கள். அவர்களது செயலானது வெறுமனே ஒரு நதி ஓடிக்கொண்டு இருப்பது போன்றது. நீங்கள் உங்களது தாகத்தை தணித்துக் கொள்ளலாம். ஆனால் அது முற்றிலும் உங்களைப் பொருத்தது; நதியானது அதனுடைய பங்கிற்காக எதையும் செய்யாது. இது ஒரு அழகான அணுகுமுறை. ஆனால், போதிதருமர் சார்ந்துள்ள போதிசத்வர்களின் அணுகுமுறையும் கூட அதற்கே உரித்தான அழகினைக் கொண்டுள்ளது.

பத்துலட்சம் பேரில், ஒருவேளை ஒருவர் மட்டுமே போதிசத்வர்களைப் புரிந்து கொள்ளலாம். மீதி உள்ளவர்கள் கண்டு கொள்ளாமல் இருக்கலாம் அல்லது அதிகபட்சம் தவறாகப் புரிந்து கொள்ளலாம், என்பதை நன்றாக அறிந்து கொண்ட போதும்கூட போதிசத்வர்கள், மக்களை விழிப்படையச் செய்வதற்குரிய எல்லா முயற்சிகளையும்; செய்கின்றனர். சத்தியத்தைப் பற்றி பேசுவது என்பது, இந்த உலகில், பகைவர்களை உருவாக்குவதற்கான குறுக்கு வழி என்பதை போதிசத்துவர்கள் முற்றிலும் நன்றாக அறிவார்கள்; ஏனெனில் இந்த ஒட்டுமொத்த உலகமும் பொய்களால் நிறைந்து உள்ளது.

மக்கள்மீது கொண்டுள்ள ஆர்வம் எல்லாம் பொய்களை அடிப்படையாக கொண்டது. மதங்கள் என்று அழைக்கப் படுபவை, நாடுகள் என்று அழைக்கப்படுபவை எல்லாம், வஞ்சக மனங்களினால் உருவாக்கப்பட்டதாகவே இருக்கிறது.

உண்மையில் மதப்பற்றுள்ள ஒரு மனிதன் எந்த ஒரு மதத்தையும் சார்ந்தவன் அல்லன், எந்த ஒரு நாட்டையும், இனத்தையும், நிறத்தையும் சார்ந்தவன் அல்லன். அவன் இந்த ஒட்டுமொத்த மனித இனத்திற்கும் சொந்தமானவன். எல்லா நாடுகளும் அவனுடையதுதான். வஞ்சகம் நிறைந்த, அசிங்கமான அரசியல்வாதிகளால் உருவாக்கப்பட்ட அரசியல் எல்லைகளை அவன் நம்புவதில்லை. பாதிரியார்களால், போப்பாண்ட வர்களால், ஆர்ச் பிஷப்களால், சங்கராச்சாரியார்களால், யூதமத குருக்களால் உருவாக்கப்பட்ட வேறுபாடுகளையும் அவன் நம்புவதில்லை. ஒவ்வொரு மனிதனும், தெய்விக இயல் புடையவன். ஒவ்வொரு மனிதனும் ஒரு தாமரை மலர்போல வளர்வதற்கான சக்தியோடு இருக்கிறான் என்பதை அவன் நம்புகிறான். முடிவில்லா காலத்திற்கு சொந்தமான தாமரைமலர் என்றும், எப்போதும் வந்து கொண்டிருக்கிற நறுமணம் ஒருபோதும் போகாதது என்றும் அவன் ஒவ்வொரு மனிதனையும் நம்புகிறான்.

இதை எல்லாம் அறிந்துகொண்டு, போதிசத்வர் இன்னமும் எல்லா முயற்சிகளையும் செய்கிறார்; அவர் சிலுவையில் அறையப்பட்டாலும்கூட கவலை இல்லை என்று நினைக்கிறார். இயேசு ஒரு போதிசத்வராக இருக்கிறார், சாக்ரட்டீசும் அதுபோன்று போதிசத்வர்தான், அல் ஹிலாஜ் மன்சூரும் கூட போதிசத்வர்தான். எங்காவது, யாராவது ஒருவர் தனது தூக்கத்தில் இருந்து வெளியேவந்து விழிப்புணர்வு அடைவதற்கு உதவமுடியும் என்றால், சிலுவையில் அறையப்படுவதாக இருந்தாலும் கூட அது ஒரு பெரிய விஷயம் ஆகாது. இந்த ஒட்டுமொத்த உலகில் இருந்தும் வருகின்ற கண்டனங்களை ஒரு போதிசத்வர் ஏற்றுக் கொள்ள தயாராக இருக்கிறார். ஆனால் அவரால் அமைதியாகவும், அனுபவத்தை பகிர்ந்து கொள்ளாமலும் இருக்கமுடியாது. அவருக்கு அது சாத்தியப்படாது.

என்னைப் பொறுத்தமட்டில் இரண்டுமே முற்றிலும் சரியானது தான். இதில் முரண்பாடு கிடையாது. இவை, ஒரே விஷயத்தின் இரண்டு பக்கங்களைக் குறிக்கின்றன. அவர்களது கருணையின் வெளிப்பாடு வேறுபட்டது. ஆனால் அது கருணையின் வெளிப்பாடாகத் தானே இருக்கிறது. இருவருமே அதை தங்களுக்கே உரித்தன வழியில் வெளிப்படுத்திக் கொண்டு இருக்கிறார்கள்.

இனி சூத்திரம் :

புத்தர்கள் மூன்று உடல்களைக் கொண்டுள்ளனர். ஒரு உருமாற்ற உடல், ஒரு வெகுமதிஉடல், ஒரு உண்மை உடல். உருமாற்றம் அடைந்த உடலானது மறுபிறவி உடல் என்றும் கூட அழைக்கப்படுகிறது. மரணிப்பவர்கள் நல்ல செயல்களைச் செய்யும்போது, உருமாற்றமடைந்த உடல் தோன்றுகிறது. அவர்கள் ஞானத்தை பேணி வளர்க்கும்போது வெகுமதிஉடலும், உயர்நிலை குறித்து அவர்கள் விழிப்புணர்வு நிறைந்தவர்களாக ஆகும்போது உண்மை உடலும் தோன்றுகிறது. ஆனால் மூன்று உடல்களுக்கும் குறைவாக ஒரே ஒரு புத்த உடல் கூட கிடையாது. மூன்று உடல்கள் பற்றிய இந்த பேச்சானது, வெறுமனே மனிதனின் புரிதலை அடிப்படையாக கொண்டிருக்கிறது. அந்த புரிதல், ஆழமற்றதாக, நடுநிலை யானதாக, அல்லது மிக ஆழமானதாக இருக்க முடியும்.

ஆழமற்ற புரிதல் உள்ள மக்கள், தாங்கள் வரங்களைக் குவித்துக் கொண்டு இருப்பதாக கற்பனை செய்கிறார்கள். தங்களின் உருமாற்றம் அடைந்த உடலை, புத்தர் என்று தவறாக எடுத்துக்கொள்கிறார்கள். நடுநிலையான புரிதல் கொண்ட மக்கள், தாங்கள் துன்பத்திற்கு முடிவு கட்டிவிட்டதாக கற்பனை செய்கின்றனர். தங்களின் வெகுமதி உடலை புத்தர் என்று தவறாக எண்ணிக் கொள்கிறார்கள். ஆழ்ந்த புரிதல் உள்ள மக்கள், தாங்கள் புத்தநிலையை அனுபவிப்பதாக கற்பனை செய்கின்றனர். உண்மை உடலை புத்தர் என்று தவறாக நினைத்துக் கொள்கிறார்கள்.

இதற்கு சில விளக்கங்கள் தேவைப்படுகிறது. உங்கள் எதிரில் ஒரு கௌதமபுத்தர் வந்தாலும் கூட நீங்கள் அவரை அடையாளம் கண்டுகொள்ளாமல் போகின்ற சாத்தியங்கள் உள்ளன; ஏனெனில் ஒரு புத்தரை ஒரு விழிப்படைந்த மனிதரை அடையாளம் கண்டு கொள்வதற்கு உங்கள் பங்கிற்கு கொஞ்சம் அகப்பார்வை தேவைப்படுகிறது. உங்களையும், உங்களது புரிதலையும் பொறுத்து அது உள்ளது. விழிப்பணர்வு அடைந்த ஒருவரைப்பற்றி நீங்கள் எந்தவிதமான புரிதலும் இல்லாமல் இருந்தால், நீங்கள் அவருக்கு அருகில் கடந்து செல்வீர்கள். ஆனால் உங்களால் எதையும் உணரமுடியாது. நீங்கள் மூடப்பட்டு இருப்பீர்கள். சூரியன் அங்கு உள்ளது. ஆனால் உங்களது கதவு மற்றும் ஜன்னல்கள் மூடப்பட்டு இருக்கின்றன. சூரியன் அங்கு இருக்கிறது. ஆனால் நீங்கள் அங்கு கண்களை மூடிக்கொண்டு இருப்பீர்கள்.

முதலில் அடையாளம் கண்டுகொள்வது, தங்களது சிறிய புரிதலின்படி நல்லவற்றைச் செய்வதற்கு முயற்சி செய்கின்ற மக்களிடம் இருந்து வருகிறது. அவர்கள் என்ன உணர்ந்தாலும் அதாவது மனித இனத்திற்கு உதவுவது, விலங்குகளுக்கு உதவுவது, இப்படி அவர்கள் எதைச் செய்தாலும், அவர்கள் இந்த பிரபஞ்சத்தை அழகுபடுத்துகின்ற ஏதோ ஒன்றினைச் செய்வதற்கு முயற்சி செய்து கொண்டு இருக்கின்றனர். அவர்கள் வெறுமனே இந்த பூமிக்கு ஒரு பாரமாக இருப்பதற்கு விரும்புவதில்லை. அவர்கள் ஏதாவது பங்களிப்பு செய்ய விரும்புகின்றனர்; அவர்கள் இந்த பூமிக்கு வந்தபோது கண்டதை விடவும் இந்த உலகிற்கு கொஞ்சம் சிறப்பானதை விட்டுச்செல்ல விரும்புகின்றனர்.

இத்தகைய மக்கள் புத்தரின் முதல் உடலை, உருமாற்ற மடைந்த உடலைக் காண்பார்கள். புத்தரைச் சுற்றிலும் ஒரு ஒளிவட்டம் இருப்பதை அவர்கள் காண்பார்கள். நீங்கள், இயேசு, கிருஷ்ணர், புத்தர் ஆகியவர்களைச் சுற்றிலும் தலைப்பகுதியில் ஒரு ஒளிவட்டம் இருப்பதை நீங்கள் படங்களில் பார்த்திருப் பீர்கள். அது உண்மையான விஷயம். இப்போது அதற்கு ஆதரவாக அறிவியல்பூர்வமான அடிப்படையும் இருக்கிறது.

சோவியத் யூனியனில், கிர்லியான் என்கிற மிக உயர்ந்த விஞ்ஞானி மற்றும் தத்துவமேதையானவர், ஒரு தனிச்சிறப்புடைய கேமராவையும், சிறப்பாக படம் எடுக்கக்கூடிய படச்சுருள் களையும் கண்டுபிடித்தார். அந்த புகைப்படக் கருவியானது. உங்கள் கண்களால் பார்க்க முடியாததை அவை பார்க்கும் அளவுக்கு சிறப்பு வாய்ந்தவை. அவரது முதல் அனுபவமே அளவுகடந்த ஆச்சரியம் நிறைந்ததாக இருந்தது. ஏனெனில் அவரது படங்கள் ஒவ்வொருவரைச் சுற்றியும் ஒளி வட்டங்களைக் காட்டியது. மனிதர்களைச் சுற்றி மட்டும் அல்ல, ஆனால் விலங்குகள் மரங்கள் மற்றும் ஒரு ரோஜா மலரைச் சுற்றியும் கூட ஒளிவட்டம் இருந்தது. படத்தில் ரோஜா மலரும் இருக்கும். அதன் அருகில் ஒரு சிறிய ஒளிவட்டமும் இருக்கும்.

ஒருமனிதன் எந்த அளவுக்கு மிகுந்த அமைதியுடன், சாந்தமாக இருக்கிறானோ அந்த அளவுக்கு அவனது ஒளிவட்டம் மிகவும் பெரியதாக இருப்பதை அறிந்து ஆச்சரியப்பட்டார். ஒருமனிதன் அதிக கோபம், கவலை, சோகம், துன்பம் ஆகியவற்றில் இருந்தால் அவனது ஒளிவட்டம் சிறியதாக இருந்தது. ஒரு மனிதன் இறக்கும்போது, ஆறு மாதத்திற்கு முன்பு, அந்த ஒளிவட்டம் முழுவதுமாக மறைந்துவிட்டது; அதன்பின்னர் அந்த மனிதரது புகைப்படங்கள் எந்த ஒளிவட்டமும் இல்லாமல், வெறுமனே சாதாரண புகைப்படங்கள் போன்று இருந்தது.

இப்படி கிர்லியானின் புலன் உணர்வு மிகுந்த படச்சுருள்கள் அதை புகைப்படம் எடுத்தது போன்று, புலன் உணர்வு மிகுந்த மக்களாலும் கூட இந்த ஒளி உடல் காணப்பட்டது. இயேசுவிடம் இருந்த புலன் உணர்வு மிகுந்த சீடர்கள், மற்றவர்கள் இயேசுவிடம் காணமுடியாத சிலவற்றை காண்பார்கள். கௌதமபுத்தரோடு ஆழ்ந்த நேசத்தோடு வாழ்ந்த புலன் உணர்வு மிகுந்த சீடர்கள், அவரது ஆசீர்வாதத்தால் பொழியப்பட்ட சீடர்கள், அவரது உயிர் உணர்வில் முழுவதும் மூழ்கிய சீடர்கள், ஒரு சாதாரண பார்வையாளர் காணமுடியாததை. அந்த சீடர்கள் காண்பார்கள். அவர்கள் அதிகம் ஏற்றுக்கொள்பவராக ஆகிவிடும் போது, அதிக புலன் உணர்வு மிக்கவராக ஆகிவிடும்போது

புத்தரின் உண்மை நிலையானது அவர்களுக்கு அதிக தெளிவாகத் தெரிகிறது.

முதல் அனுபவமானது உருமாற்றம் அடைந்த உடலாக இருக்கிறது: ஒரு மெல்லிய ஒளிஉடல், உங்களது உடலை விடவும் வெறுமனே நான்கு அங்குலம் பெரிதான ஒரு உடல் அதாவது உங்களது உடலைச்சுற்றிலும் ஒரு நான்கு அங்குல ஒளி வட்டம், மிகவும் மென்மையான ஒளி தெரிகிறது. இந்த உடல்தான் இறந்தபிறகு மற்றொரு உடலில் பிறக்கிறது. அதனால்தான், இறப்பதற்கு முன்பு, கிர்லியான் கண்டுபிடித்ததைப் போன்று, ஆறுமாதங்களுக்கு முன்பு இந்த உடல் மறைய ஆரம்பிக்கிறது. அது மனிதனின் உயிர் உணர்விற்குள் மேலும் சுருக்கமடைந்ததாக ஆகிவிடுகிறது. அப்படி மிகப்பெரிய ஒளி உடலாக இருந்தது. மையத்திற்கு வெறுமனே ஒரு ஒளிப்புள்ளியாக திரும்பி வருவதற்கு ஆறு மாதங்கள் எடுத்துக் கொள்கிறது. எனவே இந்த சிறிய புள்ளி போன்ற ஒளியானது இறந்த உடலை விட்டு வெளியேறுகிறது. ஆனால் உங்களது ஒட்டுமொத்த உடலும் இங்கே இருக்கிறது.

விஞ்ஞானிகள், ஒரு மனிதன் இறப்பதற்கு ஒரு நொடிப் பொழுதிற்கு முன்னால் அவரது உடலை எடை பார்த்துவிட்டு அதன்பின்னர் அவன் இறந்த பின்னர் அடுத்தநொடியே அவனது உடலின் எடையை அளந்துபார்த்துவிட்டு அவனது உடல் அதே எடையுடன், முற்றிலும் அதே எடையுடன் இருப்பதை வைத்து, ஆன்மா என்பது இல்லை என்று நிரூபிப்பதற்கு முயற்சி செய்தனர். இயற்கையில் எதுவும் உடலைவிட்டு வெளியே போகவில்லை என்பது அவர்களின் முடிவாகும்; எனவே ஆன்மா என்பது இல்லை என்றனர். ஏதாவது ஒன்று உடலைவிட்டு வெளியேறினால் அதன் பின்னர் இறந்தவரின் எடை குறைவாக இருக்கவேண்டும். ஆனால் இப்போது அந்த விஞ்ஞானிகளிடம், இறந்த உடலை விட்டு வெளியேறும் ஒளிக்கு எடை கிடையாது என்று கூறமுடியும்; அதனால் தான் ஒரு ஒளிப்புள்ளியானது இறந்தஉடலை விட்டு வெளியேறுவது, உங்களது எடைபார்க்கும் கருவிகளில் எந்த ஒரு வேறுபாட்டையும் ஏற்படுத்துவதில்லை.

ஒளி என்பது முற்றிலும் எடையற்றது. இறந்த உடலை விட்டு வெளியேறும் உடலானது தூய்மையான ஒளியை விடவும் வேறு எதுவும் கிடையாது. ஆழம் குறைந்த புரிதல் உள்ள மக்களாலும் கூட இது அனுபவிக்கப்படுகிறது. அதிகம் புரிந்துகொள்ளாமல், ஆனால் இன்னமும் கொஞ்சம் தன் உணர்வு உள்ள மக்கள், மிகவும் ஆழம்குறைந்த தன்னுணர்வு உள்ள மக்கள், இந்த ஒளியைக் காணமுடியும்.

ஆனால், நடுநிலையான புரிதல் உள்ள மக்களால், இந்த மெல்லிய ஒளி அடுக்கின் பின்னால் உள்ள, பௌத்த புனித நூல்களில் வெகுமதி உடல் (Rewared Body) என்கிற ஒரு தடித்த ஒளி அடுக்கினை அறிந்து கொள்ள முடியும். ஒருவர் நிறைய தியானம் செய்து, அவர் அளவுகடந்த வெகுமதியை சம்பாதிக்கும் போது மட்டுமே அந்த அறிதல் எழுகிறது. இந்த உலகில், மிகப்பெரிய பொக்கிஷம், மிகப்பெரிய வெகுமதி என்பது மௌனமாக இருக்க கற்றுக் கொள்வதாகும். முற்றிலும் அமைதியாக இருப்பதாகும். இது ஒரு அமைதி உடல் ஆனால் கௌதம புத்தருக்கு மிக அருகில் வருகின்ற ஒருவரால் மட்டுமே பார்ப்பதற்கு சாத்தியப்படும்.

நான் எப்போதுமே மக்களை மூன்று வகையாளராக பிரித்திருக்கிறேன். முதல் வகை விழிப்புணர்வு ஒருவரிடம் வருகின்ற மாணவன். அந்த மாணவன், உருமாற்றமடைந்த உடலை, முதல் உடலை பார்க்கின்ற திறமை பெற்றவனாக இருக்கிறான்.

இரண்டாவது வகை சீடன். இவன் புத்தருடனோ அல்லது ஒரு விழிப்புநிலை அடைந்த மனிதருடனோ, வெறும் ஆர்வக் கோளாறினால் இல்லாமல், அதாவது தனது அறிவாற்றலைப் பெருக்கிக் கொள்வதற்கு அல்லாமல், ஆனால் அவன் அதே இடத்திற்கு, அதே பேரானந்த நிலைக்கு, அதே வரப்பிரசாதத்திற்கு வருவதற்கு தானாகவே விரும்புகின்றவன். ஒரு மாணவனில் இருந்து சீடன் என்பவன் கொஞ்சம் தூரம்முன்னேறி வந்து விடுகிறான். மாணவன் நிலையில் உள்ளவன், மேலும்மேலும்

தகவல்களை சேகரிப்பதிலேயே அதிக ஆர்வம் கொண்டவனாக இருக்கிறான்; சீடன், என்பவன் தகவல்களில் ஆர்வத்துடன் இருப்பதில்லை, அவன் உருமாற்றத்தில் ஆர்வமுடன் இருக்கிறான். அவன் ஒரு வேறுபட்ட உயிராக மாற விரும்புகிறான். மனதிற்கு அப்பால் இருக்கின்ற ஒரு உயிராக மாற விரும்புகிறான். அவன், இரண்டாவது உடலை, வெகுமதி உடலை காண்கின்ற திறமை படைத்தவனாக இருக்கிறான்.

இந்த வெகுமதி உடல் என்பது உண்மையில், இந்த பிரபஞ்சமானது உங்களது தியானத்தை, உங்களது அமைதி நிலையை அடையாளம் கண்டு கொள்வதாகும். உங்கள்மீது பூ மழை தூவுவதாகும். இந்த இயற்கையானது ஒருவர் மெய்ஞ் ஞானி ஆகும்போது அளவுகடந்த சந்தோஷம் அடைகிறது. ஏனெனில் ஒரு மனிதனின் மெய்ஞ்ஞானமானது, உண்மையில் அநேக மனிதர்களின் மெய்ஞ்ஞானத்தை தூண்டுவதாக இருக்கிறது. பல நூற்றாண்டுகளாக தொடர்கின்ற, ஒரு சங்கிலித் தொடராக ஆகமுடியும். உதாரணமாக கௌதமபுத்தரின் மெய்ஞ்ஞானத்தால் தூண்டப்பட்டது இன்னமும் மக்களை மெய்ஞ்ஞானத்தில் தூண்டிக் கொண்டு இருக்கிறது. இருபத்து ஐந்து நூற்றாண்டுகள் கடந்துவிட்டது. ஆனால் சங்கிலித் தொடர் தொடர்கிறது. இது ஒரு சங்கிலித் தொடர் விளைவாகும்.

இந்த உலகில் இன்னமும் உயிரோடு இருக்கின்ற மிகச் சில மதங்கள் உள்ளன. ஜென் இன்னமும் உயிருடன் இருக்கிறது. கௌதம புத்தரின் சமகாலத்தவர் என்று அழைக்கப்படுகின்ற மக்கள் இன்னமும் இருக்கின்றனர்; அவர்கள் மிகவும் ஆழமாக கௌதம புத்தருடன் தொடர்புடன் இருப்பதால் நீங்கள் அவர்களை காலம் மற்றும் இடம் ஆகியவற்றால் பிரிக்க முடியாது.

முகமதிய மதத்தில், சூஃபிக்கள் எனப்படும் ஒரு சிறிய பள்ளி மட்டுமே உயிருடன் இருக்கும் பகுதியாக இருக்கிறது; அந்த மதத்தின் மீதியுள்ளவை எல்லாம் ஒட்டுமொத்தமாக உயிரற்று போய்விட்டன. ஆனால் சூஃபியிஸம் மட்டும் சங்கிலித் தொடர்விளைவுகளை இன்னமும் தொடர்ந்து கொண்டிருக்கிறது.

இன்னமும் அதில் விழிப்புநிலை அடைந்த மக்கள் இருக்கிறார்கள்.

யூதமதத்தில், ஹாசித்கள் என்கின்ற ஒருசிறிய குழுவைத் தவிர ஒட்டுமொத்த மதமும் உயிரற்று போய்விட்டது. அந்த ஹாசித்கள் பல நூற்றாண்டுகளாக ஒளி விளக்கை ஏந்திக்கொண்டு இருக்கிறார்கள். அவர்கள் இன்னமும் கூட மேலும்மேலும் மெய்ஞ்ஞானிகளை உருவாக்கிக் கொண்டு இருக்கிறார்கள்.

ஆச்சரியப்படும்படியாக, இந்துமதமும், கிறிஸ்தவ மதமும் முற்றிலும் உயிரற்ற மதங்களாக இருக்கின்றன. அவற்றிடம் உயிருள்ள குருமார்களின் ஒரு சிறிய கூட்டம் கூட இல்லை. ஆனால் அவை மிகவும் முக்கியமான மதங்கள், இந்துமதமானது இந்த உலகிலேயே மிகவும் பழைய மதம். கிறிஸ்தவ மதம் உலகிலேயே மிகப்பெரிய மதமாக இருக்கிறது. ஆனால் இரண்டுமே முற்றிலும் உயிரற்று இருக்கின்றன. அவை மனித இனத்தின் மீது அசிங்கமான ஒரு சுமையாக உள்ளன. அவர்களின் தோட்டங்களில் எதுவுமே மலர்வதில்லை. தனது நறுமணத்தை பரப்புவதற்கு எந்த ஒரு மலரும் மலர்வதில்லை. அவை ஒளிச்சுடர் இல்லாத விளக்குகளாக இருக்கின்றன.

போதிதருமர் போன்று அதே மட்டத்தில் உள்ள டயோஜெனஸ் பற்றி இப்படி கூறப்பட்டுள்ளது. அவர்கள் இருவரும் சந்தித்தால், அது ஒரு மிகப்பெரிய சந்திப்பாக இருக்கும். டயோஜெனஸ் கிரீஸ் நாட்டில் இருந்தார். அவர் ஆடைகளின்றி நிர்வாணமாக வாழ்ந்தார்; அவர் அழகான தொடு உடலைப் பெற்றிருந்தார். எனவே அதை ஆடைகளின் பின்னால் மறைப்பது ஒரு குற்றமாகும். ஒரு அசிங்மான உடலை மறைப்பது முற்றிலும் நல்லது. ஆனால் ஒரு அழகான உடலை, அதன் அழகைக் காண விரும்புகிறவர்கள் அனைவருக்கும் பார்ப்பதற்கு ஏதுவாக இருக்கும்படி செய்வது அவசியமாகிறது. டயோஜெனஸ் மிகவும் அழகான மனிதர்களில் ஒருவர். மாவீரன் அலெக்ஸாண்டர் அவரைச் சந்தித்தபோது அவரும்கூட கொஞ்சம் மன உளைச்சல் அடைவார். அவர் உலகம் முழுவதையும் வெற்றி கண்டவர்

என்றாலும்கூட டயோஜெனஸோடு ஒப்பிடும்போது அவர் முற்றிலும் ஒன்றுமற்றவர்.

டயோஜெனஸிடம் எதுவும் இல்லை, ஆனால் அவரது செழுமை அவரது நிர்வாண உடலில் இருந்து வெளியே கதிர்களை வீசிக்கொண்டு இருந்தது. பகல் நேரத்திலும்கூட அவர் கையில் ஒரு ஒளிவிளக்கை ஏந்திக் கொண்டு செல்வது வழக்கம். அவர் கொஞ்சம் பைத்தியக்காரர் போன்று எண்ணப்பட்டார். அது உண்மைதான். புத்தி சுவாதீனம் இல்லாத மக்களின் உலகில், புத்தி சுவாதீனத்துடன் இருக்கின்ற யாரும் கொஞ்சம் பைத்தியக்காரர் என்றுதான் அழைக்கப்படுவார். அவர் செய்கின்ற செயல் களும்கூட அவர் ஒரு பித்துக்குளி என்று உங்களையும் கூட நினைக்க வைத்துவிடும். அவர் செல்லும் வழியில் யாரைச் சந்தித்தாலும் உடனே அவர் தனது ஒளி விளக்கை எடுத்து அந்த மனிதரின் முகத்தை உற்றுப்பார்ப்பார். ஆனால் அவரிடம், ''டயோஜெனஸ் நீங்கள் என்ன செய்கிறீர்கள்? இப்போது பகல்பொழுது நிறைந்துள்ளது; நீங்கள் உங்களது விளக்கை எரியவிடவேண்டிய அவசியம் கிடையாது,'' என்று கேட்டபோது, அவர், ''இல்லை, நான் அதை எரிய விடவேண்டும். நான் ஒரு உண்மையான மனிதனைத் தேடிக்கொண்டு இருக்கிறேன்,'' என்று கூறுவார்.

அவர் இறக்கும் தருவாயில், அவரது விளக்கு பக்கத்தில் இருந்ததைப் பார்த்த யாரோ ஒருவர் அவரிடம், ''டயோஜெனஸ், உங்களது வாழ்நாள் முழுவதும் ஒரு உண்மையான மனிதனைத் தேடிக்கொண்டிருந்தீர்கள். அது என்ன ஆயிற்று? நீங்கள் ஒரு உண்மையான மனிதனைக் கண்டீர்களா அல்லது இல்லையா?,'' என்று கேட்டார். அதற்கு அவர், ''கடவுளுக்கு நன்றி, நான் ஒரு உண்மையான மனிதனை ஒருபோதும் சந்திக்கவில்லை என்றாலும் கூட நான் இந்த ஒளிவிளக்கை காப்பாற்றி விட்டேன்,'' என்று கூறினார்.

இந்த உலகம் மிகவும் வஞ்சகம் நிறைந்து, திருடர்கள் நிறைந்து காணப்படுவதால், ஒருவர் தனது ஒளிவிளக்கை பாதுகாப்பதும்கூட அதிர்ஷ்டமானதாக இருக்கிறது. இந்த

டயோஜெனஸ், விழிப்படைந்த ஒரு மனிதர். உண்மையில் அவர் விளக்கினை உயர்த்தி பிடித்தபோது, அவர் உங்களது கண்களை உற்றுப்பார்க்கவில்லை, அவர் தனது கண்களைக் காட்டினார். அப்போதுதான் அங்கு ஒரு உண்மையான மனிதர் இருக்கிறார் என்பதை அவரது கண்களில் உங்களால் காண முடியும். நீங்கள் அவரது கண்களை உற்றுப்பார்த்தால், நீங்கள் ஒரு புதிய உயிராக முற்றிலும் மாறி இருப்பீர்கள்.

ஒரு சீடன் குருவின் கண்களை உற்றுப்பார்க்கிறான். அவன் அவரின் கண்களின் ஆழத்தைப் பார்க்கிறான். குரு என்ன கூறுகிறார் என்பதில் சீடனுக்கு ஆர்வம் கிடையாது; ஆனால் குரு என்னவாக இருக்கிறார் என்பதுதான் சீடனது ஆர்வமாகும். அதன் பிறகு அவன் குருவின் இரண்டாவது உடலை அறிந்து கொள்கிறான்; குருவின் பொக்கிஷத்தை, அவரது வெகுமதி உடலை அறிந்து கொள்கிறான். இந்த ஒட்டுமொத்த பிரபஞ்சமும் குருவின் மீது பல லட்சம் வெகுமதிகளைப் பொழிந்து கொண்டு இருக்கிறது. ஆனால், இன்னும் மூன்றாவது ஒருபடி உள்ளது. மிகுந்த ஆழமான புரிதல் உள்ள ஒருமனிதன், மூன்றாவது உடலை, ஆழமான உட்லை அறிந்து கொள்கிறான்.

மாணவன், முதல் உடலை அறிந்து கொள்கிறான், சீடன் இரண்டாவது உடலை அறிந்து கொள்கிறான், பக்தன் மூன்றாவது உடலை, உண்மையான உடலை, புத்தரின் உண்மையான உயிர் உணர்வை அறிந்து கொள்கிறான். சீடனிடமிருந்த ஒரு மனிதனுக்கு மீண்டும் ஒரு தாவுதல் உள்ளது. சீடன் நெருங்கி வருகிறான், மிகமிக மிக நெருங்கி வருகிறான். ஆனால் நெருக்கம் என்பதும் கூட ஒரு தூரமாகவே உள்ளது. பக்தன் வெறுமனே குருவோடு உருகி ஒன்றுகலந்து விடுகிறான். அவன் நெருக்கத்தில் இருப்பதில்லை. அவன் ஒன்றாகி விடுகிறான். எனவே இந்த ஒன்றுபடுதலில் விழிப்படைந்த ஒருவரின் உண்மை உடலை அவன் அறிந்து கொள்கிறான்.

ஆனால், இந்த மூன்று உடல்கள் மற்றும் இந்த மூன்று உடல்களின் அனுபவங்கள் எல்லாம் சாதாரண மனதினுடையது என்று போதிதருமர் கூறுகிறார். உண்மையில், இங்கு ஒரு

புத்தஉடல் கூட கிடையாது. மெய்ஞ்ஞானம் அடைந்த ஒருவர் முற்றிலும் ஒன்றுமற்றவராக, அல்லது எந்த ஒரு உடலும் இல்லாதவராக இருக்கிறார். வெறுமையானவர் என்று கூறுவதற்கு அதுதான் அர்த்தம். அவர் தூய்மையான வெறுமை. அவர் எந்த ஒரு எல்லைகளும் இல்லாத தூய்மையான வானம். ஒருவர் புத்தராக ஆகும்போது மட்டுமே இந்த எல்லையற்றத் தன்மை அறியப்படுகிறது.

பக்தன் புத்தரோடு ஒன்று கலந்து விடுகிறான். ஆனால் இன்னமும் கூட ''நான் ஒரு பக்தன், ஒரு நேசிப்பாளன் தான், எல்லாவற்றையும் ஒப்படைத்துவிட்டேன்,'' என்கிற கருத்தை அவன் கண்களுக்கு தெரியாத விதத்தில் இன்னமும் சுமந்து கொண்டிருக்கிறான். மிகவும் சூட்சுமமான ஒரு ''நான்'', கிட்டத்தட்ட மறைகின்ற ஒரு நிலையில் உள்ளது. அவன் இன்னமும் குருவின் வெறுமைநிலையை அனுபவிக்கவில்லை.

லின் சீ (Lin Chi) என்னும் மிக உயர்ந்த ஜென் குரு பற்றிய கதை ஒன்று உள்ளது. ஒருநாள் அவரது சீடர்களில் ஒருவர் மெய்ஞ்ஞானம் அடைந்தார். அந்த சீடர் நீண்டதூரம் பயணம் செய்திருந்தார். குருவானவர் அந்த சீடரின் முன்னேற்றத்தை கவனித்துக்கொண்டு வந்தார். எனவே, அன்றைய தினம் சூரியன் அஸ்தமிப்பதற்கு முன்னால், அந்த சீடர் மெய்ஞ்ஞானம் அடையப் போகிறார் என்பதை அவர் அறிந்து கொண்டார். அந்த சீடர் மிகவும் நெருங்கிவந்துவிட்டார். இது ஒரு விட்டில் பூச்சியானது மெழுகுவர்த்தியின் ஒளிச்சுடரை நோக்கி நெருங்கி நெருங்கி வருவதைப் போன்றது. இன்னும் அதிக நேரம் ஆகாது என்று ஒருவரால் கூறிவிட முடியும். அந்த விட்டில் பூச்சியானது மிகவும் நெருங்கி வந்துவிட்டதால், விரைவில் அது நெருப்பு சுடரில் விழுந்து காலாகாலத்திற்கும் மறைந்துவிடும்.

லின் சீ தனது சீடரை அழைத்து அவரிடம், ''கவனி, நான் வருடக்கணக்கில் உன்னை அடித்து வந்திருக்கிறேன்,'' என்று கூறினார். இது ஜென் பாரம்பரியத்தின் ஒரு பகுதி. இந்த ஒரு பாரம்பரியத்தில் மட்டுமே குருவானவர் விநோதமான காரணங்களுக்காக அல்லது எந்த காரணமும் இல்லாமலும்கூட

சீடரை அடிப்பதற்கு அனுமதிக்கப்படுகிறார். ஏன் அடிக்கிறார் என்பது அவருக்கு மட்டுமே தெரியும்; சிலசமயம் ஒரு கேள்விக்கு சீடன் தவறான பதிலைக் கொண்டு வந்தால், அதன் பின்னர் குரு அவனைக் கன்னத்தில் அடிப்பார்.

ஆனால், சிலசமயம் சீடர்கள் வெறுமனே ஆச்சரியப்படுவார்கள். சீடன் ஒருவார்த்தை கூட பேசி இருக்கமாட்டான். ஆனால் குரு அவனை கன்னத்தில் அறைந்து விடுவார். அப்போது சீடர்கள், ''நாங்கள் இன்னும் எதையும் சொல்லவில்லையே, இப்படி அதற்குள் அடிப்பது அதிகப்படியானது'' என்று கூறுவார்கள். அதற்கு குருவானவர், ''அது ஒரு விஷயம் அல்ல. நீ என்ன கூறப்போகிறாய் என்று எங்களுக்குத் தெரியும், உனது முகத்தைப் பார்த்து அதை நாங்கள் அறிந்து கொள்ளமுடியும். நீ இந்த அறைக்குள் நுழைகின்ற விதத்தை வைத்தே நாங்கள் கண்டு பிடித்து விடுவோம். ஆகவே ஏன் நேரத்தை வீணாக்கவேண்டும்? முதலில் நீ விஷயங்களைக் கூறவேண்டும். அதன் பின்னர் நாங்கள் உன்னை அடிக்க வேண்டும். இதை ஏன் சுருக்கமாக ஆக்கிவிடக்கூடாது. நன்றாக அடி வாங்கிவிட்டு போய்விடு. சரியான விடையைக் கண்டுபிடி,'' என்று கூறிவிடுவார்.

ஒரு சீடன் சரியான பதிலைக் கண்டுபிடித்து விட்டால், அவனிடம் சொல்வதற்கு எதுவும் இருக்காது என்பது நன்கறிந்த ஒரு உண்மை; ஏனெனில் சரியான விடையை ஒருபோதும் சொல்ல முடியாது. தவறான விடைகளை மட்டுமே சொல்ல முடியும்.

ஆகவே லின் சீ அந்த சீடரை மாற்றி மாற்றி அடித்துக் கொண்டிருப்பார். ஆனால் திடீரென்று அவர் அந்த சீடனைக் கூப்பிட்டார். அவர் வெளியில் தோட்டத்தில், எந்த விடுகதைக்காக அடிகள் வாங்கிக் கொண்டிருந்தாரோ அந்த விடுகதை குறித்து தியானம் செய்து கொண்டிருந்தார். சீடர் குருவிடம், ''என்னை ஏன் அழைத்தீர்கள், ஏனெனில் சொல்வதற்கு என்னிடம் ஒன்றும் இல்லையே,'' என்று கூறினார். குருவின் அறையில் வாசலின் உள்ளே நுழைவதற்கு முன்பே ''சொல்வதற்கு என்னிடம் ஒன்றும்

இல்லை. ஆகவே என்னைக் கன்னத்தில் அடிக்காதீர்கள். இப்போது நானாக இங்கு வரவில்லை; நீங்கள் கூப்பிட்டதால் தான் வந்திருக்கிறேன்! என்று தெளிவாகக் கூறினான்.

அதற்கு லின் சீ, ''அது சரிதான். நீயாக வரவில்லை, நான்தான் கூப்பிட்டேன். ஆனால் இன்று முற்றிலும் வேறுபட்ட ஒரு காரணத்திற்காக நான் உன்னை அடிக்கப்போகிறேன். எனது அருகில் நெருங்கி வா,'' என்று கூறினார்.

உடனே சீடன், ''இது கொஞ்சம் அதிகப்படியானது. என்னிடம் சொல்வதற்கு ஒன்றும் இல்லை என்றால் என்னை அடிக்கமாட்டார்கள் என்று எனக்கு சொல்லப்பட்டிருக்கிறது. அந்த சட்டத்தையும் நீங்கள் உடைத்துக் கொண்டு இருக்கிறீர்கள்,'' என்று கூறினான்.

அதற்கு குருவானவர், ''நேரத்தை வீணாக்காதே. அருகில் நெருங்கி வா. நான் இன்று உன்னை கன்னத்தில் அறையப் போகிறேன். ஏனெனில் இன்றைக்கு பிறகு என்னால் உன்னை மீண்டும் அடிக்கமுடியாது. இன்றைய தினம் நீ மெய்ஞ்ஞானம் அடையப் போகிறாய், எனவே இதுதான் கடைசி சந்தர்ப்பம். நான் உன்னை ஒருமுறை நன்றாக கன்னத்தில் அறைந்து விடுகிறேன். நாளைக்கு நீ என்னை அடிக்கலாம். உனக்கு அந்த உரிமை வந்துவிடும். ஆனால் இன்று எனக்கு கடைசி சந்தர்ப்பம் உள்ளது,'' என்று கூறினார். அவர் அவனைக் கன்னத்தில் அடித்தார்.

இது ஒரு அழகான பாரம்பரியம். இது மிகப்பெரிய அன்பைக் காட்டுகிறது. எந்த ஒரு காரணமும் இல்லாமல் குரு சீடனை அடிக்கிறார் மேலும் அந்த சீடன் இன்று வெறுமனே மெய்ஞ்ஞானம் அடையப் போகிறான் எனவே அவனை அவரால் அடிக்கமுடியாது என்பதற்காக அவர் சீடனை அடிக்கிறார். அந்த சீடன் அன்று மெய்ஞ்ஞானம் அடைந்துவிட்டான். எனவே மறுநாள் அவன் குருவைப் பார்ப்பதற்கு வந்தபோது, குரு கதவை மூடிக்கொண்டார். அவர் சீடனிடம், ''நீ அறைக்கு வெளியே இருந்து நீ சொல்ல விரும்புவது எதுவாக இருந்தாலும் சொல்,

ஏனெனில் நான் ஒரு வயதான மனிதன். என்னைக் கன்னத்தில் அடிப்பது சரியல்ல என்பதை நீ புரிந்து கொள்ள வேண்டும். ஆகவே இப்போதிலிருந்து உனக்கு இந்த கதவுகள் மூடப்பட்டு இருக்கும். நீ என் சொல்ல விரும்புகிறாயோ, அதை வெளியில் இருந்து கொஞ்சம் சத்தம் போட்டு சொல்லிவிடு,'' என்று கூறினார்.

தான் இருக்கிறோம் என்பதைக் கூட ஒரு பக்தன் மறந்துவிடுகின்ற அந்த நொடிப்பொழுதில், அவனிடம், 'நான் இருக்கிறேன்' என்கிற எண்ணம் எழாதபோது, புத்தருக்கு உடலே கிடையாது என்பதை அவன் அறிந்து கொள்கிறான். புத்தர் என்பவர் வெறுமையானவர். அவர் வெறும் தூய அமைதியாக, வெறுமையாக, ஒரு முழு பூஜ்யமாக இருக்கிறார்.

ஆனால், மூன்று உடல்களுக்கு குறைவாக ஒரே ஒரு புத்த உடல் கூட கிடையாது. மூன்று உடல்கள் பற்றிய இந்த பேச்சானது வெறுமனே மனிதனின் புரிதலை அடிப்படையாகக் கொண்டிருக் கிறது. அந்தப் புரிதல், ஆழமற்றதாக, நடுநிலையானதாக, அல்லது ஆழமானதாக இருக்க முடியும்.

ஆழமற்றப் புரிதல் உள்ள மக்கள் தாங்கள் வரங்களைக் குவித்துக் கொண்டிருப்பதாக கற்பனை செய்கிறார்கள். தங்களது உருமாற்றம் அடைந்த உடலை அவர்கள் புத்தர் என்று தவறாக எடுத்துக்கொள்கிறார்கள். நடுநிலையான புரிதல் கொண்ட மக்கள் தாங்கள் துன்பத்திற்கு முடிவுகட்டிவிட்டதாக கற்பனை செய்கின்றனர். தங்களது வெகுமதி உடலை புத்த உடல் என்று தவறாக எண்ணிக் கொள்கிறார்கள். ஆழ்ந்த புரிதல் உள்ள மக்கள் தாங்கள் புத்தநிலையை அனுபவிப்பதாக கற்பனை செய்து கொள்கிறார்கள். உண்மை உடலை புத்தர் என்று தவறாக நினைத்துக் கொள்கிறார்கள். ஆனால் மிகவும் ஆழ்ந்த புரிதல் உள்ள மக்கள் எதனாலும் கவனம் சிதறாமல் தங்களுக்குள் உற்றுப் பார்க்கிறார்கள். ஆகவே ஒரு தெளிவான மனம், அல்லது மனம் அற்றநிலை தான் புத்தர், அவர்கள் ஒரு புத்தரின் புரிதலை, தங்களது மனதைப் பயன்படுத்தாமலே அடைகின்றனர்......

தனி மனிதர்கள் கர்மாவை உருவாக்குகிறார்கள்.

இந்த சூத்திரத்திற்குள் நுழைவதற்கு முன்பு, கர்மா என்கிற இந்த வார்த்தையை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். அதற்கு செயல்புரிதல் என்று அர்த்தம். ஆனால் செயல் என்பது இரண்டு விதமானதாக இருக்கமுடியும். ஒன்று அது எதிர்ச்செயலாக இருக்கமுடியும் அல்லது அது நேர்ச்செயலாக இருக்கமுடியும்.

யாரோ ஒருவர் உங்களை அவமானப்படுத்துகிறார். நீங்கள் கோபமடைகிறீர்கள். அவர் உங்களது கோபம் என்னும் பொத்தானை அமுக்கிவிட்டார். உண்மையில் அவர்தான் எஜமான். நீங்கள் ஒரு அடிமை போன்று நடந்து கொள்கிறீர்கள். அவர் உங்களுக்குள் கோபத்தை உருவாக்குவதற்கு ஏற்பாடு செய்துவிட்டார். அவர் கட்டுப்பாட்டில் இருக்கிறார். அந்த சூழ்நிலையை அவர் மாற்ற விரும்பினால், ''என்னை மன்னியுங்கள்,'' என்று அவர் கூறமுடியும். அப்பொழுது விஷயங்கள் வேறுவிதமாக ஆகிவிடும். நீங்கள் வெறும் பலிகடா மட்டுமே, அந்த சூழ்நிலையின்மீது உங்களுக்கு எந்த ஒரு கட்டுபடுத்துதலும் இல்லை. யாராவது ஒருவர் உங்களை அவமானப்படுத்தும்போது, நீங்கள் உடனடியாக, உங்களது கடந்தகால அனுபவத்தில் இருந்து எதிர்ச்செயல் புரிகிறீர்கள்.

இந்த எதிர்ச்செயல் உண்மையில் கர்மா என்றாகிறது. இது உங்களை இறுக்கிக் கட்டுகின்ற ஒரு சக்தி; இது உங்களுக்கு அடிமைச் சங்கிலிகளை உருவாக்குகிறது.

ஆனால் நேர்ச்செயல் என்பது எதிர்ச்செயல் என்பதில் இருந்து முற்றிலும் வேறுபட்ட ஒரு விஷயமாகும். நேர்ச்செயல் என்பது அடுத்த மனிதர்களால் உருவாக்கப்படுவது இல்லை. அவர் உங்களை அவமானப்படுத்துகிறார். அவர் உங்களை திட்டுகிறார். நீங்கள் அதைக் கவனிக்கிறீர்கள். அவர் உங்களைப் பற்றி ஏதோ சொல்கிறார். புரிதல் உள்ள ஒரு மனிதன், விழிப்புணர்வு உள்ள ஒரு மனிதன், தியானம் செய்கின்ற ஒரு மனிதன் வெறுமனே அதைக் கவனித்துக் கொண்டு இருப்பான். நல்லதோ அல்லது கெட்டதோ, அடுத்தவர் ஏதோ ஒன்றைச் சொல்கிறார். ஆனால் அந்தத் தருணத்தில் அதைப்பற்றி கவலைப்பட வேண்டியதில்லை.

முதலில், உடனடியாக எந்த ஒரு எதிர்ச்செயலிலும் இறங்காமல் அவர் கூறுவதை கவனமாக கேளுங்கள். உங்களது விழிப்புணர்வானது ஒரு கண்ணாடியைப் போன்று அவர் என்னவெல்லாம் சொல்கிறாரோ அல்லது அவர் என்னவெல்லாம் செய்கிறாரோ அதை எல்லாம் பிரதிபலிக்கப்படும். அப்போது அந்த கண்ணாடி போன்ற பிரதிபலிப்பில் இருந்து, உடனடியாக, அந்த நிகழ்காலத்தில், உங்களது கடந்தகால அனுபவத்தின் விழிப்புணர்வில் இருந்து வராமல், சில நேர்ச்செயல்கள் வருகிறது.

நீங்கள் பேராசைப் பிடித்தவர் என்று அவர் சொல்லிக் கொண்டிருந்தார், நீங்கள் அசிங்கமானவர் என்று அவர் சொல்லிக் கொண்டிருந்தார். நீங்கள் அழுக்கடைந்தவர் என்ற அவர் சொல்லிக் கொண்டிருந்தார். அப்போது நீங்கள் அமைதியாக கேட்டுக் கொண்டு இருந்ததால், அதில் கோபம் கொள்வதற்கு எதுவும் கிடையாது. ஒன்று அவர் சொல்வது சரியானதாக இருக்கலாம் அல்லது அவர் சொல்வது தவறானதாக இருக்கலாம். அவர் சொல்வது சரியானது என்றால் நீங்கள் அவருக்கு நன்றியுணர்வு உள்ளவராக இருக்கவேண்டும். நீங்கள் அவரிடம், ''உங்களுக்கு நன்றி, உங்களுக்கு மிகுந்த கருணை உள்ளது, எனக்கு தெரியாத விஷயங்களை நான் தெரிந்து கொள்ளும்படி செய்துவிட்டீர்கள். ஆகவே நீங்கள் என்னிடம் எப்போதெல்லாம் எதையாவது காணும்போது, தயவுசெய்து அதை என்னிடம் கூறுங்கள், அதை எனக்கு நினைவுப்படுத்துங்கள்,'' என்று சொல்ல வேண்டும்.

அல்லது, அவர் சொல்வது தவறு என்று நீங்கள் கண்டுகொண்டால், வெறுமனே அவரிடம், ''நீங்கள் சொல்வதை நான் கேட்டேன், ஆனால் அவை உண்மை அல்ல. மேலும் உண்மை அல்லாத ஒன்று குறித்து நான் ஏன் எதிர்ச்செயல் புரியவேண்டும்? நீங்கள் திரும்பவும் நினைத்துப் பாருங்கள். நீங்கள் கூறியதை திரும்பவும் நினைத்துப்பாருங்கள். அப்போது நீங்கள் கண்டு கொள்வீர்கள். ஆனால் நான் பார்த்தவரையும், அதில் எந்த உண்மையும் கிடையாது மேலும் பொய்களினால் நான் கோபம் அடையவேண்டிய அவசியம் கிடையாது,'' என்று

கூறவேண்டும். இப்படி இரண்டு மாற்றுவழிகள் மட்டுமே இருக்கின்றன.

ஜார்ஜ் குர்ட்ஜியப்பின் தந்தை இறந்துவிட்டார். அப்போது அவருக்கு வயது ஒன்பது. அவரது தந்தை மிகவும் ஏழை. ஆனால் அபரிமிதமான விழிப்புணர்வு உள்ள மனிதர். அவர் குர்ட்ஜியப்பை அழைத்து அவரிடம், ''கவனி, நான் கூறப்போவதை, இளைஞனான உன்னால் புரிந்துகொள்ள முடியாது. ஆனால் இதை நினைவில் வைத்துக்கொள். விரைவில் நீ இதை புரிந்து கொள்வாய். அதன்பின்னர் அதன்படி நடக்க ஆரம்பி. மறந்துவிடாதே! உனக்கு கொடுப்பதற்கு பணமோ, வீடோ, நிலமோ என்னிடம் இல்லை,'' என்று கூறினார். அவரது தந்தை நாடோடி இனத்தைச் சார்ந்தவர். அவர் மீண்டும் குர்ட்ஜியப்பிடம், ''நான் உன்னை எனது நண்பர்களிடம் விட்டுச் செல்கிறேன். ஆனால் இந்த ஒரு பொக்கிஷத்தை, சொத்தை மட்டுமே நான் உனக்கு உடைமையாக விட்டுச் செல்கிறேன் என்பதை நினைவில் கொள். எனவே கவனமாகக் கேள்; இவை உனது தந்தையின் கடைசி வார்த்தைகள். எனது ஒட்டுமொத்த வாழ்க்கையின் அனுபவங்கள்,'' என்று கூறினார்.

குர்ட்ஜியப், ஒன்பது வயது சிறுவன். அவர் வயதான தந்தை கூறுவதைக் கேட்பதற்கு அருகில் வந்தார். அப்போது தந்தை அவரிடம், ''இது மிகவும் எளிய விஷயம், உன்னை யாராவது அவமானப்படுத்திவிட்டால் அவர் என்ன சொல்கிறார் என்பதை அமைதியாக, கவனமாக, விவரமாக கேள். அதன்பிறகு அந்த மனிதரிடம், ''என்மீது இந்த அளவுக்கு ஆர்வம் எடுத்துக் கொண்டதற்கு நன்றி. இருபத்து நான்கு மணிநேரம் கழித்து நான் வந்து உங்களுக்கு பதில் கூறுகிறேன். என்னால் வேறு எதுவும் செய்ய முடியாது, ஏனெனில் இறக்கும்போது எனது தந்தையின் சொல்படி இருபத்து நான்கு மணிநேரம் யோசித்து பார்த்த பின்னர் மட்டுமே நான் பதில் கூறுவதற்கு அனுமதிக்கப்பட்டு இருக் கிறேன்'' என்று கூறிவிடு.

மேலும் குர்ட்ஜியப் தனது வயதான காலத்தில் இதையே தனது சீடர்களிடம், ''இந்த எளிய தத்துவம் எனக்கு அபரிமிதமாக

உதவியது, ஏனெனில் இருபத்து நான்கு மணி நேரத்திற்கு பிறகு யார் கோபமாக இருப்பார்கள்? மேலும் இருபத்து நான்கு மணிநேரம் யோசித்து பார்த்தபின்னர், அவர் சொல்வது சரி என்று ஒருவர் கண்டு கொள்ளலாம். அப்படி அவர் சொல்வது சரிதான் என்றால் அதன்பின்னர் வருத்தப்பட வேண்டிய அவசியம் கிடையாது. அது அவரது பிரச்சினை, உங்களது பிரச்சினை அல்ல,'' என்று கூறினார்.

முழுமையான விழிப்புநிலை அடைந்த ஒரு மனிதர் தான் என்ன செய்தாலும் அதனால் மாசு அடையாமல் இருக்கிறார். ஏனெனில் அது ஒரு நேர்ச்செயல். எந்தவிதமான தீர்ப்பும் இன்றி கண்ணாடியிடமிருந்து வருகின்ற தூய்மையான பிரதிபலிப்பு. அது கடந்த காலத்தில் இருந்து வருவதில்லை. அது நிகழ்கால தன் உணர்வில் இருந்து வருகிறது. ஆனால் உங்களது கடந்த காலத்தில் இருந்து எது வந்தாலும் அது நிச்சயமாக உங்களுக்கு ஒரு சங்கிலித்தொடரை உருவாக்கப் போகிறது.

கீழை நாடுகளில் நாங்கள் பத்தாயிரம் ஆண்டுகளாக இதைப்பற்றி சிந்தித்துக்கொண்டு இருக்கிறோம், இதை பரிசோதித்துக் கொண்டு இருக்கிறோம். இந்த ஒட்டுமொத்த கீழைநாடுகளும், அதன் அறிவாளிகளும் ஈடுபட்டுக் கொண்டிருக்கின்ற ஒரே விஷயம் இது மட்டுமே ஆகும். அதாவது ஒரு மனிதனின் செயல்கள் அவனுக்கு எந்த ஒரு அடிமைத் தளையையும் உருவாக்காத, அவனுக்கு மறுபிறவியை உருவாக்காத ஒரு நிலைக்கு அவன் எப்படி வருவது, அவனது ஆன்மாவை எதுவுமே மாசுபடுத்தாமல், அவன் செய்யாமல் செய்கின்ற ஒரு தன்னுணர்வை உருவாக்குவது எப்படி என்பதிலேயே கீழை நாடுகள் ஈடுபட்டு வந்துள்ளன.

*தனி மனிதர்கள் கர்மாவை உருவாக்குகிறார்கள். கர்மா தனிமனிதர்களை உருவாக்குவதில்லை........*

ஆகவே, அது உங்கள் கைகளில் தான் உள்ளது. நீங்கள், உங்களது செயல்களால் உருவாக்கப்பட்ட ஒரு பொருள் அல்ல. உங்களது செயல்களை விடவும் நீங்கள் மிகவும் பெரியவர்கள்;

நல்லதோ அல்லது கெட்டதோ, நீங்கள் எப்போதும் பெரியவர்கள். எதையும் மாற்றுவது உங்களது கையில்தான் உள்ளது.

இந்த உலகிலேயே எங்கும் கொடுக்கப்படாத அளவுக்கு, கீழைநாடுகள் தனி மனிதனுக்கு அளவுகடந்த மரியாதையைக் கொடுத்திருக்கிறது. அவனது சொந்த விதியின்மீது அவனுக்கு மிகப்பெரிய அதிகாரத்தையும் கொடுத்து இருக்கிறது. கீழைநாடுகளில் ரட்சகர் கிடையாது. நீங்கள் தான் ரட்சகர். வேறு யாரும் அதை உங்களுக்காக செய்யமுடியாது.

வேறு ஒருவரால் உங்களை காப்பாற்றமுடியும் என்பது உண்மையில் மிகவும் அசிங்கமானதாக இருக்கிறது. அதன்பின்னர் நீங்கள் ரட்சிக்கப்படுவது அல்லது மீட்கப்படுவது என்பது ஒருவர் அடிமைத்தனம் போன்று இருக்கிறது.

யாராவது உங்களை மீட்கமுடியும் என்னும்போது, வேறு யாராவது உங்களை மீண்டும் பிறப்பு இறப்பு என்னும் சக்கரத்திற்குள் தள்ளி விடவும் முடியும். ஏனெனில் நீங்கள் வெறுமனே ஒரு கைப்பாவையாக இருக்கிறீர்கள். அவர்கள், தனிமனித உயிர்களின் சுதந்திரத்தை, மரியாதையை, கௌரவத்தை எடுத்துக் கொள்கிறார்கள்.

*தனிமனிதர்கள் கர்மாவை உருவாக்குகிறார்கள்* என்று போதிதருமர் கூறுகிறார். உங்களுக்கான நரகத்தை நீங்களே உருவாக்கி கொள்ளமுடியும். நீங்களே உங்களது சொர்க்கத்தை உருவாக்கமுடியும். அல்லது நீங்கள் அந்த இரண்டிற்கும் அப்பாலும்கூட செல்லமுடியும். இப்படி அந்த இரண்டையும் தாண்டி அதற்கு அப்பால் செல்வது என்பது யூதமதத்திலும், முகமதிய மதத்திலும், கிறிஸ்தவ மதத்திலும் கிடையாது. இது கீழைநாட்டு ஞானிகளின் சிறப்பு வாய்ந்த பங்களிப்பாகும். சொர்க்கம், நரகம் என்பது கிறிஸ்தவ மதத்தில், முகமதிய மதத்தில், யூதமதத்தில், ஒரு கொள்கை போன்று உள்ளது. ஆனால் 'மோட்சம்' என்பது சொர்க்கத்திற்கும், நரகத்திற்கும் அப்பால் செல்வதாகும். ஏனெனில் நரகம் என்பது துன்பமாக இருக்கிறது. சொர்க்கம் என்பது சந்தோஷமாக இருக்கிறது. ஆனால் சந்தோஷமும் கூட கொஞ்ச நேரத்திற்கு பிறகு சலிப்புடையதாக

ஆகிவிடுகிறது. கொஞ்ச காலத்திற்கு பின்னர் சந்தோஷமும் கூட சலிப்பானதாக ஆகிவிடுகிறது என்று எந்த ஒரு மேலைநாட்டு மதத்தலைவர்களும் ஒருபோதும் சிந்தித்ததில்லை. சந்தோஷத்தை எவ்வளவு காலம் தான் உங்களால் சகித்துக் கொள்ள முடியும்? நீண்ட காலத்திற்கு பிறகு வேதனையும்கூட ஒரு துணையாக ஆகிவிடுவது போன்று இருக்கிறது. அது இல்லை எனில், ஏதோ ஒன்று இல்லாமல் இருப்பது போன்று நீங்கள் உணர்கிறீர்கள்.

கிட்டத்தட்ட பத்துவருடங்கள் தலைவலியால், மைக்ரேன் என்னும் தலைவலியால் அவதிப்பட்ட ஒருவரை நான் அறிவேன். நான் மலைகளுக்கு செல்வது வழக்கம். நான் பேராசிரியராக இருந்த அதே பல்கலைக்கழகத்தில் தான் அவரும் ஒரு பேராசிரியராக இருந்தார். ஒருமுறை அவர் என்னிடம், ''நானும் உங்களுடன் வரலாமா?'' என்று கேட்டார். யாரும் என்னோடு வருவதை நான் ஒருபோதும் விரும்புவதில்லை. ஏனெனில் எல்லா முட்டாள்களையும் தவிர்ப்பதற்காகவே நான் நகரத்தை விட்டு வெளியே போகிறேன். இந்த முட்டாள், ஒரு முட்டாள் மட்டுமல்ல, அவருக்கு மைக்ரேனும்கூட இருந்தது. அட கடவுளே என்று நான் நினைத்தாலும் கூட நான் அவரிடம், ''சரி உங்களிடம் முடியாது என்று சொல்வது அன்பற்றதாக ஆகிவிடும். சும்மா உட்காருங்கள், ஆனால் மைக்ரேன் பற்றி பேசாதீர்கள். ஏனெனில் எனக்கு அது அலர்ஜி, ஒவ்வாமை,'' என்று கூறினேன்.

உடனே அவர், ''எந்த வகையான ஒவ்வாமை?'' என்றார்.

அதற்கு நான் அவரிடம், ''யாராவது தனது நோயைப்பற்றி பேசினால், அதே நோய் எனக்கும் வந்துவிடுகிறது,'' என்று கூறினேன்.

உடனே அவர், ''இப்படிப்பட்ட ஒரு அலர்ஜி இருப்பதாக நான் ஒருபோதும் கேள்விப்பட்டது இல்லையே,'' என்றார்.

நான் அவரிடம், ''கேள்விப்படவில்லை என்பது ஒரு கேள்வியே அல்ல. நானே அதற்கு உதாரணமாக இருக்கிறேன். இது புத்தகத்தில் உள்ள ஒரு கேள்வி அல்ல. மைக்ரேன் பற்றி பேசாதீர்கள்!'' என்று கூறினேன்.

இப்படியாக, நான் அவரை மலைக்கு அழைத்துச் சென்றேன். அது மாம்பழ சீசன். மாம்பழத்தின் இனிப்பில் மலையே நிறைந்திருக்கிறது. சிறுவயதில் இருந்தே நான் மரங்கள் ஏறும் பழக்கம் உள்ளவன். மரங்களில் இருந்து நான் அநேக முறை கீழே விழுந்துவிட்டதால் எனது அப்பா என்னிடம், ''இப்போது இதை நீ நிறுத்தியாக வேண்டும்,'' என்று கூறுவார். நான் அவரிடம் ''நான் அதிகமுறை விழுந்து விட்டேன், எனவே நான் விழுவதில் கிட்டத்தட்ட ஒரு நிபுணர் ஆகிவிட்டேன். நீங்கள் கவலைப்படாதீர்கள். நான் அதில் ஆரம்பத்தில் இருப்பவன் அல்ல. நான் ஒரு வகையாக, ஒரு குறிப்பிட்ட விதத்தில் விழுகிறேன். அதனால்தான் நான் பிழைத்துக் கொள்கிறேன்,'' என்று கூறினேன்.

எனவே, நான் அவரை மிகவும் பழுத்த மாம்பழங்கள் நிறைந்த ஒரு மாமரத்திற்கு அழைத்துச் சென்றேன். அதில் அநேக கிளிகள் இருந்தன. கிளிகளுக்கு மாம்பழம் மிகவும் பிடிக்கும். நான் அவரிடம், ''நீங்களும் என்னுடன் மரத்தில் ஏறிவாருங்கள்'' என்றேன்.

''என்ன?'' என்றார் அவர்.

''நீங்களும் என்னுடன் ஏறுங்கள்,'' என்றேன் நான்.

''நான் ஒருபோதும் மரம் ஏறியதில்லை'' என்றார் அவர்.

''முயற்சி செய்யுங்கள், இது ஒரு வீரதீரச் செயலாக இருக்கும்'' என்றேன் நான்.

ஆனால் அவர் மரத்தில் இருந்துகீழே விழுந்துவிட்டார். நான் வேகமாக மரத்திலிருந்து திரும்ப வரவேண்டியதாயிற்று. அவர் மிகவும் ஆச்சரியத்துடன் காணப்பட்டார். உடனே அவர், ''இது ஆச்சரியமாக உள்ளது. எனக்கு மைக்ரேன் இருந்தது. ஆனால் மரத்தில் இருந்து விழுந்ததில், அந்தத் தலைவலி மறைந்து விட்டது'' என்று கூறினார்.

நான் அவரிடம், ''சிலசமயம் இப்படி நடப்பதுண்டு, ஆனால் அதற்காக இதை ஒரு பழக்கமாக ஆக்கவேண்டாம். இதை வேறு

யாரிடமும் சொல்லாதீர்கள். ஏனெனில் இது போன்று மற்றவர்களுக்கு நடக்காமல் போகலாம். இது ஏதேச்சையாக நடந்தது'' என்ற கூறினேன். ஆனால் அவரது ஒற்றைத் தலைவலி மறைந்து போயிற்று.

அதன் பின்னர், ஏழு நாட்களுக்கு பிறகு அவர் என்னைச் சந்தித்தார். அவர் என்னிடம், ''எனக்கு மைக்ரேன் இல்லாமல் என்னவோ போல் இருக்கிறது,'' என்றார்.

உடனே நான் அவரிடம், ''முதலில் நீங்கள் இடைவிடாமல் மைக்ரேன் பற்றி புகார் கூறிக்கொண்டு இருந்தீர்கள், ஆனால் இப்போது நீங்கள் அதை தவறவிட்டு விட்டதாக கூறுகிறீர்களே?'' என்றேன்.

அதற்கு அவர், ''நான் அதை இழந்துவிடுவேன் என்று ஒருபோதும் நினைக்கவில்லை. இப்போது எனக்கு பேசுவதற்கு எதுவும் இல்லை; மைக்ரேன் தான் எனது முழு தத்துவமாக இருந்தது. இந்த ஒற்றைத் தலைவலியால் நான் மற்றவர்களின் இரக்கத்தையும் பெற்றேன். இப்போது யாரும் எனக்காக இரக்கப்படுவது இல்லை!'' என்று கூறினார்.

உடனே நான் அவரிடம், ''அப்படியானால் ஒரே ஒரு காரியம் மட்டுமே உள்ளது. நாம் மீண்டும் மலைக்கு சென்று மரத்தில் ஏறி திரும்பவும் கீழே விழலாம். அதனால் நிச்சயம் தலைவலி வரும் என்று எனக்கு தெரியாது, ஒருவேளை அது வரலாம். ஏனெனில் இதில் எந்த ஒரு விஞ்ஞானமும் இல்லை,'' என்றேன்.

அதற்கு அவர், ''அதைப்பற்றி நான் சிந்தித்தாக வேண்டும் ஏனெனில் என்னால் அது இல்லாமல் இருப்பது மிகவும் கடினமாக இருக்கிறது. அந்தத் துன்பம் மிகவும் மோசமானது'' என்றார்.

ஆனால் அடுத்த நாள் அவர் என்னிடம், ''நான் அதற்கு தயாராக இருக்கிறேன். ஏனெனில் மைக்ரேன் இல்லாமல் என்னால் உயிர்வாழ முடியாது. நான் பத்து வருடங்கள் அந்த மைக்ரேனுடன் வாழ்ந்துவிட்டதால் இப்போது நான் எதையோ இழந்துவிட்டதாக உணர்கிறேன்,'' என்று கூறினார்.

எனவே நீங்களும் உங்களது பழக்கவழக்கத்தைக் கவனித்தால் ஆச்சரியப்படுவீர்கள்.!

புகைபிடிக்கின்ற மக்கள் இங்கு உள்ளனர். அவர்கள் தங்களின் நுரையீரல்களை எரித்துக்கொண்டு இருக்கிறார்கள் என்பதை அவர்கள் அறிவார்கள். தங்களது ஆரோக்கியத்தை அழித்துக் கொண்டிருப்பதை அவர்கள் அறிவார்கள். ஆனால் அது எந்த மாற்றத்தையும் உண்டாக்குவதில்லை. ஒரு சில நாடுகளில் சிகரெட் உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளிடம் அந்த சிகரெட் பாக்கெட்களில் புகைப்பிடித்தல் ஆரோக்கியத்திற்கு ஆபத்தானது என்று அச்சிடும்படி ஆணையிடலாம் என்று தீர்மானித்துள்ளன. முதலில், இப்படிப்பட்ட சட்டம் இயற்றப்படுவதற்கு சிகரெட் நிறுவனங்கள் எதிர்ப்பு அளித்துவிடும் என்று நினைத்தனர். சிகரெட் பெட்டியில், சிகரெட் பிடிப்பது ஆரோக்கியத்தை அழித்துவிடும் என்று எழுதினால் யார் அதை வாங்கப் போகிறார்கள்?'' இது ஆரோக்கியத்திற்கு அழிவாகும் என்பது மருத்துவர்களின் கருத்து'' என்பது போன்றோ அல்லது வேறு அதைப் போன்றோ எழுதவேண்டும்,'' என்று முடிவு செய்தார்கள்.

ஆனால் அரசாங்கங்கள் அந்த சட்டத்தை இயற்றி விட்டன ஆனால் புகைபிடித்த மக்கள் இன்னமும் புகைபிடித்துக் கொண்டுதான் இருக்கின்றனர். மேலும் புகைபிடிப்பவர்களின் எண்ணிக்கை அதிகரித்துக்கொண்டே போகிறது. அதனால் எந்த வித்தியாசமும் ஏற்படவில்லை. அந்த சட்டம் முற்றிலும் அர்த்தமற்றது. மனிதன் எதற்காகவாவது பழக்கப்பட்டு விடுகிறான். அதன் பின்னர் அது ஆபத்தானது என்றாலும்கூட, அது அவனை கொல்வதாக இருந்தாலும்கூட, அது உங்களுக்கு புற்றுநோயைக் கொடுக்கப் போகிறது என்று நிரூபிக்கப்பட்டாலும் கூட அதை விட்டொழிப்பது மிகவும் கடினம். உங்களது பழக்கத்தை மாற்றுவதை விடவும் புற்றுநோய் வந்துவிட்டு போகட்டும் என்று நீங்கள் நினைப்பீர்கள்.

ஆனால், நீங்கள்தான் உங்களது தலைவிதியின் எஜமான் என்று போதிதருமர் கூறுகிறார். ஒவ்வொரு செயலையும் உங்களால் மாற்ற முடியும், ஒவ்வொரு பழக்கத்தையும் உங்களால்

மாற்றமுடியும். உங்களது இரண்டாம் இயல்பாக ஆகிவிட்டது என்று எதை நினைக்கிறீர்களோ அதையே கூட உங்களால் மாற்ற முடியும். மேலும் புத்துணர்ச்சி, இளமை, அதிக விழிப்புணர்வு, அதிகப் புரிதல், அதிக பேரானந்தம், மிகுந்த பரவசநிலை ஆகிய வற்றோடு கூடிய முற்றிலும் புதியதொரு தனிமனித தன்மையை உங்களால் உருவாக்க முடியும்.

*இந்த பிறவியில் யார் ஒருவர் குறைகளற்றவராக இருந்து கொண்டு கர்மாவை உருவாக்குவதில்லையோ அவரே வெகுமதியை பெறுகிறார்.*

குறைகளற்றவர் யார்? யார் ஒருவரின் தன்னுணர்வானது தனது உயர் உணர்வில் இருந்து எல்லா தன்னுணர்வு இல்லாத நிலையையும் வெளியேற்றி விடுகிறாரோ அவர்தான் குறைகளற்ற மனிதர். இப்போதைக்கு உங்களின் தன்னுணர்வில் பத்தில் ஒருபகுதி மட்டுமே தன்னுணர்வுடன் இருக்கிறது. பத்தில் ஒன்பது பகுதி தன்னுணர்வை இழந்து நிற்கிறது.

யார் ஒருவரின் ஒட்டுமொத்த உயிர் உணர்வும், எல்லா பத்து பகுதிகளும், முற்றிலும் தன்னுணர்வுடனும், ஒளி நிறைந்தும் இருக்கிறதோ அவர்தான் குறைகளற்ற மனிதர். அவரது உள்ளத்தில் இருள் இருக்காது. அவரது உள்ளத்தின் ஆழத்திலும், அமைதியிலும், சாந்தி, அமைதி, ஒளி, மகிழ்ச்சி ஆகியவை தவிர அங்கு வேறு எதுவும் இருக்காது. இப்படிப்பட்ட மனிதன் தான் குறைகளற்ற மனிதர். இப்படிப்பட்ட மனிதனால் எதையும் செய்ய முடியும். எதுவும் அவனைக் கட்டுப்படுத்தாது. அவர் கர்மாக்களை உருவாக்குவதில்லை. அவர் சங்கிலித் தொடர் செயல்களை உரு வாக்குவதில்லை. அவர் ஒரு புதிய பிறவியை உருவாக்குவ தில்லை. அவர் சாலையின் முடிவுக்கு வந்து விட்டவர் ஆகிறார்.

குறைகளற்ற ஒருமனிதர், விழிப்புநிலை அடைந்த ஒருமனிதர், மீண்டும் பிறப்பதில்லை. அவரது தன்னுணர்வுக்கு என்ன நடக்கிறது? அது இந்த பிரபஞ்சத்தின் ஒரு பகுதியாக ஆகிறது. ஒரு பனித்துளியானது தாமரை இலையில் இருந்து சமுத்திரத்தில் நழுவி விழுவதைப்போல ஆகிவிடுகிறது. ஒன்று

பனித்துளியானது சமுத்திரமாக ஆகிறது அல்லது சமுத்திரம் பனித்துளியாக ஆகிறது. நீங்கள் எந்த வழியிலும் அதைக் கூறலாம். ஆனால் இதுதான் எல்லா சமயப்பற்றின் இறுதி குறிக்கோள். அதாவது பனித்துளியானது சமுத்திரத்தில் நழுவி விழுவதுதான் இறுதி குறிக்கோளாகும்.

''யார் கர்மாக்களை உருவாக்குவது இல்லையோ அவர்கள் தர்மத்தை அடைகிறார்கள்'' என்று இந்த சூத்திரங்கள் கூறுகின்றன.

யார் ஒருவர் முழு தன்னுணர்வுடன் இருக்கிறாரோ அவர் தனது சுய இயல்பை அறிந்து கொள்கிறார். அதுதான் தர்மத்தின் அர்த்தம். நீங்கள் கர்மாவை உருவாக்கும்போது, நீங்கள் உங்களது கர்மாவோடு மீண்டும் பிறக்கிறீர்கள். நீங்கள் கர்மாவை உருவாக்காதபோது, நீங்கள் கர்மாவோடு மறைந்து விடுகிறீர்கள்.

ஞானிகளின் போதனையை யார் புரிந்து கொள்கிறாரோ அவர் ஞானியாக இருக்கிறார். யார் ஒருவர் மரணிப்பவர்களின் போதனையைப் புரிந்து கொள்கிறாரோ அவர் மரணம் அடைபவராக இருக்கிறார்.

நீங்கள் ஒரு மிகப்பெரிய தத்துவ மேதையின் மாணவராக இருக்கலாம். ஆனால் அவர் ஒரு மரணிப்பவர். நீங்கள் மரணத்தை கண்டு எவ்வளவு பயப்படுகிறீர்களோ. அதைப் போன்றே அவரும் பயப்படுகிறார், அல்லது ஒருவேளை இன்னும் அதிகம் பயப்படலாம். ஏனெனில் அவர் வாழ்வு, சாவு, பிறப்பு ஆகியவை குறித்து அதிகம் சிந்திக்கிறார். அவர் எந்த அளவுக்கு அதிகம் சிந்திக்கிறாரோ அந்த அளவுக்கு ஒரு பயத்தை உருவாக்குகிறார்.

சிக்மண்ட் பிராய்டு வெறுமனே காமம் பற்றி அதிகம் சிந்தித்து கொண்டு இருந்ததால் தான் மரணம் பற்றி அதிகம் சிந்தித்தார். காமம் என்பது வாழ்வின் ஒருபக்கம், ஆரம்பமாகும். மரணம் என்பது வாழ்வின் அடுத்தப்பக்கம், வாழ்வின் முடிவாகும். காமத்தை பற்றி நினைக்கின்ற ஒரு மனிதன் மரணத்தைப் பற்றி சிந்திப்பதை தவிர்க்க முடியாது. அவர் சிந்தித்தே ஆக வேண்டும். காமமும், மரணமும் மிகுந்த ஆழ்ந்த தொடர்புடையவை.

தென் ஆப்பிரிக்காவில், ஒருவகை சிலந்திகள் இருப்பதைப் பார்த்து நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். அந்த சிலந்திப்பூச்சிகள் தங்களது வாழ்நாளில் ஒரே ஒருமுறை மட்டுமே அதன் இணையுடன் இன்பத்தை அனுபவிக்கின்றன; ஏனெனில் அவற்றுக்கு அடுத்த சந்தர்ப்பம் ஒருபோதும் எழுவதில்லை. அவை இன்பத்தை அனுபவிக்கும்போது, பெண் சிலந்தியானது ஆண் சிலந்தியை சாப்பிட ஆரம்பித்துவிடுகிறது. ஆண் சிலந்திக்கு நீண்ட கால்கள் உள்ளன. எனவே பெண் சிலந்தி கால்களை சாப்பிடுவதில் இருந்து ஆரம்பிக்கிறது. அப்போது ஆண் சிலந்தி அப்படிப்பட்ட தொரு பரவச நிலையில் இருக்கிறது. அது தனது தன்னுணர்வில் இருப்பது கிடையாது. அதன் உடலுறவின் உச்சகட்ட பரவசநிலை முடிந்துவிடும்போது, ஆண் சிலந்தியும் கூட முடிந்துபோகிறது. இது ஒவ்வொரு நாளும் நடக்கிறது என்பது ஒவ்வொரு ஆண் சிலந்திக்கும் தெரியும். ஆனால் என்ன செய்வது? கூடிய விரைவில் ஒவ்வொரு ஆண் சிலந்தியும் அதே மாதிரி மாட்டிக்கொள்கிறது. காமமும், மரணமும் அந்த உயிர் இனத்தில் மிகவும் நெருக்கமாக வந்துவிட்டன. மனித உயிர்களிடம் அந்த அளவுக்கு நெருக்கமில்லை. ஆனால் அது வெகு தொலைவிலும் கூட இல்லை. காமம் என்பது மரணத்தின் ஆரம்பம்.

சிக்மண்ட் பிராய்டு மரணம் குறித்து மிகவும் பயந்தார். அவருக்கு முன்னால் மரணத்தைப்பற்றி யாராவது கலந்துரை யாடலை உருவாக்கினால் அவர் அதை தடுத்தார். ஆனால் அவரிடம் நூற்றுக்கணக்கான சீடர்கள் இருந்தனர். ஒருவேளை இந்த நூற்றாண்டு முழுவதிலும் அவர்தான் மாபெரும் ஆசிரியர்களில் ஒருவராக இருந்தார். மன இயல் ஆய்வாளர்கள் என்னும் மிகப்பெரிய தொழிலை அவர் உருவாக்கினார். அவரிடமிருந்து உளவியல் ஆய்வைக் கற்றுக்கொண்டவர்கள். தாங்கள், அந்த உளவியல் ஆய்வை நிறுவிய, அதன் அசல் குருவிடம் இருந்து கற்றுக்கொண்டவர்கள் என்று அவர்கள் பெருமையாக கூறிக்கொண்டார்கள்.

ஆனால் சிக்மண்ட் பிராய்டு மரணத்திற்கு அதிகம் பயப்பட்டார் என்பது அவர்களுக்குத் தெரியாது. மரணம் என்று

கூறினாலே போதும், அவர் அப்படி கூறியதற்காக வாழ்நாளில் மூன்று முறை மயக்கமடைந்தார். யாரோ ஒருவர் வெறுமனே 'மரணம்' என்ற வார்த்தையை குறிப்பிட்டுவிட்டதால் அவர் வெறுமனே தன்நினைவை இழந்தார். அந்த வார்த்தைகூட அவருக்கு தனது சொந்த மரணத்தை நினைவுபடுத்திவிட்டது. எந்த ஒரு கல்லறைத் தோட்டத்தின் வழியாகவும் அவர் போக மாட்டார், அந்த கல்லறைத் தோட்டத்தை தவிர்ப்பதற்கு பல மைல்தூரம் சுற்றிச் செல்லவேண்டும் என்றாலும்கூட அவர் அப்படி சுற்றிக்கொண்டு செல்வார். ஆனால் ஒருபோதும் கல்லறைத் தோட்டம் வழியாக போகமாட்டார். தனது நண்பர்கள் யாராவது இறந்துவிட்டாலும்கூட அவர்களுக்கு இறுதி மரியாதை செய்வதற்கு அவர் ஒருபோதும் கல்லறைத் தோட்டத்திற்கு சென்றதில்லை. ஒருபோதும் சென்றதில்லலை! அவர் ஒரே ஒருமுறை மட்டுமே சென்றார் ஆனால் அதன்பிறகு அவர் ஒருபோதும் திரும்பிவரவே இல்லை!

*மரணிப்பவர்களின் போதனையை புரிந்துகொள்பவர்கள் மரணிப்பவராக இருக்கிறார். மரணிப்பவர்களின் போதனையை கைவிட்டுவிடுகின்ற ஒரு மரணிப்பவர், ஞானியின் போதனை களைப் பின்பற்றினால் அவர் ஒரு ஞானியாக ஆகிவிடுகிறார்.*

மரணத்திற்கு பின்னர் வாழ்க்கை இருக்கிறது என்பதை அறிந்து கொள்ளாதவர்களின் போதனைகளை கைவிட்டு விடுங்கள். அப்படியானால் அவர்களுக்கு எதுவுமே தெரிய வில்லை. அவர்களின் கல்வி அறிவு எல்லாம் வெறும் வார்த்தை களால் ஆனது. அதிகம் உரைநடை போன்றது. உண்மையில் அது வெறும் குப்பை மற்றும் பயனற்றது.

நீங்கள் ஒரு சீடராக இருக்க விரும்பினால், மரணத்தின் பிறகு உள்ள ஒன்றினை யார் அறிந்திருக்கிறாரோ அவரை தேர்வு செய்யுங்கள். மரணத்திற்கு அப்பால் உள்ள ஒன்றினை அறிந்துள்ள ஒருவர் கண்டிப்பாக மனதிற்கு அப்பால் உள்ள ஒன்றினையும் அறிந்த ஒருவராக இருந்தாக வேண்டும். ஏனெனில் அவை ஒரே மாதிரியான அனுபவங்கள்.

*ஆனால் இந்த உலகில் உள்ள முட்டாள்கள் வெகு தொலைவில் உள்ள ஆழ்ந்த அறிவுடையவர்களை காண்பதற்கே முன்னுரிமை அளிக்கின்றனர்.*

இது மிகவும் முக்கியமான, சிறப்புவாய்ந்த வாக்குமூலம். இந்த உலகில் உள்ள முட்டாள்கள் வெகு தொலைவில் உள்ள ஆழ்ந்த அறிவுடையவர்களை காண்பதற்கே முன்னுரிமை அளிக்கின்றனர். இருபத்து ஐந்து நூற்றாண்டுக்கு பின்னால் கௌதமபுத்தரை வழிபடுகின்ற மக்கள் இருக்கின்றனர். அதில் பயம் கிடையாது. புத்தர் உங்களை எதுவும் செய்துவிட முடியாது. உயிருள்ள புத்தரை நேர்கொள்வது ஆபத்தானது. அவரால் உங்களை வெற்றி கொள்ள முடியும்.

ஆனால், இருபத்து ஐந்து நூற்றாண்டுகளுக்கு முன்பு இறந்துவிட்ட ஒரு புத்தரை வழிபடுவது என்பது ஆபத்தில்லாதது. நீங்கள் ஒரு புத்தர் சிலையை எங்கு வேண்டுமானாலும் எடுத்துக்கொண்டு செல்லலாம். நீங்கள் என்ன விரும்புகிறீர்களோ அதை அந்த சிலைக்கு செய்யலாம். அந்த சிலை உங்களை எதுவும் செய்யமுடியாது. ஆனால் ஒரு உயிருள்ள புத்தர் ஆபத்தானவர். அவரோடு தொடர்பில் இருப்பது தொடர்ந்து ஆபத்தானதாகும். ஏனெனில் நீங்கள் மறைந்துபோய் விடுகின்ற ஒரு இலக்கினை நோக்கி அவர் உங்களை எடுத்துச் செல்கிறார். நீங்கள் இருப்பீர்கள். ஆனால் ஒரு ஆணவமாக இல்லாமல், வெறுமனே ஒரு தூய்மையான தன்னுணர்வாக இருப்பீர்கள்.

ஒரு உண்மையான குரு நமக்கு மரணம் போன்றவர் என்று உபநிடதங்கள் கூறுகின்றன. சீடனின் நான் என்றதும் ஆணவத்தை அவர் கொன்றுவிடுகிறார். அவர் சீடனை ஒன்றுமில்லாதவனாக ஆக்கிவிடுகிறார்.

முட்டாள்கள், இயேசுவை வழிபடுவதை மிகவும் நேசிக்கிறார்கள். ஆனால், இயேசுவோடு சமகாலத்தில் வாழ்ந்தவர்கள் அவரை சிலுவையில் அறைந்தனர். இது மிகவும் வினோதமான ஒரு உலகம். இயேசு வாழ்ந்த காலத்தில் உள்ள இலக்கியங்களில் இயேசுவின் பெயர்கூட குறிப்பிடப்படவில்லை. அவரது

சீடர்களைத் தவிர, வேறு யாரும் அவரைக் கண்டு கொள்ளவும் இல்லை. இது வினோதமாக இருக்கிறது. அவரோடு சமகாலத்தில் இருந்தவர்களால் அவர் உயிரோடு இருப்பதை தாங்கிக் கொள்ள முடியாதவர்கள். இப்படிப்பட்ட ஒரு மனிதரை, அவருக்கு முப்பத்துமூன்று வயது இருக்கும் போதே அவரை சிலுவையில் அறைந்தனர். ஆனால் அவர்கள் அவரது பெயரைக்கூட குறிப்பிட வில்லை என்றாலும் கூட, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு பிறகு, உலகில் பாதி கிறிஸ்தவர்களாக இருக்கின்றனர். இது வினோத மானது! இயேசு இன்று உயிரோடு வந்தாலும், இதே கிறிஸ்த வர்கள் அவரை மீண்டும் சிலுவையில் அறைந்து விடுவார்கள்.

இது நான் கேள்விப்பட்டது. நியூயார்க்கில் உள்ள ஒரு தேவாலயத்தில், ஞாயிற்றுக்கிழமை காலையில், எல்லா ஏற்பாடுகளும் சரியாக செய்யப்பபட்டுள்ளதா அல்லது இல்லையா என்பதைப் பார்ப்பதற்கு பிஷப் கொஞ்சம் முன்னதாக வந்துவிட்டார்; ஏனெனில் ஞாயிற்றுக்கிழமைகளில் மட்டுமே கிறிஸ்தவர்கள் மதப்பற்றுள்ளவராக இருக்கின்றனர். அது ஒரு ஞாயிற்றுக்கிழமை மதம். பிஷப் உள்ளே நுழையும்போது இயேசு கிறிஸ்து போன்று மிகச்சரியான் தோற்றமுள்ள இளைஞனைக் கண்டார். அவரது இதயம் மூழ்கியது. தாம் இறந்து விடுவதுபோல அவர் உணர்ந்தார். ''அட கடவுளே, அவர் ஏன் இங்கு வந்திருக்கிறார்? அவர் எந்த பாடத்தையும் கற்றுக்கொண்டதாக தெரியவில்லை. அவர் உயிரோடு இருந்தபோது மக்கள் அவருக்கு என்ன செய்தார்கள் என்பதில் இருந்து அவர் எந்த பாடமும் கற்றுக்கொள்ளவில்லை. ஆனால் அவர் மீண்டும் திரும்பி வந்திருக்கிறார்! ஆனால் அவர் யார் என்று விசாரிப்பது நல்லது. ஒருவேளை அவன் இயேசு போன்ற தோற்றமளிக்கின்ற ஒரு ஹிப்பியாக கூட இருக்கலாம். எனவே அவர் அந்த இளைஞனின் அருகில் சென்று, ''நீ யார்?'' என்று கேட்டார்.

இயேசு அவரைப் பார்த்து அவரிடம், ''இது ஒரு விநோதமான கேள்வி. இந்த பூமியில் நீ எனக்கு பிரதிநிதியாக இருக்கிறாய். ஆனால் உன்னால் என்னை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லையா? நான்தான் இயேசுகிறிஸ்து,'' என்று கூறினார்.

அந்த பிஷப் உடனடியாக வாடிகனில் உள்ள போப் பாண்டவருக்கு தொலைபேசியில், ''இப்போது நான் என்ன செய்ய வேண்டும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்? இயேசு கிறிஸ்து இங்கு தேவாலயத்தில் இருக்கிறார்,'' என்று கூறினார்.

அதற்கு போப்பாண்டவர், ''நானே இங்கு ஆயிரத்தோரு கவலைகளால் சங்கடப்பட்டுக் கொண்டு இருக்கிறேன். நீங்கள் இன்னும் ஒரு சங்கடத்தை கொண்டு வருகிறீர்கள். என்ன செய்வது என்று நீங்களே தீர்மானிக்கமுடியாதா? முதல் காரியமாக போலீஸிற்கு தகவல் தெரிவியுங்கள். இரண்டாவது நீங்கள் சுறுசுறுப்பாக இருப்பது போன்று காட்டிக் கொள்ளுங்கள்,'' என்றார்.

இயேசுகிறிஸ்து திரும்பவும் வந்தாலும்கூட, முன்பு அவர் எப்படி நடத்தப்பட்டாரோ, அதிலிருந்து வேறுவிதமாக அவர் நடத்தப்பட போவதில்லை. அதனால்தான் அவர் வரவில்லை; இல்லையெனில், ''நான் விரைவில் வருவேன்,'' என்று வாக்குறுதி அளித்திருக்கிறார். இரண்டாயிரம் ஆண்டுகள் ஆகிவிட்டது அந்த விரைவில் என்பது இன்னமும் முடியவில்லை. எந்த ஒரு புத்திசாலி மனிதனும் திரும்ப வரமாட்டான். இதுவரை பட்டதுபோதும். ஒரு அனுபவமே போதுமானது. மெய்ஞ்ஞானம் அடைந்த மக்களோடு, விழிப்புணர்வு அடைந்த மக்களோடு, அவர்களோடு சமகாலத்தில் இருந்தவர்கள் எப்போதும் தவறாகவே நடந்து கொண்டுள்ளனர். அதே மக்கள் எப்போதும் இறந்து போன புனிதர்களை, இறந்துவிட்ட ஞானிகளை, இறந்துவிட்ட தீர்க்கதரிசிகளை, இறந்துபோன மேசையாக்களை வழிபட்டு வந்திருக்கிறார்கள்.

கௌதம புத்தர் உயிரோடு இருக்கும்போது குறைந்த பட்சமாக ஐந்துமுறை அவரைக் கொலை செய்வதற்கான முயற்சி மேற்கொள்ளப்பட்டது. ஆனால் இப்போது இந்த உலகில் வேறு யாருக்கும் இருப்பதை விடவும் அதிக சிலைகள் கௌதம புத்தருக்கு இருக்கிறது. இதே மக்கள்தான் அவரைக் கொல்வதற்கு ஐந்து முறை முயற்சி செய்தார்கள். ஆனால், முட்டாள்கள், வெகு

*தொலைவில் உள்ள ஆழ்ந்த அறிவுடையவர்களை பார்ப்பதற்கு முன்னுரிமை அளிக்கின்றனர்.*

ஏனெனில் அருகில் இருப்பது ஆபத்தானது. அவர்கள் உங்களை மாற்றி விடுவார்கள். ஆனால் இங்கு யாரும் மாற்றமடைவதற்கு விரும்பவில்லை. தமது சொந்த மனம் அற்றநிலைதான் ஞானியாக இருக்கிறது என்பதை அவர்கள் நம்புவதில்லை.

உண்மை என்னவென்றால், காலத்திலும், இடத்திலும் நீங்கள் வெகு தொலைவில் பார்க்க வேண்டியதில்லை. நீங்கள் வெறுமனே உங்களுக்குள் பாருங்கள். அப்போது இந்த நொடிப்பொழுதிலேயே, விழிப்படைந்த ஒருவரை உங்களுக்குள் கண்டுகொள்ள முடியும். இருபத்துஐந்து நூற்றாண்டுகளுக்கு முன்பு இருந்த புத்தரை அல்ல, இந்த நொடிப் பொழுதிலேயே உங்களுக்குள் புத்தரைக் காணமுடியும். நீங்கள் அவ்வளவுதூரம் செல்ல வேண்டியதில்லை. மேலும் பின்னோக்கி செல்வதற்கு எந்த ஒரு வழியும் கிடையாது. கடவுள் இந்த உலகத்தை படைக்கும்போது மீண்டும் திரும்பிச் செல்வதற்கான பல்சக்கர அமைப்பை ஏற்படுத்த மறந்துவிட்டார். நீங்கள் வெறுமனே முன்னோக்கி மட்டுமே செல்ல முடியும்.

ஹென்றிபோர்டும் கூட ஒரு மாடலாக காரை உருவாக்கிய போது அதில் பின்னோக்கி செல்கின்ற பல்சக்கர அமைப்பை (Gear) ஏற்படுத்த மறந்துவிட்டார். கடவுளே மறந்து விடும்போது, இந்த அப்பாவி ஹென்றிபோர்டை நாம் அனுமதித்து விடலாம்! அவர் காரினுள் ஏறி அமர்ந்த பின்னர்தான் இது மிகவும் கடினமான பிரச்சினை என்பதை உணர்ந்தார். நீங்கள் உங்களது வீட்டைக் கடந்து ஐந்து அடி தூரம் சென்றுவிட்டாலும்கூட மீண்டும் உங்களது வீட்டிற்கு திரும்பிவருவதற்கு அந்த நகரம் முழுவதையும் சுற்றிக் கொண்டுதான் வரவேண்டும். ஹென்றி போர்டின் அறிவுத்திறமைதான் பின்னோக்கி செல்லும் கியரை உருவாக்கியது. ஆனால் இப்போதும் கூட கடவுள் அதைக் கற்றுக் கொள்ளவில்லை. ஆனால் கடவுள் அங்கு ஹென்றி போர்டை சந்திக்கும்போது உங்களுக்கு பின்னோக்கி செல்கின்ற

அமைப்பை உருவாக்கினார் என்றால் நீங்கள் இயேசு, அல்லது கௌதமபுத்தர் அல்லது மகாவீரர் அல்லது கிருஷ்ணர் ஆகிய வர்களைப் பார்ப்பதற்கு உங்களால் போகமுடியும்.

ஆனால் அப்படி ஏதாவது பின்னோக்கி செல்கின்ற அமைப்பு கிடைத்தாலும்கூட யாரும் அதைப் பயன்படுத்தமாட்டார்கள் என்பது எனது எண்ணம். ஏனெனில் இப்படிப்பட்ட பிரமாண்டத்தை நேர்கொள்வதற்கு தனிமனிதர்களுக்கு தைரியம் தேவை. மரணமடைகின்ற ஒரு மனிதனிடமிருந்து மரணமடை யாத ஒரு கடவுளாக உருமாற்றம் அடைவது தான் இந்த உலகில் மிகப்பெரிய தைரியமாகும்.

*"புரிதல் இல்லாத மக்களுக்கு மத்தியில், இந்த சூத்திரத்தை போதிக்காதீர்கள்" என்று இந்த சூத்திரங்கள் கூறுகின்றன.*

ஆனால், நீங்கள் எங்குதான் இதை போதிப்பது? மக்களிடம் புரிதல் இருந்தால், அவர்களுக்கு இந்த சூத்திரம் தேவைப்படாது. புரிந்து கொள்ளாத மக்களுக்கு மட்டுமே இந்த சூத்திரம் தேவை. எனவே, புரிதல் இல்லாத மக்களுக்கு மத்தியில் இந்த சூத்திரத்தை போதிக்காதீர்கள் என்று கூறுகின்ற இந்த சூத்திரத்தை என்னால் ஒத்துக்கொள்ள முடியாது.

கருணையோடு இருங்கள், எல்லாருக்கும் போதியுங்கள். அவர்களால் புரிந்துகொள்ள முடியும் என்றால் நல்லது. அவர்களால் புரிந்துகொள்ள முடியவில்லை என்றால், ஒருவேளை அவர்களை அறியாமலேயே சில விதைகள் அவர்களின் உள்ளத்தில் விழலாம். அதன்பின்னர் சில நாட்களில் வசந்தம் வருகிறது; அந்த விதைகள் முளைவிடலாம். ஒருவேளை அவை நீங்கள் சொன்னதை கேட்காமல் இருக்கலாம். ஆனால் ஒருவர் அதே விஷயத்தை மீண்டும் கூறும்போது, இதை இதற்குமுன்பு எங்கேயோ கேட்டிருக்கிறோமே, இதில் ஏதாவது கண்டிப்பாக இருந்தாக வேண்டும் என்று ஒருவேளை உணரலாம்.

புரிதல் இல்லாத மக்களுக்கு ஒருவர் தொடர்ந்து கூறிக் கொண்டே போக வேண்டும். ஏனெனில் அவர்கள் புரிதல் இல்லாத மனிதர்களாக இருந்தால் அவர்களிடம் புரிந்து கொள்வதற்காக சாத்தியங்கள் செயல்படாமல் இருக்கிறது. நீங்கள்

அதை வெறுமனே தாக்கிக் கொண்டே செல்லுங்கள். அவற்றுக்கு கொஞ்சம் அதிகம் தாக்குதல் நடத்தினால் போதும், அவர்களது உள்ளத்தை அடைவதற்கு அந்த போதனையை கொஞ்சம் அதிகம் திரும்பத்திரும்ப கூறினால் போதுமானதாகும். அவர்களின் மண்டை ஓடு மிகவும் கடினமாக உள்ளது.

ஆனால், அன்பு இல்லாமல் இருக்கும்படி போதிக்கின்ற, கருணை இல்லாமல் இருக்கும்படி போதிக்கின்ற எந்த சூத்திரத்தையும் கவனிக்காதீர்கள்.

*''எல்லாத் தோற்றங்களும் தோற்றங்கள் அல்ல என்று நீங்கள் கண்டு கொள்ளும்போது, நீங்கள் ததாகதரைப் பார்க்கிறீர்கள்,'' என்று சூத்திரங்கள் கூறுகின்றன.*

மனமானது அதன் மாயைகள், கனவுகள், எண்ணங்கள், மற்றும் கற்பனைகள் ஆகிய எல்லாவற்றோடும் மறைந்து விடும்போது, நீங்கள் உங்களுக்குள் விழித்தலைக் காண்கிறீர்கள். இதை நீங்கள் புத்தர் என்று அழைக்கலாம், இதை நீங்கள் கிறிஸ்து என்று அழைக்கலாம். இவைகள் வெறும் பெயர்கள் மட்டுமே, ஆனால் ஒரு விஷயம் மட்டும் நிச்சயமானது, அதாவது உங்களது மனமானது மறைந்து விடுகின்ற அந்த நொடிப்பொழுதில், தெய்விகமான ஒன்று உங்களுக்குள் தோன்றுகிறது. மேலும் அது ஒரு பெரிய மரமாக நிறைய பசுமையோடு, மிகப்பெரிய பழங்கள் மற்றும் மலர்களோடு வளர்கிறது.

*சத்தியத்திற்கான மிகப்பல வாசல்கள் எல்லாம் மனதில் இருந்து தான் வருகின்றன. மனதின் தோற்றமானது பரந்த வெளிபோன்று தெள்ளத்தெளிவாக இருக்கும்போது, அவை போய்விடுகின்றன.*

*மரணிப்பவர்கள், உயிரோடு இருக்கும்போது அவர்கள் மரணம் பற்றி கவலைப்படுகின்றனர். அவர்கள் நிறைந்து இருக்கும்போது அவர்கள் பசி குறித்து கவலைப்படுகின்றனர். அவர்களுடையதுதான் மிகப்பெரிய நிச்சயமற்ற நிலையாக இருக்கிறது. ஆனால் ஞானிகள் கடந்த காலத்தை நினைத்துப் பார்ப்பதில்லை........*

*ஏனெனில் கடந்த காலம் என்பது இப்போது இல்லை.........*

*அவர்கள் எதிர்காலம் பற்றி கவலைப்படுவதில்லை.*

*ஏனெனில் எதிர்காலம் என்பது இன்னமும் வரவில்லை.*

அல்லது அவர்கள் நிகழ்காலத்தையும் பிடித்து தொங்கிக் கொண்டு இருப்பதில்லை.

ஏனெனில் நிகழ்காலம் என்பது ஒவ்வொரு நொடியும் ஓடிப்போய்க் கொண்டே இருக்கிறது. எனவே அதைப் பிடித்து தொங்கிக் கொண்டிருப்பதில் என்ன அர்த்தம் உள்ளது? அதை பற்றிக் கொண்டு இருப்பது துன்பத்தை கொண்டு வருகிறது. எனவே ஞானிகள் கடந்த காலத்தை பற்றி நினைப்பதில்லை. அது போய்விட்டது. அவர்கள் நிகழ்காலத்தின் மீது பற்றுக் கொள்வதில்லை. அது போய்க்கொண்டே இருக்கிறது. அவர்கள் எதிர்காலம் பற்றி நினைப்பதில்லை. அது இன்னமும் வரவில்லை. அதைப்பற்றி நினைத்துக் கொண்டிருப்பதில் எந்த அர்த்தமும் இல்லை. அது வரலாம், வராமலும் போகலாம்.

*நொடிக்கு நொடி அவர்கள் வழியைப் பின்பற்றுகிறார்கள்.*

வெறும், இந்த ஒரு வார்த்தையில், மதத்தின் ஒட்டுமொத்த ரகசியமும் மறைந்திருக்கிறது. நொடிக்கு நொடி அவர்கள் வழியைப் பின்பற்றுகிறார்கள். முழு விழிப்புணர்வில், தானே நடக்கின்ற செயல்களோடு, நொடிக்கு நொடி, அவர்கள் மகிழ்ச்சியாக, அமைதியாக, வாழ்ந்து கொண்டே செல்கின்றனர். மெதுவாக, மெதுவாக அவர்களின் புரிதல் ஆழமாகும்போது, அவர்களின் விழிப்புணர்வானது மிகஉயர்ந்த உச்சத்தை அடையும்போது, ஒவ்வொரு நொடிப்பொழுதும் ஒரு சொர்க்கமாக ஆகிறது. அதன்பின்னர் இந்த மேகங்களுக்கு இடையே, எங்கோ சொர்க்கம் இருக்கிறது என்று நீங்கள் நினைக்க மாட்டீர்கள்.

அதன்பின்னர் சொர்க்கம் இங்கேயே இருக்கிறது.

அதன்பின்னர் சொர்க்கம் இந்தப்பொழுதிலேயே இருக்கிறது.

**யா**ராவது ஒருவர் மெய்ஞ்ஞானத்தை அடைந்தே தீருவது என்று தீர்மானித்து விட்டால், அவர் பயிற்சி செய்யவேண்டிய மிக முக்கியமான செய்முறை என்ன?

ஏனைய எல்லா செய்முறைகளையும் உள்ளடக்கிய மிக முக்கியமான செய்முறை என்பது மனதைப் பார்த்தல் அல்லது கவனித்தலாகும். ஆனால் ஒரு செய்முறையானது ஏனைய எல்லா செய்முறைகளையும் எப்படி உள்ளடக்க முடியும்?

மனம் என்னும் வேரில் இருந்துதான் எல்லா விஷயங்களும் வளர்கின்றன. உங்களால் மனதைப் புரிந்து கொள்ளமுடியும் என்றால், மற்றவை எல்லாம் உள்ளடங்கி விடுகிறது. அது ஒரு மரத்தைப் போன்றது. அதன் பழங்கள், மலர்கள், அதன் கிளைகள் மற்றும் இலைகள், எல்லாம் அதன் வேரினைச் சார்ந்தே இருக்கிறது. மரத்தின் வேரினை நீங்கள் பேணி வளர்த்தால் ஒருமரம் பல்கிப்பெருகுகிறது. அதன் வேரை நீங்கள் வெட்டிவிட்டால், அது செத்துப்போகிறது. மனதைப் புரிந்து கொள்கிறவர்கள் குறைந்த முயற்சியோடு மெய்ஞ்ஞானத்தை அடைகின்றனர். மனதைப் புரிந்து கொள்ளாதவர்கள் வீணாகப் பயிற்சி செய்கின்றனர். நல்லது கெட்டது ஆகிய ஒவ்வொன்றும் உங்களது சொந்த மனதில் இருந்துதான் வருகிறது. மனதிற்கு அப்பால் உள்ள ஒன்றினைக் காண்பது சாத்தியமில்லாததாக இருக்கிறது.

ஆனால் மனதைக் கவனித்தல் என்பது எப்படி புரிதல் என்று அழைக்கப்பட முடியும்? ஒரு மாபெரும் போதிசத்வர், குறைகளற்ற ஞானத்தில் ஆழ்ந்து ஆராயும்போது, அவர் உணர்ந்து

கொள்கிறார். அவரது மனதின் செயல்கள் இரண்டு நோக்கங்களைப் பெற்றிருக்கிறது. சுத்தமான மற்றும் அசுத்தமான நோக்கங்களாகும். சுத்தமான மனது நற்செயல்களில் சந்தோஷம் கொள்கிறது. அசுத்தமான மனம் தீயது பற்றியே நினைக்கிறது. அசுத்தத்தினால் பாதிக்கப்படாதவர்கள் முனிவர்களாகின்றனர். அவர்கள் துன்பத்தை கடந்து நிர்வாணத்தின் பேரானந்தத்தை அனுபவிக்கின்றனர். அசுத்தமான மனதில் மாட்டிக்கொண்டும், தங்களின் சொந்த கர்மாவில் மாட்டிக் கொண்டும் இருக்கின்ற மற்றவர்கள் அனைவரும் மரணிப்பவர்களாக இருக்கின்றனர். அவர்கள் மூன்று பகுதிகளிலும் அலைந்து திரிந்து, எண்ணற்ற மனவேதனையில் கஷ்டப்படுகின்றனர். இவை எல்லாம் ஏன் எனில் அவர்களின் அசுத்த மனமானது அவர்களின் உண்மையான ஆன்மாவை இருளுடையதாக ஆக்கிவிடுகிறது.

''மரணம் அடைபவர்களின் உடலில், அழிக்க முடியாத புத்த இயல்பு இருக்கிறது. சூரியனைப்போல, அதன் ஒளி முடிவற்ற பரந்த வெளியை நிரப்புகிறது. ஆனால் ஐந்து நிழல்களைக் கொண்ட கரு மேகங்களால் மறைக்கப்படும்போது, அது ஒரு ஜாடிக்குள் உள்ளே இருக்கின்ற வெளிச்சத்தைப்போல பார்வையில் இருந்து மறைந்திருக்கிறது'' என்று பத் நிலைகளின் சூத்திரங்கள் கூறுகின்றன.

மேலும் ''மரணமடைபவர்கள் எல்லாம் புத்தரின் இயல்பை பெற்றிருக்கின்றனர். ஆனால், அது, அவர்கள் தப்பிக்க முடியாதபடி உள்ள இருளினால் மூடப்பட்டிருக்கிறது, நமது புத்த இயல்பானது விழிப்புணர்வாக உள்ளது. விழிப்புணர்வுடன் இருப்பது, மற்றும் மற்றவர்களிடம் விழிப்புணர்வை உண்டாக்குவது மற்றும் விழிப்புணர்வை அடையாளம் கண்டு கொள்ளுதல், விடுதலை என்பதாக இருக்கிறது'' என்று நிர்வாண சூத்திரம் கூறுகிறது.

நல்லவை எல்லாவற்றிற்கும் விழிப்புணர்வு அதன் வேராக இருக்கிறது. விழிப்புணர்வு என்னும் இந்த வேரில் இருந்து தான் புண்ணியச் செயல்கள் நிறைந்த மரமும், நிர்வாண நிலையின் கனிகளும் வளர்கின்றன.

இன்றைய காலைச் சூத்திரங்கள் போதிதருமரின் ஊடுருவி உதித்த பிரசங்கம் (Break through sermon) என்று அழைக்கப் படுகிறது. ''Break through"' (ஊடுருவி உதித்தல்) என்கிற வார்த்தையை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.

'Break through' என்பதற்கு மிக அருகில் வருகின்ற வேறொரு வார்த்தையை நீங்கள் அறிவீர்கள். அது 'Break down' (உணர்ச்சி தடுமாற்றம்) என்பதாகும். மனதிற்கு இந்த இரண்டு சாத்தியங்களும் உள்ளது. மனம் முறுக்கேறுதல், கவலை, கோபம் ஆகியவற்றின் கீழ் மனம் உணர்ச்சி தடுமாற்றம் அடைய முடியும். ஆனால் உணர்ச்சி தடுமாற்றம் என்பது ஊடுருவி உதித்தல் அல்ல. உணர்ச்சி தடுமாற்றம் உங்களை மனதிற்கு கீழே கொண்டு வருகிறது; அது பைத்தியமாகிறது. ஊடுருவி உதித்தல் என்பது, ஆழ்ந்த அமைதியில், மிக உயர்ந்த விழிப்புணர்வில் மனதைக் கவனிப்பதில் இருந்து வருகிறது. அதன்பின்னர் நீங்கள் மனதிற்கு அப்பால் போய்விடுகிறீர்கள். மேலும் மனதிற்கு அப்பால் போய் தான் உண்மையான நல்லறிவு நிலையை அடைகிறீர்கள்.

மனம் என்பது வெறுமனே மத்தியில் இருக்கிறது. நீங்கள் இப்போது குழப்பம் என்பதைத் தவிர வேறு எதுவாகவும் இல்லை. உங்களால் அதற்கு அப்பால் போக முடியுமெனில், புத்திசாலித்தனம் உங்களுக்குள் வளர்கிறது. நீங்கள் கீழே போய்விட்டால், உங்களிடம் உள்ள கொஞ்ச புத்திசாலித்தனமும் மறைந்து போய்விடுகிறது.

ஆனால் எப்படி இருந்தாலும், ஊடுருவி உதிப்பதிலும் அல்லது உணர்ச்சி தடுமாற்றத்திலும், நீங்கள் மனதிற்கு வெளியே இருக்கிறீர்கள். அதனால்தான் ஒரு மெய்ஞ்ஞானிக்கும், ஒரு பைத்தியக்காரனுக்கும் இடையே குறிப்பிட்டட சில ஒற்றுமைகள் உள்ளன. பைத்தியக்காரன் ஒரு உணர்ச்சி தடுமாற்றத்திற்குள் போய்விட்டான். ஆனால் அவன் மனதைவிட்டு வெளியே இருக்கிறான். மெய்ஞ்ஞானம் பெற்ற மனிதர் மனதிற்கு அப்பால் சென்றுவிட்டார்; அது ஊடுருவி உதித்தலாகும். அவரும் கூட

மனதிற்கு வெளியே இருக்கிறார். ஆனால் அவர் மனதை ஊடுருவி அதற்கு அப்பால் உதித்து விட்டதால் அவர் முடிவான நல்லறிவு நிலையை, மனதினால் கூட கருத்தில் கொள்ளமுடியாத ஒரு நிலையை அடைந்து விடுகிறார்.

ஆனால் இதில் உள்ள ஒற்றுமை என்னவென்றால், இரண்டு பேரும் மனதிற்கு வெளியே இருக்கிறார்கள். மேலும் மனமானது அவர்கள் இருவரையும், மெய்ஞ்ஞானியாகவோ அல்லது பைத்தியக்காரன் என்பதாகவோ பொருள் விளக்கம் அளிக்க முடியும். அதனால் தான் கீழைநாடுகளிலும், மற்றும் மேலை நாடுகளிலும் ஒரு வினோதமான விஷயம் நடந்து கொண்டிருந்தது. மேலை நாடுகளில் அநேக மெய்ஞ்ஞானம் அடைந்த மக்கள் பைத்தியக்கார விடுதிகளில் இருக்கின்றனர். ஏனெனில் மேலை நாட்டு மனோதத்துவமானது மனதை ஊடுருவி உதிப்பதில் நம்பிக்கை கொள்வதில்லை. மனதிற்கு வெளியே போய்விடுகிறவர் யாராக இருந்தாலும், இங்கு கிடைக்கக்கூடிய ஒரே ஒரு பொருள் விளக்கம், அவன் பைத்தியமாகிவிட்டான் என்பதுதான்.

கீழை நாடுகளில், மெய்ஞ்ஞானிகளாக வழிபடப்பட்ட அநேக பைத்தியக்காரர்கள் இருக்கின்றனர். ஏனெனில் கீழை நாடானது மனதைவிட்டு வெளியே போவதை எப்போதுமே மனதை ஊடுருவி வெளியே உதிப்பதாகவே பொருள் விளக்கம் கொள்கிறது. மெய்ஞ்ஞானம்; அடையாத ஆனால் கடவுள் போன்று வழிபாடு செய்யப்பட்ட ஒரு சில பைத்தியக்காரர்களை நான் பார்த்திருக்கிறேன். ஜபல்பூருக்கு அருகில் உள்ள ஒரு இடத்தில் பாதிஉடல் முடக்குவாதத்தினால் பாதிக்கப்பட்ட, முற்றிலும் பைத்தியமான ஒரு மனிதன் இருந்தான். ஆனால் அவனைச் சுற்றிலும் ஆயிரக்கணக்கான மக்கள் கூடுவது வழக்கம். கூறுவதற்கு அவனிடம் எதுவும் கிடையாது, அவனது கண்களில் ஒளி கிடையாது, அவனது உயிர் உணர்வில் மகிழ்ச்சி இல்லை.

நான் வெறுமனே அங்கு சென்று அமர்ந்து கொண்டு அந்த மனிதனையும், மக்கள் என்ன செய்கிறார்கள் என்பதையும் கவனிப்பது வழக்கம். வெறும் தேநீர் மட்டுமே குடித்துக்கொண்டு

அவன் கிட்டத்தட்ட உயிர்வாழ்ந்தான். பாதி உடல் முடக்கு வாதத்தால் பாதிக்கப்பட்டிருந்ததால் தேநீர் குடிப்பதும் கூட அவனுக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது. பாதி வாயை மட்டுமே அவனால் அசைக்க முடியும்; அடுத்த பாதியை அசைக்க முடியாது. ஆகவே அவன் தேநீர் குடிக்கும்போதுக் கூட அவனது எச்சில் தேநீருக்குள் விழுந்து கொண்டிருந்தது. அது ஒரு அசிங்கமான காட்சியாக இருந்தது. ஆனால் அவனை பின்பற்றுபவர்கள் அவன் தேநீர் குடித்த கோப்பையை எடுத்து அவன் குடிக்காமல் வைத்துவிட்ட மீதி தேநீரை அங்கிருந்த மக்களுக்கு, கடவுளின் பிரசாதமாக வழங்குவார்கள்.

இந்த ஒட்டுமொத்த முட்டாள்தனத்தையும் நான் கவனித்தேன். மேலும் அந்த மனிதனால் ஒரு சிறுவார்த்தை கூட பேசவும் முடியாது. உலகில் வேறு எங்கு இருந்தாலும் அவன் கண்டிப்பாக பைத்தியக்கார விடுதியில் இருந்திருப்பான், ஆனால் இந்தியாவில் மனதின் உணர்ச்சி தடுமாற்றமும் கூட மனதில் ஊடுருவிச் சென்று உதித்தல் என்று தவறாகப் புரிந்து கொள்ளப் படுகிறது. மேலை நாடுகளில் மனதை ஊடுருவிச் சென்று உதிப்பதும் கூட மனதின் உணர்ச்சி தடுமாற்றம் என்பதாக தவறாகப் புரிந்து கொள்ளப்படுகிறது.

மனம் பற்றிய மேலைநாட்டு மனோதத்துவத்திற்கும் கீழைநாட்டுப் புரிதலுக்கும் இடையே ஒரு அபரிமிதமான இணைப்பு அவசியமாகிறது. இவை முற்றிலும், ஒன்றுக்கொன்று நேர் எதிரான பரிமாணங்கள். மனதின் உணர்ச்சி தடுமாற்றமானது உங்களை திரும்பவும் விலங்குகளின் நிலைக்கு கொண்டு வருகிறது. மனதினை ஊடுருவி உதிக்கின்ற நிலையான உங்களை, உங்களது இறுதி மலர்ச்சிக்கு, உங்களது புத்த நிலைக்கு கொண்டு வருகிறது. அவற்றின் நிகழ்வுகள் மிகவும் வேறு பட்டவை, தன்மையில் மிகவும் வித்தியாசமானவை என்பதால், அவற்றை எளிதல் வேறுபடுத்தி விடமுடியும். மனதை ஊடுருவி உதித்தல் என்பது தியானம் செய்கின்ற ஒருவருக்கு மட்டுமே நிகழ்கிறது. மனதின் உணர்ச்சி தடுமாற்றம் என்பது யாருடைய மனமானது மிகவும் முறுக்கேற்றப்பட்டு, அதன்மூலம் அவர் மன

இயந்திரத் தன்மையின் முழு கட்டுப்பாட்டையும் இழந்து, கீழே விழுந்து விடுகிறார்களோ அவர்களுக்கெல்லாம் உணர்ச்சி தடுமாற்றம் நிகழ்கிறது.

இந்த பிரசங்கத்தின் பெயர் அளவுகடந்த சிறப்பு மிக்கது. மெய்ஞ்ஞானிக்கும், பைத்தியத்திற்கும் குறிப்பிட்ட ஒற்றுமைகள் இருப்பது பல நூற்றாண்டுகளாக கீழை நாடுகளுக்கு தெரியும். அவர்கள் இருவரும் மனதிற்கு வெளியே இருப்பவர்கள். ஆனால் அந்த இடத்திலேயே அவர்களுக்குள் உள்ள ஒற்றுமை முடிந்துவிடுகிறது. அதில் ஒருவர் ஊடுருவி மனதிற்கு அப்பால், நட்சத்திரங்களை நோக்கி சென்றவர்; அடுத்தவர் இருள் நிறைந்த வெளிகளை நோக்கி கீழ்நிலைக்கு சென்றுவிட்டார். மனதை ஊடுருவி உதித்தல் என்பது தியானம் என்பதன் விஞ்ஞானமாகும்.

இனிமேல் சூத்திரங்கள்:

*யாராவது ஒருவர், மெய்ஞ்ஞானம் அடைந்தே தீருவது என்று தீர்மானித்துவிட்டால், அவர் பயிற்சி செய்யவேண்டிய மிக முக்கியமான செய்முறை என்ன?*

ஏனைய எல்லா செய்முறையையும் உள்ளடக்கிய மிக முக்கியமான செய்முறை என்பது மனதைப் பார்த்தல் அல்லது கவனித்தல் ஆகும்.

மனதைப் பற்றி தெரிந்து கொள்ளல் என்பது மனதிற்கு சாட்சியாக இருப்பதாகும். அந்த சாட்சி பாவனையானது பலம் நிறைந்ததாக வளரும்போது, நீங்கள் ஏற்கனவே உங்களது மனதிற்கு அப்பால் சென்றுவிட்டவராக உணர ஆரம்பித்து விடுவீர்கள். மெதுவாக, மெதுவாக அந்த தூரம் வளர்கிறது. உங்களது சாட்சி பாவனை சூரிய ஒளி மின்னும் சிகரத்தை அடைகிறது. ஆனால் மனமோ இருண்ட பள்ளதாக்கில், வெகு தொலைவில் விட்டு விடப்படுகிறது. அப்போதும்கூட உங்களால் எதிரொலிகளைக் கேட்கமுடியும். ஆனால் அவை உங்களை பாதிப்பதே கிடையாது. அவை வந்தடையும் எல்லைக்கு அப்பால் நீங்கள் இருப்பீர்கள்.

சீடன் கேட்கிறான்: ஆனால் ஒரு செய்முறையானது, ஏனைய எல்லா செய்முறைகளையும் எப்படி உள்ளடக்க முடியும்?

அதற்கு போதிதருமர் கூறுவதாவது: மனம் என்னும் வேரில் இருந்துதான் எல்லா விஷயங்களும் வளர்கின்றன. பைத்தியத்தில் இருந்து மெய்ஞ்ஞானம் வரையில் உங்களால் மனதை புரிந்துகொள்ள முடியும் என்றால், மற்றவை எல்லாம் உள்ளடங்கி விடுகின்றன. அது ஒரு மரத்தைப் போன்றது. அதன் பழங்கள், மலர்கள், அதன் கிளைகள் மற்றும் இலைகள் எல்லாம் அதன் வேரினைச் சார்ந்தே இருக்கிறது. மரத்தின் வேரினை நீங்கள் பேணி வளர்த்தால், ஒருமரம் பல்கிப் பெருகுகிறது. அதன் வேரை நீங்கள் வெட்டி விட்டால் அது செத்துப்போகிறது. மனதைப் புரிந்து கொள்பவர்கள் குறைந்த முயற்சியோடு மெய்ஞ்ஞானத்தை அடைகின்றனர். மனதைப் புரிந்து கொள்ளாதவர்கள் வீணாகப் பயிற்சி செய்கின்றனர். நல்லது, கெட்டது ஆகிய ஒவ்வொன்றும் உங்களது சொந்த மனதில் இருந்து தான் வருகிறது. மனதிற்கு அப்பால் உள்ள ஒன்றினைக் காண்பது சாத்தியமில்லாததாக இருக்கிறது.

உங்களைத் தவிர, மற்றும் மெய்ஞ்ஞானம் ஆகியவைதான் சூத்திரத்தோடு நான் சேர்த்துக் கொள்பவை.

இப்போது, சில முக்கியமான விஷயங்களை போதிதருமர் கூறுகிறார். முதலாவதாக: உங்களால் மனதைப் புரிந்து கொள்ள முடியும் என்றால் மற்றவை எல்லாம் உள்ளடங்கி விடுகின்றன.

ஆனால் இந்த ''புரிந்து கொள்ளுதல்'' என்கிற வார்த்தையை தவறாகப் புரிந்து கொள்ள முடியும், ஏனெனில் இப்போது மேலை நாட்டு மனோதத்துவம் தான் உலகம் முழுவதும் மேலோங்கிய மனோதத்துவமாக இருக்கிறது. கீழை நாடோ அல்லது மேலைநாடோ, இன்று மேலோங்கி இருக்கும் மனோதத்துவம் மனோதத்துவமேயாகும். ஆனால் மேலைநாட்டு மனோதத்துவம் மனதைப் பகுத்தாய்வதன் மூலம் அதைப் புரிந்துகொள்ள முயற்சிக்கிறது. அது ஒரு பலனற்ற முயற்சியாகும்.

அது வெங்காயத்தை உரித்துப் பார்ப்பது போன்றதாகும். நீங்கள் வெங்காயத்தின் ஒரு அடுக்கு தோலை உரித்தால் அடுத்த அடுக்கு அதிக புத்துணர்ச்சியுடன் உள்ளே இருக்கும். நீங்கள் அந்த அடுக்கை உரித்தால் அங்கு மற்றொரு அடுக்கு இருக்கிறது. மேலைநாட்டில் மக்கள் மனபகுப்பாய்வின் கீழ் இடைவிடாது பதினைந்து ஆண்டுகளாக இருக்கின்றனர்; இன்னமும் கூட அவர்களது மனதின் பகுத்தாய்வு முடிவு பெறவில்லை. பகுத்து ஆய்வதற்கு எதுவுமே இல்லை என்று சொல்லும் அளவுக்கு, ஒரு தனிமனிதனைக்கூட முழுமையாக, குறைகள் இல்லாமல் மனப்பகுப்பாய்வு செய்ய முடியவில்லை என்பதை மனப் பகுப்பாய்வாளர்களும் கூட உணர்ந்துவிட்டனர். ஆனால் இன்னமும், தாங்கள் முட்டாள்தனமான ஒன்றினை செய்து கொண்டு இருக்கிறோம் என்று புரிந்து கொள்கிற அகப்பார்வை யானது அந்த மனப்பகுப்பாய்வு செய்கின்றவர்களுக்கு இல்லை.

மனம் என்பதை முற்றிலும் பகுத்தாய்வு செய்வது. ஒருபோதும் முடியாது ஏனெனில் நீங்கள் பகுத்தாய்ந்து கொண்டு இருக்கும்போதே அது புதிய விஷயங்களை உருவாக்கிக் கொண்டே போகிறது. அது நிலையாக இருப்பதில்லை. ஒவ்வொரு வாரமும் இரண்டு அல்லது மூன்றுமுறை மனதை பகுப்பாய்வு செய்து கொண்டிருக்கிறீர்கள்; ஆனால் மீதி உள்ள நேரத்தில் மனம்ானது மேலும் அதிக எண்ணங்களை, மேலும் அதிக கற்பனைகளை, அதிக கனவுகளை உருவாக்கி கொண்டு இருக்கிறது. உங்களால் ஒரு முடிவுக்கு வரமுடியாது. அது வெறுமனே சாத்தியமில்லாதது. ஆனால் ஒரு முடிவான நிலைக்கு, அதன் அடி மட்டத்திற்கு உங்களால் வரமுடியவில்லை என்றால் மனதைப் பற்றிய உங்களது புரிதல் மிகவும் மேலோட்டமானதாகும்.

மனதை பகுப்பாய்வு செய்வதில் கீழை நாடுகள் நம்பிக்கை கொள்வதில்லை. அது விழிப்புணர்வை நம்புகிறது. இந்த வித்தியாசமானது இரண்டு வழிகளில் அபரிமிதமான முக்கியத்துவம் கொண்டது. முதலில், உங்களது மனதை பகுப்பாய்வு செய்வதற்கு நீங்கள் வேறு யாரையாவது சார்ந்து இருக்க வேண்டும். அது ஒருவரைச் சார்ந்து இருப்பதை

உருவாக்குகிறது. கிட்டத்தட்ட அது ஒருவிதமான அடிமைத்தனம் போன்றது. ஒருமுறை மக்கள் மனப்பகுப்பாய்வில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டுவிட்டால், அதன்பின்னர் அவர்களை அதில் இருந்து வெளியே கொண்டு வருவது மிகவும் கடினம், ஏனெனில் குறைந்தபட்சம் வாரத்தில் இரண்டு அல்லது மூன்றுமுறை மனப்பகுப்பாய்வு செய்து கொள்ளும்போது, அவர்கள் கொஞ்சம் பாரம் குறைந்தவர்களாக, லேசானவர்களாக, கொஞ்சம் இளைப்பாறுதல் அடைந்தவர்களாக உணர்கிறார்கள். ஆனால் அவர்களின் மனமானது மீண்டும் மன அழுத்தத்தை சேர்த்துக் கொள்கிறது ஏனெனில் மனதின் வேர்கள் வெட்டப்படவில்லை; நீங்கள் வெறும் இலைகளை மட்டுமே வெட்டிக் கொண்டிருந் தீர்கள்.

நீங்கள் ஒரு இலையை வெட்டினால் அதன்பிறகு என்ன நடக்கிறது என்று கவனியுங்கள். நீங்கள் ஒரு இலையை வெட்டிய அதே இடத்தில் மூன்று இலைகள் வரும். மரமானது உங்களது செயலை ஒரு சவாலாக எடுத்துக் கொள்கிறது. உங்களால் மரத்தை அழிக்க முடியாது; அதுவும் கூட ஒரு உயிரினம் தான். அது தான் உயிர் பிழைப்பதற்கான முயற்சியைக் காட்டுகிறது. இலைகளை வெட்டுவதன் மூலம் உங்களால் அதை அழிக்க முடியாது. எனவே நீங்கள் ஒரு மரம் பசுமை போர்த்தியதாக இருக்க விரும்பினால், நீங்கள் அதன் இலைகளை வெட்ட வேண்டும். அப்படி வெட்டுவதால் அதன் பசுமைப் போர்வையானது அடர்த்தியானதாக ஆகுமே தவிர மெலிந்து போகாது.

ஆகவே முதலில், மனப்பகுப்பாய்வில், நீங்கள் வேறு ஒருவரைச் சார்ந்து இருக்க வேண்டும். எனவே வேறு ஏதாவது போதை மருந்திற்கு அடிமை ஆவது போல் நீங்கள் மனப்பகுப்பாய்விற்கு அடிமை ஆகிவிடுகிறீர்கள். ஆம், மேலைநாட்டில் பரவலாக இருக்கின்ற இந்த மனப்பகுப்பாய்வை கீழைநாட்டினர் அவர்களிடம் இருந்து பெற்றுக்கொண்டு இங்கும் மனப்பகுப்பாய்வு செய்வது ஒரு கண்ணுக்கு தெரியாத போதை மருந்து போன்றது என்று நான் கூறுகிறேன். இதிலிருந்து வெளியே வருவது கிட்டத்தட்ட சாத்தியமில்லாதது. நீங்கள் ஒரு

மனப்பகுப்பாய்வாளரிடம் களைப்படைந்து, அதன்பின்னர் வேறு ஒரு மனப்பகுப்பாய்வாளரிடம் நகர்கிறீர்கள். இது, ஒரு போதை மருந்திற்கு உங்களுக்கு எதிர்ப்புச் சக்தி வந்துவிடும்போது, நீங்கள் முன்பைவிட அதிக பலமும் அதிக ஆபத்தும் நிறைந்த வேறு ஒரு போதை மருந்தை நோக்கி நகர்ந்து செல்வது போன்றதாகும். விரைவில் அந்த போதை மருந்தும் கூட உங்களுக்கு வேலை செய்யாது. அது உங்களை பாதிக்காது. அதன்பின்னர் நீங்கள் மேலும் முன்னேறிச் செல்ல வேண்டியதிருக்கும்.

நான், லடாக்கில் உள்ள மடாலயங்களில் இருந்திருக்கிறேன். அங்கு அவர்கள் நாகப்பாம்புகளை பழக்கி வந்தார்கள். ஏனெனில், போதை மருந்துகள் மூலம் விழிப்புணர்வை முயற்சி செய்கிற சில குறிப்பிட்ட பள்ளிகள் இந்தியாவில் இருக்கின்றன. அது முற்றிலும் அறிவியல் பூர்வமானது. அதன் அணுகுமுறை விஞ்ஞான பூர்வமானது. ஆனால் மிகவும் ஆபத்தானது. ஒருவர் ஏதாவது ஒரு படியில், எந்த ஒரு தருணத்திலும் தவறாகப் போய்விட முடியும். அது ஒரு குருவின் மேற்பார்வையின் கீழ் செய்யப்பட வேண்டியதாகும். ஒருவர் ஒரு குறிப்பிட்ட போதைப் பொருளை மிகவும் சிறிய அளவுகளில் எடுத்துக்கொள்ள ஆரம்பித்து அதற்கு எதிர்ப்புச் சக்தி மிக்கவராக ஆகிறார்; அதன்பிறகு அதைவிட பலம்வாய்ந்த, மேலும் அதன்பின்னர் முந்தையதை விடவும் பலம்வாய்ந்த போதைப் பொருளை எடுத்துக்கொள்கிறார். இப்படியாக இறுதியில் எந்த ஒரு போதைப் பொருளும் அந்த மனிதரை பாதிக்காத தருணம் ஒன்று வருகிறது.

அந்த தருணத்தில் மட்டுமே ஒரு நாகப்பாம்பின் விஷமானது அவரை கொஞ்சமாவது பாதிக்கும். அவர் நாகப்பாம்பினால் கொல்லப்பட மாட்டார். இதை அறிந்து நீங்கள் ஆச்சரிய மடைவீர்கள். நாகப்பாம்பினால் கடிபட்ட ஒரு மனிதன் உயிர் பிழைப்பதில்லை. ஆனால் லடாக்கில நான் பார்த்த, தங்களைத் தாங்களே துன்புறுத்திக் கொள்கின்ற இந்த சாதுக்கள் இதை செய்து கொள்கிறார்கள். மேலும் இவர்களைப் போன்றவர்கள் அஸ்ஸாம், நாகாலாந்து போன்று அநேக பகுதிகளில் இருக்கின்றனர். நாகப்பாம்பானது அவர்களது நாக்கின் நுனியில் கடிக்கிறது. எனவே விஷமானது உடனடியாக அவர்களது ரத்த ஓட்டத்தில்

கலக்கிறது. மேலும் கடித்த அந்த நாகப்பாம்பு இறந்து விடுகிறது என்பதைக் கேட்டு நீங்கள் அளவுகடந்த ஆச்சரியமடைவீர்கள்! அவர்களின் உடல் முழுவதும் விஷம் இருப்பதால் அந்த அப்பாவி நாகப்பாம்பு செத்துப் போகிறது.

இதுதான் நெருப்பு சோதனை, ஒரு மனிதன் நாகப்பாம்பு கடிப்பதால் கொல்லப்படாமல், அவன் அந்த நாகப்பாம்பை கொல்ல முடியும்போது, அவன் இந்த உலகில் உள்ள எல்லாவிதமான விஷங்களுக்கும் எதிர்ப்புப் சக்தி உள்ளவனாக ஆகிவிடுகிறான்.

ஆனால் அப்படிப்பட்ட பள்ளிகளில் உள்ள அடிப்படை செய்முறையும்கூட விழிப்புணர்வு என்பதாகத்தான் உள்ளது. நீங்கள் உஷாராகவும், விழிப்புடனும் இருக்கவேண்டும். அதனால்தான் எந்த ஒரு போதை மருந்தும் உங்களை பாதிக்கவில்லை. அப்படிப்பட்ட விநோதமான பள்ளிகளில் ஒட்டுமொத்த செயல்பாடும் இப்படித்தான் இருக்கிறது. ஆனால் அந்த மனிதன் மிக உயர்ந்த விழிப்புணர்வை அடைந்து விடுகிறான்.

மனதை பகுப்பாய்வு செய்வது ஒரு சிறிய அளவிலான போதை மருந்தாகும். நீங்கள் அதற்கு பழக்கப்பட்டுவிடும்போது, ஒரு மனப்பகுப்பாய்வாளரிடம் எதிர்ப்புப் சக்தி மிக்கவராக ஆகிவிடும்போது, நீங்கள் அவரைவிட பலம்வாய்ந்த ஒருவரிடம், உங்களது மனதின் ஆழத்திற்கு சென்று, முதலாமவர் கண்டுபிடிக்காத மனதில் உள்ள விஷயங்களை கண்டுபிடிக்கின்ற வேறு ஒருவரிடம் செல்கிறீர்கள். இப்படி போய்க் கொண்டே இருக்கிறீர்கள். மனப்பகுப்பாய்வானது கிட்டதட்ட ஒரு நூற்றாண்டாக நடந்து வருகிறது. ஆனால் நூறு ஆண்டுகளில், ஒரு மனிதனால் கூட தனது மனதை புரிந்து கொள்ளும்படி செய்யமுடியவில்லை. மனப்பகுப்பாய்வானது முற்றிலும் தோற்றுப்போய் விட்டது.

விழிப்புணர்விற்கு ஒரு அழகு உள்ளது. அது வேறு யாரையும் சார்ந்து இருக்கவில்லை. அது உங்களுக்குள் செயல்புரியாமல் இருக்கின்ற ஒருபுதிய சக்தியை நீங்கள்

எழுப்புவது போன்றதாகும். ஆனால் நீங்கள் மனதை பகுப்பாய்வு செய்வதில்லை. அது முற்றிலும் பலனற்ற ஒரு செயல்பாடு. நீங்கள், எந்த ஒரு பகுப்பாய்வும் இல்லாமல், எந்த ஒரு தீர்ப்பும் இல்லாமல், எந்த ஒரு பாராட்டுதலும் இல்லாமல், எந்த ஒரு கண்டனமும் இல்லாமல், எந்த ஒரு மதிப்பீடும் இல்லாமல் வெறுமனே மனதை அதோடு எதுவும் செய்வதற்கு வேறு ஒன்றும் இல்லை என்பது போன்று வெறுமனே மனதைக் கவனிக்க வேண்டும். நீங்கள் தனியாக பிரிந்து விட்டீர்கள். எனவே நீங்கள் மனதைக் கவனித்துக் கொண்டு இருக்கிறீர்கள்.

ஆனால், இப்படி தனியாக பிரிப்பது அற்புதத்தை உருவாக்குகிறது. ஏனெனில் மனம் என்பது ஒரு ஒட்டுண்ணி; அது உங்களது இரத்தத்தில் வாழ்கிறது, அது உங்களது சக்தியினால் வாழ்கிறது, மனமும் நீங்களும் ஒன்றுதான் என்று நீங்கள் ஐக்கியமாகி விட்டதால்தான் அது உயிர்வாழ்கிறது. நீங்கள் தான் மனதின் வேர்களை பேணி வளர்க்கிறீர்கள். ஆகவே மனப்பகுப்பாய்வின் ஒட்டுமொத்த செய்முறையும் வெறுமனே முட்டாள்தனமானது. நீங்கள் வேர்களை வெட்டவில்லை. நீங்கள் வேர்களை பேணி வளர்க்கிறீர்கள். நீங்கள் வெறுமனே மனம் என்னும் மரத்தின் இலைகளை மட்டுமே வெட்டிக்கொண்டு இருக்கிறீர்கள். மனம் என்னும் மரத்தின் பசுமைப் போர்வை மேலும் மேலும் அடர்த்தியானதாக ஆகிக்கொண்டே போகிறது.

மற்ற தொழில் செய்பவர்களை விடவும் மனப்பகுப்பாய்வு செய்கின்ற மருத்துவர்கள், நான்கு மடங்கு அதிகமாக பைத்தியமாகிறார்கள் என்பது ஒன்றும் ஆச்சரியமானது அல்ல. இந்த உலகில் வேறு தொழில்கள் செய்பவர்களை விடவும் மனப்பகுப்பாய்வு செய்கின்ற மருத்துவர்கள், நான்கு மடங்கு அதிகமாக தற்கொலை செய்து கொள்கின்றனர். மனப்பகுப்பாய்வு செய்கின்ற மருத்துவர்களின் கதியே இப்படி என்னும்போது, அவர்களின் நோயாளிகளைப் பற்றி என்ன நினைப்பது? அந்த நோயாளிகள் தவறானவர்களின் கைகளில் விழுந்து விட்டனர். ஆனால் மேலை நாடுகளில் மனப்பகுப்பாய்வு செய்தல் என்பது ஒரு நாகரிகமாக இருக்கிறது மேலும் அது அதிகம் பணம் வாங்குகின்ற தொழிலாகவும் இருக்கிறது.

யூதர்கள், இயேசுவை தவறவிட்டு விட்டார்கள் என்று உலகம் முழுவதும் நகைச்சுவையாக கூறுவதுண்டு. அவர்களின் சொந்த சிறுவன்தான் இந்த உலகிலேயே மாபெரும் தொழிலை உருவாக்கிவிட்டவன் ஆகிவிட்டான். பாதிரியார்கள், துறவிகள், கத்தோலிக்கர்கள் மற்றும் புராட்டஸ்டண்ட்கள் என்று பலரின் தொழிலை பெருக்கிவிட்டார். யூதர்களால், தங்களை ஒருபோதும் மன்னிக்க முடியவில்லை. இப்போது கத்தோலிக்கர்கள் அமைப்பு தான் மிகவும் பணக்கார மத அமைப்பாக இருக்கின்றன. இப்படி மிகப்பெரிய தொழிலை உருவாக்கிய தங்களது சிறுவனை தேவை இல்லாமல் சிலுவையில் அறைந்துவிட்ட யூதர்களாகிய தாங்களே தங்களை மன்னித்துக் கொள்ளமுடியாது.

ஆனால் கார்ல் மார்க்ஸ் மூலம், கம்யூனிஸட் என்னும் மற்றொரு மதத்தை உருவாக்கியதன் மூலம் அவர்கள் பழிக்குபழி வாங்கிவிட்டனர். கார்ல் மார்க்ஸ் ஒரு யூதர். இந்த உலகில் பாதி கிறிஸ்தவர்கள் என்றால், அதன் பின்னர் மறுபாதி கம்யூனிஸ்டாக இருக்கிறது. அவை சமமாக உள்ளன. மேலும் அவை இன்னும்கூட சிறப்பாக இருக்கின்றன. ஏனெனில் சிக்மண்ட் பிராய்டு என்னும் மற்றொரு யூதரால் அவர்கள் இந்த உலகிலேயே அதிக வருமானம் வருகின்ற ஒரு தொழிலை உருவாக்கி விட்டனர். ஆனால் கிறிஸ்தவ மதமோ அல்லது கம்யூனிஸமோ எந்த உதவியையும் செய்யவில்லை; அல்லது மனப்பகுப்பாய்வு சிகிச்சையும் கூட எந்த உதவியையும் செய்யவில்லை. அவை எல்லாம் மக்களை வெவ்வேறு வழிகளில் சுரண்டிக்கொண்டு இருக்கின்றன.

கம்யூனிஸமானது மனிதனின் மரியாதையை, அவனது பெருமையை, அவனது தனித்தன்மையை, அவனது சுதந்திரத்தை எடுத்துக்கொண்டு விட்டது. கிறிஸ்தவமானது உங்களுக்கு சொந்தமான உண்மைநிலை நீங்கள் கொண்டிருப்பதற்கான சாத்தியங்களை அழித்துவிட்டது. நீங்கள் கடவுளின் கையில் ஒரு கைப்பாவையாகவே இருக்கிறீர்கள். கைப்பாவையின் நூல்கள் கடவுளின் கைகளில் இருக்கிறது. நீங்கள் நடனமாட வேண்டும் என்று அவர் விரும்பினால், நீங்கள ஆடுகிறீர்கள்; நீங்கள் கதறி

அழவேண்டும் என்று அவர் விரும்பினால் நீங்கள் கதறி அழுகிறீர்கள். உங்களது தலைவிதிக்கு நீங்கள் எஜமான் இல்லை.

மேலும், அதன்பின்னர் மனப்பகுப்பாய்வு சிகிச்சை வருகிறது. இதுவும்கூட மனிதனுக்கு அவனது மரியாதையை திருப்பி கொடுக்கவில்லை. இப்போது உலகம் முழுவதும் பல மில்லியன் மக்கள் மனப்பகுப்பாய்வு மருத்துவர்களின் கைகளில் இருக்கின்றனர். தந்தையைச் சார்ந்து இருப்பதுபோல் அவர்கள் அந்த மருத்துவரைச் சார்ந்து இருக்கின்றனர். ஆனால் அந்த தந்தை போன்ற மருத்துவர்களும் கூட அதே நோயினால், அதே மனப்பிளவு நோயினால், அதே பிரிவுபட்ட தனிமனிதப்பண்பால் அவதிப்படுகின்றனர்.

ஞானிகளால் கொடுக்கபட்ட கீழைநாட்டு செயல்முறைகள் முதல் காரியமாக மனிதனுக்கு மரியாதையை கொடுக்கின்றன. அவனுக்கு பெருமை சேர்க்கின்றன அவனை விழிப்புணர்வுடன் இருக்கும்படி செய்கின்றன. உனக்குள் விழிப்புணர்வின் மூலஸ்தானம் மறைந்திருக்கிறது. அதை வெறுமனே தட்டி எழுப்பி விழிப்புறச்செய்து மனம் குறித்து விழிப்புணர்வு அடைந்துவிடு என்று அவை மனிதனிடம் கூறுகின்றன. நீங்கள் வேறு எதையும் செய்யவேண்டியதில்லை. வெறுமனே மனம் குறித்து விழிப்புணர்வுடன் இருந்தாலே போதும், நீங்கள் தனியாக பிரிந்து விடுகிறீர்கள். நீங்கள் இப்படி தனியாக பிரிந்து விடுகின்ற அந்த நொடிப் பொழுதிலேயே, நீங்கள் மனதின் வேர்களை பேணி வளர்க்க மாட்டீர்கள். மனம் என்பது விரைவில் எந்த ஒரு பகுப்பாய்வும் இல்லாமல் உதிர்ந்துவிடும்; அதை பகுப்பாய்வு செய்யவேண்டிய அவசியம் ஏன்?

அதனால் தான் போதிதருமர் கூறுவதாவது: விழிப்புணர்வு, மனதைக் கவனித்தல் தான் மனதை ஊடுருவி உதிப்பதற்கான மிகவும் முக்கியமான செய்முறையாகும். நீங்கள் மனதிற்கு அப்பால் வெறுமனே ஒரு அடி எடுத்து வைத்துவிட்டால் போதும், நீங்கள் நிர்வாண உலகை அடைந்து விடுகிறீர்கள். நீங்கள், ஒளி மற்றும் முடிவில்லா உலகிற்குள் நுழைந்து விடுகிறீர்கள். மனம்

எனது கற்பனை செய்துகூட பார்க்கமுடியாத அபரிமிதமான பரவசநிலையை, சுதந்திரத்தை, ஆன்மிக ஒருங்கிணைப்பை நீங்கள் அடைந்துவிடுகிறீர்கள்.

*மனதைப் புரிந்து கொள்கிறவர்கள், குறைந்த முயற்சியோடு மெய்ஞ்ஞானத்தை அடைகின்றனர். மனதைப் புரிந்து கொள்ளாதவர்கள் வீணாகப் பயிற்சி செய்கின்றனர்.*

எனவே மனப்பகுப்பாய்வு செய்கின்ற மருத்துவர்கள் மனதைப் பற்றி புரிந்து கொள்ளாதவர்களாக கண்டிப்பாக சேர்க்கப்படவேண்டும். அவர்கள் த்ங்கள் மீதும் மேலும் மற்றவர்கள்மீதும் முற்றிலும் வீணான ஒன்றினை பயிற்சி செய்து கொண்டு இருக்கிறார்கள். அது முற்றிலும் காலம், மற்றும் வாழ்க்கை மற்றும் சக்தியை வீணாக்குவதாகும் மனப்பகுப்பாய் வானது கீழைநாட்டின் ஞானிகளின் வழிகளைப் புரிந்து கொள்ள வேண்டும். அதன்பின்னர் அது ஒரு உருமாற்றம் அடைந்து மக்களுக்கு அபரிமிதமான உதவியாக இருக்கும்.

ஆனால் அதில் உள்ள சிக்கல் என்னவென்றால் அந்தத் தொழிலே இல்லாமல் போய்விடும். ஆனால் இந்த அளவுக்கு பணம் சம்பாதிக்கின்ற ஆயிரக்கணக்கான மனப்பகுப்பாய்வு மருத்துவர்கள், தங்களது ஒட்டுமொத்த தொழிலும் முடிந்து போவதற்கு தயாராக இருக்க மாட்டார்கள். இதுதான் பிரச்சினை இது மிகவும் ஆழ்ந்த ஒரு பிரச்சினை என்பதால் இதற்கு ஏதாவது ஒரு வழிகண்டுபிடிக்கப்பட வேண்டும். இல்லையெனில், இந்த உண்மையை அறிவுப்பூர்வமாக ஒருவர் புரிந்து கொண்டாலும் கூட அவர் எதையும் செய்வதற்கு தயாராக இருக்கமாட்டார். ஏனெனில் அது அவரது சொந்த ஆதாயத்தை அழித்துவிடும்.

இது மருத்துவர்கள் போன்றது. அவர்கள் நோயாளிகள் குணமாவதற்கு உதவுகிறார்கள். ஆனால் அவர்களுக்குள் அடி ஆழத்தில், நோயாளியை குணப்படுத்த எந்த அளவுக்கு நீண்ட நாட்கள் எடுக்க முடியுமோ அந்த அளவுக்கு நாட்களை எடுத்துக் கொள்ள விரும்புகின்றனர். மருத்துவர்கள், நோயாளியைக் கொல்ல விரும்ப மாட்டார்கள். ஏனெனில் அது அவர்களது தொழிலுக்கு உதவாது. ஆனால் நோயாளி, வாழ்விற்கும்

சாவிற்கும் இடையில் எவ்வளவு நீண்ட காலம் தொங்கிக் கொண்டு இருக்க முடியுமோ அவ்வளவு காலம் தொங்கவிட்டு விடுவார்கள். ஏனெனில் எந்த அளவுக்கு நோயாளி வாழ்வுக்கும் சாவுக்கும் இடையில் தொங்கிக் கொண்டு இருக்கிறானோ அந்த அளவுக்கு அவர்கள் பணத்தை சம்பாதிக்கின்றனர். அவன் குணப்படுத்தப்பட்டுவிட்டால் அவர்களது சம்பாத்தியம் முடிந்துவிடுகிறது. அவன் இறந்துவிட்டாலும் கூட அவர்களது சம்பாத்தியம் முடிந்து விடுகிறது. ஆகவே அவர்கள் அவன் சாகவும் விரும்புவதில்லை அல்லது இறந்து போகவும் விரும்புவதில்லை. அவர்கள் இப்படி விரும்புவது அவர்களின் மனதின் உணர்விழந்த பகுதியில் இருப்பதால் அதுகுறித்து மருத்துவர்கள் தெளிவாக அறியாமல் இருக்கலாம்.

இது நான் கேள்விப்பட்ட கதை. ஒரு இளைஞன் மருத்துவக்கல்லூரியில் எல்லாப் பட்டங்களையும் பெற்றுவிட்டு வீட்டிற்கு வந்தான். அவரது தந்தையும் மருத்துவர் தான். எனவே அவர் தனது மகனையும் மருத்துவராக ஆக்குவதற்கு அனுப்பியிருந்தார். அந்த இளைஞன் மருத்துவமனைக்கு வந்த முதல் நாளில் ஒரு வயதான பெண்மணி அவன் சிறுவனாக இருக்கும் போதிலிருந்தே தனது தந்தையிடம் மருத்துவம் செய்து கொள்ள வந்து கொண்டிருப்பதை பார்த்தான். அவள் இன்னமும் கூட குணமடையவில்லை என்பதை அவனால் நம்புவதற்கு முடியவில்லை.

அவன் தனது தந்தையிடம், ''இப்போது, நான் இங்கு இருக்கிறேன். உங்களுக்கும் வயதாகிவிட்டது மேலும் நீங்கள் களைப்பாக இருப்பீர்கள். நீங்கள் ஓய்வெடுங்கள். நான் நோயாளிகளை கவனித்துக் கொள்கிறேன்,'' என்று கூறினான்.

மூன்று நாட்களுக்கு பிறகு அவன் தனது தந்தையிடம், ''நீங்கள் ஆச்சரியப்படப் போகிறீர்கள்: நீங்கள் முப்பது ஆண்டுகளாக குணப்படுத்த முடியாத ஒரு பெண்மணியை, நான் மூன்று நாட்களில் குணப்படுத்தி விட்டேன்,'' என்று கூறினான்.

அவனது தந்தை தனது கையை தலையில் அடித்துக்கொண்டு. தனது மகனிடம், ''முட்டாளே! அந்தப் பெண்மணி தான் உனது

படிப்பிற்கான பணத்தை எனக்கு சம்பாதித்து கொடுத்தாள். ஆனால் நீ அவளை குணப்படுத்திவிட்டாய். தற்போது கல்லூரியில் உள்ள உனது இரண்டு சகோதரர்களையும் கூட படிக்கவைக்கும் அளவுக்கு பணத்தை நமக்கு கொடுக்கின்ற அளவுக்கு அந்த பெண்மணி மிகப்பெரிய பணக்காரி. மேலும் அவள் பலசாலி. அவள் சாகமாட்டாள். ஆனால் நாம் அவளை இரண்டிற்கும் நடுவில் வைத்திருக்க வேண்டும்,'' என்று கூறினார்.

அந்த இளைஞனால் புரிந்து கொள்ள முடியவில்லை. அந்த வயதான மனிதர் மகனிடம், ''முதலில் அடிப்படை விதியை கற்றுக்கொள். ஒரு ஏழை உன்னிடம் வந்தால், அவனை உடனடியாக குணப்படுத்திவிடு. ஆனால் ஒரு பணக்காரன் வந்தால் நீ உனக்கு வேண்டிய காலத்தை எடுத்துக்கொள். நீ மெதுவாக சிகிச்சை கொடு,'' என்று கூறினார்.

சீனாவில், இந்த மாதிரி சூழ்நிலைகளை தவிர்ப்பதற்காக ஒரு வித்தியாசமான அமைப்பு முறையை, ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக கடைபிடித்து வருகின்றனர். அந்த அமைப்பு முறை தான் எதிர்கால மனிதனின் அமைப்பு முறையாகவும் கூட இருக்கவேண்டும் என்று நான் நினைக்கிறேன். சீனாவில், நோயாளியை குணப்படுத்தியதற்காக மருத்துவருக்கு பணம் கொடுப்பதில்லை. அவரது நோயாளி நோயில்லாமல் ஆரோக்கியமாக இருந்தால் மட்டுமே அவருக்கு பணம் கொடுக்கப்படுகிறது. ஒவ்வொரு மருத்துவரும் அவருக்கென்று நோயாளிகளை வைத்திருக்கிறார், எனவே அந்த நோயாளிகள் ஆரோக்கியமாக இருந்தால் அவர்கள் மருத்துவ ருக்கு பணம் கொடுக்கின்றனர். அவர்கள் நோய்வாய்ப்பட்டால், அதன்பிறகு மருத்துவருக்கு கொடுக்கப்பட வேண்டிய பணம் நிறுத்தப்படு கிறது. அதன்பின்னர் மருத்துவர் அவரது சொந்த செலவில் அந்த நோயாளியைக் குணப்படுத்த வேண்டும்.

இது விநோதமானதாக தோன்றுகிறது. ஆனால் சோவியத் யூனியனும் கூட இதே செயல்முறையை அவர்கள் ஆரம்பித்து விட்டார்கள். அவர்கள் இதை சிறிய அளவில் சோதனை செய்து கொண்டு இருக்கிறார்கள். ஆனால் இந்த செயல்முறை

அபரிமிதமான சிறப்புடையது. ஒவ்வொருவருக்கும் ஒரு குறிப்பிட்ட மருத்துவர் கொடுக்கப்பட வேண்டும். ஒரு குறிப்பிட்ட பகுதி அந்த மருத்துவருக்கு கொடுக்கப்பட வேண்டும். அந்தப் பகுதியில் இருக்கின்ற மக்கள் ஆரோக்கியமாக இருந்தால் அவர்கள் மருத்துவருக்குப் பணம் கொடுக்க வேண்டும்; அவர்கள் தங்களது ஆரோக்கியத்திற்கு பணம் கொடுக்கிறார்கள். ஆனால் அவர்கள் நோய்வாய்பட்டுவிட்டால், அதன்பிறகு அந்த மருத்துவர் தனது சொந்த பணத்தில் இருந்து அவர்களை குணப்படுத்த வேண்டும். எனவே இயற்கையாகவே அவர் நோயாளிகளை விரைவாக குணப்படுத்திவிடுவார். யாரும் நோயுடன் இருப்பதற்கும் அவர் விரும்பமாட்டார். உண்மையில், இந்த உலகில் உள்ள மற்ற நாடுகளை விடவும் சீனாவானது மிகவும் ஆரோக்கியமான மக்கள் இருக்கின்ற நாடாக இருக்கிறது. அவர்கள் ஒட்டுமொத்த அமைப்பு முறையையும் மாற்றி விட்டார்கள்.

தனது நோயாளியாக இருக்கின்ற ஒருமனிதர் சுதந்திர மானவராக, விழிப்புணர்வுடன், மனதிற்கு அப்பால் சென்று விட்டவராக இருந்தால் மட்டுமே மனப்பகுப்பாய்வு சிகிச்சை அளிக்கின்ற மருத்துவருக்கு பணம் கொடுக்கப்பட வேண்டும். ஆனால் அவர் தனது மனதில் விழுந்துவிட்டாலோ அல்லது மனதிற்கு கீழாக சென்று விட்டாலோ, அதன்பிறகு அந்த மனப்பகுப்பாய்வு மருத்துவர் தனது சொந்த செலவில் அவர்களைக் குணப்படுத்த வேண்டும். இது ஒட்டுமொத்த சூழ்நிலையையும் மாற்றிவிடும்.

எனவே நீங்கள் உங்களது சொந்த பலத்தை சார்ந்து இருப்பது உங்களுக்கு ஒரு மிகப்பெரிய சுதந்திரத்தை, மிகப்பெரிய அதிகாரத்தை, மிகப்பெரிய ஒருங்கிணைப்பை கொண்டு வருகிறது. மனமானது அதன் வேர்களில் இருந்து வெட்டப்பட்டு விடுகிறது; விரைவில் அது உதிர்ந்து போகிறது. இதுவரை மனம் என்பதால் ஆக்கிரமிக்கப்பட்ட இடமானது அதன்பிறகு எதனாலும் ஆக்கிரமிக்கப்படுவதில்லை. அது இப்போது தூய்மையான இடமாக இருக்கிறது. அதுதான் உங்களது உண்மையான, அதிகாரப்பூர்வ இருப்புநிலையாகும்.

ஆனால் போதிதருமரின் இந்த சூத்திரத்தின் கடைசிவரியை என்னால் ஒத்துக்கொள்ள முடியாது. இது அவரது சொந்த வரியா அல்லது அவர் சொல்வதைக் குறிப்பெடுத்துக் கொண்டிருந்த அவரது சீடர்களால் சேர்த்துக் கொள்ளப்பட்ட வரியா என்று எனக்குத் தெரியாது. அதைத் தெரிந்து கொள்வதற்கு வழியும் இல்லை. ஆனால் அது ஒரு பொருட்டல்ல. *''மனதிற்கு அப்பால் உள்ள ஒன்றினை காண்பது சாத்தியமில்லாததாக இருக்கிறது''* என்று கடைசிவரியில் அவர் கூறுவது தவறானது என்பதை உங்களுக்கு தெரியப்படுத்த வேண்டும். கிடையாது, அவர் கூறுவது போல் கிடையாது. அது மட்டுமே மனித வளர்ச்சிக்கான ஒரே ஒரு சாத்தியமாக இருக்கிறது. மெய்ஞ்ஞானம் அடைவதற்கு, மனதிற்கு அப்பால் செல்வது மட்டுமே ஒரே ஒரு சாத்தியமாக உள்ளது.

ஆகவே, *மனதிற்கு அப்பால் உள்ள ஒன்றினை காண்பது சாத்தியமில்லாததாக இருக்கிறது...* உங்களைத்தவிர உங்களது மெய்ஞ்ஞானத்தை தவிர சாத்தியமில்லாததாக இருக்கிறது என்று சேர்த்துக் கொள்ள நான் விரும்புகிறேன். இவை அதே விஷயத்தை குறிக்கின்ற வேறு பெயர்களாகும்.

உங்களைக் கண்டு கொள்வது தான் மெய்ஞ்ஞானமாகும்.

மனதிற்கு அப்பால், நிச்சயமாக, மெய்ஞ்ஞானத்தை தவிர வேறு எதையும் உங்களால் கண்டு கொள்ள முடியாது. ஆனால் இந்த வாக்கியத்தை சேர்க்காமல் விட்டுவிட்டால், இந்த வாக்குமூலமானது ஆபத்தானதாக இருக்கிறது. இது மக்களின் மனதை மாசுபடுத்திவிடும். மனதிற்கு அப்பால் ஒன்றும் இல்லை என்று நினைத்துக் கொண்டு அவர்கள் மனதோடு நின்று விடமுடியும். உண்மையில், ஒவ்வொன்றும் அதற்கு அப்பால் தான் இருக்கிறது. உங்களது மனதில் இருப்பது என்ன? அவை வெறும் சோப்புக்குமிழிகள், தண்ணீரின் மேல் போட்ட கையெழுத்துக்கள் அல்லது அதிகபட்சமாக மணல் மாளிகைகள். அவற்றை அழிப்பதற்கு கொஞ்சம் காற்று வீசினாலே போதும்.

உங்களது மனம் என்பது ஒரு கற்பனை என்பதைத் தவிர வேறு எதுவாகவும் இல்லை. ஆனால் நீங்கள் அந்த கற்பனையில்

வாழ்ந்து கொண்டு இருக்கும்போது அது சந்தோஷமானதாக தோன்றுகிறது. அதை வெளியில் இருந்து பாருங்கள். அப்போது அந்த கற்பனை மறைந்து விடுகிறது.

சீடர் அவரிடம், ''ஆனால், மனதைக் கவனித்தல் என்பது எப்படி புரிதல் என்று அழைக்கப்பட முடியும்?'' என்று கேட்கிறார். ஒரு மாபெரும் போதிசத்வர், குறைகளற்ற ஞானத்தில் ஆழ்ந்து ஆராயும் போது அவர் உணர்ந்து கொள்கிறார்.

*அவரது மனதின் செயல்கள் இரண்டு நோக்கங்களைப் பெற்றிருக்கிறது. சுத்தமான மற்றும் அசுத்தமான நோக்கங்களாகும்.*

இந்த உண்மையை அறிந்து கொள்ள நீங்கள் மாபெரும் போதிசத்வராக இருக்க வேண்டிய அவசியம் கிடையாது. நீங்கள் உங்களது மனதை உற்றுப்பார்த்தால் அப்போது நீங்கள் இந்த வேறுபாட்டை கண்டு கொள்வீர்கள். சுத்தமான செயல்களையும், அசுத்தமான செயல்களையும் நீங்கள் பெற்றிருப்பதை கண்டு கொள்வீர்கள். நீங்கள் அன்பை வைத்திருக்கிறீர்கள், நீங்கள் வெறுப்பையும் வைத்திருக்கிறீர்கள்; உங்களிடம் சாந்தமும் உள்ளது, உங்களிடம் மன அழுத்தமும் உள்ளது; உங்களிடம் கருணையும் உள்ளது, உங்களிடம் கொடூரமும் உள்ளது. உங்களிடம் படைப்பாற்றலும் உள்ளது. உங்களிடம் அழிக்கும் ஆற்றலும் உள்ளது. இதற்கு நீங்கள் ஒரு மிகப்பெரிய போதிசத்வராக இருக்க வேண்டிய அவசியம் கிடையாது. மனம் என்பதைப் பெற்றுள்ள ஒவ்வொவரும், அது சுத்தமான மற்றும் அசுத்தமான ஆகிய இரண்டு நோக்கங்களையும் கொண்டுள்ளது என்று எந்தவிதமான முயற்சியும் இல்லாமலேயே கண்டு கொள்ளமுடியும்.

*சுத்தமான மனது நற்செயல்களில் சந்தோஷம் அடைகிறது அசுத்தமான மனது தீயது பற்றியே நினைக்கிறது. அசுத்தத்தினால் பாதிக்கப்படாதவர்கள் முனிவர்களாகின்றனர்.*

மீண்டும் நான் சிறிதாக ஒன்றினை இதோடு சேர்த்துக் கொள்ள விரும்புகிறேன். அப்படி செய்யவில்லை என்றால்

இதில் தவறான புரிதல் வந்துவிடும். ''அசுத்தத்தினால் பாதிக்கப்படாதவர்கள் முனிவர்களாகின்றனர்'' என்று இந்த சூத்திரம் கூறுகிறது. சுத்தத்தினால் அவர்கள் பாதிக்கப்படு கிறார்களா? உண்மையில் முனிவர் என்பதற்கு சுத்தம் அல்லது அசுத்தம் இவற்றில் எது ஒன்றாலும் பாதிக்கப்படாத ஒருவர் என்பது தான் விளக்கமாகும். ஏனெனில் சுத்தத்தினால் பாதிக்கப்படுகின்ற ஒருவர் அசுத்தத்தினால் பாதிக்கப்படுவதையும் தவிர்க்க முடியாது. அவை அந்த அளவு வேறுபட்டவை அல்ல. ஆகவே, சுத்தம், அசுத்தம் ஆகியவற்றால் பாதிக்கப்படாத வர்கள் முனிவர்களாகின்றனர் என்று நான் கூறுவதற்கு விரும்புகிறேன்.

*அவர்கள் துன்பத்தை கடந்து நிர்வாணத்தின் பேரானந்தத்தை அனுபவிக்கின்றனர். அசுத்தமான மனதில் மாட்டிக் கொண்டும், தங்களது சொந்த கர்மாவில் மாட்டிக்கொண்டும், இருக்கின்ற மற்றவர்கள் அனைவரும், மரணிப்பவர்களாக இருக்கின்றனர். அவர்கள் மூன்று பகுதிகளிலும் அலைந்து திரிந்து, எண்ணற்ற மனவேதனையில் கஷ்டப்படுகின்றனர். இவை எல்லாம் ஏன் எனில் அவர்களின் அசுத்த மனமானது அவர்களது உண்மையான ஆன்மாவை இருளுடையதாக ஆக்கிவிடுகிறது.*

மனம் என்பது உங்களது ஆன்மாவைச் சுற்றி இருக்கின்ற கருமேகம் போன்றது. உண்மையில் அது உங்களது ஆன்மாவை எந்தவிதத்திலும் சேதப்படுத்துவது கிடையாது. ஆனால் அந்த கருப்பு மேகத்தினால் நீங்கள் சூரியனைப் பார்க்க முடியாது. கரிய மேகங்களால் சூரியன் பாதிக்கப்படுவதில்லை. அது இன்னமும் தனது கம்பீரத்துடன் ஒளிவீசிக் கொண்டு இருக்கிறது. ஆனால் கருப்பு மேகங்களானது அந்த சூரியனை மூடி மறைத்துவிடும் போது, பகல் பொழுதும் கூட இரவு போன்று தோன்ற ஆரம்பிக்கிறது.

*''மரணம் அடைபவர்களின் உடலில், அழிக்கமுடியாத புத்த இயல்பு இருக்கிறது. சூரியனைப் போல அதன் ஒளி முடிவற்ற பரந்த வெளியை நிரப்புகிறது. ஆனால் ஐந்து நிழல்களைக் கொண்ட கருமேகங்களால் மறைக்கப்படும் போது, அது ஒரு ஜாடிக்குள் இருக்கின்ற வெளிச்சத்தைப் போல பார்வையில்*

இருந்து மறைந்திருக்கிறது'' என்று பத்து நிலைகளின் சூத்திரங்கள் கூறுகின்றன.

மரணமடைபவர்கள் எல்லாம் புத்தரின் இயல்பை பெற்றிருக்கின்றனர். ஆனால், அது, அவர்கள் தப்பிக்க முடியாதபடி உள்ள இருளினால் மூடப்பட்டிருக்கிறது. நமது புத்த இயல்பானது விழிப்புணர்வாக உள்ளது. விழிப்புணர்வுடன் இருப்பது மற்றவர்களிடம் விழிப்புணர்வை உண்டாக்குவது மற்றும் விழிப்புணர்வை அடையாளம் கண்டு கொள்ளல் விடுதலை என்பதாக இருக்கிறது,'' என்று நிர்வாண சூத்திரம் கூறுகிறது.

விடுதலை அல்லது முக்தி என்பது மனதிலிருந்து விடுதலை, எல்லா மனவேதனைகளில் இருந்தும் விடுதலை, சுத்தம் அசுத்தம் ஆகியவற்றில் இருந்து விடுதலை, நல்லது மற்றும் கெட்டதில் இருந்து விடுதலை, கடவுள் மற்றும் சாத்தானிடமிருந்து விடுதலை, இப்படி எல்லா இரட்டை நிலைகளில் இருந்தும் விடுதலை அடைந்து, இந்த பிரபஞ்சத்தின் ஒற்றை நிலைக்குள் நுழைதல் என்பதாகிறது.

நல்லவை எல்லாவற்றிற்கும், விழிப்புணர்வு அதன் வேராக இருக்கிறது. விழிப்புணர்வு என்னும் இந்த வேரில் இருந்து தான் புண்ணியச் செயல்கள் நிறைந்த மரமும், நிர்வாண நிலையின் கனிகளும், வளர்கின்றன.

இது ஒரு சிறப்பு வாய்ந்த சூத்திரம். உலகின் நல்ஒழுக்க சீலர்களும், புனிதர்களும் மக்களிடம், ''நற்செயல்களை செய்யுங்கள், தர்மம் செய்யுங்கள், ஏழைகளுக்கு சேவை செய்யுங்கள். அன்பாக இருக்க கற்றுக்கொள்ளுங்கள், புண்ணியச் செயல்களை செய்யுங்கள், பிரம்மச்சாரியாக இருங்கள், எதையும் உங்களுடையதாக ஆக்கிக் கொள்வதை நிறுத்துங்கள். இப்படிப்பட்ட எல்லா நல்ல குணங்களையும் நீங்கள் கடைபிடிக்க வேண்டும்'' என்று கற்பித்துக் கொண்டு இருக்கின்றனர்.

ஆனால், நான் எனது வாழ்நாள் முழுவதும் என்ன சொல்லிக் கொண்டு இருக்கிறேனோ அதையே போதிதருமரும் கூறுகிறார்.

இவை எல்லாம் கடைபிடிப்பதற்கு சாத்தியமில்லாதவை. இவை எல்லாம் உப பொருள்கள். நீங்கள் உங்களுக்குள் அதிக விழிப்புணர்வை மட்டுமே உருவாக்க முடியும். அப்போது இந்த எல்லா விஷயங்களும் தாமாகவே வெளிவந்துவிடும். அப்போது அவற்றுக்கே உரிய அழகினை பெற்றிருக்கும். கடைபிடிக்கப்படும் போது அவை வெறும் போலித்தன மானவைகளாக இருக் கின்றன. அவை மிகுந்த ஆழம் செல்வதில்லை. அவைகள் வெறும் முகமூடிகள், ஆனால் அவை உங்களது அசல் முகத்தை மாற்றுவதில்லை.

இங்குதான் நல்ஒழுக்கமும், உண்மையான மதமும் முற்றிலும் வேறுபடுகிறது. நல்ஒழுக்கமானது மேலெழுந்தவாறு உள்ள விஷயங்களைக் கற்பிக்கிறது. அதாவது மற்றவர்களிடம் நல்லவராக இருங்கள், அடுத்தவர்களிடம் இனிமையாக இருங்கள், நேர்மையானவராக இருங்கள், வன்முறையானவராக இருக்காதீர்கள். கருணையுள்ளவராக இருங்கள். தீயது என்று நினைக்கின்ற எல்லாவற்றையும், கொடூரம், கோபம், பேராசை ஆகியவற்றையும் தவிர்த்து விடுங்கள். பூ என்று கற்பிக்கப் படுகிறது. இதை நீங்கள் சமாளித்து செய்யலாம், பல லட்சம் பேர் சமாளித்துக் கொண்டு இருக்கிறீர்கள். ஆனால், இந்த உலகம் முழுவதும் நிறைந்துள்ள எல்லா விதமான முட்டாள் களாலும் சிலர் ஆழ்ந்த மரியாதையை பெறுகிறார்கள். ஆனால் அவர்களின் நல்ஒழுக்கமானது நமது தோலின் ஆழம் கூட இருப்பதில்லை. நீங்கள் அவர்களைக் கொஞ்சம் சுரண்டிப் பார்த்தால், அப்போது அவர்கள் தாங்கள் கடைபிடித்ததை எல்லாம் மறந்துவிடுவார்கள், உடனே அவர்களின் உண்மையான காட்டுமிராண்டி இயல்பானது வெளியே வருவதை நீங்கள் காண்பீர்கள்.

''யாராவது உங்களை ஒரு கன்னத்தில் அறையும்போது, இயேசுவை நினைவில் கொள்ளுங்கள். ''அடுத்த கன்னத்தையும் காட்டு'' என்ற அவர் கூறியிருப்பதை நினைவில் கொள்ளுங்கள்'' என்று தனது பிரசங்கங்களில் இடைவிடாமல் திரும்பத்திரும்ப கூறுகின்ற ஒரு கிறிஸ்தவ பாதிரியாரைப் பற்றி நான் கேள்விப் பட்டிருக்கிறேன். இது ஒரு அழகான போதனை, ஆனால் அது

உங்களுக்குள் உள்ள மையப் பகுதியில் இருந்து வந்தால் மட்டுமே அழகானது. அது உங்களது விழிப்புணர்வில் இருந்து வந்தால் அதற்கு மாறுபட்ட ஒரு சிறப்பியல்பு இருக்கிறது. நீங்கள் அதை கடைபிடித்து அது வந்தால், அதன்பின்னர் அதற்கு அதிக மதிப்பு கிடையாது.

ஒருநாள், இது நடந்தது. ஒரு குறும்புக்காரச் சிறுவன், இந்தப் பாதிரியார் அடுத்த கன்னத்தைக் கொடுக்கிறாரா அல்லது இல்லையா என்பதை கண்டு கொள்வதற்காக, வெறுமனே எழுந்து நின்று அவரிடம், ''இப்போது நாம் பார்த்துவிடலாம். நீங்கள் எங்களிடம், அடுத்த கன்னத்தை காட்டவேண்டும் என்று மீண்டும் மீண்டும் திரும்பத்திரும்ப கூறிக்கொண்டு இருந்தீர்கள் அல்லவா,'' என்று கூறினான். அவன் ஒரு மல்யுத்தவீரன், எனவே அந்த பாதிரியார் மிகவும் பயந்தார், ஆனால் அந்த மல்யுத்தவீரன் வந்து அவரது ஒரு கன்னத்தில் நன்றாக அறைந்தான். அந்த பாதிரியார் தான் சொன்ன வார்த்தையை பின்பற்ற வேண்டும்; அவரது கிறிஸ்தவக் கோயிலுக்கு செல்லும் கூட்டம் அங்கு இருந்தது ஒவ்வொருவரும் என்ன நடக்கப்போகிறது என்பதை கவனித்துக் கொண்டு இருந்தார்கள்.

''நான் இந்த சிறுவனுக்கு எந்த ஒரு தீங்கும் செய்ததில்லை. இவன் கண்டிப்பாக வெட்கமும், குற்ற உணர்வு கொள்ள வேண்டும்,'' என்று நினைத்துக்கொண்டு, ''அவர் தனது அடுத்த கன்னத்தையும் கொடுத்தார். ஆனால் அந்த மல்யுத்தகாரன் உண்மையிலேயே குறும்புக்கார மனிதனாக இருந்தான். முன்பைவிட பெரிய அடியை அடுத்த கன்னத்தில் கொடுத்தான் அதன் பின்னர் திடீரென்று அவன் ஆச்சரியமடைந்தான். அங்கிருந்த ஒட்டுமொத்த கூட்டமும் ஆச்சரியமடைந்தது. அந்த பாதிரியார், அந்த மல்யுத்த வீரர் மீது தாவிக் குதித்து அவனை இப்படியும் அப்படியும் அடிக்க ஆரம்பித்தார். அவன் அதை எதிர்பார்க்கவில்லை. அவன் மல்யுத்த வீரனாக இருந்தாலும் கூட அவன் மறந்துவிட்டான், அது அந்த அளவுக்கு எதிர்பாராமல் நடந்துவிட்டது. அவனால், ''நீங்கள் என்ன செய்கிறீர்கள்?'' என்று வெறுமனே கூற மட்டுமே முடிந்தது.

அதற்கு அந்த பாதிரியார், ''நான் என்ன செய்கிறேனா? ''அடுத்த கன்னத்தை கொடு'' என்று மட்டுமே இயேசு கூறி இருக்கிறார். என்னிடம் மூன்றாவது கன்னம் கிடையாது. இப்போது அந்த ஒழுங்கு நடவடிக்கையில் இருந்து நான் விடுதலை பெற்றுவிட்டேன். எனவே அதற்கு என்ன அர்த்தம் என்பதை நான் உனக்கு காட்டினேன்,'' என்று கூறினார்.

கடைப்பிடிப்பது மிகவும் சுலபம். ஆனால் கடைப்பிடித்தல் என்பது சுரண்டிப் பார்க்கின்ற அளவுக்கு மிகவும் மெல்லிய அடுக்கினைக் கொண்டதாகும்.

சில தினங்களுக்கு முன்பு ஒரு பெண் சந்நியாசி என்னிடம் கேட்டாள். எனது மாலை சொற்பொழிவு முடிந்த உடன் அவள் தங்கி இருக்கும் இடத்திற்கு தனது மிதிவண்டியில் போய்க் கொண்டிருந்தாள். அப்போது பூனாவில் இருக்கின்ற ஒருவர் தனது மோட்டார் பைக்கில் வந்து அந்த பெண்ணை நிறுத்தி அவளது மார்பகங்களில் ஒன்றைப் பிடித்து கசக்கினான். பூனாவில் இதைத்தான் ''இந்து கலாச்சாரம்'' என்று அழைக்கின்றனர்.

அந்த பெண் என்னிடம், ''இயேசு கிறிஸ்து கூறியபடி, நான் அவனுக்கு எனது அடுத்த மார்பகத்தையும் கொடுக்க வேண்டுமா?'' என்று கேட்டாள். நான் கூட அதைப்பற்றி சிந்தித்து பார்க்கவில்லை. இயேசு கூறியது கன்னங்களுக்கு மட்டும் தானா என்பதை நானும் சிந்திக்கவில்லை. மிகவும் ஆழ்ந்த ஒரு கேள்வியை அவள் கேட்டுவிட்டாள். ''நீங்கள் என்ன சொல் கிறீர்கள்? அந்த சூழ்நிலையில் நான் என்ன செய்யவேண்டும்?'' என்று அவள் கேட்டாள்.

ஆனால், அடிப்படையில், இயேசுவின் போதனையானது ஒரு நல்ஒழுக்கம் மட்டுமேயாகும். நீங்கள் உங்களது அடுத்த கன்னத்தையும் கொடுக்க வேண்டியதில்லை, நீங்கள் உங்களது அடுத்த மார்பகத்தையும் கொடுக்க வேண்டியதில்லை. நீங்கள் அந்த மனிதனை எவ்வளவு பலமாக கன்னத்தில் அடிக்க முடியுமோ அந்த அளவுக்கு பலமாக அடித்து இருக்க வேண்டும். ஏனெனில் இவர்கள் தான் இந்துமத ஆதிக்க மனம் கொண்ட வர்கள். இந்த நகரத்திற்கு ஒரு விநோதமான கர்வம் உண்டு. இந்த

நகரத்தை அவர்கள் மிகவும் பண்பாடு மிகுந்த நகரம் என்று நினைக்கிறார்கள். இது ஒரு உயிரற்ற நகரம், இது ஒரு கல்லறை தோட்டம். ஆனால் நிச்சயமாக ஒரு கல்லறைத் தோட்டத்தில் எதுவும் நடக்காது. இந்த ஆவி மோட்டார் பைக்கில் எப்படி வந்தது என்று தெரியவில்லை. ஆனால் ஆவிகளுக்கு பெண்களின் மார்பகங்கள் மீது அதிக ஆர்வம் உண்டு. ஏனெனில் ஆவிகள் உயிரோடு இருந்தபோது தங்களின் வாழ்நாள் முழுவதும் பெண்களின் மார்பகங்களின் மீதுதான் ஆர்வத்துடன் இருந்தன. ஆகவே அவர்கள் இறந்த போதும்கூட, அவர்களின் பழைய பழக்கம் தொடர்கிறது.

அதற்கான அவசியம் கிடையாது. அடுத்த கன்னத்தை கொடுக்க வேண்டும் என்பது எனது போதனை அல்ல. ஏனெனில் அவன் அடுத்த கன்னத்தை அடித்த பிறகு நீங்கள் என்ன செய்வீர்கள்? உங்களிடம் மூன்றாவது கன்னம் இல்லையே!

அவளது கேள்வியானது, மனப்பகுப்பாய்வு சிகிச்சை அளிப்பவர்களின் மகாநாடு பற்றி எனக்கு நினைவூட்டி விட்டது. சிக்மண்ட் பிராய்டிடம் சீடராக இருந்த மிகவும் வயதான ஒரு மனப்பகுப்பாய்வு சிகிச்சை மருத்துவர், மாநாட்டில் தனது ஆராய்ச்சி கட்டுரை ஒன்றினை படித்துக்கொண்டு இருந்தார். ஆனால் அதில் முதல் வரிசையில் ஒரு அழகான பெண் அமர்ந்திருந்தார். அவரும் ஒரு மனப்பகுப்பாய்வு சிகிச்சை அளிப்பவர். அவருக்கு அருகில் அமர்ந்திருந்த மிகவும் புகழ்பெற்ற மற்றொரு மனப்பகுப்பாய்வு மருத்துவர் அருகில் அமர்ந்திருந்த பெண் மருத்துவரின் மார்பகத்தோடு விளையாடிக் கொண்டிருந்தார். தனது கட்டுரையை மாநாட்டில் படித்துக் கொண்டு இருந்தவருக்கு, ஒரு இடைவிடாத தொந்தரவாக இருந்தது. அவர் தனது கண்களை மறைத்துக் கொண்டார். ஆனால், அவரும் கூட மனிதன் தான் அல்லவா. எனவே எப்போதாவது ஒருமுறை அங்கு என்ன நடக்கிறது என்று பார்த்துக் கொண்டு இருந்தார். அந்த பெண்மணி எப்படிப்பட்டவர் என்பதை அவரால் நம்பமுடியவில்லை. அருகில் இருந்த வயதான, அசிங்கம் பிடித்த மனிதன் அவளது மார்பகத்தோடு விளையாடிக் கொண்டு இருந்தான். ஆனால் அவளோ எதுவுமே நடக்காதது போன்று

எனது கட்டுரையை கவனித்துக் கொண்டு இருந்தாள். ஆனால் மார்பகங்கள் இல்லாத, மேலும் யாரும் அதற்கு எதுவும் செய்யாத, அந்த கட்டுரையைப் படித்த மனிதருக்குள் அந்த அளவுக்கு என்னவோ நடந்து கொண்டிருந்தது!

ஆனால் அவரது கேள்வியோ, ''இவள் எந்த வகை பெண்மணி?'' என்பதாக அவருக்குள் எழுகிறது. அந்த பெண்ணின் அருகில் இருந்தவர் புகழ்பெற்ற மருத்துவர் என்ற போதிலும் அசிங்கமானவர். ஆனால் புகழ் மக்களை மாற்றிவிடாது; புகழ் வெறுமனே அவர்களை இன்னும் அதிக போலித்தனமானவர்களாக ஆக்குகிறது, புகழ் அவர்கள் விஷயங்களை இருட்டில் செய்யும்படி செய்துவிடுகிறது, பின்பக்கவாசல் வழியாக செய்யும்படி ஆக்கிவிடுகிறது. அவர்களின் முன்பக்க வாசலானது மிகவும் சுத்தமாகவும், தூய்மையாகவும், மிகப்பெரிய புனிதர்களின் புகைப்படங்களால் நிரம்பியும் இருக்கும்.

எப்படியோ அவர் கட்டுரையை வாசித்து முடித்துவிட்டார். அந்த கட்டுரையை படித்து முடிப்பதற்கு அவருக்கு கஷ்டமாக இருந்தது. ஏனெனில் அவர் முதலில் இதுபற்றி அந்த பெண்மணியிடம் கேட்க வேண்டும் என்று அடிக்கடி நினைத்துக் கொண்டு இருந்தார். இப்போது அவர் படித்துமுடித்த உடன் மேடையை விட்டு கீழே இறங்கிய உடன் நேராக அந்த பெண்மணியிடம் சென்றார். அவர் அங்கு சென்றதும் அந்த வயதான மனிதர் தனது கைகளை இழுத்துக் கொண்டார். அவர் அந்த பெண்மணியிடம், ''நான் கட்டுரையை படித்துக் கொண்டிருந்த முழு நேரமும், இந்த மனிதர் உங்களது மார்பகங்களோடு விளையாடிக் கொண்டு இருந்ததை நான் பார்த்தேன். நீங்கள் அதற்கு மறுப்பேதும் தெரிவிக்க வில்லையே'' என்று கேட்டார்.

உடனே அந்த பெண்மணி, ''நானும் ஒரு மனப்பகுப்பாய்வு சிகிச்சை அளிக்கின்ற மருத்துவர். இது அவரது பிரச்சினை. அவருக்கு வயதாகிவிட்டாலும் கூட அவர் வளரவில்லை. அவர் குழந்தைத்தனமாக, முதிர்ச்சி அடையாதவராக இருக்கிறார். இது

அவருடைய பிரச்சினை! அதைப்பற்றி கவலைப்படுவதற்கு ஒன்றும் கிடையாது,'' என்று கூறினார்.

அந்த கட்டுரையைப் படித்தவர் இது விநோதமாக இருப்பதாக நினைத்தார், ஆனால் இது தனது பிரச்சினையும் கூட என்ற எண்ணத்தை அவருக்கு கொடுத்தது. இவர் ஏன் கலக்கமடைய வேண்டும்? ஒருவேளை அவர் அந்த வயதான மனிதரின் இடத்தில் இருக்க விரும்பினாரா...

உங்களது நல்ஒழுக்க சீலர்கள், போதனையாளர்கள், மனப்பகுப்பாய்வு சிகிச்சை அளிப்பவர்கள், தத்துவமேதைகள், ஆகிய அனைவரும் வெறுமனே மேம்போக்காக இருப்பவர்கள். மேலும் அவர்கள் பிரச்சனைகளின் ஒட்டுமொத்த சுமையையும் தங்களுக்குள் சுமந்து கொண்டு இருக்கிறார்கள். ஏனெனில் அவர்கள் மனதின் வேர்களை வெட்டவில்லை, அவர்கள் இந்த ஒட்டுமொத்த சூழ்நிலையையும் தவறான பக்கத்தில் இருந்து எடுத்துக் கொண்டு விட்டனர்.

''*நல்லவை எல்லாவற்றிற்கும், விழிப்புணர்வு அதன் வேராக இருக்கிறது. விழிப்புணர்வு என்றும் இந்த வேரில் இருந்துதான் புண்ணியச்செயல்கள் நிறைந்த மரமும், நிர்வாண நிலையின் கனிகளும் வளர்கின்றன,*'' என்று கூறும்போது போதிதருமர் மிகவும் தெளிவாக இருக்கிறார். நல்ஒழுக்க சீலர்கள், நல்லமனிதர்கள், நல்லதே செய்பவர்கள் ஆகியவர்களை எல்லாம் கடந்து வெகுதூரம் சென்று விடுகிறார். அவர் பிரச்சினையின் அடிமட்ட ஆழத்தை தொட்டு விட்டார்.

உங்களுக்குள் விழிப்புணர்வு எழவில்லை என்றால், உங்களது நல்ஒழுக்கமானது போலித்தனமானது, உங்களது பண்பாடு எல்லாம், யாராலும் அழிக்கப்பட முடிகின்ற வெறும் ஒரு மெல்லிய அடுக்காக மட்டுமே இருக்கிறது. ஆனால் உங்களது நல்ஒழுக்கமானது உங்களது குறிப்பிட்ட ஒழுங்கு நடவடிக்கையில் இருந்து வராமல், உங்களது விழிப்புணர்வில் இருந்து வந்தால், அதன் பின்னர் அது முற்றிலும் மாறுபட்ட ஒரு விஷயமாக இருக்கிறது. அதன்பின்னர் ஒவ்வொரு சூழ்நிலைக்கும் நீங்கள் உங்களது விழிப்புணர்வில் இருந்து பதில்

செயல் புரிவீர்கள். அப்போது நீங்கள் என்ன செய்தாலும் அது நல்லதாகவே இருக்கும்.

விழிப்புணர்வினால் கெட்டது எதையும் செய்ய முடியாது. அதுதான் விழிப்புணர்வின் இறுதி அழகு. அதிலிருந்து எதுவந்தாலும் எந்த ஒரு முயற்சியும், எந்த ஒரு பயிற்சியும் இல்லாமல் அது வெறுமனே அழகாகவும், சரியானதாகவும் இருக்கிறது.

ஆகவே, கிளைகளையும், இலைகளையும் வெட்டுவதற்கு பதிலாக, வேரை வெட்டி விடுங்கள். வேரை வெட்டுவதற்கு ஒரே ஒரு செய்முறையைத் தவிர வேறு எந்த செய்முறையும் கிடையாது. மிகவும் உஷாராக, விழிப்புணர்வுடன், கவனத்துடன், தன்னுணர்வுடன் இருப்பதுதான் அந்த செய்முறை. நீங்கள் அதிக தன்னுணர்வுடன் இருங்கள், அப்போது உங்கள் மூலமாக நிகழ்கின்ற ஒவ்வொன்றும் இந்த பிரபஞ்சத்தை அழகுபடுத்தப் போகிறது. இதை தெய்விகமாக ஆக்கப்போகிறது. இதை முதிர்ச்சி அடைந்ததாக ஆக்கப்போகிறது. உங்களது விழிப்புணர்வானது மலர்களை உங்களுக்கு மட்டும் கொண்டு வருவதில்லை; அது பல லட்சம் மக்களுக்கு நறுமணத்தையும் கொண்டு வருகிறது.

விழிப்புணர்வு, கடவுளின் வாசலுக்குரிய தங்கச் சாவியாக இருக்கிறது.

○

நமது புத்த இயல்பு மற்றும் எல்லா புண்ணியச் செயல்களும், விழிப்புணர்வை அவற்றின் வேராக கொண்டுள்ளன என்ற நீங்கள் கூறுகிறீர்கள். ஆனால் அறியாமையின் வேர் என்னவாக உள்ளது?

அறியாமையுடன் கூடிய மனமானது, அதன் எல்லையற்ற மனவேதனைகளோடும், காமம் மற்றும் தீயவைகளோடும், பேராசை, கோபம், மற்றும் மாயை ஆகிய மூன்று விஷங்களில் வேர் கொண்டு இருக்கின்றன. மனதின் இந்த மூன்று விஷம் நிறைந்த நிலைகளும் கூட ஒரே ஒரு நடுப்பகுதியையும், எண்ணற்ற கிளைகளையும், இலைகளையும் கொண்ட மரங்கள் போன்று எண்ணற்ற தீயவைகளை உள்ளடக்கி இருக்கிறது என்றாலும் கூட ஒவ்வொரு விஷமும் பல லட்சம் அநேக தீயவைகளை உருவாக்குவதால், ஒரு மரத்தினை உதாரணமாக ஒப்பிடுவது சரியானதாகாது.

இந்த மூன்று விஷங்களும் நமது ஆறு புலன் உறுப்புகளில், ஆறுவிதமான தன்னுணர்வுகளாக அல்லது திருடர்களாக இடம் பெற்றிருக்கின்றன. அவை திருடர்கள் என்று அழைக்கப்படு கின்றன. ஏனெனில் அவை புலன்களின் வாசல் வழியாக உள்ளேயும் வெளியேயும் சென்று விடுகின்றன. எண்ணிலடங்கா உடைமைகள் மீது அடங்காத பேராசை கொள்கின்றன, தீயவை களில் ஈடுபட்டு தங்களின் உண்மையான அடையாளத்தை முகமூடி போட்டு மறைக்கின்றன.

ஆனால் யாராவது ஒருவர் அவற்றின் உற்பத்தி இடத்தை துண்டித்துவிட்டால், நதிகள் வறண்டு விடுகின்றன. ஆனால் யார்

ஒருவர் விடுதலையைத் தேடுகிறாரோ அவர் இந்த மூன்று விஷங்களையும் நல்ஒழுக்கத்தின் மூன்று ஒரினக்கூட்டமாக மாற்ற முடியும். அந்த ஆறு திருடர்களையும் பரமிதாக்களாக மாற்ற முடியம். அவர் தனது மனவேதனையை காலா காலத்திற்கும் ஒழித்து விடுகிறார்.

ஆனால் இந்த மூன்று பகுதிகளும், பிரபஞ்சத்தின் ஆறு நிலைகளும் எல்லையற்று பரந்து விரிந்து இருக்கின்றன. ஆனால் நாம் எல்லாரும் மனதைக் கவனிப்பதை செய்வதன் மூலம், அவற்றின் முடிவற்ற மனவேதனைகளில் இருந்து நாம் எப்படி தப்பிக்க முடியும்?

உண்மையான பயிற்சியை புரிந்து கொள்ளாத மரணிப்ப வர்கள் மற்றும் கண்மூடித்தனமாக நற்செயல்களை செய்கிற வர்கள், ஆகியோர் மூன்று நிலைகளில் பிறக்கின்றனர். கண்மூடித் தனமாக நற்யெல்களை செய்து கொண்டும் முட்டாள்தனமாக சந்தோஷத்தை தேடுபவர்களும் அவர்களின் ஆசை என்னும் பகுதியில் கடவுள்களாக பிறக்கின்றனர். கண்மூடித்தனமாக ஐந்து நல்ஒழுக்கங்களை கடைபிடிப்பவர்களும் அன்பு வெறுப்பு ஆகியவற்றில் ஈடுபடுபவர்களும் அவர்களின் கோபம் என்னும் பகுதியில் மனிதர்களாக பிறக்கின்றனர். கண்மூடித்தனமாக விஷயங்கள் நிறைந்த இந்த உலகின் மீது பற்றுகொண்டு பொய்யான கோட்பாடுகளை நம்பிக் கொண்டு, ஆசீர்வாதத்தை நம்புபவர்களும், மாயை என்னும் பகுதியில் பேயுருவமாக பிறக்கின்றனர். உங்களால் வெறுமனே உங்களது மனதை ஒருமுகப்படுத்தி, அதன் பொய்நிலை மற்றும் தீயதைக் கடந்து செல்ல முடிந்தால், உங்களது இருப்புநிலையின் துன்பங்கள் தாமாகவே மறைந்தவிடும். நீங்கள் துன்பத்தில் இருந்து விடுதலை பெற்றுவிட்டால், நீங்கள் உண்மையில் விடுதலை அடைந்தவராக இருக்கிறீர்கள்.

இன்று மாலைப் பொழுதிற்கான சூத்திரங்கள். யாராலும், ஒருபோதும் பதிலளிக்க முடியாத இறுதியான கேள்வியை போதிதருமர் எதிர் கொள்கிறார். இறுதியான கேள்வி என்பது இறுதியானது ஏனெனில் அதற்கு பதிலளிக்க முடியாது.

ஒவ்வொரு தத்துவமும், சமய இயலும், மறைஇயலும், இறுதியில் ஒரு இறுதியான கேள்விக்கு வருகின்றன, அதற்கு பதில் கிடையாது.

ஆனால், அபரிமிதமான தைரியமும், புத்திசாலித்தனமும், விழிப்புணர்வும் கொண்ட மனிதராகிய போதிதருமரைப் போன்றவர்களும் கூட, இந்தக் கேள்விக்கு பதிலே கிடையாது என்று கூறுகின்ற இறுதியான தைரியத்தை இன்னமும், பெறவில்லை. அவரும் முயற்சி செய்கிறார். பல லட்சம் தத்துவமேதைகள், சிந்தனையாளர்கள், ஞானிகள் ஆகியவர்கள் எப்போதும் முயற்சி செய்துள்ளனர். ஆனால் அவர்கள் எப்போதும் தோல்வி அடைந்துவிட்டனர். ஆனால் போதிதருமரும் முயற்சி செய்கிறார்.

இந்தக் கேள்விக்கு பதில் இருக்கிறது, அது அவருக்கு தெரியும் என்பது போல அவரும் கூட முயற்சி செய்கிறார். ஆனால் அவர் என்ன சொன்னாலும் அது பதிலாகாது. அந்தக் கேள்வி தொடப்படாமல் அப்படியே இருக்கிறது. புத்தமதத்தினரின் புனித நூல்களில் எழுதப்பட்டுள்ளவற்றை அப்படியே அவர் கூறுகிறார். அவர் தனது சொந்த விழிப்புணர்வில் இருந்து உடனடியாக இந்த கேள்விக்கு பதிலளிக்கவில்லை அப்படி செய்திருந்தால் அவர் வெறுமனே சிரித்துவிட்டு, இதற்கு பதில் கிடையாது என்பதை உணர்ந்து கொள்வார்.

''எனக்கு தெரியாது'' என்று நான் வெறுமனே கூறி இருப்பேன். ஆனால், ''எனக்கு தெரியாது'' என்று கூறுவதற்கு இந்த உலகில் மிகப்பெரிய தைரியம் தேவைப்படுகிறது. போதிதருமருக்கும் கூட அந்த இறுதியான தைரியம் இல்லை. ஆனால் நான் அந்த தைரியத்தை பெற்றிருக்கிறேன். தத்துவ வாய்ஜாலத்திலோ அல்லது மறை இயல் கொள்கைகளாலோ அதை மூடி மறைக்க நான் எந்த வழியிலும் முயற்சி செய்ய மாட்டேன். அதற்கு பதில் கிடையாது என்கிற உண்மையை மறைத்துவிட்டு, பதில் போன்ற ஒரு மாயத்தோற்றத்தை உருவாக்க மாட்டேன்.

இங்கு போதிதருமர் கூறுவது எல்லாம் ஒரு பொய்த்தோற்றம் மட்டுமேயாகும். அதை பகுத்தறிவானதாக ஆக்குவதற்கு, புனித நூல்களில் இருந்து ஆதரவுகளை எடுத்துக்கொண்டு அவர் சிறப்பாக முயற்சி செய்கிறார். ஒருவேளை அவர் சீடர்களை சமாதானப்படுத்துவதற்கு அப்படி செய்திருக்கலாம், ஆனால் அவரால் என்னை சமாதானப்படுத்த முடியாது!

முதலில் நான் சீடரின் கேள்வியைப் படிக்கிறேன் போதிதருமரின் பதிலை விடவும் அவரது சீடர்களின் கேள்விதான் அதிக முக்கியத்துவம் வாய்ந்தது. அவர்களது கேள்வியில் குறைந்தபட்சம் நேர்மை, ஒரு உண்மை இருக்கிறது. ஆனால் போதிதருமனின் பதில்கள், இறுதியான கேள்விகள் வெறும் கேள்விகளாகவே இருந்து விடுகின்றன என்கிற உண்மையை வெறுமனே மறைப்பது போன்று இருக்கிறது. நாம் ஒரு முக்கியமான மதத்தை ''மறை ஞானம்'' என்று ஏன் அழைக்கிறோம் என்பதற்கான ஒட்டுமொத்த காரணமும் அதில் இருக்கிறது. எல்லாவற்றிற்கும் பதில் அளிக்க முடியும் என்றால் அதன்பின்னர் அதற்கு மறைஞானம் என்று கூறவேண்டிய கேள்வியே எழவில்லை.

இந்த பிரபஞ்சம் ஒரு புதிராக இருக்கிறது. ஏனெனில் நீங்கள் பதில் சொல்லிக்கொண்டே போகிறீர்கள், ஆனால் முடிவில் உங்களால் இறுதிக் கேள்விக்கு பதில் சொல்ல முடியாது. அது வெகு தொலைவில் இல்லை. அது விரைவில் வந்து விடுகிறது. மேம்போக்கான எல்லா விஷயங்களுக்கும் நீங்கள் பதில் அளிக்க முடியும். ஆனால் நீங்கள் ஆழமாக போகப் போக, இறுதியான கேள்வி நெருங்கி வந்து கொண்டு இருக்கிறது. இப்படி அந்த இறுதியான கேள்வி வருகின்ற தருணத்தில், ''எனக்குத் தெரியாது'' என்று கூறுகின்ற தைரியத்தை உடைய ஒரு தனி மனிதரைக் கூட இந்த ஒட்டுமொத்த மனித வரலாற்றில் நான் கண்டதில்லை.

*அந்த கேள்வி: நமது புத்த இயல்பு மற்றும் எல்லா புண்ணியச் செயல்களும், விழிப்புணர்வை அவற்றின் வேராக*

*கொண்டுள்ளன என்று நீங்கள் கூறுகிறீர்கள். ஆனால் அறியாமையின் வேர் என்னவாக உள்ளது?*

அறியாமை எங்கிருந்து வருகிறது? இதை சுலபமாக நீங்கள் புரிந்து கொள்வதற்கு, வேறு வார்த்தைகளில், வேறு அடை யாளங்களில் நான் கூறுகிறேன்.

கடவுளை நம்புகின்ற மதங்களிடம், ''இந்த பிரபஞ்சத்தை படைத்தது யார்?'' என்று கேள்வி கேட்கின்ற இடம் வரை அவற்றால் கேள்விகளுக்கு பதிலளித்துக் கொண்டே போக முடியும். ''கடவுள் இதை படைத்தார்'' என்று அவை ஏற்கனவே தயாராக ஒரு பதிலை வைத்திருக்கின்றன. இப்போது ''கடவுளைப் படைத்தது யார்?'' என்கிற இறுதியான கேள்வி வருகிறது. ஏனெனில் எல்லாவற்றிற்கும் ஒரு படைத்தவர் தேவை என்னும்போது கடவுளையும் கூட படைப்பதற்கு ஒரு படைத்தவன் தேவைப்படுவான். கடவுளைப் படைப்பதற்கு ஒரு படைப்பவன் தேவை இல்லை என்றால், அதன்பிறகு கடவுளைப்பற்றி ஏன் கவலைப்படுகிறீர்கள்? அதன்பின்னர் படைத்தவன் ஒவருன் இல்லாமல் இந்த பிரபஞ்சத்தை அப்படியே நீங்கள் ஏன் ஏற்றுக் கொள்ளக்கூடாது? எங்காவது ஒரு இடத்திலோ அல்லது வேறு வழியிலோ நீங்கள் இதை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும் என்னும்போது, இந்த பிரபஞ்சத்தை இறுதியானதாக ஏற்றுக்கொள்வதோடு நின்று விடுவது சிறந்தது. ஏனெனில் இந்த பிரபஞ்சத்தை குறைந்தபட்சம் நாம் அறிகிறோம். நாமும் அதன் ஒரு அங்கமாக, பகுதியாக இருக்கிறோம்.

கடவுள் என்பது வெறும் கொள்கை. பிரபஞ்சம் என்பது உண்மை நிலை. ஆனால் மதங்கள் உண்மை நிலையில் இருந்து கொள்கைகளுக்கு நகர்ந்து சென்றுவிட்டன. எனவே அதன்பின்னர் அவை யாராலும் பதிலளிக்க முடியாத ஒரு பிரச்சினையை எதிர் கொள்கின்றன. மேலும் அதற்கு யாராலும் பதிலளிக்க முடியாது. ஏனெனில் எந்த ஒரு பதிலும் எல்லைகளற்ற ஒரு பின்னோக்கிய நிலைக்கு வழிநடத்தி சென்றுவிடும்.

இரண்டாம் எண்ணுள்ள கடவுளால் ஒன்றாம் எண்ணுள்ள கடவுள் படைக்கப்பட்டார் என்று நீங்கள் கூறினாலும்கூட அந்த கேள்வி அப்படியேதான் இருக்கிறது. இரண்டாம் எண்ணுள்ள கடவுளைப் படைத்தவர் யார்? இப்படி நீங்கள் பின்னோக்கி போய்க்கொண்டே இருக்கலாம். ஆனால் அந்த எண்ணிக்கை என்னவாக இருந்தாலும், ''இந்தக் கடவுளை படைத்தவர் யார்?'' என்னும் கேள்வி இன்னமும் முக்கியமானதாகவே இருக்கும். ''இந்த பிரபஞ்சத்தை படைத்தவர் யார்?'' என்கிற அதே கேள்வியில் இருந்துதான் நாம் ஆரம்பித்தோம்.

ஆகவே கடவுள் எந்த விதத்திலும் உதவவில்லை. அந்த கொள்கையானது எந்த சேவையும் செய்யவில்லை. கடவுள் என்பது வெறுமனே பலனற்ற ஒரு கொள்கை. அது ஒரு பாசாங்கான பதில், ஆனால் அது உண்மையான பதில் அல்ல. ஏனெனில் அந்த கேள்வி அப்படியே தான் இருக்கிறது. உண்மையான பதில் என்பதற்கு கேள்வி என்பது கண்டிப்பாக இல்லாமல் போய்விடவேண்டும் என்று அர்த்தம். அதுதான் அடிப்படைப் பண்பாகும்.

புத்தமதத்தில் கடவுள் கிடையாது. கடவுளின் இடத்தில் இறுதியான விழிப்புணர்வு, புத்தநிலை, புத்த இயல்பு இருக்கிறது. இது ஒரு மொழி வேறுபாடு மட்டுமேயாகும்.

இப்போது சீடர்கள் கேட்கின்றனர். *இந்த புத்த இயல்பு மற்றும் புண்ணியங்கள் எல்லாம், விழிப்புணர்வை அவற்றின் வேராக கொண்டிருக்கின்றன என்பதை எங்களால் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் இந்த அறியாமை என்பது எங்கிருந்து உள்ளே வந்தது? ஆரம்பத்தில் ஏன் அறியாமை இருக்கிறது?* ஆரம்பத்திலேயே ஏன் விழிப்புணர்வு இருக்கக்கூடாது? இதுவும் அதே போன்றதொரு கேள்விதான். ஆனால் ஒரு வேறுபட்ட மறை இயல் கட்டமைப்பில் கேட்கப்படுகிறது. மேலும் இதற்கு எந்த பதில் இருந்தாலும், அது தவறானதாகவே இருக்கும் என்று என்னால் கூறமுடியும். எந்த விதிவிலக்கும் இல்லாமல், அதைப்பற்றி எந்த அறிதலும் இல்லாமல், அது தவறான பதிலாகவே இருக்கும் என்று என்னால் கூறமுடியும்.

நாம் அறியாமையில் தான் பிறந்தோம். ஆனால் இந்த அறியாமையை விலக்கிவிட்டு விழிப்புணர்வுடன் இருப்பதற்கான சாத்தியங்கள் நமக்குள் உறைந்திருக்கின்றன என்கிற இந்த புதிரை நாம் வெறுமனே ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். நாம் துன்பத்தில்தான் பிறந்திருக்கிறோம். ஆனால் அதை மீண்டு வருவதற்கான, அதைக் கடந்து செல்வதற்கான, பேரானந்தத்துடன் இருப்பதற்கான, பரவசநிலை அடைவதற்கான சக்தியானது நமக்கு உள்ளே உறைந்து இருப்பதோடு பிறந்திருக்கிறோம். மரணத்தோடு நாம் பிறந்திருக்கிறோம். ஆனால் மரணத்தை கடந்து சென்று மரணமில்லா பெருவாழ்வுக்கான சாத்தியத்தோடு பிறந்திருக்கிறோம்.

ஆனால், இந்த மரணம் என்பது எங்கிருந்து வருகிறது இந்த அறியாமை என்பது எங்கிருந்து வருகிறது. துன்பம் என்பது எங்கிருந்து வருகிறது என்று நீங்கள் கேட்கும்போது, நீங்கள் இறுதியான ஒரு கேள்வியை கேட்கிறீர்கள். இதற்கு பதிலே கிடையாது. அதுதான் அதன் நிலை. அது ''அப்படிப்பட்டதுதான்'' என்கிற புத்தரின் வார்த்தையை பயன்படுத்துவது சிறந்தது. அப்படித்தான் பொருளின் உண்மைநிலை உள்ளது.

ஆனால் போதிதருமரால் அதை சொல்ல முடியவில்லை. அவர் பதில் சொல்ல ஆரம்பித்துவிட்டார். ''எனக்கு தெரியாது'' என்பது மட்டுமே அதற்கு சரியான பதிலாக இருந்திருக்க முடியும். அதன்மூலம் இந்த மனித இனத்திற்கு போதிதருமர் அபரிமிதமான சேவை செய்திருக்க முடியும். அவர் தவறவிட்டுவிட்டார்! அவர் என்னவெல்லாம் கூறுகிறாரோ அதெல்லாம் மிகவும் குழந்தைத்தனமானது. ஏனெனில் தனக்கு பதில் தெரியாது என்கிற உண்மை போதிதருமர் போன்ற மனிதர்களுக்கு தெரியாமல் இருப்பது சாத்தியமானது அல்ல. யாருக்கும் பதில் தெரியாது. யாரும் பதிலை தெரிந்து கொள்ளவும் முடியாது. ஏனெனில் இந்த பிரபஞ்சத்தின் ஆரம்பத்திற்கு முன்பு யாராலும் இருக்கவும் முடியாது.

இதை வெறுமனே ஒரு நொடிப்பொழுது சிந்தித்துப் பாருங்கள். இந்த பிரபஞ்சத்தின் ஆரம்பத்திற்கு முன்பு உங்களால்

இருக்க முடியாது. அப்படி ஆரம்பத்திற்கு முன்பே நீங்கள் இருந்தால் அதன்பின்னர் இந்த பிரபஞ்சம் என்பது ஆரம்பமாகாது. நீங்கள் ஏற்கனவே அங்கு இருக்கிறீர்களே, ஆகவே நீங்கள் அங்கு இருப்பதற்கு முன்பே கண்டிப்பாக ஆரம்பமானது அங்கு இருந்திருக்க வேண்டும். ஆரம்பத்திற்கு முன்பு அப்படி யாரும் இல்லாதபோது ''கடவுள் இந்த உலகைப் படைத்தார்,'' என்று கூறுவதற்கு யாரும் சாட்சியாக இல்லை.

அறியாமை எங்கிருந்து வந்தது என்று யாரால் கூறமுடியும்? இந்த பிரபஞ்சமானது அறியாமையில் மூழ்கி உள்ளது. ஆனால் மெதுவாக, மெதுவாக, ஒரு சில தைரியமான உயிர் உணர்வுகள் விழிப்புணர்விற்குள் நகர்ந்து சென்று, வாழ்க்கையின் இருளுக்கு மேலே எழுந்துநின்று, முடிவில்லாத ஒளியை அடைந்து கொண்டு இருக்கின்றன என்று மட்டுமே நம்மால் சொல்ல முடியும்.

வேறு ஒரு குறிப்பில், கௌதமபுத்தர் அதை தெளிவு படுத்துகிறார். ஏதாவது ஒரு இடத்தில் அது ஒரு புதிராக உள்ளது என்றும் அது தனக்கு தெரியாது என்றும் கூட அவர் ஒருபோதும் உணர்ந்து கொள்ளாவிட்டாலும்கூட, அவர் தெளிவுபடுத்துகிறார்.

அது ஒரு புதிராகவே இருக்கிறது என்பதை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும் என்று நான் விரும்புகிறேன். அது எப்போதும் புதிராகவே இருக்கும். ஆனால் அதன் ஆரம்பத்தை அறிவதற்கு வழி இல்லை என்பதுதான் அதன் இயல்பாகும்.

ஆனால் வேறு ஒரு சந்தர்ப்பத்தில், புத்தர் அதற்கு மிக அருகில் வருகிறார். ''அறியாமைக்கு ஆரம்பம் கிடையாது. ஆனால் ஒரு முடிவு உண்டு. ஆனால் தன்னுணர்வு என்பதற்கு ஆரம்பம் இருக்கிறது. ஆனால் முடிவு இல்லை'' என்று அவர் கூறுகிறார். இப்படிப்பட்ட வழியில் அவர் ஒரு வட்டத்தை பூர்த்தி செய்கிறார். நான் அதைத் திரும்பவும் சொல்கிறேன். அப்போது தான் நீங்கள் அதை ஆழமாக உணரமுடியும். அறியாமைக்கு ஆரம்பம் கிடையாது. ஆனால் முடிவு உண்டு. அறியாமை முடிந்துவிடுவதால், விழிப்புணர்விற்கு ஆரம்பம் உண்டு. ஆனால் அதற்கு முடிவு கிடையாது. அது எப்போதைக்கும்

போய்க் கொண்டே இருக்கிறது. இப்படி கூறுவதன்மூலம், அறியாமையின் ஆரம்பத்தை பற்றி கேட்காமலும், விழிப்புணர்வின் முடிவைப்பற்றி கேட்காமலும் இருப்பது சிறந்தது என்கிற உண்மையை புத்தர் அறிந்து கொள்கிறார். இந்த இரண்டு விஷயங்களும் எப்போதைக்கும் புதிராகவே இருக்கும். இவை தான் பிரபஞ்சத்தில் மிகவும் முக்கியமான விஷயங்கள்.

இந்த கேள்வி என்னிடம் கேட்கப்பட்டிருந்தால், நான் வெறுமனே, ''எனக்குத் தெரியாது'', என்று கூறி இருப்பேன். ஏனெனில் அதுதான் மிகவும் நேர்மையான பதில். அது ஒரு புதிராக இருக்கிறது என்றுதான் அர்த்தம்.

ஆனால் போதிதருமர் இந்த கேள்விக்கு பதில் கூற முயற்சி செய்ய ஆரம்பிக்கிறார். ஆனால் அவரது பதிலானது கேள்வியை தொடக்கூட இல்லை என்பதை நீங்கள் கண்டு கொள்ள முடியும். அறியாமையுடன் கூடிய மனம். இப்போது இந்த அறியாமை எங்கிருந்து வருகிறது என்பது கேள்வி. ஆனால் பதில் சொல்லாமல் அவர் ஏற்கனவே அதை ஏற்றுக் கொண்டுவிட்டார்.

*அறியாமையுடன் கூடிய மனமானது, அதன் எல்லையற்ற மனவேதனைகளோடும், காமம் மற்றும் தீயவைகளோடும், பேராசை, கோபம் மற்றும் மாயை, ஆகிய மூன்று விஷங்களில் வேர் கொண்டு இருக்கிறது.*

இதுதான் பதிலா? அறியாமையுடன் கூடிய மனமானது மாயை, கோபம், பேராசை என்னும் குறிப்பிட்ட விஷயங்களில் வேர் கொண்டு இருக்கிறது என்று அவர் கூறுகிறார். ஆனால் இதுதான் பதிலா? சீடர் இதைத்தான் கேட்டாரா? இப்படிப்பட்ட ஒரு விளக்கத்திற்காகத்தான் அவர் இந்த கேள்வியைக் கேட்டாரா?

''அறியாமையின் வேர் என்ன?'' என்பதுதான் கேள்வி. ஆனால் இதற்கு உதாரணமாக, அறியாமை என்னும் வேரில்தான் பேராசை, கோபம் மற்றும் மாயை ஆகியவை இருக்கின்றன என்லு நீங்கள் பதில் கூறினால், நீங்கள் வெறுமனே பதிலை ஒத்தி

போட்டுக்கொண்டு இருக்கிறீர்கள். எனவே மீண்டும், ''இந்த பேராசை எங்கிருந்து வருகிறது? இந்த கோபம் மற்றும் மாயை எங்கிருந்து வருகிறது?'' என்கிற கேள்விகள் எழும். அதன் பின்னர் நீங்கள் சுற்றிச்சுற்றி வருகின்ற ஒரு வட்டத்திற்குள் நீங்கள் விழுந்து விடுவீர்கள். அதன்பின்னர் நீங்கள், அவை அறியாமையில் இருந்து வருகின்றன. மனிதன் அறியாமையில் இருக்கிறான். அதனால்தான் அவன் பேராசையோடு இருக்கிறான். அதனால்தான் அவன் கோபத்தோடு இருக்கிறான். அதனால்தான் அவன் மாயையில் இருக்கிறான்,'' என்று கூற ஆரம்பித்து விடுவீர்கள். இந்த அறியாமை என்பது எங்கிருந்து வருகிறது. ''அது கோபத்திலிருந்து, பேராசை மற்றும் மாயையில் இருந்து'' என்று கூறுவார்கள். யாரை முட்டாளாக்க நீங்கள் முயற்சிக் கிறீர்கள்? ஆனால் பல நூற்றாண்டுகளாக, இந்த வகையான பதில்கள் மக்களை முட்டாள்கள் ஆக்கியுள்ளன. ஒருவேளை யாரும் இந்த சம்பந்தமில்லாத பதில்களை பற்றி கேள்வி கேட்காமல் இருந்திருக்கலாம். ஒன்று அவர்கள் பதில் சொல்பவர்மீது அதிகமாக மனம் கவரப்பட்டு, போதிதருமரைப் போன்ற மக்களின் தனிமனிதத் தன்மையினால் பெருமகிழ்ச்சி அடைந்திருக்கலாம் அல்லது ஒருவேளை போதிதருமர் அந்த கேள்வியைச் சுற்றிலும் புகையை உருவாக்கிவிட்டதால், அவர்கள் கேட்ட கேள்வி அவர்களுக்கு தெளிவாக தெரியாமல் போய் இருக்கலாம். அவர்களின் கண்களில் அவர் மண்ணைத் தூவுகிறார். இது பதில் அல்ல.

ஆனால் இது போதிதருமரோடு மட்டும் நடக்கின்ற உண்மைநிலை அல்ல. கௌதமபுத்தர், மகாவீரர், கன்பூசியஸ், லாவோத்சு, ஜரதுஷ்ட்ரர், இயேசு, மோசஸ் இப்படி ஒவ்வொருவரின் உண்மைநிலையும் இதுதான். விதிவிலக்கு என்பது இல்லாமல் ஒவ்வொருவரின் உண்மைநிலையும் இதுதான். இறுதியான கேள்விக்கு அருகில் அவர்கள் வரும் போதெல்லாம், அவர்கள் முட்டாள்தனமானவற்றை பேச ஆரம்பித்து விடுவார்கள். இவர்கள் மிகவும் புத்திசாலி மக்கள், சிறந்தவற்றை உணரும் மக்கள்.

ஆனால் இறுதியான கேள்விக்கு கள்ளம் கபடமற்றவர்களால் மட்டுமே பதிலளிக்க முடியுமே தவிர புத்திசாலிகளால் அல்ல, வெள்ளை உள்ள கொண்ட மனிதரால் மட்டுமே பதிலளிக்க முடியும், எந்த மரியாதையையும் எந்த ஞானத்தையும், எந்த மெய்ஞ்ஞானத்திற்கும் கவலைப்படாத, தனது நேர்மைக்காக எல்லாவற்றையும் பணயம் வைக்கிற ஒரு மனிதரால் மட்டுமே பதிலளிக்க முடியும்.

இத்தகைய மக்கள் தங்களின் ஞானத்தை பணயமாக வைக்க திறமை இல்லாதவர்கள். ''எனக்கு தெரியாது'' என்று அவர்களால் கூறமுடியாது. ஆனால் அது ஒன்று மட்டுமே உண்மையான கேள்வியாகும். ஏனெனில் அதுதான் நீங்கள் இறுதியான கேள்விக்கு வந்துவிட்டீர்கள் என்கிற உணர்வை உங்களுக்கு கொடுக்கிறது. இப்போது புதிர் ஆரம்பித்துவிட்டது, எனவே அதற்கு தீர்வுகாண முடியாது என்று நீங்கள் உணர்வீர்கள். அதை அறிவாக தரம் தாழ்த்துவதற்கு வழி கிடையாது. அது முயற்சியினால், புத்திசாலித்தனத்தால், செயல் பயிற்சியினால், ஒழுங்கு நடவடிக்கையால், எந்த ஒரு செய்முறையாலும், எந்த ஒரு சடங்கின் மூலமும் நீங்கள் அறிந்து கொள்ளும்படி செய்வதற்கு அது அறியாத ஒரு விஷயம் அல்ல.

அந்த புதிரை வாழ்ந்து பார்க்க முடியும். ஆனால் அறிந்து கொள்ள முடியாது. அது எப்போதுமே அறியமுடியாததாக இருக்கிறது. அது எப்போதும் ஒரு புதிராகவே இருக்கிறது.

G.E மூரே (G.E. Moore) என்கிற மாபெரும் நவீன கால மனிதர் பிரின்சிபியா எதிகா (Principia Ethica) என்னும் புத்தகத்தை எழுதி இருக்கிறார். வெறுமனே ''நல்லது'' (Good) என்பதை வெறுமனே விவரிப்பதற்காக, இந்த அளவுக்கு ஆழ்ந்து சிந்தித்த மனிதர் ஒட்டுமொத்த வரலாற்றிலும் ஒருவேளை அவராகத்தான் இருக்கலாம். ஏனெனில் நல்லது என்றால் என்ன என்பதை விவரிக்காமல், இங்கு ஒழுக்கமும், நன்னெறி என்பதும் இருக்க முடியாது. நல்லது என்றால் என்ன என்று உங்களால் விவரிக்க முடியவில்லை என்றால், அதன்பின்னர் எது நல்ஒழுக்கம், எது தீயஒழுக்கம், எதுசரி, எதுதவறு என்று உங்களால் எப்படி தீர்மானிக்க முடியும்.

அவர், இது இறுதியான கேள்வி என்பது தெரியாமல் இந்த அடிப்படைக் கேள்வியை எடுத்துக்கொண்டு சிக்கலில் மாட்டிக்கொண்டார். இந்த நவீன உலகில் மிகுந்த அறிவாளிகளில் அவரும் ஒருவர். ''நல்லது என்றால் என்ன?'' என்கிற ஒரு சிறிய கேள்வியை எடுத்துக் கொண்டு, அதை எல்லாத் திசைகளிலும் விசாரித்துக்கொண்டு கிட்டத்தட்ட இருநூற்று ஐம்பது பக்கங்கள் கொண்ட அந்த புத்தகத்தை எழுதி இருக்கிறார். ஆனால் நல்லது என்கின்ற இந்த எளிய வார்த்தையை விவரிப்பதில் அவர் முழுமையாக தோல்வி அடைந்துவிட்டார். எது நல்லது என்பது எல்லாருக்கும் தெரியும், எது கெட்டது என்று எல்லாருக்கும் தெரியும், எது அழகானது என்று எல்லாருக்கும் தெரியும், எது அசிங்கமானது என்று எல்லாருக்கும் தெரியும். ஆனால் அதைப் பற்றி விவரிக்க வேண்டும் என்று வரும்போது, நீங்களும் அதே சிக்கலில்தான் இருப்பீர்கள்.

எல்லாருக்கும் நல்லது என்றால் என்ன என்று தெரிகிறது என்று அவர் நினைத்துக்கொண்டு, அதன் ரகசியத்தை கண்டு கொண்டு, அதை விவரிப்பதற்கு கண்டிப்பாக வழி இருக்க வேண்டும் என்று நினைத்தார். ஆனால், இருநூற்று ஐம்பது பக்கங்கள், மிகவும் ஒருமுகப்படுத்தி சிந்தித்து, தர்க்க அறிவின் கூர்மையுடன், பகுத்தறிவு பகுப்பாய்விற்கு பிறகு, நல்லது என்னால் விவரிக்க முடியாதது என்கிற முடிவுக்கு அவர் வருகிறார். இந்த இருநூற்று ஐம்பது பக்கங்களிலும் அவர் எங்கும் சென்றடையாமல் வெறுமனே சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக் கிறார். நல்லது என்பது விவரிக்க முடியாததாக இருக்கிறது.

குரோசே (Croce) என்பவர் ''அழகு'' என்பதற்கு இதே காரியத்தை செய்திருக்கிறார். ஆயிரம் பக்கங்கள் எழுதி இருக்கிறார். ''நல்லது'' என்பதற்கு G.E. மூரே எவ்வளவு ஆழம் சென்றாரோ அதைவிட அதிக ஆழத்திற்கு அவர் சென்றிருக்கிறார். ஆனால் ஆயிரம் பக்கங்களுக்கு பிறகு, அழகு என்பது விவரிக்க முடியாதது என்கிற இறுதி வாக்குமூலத்திற்கு அவர் வருகிறார்.

அழகு என்றால் என்ன, அசிங்கம் என்றால் என்ன என்று தெரியாத ஒரு மனிதரைக் கண்டுபிடிப்பது மிகவும் கடினம்,

என்பதுதான் மிகவும் கடினமான பிரச்சினை என்பது ஒவ்வொரு வருக்கும் தெரியும். ஆகையினால் அவற்றை விவரிக்கும்படி வலியுறுத்தாதீர்கள். இதில் மாபெரும் மனதினை உடையவர்களும் கூட தோற்றுப்போய் விட்டார்கள்.

அழகு என்பது விவரிக்க முடியாதது என்று அவர்கள் கூறுவது அவர்கள் தோல்வியை ஏற்றுக்கொள்வதாகிறது. G.E. மூரே மிகவும் விரக்தி அடைந்து, ''நல்லது என்றால் என்ன என்று என்னால் விவரிக்க முடியாததற்கு என்னைக் குறைகூறாதீர்கள். எளிய கேள்விகளுக்கும் கூட விவரித்து விடமுடியும். இது மிகவும் சிக்கலான கேள்வி. உதாரணமாக, மஞ்சள் என்றால் என்ன...?

''மஞ்சள் என்றால் என்ன என்று உங்களால் விவரிக்க முடியுமா?'' என்பதைத் தான் G.E. மூரே கேட்கிறார். மஞ்சள் என்றால் என்ன என்று உங்கள் அனைவருக்கும் தெரியும். அது குறித்து உங்களுக்கு எந்த சந்தேகமும் கிடையாது. நீங்கள் அனைவரும் ஒரு மஞ்சள்நிற கேந்திப்பூவை சுட்டிக்காட்டி இதுதான் மஞ்சள் என்று கூறமுடியும். ஆனால் அவர் சுட்டிக்காட்டுவதை கேட்கவில்லை. ''இதுதான் மஞ்சள் என்று நீங்கள் எப்படி தெரிந்து கொண்டீர்கள்? அதன் விவரணை என்ன? அந்த மஞ்சள்நிற கேந்திப்பூ நிறைவேற்றுகிற அடிப்படை பண்பு என்ன? அது ஏன் சிவப்பாக இல்லாமல் இருக்கிறது? ஏன் அது மஞ்சளாக இருக்கிறது? நிச்சயமாக நீங்கள் சில குறிப்பிட்ட விவரணைகளை வைத்திருக்க வேண்டும். சில வகைகள் சிவப்பாகவும், சில வகைகள் நீலமாகவும், சில வகைகள் பச்சையாகவும், சில வகைகள் மஞ்சளாகவும் இருப்பது ஏன்? எந்த அடிப்படையில்?'' என்று அவர் கேட்கிறார்.

ஆனால் அதன்பின்னர் அவரே, ''எல்லாருக்கும் அது தெரிந்திருந்தாலும் கூட மஞ்சள் என்பதை விவரிக்க முடிய வில்லை எனில், யாரும் கூறவில்லை எனில், அதன்பிறகு ஒருவேளை நமது அறிவானது வெறுமனே மேலெழுந்தவாரியாக மட்டுமே இருக்கிறது'' என்று கூறுகிறார்.

ஒருவேளை நாம் எதையும் ஒருபோதும் ஆழ்ந்து விசாரிக்காமல் போயிருக்கலாம், நாம் அதன் ஆழ்ந்த அடிப்பகுதிக்கு ஒருபோதும் போகாமல் இருந்திருக்கலாம். அப்படி இல்லை எனில் எல்லாமே விவரிக்க முடியாதது என்பதுதான் நான் புரிந்துகொண்டது. ஏனெனில் எல்லாமே புதிர் நிறைந்தது. அழகு, அல்லது நல்லது அல்லது அறியாமை அல்லது விழிப்புணர்வு ஆகியவை குறித்த கேள்விகள் மட்டுமல்ல, எல்லாமே இந்த ஒட்டுமொத்த பிரபஞ்சமும் விவரிக்க முடியாதவைகளால் மட்டுமே நிறைந்திருக்கிறது. இதை அறிந்து கொள்வதுதான் நமது இறுதியான அறியாமையை அறிந்து கொள்வதாகும். மேலும் நமது இறுதியான அறியாமையை அறிந்து கொள்வதற்கு, உங்களுக்கு, முற்றிலும் தன்னலமற்ற, ஆணவமற்ற வெள்ளை மனம், தேவை ஏனெனில் அதுதான் நம்மிடம் காணாமல் போய்விட்டது.

மற்றவர்கள் செய்வதைப் போலவே போதிதருமரும் செய்கிறார். மேலும் இது ஒரு புதிய விஷயம் அல்ல. தத்துவமேதைகள் பல நூற்றாண்டுகளாக இது போன்ற எளிய கேள்விகளில் ஈடுபட்டு வந்திருக்கிறார்கள்.

உங்கள் அனைவருக்கும் இரண்டும் இரண்டும் கூட்டினால் நான்கு என்பது தெரியும். ஆனால் அது ஏன் அப்படி இருக்கிறது அல்லது அது வெறுமனே கேள்விப்பட்டது தானா என்று நீங்கள் ஒருபோதும் ஆழ்ந்த விசாரணைக்குள் சென்றதில்லை. இரண்டையும், இரண்டையும் கூட்டினால் நான்கு எனறு மக்கள் கூறுவதை நீங்கள் கேட்டீர்கள். எனவே நீங்கள் அதை தலைமுறைக்குப் பின் தலைமுறையாக அதை திரும்பத் திரும்ப கூறிக்கொண்டு இருக்கிறீர்கள்.

நமது காலத்தில் இருந்த, ஒருவேளை எல்லாக் காலத்திற்கும் உரிய மிகப்பெரிய கணிதமேதைகளில் ஒருவரான பெர்ட்ரண்ட் ரஸ்ஸல், பிரின்சிபியா மேதமேடிக்கா (Principia Mathematica) என்கிற ஒரு புத்தகத்தை எழுதி இருக்கிறார். இரண்டையும், இரண்டையும் கூட்டினால் நான்குதானா அல்லது இல்லையா என்கிற கேள்விக்குப் பதில் கூற அவருக்கு இருநூற்று ஐம்பது

பக்கம் தேவைப்பட்டிருக்கிறது. அந்த இருநூற்று ஐம்பது பக்கங்களில் அவர் என்ன எழுதியிருக்கிறார் என்று கூட உங்களால் நினைத்துக்கூட பார்க்கமுடியாது. இரண்டையும், இரண்டையும் கூட்டினால் வெறுமனே நான்குதான் என்று கூறிவிட்டு அதை வெறுமனே மறந்துவிடலாம். அதற்கு இந்த இருநூற்று ஐம்பது பக்கங்கள், அடர்ந்த தர்க்க அறிவு விவாதங்கள் நிறைந்து இருப்பதால் இந்த உலகில் படிக்கமுடியாத புத்தகங்களில் அவரது புத்தகம் ஒன்றாக உள்ளது.

என்னைப்போன்ற ஒரு சில பித்துக்குளி மக்கள், அது படிக்க கூடியதாக இருந்தாலும். படிக்க முடியாததாக இருந்தாலும் திறந்துகூட பார்க்கப்படாமல் இருப்பதை நானே பார்த்திருக்கிறேன். அந்த புத்தகத்தில் அநேக பக்கங்கள் ஒன்றாக உள்ளன. அவற்றை யாரும் வெட்டியது கூட கிடையாது. ஏனெனில் அந்த புத்தகத்தில் இரண்டு பக்கங்களை படித்தாலே போதும்! அந்த புத்தகம் ஆயிரம் பக்கங்கள் கொண்டது. மேலும் அதில் நாலில் ஒருபகுதி, இரண்டையும் இரண்டையும் கூட்டினால் அது நான்குதானா அல்லது இல்லையா என்பதைப் பற்றி விவாதித்துக் கொண்டு செல்கிறது.

ஆனால் முடிவு? அது வெறுமனே ஒரு நம்பிக்கை மட்டுமே என்பதுதான் அந்த விசாரணையின் முடிவு. இரண்டையும், இரண்டையும் கூட்டினால் நான்குதான் என்று நிச்சயமாக கூறமுடியாது. இது பயன்பாட்டுக்கான ஒரு கருத்து. இது நல்லது. காரியத்திற்கு உதவியது. ஆனால் இதையும் கூட பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் சவாலாக எடுத்துக் கொள்ளாமல் விட்டுவிடவில்லை. கோடெல் (Godel) என்னும் மற்றொரு கணிதமேதை அதை சவாலாக எடுத்துக்கொண்டார். இரண்டும் இரண்டும் சேர்ந்தால் நான்கு என்பதற்கான சாத்தியங்கள் இல்லை என்று கோடெல் கூறுகிறார். சாத்தியமே இல்லை. மேலும் கோடெல்லும்கூட பெர்ட்ரண்ட ரஸ்ஸலைப் போல அதே அறிவுத்திறன் கொண்டவர். அவர் குறைந்த அறிவாளி அல்ல. ஒருவேளை அவரைவிட பெரிய அறிவாளியாகக் கூட இருக்கலாம். அவரது பதில் மிகவும் தெளிவாக உள்ளது மேலும் பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் அதற்கு பதில் சொல்லமுடியவில்லை.

கோடெல்லின் வாதமானது வேறுவழியில் இருக்கிறது. நீங்கள் ஓர் இடத்தில் இரண்டு நாற்காலிகள் மற்றும் மேலும் இரண்டு நாற்காலிகளைப் போட்டால் இயற்கையாக அங்கு இப்போது நான்கு நாற்காலிகள் இருக்கும். ஆனால் இரண்டு என்பதும் கூட பிரித்து எடுக்கக்கூடிய ஒரு அடையாளம் தான். இரண்டு நாற்காலிகள் என்பது வேறுவிஷயம். இரண்டு என்பது வெறும் ஒரு கருத்து மட்டுமேயாகும். இது கடவுள் அல்லது சாத்தான் என்பதைப் போன்று வெறும் தற்காலிக ஆதாரம் மட்டுமேயாகும். இரண்டு என்பதை நீங்கள் எங்காவது பார்த்திருக்கிறீர்களா? இரண்டு என்பதைப் பார்த்து அதனிடம் ஒரு 'ஹலோ' சொல்லி இருக்கிறீர்களா? இரண்டும் இரண்டும் எப்போதாவது சந்தித்து ஒன்றை ஒன்று கட்டித்தழுவிக் கொண்டதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?

மேலும் இந்த இயற்கையில் உள்ள இரண்டு விஷயங்கள் ஒருபோதும் ஒரே மாதிரி இருப்பதில்லை என்பது கோடெல்லின் விமர்சனம் ஆகும். எப்போதும் ஏதாவது வேறுபாடு இருக்கும். ஒரே மாதிரியான இரண்டு மனிதர்களை உங்களால் கண்டு கொள்ள முடியாது. காடு முழுவதும் சுற்றினாலும் கூட உங்களால் இரண்டு இலைகள் ஒரே மாதிரி இருப்பதை கண்டுகொள்ள முடியாது. அப்படி இருக்கும்போது ஒன்றுபோல இல்லாத இரண்டு இலைகளும், ஒன்று போல இல்லாத வேறு இரண்டு இலைகளும் சேர்ந்தால் எப்படி நான்கு இலைகளாக இருக்கமுடியும்? அவை மூன்றாக இருக்கலாம், அவை ஐந்தாக இருக்கலாம், அவை எதுவாகவும் இருக்கலாம். ஆனால் நான்காக இருக்க முடியாது!

எனவே, கோடெல் சொல்வது சரி என்று நான் புரிந்துகொள்கிறேன். ஆனால் எனது புரிதலானது முற்றிலும் வேறுபட்ட ஒரு பரிமாணத்தில் இருந்து வருகிறது. என்னைப் பொறுத்தவரையில் கோடெல் அதிகமாக மனம் கவர்கிறார். ஏனெனில் அவர் கூறுவது இந்த இயற்கையை புதிரானதாக ஆக்குகிறது. இரண்டும், இரண்டும் நான்கு என்கிற இந்த எளிய பதிலைக் கூட உங்களால் கணக்கில் சேர்க்க முடியவில்லை. எல்லாமே மனிதனுக்கு பயன்தருகிறது. ஆனால் உண்மைநிலை

என்பதைப் பொறுத்தமட்டில், அது அறிய முடியாததாக இருக்கிறது.

ஆகவே, நீங்கள் இதை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். நான் போதிதருமனின் பதில்களைப் பற்றி பேசப் போகிறேன். ஆனால் இது பதில் அல்ல. இதற்குள் செல்வது உதவியானதாக இருக்கலாம். வேறு எதையாவது புரிந்து கொள்வதற்கு இது உங்களுக்கு உதவலாம். ஆனால் அந்த கேள்விக்கு இது பதில் அல்ல.

ஆனால் இது போதிதருமரின் தவறு அல்ல. அதற்கு பதிலே கிடையாது. தனக்கு தெரியாது என்பதை அவர் அறிந்து கொள்ளவில்லை என்பதுதான் அவரது தவறு. ஆனால் என்னால் அவரை மன்னிக்க முடியாது. ஏனெனில் நான் அவரை நேசிக்கிறேன். அவருக்கு மரியாதை கொடுக்கிறேன். ஆனால் அவர் நேர்மையானவராக இருக்க வேண்டும் என்று நான் விரும்பினேன். ''எனக்கு தெரியாது'' என்று மட்டும் அவர் கூறி இருந்தால் ஆயிரக்கணக்கான ஏனைய ஞானிகள், புத்தர்கள், போதிசத்வர்கள் மற்றும் அர்கதர்களுக்கு மேலாக அவர் எழுந்து நின்றிருப்பார். அவர் முற்றிலும் தனித்துவம் நிறைந்தவராக இருந்திருப்பார். ஆனால் அதை அவரால் செய்ய முடியவில்லை.

*அறியாமையுடன் கூடிய மனமானது, அதன் எல்லையற்ற மனவேதனைகளோடும், காமம் மற்றம் தீயவைகளோடும், பேராசை, கோபம் மற்றும் மாயை ஆகிய மூன்று விஷங்களில் வேர் கொண்டு இருக்கின்றன. மனதின் இந்த மூன்று விஷம் நிறைந்த நிலைகளும்கூட, ஒரே ஒரு நடுப்பகுதியையும், எண்ணற்ற கிளைகளையும், இலைகளையும் கொண்ட மரங்கள் போன்று, எண்ணற்ற தீயவைகளை உள்ளடக்கி இருக்கிறது என்றாலும்கூட ஒவ்வொரு விஷமும் பலலட்சம் அநேக தீமைகளை உருவாக்குவதால், ஒரு மரத்தினை உதாரணமாக ஒப்பிடுவது சரியானதாகாது.*

*இந்த மூன்று விஷங்களும், நமது ஆறு புலன் உறுப்புகளில், ஆறுவிதமான தன்னுணர்வுகளாக அல்லது திருடர்களாக இடம் பெற்றிருக்கின்றன. அவை திருடர்கள் என்று அழைக்கப்*

படுகின்றன. ஏனெனில் அவை புலன்களின் வாசல் வழியாக உள்ளேயும் வெளியேயும் சென்று வருகின்றன. எண்ணிலடங்கா உடைமைகள் மீது அடங்காத பேராசை கொள்கின்றன. தீயவை களில் ஈடுபட்டு தங்களின் உண்மையான அடையாளத்தை முகமூடி போட்டு மறைக்கின்றன.

ஆனால் யாராவது ஒருவர் அவற்றின் உற்பத்தி இடத்தை வெட்டிவிட்டால், நதிகள் வறண்டு விடுகின்றன. ஆனால் யார் ஒருவர் விடுதலையைத் தேடுகிறாரோ அவர் இந்த மூன்று விஷங்களையும், நல்ஒழுக்கத்தின் மூன்று ஓரினக்கூட்டாக மாற்ற முடியும். மேலும் அந்த ஆறு திருடர்களையும் பரமிதாக்களாக மாற்ற முடியும். அவர் தனது மனவேதனையை காலாகாலத்திற்கும் ஒழித்துவிடுகிறார்.

இவை எல்லாம் சரிதான். ஆனால் இதை அந்த கேள்விக்கு பதில் என்று நீங்கள் பார்க்க முடியுமா? விஷங்கள் எனப்படுகின்ற உங்களது பேராசை, கோபம், மாயை ஆகியவற்றை விழிப்புணர்வினால் மாற்றமுடியும் என்பது உண்மை. அவை அமுதமாக உருமாற்றம் அடைகின்றன. உங்களுடைய நோயாக இருந்தவை இப்போது உங்களது ஆரோக்கியமாக ஆகிவிடு கின்றன. உங்களது அடிமைச் சங்கிலியாக இருந்தவை இப்போது உங்களது விடுதலையாக மாறிவிடுகின்றன. நீங்கள் செய்ய வேண்டிதெல்லாம் உங்களது ஆன்மாவின் இருட்டிற்குள் விழிப்புணர்வை கொண்டுவர வேண்டியது மட்டுமேயாகும்.

இது உண்மைதான். நாம் இந்த விஷயங்களைப் பற்றி அநேக, அநேக நேரங்களில், வெவ்வேறு வழிகளில் ஏற்கனவே கலந்துரையாடி இருக்கிறோம். ஆனால், ''இந்த அறியாமை எங்கிருந்து வருகிறது?'' என்கிற கேள்விக்கு இது பதில் அல்ல. மரத்தின் வேர்களை வெட்டிவிட்டால் அதன்பின்னர் அந்த மரம் பட்டுப்போகிறது என்பதும் கூட உண்மையானதுதான். ஆனால் உங்களது அடிமைத்தளையின், உங்களது குருட்டுத்தன்மையின், உங்களது இருளின், வேராக உங்களது மனம்தான் இருக்கிறது. மேலும் வேர் எனப்படுவது நீங்கள் உங்களை அந்த மனதோடு ஐக்கியப்படுத்திக் கொள்வதாகும். நீங்கள் கோபத்தில்

இருக்கும்போது ''நான் கோபத்தில் இருக்கிறேன்'' என்று கூறுகிறீர்கள். அதுதான் வேர். நீங்கள் கோபத்தில் இருக்கும்போது உண்மையில் விழிப்புணர்வுடன் இருந்தால், ''நான் கோபத்தில் இருக்கிறேன்'' என்று நீங்கள் சொல்லமாட்டீர்கள். ''கோபமானது எனது மனதின் வழியாக கடந்து செல்வதை நான் காண்கிறேன்,'' என்று நீங்கள் கூறுவீர்கள். உங்களால் அப்படி சொல்லமுடிந்தால், நீங்கள் மனதைப் பார்க்கின்ற ஒருவர், நீங்கள் ஒரு சாட்சி, அந்த வேர் வெட்டப்பட்டு விடுகிறது.

ராமதீர்த்தர் என்னும் இந்திய சந்நியாசி ஒருவர் இந்த உலகில் எல்லா இடங்களுக்கும் பயணம் செய்தார். அவரிடம், 'நான்' என்று ஒருபோதும் சொல்லிக் கொள்ளாத ஒரு விநோதமான பழக்கம் இருந்தது. 'நான்' என்பதை பயன்படுத்துவதற்கு பதிலாக, அவர் தன்னைக் குறிப்பதற்கும் கூட அவர் படர்க்கையை பயன்படுத்தினார். உதாரணமாக ராமதீர்த்ததருக்கு தாகம் எடுக்கிறது'' என்று தான் கூறுவார். ''நான் தாகமாக இருக்கிறேன்,'' என்று ஒருபோதும் அவர் சொல்லமாட்டார். ''ராமா விற்கு தாகம் எடுக்கிறது'' என்று தான் அவர் கூறுவார்.

எனவே, இவரைப் பற்றி தெரிந்தவர்களுக்கு இவரிடம் சங்கடம் கிடையாது, ஆனால் அவர் இடைவிடாமல் உலகம் முழுவதும் பயணம் செய்தார். அநேக ஆண்டுகள் அவர் அமெரிக்காவில் இருந்தார். அப்போது அவர், ''ராமாவிற்கு தலைவலி எடுக்கிறது'' என்று கூறும்போது, அவர்கள், ''ராமா எங்கு இருக்கிறார்,'' என்று கேட்பார்கள். ராமதீர்த்தர் பேசும்போது ''ராமாவிற்கு தாகம் எடுக்கிறது'' அல்லது ''ராமாவிற்கு உடல்நலம் சரியில்லை'' என்றுதான் கூறுவார்.

வித்தியாசமான ஒரு இடத்தில், அவர் வித்தியாசமான மக்களிடம் பேசிக்கொண்டு இருந்ததால், ''இவர் பேசுவது விநோதமாக இருக்கிறது. உங்களுக்கு தாகம் எடுக்கிறது என்று நீங்கள் ஏன் கூறக்கூடாது? அதை ஏன் நீங்கள் தேவையில்லாமல் சிக்கலாக்கி கொண்டு இருக்கிறீர்கள்?'' என்று அவரிடம் இடைவிடாது இப்படி கேட்டுக் கொண்டு இருந்தனர். ஆனால் அவர் வேரினை வெட்டக்கூடிய ஒரு குறிப்பிட்ட செயல்

முறையை கடைபிடித்து வந்தார். ''நான் தாகத்துடன் இருக்கிறேன், நான் தலைவலியோடு இருக்கிறேன், நான் உடல்நலம் இல்லாமல் இருக்கிறேன். நான் தூக்கத்தை உணர்கிறேன் என்று சொல்லாமல் இருப்பதன்மூலம் அந்த 'நான்' என்பதை அவர் தவிர்ப்பதற்கு முயற்சி செய்து கொண்டிருந்தார். வெறுமனே ஒரு கவனிப்பவராக இருப்பதற்கு அவர் முயற்சி செய்து கொண்டு இருந்தார். ''ராமாவிற்கு பசிக்கிறது; ராமாவிற்கு தாகம் எடுக்கிறது அல்லது ராமாவிற்கு தலை வலிக்கிறது'' என்று கூறுவதன்மூலம் அவர் ராமாவிற்கு என்ன நடக்கிறது என்பதை ஒரு சாட்சியாக உங்களுக்கு தெரிவித்துக் கொண்டு இருக்கிறார். உங்களால் எதாவது செய்ய முடியுமெனில் செய்யுங்கள்,'' என்று அவர் கூறுகிறார்.

அவரது உடலில், அவரது மனதில், அவரது உள்ளத்தில் என்னவெல்லாம் நடந்து கொண்டிருக்கிறதோ அதிலிருந்து அவர் தன்னை வெளியே இழுப்பதற்கு முயற்சித்துக் கொண்டு இருந்தார். எல்லா அடையாளங்களில் இருந்தும் அவர் தன்னை முற்றிலும் தெளிவாக்க விரும்பினார். அவர் வெறுமனே ஒரு காட்சியாக இருப்பதற்கு விரும்பினார்.

காட்சியாக இருப்பது என்பது வேரினை வெட்டி விடுவதாகும். அப்போது நீங்கள் விடுதலை பெற்றுவிடுவீர்கள். இது முற்றிலும் சரியானது. ஆனால் இது கேள்விக்கான பதில் அல்ல. போதிதருமர் தேவை இல்லாமல், வாய்ச் சொற்களையும், உரைநடைப் பகுதிகளையும் உருவாக்கிக் கொண்டே போகிறார் என்கிற உண்மையை நான் வலியுறுத்திக் கொண்டே இருப்பேன். சீடர் ஒருவேளை அந்த கேள்வியைப் பற்றி மறந்திருக்கலாம். ஆனால் என்னால் அதை மறக்கவோ அல்லது மன்னிக்கவோ முடியாது. அவர் கூறுகின்றவை எல்லாம் வேறு விதங்களில் சரியானதுதான். எனவே அவர் தவறான எதையும் கூறவில்லை. ஆனால் அவர் கூறுவதெல்லாம் சரியானதாக இருந்தாலும் கூட, அது கேள்விக்கு பொருத்தமான பதில் இல்லை. மேலும் சரியானதாக உள்ளது என்பது கேள்வியல்ல. பதிலானது கேள்விக்கு பொருத்தமானதாக இருக்கவேண்டும். இந்த மூன்று பகுதிகளும், பிரபஞ்சத்தின் ஆறு நிலைகளும் எல்லையற்று

பரந்துவிரிந்து இருக்கின்றன. இப்படி அவர் மேலும்மேலும் சொல்லிக்கொண்டே போகிறார். அறியாமையின் பிறப்பிடம், அது எங்கிருந்து வருகிறது என்பதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம் உள்ளது? ஆனால் நாம் எல்லாரும் மனதைக் கவனிப்பதை செய்வதன் மூலம் அவற்றின் முடிவற்ற மனவேதனைகளில் இருந்து நாம் எப்படி தப்பிக்க முடியும்? சீடர்கள் மற்றொரு கேள்வியை கேட்டுக் கொண்டு இருக்கிறார்கள். அவர்கள் ஏமாற்றப்பட்டு விட்டார்கள். தங்களது முதல் கேள்விக்கு பதில் கிடைத்துவிட்டது என்று அவர்கள் நினைக்கிறார்கள். ஆனால் அவர்கள் பதிலைப் பெறவில்லை. ஏனெனில் அதற்கு பதிலே கிடையாது. இப்போது அவர்கள் மற்றொரு கேள்வியைக் கேட்கிறார்கள்.

*இந்த மூன்று பகுதிகளும். பிரபஞ்சத்தின் ஆறுநிலைகளும். எல்லையற்று பரந்துவிரிந்து இருக்கின்றன. ஆனால் நாம் எல்லாரும் மனதைக் கவனிப்பதை செய்வதன் மூலம் அவற்றின் முடிவற்ற மன வேதனைகளில் இருந்து நாம் எப்படி தப்பிக்க முடியும்?*

போதிதருமர் அவர்களை பிடித்துவிட்டார். அவர்களை ஏமாற்றிவிட்டார். பதில் சொல்ல முடியாத ஒரு கேள்விக்கு அவர்களை அவர் கொண்டு வந்துவிட்டார்.

வெறும் ஜலதோஷத்திற்கு, பணக்கார பெண்மணி ஒருவருக்கு வைத்தியம் பார்த்த ஒரு மருத்துவரின் கதை எனக்கு நினைவுக்கு வருகிறது. என்னதான் வைத்தியம் பார்த்தும் ஜலதோஷம் போகவில்லை. மருத்துவர் மிகவும் களைப்படைந்து விட்டார். ஏனெனில் ஒவ்வொரு நாளும் தனக்கு இன்னமும் ஜலதோஷம் போகவில்லை என்று கூறிக்கொண்டு அவள் மருத்துவமனைக்கு வந்து நின்று கொண்டிருந்தாள். ஆனால் சாதாரண ஜலதோஷத்திற்கு உண்மையில் வைத்தியமே கிடையாது. அதைப்பற்றி அறிந்தவர்கள், ''நீங்கள் மருந்து சாப்பிட்டால், ஜலதோஷம் ஏழு நாட்களில் போய்விடும். நீங்கள் மருந்து சாப்பிடவில்லை என்றால், அது ஒரு வாரத்தில் போய் விடுகிறது,'' என்று கூறுவார்கள்.

ஆனால் மருத்துவர் மிகவும் களைத்துவிட்டார். ஒவ்வொரு நாளும் அந்த பணக்கார பெண்மணி தனது லிமௌசின் காரில் வந்து அந்த காரை வண்டிகள் நிறுத்துமிடத்தில் நிறுத்துகின்ற அந்த சத்தத்தை கேட்ட உடனேயே அந்த மருத்துவர், ''அட கடவுளே, அவள் மீண்டும் வந்துவிட்டாளே. அவளது சாதாரண ஜலதோஷம் என்னைக் கொல்லப் போகிறது,'' என்று கூறுவார்.

இறுதியாக அவர் சலிப்படைந்து அவளிடம், ''இங்கே பாருங்கள், இதை ஒன்றே ஒன்றினால் மட்டுமே குணப்படுத்த முடியும். நான் அதை உங்களுக்கு சொல்லவில்லை. ஏனெனில் அது கொஞ்சம் கடினமானது,'' என்றார். அதற்கு அந்த பெண்மணி, ''எந்த பிரச்சினையும் கிடையாது. நான் எதையும் செய்யத் தயாராக இருக்கிறேன், ஆனால் நான் இந்த ஜலதோஷத்தை ஒழித்துவிட வேண்டும்,'' என்றாள்.

உடனே மருத்துவர் அவளிடம், ''நீங்கள் ஒரு காரியம் செய்யுங்கள். நீங்கள் வசிக்கின்ற அரண்மனைக்கு பின்னால் ஒரு பெரிய ஏரி உள்ளது. எனவே நடு இரவில், முற்றிலும் குளிரானது உறைந்து விடுவதுபோல் இருக்கும்போது, உங்கள் ஆடைகளை எல்லாம் எடுத்துவிட்டு, அந்த ஏரியில் குதித்துவிடுங்கள். அதன்பின்னர் நிர்வாணமாக கரையில் நில்லுங்கள். உங்களது உடலில் உள்ள ஈரத்தை துடைத்து விடாதீர்கள். தென்றல் காற்று அதை உலர வைக்கட்டும்,'' என்று கூறினார்.

அதற்கு அந்த பெண்மணி, ''அட கடவுளே, சாதாரண ஜல தோஷத்திற்கு இதுதான் வைத்தியமா? இது எனக்கு இரட்டிப்பு நிமோனியா காய்ச்சலைக் கொடுத்து விடுமே!'' என்றாள்.

உடனே மருத்துவர், ''அது சரிதான். இரட்டிப்பு நிமோனியா காய்ச்சலுக்கு என்னிடம் வைத்தியம் உள்ளது. ஆனால் சாதாரண ஜலதோஷத்திற்கு என்னிடம் வைத்தியம் இல்லை. எனவே முதலில் இரட்டிப்பு நிமோனியா காய்ச்சலை உருவாக்குங்கள். அதன்பிறகு எல்லாமே கட்டுப்பாட்டிற்குள் வந்துவிடும். எனவே நீங்கள் திரும்பி வரும்போது, இரட்டிப்பு நிமோனியாவுடன் வாருங்கள். அப்போது நான் அதற்கு வைத்தியம் பார்க்கிறேன். ஆனால் சாதாரண ஜலதோஷத்திற்கு என்னிடம் வேறு எந்த

வைத்தியமும் கிடையாது. இது ஒன்றுதான் வைத்தியம். யாராவது வைத்தியம் பார்க்க விரும்பினால் கடைசி முயற்சியாக இதை நான் அவர்களுக்கு கொடுக்கிறேன். உங்களுக்கு ஒரு நிமோனியாவோ அல்லது இரட்டிப்பு நிமோனியாவோ, எது வந்தாலும் பயமில்லை. நான் நன்றாக பரிசோதித்து பார்த்து அதற்கு சரியான வைத்தியத்தை நான் வைத்திருக்கிறேன். நான் அதற்கு உத்தரவாதம் கொடுக்கிறேன். நீங்கள் வெறுமனே நான் கூறியதை செய்துவிட்டு வாருங்கள்,'' என்று கூறினார்.

இதைத்தான் தத்துவமேதைகள் செய்துகொண்டு இருக்கிறார்கள். அவர்கள் பதில் சொல்ல முடியாது ஒரு கேள்வியை நீங்கள் அவர்களிடம் கேட்டால் அவர்கள் ஒற்றை நிமோனியா அல்லது இரட்டை நிமோனியா இப்படி ஏதாவது கூறிக்கொண்டு செல்வார்கள். அவர்களின் வார்த்தைகளால் சாதாரண மக்கள் அதிர்ச்சி அடைந்துவிடுவார்கள். ஒன்று தங்களின் கேள்விகளுக்குப் பதிலளிக்கப்பட்டு விட்டன என்று அவர்கள் நினைத்திருக்க வேண்டும் அல்லது ஒருவேளை தத்துவ மேதைகளின் பிரசங்கம் மிக நீண்ட நேரம் நடப்பதால் அதற்குள் அவர்கள் கேள்வியை மறந்து இருக்கலாம்.

அவர்கள் அடுத்த கேள்வியைக் கேட்கிறார்கள். இப்போது அங்கு பிரச்சினை கிடையாது. அவர்கள் இப்போது, ''இங்கு அநேக மனவேதனைகள் உள்ளன. பிரபஞ்சமானது மிகவும் பரந்துவிரிந்து இருக்கிறது. மேலும் ஒருவர் அநேக பிறவிகளில், அநேக தீய காரியங்களைச் செய்கின்றார். எனவே வெறுமனே மனதைக் கவனிப்பதால் மட்டும், அவற்றில் இருந்து எப்படி விடுதலை அடையமுடியும்,'' என்று கேட்கிறார்கள்.

வெறுமனே ஒரு சிறு வைத்தியம் போதும். மிகவும் எளிமையானது. உங்களது மனதைக் கவனியுங்கள் அப்போது எல்லாமே முடிந்துவிடும். இது நம்பமுடியாததாக இருக்கிறது. மக்கள் இதைவிட சிக்கலான ஒன்றை விரும்புகிறார்கள். ஏனெனில் பிரச்சினையானது மிகவும் சிக்கலானதாக உள்ளது.

கடந்த காலத்தில் உங்களது பல லட்சம் பிறவிகளில் நீங்கள் எண்ண முடியாத அளவுக்கு தீய செயல்களை கண்டிப்பாக செய்திருப்பீர்கள். எண்ணிக்கையில் அடங்காத தீய கனவுகளை கண்டிருப்பீர்கள். நீங்கள் தீய காரியங்களை செய்யவில்லை என்றால், அவற்றை செய்வதற்கு நினைத்து இருக்கலாம். அது எந்தவிதமான வேறுபாட்டையும் உண்டாக்காது. நீங்கள் உண்மையிலேயே யாரையாவது கொலை செய்கிறீர்களா அல்லது யாரையாவது வெறுமனே கொலை செய்ய வேண்டும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள் என்பதல்ல கேள்வி. இரண்டு வழிகளிலும் உங்களது மனமானது ஒரு தீய வழியில் செயலாற்றிக் கொண்டு இருக்கிறது. அது ஒரு தீய வழியில் அதிர்வுகளை உண்டாக்கிக் கொண்டு இருக்கிறது. மேலும் மனமானது அந்த அதிர்வுகளை பல லட்சம் பிறவிகளுக்கு சுமந்துகொண்டு இருக்கிறது. இப்போது மிகவும் அநேக கடந்தகால தீய செயல்கள் சேர்ந்து விடும்போது, வெறுமனே மனதைக் கவனிப்பதால் அவை எப்படி கைவிடப்பட முடியும்?

ஆனால் இது இறுதியான கேள்வி அல்ல. இது மிகவும் எளிமையான கேள்வி. ஏனெனில் நீங்கள் உங்களது வாழ்நாள் முழுவதும் கனவு கண்டு இருக்கலாம். இரவில் நீங்கள் நூறு ஆண்டுகள் வாழ்வது போன்று கனவு கண்டு இருக்கலாம். ஆனால் விழித்திருக்கும் நிலைக்கும், கனவு,காணும் நிலைக்கும் உள்ள காலத்தின் அளவு வேறுபட்டது. ஒரு சிறு விநாடி நீங்கள் தூங்கினாலே போதும், ஓராண்டு காலம் நீண்ட ஒரு கனவை உங்களால் காண முடியும். ஆனால் நீங்கள் தூங்கி விழித்து கடிகாரத்தைப் பார்த்தால் நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். அப்போது வெறும் ஒரு விநாடி நேரம் மட்டுமே கடந்திருக்கும். ஒரு நிமிடத்தில் உங்களால் இப்படி நீண்ட நீண்ட கனவைக் காண முடிகிறது? உங்களது கனவில் வருடத்திற்கு மேல் வருடங்கள் கடந்து விடுகின்றன.

கனவுகளில் காலத்தின் அளவு வேறுபட்டது. நீங்கள் விழித்து எழுந்துவிடும்போது உள்ள கால அளவு வேறுபட்டது. கனவுகளில் நடக்கின்ற காலத்தின் அளவு என்ன என்பது நமக்கு

மிகச்சரியாக இன்னமும் தெரியாது. அப்படி தெரிந்தால், நீங்கள் அதற்குரிய கடிகாரத்தை உருவாக்கி அதை அணிந்து கொண்டு நீங்கள் தூங்கும்போது அது சரியான காலத்தை உங்களுக்கு காட்டும். அவை நிமிடங்களிலும், மணிகளிலும் இருக்காது; அவை வருடங்களில் இருக்கும், மேலும் ஒரு வேளை ஒளி ஆண்டுகளில் இருக்கலாம். ஏனெனில் நீங்கள் நிலவில் இருப்பது போன்று கூட கனவு காணமுடியும். தொலைதூரத்தில் உள்ள ஒரு நட்சத்திரத்தில் இருப்பது போன்றும் கூட நீங்கள் கனவு காணமுடியும்.

மிகவும் அருகில் உள்ள நட்சத்திரத்திற்கு நாம் செல்வதற்கு நான்கு வருடங்கள் ஆகும். திரும்பிவருவதற்கு நான்கு வருடங்கள் ஆகும். இந்த கால அளவு நமக்கு மிகமிக அருகில் உள்ள நட்சத்திரத்தை பொறுத்தமட்டிலும்தான்! நான்கு மில்லியன் ஆண்டுகள் எடுத்துக் கொள்கின்ற நட்சத்திரங்களும் உள்ளன. சென்றடைவதற்கு ஐந்து மில்லியன் ஆண்டுகளும் மீண்டும் திரும்பி வருவதற்கு ஐந்து மில்லியன் ஆண்டுகளும் காலத்தை எடுத்துக் கொள்கின்ற நட்சத்திரங்களும் கூட இங்கு இருக்கின்றன. ஆனால் இப்படி தொலைதூரத்தில் உள்ள ஒரு நட்சத்திரத்திற்கு நீங்கள் ஒரு நாள் இரவில், ஒரு சிறிய கனவில் சென்றுவிட்டு மீண்டும் திரும்பி வந்துவிடவும் கூட முடியும். நீங்கள் வந்துதான் தீர வேண்டும். உங்களால் அங்கு தங்கி இருக்க முடியாது. எனவே நீங்கள் விழித்து எழும்போது நீங்கள் உங்களது அறையில் இருப்பதைத் தான் உங்களால் கண்டு கொள்ள முடியும்.

இது நான் கேள்விப்பட்டது. இரண்டு நண்பர்கள் முதல் நாள் இரவில் தாங்கள் கண்ட கனவினைப் பற்றி பேசிக் கொண்டு இருந்தனர். ஒருவன் அடுத்தவனிடம், ''தம்பி, என்ன அழகான கனவு அப்படிப்பட்ட ஒரு பெரிய மீனை நான் பிடித்தேன். எனது வாழ்நாள் முழுவதிலும்கூட என்னால் அந்த அளவுக்கு அநேக பெரிய மீன்களைப் பிடிக்க முடியவில்லை. இரவு முழுவதும் நான் ஏரியின் உள்ளே போய்க் கொண்டே இருந்தேன். பெரிய பெரிய மீன்களை கண்டேன்,'' என்றான்.

அதைக் கேட்ட அடுத்தவன், ''இதெல்லாம் ஒன்றுமில்லாதது. நேற்று இரவு எனது கனவில் நடந்ததை உன்னால் நினைத்துக்கூட பார்க்க முடியாது,'' என்றான்.

அதற்கு முதலாமவன், ''அப்படி என்ன நடந்தது?'' என்று கேட்டான்.

உடனே இரண்டாமவன், ''அதைச் சொல்லவா அல்லது வேண்டாமா என்று நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன். ஏனெனில் நீ அதை நம்ப மாட்டாய். நான் விழித்தவுடன் கூட என்னால் அதை நம்ப முடியவில்லை. ஆனால் அது நடந்தது. இரவில் எனது படுக்கையில் திடீரென்று ஒருபக்கம் சோபியா லாரன் படுத்திருப்பதைக் கண்டேன். ''அட கடவுளே, இவள் எப்படி இங்கு வந்தாள்?'' என்று நான் கேட்டேன். அதன்பின்னர் அடுத்த பக்கம் திரும்பிப் பார்த்தால் அங்கு மர்லின் மன்றோ படுத்திருப்பதைக் கண்டேன். உடனே நான், ''என்ன நடக்கிறது? நான் இறந்து சொர்க்கத்திற்கு வந்துவிட்டேனா? என்று கூறினேன்.

இதற்குள் அடுத்தவனுக்கு கோபம் வந்துவிட்டது. உடனே அவன், ''அட முட்டாளே, நீ ஏன் என்னைக் கூப்பிடவில்லை? இரண்டு பெண்கள் வந்திருக்கும்போது, நீ இரண்டு பெண்களிடம் என்ன செய்தாய்? உனக்கு ஒருத்திபோதும். நீ இருவரில் ஒருவரை தேர்வு செய்திருக்கலாம். அது உன்னுடைய கனவு எனவே உனக்குத்தான் முதல் சந்தர்ப்பம். ஆனால் அடுத்த பெண் எனக்குரியவள். இது என்ன விதமான நட்பு?'' என்று கேட்டான்.

அதற்கு இரண்டாமவன், ''நான் உனது வீட்டிற்கு சென்றேன், ஆனால் நீ மீன்பிடிக்கப் போய்விட்டதாக அவர்கள் கூறினார்கள்,'' என்றான்.

ஒரு சிறிய கனவில் நீங்கள் எதை வேண்டுமானாலும் செய்யமுடியும். உங்களால் முடிந்தது, உங்களால் முடியாதது, ஆகிய எதை வேண்டுமானாலும் செய்யலாம். கனவின் போது உள்ள காலத்தின் அளவு வேறுபட்டது. காலையில் நீங்கள் கண்விழித்து எழுந்து விடும்போது, இப்படி கண்விழித்து

எழுந்தவுடன் எல்லாக் கனவுகளும் மறைந்து விடுவது எப்படி நடந்தது என்று நீங்கள் கேட்கிறீர்களா? அநேக கனவுகள்... அழகான கனவுகள்?

ஒரு மனிதன் மெய்ஞ்ஞானம் அடைந்து விடும்போது இதே போன்றதொரு சூழ்நிலை தான் இருக்கிறது. பல மில்லியன் பிறவிகள் எல்லாம் கனவுகளைப் போல வெறுமனே மறைந்து போய்விடுகிறது. அப்போது தனித்தனியாக ஒவ்வொரு தீய செயல்களோடும் போராட வேண்டும் என்னும் கேள்விக்கே அங்கு இடமில்லை. நீங்கள் அவற்றோடு சண்டையிட்டு, நல்ல காரியங்களைச் செய்து, தீயவற்றை சமன் செய்ய வேண்டிய தில்லை. அப்படியானால் நீங்கள் மெய்ஞ்ஞானம் அடைவதற்கு முன்பு மீண்டும் நீங்கள் பல லட்சம் பிறவிகள் பிறந்தாக வேண்டும்.

மேலும், இதனிடையில், அந்த பல லட்சம் பிறவிகளிலும், நீங்கள் உங்களது கடந்த பிறவிகளில் செய்தவற்றை இல்லாமல் போகும்படி நீங்கள் முயற்சி செய்யும்போது, இப்போது நீங்கள் இந்த பிறவியிலும் கூட ஏதாவது ஒன்றை இடைவிடாமல் செய்து கொண்டே இருப்பதால் நீங்கள் அதை சேர்த்துக் கொண்டே செல்வீர்கள். நீங்கள் இந்த பொறியில் இருந்து வெளியே வரமுடியாது. நீங்கள் விழித்து எழுவது மட்டுமே இந்த கண்ணிவலையில் இருந்து வெளியே வருவதற்கான வழியாகும்.

வேறு எதுவும் தேவை இல்லை. நீங்கள் உங்களது கோபத்தை மாற்ற வேண்டாம். நீங்கள் உங்களது பேராசையை மாற்ற வேண்டாம். நீங்கள் எதையுமே மாற்ற வேண்டாம். நீங்கள் வெறுமனே விழிப்புணர்வுடன், உஷாராக இருந்தால் போதும். பேராசையின் திரையிடல்கள், கோபத்தின் திரையிடல்கள், மாயையின் திரையிடல்கள் எல்லாம் நீராவி போல ஆகிவிடும். ஒவ்வொரு நாளும் காலையில் உங்களது கனவுகள் ஆவியாகின்ற விதத்தில் ஆவியாகிவிடும். உங்களது கனவு எதனால் உண்டாக்கப்பட்டுள்ளதோ அதே பொருளால்தான் அவையும் உண்டாக்கப்பட்டுள்ளன.

ஆகவே இது ஒரு எளிய செய்முறையாகத்தான் தெரிகிறது. ஆனால் இப்படிச் செய்வதால் அதற்கு தீர்வு வந்துவிடும் என்று ஒரு பகுத்தறிவுள்ள மனதினால் நினைத்துப் பார்க்கமுடியாது. வெறுமனே உங்களது மனதைக் கவனிப்பதால் எல்லாமே உருமாற்றம் அடைந்து, நீங்கள் உங்களது புத்தநிலையை, உங்களது இறுதியான அழகு மற்றும் மகிழ்ச்சியை, உங்களது இறுதியான இருப்புநிலையை, உங்களது மிகப்பெரிய பரவச நிலையை கண்டு கொள்வீர்கள். இது எப்படி சாத்தியப்படும்? அதைத்தான் சீடர்கள் கேட்கின்றனர்.

*இந்த மூன்று பகுதிகளின் கர்மாவானது மனதில் இருந்து மட்டுமே வருகிறது. உங்களது மனமானது இந்த மூன்று பகுதிகளுக்குள் இல்லை என்றால் அது மனம் அற்றநிலை. அது அவற்றுக்கு அப்பால் இருக்கிறது.*

நீங்கள் விழிப்புணர்வு அடைந்துவிடும்போது, இந்த மனமானது அமைதியாகி விடுகிறது. மேலும் நல்லது, கெட்டது ஆகிய செயல்கள் எல்லாம் இந்த மனதினால் மட்டுமே உருவாக்கப்படுகின்றன. அவை, மனம் என்னும் திரையில் நீங்கள் பார்க்கின்ற ஒரு திரைப்படம் போன்றுதான் இருக்கிறது. நீங்கள் விழித்து எழுந்து விடும்போது, அந்த திரைப்படம் மறைந்து விடுகிறது. அப்போது திடீரென்று அந்தத் திரையில் முற்றிலும் அமைதியாக, எதுவும் அசையாமல், முழுமையான அசைவற்ற நிலையில், வெறும் வெற்றுத் திரை மட்டுமே இருக்கிறது.

*உண்மையான பயிற்சியை புரிந்து கொள்ளாத மரணிப்பவர்கள் மற்றும் கண்மூடித்தனமாக நற்செயல்களை செய்கிறவர்கள், ஆகியோர் மூன்று நிலைகளில் பிறக்கின்றன. கண்மூடித்தனமாக நற்செயல்களைச் செய்து கொண்டும், மேலும் முட்டாள்தனமாக சந்தோஷத்தை தேடுபவர்களும், அவர்களின் ஆசை என்னும் பகுதியில் கடவுள்களாக பிறக்கின்றனர். கண்மூடித்தனமாக ஐந்து ஒழுக்கங்களை கடைப்பிடிப்பவர்களும் அன்பு வெறுப்பு ஆகியவற்றில் ஈடுபடுபவர்களும் அவர்களின் கோபம் என்னும் பகுதியில் மனிதர்களாக பிறக்கின்றனர்.*

கண்மூடித்தனமாக, விஷயங்கள் நிறைந்த இந்த உலகின் மீது பற்றுக்கொண்டு, பொய்யான கோட்பாடுகளை நம்பிக்கொண்டு, ஆசீர்வாதத்தை நம்புபவர்களும், மாயை என்னும் பகுதியில் பேயுருவாக பிறக்கின்றனர். உங்களால் வெறுமனே உங்களது மனதை ஒருமுகப்படுத்தி, அதன் பொய்நிலை மற்றும் தீயதைக் கடந்து செல்ல முடிந்தால், உங்களது இருப்பு நிலையின் துன்பங்கள் தாமாகவே மறைந்துவிடும். மேலும் நீங்கள் துன்பத்தில் இருந்து விடுதலை பெற்று விட்டால், நீங்கள் உண்மையில் விடுதலை அடைந்தவராக இருக்கிறீர்கள்.

அவர் பயன்படுத்துகின்ற இந்த வார்த்தைகள் சமய இயல் சார்ந்தவை. ஆனால் பேராசையில் வாழ்பவர்கள் மேலும் மேலும் இன்பத்தை விரும்புகிறார்கள் என்று அவர் கூறுகிறார். அவர்கள் சொர்க்கம் போன்ற ஒரு வாழ்க்கையை மனதில் திரையிட்டு பார்க்கலாம், அவர்கள் சொர்க்கத்தில் கடவுள்களைப் போலவும் பிறக்கலாம், ஆனால் இது அவர்களது மனதின் திரையிடலாக மட்டுமே இருக்கும். இது ஒரு நம்பிக்கையாக மட்டுமே இருக்கும்.

நான் ஒரு பேராசிரியரோடு இருந்து வந்தேன். அப்போது ஒருநாள், மனதின் திரையிடல் பற்றி நான் பேசினேன். எல்லாமே மனதின் திரையிடல்கள் தான் என்பதை நம்புவதற்கு அவர் தயாராக இல்லை. அவருக்கு ஒரு இளைய சகோதரர் உண்டு, மேலும் நான் அவரது தம்பியை கவனித்துக் கொண்டே வந்தேன். ஏனெனில் நாங்கள் மூவரும் ஒரே வீட்டில் கிட்டத்தட்ட மூன்று மாதங்கள் ஒன்றாக வசித்தோம். அவரது தம்பி என்னிடம் அதிக நெருக்கமாக இருந்தார். நானும் அவர்மீது ஆர்வத்துடன் இருந்தேன். ஏனெனில் பிறரால் மனோவசியம் செய்யப் படுவதற்கான தகுதி அவரிடம் இருப்பதை நான் கண்டேன்.

முப்பத்து மூன்று சதவிகித மக்களை நீங்கள் மனோவசியம் செய்துவிடமுடியும். முப்பத்து மூன்று சதவிகிதம் என்பது ஒரு ஆச்சரியமான சதவிகிதம் ஏனெனில் முப்பத்து மூன்று சதவிகிதம் மக்கள் மட்டுமே அதற்கான திறமையுடனும் கூட உள்ளனர். மேலும் முப்பத்து மூன்று சதவிகித மக்கள் மட்டுமே எந்தவிதமான

அகத்தேடுதலுக்கும் ஆர்வத்துடன் இருக்கின்றனர். முப்பத்து மூன்று சதவிகித மக்கள் மட்டுமே திறந்த மனதுடன் மனோவசியம் செய்யப்படுவதற்கு உரியவர்களாக இருக்கின்றனர். இந்த விஷயங்களுக்கு இடையே கண்டிப்பாக உள்தொடர்புகள் இருந்தாக வேண்டும். ஒருவேளை ஒருவன் தனக்குள் உள்நோக்கி செல்ல வேண்டும் என்பதற்கான அடிப்படை பண்பானது அவனது மனோவசியம் செய்யப்படுகின்ற குணமாக இருக்கலாம். ஏனெனில் மனோவசியத்தில் மற்றவர்களின் உதவியோடு ஒருவர் தனக்குள் செல்கிறார்; தியானத்தில் ஒருவர் தானாகவே தனக்குள் உள்நோக்கி செல்கிறார். ஆனால் பாதை அதே பாதையாகத்தான் இருக்கிறது.

ஆகவே, தர்க்க அறிவு பேராசிரியராகவும், எந்த ஒரு ஆதாரமும் காட்டப்படவில்லை என்றால் ஒருபோதும் எதையும் நம்பாதவருமாகிய அந்த பேராசிரியருக்கு நிரூபிப்பதற்காக நான் அவரது தம்பியை மனோவசியம் செய்துவிட்டேன். மேலும் முதல் தடவை உட்கார்ந்து வசியம் செய்த போதே அவன் ஆழமாகச் சென்றுவிட்டதால், அதற்கு பின்னர் அமர வேண்டிய அவசியம் ஏற்படாததைக் கண்டு நான் ஆச்சரியமடைந்தேன். முதலில் குறைந்தது ஒன்பது அமர்வுகள் இருந்தபிறகு எனது பரிசோதனையை செய்யலாம் என்று நினைத்துக்கொண்டு இருந்தேன். ஆனால் அவரது தம்பி முதல் அமர்விலேயே மிகுந்த ஆழத்திற்கு சென்றுவிட்டதால் நான் அவனிடம், ''நாளை ஞாயிற்றுக்கிழமை. எனவே நானும் வீட்டில் இருப்பேன், உனது அண்ணனும் வீட்டில் இருப்பார், நீயும் வீட்டில் இருப்பாய். நீ எங்கும் போய்விடாதே. நாளை மிகச்சரியாக பன்னிரண்டு மணிக்கு, நீ இப்போது தலைக்கு வைத்துப் படுத்திருக்கின்ற இதே தலையணையை எடுத்து அதற்கு முத்தம் கொடுக்க வேண்டும். நீ முத்தமிடவேண்டிய இடத்தை நான் ஒரு சிலுவைச் சின்னம் போட்டு குறித்திருக்கிறேன். மிகச்சரியாக அந்த சிலுவைச் சின்னத்தில் நீ முத்தமிட வேண்டும்,'' என்று ஆழ்மனதில் கட்டளை கொடுத்தேன்.

நான் அதை திரும்பத்திரும்ப அவனிடம் கூறினேன். அவனது ஆழ்மனதில் அது நன்றாக பதிந்துவிட்டது என்பதை நிச்சயப் படுத்திக்கொண்ட பின்னர், அவ்வனை எழுப்புவதற்கு முன்பு அவனது தலையணையில் ஓரத்தில் ஒரு சிவப்பு மையினால் ஒரு சிலுவை அடையாளம் போட்டுவிட்டேன்.

அவனை திரும்ப சுயநினைவுக்கு கொண்டு வருவதற்கு கிட்டத்தட்ட அரை மணி நேரம் பிடித்தது. அவன் அந்த அளவுக்கு மிகவும் ஆழமாக சென்றுவிட்டான். விழித்து எழுந்த பின்னர், ஒரே ஒரு விஷயத்தை தவிர அவன் மிகவும் சாதாரணமாக இருந்தான். மீண்டும் மீண்டும் அவன் அந்த தலையணையைப் பார்ப்பது வழக்கம் அதிலும் குறிப்பாக அந்த சிலுவையைப் பார்ப்பது வழக்கம். மேலும் அதன் பின்னர் தான் என்ன செய்கிறோம் என்பதை அறிந்து அதன்பின்னர் தர்மசங்கடப்பட்டான். ஏனெனில் அப்படி தலையணையையும், அதில் உள்ள சிலுவையையும் தான் பார்ப்பதற்கான காரணம் எதுவும் அவனுக்கு தெரியவில்லை. அவனது உணர்வு மனதிற்கு எதுவுமே தெரியவில்லை. ஆனால் அவனது உணர்வு இழந்த மனமானது அவனுக்கு தெரியாத ஒன்றினை இப்போது அவனுக்கு திரையிட்டு காட்டிக்கொண்டு இருந்தது.

அடுத்த நாள், பதினொன்றரை மணியை நெருங்கும்போது அவன் மிகவும் அமைதி இழந்தான். அவனது ஆழ்மனதில் ஏதோ ஒன்று நடந்து கொண்டிருந்தது, தலையணையை முத்தமிடுவது பைத்தியக்காரத்தனம் என்று அவன் நினைத்துக்கொண்டு இருந்தாலும் கூட அதைச் செய்யும்படி அவனது ஆழ்மனம் சொல்லிக்கொண்டு இருந்தது. நானும் அங்கு இருந்தேன், அவனது அண்ணாரும் அங்கு இருந்தார். அப்போது நான் அவனது அண்ணனிடம் இங்கு சும்மா உட்கார்ந்து கொண்டு என்ன நடக்கிறது என்று பாருங்கள் என்று கூறினேன்.

பதினொன்றரை மணிக்கு நான் அந்தத் தலைணையை எடுத்து எனது பெட்டிக்குள் வைத்து பூட்டிவிட்டேன். அப்போது என்ன நடந்தது என்பதை நீங்கள் பார்க்க வேண்டுமே, அவனது கண்களில் இருந்து கண்ணீர் வழிந்தது.

நான் அவனிடம், ''என்ன விஷயம்? நீ ஏன் அழுகிறாய்?'' என்று கேட்டேன். அதற்கு அவன், ''எனக்கு தெரியவில்லை, ஆனால் தயவுசெய்து எனது தலையணையை உங்களது பெட்டிக்குள் வைக்காதீர்கள். நான் உங்களிடம் கெஞ்சிக் கேட்கிறேன்,'' என்றான்.

உடனே நான், ''என்ன தவறு நடந்துவிட்டது? நான் அதை? மாலையில் நீ தூங்குவதற்கு போகும்போது கொடுக்கிறேன்,'' என்று கூறினேன். அதற்கு அவன், ''இல்லை, அது இப்போது எனக்கு தேவை,'' என்றான்.

''எதற்குத் தேவை'' என்றேன் நான்,

உடனே அவன், ''எதற்குத் தேவை என்று எனக்கு தெரிய வில்லை. அதனால் தான் அழுகிறேன். ஏனெனில் என்னால் அதற்கு எந்த விளக்கமும் கொடுக்க முடியவில்லை, ஆனால் உடனடியாக எனக்கு அந்த தலையணை தேவை,'' என்றான்.

ஆகவே நான் பெட்டியின் சாவியை கொடுத்துவிட்டேன். அவன் விரைவாக ஓடினான், ஏனெனில் அப்போது மணி பன்னிரண்டை நெருங்கிக் கொண்டு இருந்தது. அவன் எனது பெட்டியைத் திறந்து, அந்தத் தலைணையை வெளியே எடுத்து கிட்டத்தட்ட ஒரு பைத்தியம் போன்று அந்த சிலுவைக் குறியை முத்தமிட ஆரம்பித்தான். அநேக வருடங்களுக்கு பிறகு தனது காதலியைப் பார்க்கின்ற ஒரு காதலனை போன்று நடந்து கொண்டான்.

நானும், அவரது அண்ணனும் அவனிடம், ''நீ என்ன செய்கிறாய்?'' என்று கேட்டோம்.

அதற்கு அவன், ''எனக்குத் தெரியவில்லை, ஆனால் இப்போது தான் எனக்கு நிம்மதி கிடைத்தது. எனது உள்ளத்தில் இருந்து அப்படிப்பட்ட ஒரு சுமை இறங்கிவிட்டது. ஆனால் எனக்கு ஏன் என்று தெரியவில்லை. இந்த சிலுவைக் குறியை யார் போட்டார்கள். அதை முத்தமிடவில்லை என்றால் நான் இறந்துவிடுவேன் என்று அளவுகடந்த நிர்ப்பந்தம். ஏன் வந்தது. அதுவும் மிகச்சரியாக பன்னிரண்டு மணிக்கு செய்யவேண்டும்

என்கிற கட்டாயம் ஏன் வந்தது. அது எனக்குள் இருந்து வந்தது. ஆனால் அதைப்பற்றி எனக்கு எதுவும் தெரியாது,'' என்று கூறினான்.

உடனே அவனது அண்ணன் என்னிடம், ''இந்த ஆதாரத்தை நான் ஏற்றுக் கொள்கிறேன்,'' என்று கூறினார்.

நீங்கள் ஒரு பெண்ணின்மீது அறிவற்ற மோகம் கொள்ளும் போது, உங்களது அந்த பெண் வெறுமனே தலையணையில் குறிக்கப்பட்ட அந்த சிலுவைக்குறி போன்றது தான் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? உடல் ரீதியான ஒரு அறிவற்ற மோகமா? உங்களது ஆழ்மனதில் மிகவும் ஆழமாக வேர் ஊன்றிவிட்ட உங்களது மனதின் ஒரு திரையிடல் தான் அது. அது யாராலும் தூண்டப்படுவதில்லை ஆனால் இயற்கையினால் தூண்டப் படுகிறது.

உங்களது உடலின் ஹார்மோன்கள், உடலின் இரசாயனம், உங்களது உடலியல், இவை எல்லாம் உங்களது விழிப்புணர் வுக்கு எதிராக ஒரு குறிப்பிட்ட சதித்திட்டத்தோடு செயல்புரிகிறது. அவை உங்களை அமைதி இழந்தவராக ஆக்குகிறது. யாரோ ஒருவரை நோக்கி உங்களால் எதிர்க்க முடியாத அளவுக்கு அவரை நோக்கி கவர்ந்திழுக்கப்படும்படி அவை செய்து விடுகின்றன. எனவே இந்த கவர்ச்சி மற்றும் அறிவற்ற மோகத்தில் இருந்த உங்களைத் தடுப்பதற்குரிய உங்களின் சக்திக்கு அப்பால் அது இருக்கிறது. ஒரு பொம்மலாட்ட பொம்மை போன்று நீங்கள் இழுக்கப்படுகிறீர்கள்.

எல்லா மொழிகளிலும், மக்கள், காதலில் விழுந்துவிடுதல், என்று கூறுவது ஏதோ ஏதேச்சையாக நடந்தது அல்ல. நிச்சயமாக மக்கள் காதலில் விழத்தான் செய்கிறார்கள். தன்னுணர்வு இழந்த நிலைக்குள் விழுகிறார்கள். உடலின் மனோவசியத்திற்குள் விழுகிறார்கள். உள்ளுணர்வு இயல்பினில் வீழ்ந்து விடுகிறார்கள். அவர்கள் அதன் பின்னர் தன் உணர்வு உள்ள ஒரு மனித இனமாக இருப்பதில்லை. அதனால்தான் இந்த விதமான

அறிவற்ற மோகம் மற்றும் காதல் விவகாரங்கள் மிக விரைவில் முடிந்து போகிறது. அந்த பேராசிரியரின் தம்பி அந்த தலையணைக்கு முத்தம் கொடுத்த உடன் அவனது வேகம் முடிந்துவிட்டது போன்று நீங்கள் உங்களது காதலியை அடைந்த உடன் அந்த காதலும், அறிவற்ற மோகமும் முடிந்து விடுகிறது. பெரிய நிம்மதி கிடைக்கிறது.

எனவே, இது ஒரு எளிய விஷயம், ஆனால் நீங்கள் அந்த பெண்மணிக்கு முத்தமிட்ட அந்த செயலானது ஒரு முன்னுரை என்பது இல்லாமல் நடக்காது. அதற்கு கொஞ்சம் அறிமுகம் தேவைப்படும். திரைபடங்களுக்கு செல்லுதல், டிஸ்கோ நடனத்திற்கு செல்லுதல், இதுபோன்ற ஆரம்ப கால விஷயங்கள் தேவை. எல்லாவிதமான வாக்குறுதிகளையும் கொடுத்தல், ரோஜாக்கள் மற்றும் ஐஸ்க்ரீம் ஆகியவற்றை வாங்கி கொடுத்தல், இவை எல்லாம் முன்னுரைகள். ஆனால் இந்த முன்னுரைகளுக்கு பிறகு நீங்கள் ஒரு பெண்ணை முத்தமிட்டால் அவள் வெறுமனே ஒரு தலையணை போன்றவள் அல்லள். இப்போது அந்தப் பெண் உங்களை பற்றிக் கொள்வாள். இப்போது நீங்கள் தப்பி ஓட முடியாது. இப்போது நீங்கள் தப்பி ஓட விரும்புவீர்கள். ஆனால் உங்களது சொந்த முன்னுரைகள் இந்த சிறையை உருவாக்கி விட்டது. இப்போது நீங்கள் சொன்ன வார்த்தைக்கு எதிராக நடந்து கொள்ள முடியாது.

மனித தன்னுணர்வைத் தேடியவர்கள் அனைவரும், உங்களது துன்பம் அல்லது உங்களது சந்தோஷம், உங்களது சோகம் அல்லது உங்களது மகிழ்ச்சி ஆகியவை எல்லாம் மனதின் திரையிடல் தானே தவிர வேறு எதுவும் இல்லை என்கிற ஒரு விஷயத்தில் ஒத்துப்போகிறார்கள். அது உங்களது. தன்னுணர்வு இல்லாத மனதின் ஆழத்தில் இருந்துவருகிறது. எனவே அடுத்த மனிதர் திரையிட்டு பார்க்கின்ற ஒரு திரையாகவே செயல்படுகிறார். அது நிறைவடைந்து விட்டால், உங்களது ஆசை முடிந்துவிடுகிறது. எனவே அப்போது எந்த பெண்ணுக்காக நீங்கள் உங்களது உயிரைவிடத் தயாராக இருந்தீர்களோ. அந்தப் பெண்ணையே நீங்கள் கொல்வதற்கு தயாராக இருக்கிறீர்கள்.

ஆச்சரியமாக இருக்கிறதல்லவா. இப்படிப் பெரியதொரு மாற்றம். அன்பு மிகவும் சுலபமாக வெறுப்பாக மாறுகிறது. மேலும் இன்னமும் கூட அன்பும், வெறுப்பும் உங்களது மனதின் திரையிடல்கள் தான் என்பது உங்களுக்குத் தெரிவதில்லை. ஒன்று முடிந்துவிட்டால் அடுத்த திரையிடல் அங்கே இருக்கிறது.

நீங்கள் துன்பத்தில் இருந்து விடுதலை பெற்றுவிட்டால் நீங்கள் உண்மையிலேயே விடுதலை பெற்றவராக இருக்கிறீர்கள் என்பது உண்மைதான். போதிதருமர் கூறுவது எல்லாம் உண்மைதான். ஆனால் அவர் அந்த கேள்விக்கான பதிலைக் கூறவில்லை.

யாரும் அந்த கேள்விக்கு பதில் சொல்லவில்லை என்று நான் உங்களுக்கு கூற விரும்புகிறேன். வாழ்க்கை என்பது ஒரு புதிர் போல இருக்கிறது என்பதுதான் அதற்கான காரணமாகும். நீங்கள் அதுவரை தான் போகமுடியும். அதன்பிறகு உங்களது மனதை எல்லாம் விட்டுவிட்டு நீங்கள் பிரபஞ்சத்திற்குள் நுழைந்து விடுவதால் அங்கு எந்த ஒரு கேள்வியும் முக்கியமானதனாக இருக்காது. எப்போதும் எந்த பதிலும் உங்களுக்கு வராது. ஆனால் நீங்கள் அந்த அனுபவத்தை அளவுகடந்து மகிழ்ச்சியாக அனுபவிக்க முடியும். நான் எப்போதும் அனுபவத்திற்கு ஆதரவாகவே இருக்கிறேன். அறிவிற்கு ஆதரவாக அல்ல.

போதிதருமருக்காக நான் வருத்தமும் சோகமும் அடைகிறேன். ஏனெனில் அவர் என்னிடம் தோற்றுவிட்டார். அவர், ''எனக்கு தெரியாது,'' என்று மட்டும் சொல்லி இருந்தால், இந்த உலகம் இதுவரை அறிந்திராத அளவுக்கு மிக உயர்ந்த மாபெரும் ஞானியாக அவர் தன்னை உயர்த்தி இருப்பார். இறுதியான கேள்வி ஒன்று வரும்போது, நீங்கள் மற்றவர்களையோ அல்லது உங்களையோ ஏமாற்றிக் கொள்ள முயற்சி செய்யாதீர்கள் என்பதை நீங்கள் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும் என்று நான் வலியுறுத்த விரும்புகிறேன். வெறுமனே உங்களது கள்ளம் கபடமற்ற தன்மையை ஏற்றுக் கொள்ளுங்கள். ''எனக்கு தெரியாது'' என்று பணிவுடன் கூறுங்கள்.

அறியாமை என்கிற கேள்விக்கே இங்கு இடமில்லை. வாழ்க்கை என்பது ஒரு புதிர், ஒரு அற்புதம் என்கிற விழிப்புணர்வை நீங்கள் பெறுகிறீர்களா என்பதுதான் கேள்வி. நீங்கள் அதை ருசித்துப் பார்க்கலாம். ஆனால் அந்த சுவை குறித்து உங்களால் எதையும் வெளிப்படுத்த முடியாது. உங்களால் அதை விவரிக்க முடியாது. இதுதான் இந்த பிரபஞ்சத்தின் மாபெரும் தன்மை. இந்த இடத்தில்தான் எல்லா விஞ்ஞானிகளும் தோற்றப் போய்விட்டார்கள். இங்குதான் எல்லா தத்துவ மேதைகளும் தோற்றுப் போய்விட்டார்கள். ஞானிகள் வெற்றியடைந்த ஒரே இடம் இது மட்டுமேயாகும்.

போதிதருமர் ஒரு ஞானி. இந்த முடிவற்ற வாழ்வில், இந்த முடிவற்ற இருப்புநிலையில், என்றாவது, எங்காவது நான் அவரை சந்திப்பேன். நான் அவரைச் சந்தித்தால் அவரை பிடித்துக் கொள்ளப்போகிறேன். அவர் என்னை அடையாளம் கண்டு கொள்வார். ஏனெனில் அவர் தனது கைத்தடியில் சுமந்து கொண்டு திரிகின்ற அதே செருப்புகளை நானும் அணிந்து கொண்டிருக் கிறேன். மிகச்சரியாக அதே போன்று அணிந்துகொண்டு இருக்கிறேன். ஜப்பானில் உள்ள ஜென் மடாலயத்தில் இருந்து எனது செருப்புகள் வந்துள்ளன. ஜென்னில் குறிப்பாக அவர்கள் எதுவானாலும் அவர்களுக்கே உரித்தானதை, வைத்திருக் கிறார்கள். அவர்கள் சந்தையில் இருந்து வாங்கிய கோப்பைகள் மற்றும் தட்டுகளை பயன்படுத்தினாலும் கூட, முதலில் அவர்கள் அதை உடைத்துவிடுவார்கள், அதன் பின்னர் அவற்றை ஒன்றாக சேர்த்து பசைபோட்டு ஒட்டி விடுவார்கள். அப்போது அவை தனித்தன்மை வாய்ந்தவை களாக ஆகிவிடும். அதன்பின்னர் அதைப்போன்று மற்றொரு பொருள் இருக்காது. அதன்பின்னர் அது ஜென் பொருளாக, அசலானதாக, வேறு எங்குமே அது போன்று இல்லாத ஒன்றாக ஆகிவிடும். அந்த வகையில் அது ஒன்று மட்டுமே இருக்கும்.

நீங்கள் பார்க்கின்ற இந்த செருப்பு, கிட்டத்தட்ட பதின்மூன்று நூற்றாண்டுகளாக, போதிதருமரில் இருந்து ஜென் மக்களால்

பயன்படுத்தப்பட்டவை. ஜப்பானில் உள்ள ஒரு ஜென் குருவிடம் இருந்து முதல் செருப்பு எனக்கு ஒரு அன்பளிப்பாக அனுப்பப் பட்டது.

எனவே, போதிதருமர் என்னை உடனடியாக அடையாளம் கண்டு கொள்வார். நான் எனது செருப்புகளை வெறுமனே அவருக்கு காட்டினால் போதும். நான் அவரிடம், ஏன் இந்த சந்தர்ப்பத்தை அவர் தவறவிட்டார் என்று கேட்க வேண்டும். இந்த உலகிலேயே மிக உயர்ந்த ஞானியாக ஆகியிருக்க முடியும் என்கிறபோது ஏன் தவறவிட்டார் என்று கேட்கவேண்டும். மேலும் அவரிடம் அந்தத் திறமை உள்ளது. அதற்கான அறிவாற்றல் அவரிடம் இருக்கிறது.

○

"மூன்று அசங்கிய கல்பங்கள், கணக்கற்ற கஷ்டங்களை அனுபவித்த பின்னர் மட்டுமே நான் மெய்ஞ்ஞானத்தை அடைந்தேன்," என்று புத்தர் கூறுகிறார். அப்படி இருக்கும்போது வெறுமனே மனதைக் கவனிப்பதாலும், மூன்று விஷங்களைக் கடந்து வருவதாலும் விடுதலை அடையலாம் என்று இப்போது நீங்கள் ஏன் கூறுகிறீர்கள்?

புத்தரின் வார்த்தைகள் உண்மையானவை. ஆனால் அந்த மூன்று அசங்கய கல்பங்கள் என்பது மனிதனின் மூன்று விஷம் நிறைந்த மனநிலையைக் குறிக்கிறது. நாம் சமஸகிருதத்தில் அசங்கிய என்று அழைப்பதை, நீங்கள் எண்ணிக்கையற்ற என்று அழைக்கிறீர்கள். மனதின் இந்த மூன்று விஷம் நிறைந்த நிலைகளுக்குள் எண்ணிக்கையற்ற தீய எண்ணங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு எண்ணமும் ஒரு கல்ப காலம் வரை இருக்கிறது. மூன்று அசங்கிய கல்பங்கள் என்று கூறுவதற்கு இப்படிப்பட்ட எல்லையற்ற நிலை என்பது தான் அர்த்தமாகும்...

ஆனால் மிகப்பெரிய போதிசத்வர்கள், இந்த மூன்று வகை நல்ஒழுக்கங்களையும் மற்றும் ஆறு பரமிதாக்களையும் கடைபிடித்ததன் மூலமாக மட்டுமே மெய்ஞ்ஞானத்தை அடைந்திருக்கின்றனர். ஆனால் இப்போது நீங்கள் சீடர்களிடம் வெறுமனே மனதைக் கவனியுங்கள் என்ற கூறுகிறீர்கள். நல்ஒழுக்க விதிகளை பேணி வளர்க்காமல் ஒருவரால் எப்படி மெய்ஞ்ஞானத்தை அடைய முடியும்?

மூன்று வகையான நன்னெறிகள் மனதின் மூன்று விஷம் நிறைந்த நிலைகளை கடந்து வருவதற்காகவே இருக்கின்றன.

இந்த விஷங்களை நீங்கள் தாண்டி வந்துவிட்டால், நீங்கள் மூன்று வகையான எல்லைகளகற்ற புண்ணியத்தை உருவாக்கி விடுகிறீர்கள். ஒரு வகையானது விஷயங்களை ஒன்றாகச் சேர்க்கிறது. இந்த நிலையில் உங்களது மனம் முழுவதும் எண்ணற்ற நற்சிந்தனைகளை ஒன்று சேர்க்கிறது. மேலும், ஆறு புலன்களையும் தூய்மைப்படுத்துவதற்கு ஆறு பரமிதாக்கள் இருக்கின்றன. நாம் பரமிதாக்கள் என்று அழைப்பதை நீங்கள் அடுத்த கரைக்கான வழி என்று அழைக்கிறீர்கள். உங்களது ஆறு புலன்களின் புலன் நுகர்ச்சி என்னும் தூசியை சுத்தம் செய்வதனால், மனவேதனை என்னும் ஆற்றில் உங்களை மெய்ஞ்ஞானம் என்ற கரைக்கு பரமிதாக்கள் படகுகளாகி உங்களை அடுத்த கரைக்கு கொண்டு செல்கின்றன.

இந்த சூத்திரத்தின் படி மூன்றுவிதமான நன்னெறிகள் என்பவை, ''எல்லாத் தீய செயல்களுக்கும் நான் முடிவு கட்டுவேன் என்று நான் சபதமேற்கிறேன். எல்லா புண்ணியச் செயல்களையும் பேணிவளர்ப்பதற்கு நான் சதபமேற்கிறேன். எல்லா உயிர்களையும் விடுதலை அடையச் செய்வதற்கு நான் சபதமேற்கிறேன்'' என்பதாகும். ஆனால் அவை எல்லாம் மனதின் விஷம் நிறைந்த மூன்று நிலைகளை கட்டுப்படுத்து வதற்கு மட்டுமே இருக்கின்றன என்று நீங்கள் கூறுகிறீர்கள். இது புனித நூல்களின் அர்த்தத்திற்கு முரண்பட்டதாக இல்லையா?

புத்தரின் சூத்திரங்கள் உண்மையானவை. ஆனால் வெகு காலத்திற்கு முன்பு, மிகப்பெரிய போதிசத்வர் மெய்ஞ்ஞானம் என்னும் விதையைப் பேணி வளர்த்துக் கொண்டு இருக்கும் போது, மூன்று விஷங்களையும் எதிர் கொள்வதற்காகவே அவர் தனது மூன்று சபதங்களை உண்டாக்கினார். பேராசை என்னும் விஷத்தை எதிர்ப்பதற்கு நல்ஒழுக்கத்தை கடைபிடிப்பதன்மூலம், எல்லாத் தீயவைகளுக்கும் முடிவு கட்டுவதற்காக அவர் சபதமேற்றார். கோபம் என்னும் விஷத்தை எதிர்ப்பதற்கு தியானத்தை பயிற்சி செய்வதன்மூலம், எல்லா புண்ணியச் செயல்களையும் பேணி வளர்ப்பதற்கு அவர் சபதமேற்றார். மாயை என்னும் விஷத்தை எதிர்ப்பதற்கு ஞானத்தை கடைபிடிப்பதன் மூலம், எல்லா உயிர்களையும் விடுதலை

அடையச் செய்வதற்கு அவர் சபதம் செய்தார். நன்னெறி, தியானம் மற்றும் ஞானம் ஆகிய இந்த மூன்று தூய்மையான பயிற்சிகளையும் அவர் விடாமுயற்சியுடன் மேற்கொண்டதால், அவரால் மூன்று விஷங்களையும் கடந்து சென்று மெய்ஞ் ஞானத்தை அடையமுடிந்தது. இந்த மூன்று விஷங்களையும் கடந்து வந்ததன்மூலம், பாவச்செயல்கள் எல்லாவற்றையும் துடைத்துவிட்டு அதன்மூலம் தீயவைகளுக்கு ஒரு முடிவு கட்டினார். இந்த மூன்று வகை நன்னெறிகளையும் கடை பிடித்ததன்மூலம், அவர் நல்லதைத் தவிர வேறு எதையும் செய்யாமல், புண்ணியத்தை பேணி வளர்த்தார். தீயவைகளை முடிவுக்கு கொண்டு வந்துவிட்டு, புண்ணியத்தை பேணி வளர்த்ததன்மூலம் தனக்கும், மற்றவர்களுக்கும் பலனளித்த எல்லா பயிற்சிகளையும் அவர் பூர்த்தி செய்தார். எங்கும் உள்ள மரணிப்பவர்களை காப்பாற்றினார். இப்படி அவர் உயிர்களை விடுதலை அடையச் செய்தார்.

பதிலே இல்லாத ஒரு கேள்வியை போதிதருமர் இப்போது உண்மையிலேயே எதிர்கொள்கிறார். நேற்றைய இரவு சூத்திரங்களில் உள்ள அதே நிலைதான் இதிலும் தொடர்கிறது. ஏனெனில் சீடர்கள் இறுதி நிலையை பற்றி மேலும் மேலும் கேட்டுக் கொண்டே இருக்கின்றனர். இறுதி நிலை என்பது எல்லா அறிவையும் செயல்படாமல் செய்து விடுகிறது. அது ஒரு சாந்தி, அது ஒரு அமைதி. அதற்கு பதில் கிடையாது.

ஆனால் நீங்கள் மெய்ஞ்ஞானம் அடைந்துவிட்டு அதன் பின்னர் உங்களுக்கு இறுதி கேள்விக்கான பதில் தெரியவில்லை என்னும்போது அது உண்மையில் ஏற்றுக் கொள்வதற்கு கடினமாக இருக்கும். உங்களது புதிரை அது தீர்க்கவில்லை என்றால் உங்களது மெய்ஞ்ஞானம் உங்களுக்கு செய்தது என்ன? அதன் பின்னர் என்ன விதமான ஞானத்தை நீங்கள் பெற்றிருக்கிறீர்கள்?

நீங்கள் இதை தெளிவுபடுத்த வேண்டும். போதிதருமர் தனது சீடர்களுக்கு அவர் தெளிவுபடுத்தவில்லை என்று கூறப்படுகிறது; அதற்கு மாறாக இயல்பாகவே பதில் கூறமுடியாத கேள்விகளுக்கு அவர் தொடர்ந்து பதிலளித்துக் கொண்டு இருக்கிறார்.

ஆனால் ஒவ்வொரு குருவும் இந்த பிரச்சினையை சந்தித்தாக வேண்டும். கேள்விகள் சாதாரணமானதாக இருக்கும்போது குருவானவர் முற்றிலும் சுலபமாக பதில் அளித்துவிடுகிறார். ஆனால் சீடர்கள் தங்களது விசாரணையும் மேலும்மேலும் கூர்மையுடன் இருக்கும்போது அவர்கள் இறுதி நிலையைத் தொட ஆரம்பித்து விடுகிறார்கள். அப்போது குரு ஒரு கடினமான சூழ்நிலைக்கு வந்துவிடுகிறார். குருவுக்கு தெரியவில்லை என்று சீடர்கள் நினைத்துக் கொள்ளக்கூடாது என்பதற்காக, அவர் பதில் சொல்லிக்கொண்டே செல்கிறார். ஆனால் அந்த பதில்கள் உண்மையான பதில்கள் அல்ல. வேறு கேள்விகளைப் பொறுத்தமட்டில் அவர்கள் முற்றிலும் சரியானவர்கள். ஆனால் இப்போது அவர்களிடம் கேட்கப்பட்டது போன்ற கேள்விகள் வரும்போது அவர்கள் சரியானவர்கள் அல்லர்.

கேள்வி மிகவும் முக்கியமானது. ஆனால் போதிதருமர் போன்ற குருமார்களும் கூட ஒரு குறிப்பிட்ட தத்துவத்தை, ஒரு குறிப்பிட்ட கோட்பாடுகளைச் சார்ந்தவர். எனவேதான் அவர்கள் ஏற்றுக்கொண்ட கொள்கை அமைப்பை திரும்பத்திரும்ப கூறிக்கொண்டே போகின்றனர்.

என்னைப் பொறுத்தமட்டில் இது முற்றிலும் வேறுபட்டது. நான் எந்த கொள்கைகளையும் சார்ந்தவன் அல்லன். நான் யாரையும் சமாதானப்படுத்த வேண்டியதில்லை. யார் கோபப்படுவார்கள், யார் எரிச்சல் அடைவார்கள் என்பதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. நீங்கள் ஒரு கேள்வியைக் கேட்டால், உங்களுக்கு ஒரு நேர்மையான பதில் தேவை என்பதுதான் எனது முழு கவலையும் ஆகும். அது கொள்கைகளுக்கு ஏற்றபடி இல்லாமல் எனது சொந்த அனுபவத்திற்கு ஏற்றபடி இருக்கவேண்டும்.

சீடர் அவரிடம் கேட்பதாவது: ''மூன்று அசாங்கிய கல்பங்கள், கணக்கற்ற கஷ்டங்களை அனுபவித்த பின்னர் மட்டுமே நான் மெய்ஞ்ஞானத்தை அடைந்தேன்'' என்று புத்தர் கூறுகிறார். அப்படி இருக்கும்போது, வெறுமனே மனதைக் கவனிப்பதாலும்

மூன்று விஷங்களைக் கடந்து விடுவதால், விடுதலை அடையாளம் என்று இப்போது நீங்கள் ஏன் கூறுகிறீர்கள்?

உண்மையானது கொஞ்சம் சிக்கலானது. முதலில், இந்த கேள்விக்கு பதில் அளிக்க வேண்டும் என்றால் அப்போது நான் எனது நிலையை விளக்குகிறேன். அப்போதுதான் ஒருவர் அவர் சார்ந்துள்ள ஒரு குறிப்பிட்ட கொள்கை அமைப்பை சார்ந்திருப்ப தால் கூறுகின்ற பதிலுக்கும், ஒருவர் தனது சொந்த அனுபவத் திலும், நேர் செயலாக கூறுகின்ற பதிலுக்கும் உள்ள வேறுபாட்டை நீங்கள் புரிந்து கொள்வதற்கு சுலபமாக இருக்கும்.

''மூன்று அசாங்கிய கல்பங்கள், கணக்கற்ற கஷ்டங்களை அனுபவித்த பின்னர் மட்டுமே நான் மெய்ஞ்ஞானத்தை அடைந்தேன்'' என்று புத்தர் நிச்சயமாக கூறி இருப்பார். ஆனால் நான் பார்த்த வரையில் இது கௌதம புத்தரின் உண்மையான வாக்குமூலம் அல்ல. பௌத்த மதத்தின் மகாயானப் பிரிவு வைத்திருக்கின்ற பதில் இதுதான். இப்போது இதை மறுப்பதற்கு புத்தர் இங்கு இல்லை. அவர் கூறியவை எல்லாம் அவர் இறந்த பிறகு எழுதப்பட்டவை. எல்லாராலும் பொதுவாக ஒத்துக் கொள்ளப்பட்டே இப்படி எழுதப்பட்டது. ஆரம்பத்தில் இருந்தே புத்தரின் பேச்சை கேட்டுக் கொண்டிருந்த பழைய சீடர்களை எல்லாம் அழைத்து ஒரு பெரிய கூட்டத்திற்கு ஏற்பாடு செய்து அவர்கள் ஒன்றுகூடி ஒவ்வொருவருக்கு நினைவில் உள்ளதை ஒன்று திரட்டினார்கள்.

அந்த கூட்டத்தில் ஒத்த கருத்து ஏற்படவில்லை. அதில் சண்டை எழுந்தது. அதில் முரண்பாடு எழுந்தது, எனவே அந்த ஒட்டுமொத்த கூட்டமும் முப்பத்து இரண்டு குழுக்களாக பிரிந்து ஒருவருக்கொருவர் தனியாக பிரிந்து சென்றனர். இந்த முப்பத்து இரண்டு குழுக்களும், தங்களுக்கென்று சொந்தமான புனித நூல்களையும், புத்தர் என்ன கூறினார் என்பதற்கான தங்களது சொந்த அறிக்கைகளையும் வைத்திருந்தன. மகாயானம் என்கிற ஒரு பிரிவு மட்டுமே, மிகவும் பெரியதாகவும், அதிக அளவு சீடர்களையும் கொண்டிருந்தது. அதிக அளவு சீடர்களை கொண்டிருப்பதற்கு, அந்த பிரிவானது, புத்தர் விழிப்புநிலை

அடைந்தவுடன், மக்கள் விடுதலை அடைவதற்காக இந்தக் கரையிலேயே இருக்கிறார் என்று கூறுவதே காரணமாகும்.

உண்மையில் அவர்கள் இதற்காக ஒரு கதையைக் கண்டு பிடித்துள்ளனர். விடுதலை பெற்ற உயிர்கள் எல்லாம் இறுதியாக இளைப்பாறுகின்ற இடமாகிய மோட்சத்தின் கதவுகளை புத்தர் அடைந்தபோது, கதவுகள் திறக்கப்பட்டு அங்கு மாபெரும் இசையுடன் கூடிய கொண்டாட்டம் நடைபெற்றது. ஏனெனில் இப்படிப்பட்ட மிகப்பெரிய மெய்ஞ்ஞான நிலைக்கு ஒரு மனிதன் வருவது என்பது மிகவும் அபூர்வமாக நிகழ்கின்ற ஒன்றாகும். ஆயிரக்கணக்கான ஆண்டுகள் கடந்தாலும் அந்தக் கதவுகள் மூடப்பட்டே இருந்தன. எனவே கடந்த பல லட்சம் வருடங்களில் மோட்சத்தை அடைந்த புத்தர்களுக்குகூட இயற்கையாகவே இது ஒரு மிகப்பெரிய கொண்டாட்டமாக இருந்தது. அவர்கள் ஒரு புதிய விருந்தாளியை வரவேற்றனர்.

ஆனால் புத்தர் அந்த வாசலுக்குள் நுழைய மறுத்துவிட்டார். அவர் தனது வாயிலுக்கு தனது முதுகை காட்டிக்கொண்டு அங்குள்ள வாயில் காப்போனிடம், ''தயவுசெய்து கதவை மூடிவிடு. இந்த மனித இனத்தின் இறுதி மனிதன் விடுதலை அடையும்வரை நான் வாசலுக்கு வெளியே நின்று கொண்டு இருப்பேன். அதற்கு பல லட்சம் ஆண்டுகள் ஆகலாம். ஆனால் அது ஒரு பெரிய விஷயம் அல்ல. நான் இப்போது முழு பரவச நிலையில் இருக்கிறேன். என்னால் காத்திருக்க முடியும். ஆனால் இன்னமும் இருட்டில் துழாவிக் கொண்டு இருக்கின்ற மக்களை மறந்துவிட்டு, இந்த வாசலுக்குள் நுழைவது கொஞ்சம் சுயநலம் மிக்கதாக இருக்கும்,'' என்று கூறினார்.

இதற்கு முன்பு, யாரும் இப்படி செய்யவில்லை என்பதால் இது சரியல்ல என்றுகூறி அவரை நுழைய வைப்பதற்கு எல்லா முயற்சியும் மேற்கொள்ளப்பட்டது. இதற்கு அவர், ''அப்படி யானால் கருணை உள்ளத்தோடு யாரும் மோட்சத்திற்குள் நுழையவில்லை என்றுதான் அர்த்தம். எனது மனித சகோதர சகோதரிகள் மீதுள்ள கருணையினால் என்னால் இந்த மோட்சநிலையைக் கூட வேண்டாம் என்று துறந்து விடமுடியும்.

இது எனக்கு ஒரு பொருட்டல்ல, நான் ஏற்கனவே பெற்றிருப்பதை விட அது மேலும் அதிகமாக எதையும் கொடுக்கப் போவதில்லை. நான் கதவின் அருகில் இங்கு நின்று கொண்டு இருக்கிறேன். கடைசி மனிதன் மோட்சத்திற்குள் நுழைந்த பிறகு நான் உள்ளே செல்கிறேன்,'' என்று கூறினார்.

இது மகாயானப் பள்ளியின் கற்பனைக் கதையாகும். ஏனைய மனித உயிர்கள் மீதான கருணையினால், இயற்கையில், மகாயானப்பிரிவானது தங்களது சொந்த முயற்சியில் விழிப்புநிலை அடையமுடியாத அநேக மக்களை கவர்ந்து இருந்தது. அவர்களுக்கு உதவி தேவை. அவர்களுக்கு கருணை நிறைந்த, விழித்தெழுந்த ஒரு மனிதன் தேவை.

மகாயானத்தில், மெய்ஞ்ஞானம் பெற்ற ஒவ்வொருவரும் மேலும் மேலும் அதிக மக்கள் விடுதலை பெறுவதற்கு தன்னால் சாத்தியப்படுகின்ற எல்லாவற்றையும் செய்ய வேண்டும் என்று மகாயானம் பற்றி போதிக்கிறது. ஏனெனில் அவருக்கு இப்போது இரண்டு கடமைகள் உள்ளன. முதலில் மக்கள் அனைவரையும் விடுதலை அடையச் செய்ய வேண்டும். இரண்டாவதாக இப்படி மக்கள் விடுதலை அடையச் செய்யாமல் இருந்துவிட்டால், கௌதம புத்தர் மோட்சத்தின் கதவுக்கு வெளியே பல லட்சம் ஆண்டுகள் நின்று கொண்டேதான் இருக்க வேண்டும். எனவே மக்கள் மீது கருணை கொண்டு அவர்கள் விடுதலை பெற எல்லா முயற்சியும் எடுக்க வேண்டும். விடுதலை பெறாதவர்கள் யாரும் இல்லை என்று நிச்சயமாகத் தெரிந்தபின்னர், அமைதியுடன், சாந்தியும் ஓய்வும் நிறைந்த மோட்சத்திற்குள் நுழையாமல், விநோதமான ஒரு முடிவை எடுத்துக்கொண்டு இருக்கின்ற கௌதம புத்தருக்கு நன்றி செலுத்த வேண்டும்.

ஹீனாயானம் என்பது அடுத்தப்பள்ளி. இது அநேக மக்களை கவர்ந்து இழுக்கவில்லை. இந்த வார்த்தைக்கு ''சிறிய படகு'' என்று அர்த்தம். மகாயானம் என்றால் ''பெரிய படகு'' என்று அர்த்தம். அதாவது பெருங்கடலில் செல்கின்ற மிகப்பெரிய கப்பல் போன்றது. எனவே ஆயிரக்கணக்கான மக்கள் ஒன்று சேர்ந்து அதில் பயணம் செய்து அடுத்த கரையை அடையமுடியும்.

ஆனால் ஒரு சிறிய படகில் ஒரே ஒரு மனிதர் மட்டுமே போக முடியும். மேலும் ஹீனயானத்தை அர்கதர்கள் உருவாக்கினார்கள். அவர்களும் கூட மெய்ஞ்ஞானம் அடைந்தவர்கள் தான். ஆனால், மக்கள் விடுதலை பெறுவதற்கு முயற்சி செய்தல் என்பதும் கூட, அவர்களின் தனிப்பட்ட சுதந்திரத்தில் குறுக்கிடுவதாகும் என்பதுதான் அர்கதர்களின் நிலைப்பாடாகும். இது கருணை அல்ல, இது அன்பு அல்ல, அன்பானது சுதந்திரத்தை கொடுக்கிறது.

கருணை என்பது மக்களிடம் ஒரு குறிப்பிட்ட வகையான வாழ்க்கையை வலுக்கட்டாயமாக திணிக்காது. ஆனால் விடுதலை என்பது ஒரு குறிப்பிட்ட வகையான வாழ்க்கையாகும். இது அவர்களின் நன்மைக்குத் தான் என்றாலும்கூட நீங்கள் அதை வலுக்கட்டாயமாக அவர்கள்மீது திணிக்கிறீர்கள். அவர்கள் காலத்தை வீணாக்காமல், அந்தப் பாதையை பின்பற்றும்படி, நீங்கள் வலியுறுத்துகிறீர்கள். அவர்கள், அவர்களாகவே இருப்பதற்கான முழு சுதந்திரத்தை நீங்கள் அனுமதிப்பதில்லை. அவர்களாகவே அந்தப் பாதையில் செல்லவேண்டும் என்று விரும்பினால், அவர்கள் செல்வார்கள். ஆனால் அவர்கள் செல்ல விரும்பவில்லை என்றால், அதில் யாரும் அக்கறை காட்ட வேண்டியதில்லை. மோட்சத்திற்கு போகாமல் இந்த உலகிலேயே இருந்துவிடுவது அவர்களின் முழு உரிமையாகும்.

அர்கதர்கள் கருணை என்பதை மிகவும் நேர்த்தியான வழியில், முழுமையான, வேறுபட்ட கண்ணோட்டத்தோடு பொருள் விளக்கம் செய்கின்றனர். இதில் யார் சரியானவர்கள் என்று தேர்வு செய்வது மிகவும் கடினம். இருவருமே சரியானவர்கள் என்பது போலத்தான் தெரிகிறது.

ஆனால் ஹீனயானத்தினால் அதிக சீடர்களை ஒன்று சேர்க்க முடியவில்லை. உங்களது விடுதலையின்மீது ஆர்வமே இல்லாதவர்களான ஹீனயானப் பள்ளியின் மக்களோடு யார்தான் ஆர்வத்துடன் இருப்பார்கள்? அவர்கள் பேசமாட்டார்கள், அவர்கள் உங்களுக்கு ஆதரவு கொடுக்க மாட்டார்கள், குழியில் இருந்து உங்களை வெளியே எடுப்பதற்கு அவர்கள் கை கொடுக்க

மாட்டார்கள். அவர்கள் வெறுமனே காத்துக்கொண்டு மட்டுமே இருப்பார்கள். நீங்கள் ஒரு குழியில் விழுகிறீர்கள் என்னும்போது நீங்கள் நிச்சயமாக அதிலிருந்து வெளியே வருகிற திறமையுடன் தான் இருப்பீர்கள். நீங்கள் தவறான பாதையில் செல்கிறீர்கள் என்றால், அதில் வருகின்ற துன்பத்தை, தவறான பாதையில் கஷ்டத்தை, நீங்கள் முற்றிலும் உணர்கின்ற தகுதியுடன் இருப்பதாலும், நீங்கள் உங்களது பாதையை மாற்றிக் கொள்ள முடியும். உங்களுக்காக அதை வேறு யாரும் செய்ய முடியாது.

எனவே புத்தர் மெய்ஞ்ஞானம் அடைவதற்கு பல லட்சம் காலங்கள் எடுத்துக்கொண்டார் என்பது மகாயானத்தின் பொருள் விளக்கமாக உள்ளது. அர்கதர்களைப் பொறுத்தமட்டில் சூழ்நிலையானது முற்றிலும் வேறுபட்டது. பல லட்சம் ஆண்டுகள் மற்றும் கடினமான முயற்சி என்கிற கேள்வியே அங்கு கிடையாது என்று அவர்கள் கூறுகின்றனர். அது எல்லாம் வெறுமனே ஒரு கனவு போன்று இருக்கிறது. நீங்கள் மூன்று மில்லியன் ஆண்டுகள் அல்லது மூன்று நாட்கள் அல்லது மூன்று நிமிடங்கள் கனவு கண்டாலும் கூட அது எந்த ஒரு வேறுபாட்டையும் உண்டாக்காது. நீங்கள் கண்விழித்து எழுந்து விடும்போது, எல்லா கனவுகளும் வெறுமனே வெப்பமான காற்று போன்று காணப்படும். அங்கு மன அழுத்தம் இருக்காது.

முக்தி அடையவேண்டும் என்பதற்காக நீங்கள் பயிற்சி செய்கின்ற உங்களது நன்னெறிகளும் கூட, உண்மையில் ஒரு வகையான பேராசை தான். எனவே பேராசையால், பேராசையை அழிக்க முடியாது. அது லட்சியம், எனவே லட்சியத்தினால் நான் என்னும் ஆணவத்தை அழிக்க முடியாது. ஒருவேளை, முக்தி அடையவேண்டும், மெய்ஞ்ஞானம் அடைய வேண்டும் என்பது மிகப்பெரிய லட்சியமாக இருக்கலாம்.

ஆனால் எங்கெல்லாம் ஆசையும், லட்சியமும் இருக்கிறதோ, அங்கு நீங்கள் அடிமைப்பட்டு இருக்கிறீர்கள். உங்களது பயிற்சிகள் எல்லாம், உங்களது நன்னெறிகள் எல்லாம் நீங்கள் கனவில் பயிற்சி செய்வது போன்றதே தவிர வேறு ஒன்றும் அல்ல. இதுகிட்டதட்ட எப்படி இருக்கிற தென்றால்

மிகவும் பலவீனமான நீங்கள் உங்களது கனவில் மிகப்பெரிய உடற்பயிற்சிக்காரர் என்று நினைத்துக்கொண்டு ஒரு உலக சாம்பியன் ஆவது போன்றதாகும். ஆனால் காலையில் நீங்கள் கண்விழித்து பார்க்கும்போது அதே சுண்டெலிதான் படுக்கையில் படுத்திருக்கும். எனவே நீங்கள் கண்ட கனவில் நடந்த உடற் பயிற்சிகள் எல்லாம் என்ன ஆயிற்று?

ஒரு மிகப்பெரிய ஞானி போன்று நீங்கள் கனவு காணலாம், நீங்கள் ஒரு மிகப்பெரிய திருடன் போன்று கனவு காணலாம், நீங்கள் அநேக மக்களை கொலை செய்வது போன்று கனவு காணலாம், அநேக மக்களுக்கு நீங்கள் சேவை செய்வது போன்று கனவு காணலாம். ஆனால் காலையில் அந்த கனவுகளுக்கு இடையே எல்லாம் வித்தியாசம் கிடையாது என்பதை நீங்கள் உணர்வீர்கள். அவை எல்லாம் ஒரே பொருளால் ஆன கனவுகள். அவை எல்லாம் கற்பனைகள். தீயதும் கூட நல்லதைப் போல அந்த அளவுக்கு கற்பனையானது. ஆன்மிக நன்னெறியும் கூட யாரோ ஒருவரைக் கொலை செய்வது போன்று அந்த அளவுக்கு கற்பனையானது. ஆகவேதான் மகாயான கோட்பாடுகளை நம்பாதவர்கள், இங்கேயே இந்தப் பொழுதிலேயே மெய்ஞ் ஞானம் அடையலாம் என்கின்றனர். உண்மையில் போதிதருமரின் நிலை அதுபோன்றுதான் இருந்தது. எனவே இப்போது அதுதான் பிரச்சினையை உருவாக்கிவிட்டது. புத்தர் சொல்வது தவறு என்று அவரால் கூறமுடியாது; அது சாத்தியப்படாது. அவர் கௌதம புத்தரை நேசிப்பவர். அவர் கௌதமபுத்தரின் சீடர், ஆகவே கௌதம புத்தர் சொல்வது தவறு என்று அவரால் கூற முடியாது. புத்தரின் வார்த்தைகள் உண்மை என்றுதான் அவர் கூறவேண்டும்.

ஆனால் அவரது சொந்தநிலை என்னவென்றால், நீங்கள் உங்களது தன்னுணர்வு இழந்த நிலையில் என்ன செய்தாலும் அது அர்த்தமற்றது என்பதாகும். நீங்கள் விழித்தெழும்போது நொடிகளுக்குள் அவை எல்லாம் மறைந்து விடுகின்றன. மேலும் நீங்கள் எந்த நொடிப்பொழுதில் வேண்டுமானாலும் விழித்தெழ முடியும். குறிப்பிட்ட சரியான உபாயம் கிடைத்து விட்டால், நீங்கள் விழிப்புநிலை அடைந்து விடுவீர்கள்.

நீங்கள் நடு இரவிலும் கூட விழித்தெழலாம். நீங்கள் விழித்தெழுவதில் இருந்து கனவுகள் உங்களைத் தடுக்க முடியாது; அல்லது உங்களது தூக்கமும் கூட நீங்கள் விழித்தெழுவதை தடுக்க முடியாது. விழித்தெழக்கூடாது என்பது வெறுமனே உங்களது சொந்த விருப்பமாகும். அதனால் தான் தூக்கமும் தொடர்கிறது. உங்களது கனவும் தொடர்கிறது. விழித்தெழ வேண்டும் என்கிற எண்ணம் உங்களுக்குள் எழுகிறது என்னும்போது, அதன்பிறகு மெய்ஞ்ஞானமும் கூட உடனடியாக நடக்கக்கூடியதாக இருக்கிறது.

இப்போது, இதுதான் போதிதருமரின் சொந்த நிலையாக உள்ளது. ஆனால் அவர் சங்கடத்தில் இருக்கிறார். ஏனெனில் அவர் மகாயானப் பிரிவைச் சேர்ந்தவர். அவர் சீனாவில் போதனை செய்து கொண்டிருந்தார். சீனா மகாயான பிரிவைச் சார்ந்தது. ஆகவே அந்த சீடர்கள் மகாயானச் சூத்திரங்களின்படி புத்தர் கூறியதைக் கூறி கேள்வி கேட்டுக் கொண்டிருந்தனர். இப்போது, புத்தர் இதைச் சொன்னாரா அல்லது புத்தமதத்தின் ஒரு குறிப்பிட்ட பிரிவின் கண்டுபிடிப்பா என்று யாருக்கும் தெரியாது. ஏனெனில் ஹீனயானப் பள்ளியில் சூத்திரங்கள் கிடையாது. இவை இரண்டு மட்டுமே முக்கியமானவை. இந்த இரண்டைத் தவிர வேறு முப்பது பள்ளிகளும் இருக்கின்றன. ஆனால் அவையும் கூட சிலவற்றை கொண்டுள்ளன. தங்களுக்கே உரித்தான கம்பீரத்தை கொண்டுள்ளன. அவை எல்லாம் வேறுபடுபவை.

புத்தர் சொல்வது தவறானதாக இருக்காது என்கிற ஒரு விஷயத்தை அவர்கள் அனைவரும் ஒத்துக் கொள்கின்றனர். புத்தர் கூறுவது தவறு என்று அவர்களால் கூறமுடியாது. எனவே அவர்கள் கொஞ்சம் சுற்றிக்கொண்டு புத்தர் சொல்வது சரி என்று கூற வேண்டியதிருக்கும். இன்னமும்கூட, அவர்கள் கூறுவது முரண்பட்டதாக இருந்தாலும் கூட அவர்கள் கூறுவது சரியானது தான். சீடர்கள் அவரிடம், ''வெறுமனே மனதைக் கவனிப்பதாலும், மூன்று விஷங்களைக் கடந்து விடுவதால், விடுதலை அடையலாம் என்று இப்போது நீங்கள் ஏன் கூறுகிறீர்கள்? நீங்கள்

அதை மிகவும் எளிமையாக்கி விடுகிறீர்களே,'' என்று கேட்கின்றனர்.

*புத்தரே கூட தான் கணக்கற்ற கஷ்டங்களை அனுபவித்த பின்னர், மூன்று அசாங்கிய கல்பங்களுக்கு பிறகு மட்டுமே தான் மெய்ஞ்ஞானத்தை அடைந்ததாக கூறுகிறார்.*

மெய்ஞ்ஞானம் உடனடியாக கிடைத்துவிடவில்லை. நல்லது செய்தல், தீயதை தவிர்த்தல், தியானத்தை பயிற்சி செய்தல், ஏனைய நன்னெறிகளை பயிற்சி செய்தல் என்று அதற்கு பின்னால் பல லட்சம் ஆண்டுகள் கொண்ட நீண்ட வரலாற்றை கொண்டிருக்கிறது. ஒரு புத்தர் ஆவதற்கு மூன்று கணக்கற்ற காலங்கள் ஆகியுள்ளது.

இந்த பூமியில் இதுவரை வாழ்ந்தவர்களில் மிகப்பெரிய மனிதராகக் காணப்படுகின்ற கௌதம புத்தரின் நிலையே இது போல இருந்தால், ஒரு சாதாரண மனிதனின் நிலை என்னவாக இருக்கும்? ஒருவேளை மூன்று அசாக்கிய கல்பங்களுக்கு பதிலாக பதின்மூன்று அசாக்கிய கல்பங்கள் அல்லது முப்பது அசாக்கிய கல்பங்கல் ஆகலாம்! ஆனால், வெறுமனே உங்களது மனதைக் கவனிப்பதன் மூலம், இந்த நொடிப் பொழுதிலேயே, நீங்கள் மெய்ஞ்ஞானம் அடையமுடியும் என்று நீங்கள் கூறுகிறீர்கள்.

இந்த இரண்டு வேறுபட்ட நோக்கங்கள் எப்படி வந்தன? நீங்கள் இதன் பின்னணியை புரிந்து கொள்ளவில்லை என்றால், உங்களால் போதிதருமரின் கஷ்டத்தைப் புரிந்து கொள்ள முடியாது. புத்தர் தனது அரண்மனையை விட்டு அவரது இருபத்து ஒன்பதாவது வயதில் வெளியேறினார். அவரது நாட்களில் மிகவும் புகழ் பெற்றிருந்த ஒவ்வொரு குருவிடமும் அவர் சென்றார். மேலும் எந்த ஆபத்தையும் சந்திக்க தயாரான ஒரு நேர்மையான ஆன்மிகத்தேடல் உள்ளவராகவும் இருந்தார். அந்த குருமார்கள் என்ன சொன்னார்களோ அதை புத்தர் அந்த குருமார்கள் மற்றவர்களிடம் எதிர்பார்த்ததை விடவும் மிகவும் நிறைவுடன் செய்தார். உண்மையில் அந்த குருமார்கள் கூட அந்த அளவுக்கு குறைகளற்றவர்கள் கிடையாது. ஆனால் புத்தரோ,

''நான் நீங்கள் கூறியதை செய்துவிட்டேன். ஆனால் எதுவும் நடக்கவில்லை. இன்னமும் நான் முன்பு இருந்ததுபோலவே அறியாதவனாக இருக்கிறேன். ஆம், நான் சில திறமைகளைக் கற்று இருக்கிறேன். யோகாவின் மூலம் எனது உடலில் சில உடல்வளைவுகளை என்னால் செய்ய முடியும். ஆனால் அவை எனக்கு எனது ஆன்மா குறித்த விழிப்புணர்வை உண்டாக்க வில்லை; அது எனக்கு எந்த நல்லதையும் கொடுக்க வில்லை.

அவரது நேர்மை ஐயமற்றதாக இருந்தது. அவரது ஆசிரியர்கள் கூட வெட்கப்பட்டனர். அவர்கள் இதுவரை இப்படிப்பட்ட ஒரு மாணவனைப் பார்த்ததில்லை. ஒரு ஆசிரியர், சாதாரண ஆசிரியர், எப்போதும் முட்டாள் மாணவர்களையே விரும்புவார்கள். ஏனெனில் அவர்களோடு ஒப்பிடும்போது அவர் ஒரு மிகப்பெரிய ஆசிரியராக இருக்கிறார். ஆனால் சிலசமயம், ஆசிரியரை விட உயர்வான ஒரு மிகப்பெரிய மாணவன் அவரிடம் வந்துவிடும் போது அதன்பின்னர் அந்த ஆசிரியர் அந்த மாணவன்மீது கோபமும், எரிச்சலும், அடைகிறார். ஏனெனில் அந்த மாணவர் ஆசிரியரால் பதில் கூறமுடியாத கேள்விகளை இடைவிடாது கொண்டு வந்து கொண்டே இருக்கிறான். அவர் என்னதான் பதில் கூறினாலும், அந்த மாணவன் எப்போதும் அவர் கூறுவதை மறுக்கிறான்.

என்னுடைய ஆசிரியர் ஒருவர் என்னோடு மிகவும் களைத்துப் போய்விட்டார். ஏனெனில் இடைவிடாமல் எட்டு மாதங்களாக, நான் அவரை ஒரு அங்குலம் கூட நகரவிடவில்லை. நாங்கள் ஒரே விஷயத்தில் அப்படியே நின்று விட்டோம். அவர் புத்தகங்களைப் பார்த்துவிட்டு எல்லாவிதமான விவாதங்களையும் கொண்டுவந்தார். நானும் அவர் கூறுவதை மறுப்பதற்காக மிகவும் கடினமாக உழைத்தேன். எனவே ஏனைய மாணவர்கள் அனைவரும் அதை ரசித்தார்கள். ஏனெனில் அந்த ஆசிரியருக்கு என்னை சமாளிப்பதே பெரும்பாடாக இருந்ததால் அவரால் வேறு பாடத்தை கற்பிக்கவோ அல்லது மாணவர்களுக்கு வீட்டுப்பாடம் கொடுப்பதையோ முற்றிலும் மறந்துவிட்டார். அதற்கு அவருக்கு நேரம் கிடையாது, ஏனெனில் அவரால் முதல் பாடத்தையே

இன்னும் கற்றுக்கொடுத்து முடிக்க முடியவில்லை. அதனால் அவரால் இரண்டாவது பாடத்திற்கு நகர்ந்து செல்ல முடியவில்லை.

தேர்வும் நெருங்கி வந்து கொண்டிருந்தது. அதனால் என்மீது அவர் உண்மையில் பைத்தியமாகிவிட்டார். அவர் என்னைப் பார்த்து கத்த ஆரம்பித்தார். நான் அவரிடம், ''இங்கே பாருங்கள், நீங்கள் வயதானவர், நீங்கள் இப்படி கத்தினால் உங்களுக்கு மாரடைப்பு வரலாம். மேலும் இதயம் முற்றிலும் வேலை செய்யாமல் போய்விடலாம் என்று நான் நம்புகிறேன். அதனால் ஒரு சிறிய மாரடைப்பு வரலாம். ஆனால் நீங்கள் கத்துவதன்மூலம் என் வாயை அடைத்து விடலாம் என்று நினைத்து விடாதீர்கள். இது கத்துவதற்கான ஒரு போட்டி என்று நீங்கள் நினைத்தால், என்னாலும் கத்த முடியும். ஆனால் நீங்கள் வயதான மனிதர். நானும் கத்துவதை சந்தோஷமாக செய்வேன். எனவே அமைதியாக இருங்கள்,'' என்று கூறினேன்.

அவர் விஷயத்தை புரிந்து கொண்டார். ஆனால் அவர் வகுப்பில் இருந்து வெளியேறி கல்லூரி முதல்வரிடம் சென்று, ''எனக்கு இப்போது நிச்சயமாக தெரிந்தாக வேண்டும். ஒன்று நான் இந்த கல்லூரியில் இருக்கவேண்டும் அல்லது அந்த மாணவன் இருக்கவேண்டும். நீங்களே இதில் யார் என்று தேர்வு செய்யுங்கள்,'' என்று கூறிவிட்டார். முதல்வர் அவரிடம், ''அப்படி என்ன விஷயம் நடந்தது? அவன் உங்களிடம் ஏதாவது தவறாக நடந்து கொண்டானா?'' என்று கேட்டார்.

அதற்கு அவர், ''மாணவர்களுக்கு கற்பிக்க அவன் விடமாட்டேன் என்கிறான். தேர்வு வேறு நெருங்கிக் கொண்டு இருக்கிறது. அவனைத் தவிர எல்லா மாணவர்களும் தோல்வி அடையப் போகிறார்கள். அவனிடம் விநோதமான பலம் இருக்கிறது. நானும் கடினமாகத்தான் உழைக்கிறேன். இந்த அளவுக்கு நான் கடினமாக உழைத்தது கிடையாது. இரவில் வெகுநேரம் படிக்கிறேன். புதிய வாதங்களை கண்டு பிடிக்கிறேன். ஆனால் அடுத்த நாள் அவன் வெறுமனே அவற்றை எல்லாம் மறுத்து விடுகிறான். அவன் என்னை விடவும் கடினமாக

உழைக்கிறான். உண்மையில் அவன் இளைஞன். ஒவ்வொரு நாளும் அவனிடம் தோற்பது மனவருத்தத்தை அளிக்கிறது. நான் ராஜினாமா செய்கிறேன். நீங்கள் அவனை வெளியேற்றவில்லை என்றால் திரும்பவும் நான் கல்லூரிக்கு வரமாட்டேன்,'' என்று கூறிவிட்டார். அதன்பின்னர் அவர் வீட்டிற்கு சென்றுவிட்டார்.

கல்லூரி முதல்வர் என்னை அழைத்தார். அவருக்கு என்னைத் தெரியும். நான் பேச்சுப் போட்டிகளில், விவாதங்களில், அநேக கேடயங்களையும், அநேக கோப்பைகளையும், நாடு முழுவதிலும் உள்ள எல்லா பல்கலைக்கழகங்களில் இருந்தும் வெற்றி பெற்றுக்கொண்டு வந்திருக்கிறேன். தேசிய அளவில் அவரது கல்லூரியை நான் புகழ் அடையச் செய்ததால் அவர் மிகவும் சந்தோஷமாக இருந்தார்.

அவர் என்னிடம், ''நான் இப்போது சங்கடத்தில் இருக் கிறேன். அந்த வயதான மனிதரை நீ ஏன் எரிச்சல் பட வைக்கிறாய்? அவர்தான் எங்களது வயதான பேராசிரியர், நன்கு படித்தவர்; அவர் இரண்டு பி.ஹெச்.டி. வாங்கி இருக்கிறார், பல்கலைக்கழகத்தால் சமீபத்தில் அவருக்கு டி.லிட். வழங்கப் பட்டுள்ளது. அவர் மிகவும் நன்றாக அறியப்பட்ட ஒரு பண்டிதர். எனவே நாங்கள் அவரை இழந்துவிட முடியாது,'' என்று கூறினார்.

உடனே நான் அவரிடம், ''நீங்கள் அவரை வைத்துக் கொள்ளுங்கள், ஆனால் நீங்கள் நீதியற்றும் நேர்மையற்றும் நடந்து கொள்கிறீர்கள். ஏனெனில் நான் அவருக்கு எந்தத் தீங்கான காரியமும் செய்யவில்லை. அவர் தர்க்க அறிவு பேராசிரியர் எனவே தர்க்க அறிவுப் பேராசிரியரால் ஒரு மாணவனிடம் தர்க்கம் பண்ண முடியவில்லை என்றால், அதன் பின்னர் யார் தர்க்கம் பண்ணப் போகிறார்கள்? தர்க்க சாஸ்திரம் என்னும் பாடமே தர்க்கத்தில் உள்ள வாதமும், வாதத்திறமையை கூர்மையாக்குவதிலும் தான் உள்ளது. ஒவ்வொரு மாணவனும் அந்த பாடத்தில் என்ன செய்யமுடியுமோ அந்த வேலையைத் தான் நான் உண்மையில் செய்து கொண்டு இருக்கிறேன். ஏனைய மாணவர்கள் அனைவரும் பறக்கமுடியாத வாத்து போன்று உள்ளனர். அவர்களுக்கு வேறு விஷயங்களில் ஆர்வம் உள்ளது.

ஒருசிலர் காதலிகளை வைத்திருக்கிறார்கள், சிலருக்கு திரைப்படங்கள் பார்ப்பதில் ஆர்வம் இருக்கிறது. இவ்வாறு இந்த உலகில் ஆயிரத்தோரு விஷயங்கள் உள்ளன. அவர்கள் வருடத்தின் முடிவில் மட்டுமே படிக்கின்றனர்.

''இப்போது, ஒரே மாதிரியான கேள்விகள் தான் ஒவ்வொருவரிடமும் திரும்பத் திரும்ப கேட்கப்படுகிறது. வெறுமனே நான்கு வருடங்கள் கேட்கப்பட்ட கேள்வித்தாள்களை மட்டும் படித்தாலே போதுமானது. அதிலிருந்து இருபது கேள்விகளுக்கு தயார் செய்துவிட்டால், அதன்பின்னர் உங்களது தேர்வில் அந்த இருபது கேள்விகளில் ஐந்து கேள்விகளை நீங்கள் கண்டு கொள்ளலாம். ஒட்டுமொத்த பாடத்தைப்பற்றி கவலைப்பட வேண்டிய அவசியம் கிடையாது. ஏனெனில் பேராசிரியர்கள் சோம்பேறிகளாக உள்ளனர். ஒரு புதிய கேள்வியை கண்டுபிடிப்பதும் கூட அவர்களுக்கு கடினமாக இருக்கிறது. எனவே அவர்கள் நான்கு அல்லது ஐந்து வருட பழைய தேர்வுகளின் கேள்விகளைப் பார்த்துவிட்டு அதிலிருந்து கேள்விகளை கண்டுகொள்கிறார்கள். ஒருவேளை அவர்கள் அதை கொஞ்சம் வார்த்தைகளை மாற்றி கேட்கலாம். அதுதான் அவர்களது வேலை.

''கடைகளில் இப்போது தேர்வுக்குரிய வழிகாட்டிகள் கிடைக்கின்றன. அது மிகவும் லாபகரமான வியாபாரமாக உள்ளது. சில ஓய்வுபெற்ற பேராசிரியர்களுக்கு, தேர்வில் என்ன கேள்வி வரப்போகிறது என்பது நன்றாகத் தெரியும். அவர் தனது புத்தகத்தில் பத்து ஆண்டுகள் கேட்கப்பட்ட கேள்விகளை எடுத்துக்கொண்டு ஒவ்வொரு விஷயத்திற்குப் பதில் அளிக்கிறார். அந்த புத்தகத்தை வாங்கி நீங்கள் படித்தால் போதும். நீங்கள் பாடப்புத்தகங்களை படிக்க வேண்டிய அவசியம் கிடையாது. ஏனெனில் அது ஒரு கடினமான வேலை.

''நீங்கள் பதில்களை எழுதும்போது, அது உங்களுக்கு தெரியுமா அல்லது நீங்கள் அதை மனப்பாடம் செய்து இருக்கிறீர்களா என்று யாருக்கும் தெரியாது. அந்த வழிகாட்டிகளில்,

ஒய்வுபெற்ற பேராசிரியர்கள் கேள்விகளுக்கான பதில்களை மிகவும் சிறியதாக கொடுக்கப்பட்டு இருப்பதால், நீங்கள் அதை மனப்பாடம் செய்து கொள்ள முடியும். எனவே புத்திசாலித்தனம் தேவை இல்லை.

''நானும் முயற்சி செய்தேன். வெறுமனே உட்கார்ந்துவிட்டு செல்வதற்காக நான் கல்லூரிக்கு வரவில்லை. எனக்கு பட்டங்கள் பெறுவதில் ஆர்வம் கிடையாது. எனது ஆர்வம் எல்லாம் எனது புத்திசாலித்தனத்தை கூர்மைப்படுத்துவதுதான்,'' என்று அவரிடம் கூறினேன்.

அதற்கு கல்லூரி முதல்வர், ''உன்னை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனாலும் கூட உன்னை வெளியேற்றத்தான் வேண்டும். இது நீதியற்றது. நான் குற்ற உணர்வு கொள்கிறேன். ஏனெனில் என்னால் அந்த பேராசிரியரை விட்டு விடமுடியாது. அவர் இல்லாமல் நமது ஒட்டுமொத்த தர்க்க சாஸ்திர துறையே நொறுங்கிப் போய்விடும். அவர்தான் மிகவும் மூத்த பேராசிரியர். அவர் மிகவும் பிடிவாதக்காரர். நீ எந்த தீங்கும் செய்யவில்லை. உண்மையான தகுதியும், அறிவாற்றலும் உள்ள ஒரு ஆசிரியர் உனக்கு கிடைக்கவில்லை.

''அவர் ஒரு இரண்டாம்தர மனிதர். அவர் பி.ஹெச்.டி. எழுதலாம். அவரது சேவைகளுக்காக அவருக்கு டி.லிட். பட்டம் கொடுக்கப்பட்டிருக்கலாம். ஆனால் அவர் ஒரு சிறந்த அறிவுமேதை கிடையாது. அது எனக்கு தெரியும். ஆகவே நான் உன்னை கல்லூரியை விட்டு வெளியே அனுப்புகிறேன். ஏனெனில் நீ நீக்கப்பட்டு உனது பெயர் கல்லூரியின் அறிவிப்பு பலகையில் பார்க்கும் வரை அவர் வலியுறுத்துவார். ஆனால் நான் உனக்கு வேறு கல்லூரியில் ஏற்பாடுகளைப் பண்ணுகிறேன். நான் அந்த கல்லூரி முதல்வருக்கு தொலைபேசியில் பேசுகிறேன்,'' என்று கூறினார்.

அதற்கு நான் அவரிடம், ''உங்களது கல்வி நிறுவனத்திற்கோ அல்லது உங்களுக்கோ அல்லது உங்களது வயதான பேராசிரியருக்கோ நான் எந்த சிக்கலையும் உருவாக்க விரும்பவில்லை. அவரிடத்தில் எனக்கு எந்த கோபமும் இல்லை.

நான் அவருக்காக இரக்கப்படுகிறேன். நீங்கள் ஏற்பாடு பண்ணுங்கள். ஆனால் அது மிகவும் சுலபமானதாக இருக்காது. ஏனெனில் கடந்த எட்டு மாதங்களாக இங்குள்ள சூழ்நிலை, இந்த பல்கலைக்கழகத்தில் உள்ள கல்லூரிகளில் எல்லாம் பேசப்படு கின்ற ஒரு விஷயமாக ஆகிவிட்டது. ஒவ்வொரு முதல்வருக்கும் இது தெரியும்,'' என்று கூறினேன்.

அவரும் முயற்சி செய்தார். அவருக்கு மிகவும் நெருக்கமான ஒரு முதல்வருக்கு தொலைபேசியில் கூறினார். அந்த முதல்வர், ''என்னை மன்னித்து விடுங்கள். உங்களால் சமாளிக்க முடியவில்லை என்பதால் நீங்கள் ஒரு சிக்கலான மாணவனை என்னிடம் அனுப்புகிறீர்களே,'' என்றார்.

சில கல்லூரிகளில் அவர் முயற்சி செய்தார். ஏனெனில் கல்வியைப் பொறுத்தமட்டில் நான் இருந்த நகரம் மிகவும் சிறப்பு வாய்ந்த நகரங்களில் ஒன்றாக இருந்தது; மொத்தம் அங்கு இருபது கல்லூரிகள் இருந்தன. அவர் சில முதல்வர்களை அழைத்தார். ஆனால் எல்லாரும், ''நீங்கள் வேறு யாரை வேண்டுமானாலும் அனுப்புங்கள். ஆனால் நாங்கள் அந்த மாணவனைப் பற்றி கேள்விப்பட்டு இருக்கிறோம். உங்களது கல்லூரிதான் மிகவும் பழைமை வாய்ந்த கல்லூரி, உங்களிடம் மிகச்சிறந்த பேராசிரியர்கள் இருக்கின்றனர். இந்த மாணவனால் அவர்களே ராஜினாமா செய்ய தயாராக இருக்கும்போது, மூத்த பேராசிரியர்களாகவும், அனுபவமும் இல்லாத எங்களது பேராசிரியர்களுக்கு என்ன ஏற்படும்?'' என்று கூறினார்கள்.

முதல்வர் செய்வதறியாது இருந்தார். இந்த தொலைபேசி பேச்சுக்களை எல்லாம் கேட்டுக்கொண்டு நான் அங்கு அமர்ந்திருந்தேன். நான் அவரிடம், ''உங்களால் சமாளிக்க முடியாது. நானே இதை சமாளித்துக் கொள்கிறேன். நீங்கள் என்னை வெளியேற்றுவதற்கான ஆணையைக் கொடுங்கள். நான் சமாளித்துக் கொள்கிறேன்! என்று கூறினேன்.

ஒரு கல்லூரி முதல்வரோடு அந்த கல்லூரியில் சேர்வதற்கு நான் ஏற்பாடு செய்துவிட்டேன். அதில் உள்ள ஒரு நிபந்தனை

என்னவென்றால் நான் ஒரு நாளும் அந்த கல்லூரிக்கு வரமாட்டேன். நான் கல்லூரிக் கட்டணத்தை கொடுத்துவிடுவேன். ஆனால் நான் கல்லூரிக்கு வரமாட்டேன். நான் கல்லூரி நூலகத்திற்கு மட்டுமே செல்வேன். ஆனால் வகுப்புகளுக்கு செல்ல மாட்டேன். நான் வகுப்பறைக்கு செல்லாமல் இருப்பதால் எந்த பிரச்சினையும் இருக்காது. ஆனால் நான் தேர்வு எழுவதற்கு தேவையான சரியான எனது வருகைப் பதிவினை அந்த முதல்வர் பார்த்துக் கொள்ள வேண்டும் என்பதாகும். இது மிகப்பெரிய ஏற்பாடு. உண்மையில் நான் இதைத்தான் விரும்பினேன்.

இரண்டு வருடங்களாக நான் ஒருநாள் கூட ஒரு வகுப் பிற்கும், ஒருபோதும் சென்றதில்லை. முடிந்தவரை நான் நூலகத்திலேயே மூழ்கிவிட்டேன். நூலகம் திறப்பதற்கு முன்பு நான் அங்கு இருப்பேன். மேலும் நூலகர் என்னை வெளியே பிடித்துத் தள்ளும் போது மட்டுமே வெளியே வந்தேன். ஏனெனில் நூலகத்தை மூடினாலும் நான் வெளியே வருவதற்கு மறுத்தேன்.

இதே நிலைதான் ஒரு குறிப்பிட்ட மகாயானப் பிரிவைச் சேர்ந்த போதிதருமருக்கும் ஏற்பட்டு விட்டது. ஏனெனில் சீனாவில் மகாயானப் பள்ளிகள் தவிர வேறு எந்த ஆன்மிகப் பள்ளிகளும் கிடையாது. இந்த மகாயான மக்களிடம் நீங்கள் சென்று கையின் விரல்களால் சொடுக்கு போடும் நேரத்தில் நீங்கள் மெய்ஞ்ஞானம் அடைந்துவிடமுடியும் என்று கூறுவதை அவர்கள் நம்புவது சாத்தியமில்லை; ஏனெனில் புத்தரே கூட தான் மூன்று அசாங்கய கல்பங்கள், அதாவது கணக்கற்ற காலங்கள் மெய்ஞ்ஞானம் அடைவதற்கு முன்பு உழைத்ததாக கூறி இருக்கிறார். ஆனால் போதிதருமரோ, எந்த ஒரு தவச்செயலும் இல்லாமல், எந்த ஒரு நன்னெறியும் இல்லாமல், உண்ணா நோன்புகள் இருக்காமல், எந்தவிதமான சடங்குகளோ அல்லது பிரார்த்தனைகளோ செய்யாமல், தனது சொந்த அனுபவத்தின் மூலம் அவர் மெய்ஞ்ஞானம் அடைந்ததை அறிந்தவர். அவர் வெறுமனே தனது மனம் குறித்து விழிப்புணர்வு அடைந்ததன் மூலமே மெய்ஞ்ஞானம் அடைந்தார்.

கௌதம புத்தர் கூறுவது தவறு என்று அவர் கூறினால், உடனடியாக கௌதம புத்தர் தவறாக கூறமாட்டார் என்று நம்புகின்ற அந்த ஒட்டுமொத்த நாட்டு மக்களும் போதிதருமரைச் சூழ்ந்து விடுவார்கள். கௌதமர் தனது அரண்மனையை விட்டு வெளியேறிய பின்னர் ஆறு வருடங்கள் அவர் எல்லாவற்றையும் செய்தார். அவரது எல்லா குருமார்களும், கௌதமரிடம் தங்களை எல்லாம் விடவும் மிகவும் உயர்ந்தவர் என்று இறுதியாக உணர்ந்தனர். எனவே அவர்கள் கௌதமரிடம், ''எங்களை மன்னித்து விடு, எங்களுக்கு தெரிந்த எல்லாவற்றையும் நாங்கள் உனக்கு சொல்லிக் கொடுத்து விட்டோம். அதற்கு மேல் சொல்லிக் கொடுப்பது என்பது எங்களது தகுதிக்கு அப்பாற்பட்டது. ஆனால் நாங்கள் வேறு ஒரு மிகப்பெரிய குருவை வேண்டுமானால் கூறுகிறோம்,'' என்று கூறிவிட்டார்கள்.

இப்படி ஆறு வருடங்களாக ஒரு குருவிடம் இருந்து வேறு ஒரு குருவிடம் சென்றார். ஆனால் இறுதியாக அந்த காலத்தில் இருந்த மாபெரும் குருவும்கூட கௌதமரிடம், ''நீ உனது காலத்தை வீணாக்கி கொண்டு இருக்கிறாய். எந்த ஒரு குருவும் உனக்கு உதவ முடியாது. நீயே உனது சொந்த முயற்சியை செய்வதற்கு இதுதான் நேரம். வெறுமனே உனது மனதைக் கவனி. என்னிடம் உனக்கு வேறு எந்த போதனையும் இல்லை,'' என்றார்.

ஆறு வருடங்கள் இடைவிடாது நன்னெறிகளை கடைபிடித்து மிகவும் களைத்துவிட்டார். அது ஒரு பௌர்ணமி இரவு. அவரது குரு அவரை மறுத்துவிட்டு, ''வெறுமனே உனது மனதைக் கவனி. உனக்கு வேறு எந்த நன்னெறியும் கிடையாது.'' அந்த நன்னெறிகள் எல்லாம் இரண்டாம் தர மனதை உடையவர் களுக்குரியது. அவை ஒவ்வொருவரின் திறமைக்கு தக்கபடி செய்து கொள்கின்ற சமாதானங்கள். மெய்ஞ்ஞானத்திற்கு தானும் ஏதோ ஒரு காரியத்தை செய்து கொண்டு இருக்கிறேன் என்று அவனை ஆறுதல் படுத்துவதற்கு அவனுக்கு ஒரு குறிப்பிட்ட ஆன்மிக சடங்குகளை கொடுப்பதாகும். மெய்ஞ்ஞானம் நிகழாத வரையில் உன்னை வேறு எதுவும் திருப்திப்படுத்தாது'' என்று கூறி இருந்தார்.

எனவேதான் அவர் வெளியே வந்தார். சில தினங்களுக்கு முன்புதான் அவர் அந்த குருவைவிட்டு வெளியே வந்தார். அன்று பௌர்ணமி தினம். பீகாரில் உள்ள நிரஞ்சன நதிக்கரையில் ஒரு மரத்தின் அடியில் கௌதமர் உட்கார்ந்து கொண்டு இருந்தார். இந்தியாவில் மரங்களையும் கூட மக்கள் வழிபடுகிறார்கள். அதில் எந்தத் தவறும் இருப்பதாக நான் நினைக்கவில்லை. ஏனெனில் ஒரு மரமும் கூட ஒரு உயிருள்ள ஆன்மாதான். அவை மிகவும் நேர்த்தியான மக்கள். மரங்கள் யாருக்கும் எந்த கெடுதலும் செய்வதில்லை. அங்கு இருந்த ஒரு போதி மரத்தை ஒரு பெண் வழிபட்டுக் கொண்டிருந்தாள். அவள் பல ஆண்டுகளாக குழந்தைப்பேறு இல்லாவளாக இருந்தாள். எனவே அவள் அந்த மரத்தின் கடவுளிடம், அவளுக்கு குழந்தைபேறு கிடைத்தால், அந்த மரத்தின் கடவுளுக்கு இனிப்புகள், பழங்கள், மலர்கள் ஆகியவற்றை காணிக்கையாக கொண்டு வருதாக கூறி இருந்தாள்.

எனவே அந்த பௌர்ணமி இரவில் அவள் வந்தாள். ''நீ கருவுற்று இருக்கிறாய்'' என்று மருத்துவர்கள் முழுவதும் நிச்சயமாக கூறியபோது அவள் இனிப்புகள், பழங்கள், மலர்கள் ஆகியவற்றைக் கொண்டு வந்தாள். அவளது பெயர் சுஜாதா. கௌதம புத்தரின் வரலாற்றில் இது ஒரு சிறப்புவாய்ந்த பெயர்.

கௌதமர் அப்போது பசியோடு இருந்தார். ஏனெனில் பல மாதங்களாக அவர் உண்ணா நோன்பு இருந்தார். மிகவும் பசியோடு இருந்தார். அவர் ஒரு இளைவரசர், மிகவும் அழகானவர். ஆனால் பட்டினி கிடந்ததால் அவர் கிட்டத்தட்ட வெளிறிப் போய்விட்டார். மேலும் அந்த பௌர்ணமி இரவில், அந்த மரத்தின் கடவுள் ஏதோ வெளியே வந்துவிட்டது போன்று கௌதமர் அமர்ந்திருந்தார்.

அந்தப் பெண்மணியால் அதை நம்ப முடியவில்லை. அவள் ஒரு கிராமத்துப் பெண்மணி. எனவே அந்த மரத்தின் கடவுள் தனது காணிக்கையை ஏற்பதற்கு உண்மையிலேயே வந்து விட்டதாக நினைத்தாள். அவள் கௌதமரின் காலில் விழுந்து

வணங்கி தான் கொண்டு வந்தவை எல்லாவற்றையும் அவருக்கு கொடுத்தாள்.

அந்த ஆறு ஆண்டுகளில் கௌதமர் வயிறு நிரம்ப சாப்பிட்டது இதுதான் முதல் தடவை. அதுவும் கூட இரவில். ஏனெனில் தவம் இருப்பவர்கள் இரவில் சாப்பிடுவதற்கு அனுமதி கிடையாது. ஆனால் இப்போது அவர் ஒரு தவசி அல்ல.

''நீ செய்ய வேண்டியது எல்லாம் கவனிக்க வேண்டியது ஒன்றுதான்'' என்று குரு கூறிய உடன் அவர் எல்லாத் தவத்தையும், எல்லா நன்னெறிகளையும் கைவிட்டு விட்டார். அவர் தனது சாம்ராஜ்யத்தை துறவறம் கொண்டார்; இப்போது அவர் தனது துறவறத்தையும் கூட துறவறம் கொண்டு விட்டார். முதல் முறையாக அவர் முற்றிலும் ஓய்வுடன் இருந்தார். அவர் நன்றாக சாப்பிட்டார். ஆறு ஆண்டுகளுக்கு பின்னர் எந்த விதமான மன அழுத்தமும் இல்லாமல் முதன்முறையாக நன்றாக தூங்கினார். அவரிடம் எந்த லட்சியமும் இல்லை. அவரிடம் ஆசை இல்லை. போவதற்கு இடமில்லை, தேடுவதற்கும் எதுவும் இல்லை. இந்த ஓய்வான நிலையில், அவரது தூக்கத்திலும் கூட, அவர் தனது மனதை கவனித்துக் கொண்டு இருப்பது, அவருக்கு தெரிந்தது. விழிப்புணர்வின் ஒரு சிறிய ஒளிச்சுடர் அங்கு இருந்தது. உடல் தூங்கிக் கொண்டிருந்தாலும் கூட, மனமும் உறங்கிக் கொண்டு இருந்தாலும் கூட, அவற்றுக்கு அப்பால் உள்ள ஏதோ ஒன்று விழித்துக் கொண்டு இருந்தது.

காலையில் அவர் கண்களைத் திறந்தபோது, கடைசி நட்சத்திரமானது மறைந்து கொண்டிருந்தது. இதில் உள்ள உண்மை என்னவென்றால், அந்த கடைசி நட்சத்திரம் மறைந்து கொண்டிருந்தபோது, கௌதமரும் கூட நான் எனும் ஆணவமாக, ஒரு தனிமனிதப் பண்புடையவராக மறைந்து போய்விட்டார். திடீரென்று மெய்ஞ்ஞானம் நிகழ்ந்தது. திடீரென்று அவர் தனது உண்மையான உயிர் உணர்வை பார்த்தார்.

இப்போது பிரச்சினை எழுந்துவிட்டது: மகாயானத்தை சார்ந்தவர்கள் இந்த மெய்ஞ்ஞான நிலை திடீரென்று நடந்தது.

ஏனெனில் அவர் இடைவிடாமல் ஆறு ஆண்டுகள் தவச் செயல்களில் ஈடுபட்டார். இது கொஞ்சம் கொஞ்சமாக நடந்த மெய்ஞ்ஞானம் என்று கூறுகின்றனர்.

திடீரென்று மெய்ஞ்ஞானம் அடைவதை நம்புகின்ற சில குறிப்பிட்ட பள்ளிகளும் உள்ளன. அவை, இதற்கும் அந்த ஆறு வருட கடின உழைப்பிற்கும் சம்பந்தம் கிடையாது என்று கூறுகின்றன. அவர் ஐந்து வருடங்களோடு நிறுத்தி இருந்தாலும் கூட, இந்த அனுபவம் நிகழ்ந்திருக்கும் முதல் நாளிலேயே யாராவது அவரிடம் கூறி இருந்தால், அதைப் புரிந்து கொள்கின்ற அளவுக்கு அவர் புத்திசாலித்தனத்துடன் இருந்தால், அவர் அரண்மனையை விட்டு வெளியே வந்த அந்த முதல் நாளிலேயே அவருக்கு மெய்ஞ்ஞானம் நிகழ்ந்திருக்கும்.

மெய்ஞ்ஞானம் என்னும் விளைவிற்கு, அந்த ஆறு ஆண்டுகள் காரணம் அல்ல. மெய்ஞ்ஞானம் எந்த காரணத்தையும் கொண்டதல்ல. அதனால் பல லட்சம் ஆண்டுகள், கடின உழைப்பு என்கிற கேள்விகள் அர்த்தமற்றவை ஆகிவிடுகிறது.

மெய்ஞ்ஞானம் என்பது எப்போதுமே திடீரென்று நிகழ்வது.

அது திடீரென்று நடக்கவில்லை என்றால், அதற்கு மெய்ஞ்ஞானம் என்பது படிப்படியாக நடக்கக்கூடிய இயல்புடையது என்பதாகாது. உங்களது மனமானது படிப்படியாக உங்களை விட்டு விலகுகிறது என்பதாகத்தான் இருக்கிறது. நீங்கள் ஆபத்தை ஒட்டுமொத்தமாக வெற்றிக் கொள்ள தயாராக இல்லை. நீங்கள் ஆபத்தை சில்லறையாக, அங்குலம் அங்குலமாக, பகுதிபகுதியாக, அமெரிக்க வழியில் தவணை முறைகளில் வெற்றி கொள்கிறீர்கள். இன்று கொஞ்சம் இழக்கிறீர்கள், நாளை கொஞ்சம் இழக்கிறீர்கள், நாளை மறுநாள் கொஞ்சம் இழக்கிறீர்கள். இப்படி உங்களுக்கு காலம் தேவைப்படுகிறது. ஏனெனில் இந்த நொடிப்பொழுதிலேயே, உங்கள் மனதை அதன் முழுமையுடன் கைவிடுவதற்கு நீங்கள் தயாராக இல்லை. ''நான் அதை மெதுவாக செய்வேன், நாளை செய்வேன், அதன்பின்னர் நாளை மறுநாள் செய்வேன். அவசரப்பட என்ன இருக்கிறது'' என்று நீங்கள் கூறுகிறீர்கள்.

ஆகவே இவைதான் அந்த இரண்டு பள்ளிகள்: படிப்படியாக மெய்ஞ்ஞானம் அடைகின்ற பள்ளிகள் அநேக மக்களின் மனதைக் கவர்கிறது. ஏனெனில் அவர்களுக்கு தங்களின் மனதை உடனடியாக கைவிடுவதற்கான தைரியம் இல்லை; அடுத்தது திடீரென்று மெய்ஞ்ஞானம் அடைகின்ற பள்ளிகள், சிங்கத்தின் உள்ளத்தை பெற்றிருக்கின்ற மக்களுக்கு, எல்லாவற்றையும் வெறுமனே பணயம் வைக்கிற மக்களுக்கு சொந்தமானதாக இருக்கிறது.

ஜப்பானிய நடிகர் ஒருவரின் கதை எனக்கு நினைவுக்கு வருகிறது. அமெரிக்காவில் அவர் மிகவும் புகழ்பெற்றவர் அவர் பல லட்சம் டாலர் சம்பாதித்தார். அவர் தனது வீட்டிற்கு திரும்புவதற்கு விரும்பினார். அவர் போதிய பணம் சம்பாதித்து விட்டார். வீட்டிற்கு திரும்புவதற்கு முன்பு, இந்த உலகைச் சுற்றி பார்த்து விடுவது நல்லது என்று அவர் நினைத்தார். சுற்றிவிட்டால் அதன்பின்னர் அவர் தனது வீட்டை விட்டு வெளியே வரவேண்டிய அவசியம் இல்லை என்று நினைத்தார். வீட்டை அடைந்தவுடன் ஓய்வுடன் இருக்க விரும்பினார். ஆனால் அதற்கு முன்பு முதலில் உலகில் அழகான இடங்கள் ஒவ்வொன்றையும் பார்ப்பதற்கு அவர் விரும்பினார்.

அவர் பாரிஸ் நகரத்திற்கு சென்றார். அவரது வழிகாட்டி அவரை அநேக இடங்களுக்கு அழைத்து சென்றுவிட்டு, அதன்பின்னர் அவரிடம், ''நீங்கள் கேளிக்கை விடுதி ஒன்றினை காண விரும்பிகிறீர்களா? என்று கேட்டார். அதற்கு அந்த நடிகர், ''நிச்சயமாக, நான் எல்லாவற்றையும் பார்க்க விரும்புகிறேன். பாரிஸ் வந்துவிட்டு ஒரு கேளிக்கை விடுதியைப் பார்க்காமல் விட்டுவிடக்கூடாது'' என்றார். கேளிக்கை விடுதிகள் என்றால் சூதாட்டம் நடக்கின்ற இடங்கள், பிரான்சில் தான் கேசினோக்கள் எனப்படும் சிறந்த சூதாட்ட விடுதிகள் உள்ளன.

எனவே, அவர் கேசினோவிற்குள் நுழைந்தார். அங்கே மக்கள் நூறு டாலர், ஆயிரம் டாலர் என்று சூதாட்டத்திற்கு பணம் கட்டிக்கொண்டு இருப்பதை அவர் பார்த்தார். அவருக்கு அந்த விளையாட்டில் ஆர்வம் வந்தது. அமெரிக்காவில் அவர்

சம்பாதித்த மொத்த பணத்தையும். படிப்படியாக பணயம் வைக்காமல், ஒரே தடவை பணயமாக கட்டினார்.

அந்த சூதாட்ட விடுதிக்கு சொந்தக்காரர்கூட பயப்பட்டார். ''இந்த மனிதனை என்ன செய்வது?'' இவர் ஜெயித்துவிட்டால் எனது ஒட்டுமொத்த சூதாட்ட விடுதியும் போய்விடுமே. இவர் விநோதனமான மனிதராக இருக்கிறாரே,'' என்று நினைத்தார். அவர் இந்தத் தொழிலில் நீண்ட காலமாக இருக்கிறார். ஆனால் இப்படி பல லட்சம் டாலர் பணத்தை ஒரே அடியாக பந்தயத்திற்கு கட்டினவரை அவர் ஒருபோதும் கண்டதில்லை.

ஆனால் அவரால் மறுக்கவும் முடியாது. மறுப்பதற்கு வழி இல்லை. ஆனால் சூதாட்ட விடுதியின் சொந்தக்காரர் அதிர்ஷ்டம் உள்ளவர் என்பதால் ஜப்பான் நடிகர் எல்லாவற்றையும் இழந்துவிட்டார். தான் ஓய்வுபெற்று நன்றாக வாழவேண்டும் என்று நினைத்து வைத்திருந்த பணம் எல்லாவற்றையும் அவர் இழந்துவிட்டார். அவரிடம் இப்போது ஒன்றும் இல்லை.

அவர் தனது ஹோட்டலுக்கு சென்று தூங்கிவிட்டார். அவர், காலையில் செய்தித்தாளை படித்தபோது, ஒரு ஜப்பானியர் நாற்பது மாடி கட்டடத்தில் இருந்து குதித்து தற்கொலை செய்து கொண்டதாக இருந்த செய்தியைப் பார்த்தார். ஆனால் இயல்பாக நேற்று சூதாட்ட விடுதியில் பல மில்லியன் டாலர் பணத்தை இழந்த அதே ஜப்பானியர் தான் இப்படி செய்திருப்பார் என்று அனைவரும் நினைத்தனர்.

ஆனால், அந்த நடிகர் அந்த செய்தியை படித்துவிட்டு சிரித்தார். அந்த ஹோட்டலின் மேலாளரும்கூட அந்த செய்தியையும் படித்துவிட்டு, ''அவர் எனது ஹோட்டலில்தான் தங்கி இருந்தார். இவர் எப்படி வேறு ஒரு ஹோட்டலுக்கு சென்றார். அவர் புகழ்பெற்ற பெயருடையவர் அல்லவா,'' என்று கூறினார். அவர் அமெரிக்காவில் இருந்து வந்துள்ள புகழ்பெற்ற ஜப்பானிய நடிகர் என்கிற பத்திரிகை நிருபரின் தர்க்க ரீதியான முடிவானது அப்படி செய்தி எழுத வைத்துவிட்டது. தற்கொலை செய்தவரின் உடலானது அந்த அளவுக்கு துண்டு துண்டாக சிதைந்து

போய்விட்டதால் அந்த நிருபரால் அந்த மனிதர் யார் என்று கண்டுபிடிக்க முடியவில்லை.

அந்த ஜப்பான் நடிகர், மேலாளரின் அறைக்கு சென்று பைத்தியம் போன்று சிரித்தார்.

அந்த ஹோட்டலின் சொந்தக்காரர் அவரிடம், ''ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்று கேட்டார். அவர், ''இது விநோதமாக இருக்கிறது. நீங்கள் உங்களது சம்பாத்தியம் அனைத்தையும் இழந்து விட்டீர்கள் என்றாலும் நீங்கள் எப்படி தூங்கினீர்கள்?'' என்று கேட்டார்.

அதற்கு அந்த ஜப்பானிய நடிகர். ''இது ஒரு பொருட்டல்ல. இப்படியா அல்லது அப்படியா என்கிற அந்த அனுபவம் சிலிர்ப்பை உண்டாக்கியதை அனுபவித்தேன். அந்த விடுதியின் சொந்தக்காரர் நடுங்கிக் கொண்டு இருந்ததையும் நான் பார்த்தேன். பணத்தைப் பொறுத்தமட்டில் நான் திரும்பவும் போய் மீண்டும் சம்பாதித்து விடமுடியும். அது ஒரு பிரச்சினை அல்ல. அது திருடிய பணம் அல்ல, நான் தான் அதை சம்பாதித்தேன்,'' என்று கூறினார்.

உடனே அந்த ஹோட்டலின் சொந்தக்காரர், நடிகரிடம், ''ஆனால், ஏனைய சூதாட்டக்காரர்கள் ஆடுவது போல் நீங்கள் சிறிய தொகையைக் கட்டி ஆடியிருக்கலாம். அன்று இரவு முழுவதும் ஆடி இருக்கலாம். எல்லாவற்றையும் ஏன் ஒரே அடியாக பந்தயமாக வைத்தீர்கள்?'' என்று கேட்டார்.

அந்த நடிகர் தனது சுய சரிதையில் கூறியிருந்த பதிலை நான் படித்தேன். அதில் அவர், ''நான் திடீரென்று மெய்ஞ்ஞானம் அடைகின்ற பள்ளியைச் சார்ந்தவன். நான் படிப்படியாக, தவணை முறையில் அடைவதை நம்புவதில்லை. நீங்கள் எதையாவது செய்ய விரும்பினால் அதை முழுமையாகவும், தீவிரமாகவும் செய்யுங்கள். நீங்கள் அதை செய்ய விரும்பவில்லை என்றால் அதை அரைகுறையாக செய்து கொண்டு உங்களை நீங்கள் முட்டாள் ஆக்கிக் கொள்ளாதீர்கள்,'' என்றார்.

போதிதருமர், உண்மையில், திடீரென்று மெய்ஞ்ஞானம் அடைந்த ஒரு மனிதர். ஆனால் அவர் பிரக்யதாரா என்னும் பெண்ணினால் தீட்சை அளிக்கப்பட்டார். அவள் மகாயான பிரிவைச் சார்ந்தவள். எனவே அவள் போதிதருமரை சீனாவிற்கு அனுப்பி, அந்த மதமானது அங்கு வளர்ந்து வருவதற்கு உதவும்படி அனுப்பினாள். வெறும் அறுநூறு ஆண்டுகளில் அந்த மதமானது வெறும் காட்டுத்தீ போன்று வளர்ந்து விட்டது. கௌதம புத்தருக்கு ஐநூறு ஆண்டுகளுக்கு பிறகு, இயேசு கிறிஸ்வின் காலத்தில் அது சீனாவை சென்றடைந்தது. அறுநூறு ஆண்டு களுக்கு பிறகு அங்கு முப்பதாயிரம் பௌத்த கோயில்களும், இருபது லட்சம் துறவிகளும் இருந்தனர். இதில் சாதாரண மனிதர்கள் சேர்க்கப்படவில்லை.

பல லட்சம் மக்கள் புத்தமதத்திற்கு மாறினார்கள். ஏனெனில் அவர்கள் உண்மையில் பசியோடு இருந்தனர். மதத்தின் மீது அந்த அளவுக்கு அவர்கள் பசியோடு இருக்கும்படி கன்பூசியஸ் செய்துவிட்டார். ஏனெனில் கன்பூசியஸின் மனதில் மதமும் கிடையாது. ஆன்மாவும் கிடையாது. கன்பூசியஸினால் தான் சீனா கம்யூனிச நாடாக ஆகியது. ஏனெனில் கன்பூசியஸின் மனமானது கார்ல்மார்க்ஸிற்கு மிகவும் நெருக்கமாக இருந்தது. அதில் அதிக வேறுபாடு கிடையாது. கடவுள் இல்லை, ஆன்மா இல்லை, எல்லா மதங்களும் பயனற்றவை என்று இருவரும் நம்பினார்கள். தன்னுணர்வு என்பது பஞ்ச பூதங்களும் ஒன்றாகச் சேர்வதில் கிடைக்கின்ற ஒரு உபபொருள் என்றும் மரணம் தான் அதன் முடிவு என்றும் இருவரும் நம்பினார்கள். ஆகவே நற்செயல், தீயசெயல் என்கிற பேச்சுக்கே அங்கு இடமில்லை.

கன்பூசியஸ் அந்த அளவுக்கு ஆதிக்கம் செலுத்துபவராக, அந்த அளவுக்கு எளிதில் மனதை மாற்றிவிடுபவராக இருந்ததால் சீன மக்களின் ஒட்டுமொத்த ஆன்மாவும் பசியோடு இருந்தது. அப்படி இருந்த பசியை பௌத்த துறவிகள் நிறைவு செய்தார்கள். அதில் இடைவெளி இல்லை, சண்டை இல்லை, சச்சரவு இல்லை. யாருக்கு எதிராகவும் எந்த ஒரு போராட்டமும் இல்லாமல் பௌத்த மதத்தினர் ஏற்றுக் கொள்ளப்பட்டனர்.

மேலும் பிரக்யதாரா, போதிதருமரை அனுப்பினாள். ஏனெனில் அதுவரை எந்த ஒரு மெய்ஞ்ஞானம் பெற்ற மனிதரும் சீனாவிற்கு சென்றதில்லை. அநேக பண்டிதர்கள் சென்றனர். ஆயிரக்கணாக்கான பண்டிதர்கள் சென்றனர். அவர்கள் எல்லாரும் புத்த புனித நூல்களை சீன மொழியில் மொழிபெயர்ப்பதற்கு முயற்சித்துக்கொண்டு இருந்தனர். ஆனால் அவர்கள் வெறும் பண்டிதர்கள் மட்டுமே, எனவே சீனாவானது ஒரு மெய்ஞ்ஞானியை காணவேண்டியது அவசியமானது என்று பிரக்யதாரா நினைத்தாள். அது அதற்குரிய தகுதிய உடையது. அறுநூறு ஆண்டுகளில் மிகப்பெரிய காரியங்கள் செய்யப்பட்டன. கிட்டத்தட்ட அந்த ஒட்டுமொத்த நாடும் கன்பூஸியஸில் இருந்து கௌதம புத்தருக்கு சென்றது. பிரக்யதாரா, போதிதருமரிடம், ''நீங்கள் போகத்தான் வேண்டும்,'' என்று கூறினாள். எனவே அவரும் போனார். ஆனால் அவரது மெய்ஞ்ஞானம் திடீரென்று நிகழ்ந்த ஒன்று, மேலும் சீனாவில் மக்களிடம் பரவி இருந்த புத்த பிரிவானது மகாயானப் பிரிவாகும். அது படிப்படியாக மெய்ஞ்ஞானம் அடைவதை நம்பியது.

இதுதான் சிக்கல். புத்தர் ஒரு விஷயத்தை கூறுகிறார். ஆனால் நீங்கள் அதற்கு எதிரான ஒரு விஷயத்தை கூறுகிறீர்களே என்று மாணவர்கள் கேள்விகளை எழுப்பிக்கொண்டு இருந்தார்கள். *வெறுமனே மனதைக் கவனிப்பதாலும், மூன்று விஷங்களை கடந்து வருவதாலும் விடுதலை அடையலாம் என்று இப்போது நீங்கள் ஏன் கூறுகிறீர்கள்? நீங்கள் அதை மிகவும் எளிமையானதாக ஆக்கிக்கொண்டு, ஒருவர் அதை இப்போதே செய்யமுடியும் என்று கூறுகிறீர்கள். அப்படியானால் மூன்று கல்ப காலங்களில் கணக்கற்ற கஷ்டங்களை கௌதமபுத்தர் அனுபவித்தார் என்று கூறுவது என்னாவது?*

தனது மெய்ஞ்ஞானத்திற்கு முன்பு கௌதம புத்தர் எல்லா நன்னெறிகளையும் கைவிட்டு விட்டார் என்று நான் உண்டாக்கிய வித்தியாசத்தை பற்றி ஒருவேளை போதிதருமருக்கும் கூட தெரியாமல் இருந்திருக்கலாம். அதுதான் சரியான பதிலாக இருந்திருக்க முடியும். கௌதம புத்தர் மூன்று அல்லது முப்பது கல்ப காலங்கள் கஷ்டப்பட்டு இருக்கலாம். ஆனால் வெறும் ஒரு

கனவு எனவே கனவு கலைந்து விடும்போது, அந்த கலைதல் என்பது ஒரு நொடிப்பொழுதில் தானே நடக்கிறது. ஒரு சிறு நொடிப்பொழுது முன்பு நீங்கள் தூங்கிக் கொண்டு இருந்தீர்கள். ஒரு சிறு நொடிப்பொழுதிற்கு பிறகு நீங்கள் கண்விழித்து விட்டீர்கள். ஆனால் நீங்கள் கண்விழித்து எழுந்தபோது, நிஜம் போலத் தோன்றிய கனவுகள் எல்லாம் மறைந்துவிடுகின்றன.

இதுதான் சரியான பதிலாக இருந்திருக்க முடியும். ஆனால் இது மகாயானப் பிரிவு கொள்கையோடு பொருந்திப் போகாது. அதனால்தான் அவர் அந்த கேள்வியை சுற்றி மீண்டும் மறைஇயல் புகையை உருவாக்கிக் கொண்டு இருக்கிறார்.

*புத்தரின் வார்த்தைகள் உண்மையானவை. ஆனால் அந்த மூன்று அசாங்கிய கல்பங்கள் என்பது மனதின் மூன்று விஷம் நிறைந்த மனநிலையைக் குறிக்கிறது. அது உண்மை அல்ல.*

கௌதம புத்தர், புத்தநிலையை அடைவதற்கு எண்ணற்ற பிறவிகளில் போராடி, முடிவாக தனது கடைசி பிறவியில் அவர் அதை அடைந்தார் என்பதைத்தான் அவர் உண்மையில் அப்படி குறிப்பிடுகிறார். இப்போது போதிதருமர் எப்படியாவது ஒரு அறிவுக்கு பொருத்தமான ஒரு பதிலைக் கொடுப்பதற்கு முயற்சி செய்கிறார். நாம் சமஸ்கிருதத்தில் அசங்கிய என்று அழைப்பதை நீங்கள் எண்ணிக்கையற்ற என்று அழைக்கிறீர்கள். மனதின் இந்த மூன்று விஷம் நிறைந்த நிலைகளுக்குள் எண்ணிக்கையற்ற தீய எண்ணங்கள் இருக்கின்றன்.

இப்போது இவை எல்லாம் முட்டாள்தானமானவை, ஏனெனில் இது மீண்டும் கேள்விக்கு தொடர்பு இல்லாதது.

*ஒவ்வொரு எண்ணமும் ஒரு கல்பகாலம் வரை இருக்கிறது.*

இது முட்டாள்தனத்தை விடவும் கூட மோசமானது, இது அர்த்தமற்றது. இது உங்களுக்கும் தெரியும். ஒரு எண்ணம் ஒருமணி நேரம்கூட இருக்காது. வெறுமனே ஏதாவது ஒரு எண்ணம் தொடர்ந்து ஒருமணி நேரம் உங்கள் மனதில் இருக்கும்படி முயற்சி செய்து பாருங்கள். அப்போது நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். அது மனதை விட்டு நழுவி ஓடிக் கொண்டே இருக்கும்.

மனமானது இடைவிடாத போக்குவரத்தில் இருக்கிறது. நீங்கள் அந்த போக்குவரத்தின் நடுவில் நிற்கமுடியாது. உங்களது எண்ணங்கள் எல்லாவற்றையும் விட அதிவேகமாக நகர்ந்து கொண்டு இருக்கின்றன. ஒரு கல்பம் என்பது மிகவும் நீண்ட காலம். ஒரு எண்ணமானது ஒரு சில நொடிகள் கூட இருப்பதில்லை. உங்களது மனம் இடைவிடாது ஓடிக்கொண்டே இருக்கிறது. அது ஒரு நதியைப் போன்று உள்ளது.

ஹெராக்லிட்டஸ் என்பவர், ''அதே ஆற்றில் நீங்கள் இரண்டு முறை கால் வைக்க முடியாது, ஏனெனில் ஆறானது மிக வேகமாக ஓடிக்கொண்டு இருக்கிறது. நீங்கள் இரண்டாவது காலடி எடுத்து வைக்கும் நேரத்தில் அது வேறு தண்ணீராக உள்ளது. அது பெயரளவுக்கு மட்டுமே அதே ஆறாக இருக்கிறது. ஆனால் நீங்கள் முதல் முறை காலடி எடுத்து வைத்த தண்ணீர் இப்போது அங்கு இல்லை,'' என்று கூறுகிறார்.

ஹெராக்லிட்டஸை விட நான் இன்னமும் கொஞ்சம் அதிக தூரம் செல்கின்றேன். ''நீங்கள் அதே ஆற்றில் ஒரே ஒருமுறை கூட கால் வைக்க முடியாது. ஏனெனில் நீங்கள் நீரின் மேல்பகுதியில் கால்வைக்கும் போது நீரின் அடிப்பகுதியில் தண்ணீர் ஓடிக்கொண்டு இருக்கிறது. உங்களது கால்கள் கொஞ்சம் ஆழத்திற்கு செல்லும்போது நீரின் மேல்பகுதி மற்றும் கீழ்ப்பகுதி ஆகியவை விரைவாக ஓடிக்கொண்டு இருக்கின்றன. நீங்கள் உங்களது காலை ஆற்றின் அடியில் வைக்கும்போது, நீங்கள் முதலில் தண்ணீரில் கால்வைத்தபோது இருந்த எல்லாமே மாறிவிட்டது. நீங்கள் அதே ஆற்றில் கால் வைக்கவில்லை. ஏனெனில் ஒவ்வொரு விநாடியும் புதிய தண்ணீர் உள்ளே வந்து கொண்டு இருக்கிறது. பழைய தண்ணீர் ஓடிப்போய்க்கொண்டு இருக்கிறது. அதே நதியில் ஒருமுறை கூட கால்வைப்பது சாத்தியப்படாது என்பது ஹெராக்லிட்டஸிற்கு தெரியவில்லை. இரண்டுமுறை என்பது அதிகப்படியானது.

அதே சூழ்நிலையில்தான் மனித மனமும் இருக்கிறது. இது வெறுமனே ஓடிக்கொண்டே இருக்கிறது. நூற்றுக்கணக்கான எண்ணங்கள் வரிசையில் நின்று கொண்டு செல்கின்றன.

தொடர்புடைய, தொடர்பில்லாத, மாறுகின்ற, மாறாத, எண்ணங்கள் ஓடிக்கொண்டே இருக்கின்றன. ஆனால் அவர் புத்தரின் வாக்குமூலத்திற்கு ஒரு அர்த்தத்தை உண்டாக்க முயற்சித்துக் கொண்டு இருக்கிறார்.

*மூன்று அசாங்கிய கல்பங்கள் என்று கூறுவதற்கு இப்படிப்பட்ட எல்லையற்ற நிலை என்பதுதான் அர்த்தமாகும்.*

கிடையாது, அந்த வார்த்தைகள் என்ன கூறுகின்றனவோ அதைத்தான் அவர் உண்மையிலேயே கூறுகிறார். போதிதருமர் தனது கருத்துகளை அதன்மீது பதியும்படி செய்கின்றார். அதை திடீர் மெய்ஞ்ஞான கருத்திற்கு கொண்டுவர, அதை கொஞ்சம் நீர்த்துப்போக செய்வதற்கு அப்படி கூறுகிறார். அவரது இடத்தில் நான் இருந்திருந்தால், ''கௌதம புத்தர் கூறியது தவறு. கணக்கற்ற காலங்களைப் பற்றி அவர் கூறும்போது அவர் அதை மெய்ஞ்ஞானம் அடைவதற்கு முன்பு கூறி இருக்க வேண்டும். அவர் மெய்ஞ்ஞானம் அடைந்த் பிறகு கொடுத்த வாக்குமூலம் அல்ல. இப்படி அவர் ஏதாவது கூறி இருந்தால் அது அவர் மெய்ஞ்ஞானம் அடைவதற்கு முன்பு கூறியதாகத்தான் இருக்கும்,'' என்று நான் கூறி இருப்பேன்.

அவர் மெய்ஞ்ஞானம் பெறுவதற்கு முன்பு கூட ஐந்து பேர் அவரைப் பின்பற்றினார்கள். அவரைப் பார்த்து, ஒரு தவ வலிமை மிக்க அரசரும், ஐந்து பிராமணர்களும் அவரைப் பின்பற்றி நடப்பவர்கள் ஆனார்கள். அவர்கள் கௌதமரை விட்டு விலகி சென்று விட்டனர். ஏனெனில் அந்த பௌர்ணமி இரவில் அவர் சுஜாதா கொடுத்த உணவை ஏற்றுக் கொண்டு விட்டார்.

மேலும் சுஜாதா என்கிற வார்த்தை மிகப்பெரிய விஷயங்களை உள்ளடக்கி உள்ளது. அதற்கு ''நற்பிறவி,'' மிக உயர்ந்த குடும்பத்தில் பிறந்தவள் என்று அர்த்தம். இப்போது உண்மையில் உயர் குடும்பத்தில் பிறந்த எவரும் அந்த பெயரை வைப்பது கிடையாது. சுஜாதா என்பவள் கண்டிப்பாக ஒரு சூத்திரராக, தீண்டத்தகாத பெண்மணியாக இருந்திருக்க வேண்டும். இப்படித்தான் மனித மனமும், மனித உளவியலும் செயல்புரிகிறது. அவள் ஒரு உயர்ஜாதியைச் சார்ந்தவள் இல்லை

என்றாலும் கூட, குறைந்தபட்சம் நற்பிறவி எடுத்தவள் என்கிற அர்த்தத்தை கொடுக்கின்ற இந்த அழகான பெயரை அவள் வைத்திருக்க முடியும். அவள் இந்த சமுதாயத்தில் மிகவும் கீழ் மட்டத்தில் உள்ளவள் என்பதை நிச்சயமாக இந்த பெயர் சுட்டிக்காட்டுகிறது.

கௌதமர், ''நீ எந்த வகுப்பை சேர்ந்தவள்'' என்று கூட அவளிடம் கேட்காமல், அவள் கொடுத்த உணவை ஏற்றுக் கொண்டதால் அவரது ஐந்து சீடர்களும் உடனடியாக அவரை விட்டு விலகி சென்றுவிட்டனர். அன்று இரவு, அவர் அதை மிகவும் மகிழ்ச்சியுடன் சாப்பிட்டார். ''அவர் ஒரு பொய்யர், ஏமாற்றுக்காரர், நாங்கள் ஏமாற்றப்பட்டு விட்டோம். அவர் ஒரு துறவியே அல்ல,'' என்று கூறிவிட்டு அந்த ஐந்து சீடர்களும் சென்றுவிட்டனர். புத்தர் இது போன்று எதையாவது அந்த ஐந்து சீடர்களிடம் கூறி இருக்கலாம். ஆனால் அப்போது அவர் மெய்ஞ்ஞானம் பெறவில்லை. எனவே புத்தர் மெய்ஞ்ஞானம் பெறுவதற்கு முன்பு கூறிய எந்த ஒரு வாக்குமூலமும் கணக்கில் எடுத்துக் கொள்ளக்கூடாது என்பதை ஒருவர் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். அதற்கு ஒரு அர்த்தமும் கிடையாது. அவர் மெய்ஞ்ஞானம் அடைந்த பிறகு கூறியவை மட்டுமே சிறப்பு வாய்ந்தவை.

போதிதருமர் இதை சுலபமாக விளக்கி இருக்கலாம். ஆனால் பல நூற்றாண்டுகளாக அவரைப்பற்றி நாம் நம்பிக் கொண்டு இருப்பது போல அவர் அவ்வளவு தைரியமானவர் இல்லை. புத்தரின் வார்த்தைகள் உண்மை அல்ல என்று அவரால் கூறமுடியவில்லை. அவர் எப்படியாவது அந்த வார்த்தைகளை நீர்த்து போகச் செய்து, அவற்றை மெருகேற்றி, தனது சொந்த புரிதலுக்கு நெருக்கமாக கொண்டு வருவதற்கு அவர் முயற்சி செய்கிறார்.

*ஆனால் மிகப்பெரிய போதிசத்வர்கள், இந்த மூன்று வகை நல்ஒழுக்கங்களையும், மற்றும் ஆறு பரமிதாக்களையும் கடைப்பிடித்ததன் மூலமாகத்தான் மெய்ஞ்ஞானத்தை*

அடைந்திருக்கின்றனர். ஆனால் நீங்கள் இப்போது சீடர்களிடம் வெறுமனே மனதைக் கவனியுங்கள் என்று கூறுகிறீர்கள். நல்ஒழுக்க விதிகளை பேணிவளர்க்காமல் ஒருவரால் எப்படி மெய்ஞ்ஞானத்தை அடையமுடியும்?

அவர் உண்மையிலேயே சீடர்களை சிக்கலான நிலையில் தள்ளுகிறார். இதுதான் அவர்களின் கடைசி கேள்வி. எந்த நன்னெறியும் தேவை இல்லை, எந்த தவச்செயலும் தேவை இல்லை என்று போதிதருமர் கூறுகிறார். தேவைப்படுவது எல்லாம் நீங்கள் உங்களது மனம் குறித்து விழிப்புணர்வு அடைவது மட்டுமேயாகும். நான் முற்றிலும் அவரோடு ஒத்துப் போகிறேன். அதுதான் மெய்ஞ்ஞானத்தை கொண்டுவருகிறது.

தன்னுணர்வை இழந்த ஒருமனிதன் தன்னை நன்னெறிப் படுத்த முடியும். ஒரு புத்தரைப் போன்று அவன் தனது தலையை மொட்டை அடித்துக் கொள்ளலாம். இருபத்து நான்கு மணி நேரத்தில் ஒரே ஒருமுறை மட்டுமே அவன் சாப்பிடலாம். அவன் மூன்று மாற்று உடைகளை மட்டுமே வைத்திருக்கலாம். ஆனால் இதனால் எல்லாம் அவன் மெய்ஞ்ஞானம் அடைந்து விடுவதில்லை. இப்படி இருந்தால்தான் மெய்ஞ்ஞானம் கிடைக்கும் என்றால், மூன்று மாற்று ஆடைகள் இல்லாத எல்லா ஏழை மக்களும், எதையும் சாப்பிடாமல் படுக்கச் செல்கின்ற மக்களும், மெய்ஞ்ஞானம் அடைந்திருப்பார்கள்.

ஒரு செங்கல்லை தங்களது வயிற்றில் வைத்து கட்டிக் கொண்டு இரவில் படுக்கச் செல்கின்ற மக்களை நான் அறிவேன். ஏனெனில் அப்போதுதான் தங்களது வயிறானது காலியாக இருக்கிறது என்பதை அவர்களால் உணர முடியாது. இந்த நாட்டின் அநேக இடங்களில் இப்படிப்பட்ட வறுமை நிலவுகிறது. இந்த மக்கள் எல்லாம் புத்தர்கள் ஆகிவிடுவார்களா? முடியாது. மெய்ஞ்ஞானத்திற்கும் வறுமை, உண்ணாவிரதம், நன்னெறி, மதச்சடங்கு ஆகியவற்றிற்கும் சம்பந்தம் கிடையாது. உங்களது செயல், உங்களது எண்ணங்கள், உங்களது உணர்ச்சிகள் ஆகியவை குறித்து நீங்கள் மேலும்மேலும் அதிக விழிப்புணர்வை

உருவாக்குவது மட்டுமே மெய்ஞ்ஞானம் அடைவதற்கான ஒரே வழியாகும்.

இதை மிகச் சரியாக போதிதருமர் கூறி இருக்கவேண்டும். ஆனால் நீங்கள் ஒரு அமைப்பை சார்ந்துவிடும் போது இதுதான் தொந்தரவு. நீங்கள் குறிப்பிட்ட தத்துவத்தை சார்ந்து இருக்கும் போது, உங்களுக்கு நீங்களே குருவாக இல்லாதபோது, நீங்கள் வேறு யாரையாவது குருவாக வழிபடும்போது. இந்த விதமான சிக்கல்கள் கண்டுபிடிப்பாக நடக்கும். ஒரு விதத்தில் நீங்கள் உங்களது தனித்தன்மையை இழந்து விட்டீர்கள். உங்களது சொந்த புரிதலுக்கு எதிரானதாக இருந்தாலும்கூட நீங்கள் கௌதமபுத்தரை ஆதரிக்க வேண்டியதிருக்கிறது.

மூன்று வகையான நன்னெறிகள் மனதின் மூன்று விஷம் நிறைந்த நிலைகளை கடந்து வருவதற்காகவே இருக்கின்றன. இந்த விஷங்களை நீங்கள் தாண்டி வந்துவிட்டால், நீங்கள் மூன்று வகையான, எல்லைகளற்ற புண்ணியத்தை உருவாக்கி விடுகிறீர்கள். ஒரு வகையானது விஷயங்களை ஒன்றாகச் சேர்க்கிறது. இந்த நிலையில் உங்களது மனம் முழுவதும் எண்ணற்ற நற்சிந்தனைகளை ஒன்று சேர்க்கிறது. ஆறு புலன்களையும் தூய்மைப்படுத்துவதற்கு ஆறு பரமிதாக்கள் இருக்கின்றன. நாம் பரமிதாக்கள் என்று அழைப்பதை, நீங்கள் அடுத்த கரைக்கான வழி என்று அழைக்கிறீர்கள். உங்களது ஆறு புலன்களின் புலன் நுகர்ச்சி என்னும் தூசியைச் சுத்தம் செய்வதால், மனவேதனை என்னும் ஆற்றில் மெய்ஞ்ஞானம் என்ற கரைக்கு மரமிதாக்கள் படகுகளாகி அடுத்த கரைக்கு கொண்டு செல்கின்றன.

இந்த பதிலானது, கேள்விக்கு, தொலைதூரத்துத் தொடர்பும் கூட இல்லாமல் இருப்பதை உங்களால் பார்க்க முடிகிறதா? இது தூரத்துச் சொந்தமான ஒன்றுவிட்ட சகோதரன் போன்று கூட இல்லை.

போதிதருமரால் சமாளிக்க முடியவில்லை. வெறுமனே உண்மையைச் சொல்லி இருந்தால் சரியானதாக இருந்திருக்கும்.

''அந்த பதில் புத்தர் அல்லது கிருஷ்ணர் அல்லது கிறிஸ்து ஆகிய யாருக்கு எதிரானதாக இருந்தாலும்கூட, நான் எனது சொந்த உண்மையாக இருந்தாக வேண்டும். அது வேறு ஒருவருடைய உண்மைக்கு எதிரானதாக சென்றால் அது அவரின் பிரச்சனை, அது என் பிரச்சினை அல்ல,'' என்று போதிதருமர் உண்மையைக் கூறி இருக்க வேண்டும்.

உண்மை நிலையானது உங்களுக்குள் எழும்போது அதற்கே உரித்தான அழகுடன் இருக்கிறது. ஆனால் வேறு ஒருவரால் உருவாக்கப்பட்ட அமைப்பு முறையோடு நீங்கள் அதை பொருத்த முயற்சி செய்தால், நீங்கள் உண்மைநிலையை கலைக்க ஆரம்பித்து விடுகிறீர்கள். மேலும் என்னைப் பொறுத்தமட்டில் அது மிகப்பெரிய குற்றங்களில் ஒன்றாகும்.

கேள்வி மிகவும் சிறப்பானது. ஆனால் பதில் அப்படி இல்லை. வேறு பொருளடக்கத்தில் இந்த பதில் சரியானதாக இருக்கிறது. ஆனால் இந்த பதிலுக்கு இது இடம் அல்ல. மூன்று எண்ணற்ற கல்பங்களில், நன்னெறி மற்றும் தவத்தில் புத்தர் கனவுகளில் வாழ்ந்திருப்பார் என்று அவர் கூறி இருக்க வேண்டும்.

ஆனால், சீனாவில் உள்ள புத்த மதத்தினரிடம் ஒருவேளை இப்படி அவர் சொல்ல முடியாமல் போயிருக்கலாம். ஏனெனில் அங்கு புத்த மதத்தை திடப்படுத்துவதற்கு அவர் இந்தியாவில் இருந்து அனுப்பப்பட்டார். எனவே அவர் இப்படிப்பட்ட வழியில் பேச ஆரம்பித்தால் அவர் புத்தமதத்தை எப்படி திடப்படுத்துவார்? அவர் சமாதானம் செய்து கொள்ள ஆரம்பித்தார். மேலும் ஒருவர் சமாதானம் செய்து கொள்ள ஆரம்பித்துவிட்டால், அவர் உண்மைநிலையோடு தொடர்பை இழந்துவிடுகிறார். உண்மை என்பது சமாதானம் செய்து கொள்ளாத ஒரு அனுபவமாகும்.

இந்த சூத்திரத்தின்படி மூன்று விதமான நன்னெறிகள் என்பவை, ''*எல்லாத் தீய செயல்களுக்கும் நான் முடிவு கட்டுவேன் என்று நான் சபதமேற்கிறேன். எல்லா புண்ணியச் செயல்களையும் பேணி வளர்ப்பதற்கு நான் சபதமேற்கிறேன்.*

*எல்லா உயிர்கள்ளையும் விடுதலை அடையச் செய்வதற்கு நான் சபதமேற்கிறேன்'' என்பதாகும். ஆனால் இவை எல்லாம் மனதின் மூன்று விஷம் நிறைந்த நிலைகளைக் கட்டுப்படுத்து வதற்குத்தான் இருக்கின்றன என்று நீங்கள் கூறுகிறீர்கள். இது புனித நூல்களின் அர்த்தத்திற்கு முரண்பாடாக இல்லையா?*

அது முரண்பாடாகத்தான் இருக்கிறது. ஆனால் போதி தருமரால் அப்படி சொல்ல முடியவில்லை. உண்மையில், தீயவைகளுக்கு முடிவு கட்டுவதும், புண்ணியத்தை வளர்ப்பது, எல்லா உயிர்களையும் விடுதலை அடையச் செய்வது ஆகிய மூன்று சபதங்களையும் கௌதமபுத்தர் செய்தார். ஆனால் இது அவர் மெய்ஞ்ஞானம் அடைவதற்கு முன்பு செய்தது. எனவே இதற்கு எந்த ஒரு மதிப்புமே கிடையாது.

மெய்ஞ்ஞானம் அடைந்த பிறகு, இந்த சபதங்கள் தனது கனவு நிலையில் செய்யப்பட்டவை என்பதை அவர் அறிந்தார். நீங்கள் உங்களது கனவில் என்ன முடிவு செய்கிறீர்களோ, அதை நீங்கள் கண்விழித்த உடன் பின்பற்ற வேண்டும் என்பது கிடையாது. உங்களது கனவில் நீங்கள் வானத்தில் ஒரு பறவை போன்று பறப்பதாக கனவு கண்டிருக்கலாம். ஆனால் நீங்கள் விழித்து எழுந்தவுடன், அது ஒரு கனவு என்பதை நீங்கள் அறிவீர்கள். நீங்கள் ஒரு பறவை போல பறக்க வேண்டும் என்று நீங்கள் வலியுறுத்த மாட்டீர்கள்.

இந்த மூன்று சபதங்களும் நிச்சயமாக புத்தரால் செய்யப்பட்டன. ஆனால் இவை அவரது மெய்ஞ்ஞானத்திற்கு முன்பு செய்யப்பட்டன. ''உங்களது சபதங்கள் என்ன ஆயிற்று?'' என்று யாரும் புத்தரிடம் கேட்கவில்லை என்பது உண்மைதான். ஆனால் போதிதருமரிடம் கேட்கப்படுகிறது. இவை கனவுகளில் செய்யப்பட்டவை எனவே கனவுகளை பொருட் படுத்த கூடாது என்று அவர் தெளிவு படுத்தி இருக்க வேண்டும். விழித்தெழுந்த தன்னுணர்வுதான் அங்குள்ள விஷயம். அதன் பின்னர் புத்தர் எந்த சபதமும் செய்யவில்லை. ஆனால் அதற்கு பதிலாக, புத்தரின் இந்த சூத்திரங்கள் உண்மையானவை என்று அவர்

கூறிக்கொண்டு செல்கிறார். புத்தரின் சூத்திரங்கள் உண்மை யானவை என்று அவர் கூறும்போதே, போதிதருமர் நேர்மையின் மூலம் வருகிற பலத்தை, உங்களது சொந்த அனுபவத்தில் இருந்து வருகின்ற உண்மை நிலையை அவர் இழந்து விடுவதை நீங்கள் காணமுடியும். அவர் பலம் இழந்துவிட்டார்.

*ஆனால் வெகுகாலத்திற்கு முன்பு, மிகப்பெரிய போதிசத்வர், மெய்ஞ்ஞானம் என்னும் விதையைப் பேணி வளர்க்கும்போது, மூன்று விஷங்களையும் எதிர்கொள்வதற்கு அவர் மூன்று சபதங்களை உருவாக்கினார். பேராசை என்னும் விஷத்தை எதிர்ப்பதற்கு நல்ஒழுக்கத்தை கடைபிடிப்பதன்மூலமும், எல்லாத் தீயவைகளையும் முடிவு கட்டுவதற்காக அவர் சபதமேற்றார். கோபம் என்னும் விஷத்தை எதிர்ப்பதற்கு சபதமேற்றார். மாயை என்னும் விஷத்தை எதிர்ப்பதற்கு, ஞானத்தை கடைப்பிடிப்பதன் மூலம், எல்லா உயிர்களையும் விடுதலை அடையச் செய்வதற்கு அவர் சபதம் செய்தார். நன்னெறி, தியானம், ஞானம் ஆகிய இந்த மூன்று விஷங்களையும் கடந்து சென்று மெய்ஞ்ஞானத்தை அடைய முடிந்தது. இந்த மூன்று விஷங்களையும் கடந்து வந்ததன் மூலம் பாவச்செயல்கள் எல்லாவற்றையும் துடைத்து விட்டு, அதன்மூலம் தீயவைகளுக்கு ஒரு முடிவு கட்டினார். இந்த மூன்று வகை நன்னெறிகளையும் கடைப்பிடித்ததன் மூலம் அவர் நல்லதைத்தவிர வேறு எதையும் செய்யாமல், புண்ணியத்தை பேணி வளர்த்தார். தீயவற்றை முடிவுக்கு கொண்டு வந்துவிட்டு, புண்ணியத்தை பேணி வளர்த்ததன் மூலம் தனக்கும் மற்றவர்களுக்கும் பலனளித்த எல்லா பயிற்சிகளையும் பூர்த்தி செய்தார். எங்கும் உள்ள மரணிப்பவர்களை காப்பாற்றினார். இப்படி அவர் உயிர்களை விடுதலை அடையச் செய்தார்.*

அவர் உண்மையான மனிதர் அல்லர். அவர் எப்படியோ சமாளித்து பதில் கூற முயற்சிக்கிறார். இந்த பதிலானது தானே எழுந்த ஒரு பதில் அல்ல. இது புத்திசாலித்தனமானது, கெட்டிக் காரத்தனமானது, இது அவரது சீடர்களை திருப்திப்படுத்தி இருக்கலாம். ஆனால் என்னை திருப்திப்படுத்த முடியாது.

நான் யாருடைய சீடனும் அல்லன். நான் எந்தவிதமான நம்பிக்கை முறைகளையும் சார்ந்தவன் அல்லன். உலகம் முழுவதும் உள்ள எல்லா மக்களையும் நான் நேசிக்கிறேன். நான் ஒருபோதும் அவர்களை ஒப்பிட்டு பார்த்தது கிடையாது. அவர்கள் எல்லாம் தனித்துவமானவர்கள், ஒரு ஜரதுஷ்ட்ரர், ஜராதுஷ்ட்ரர்தான், மகாவீரர் மகாவீரர்தான், புத்தர் புத்தர்தான், இயேசு இயேசுதான், மோஸஸ் மோஸஸ்தான். அவர்கள் மிகவும் தனித்துவம் வாய்ந்தவர்கள். ஆகவே அவர்களில் ஒருவரை நீங்கள் அடிப்படை பண்பாக வைத்துக்கொண்டு, மற்றவர்களை எல்லாம் அந்த பண்பில் பொருந்தி போகும்படி செய்யக்கூடாது.

போதிதருமரும் கூட அதே பிரிவைச் சார்ந்தவர்தான், ஆனால் அவர் தன்னை சமாதானம் செய்து கொள்வதால், அவர் கீழே விழுந்து விடுகிறார். அவர் தனது தனித்தன்மையை அப்படியே வைத்திருக்கவில்லை. அவர் கௌதமபுத்தரின் சீடராகவே இருக்கிறார். எனவே ஒரு குருவின் வார்த்தைகளை சீடன் ஒருவன் எப்படி சரியல்ல என்று கூறமுடியும்?

குருவே இல்லாத ஒரு மனிதர் கூறுவதை நீங்கள் கேட்பது உங்களுக்கு கிடைத்த ஒரு தனித்துவமான சந்தர்ப்பமாகும். அவர் உண்மைநிலை மீது அந்த அளவுக்கு மரியாதை வைத்திருக்கிறார். உண்மையானது ஜரதுஷ்ட்ரரிடமிருந்தோ அல்லது லாவோத்சூ அல்லது புத்தர் அல்லது மோசஸ், அல்லது இயேசு அல்லது முகமது, இப்படி யாரிடமிருந்து வந்தாலும் அந்த உண்மைக்கு மரியாதை கொடுக்கிறார். அது உண்மை என்னும் பட்சத்தில், எனது உள்ளத்தில் மணி அடிக்கிறது. நான் முழுவதும் அதற்கு ஆதரவு கொடுக்கிறேன். அது உண்மை அல்ல என்னும்போது, எனது உண்மை எனக்கு தெரியும், மணி அடிக்காது, எனவே உடனடியாக ஏதோ தவறு உள்ளது என்று நான் அறிந்து கொள்வேன்.

போதிதருமர், சமாதானப்படுத்த, மன ஆறுதல் அளிக்க முயற்சிக்கிறார். அவர் உண்மை நிலையின் மீது ஆர்வத்துடன் இல்லை. புத்தரின் செய்திகளை பரப்புவதிலேயே அவர் அதிக

ஆர்வத்துடன் இருக்கிறார். அங்குதான் அவர் தனது தனித் தன்மையை இழந்து விடுகிறார். மற்றபடி அவர் கௌதம புத்தரைப் போன்றே ஒரு தனித்துவம் வாய்ந்தவராகவே இருக்கிறார்.

''இந்த வார்த்தைகள் தவறானவை. இவை என் ஆன்மா வோடு ஒலி அதிர்வுகளை உண்டாக்காததால் இவை உண்மை யானவை அல்ல'' என்று நேரடியாக அவரால் கூறமுடியாமல் போகும் அளவுக்கு என்ன நடந்தது என்று என்னால் நினைத்துப் பார்க்க முடியவில்லை. ஆனால் அரசியல், மத, சமுதாயம் இப்படி ஏதாவது ஒரு குறிப்பிட்ட கட்சியோடு நீங்கள் உங்களைக் கட்டிப்போட்டுக் கொள்ளும்போது இதுதான் நடக்கிறது. அதன்பின்னர் நீங்கள் எதையும் தேர்வு செய்யாமல், எல்லாவற்றிலும் அவர்களோடு ஒத்துப்போக வேண்டியதாகி விடுகிறது.

புத்தமதத்தினர் போதிதருமரால் மிகவும் சந்தோஷம் அடைந்தனர், ஏனெனில் அவர் சீனாவில் புத்தரின் நன்னெறிகளை நிறுவினார். அதற்கு ஒரு திடமான அஸ்திவாரத்தைக் கொடுத்தார். புத்தரின் செய்திகளை பரப்பினார். சீனாவுக்கு மட்டுமல்ல, ஆனால் சீனாவில் இருந்து தைவான், அங்கிருந்து கொரியா, அங்கிருந்து ஜப்பான் ஆகிய நாடுகளுக்கும் பரப்பினார். அவர் ஒரு மாபெரும் காரியத்தை செய்தார். ஆனால் உயரத்தில் இருந்து அவர் விழுந்துவிட்டார். உண்மையை மிகச்சரியாக அப்படியே மக்களிடம் எளிய வழியில் அவர் விளக்கி இருந்தால் அவர் அந்த உயரத்திலேயே இருந்திருப்பார். அவர் மக்களிடம், ''இந்த பேச்சுக்கள் புத்தர் மெய்ஞ்ஞானம் அடைவதற்கு முன்பு பேசப்பட்டவை, மெய்ஞ்ஞானம் அடைவதற்கு முன்பு அவர் பேசியவை ஒரு பொருட்டாகாது. என்னைப் பொறுத்தவரையில், அவரது மெய்ஞ்ஞானத்திற்கு பிறகு அவரது பேச்சுக்கள் அனைத்தும் பத்தரை மாற்று தங்கம்'' என்று போதிதருமர் எளிமையாக கூறி இருக்கவேண்டும்.

போதிதருமர் மக்களின் மனதைக் காயப்படுத்தி இருப்பார் என்று நான் நினைக்கவில்லை. ஒருவேளை மற்ற மெய்ஞ்ஞானம்

அடைந்த மக்களுக்கு ஒரு மூன்று காரணத்தை அவர் உருவாக்கி இருக்கலாம். நீங்கள் எல்லாவற்றோடும் ஒத்துப்போக வேண்டும் என்கிற அவசியம் கிடையாது. உண்மையானது எந்தத் திசையில் இருந்து வந்தாலும் அதை ஏற்றுக்கொள்கின்ற கடமை உங்களுக்கு உள்ளது. ஆனால் உண்மையைப் பற்றி ஏதும் அறியாத மத குருக்களினால் உருவாக்கப்பட்ட எந்த ஒரு கற்பனையோடும், உண்மையற்ற நிலையோடும் ஒத்துப்போக வேண்டிய கட்டாயம் உங்களுக்கு கிடையாது.

அவர் எதற்காக அனுப்பப்பட்டாரோ அந்த காரியத்தை அவர் செய்தார். ஆனால் தனது ஆன்மாவில் உள்ள அழகான ஒன்றை இழந்துவிட்டார். அந்த ஒட்டுமொத்த சீனாவும் புத்த மதத்திற்கு மாறியதை விடவும் அதுதான் எனக்கு மிகவும் முக்கியமானது. பல லட்சம் மக்கள் ஆழ்ந்து தூங்குவதை விடவும் ஸ்படிகம் போன்று உண்மைநிலையில் தெளிவாக ஒரு தனி மனிதர் இருப்பது மிகவும் முக்கியமானதாக இருக்கிறது.

நீங்கள் பேணி வளர்க்கின்ற பயிற்சியானது உங்களது மனதில் இருந்து தனியாக இல்லை என்பதை கண்டிப்பாக நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும். உங்களது மனம் தூய்மையாக இருந்தால் எல்லா புத்த நிலங்களும் தூய்மையாக இருக்கின்றன. ''மனங்கள் அசுத்தமாக இருந்தால் உயிர்களும் அசுத்தமாக இருக்கின்றன. மனங்கள் சுத்தமாக இருந்தால் உயிர்களும் சுத்தமாக இருக்கின்றன. ஒரு புத்தரின் பூமியை அடைவதற்கு உங்களது மனதை தூய்மையாக்குங்கள். உங்களது மனம் தூய்மையாகி வரும் போது புத்த பூமிகளும் தூய்மையாக ஆகிவிடுகின்றன'' என்று சூத்திரங்கள் கூறுகின்றன. இப்படியாக மனதின் மூன்று விஷமுள்ள நிலைகளைக் கடந்து வருவதன் மூலம் மூன்று நன்னெறிகளும் தாமாகவே நிறைவேற்றப்பட்டு விடுகின்றன.

ஆனால், தாராள மனப்பான்மை, நல்ஒழுக்கம், பொறுமை, பக்தி, தியானம் மற்றும் ஞானம் ஆகியவை ஆறு பரமிதாக்களாக இருக்கின்றன என்று சூத்திரங்கள் கூறுகின்றன. பரமிதாக்கள் என்பது புலன்களைத் தூய்மைப்படுத்துவதை குறிக்கிறது என்று இப்போது நீங்கள் கூறுகின்றீர்கள். இதன் மூலம் நீங்கள் என்ன அர்த்தம் கொள்கிறீர்கள்? இவை ஏன் பயணப் படகுகள் என்று அழைக்கின்றன?

பரமிதாக்கனை பேணி வளர்க்கும் போது, ஆறு புலன்களை தூய்மைப்படுத்துதல் என்பதற்கு ஆறு திருடர்களைக் கடந்து வருதல் என்று அர்த்தமாகும். காண்கின்ற இந்த உலகை கைவிடுவதனால் கண் என்னும் திருடனின் உறவை முறித்துக் கொள்வது தாராள மனப்பான்மையாக இருக்கிறது. ஒலிகளைக்

கேட்காமல் இருப்பதால் காது என்னும் திருடனின் உறவை முறித்துக் கொள்வது நல்ஒழுக்கமாக ஆகிறது. எல்லா வாசனைகளையும் சமமாக பாவிப்பதன் மூலம் மூக்கு என்னும் திருடனை பணிவடையச் செய்தல் பொறுமை என்பதாக இருக்கிறது. சுவை பாராட்டு, விவரித்ததில் ஆகியவற்றின் மீதான ஆசையை வெற்றி கொள்வதன் மூலம் வாய் என்னும் திருடனை கட்டுப்பாட்டில் வைப்பது பக்தி ஆகிறது. தொடு உணர்வினால் அசையாமல் இருப்பதன் மூலம் உடல் என்னும் திருடனை அடக்குவது தியானம் என்பதாகிறது. மேலும் மாயைக்கு பலியாகி விடாமல் ஆனால் முழுவிழிப்புடன் இருப்பதன் மூலம் மனம் என்னும் திருடனை நன்கு பழக்கப்படுத்துதல் ஞானம் என்பதாக இருக்கிறது. இந்த ஆறு பரமிதாக்களும் போக்கு வரத்திற் குரியவை. படகுகள் அல்லது கட்டுமரம் போன்று அவை உயிர்களை அடுத்த கரைக்கு கொண்டு செல்கின்றன. அதனால் அவை பயணப் படகுகள் என்று அழைக்கப்படுகின்றன.

ஆனால் சாங்கிய முனி ஒரு போதிசத்வராக இருந்த போது மூன்று கிண்ணங்கள் பால் மற்றும் ஆறு அகப்பை கஞ்சியை அவர் மெய்ஞ்ஞானம் அடைவதற்கு முன்பு பருகினார். புத்த நிலையினால் விளைகின்ற பழத்தை சுவைப்பதற்கு முன்பு அவர் பாலைக் குடித்தால், மனதை வேறுமனே கவனித்தல் என்பது எப்படி முக்தியைக் கொடுக்க முடியும்?

நீங்கள் கூறுவது உண்மைதான். இப்படித்தான் அவர் மெய்ஞ்ஞானம் அடைந்தார். ஒரு புத்தர் ஆகுவதற்கு முன்பு அவர் பால் குடிக்க வேண்டியதாயிற்று. ஆனால் இரண்டு வகையான பால் உள்ளது. சாங்கிய முனி குடித்தது சாதாரண அசுத்தமான பால் அல்ல ஆனால் அது சுத்தமான தர்மத்தின் பால். மூன்று கிண்ணங்கள் என்பது மூன்று வகை நன்னெறிகள். ஆறு அகப்பைகள் என்பது ஆறு பரபிதாக்கள். சாங்கிய முனி மெய்ஞ்ஞானம் அடைந்தபோது, அவர் இந்த சுத்தமான தர்மத்தின் பாலைக் குடித்ததனால் தான் அவர் புத்த நிலையின் பழத்தை சுவைக்க முடிந்தது. ததாகதர் இந்த அசுத்தமாக, நாற்றமடிக்கின்ற பசுவின் பாலைக் குடித்தார் என்று சாக்குப் போக்கை கண்டுபிடிப்பது பழி தூற்றுவதன் உச்சமாக இருக்கிறது. அது

உண்மையாக இருக்கும் பட்சத்தில், அழிக்க முடியாத மோகங்கள் அற்ற, தர்மாபாலின் ஆன்மாவானது, இந்த உயிரில் இருந்து எப்போதும் விடுதலை பெற்று இருக்கிறது. அப்படி இருக்கும் போது அவர் தனது பசியை அல்லது தாகத்தை தணிப்பதற்கு அசுத்தமான பாலின் அவசியம் ஏன்?

'இந்த எருதுகள் உயர் பூமியில் வசிப்பவை அல்ல. இது தானியங்களையோ அல்லது பசுந்தீவனத்தையோ சாப்பிடுவதில்லை. இவை பசுக்களோடு மேய்ச்சலுக்கு செல்வதும் கிடையாது. இந்த எருதுகளின் உடலானது பளபளப்பான தங்கத்தின் நிறத்தில் இருக்கிறது.'' வைரோகானா (VAIROCANA) வைக் குறிக்கிறது. எல்லா உயிர்கள் மீதுள்ள கருணையினால் அது தனது தூய தர்ம உடலில் இருந்து, விடுதலையைத் தேடுபவர்களுக்காக, மூன்று வகை நன்னெறி களையும், ஆறு பரமிதாக்களையும் பேணி வளர்ப்பதற்காக, மிக உயர்ந்த நிலையான தர்மாபாலை உற்பத்தி செய்கிறது. இப்படிப்பட்ட ஒரு உண்மையான, தூய எருதுவால் சுத்தமான பாலானது. ததாகதர் புத்தநிலையை அடைவதற்கு மட்டும் உதவவில்லை, இதைக் குடிக்கின்ற 'எந்த ஒரு உயிரும், முழுமையான, மிஞ்சமுடியாத மெய்ஞ்ஞானத்தை அடைய உதவுகிறது.

போதி தருமருக்காக நான் மிகவும் வருத்தப்படுகிறேன். அவர் சிக்கலில் மாட்டிக்கொண்டார்.மேலும் இந்த சிக்கல் நிச்சயமாக வரும் ஏனெனில் அவர் புத்த பாரம்பரியத்தை மட்டும் சார்ந்தவர் அல்ல, ஆனால் மகாயானம் (மிகப்பெரியவாகனம்) என்று அழைக்கப்படுகின்ற புத்தமத்தின் ஒரு பிரிவைச் சார்ந்தவர். போதி தருமரைப் போல எந்த ஒரு பாரம்பரியத்தையும், எந்த ஒரு பிரிவையும், எந்த ஒரு கோட்பாட்டையும் சார்ந்தவர்கள் யாராக இருந்தாலும் கண்டிப்பாக இதே சிக்கலில் மாட்டிக்கொள்வார்கள். பாரம்பரியத்திற்கு எதிராக எதுவும் அவரால் சொல்லமுடியாது என்கின்ற ஒரே காரணத்திற்காக அவர் கூறுவதெல்லாம் மேலும் மேலும் முட்டாள் தனமானதாகவும், அர்த்தமற்றதாகவும் ஆகிக்கொண்டு இருக்கிறது.

புத்தமதமானது அதிக திடத்துடன் நிலை பெற்று இருக்க வேண்டும் என்பதற்காக இந்தியாவில் இருந்து சிறப்பாக அவர்

அனுப்பி வைக்கப்பட்டார். அது அவரது சொந்த குருவான, மெய்ஞ்ஞானம் பெற்ற பிரக்யதாரா என்ற பெண்மணியின் கட்டளையாகும் அந்த பெண்மணி அவரிடம், 'நான் சீனாவிற்கு அங்குள்ள மக்களை தொந்தரவு செய்வதற்காக அனுப்பவில்லை. ஆனால் மிகப் பெரிய சீன தேசத்தில் மகாயானா என்பதை நிறுவுவதற்காக அனுப்புகிறேன். ஏனெனில் அந்த ஒட்டு மொத்த நாடும் புத்தமதத்திற்கு மதமாற்றம் செய்யப்பட்டால், அந்த இனத்தின் ஐந்தில் ஒரு பகுதியானது புத்த மதத்திற்கு மதமாற்றம் செய்யப்பட்டதாக ஆகிவிடும். இந்த உலகில் ஐந்தில் ஒருவர் சீனராக இருக்கிறார்.

இது, ஐந்தில் நான்கு பேர் வெவ்வேறு நாட்டையும், வெவ்வேறு இனத்தையும், வெவ்வேறு மதத்தையும் சார்ந்தவராக உள்ளனர். ஆனால் ஒருவர் மட்டும் சீனராக இருக்கிறார் என்கிற செய்தியை செய்தித்தாளில் படித்த ஒரு மனிதரின் ஞாபகம் எனக்கு வருகிறது. சமையலறையில் இருந்த அவரது மனைவியை அவர் அழைத்து அவளிடம், 'இந்த ஊரில் ஐந்தில் ஒருவர் சீனராக இருக்கிறார் என்பதை நீ அறிவாயா?'' என்று கேட்டார்.

அதைக் கேட்ட அவரது மனைவி, 'அட கடவுளே! நீங்கள் இதைச் சொன்னது நல்லதாகப் போயிற்று. ஏனெனில் நாம் நான்கு குழந்தைகளை பெற்றிருக்கிறோம். எனவே இது தான் குடும்பக் கட்டுப்பாடு செய்வதற்கான நேரம், இல்லை எனில் ஐந்தாவது சீனக்குழந்தையாக, பிறக்கும்'' என்று கூறினாள்.

இப்போது வரையில் சீனாவானது மிகப்பெரிய பூமியாக இருந்து வருகிறது. ஆனால் இந்த நூற்றாண்டின் இறுதியில், இந்தியா மேலே சென்று விடும். சீனாவை விடவும் அதிக ஜனத்தொகை கொண்டதாக ஆகிவிடும். மற்றபடி, ஒட்டுமொத்த வரலாற்றில், சீனா தான் உலகிலேயே அதிக மக்கள் தொகை கொண்ட நாடாக இருக்கிறது.

புத்தமதமானது காட்டுத்தீ போல பரவி வந்ததால், அதற்கு தியான அஸ்திவாரத்தை கொடுக்க வேண்டிய காலம் வந்து விட்டது. போதி தருமர் ஒரு தூதுவராக தனிப்பட்ட முறையில் அனுப்பிவைக்கப்பட்டார். ஏனெனில் போதி தருமருக்கு முன்பு

அறுநூறு ஆண்டுகளாக, சக்கரவர்த்திகளின் அழைப்பின் பேரில் ஆயிரக்கணக்கான புத்த பண்டிதர்கள் புத்தமத புனித நூல்களாக சீன மொழிக்கு மொழிபெயர்ப்பதற்கு சென்றிருந் தாலும் கூட அவர்களில் ஒருவர் கூட மெய்ஞ்ஞானம் பெற்றவர் இல்லை.

ஆகவே, மெய்ஞ்ஞானம் என்றால் என்ன என்கிற அந்த சுவையை மக்களுக்கு கொடுப்பதற்காக போதிதருமர் அனுப்பப்பட்டார். மெய்ஞ்ஞானம் என்ற வார்தையை கேள்விப்பட்டிருக்கிறார்கள். அந்தக் கருத்தினால் மக்கள் மகிழ்ச்சி அடைந்துள்ளனர். எனவே மெய்ஞ்ஞானம் அடைய வேண்டும் என்கிற மிகப்பெரிய ஆசை பலலட்சம் மக்களிடையே எழுந்தது. ஆனால் அவர்கள் ஒரு மெய்ஞ்ஞானம் அடைந்த மனிதரைக் கூட பார்த்தது கிடையாது. அவரது பிரசன்னம், அவரது அமைதி, அவரது கருணை ஆகியவை அந்த மக்களுக்கு முற்றிலும் தெரியாது. அவர்கள் அதைப்பற்றி வெறுமனே உரைநடையாக வாசித்து மட்டுமே வந்தார்கள்.

போதிதருமரை அனுப்பியதன் மூலம் பிரக்யதாரா சீனாவிற்கு முதல் மெய்ஞ்ஞானியைக் கொடுக்க வேண்டும் என்ற குறிப்பிட்ட நோக்கத்தை தனது மனதில் வைத்திருந்தார். இதில் அவருக்கு உள்ள சித்தம் என்னவென்றால் அவரால் மகாயானாவிற்கு எதிராக எதுவும் கூற முடியாது. ஏனெனில் அது புத்தமதத்தில் புதிதாக சேருபவர்களை கலக்கத்தில் ஆழ்த்தி விடும். கௌதம புத்தருக்கு எதிராக அவரால் எதுவும் கூற முடியாது, ஏனெனில் அவர் கூறுவதை யாரும் கேட்க மாட்டார்கள்.

கௌதம புத்தரின் வாழ்க்கை, அவரது போதனைகள் ஆகியவற்றால் மக்கள் அந்த அளவுக்கு மனம் கவரப்பட்ட வர்களாக இருந்ததால், வெறும் அறு நூறு ஆண்டுகளில், அவர்கள் முப்பதாயிரம், 'கோயில்களையும், மடாலயங்களையும், உருவாக்கினார்கள். இருபது லட்சம் மக்கள் புத்த துறவிகளாக தீட்சை பெற்றனர் போலும். கிட்டத்தட்ட ஒட்டுமொத்த நாடும் புத்தமதத்திற்கு மாறியது. அவர்கள் அனைவரும் துறவிகளாக இல்லாமல் இருக்கலாம். ஆனால் அவர்கள் சாதாரண மனிதர்களாக இருந்தனர். தாங்களும் ஒரு நாள் துறவிகளாக மாறுவோம் என்கிற நம்பிக்கையோடு அவர்கள் தங்களின்

பயணத்தைத் தொடங்கினார்கள். சீன மக்கள் தொகையில் ஐந்து சதவிகிதம் பேர் துறவிகளாக ஆகிவிட்டனர்.

அது மாற்றம், எழுச்சி, உருமாற்றம் ஆகியவற்றின் அபரிமிதமான காலமாக இருந்தது. மேலும் போதிதருமர் அவரது தோள்களின் மீதுள்ள பொறுப்பினை உணர்ந்து கொள்ளவில்லை என்று நான் நினைக்கிறேன்.

மேம்போக்கான கேள்விகளைப் பொறுத்தமட்டில், அவர் முற்றிலும் சரியாக பதில் அளித்தார். தனது சொந்த அனுபவத்தோடு ஒத்திசைந்து பதிலளித்தார். ஆனால் இறுதியான கேள்விகள் எழுந்த போது முதல் இறுதியான கேள்வியின் போதே அவர், 'எனக்கு தெரியாது'' என்று பதிலளித்திருந்தால் இந்த பிரச்சினை வந்திருக்காது, அவரிடம்'' எங்கிருந்து இந்த அறியாமை என்பது வந்தது?'' என்று கேட்கப்பட்டபோது, அவர் தன்து கள்ளம் கபடமற்ற நிலையை ஏற்றுக் கொண்டிருந்தால், 'விழிப்புணர்வு எப்படி உருவாக்கப்படுகிறது என்று எனக்கு தெரியும், ஆனால் இந்த அறியாமை என்பது எங்கிருந்து வருகிறது என்று எனக்கு தெரியாது. ஒருவேளை இந்த அறியாமை என்பது காலா காலத்திற்கும் இங்கு இருக்கின்ற ஒன்றாக இருக்கலாம்,'' என்று அறிவித்து இருந்தால், இந்த சிக்கல் வந்திருக்காது.

அறியாமை ஒருபோதும் வருவதில்லை, அது வெறுமனே இருட்டு போன்றது. இருள் என்பது வருவதையும் போவதையும் நீங்கள் எப்போதாவது பார்த்திருக்கிறீர்களா? வெளிச்சம் உள்ளே வரும்போது இருள் அங்கு இல்லாமல் போய்விடுவதை மட்டுமே நீங்கள் எப்போதும் பார்த்திருக்கிறீர்கள்.

அந்த மக்களுக்கு இதுதான் நிறைவான பதிலாக இருந்திருக்க முடியும். இருள் என்பது எப்போதும் அங்கு இருக்கிறது. அதற்கு மூலம் உண்டு. அதே விதத்தில் விழிப்புணர்விற்கு மூலம் உண்டு, தன்னுணர்விற்கு ஆரம்ப இடம் உண்டு, ஆனால் விழிப்புணர்வு இல்லாத நிலை என்பது வெறுமனே இருள் போன்றது என்பதைத் தவிர வேறொன்றும் அல்ல.

எனவே, அங்கேயே போதிதருமர் அதை நிறுத்தி இருந்தால், இப்படிப்பட்ட முட்டாள்தனங்களில் எல்லாம் விழாமல் அவர் தன்னைப் பாதுகாத்து கொள்கின்ற அபரிமிதமான காரியத்தை

செய்திருக்கலாம். அவரால், 'எனக்குத் தெரியாது'', என்று கூறுவதற்கு முடியவில்லை, மக்கள் மூன்று வருடங்களாக அவரை எதிர்பார்த்துக் கொண்டு இருந்தார். போதிதருமர் என்னும் முதல் மெய்ஞ்ஞானி ஒருவர் சீனாவிற்குள் நுழைவதை மிகுந்த ஆவலுடனும், ஏக்கத்துடனும். ஆ சக்கரவர்த்தியையும் சேர்த்து அந்த ஒட்டு மொத்த நாடும் காத்துக் கொண்டு இருந்தது. அவர்களின் தாகம் எல்லாம் தணிந்து விடும், அவர்களின் கேள்விகளுக்கு எல்லாம் பதில் கிடைத்துவிடும் என்று ஆவலுடன் இருந்தார். மேலும் பதில்கள் அவரது சொந்த அனுபவத்தில் இருந்து வரும் என்று நினைத்தார்கள்.

எனவே 'எனக்கு தெரியாது, நான் முற்றிலும் கள்ளம் கபடமற்றவன். அதிகபட்சமாக, இருள் என்பது எப்போதும் இருப்பது, அறியாமை என்பது எப்போதும் இருந்துள்ளது என்று மட்டும் கூறுவதற்கு அதற்கு வேர்கள் கிடையாது. அது வேர்களற்றது, காரணங்கள் இல்லாதது. ஏனெனில் அது இல்லாத ஒன்றாகும்'' என்று கூறுவதற்கு அவர் தயங்கினார். ஆனால் அது தான் அவரது பதிலாக இருந்திருக்க வேண்டும்.

அவர் அந்த மக்களிடம், ' அந்த அறியாமையில் இருந்து வெளியே வருவது எப்படி என்பதை கற்றுக் கொடுப்பதற் காகத்தான் நான் இங்கு வந்திருக்கிறேன். நீங்கள் எப்படி இந்த அறியாமைக்குள் நுழைந்தீர்கள் என்று எனக்கு தெரியாது. அது உங்களது வேலை,'' என்று கூறி இருக்க வேண்டும்.

ஆனால் அதைச் செய்வதற்கு மாறாக, அவர் நீண்ட சமய இயல் விளக்கங்களுக்குச் சென்று விட்டார். அது தான் சீடர்கள் மேலும் மேலும் கேள்விகள் கேட்க அனுமதித்துவிட்டது. போதிதருமரால் அந்த கேள்விகளுக்கு பதில் அளிக்க முடியும் ஆனால் அந்த பதில்கள் மகாயானத்திற்கு எதிராக அல்லது கௌதம புத்தருக்கு எதிராக போய்விடும்.

ஆகவே அவர் மிகவும் கடினமான தர்மசங்கடத்தில் மாட்டிக் கொண்டார். எது சரியானது என்பதும் அவருக்குத் தெரியும், மேலும் பாரம்பரியமாக எது சரி என்பதும் கூட அவருக்கு தெரியும், ஆனால் நான் எப்போதும் நினைத்துக் கொண்டு

இருந்ததைப் போல போதிதருமர் அந்த அளவுக்கு பலமானவராக இல்லை. தான் ஒரு உண்மையான எழுச்சியாளர் என்பதை அவரால் நிரூபிக்க முடியவில்லை. அவரால் பாரம்பரியத்துக்கு எதிராக போக முடியவில்லை. அவர் எப்படி குழப்பமடைந்தார் மற்றும் அவர் எப்படி முட்டாள்தனமாக பேசினார் என்பதை நான் உங்களுக்கு காட்டுகிறேன். அவர் இப்படித்தான் செய்தாக வேண்டும். பாரம்பரிய மக்களை வெறுமனே ஆறுதல்படுத்தவும், பழைமையான மத இயல்போடு ஒத்துப் போகவும் அவர் இப்படித்தான் செய்தாக வேண்டும்.

இந்த கேள்வியும் கூட அதே வகையைச் சார்ந்ததாக உள்ளது. மேலும் அவர் இப்படிப்பட்ட முட்டாள்தனமான பதில்களில் விழுந்து விடுவதால், அது கிட்டதட்ட சிரிப்புக்குரியதாக ஆகிவிடுகிறது. எப்போதாவது அவர் உண்மையைக் கூறுகிறார். பெரும்பான்மை நேரங்களில் அவர் பேசுவது சம்பந்தம் இல்லாததாக இருக்கிறது அவரது பதில்களோடு நான் முற்றிலும் ஒத்துப் போகவில்லை. இனி சூத்திரம் :

*நீங்கள் பேணிவளர்க்கின்ற பயிற்சியானது உங்களது மனதில் இருந்து தனியாக இல்லை என்பதை கண்டிப்பாக நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும்.*

இது உண்மைதான். நீங்கள் என்ன பயிற்சி செய்தாலும், அதை நீங்கள் உங்களது மனதின் மூலமாகத்தான் பயிற்சி செய்ய வேண்டும். ஆனால் மெய்ஞ்ஞானம் என்பது பயிற்சியின் மூலம் அடைய முடியாதது. ஏனெனில் மெய்ஞ்ஞானமானது பயிற்சியின் மூலம் அடையக் கூடியது என்றால், கனவுகளைப் போல, கற்பனைகளைப் போல, மாயையைப் போல, எண்ணத்தைப் போல, அதுவும் மனதின் ஒரு உப பொருள் என்று தான் அர்த்த மாகிறது. எனவே உங்களது எண்ணங்கள் மறைந்து விடுவது போல, உங்களது மெய்ஞ்ஞானமும் எந்த நொடியிலும் மறைந்து போகலாம்.

என்னிடம், குணாகர் என்கிற ஒரு ஜெர்மன் சந்நியாசி உண்டு. அவர் அநேக தடவை மெய்ஞ்ஞானம் அடைந்தார். இப்போது அவர் அதை முற்றிலும் நிறுத்திவிட்டார். அந்த ஒட்டு

மொத்த எண்ணத்தையும் கைவிட்டு விட்டார். முதல் முறை அவர் மெய்ஞ்ஞானம் அடைந்த உடன், அவர் தான் மெய்ஞ்ஞானம் அடைந்ததை ஐக்கிய நாடுகளின் ஜனாதிபதிகளுக்கும், பிரதமர்களுக்கும், எல்லாத் தூதர்களுக்கும் அறிவித்தார். அவர் அவர்களுக்கு ஒரு கடிதமும் எழுதினார். அவர் எனக்கும் கூட தகவல் கொடுத்தார். அவர் இங்கிருந்து ஒன்று அல்லது இரண்டு வாரங்களுக்கு முன்பு தான் சென்றார். எனவே இவ்வளவு விரைவில் மெய்ஞ்ஞானம் அடைவதற்கான அறிகுறிகளை நான் அவரிடம் கண்டதில்லை. எனவே நான் அவரிடம், ''குணாகர், முதலில் இங்கு நான் உன்னைப் பார்க்க வேண்டும்'' என்று கூறினேன்.

எனவே அவரும் வந்தார், அவர் திரும்பி வந்தபோது அவர் பூனாவிற்கு நெருக்கமாக வரவர அவரது மெய்ஞ்ஞானம் மெதுவாக மெதுவாக மறைந்துவிட்டது. 'எனக்கு எதுவும் தெரியாது'' இது முட்டாள்தனமானது என்று அவர் அறிந்து கொண்டார். ஆனால் ஜெர்மன் நாட்டில் இது முற்றிலும் நல்லது, ஏனெனில் அங்கு மெய்ஞ்ஞானம் என்றால் என்ன என்று யாருக்கும் தெரியாது. 'நான் மெய்ஞ்ஞானமும் அடைந்து விட்டேன்'' என்று அறிவித்த போது, அவர் அடைந்திருக்கலாம் என்று மக்கள் நினைத்தனர். ஒருவேளை மெய்ஞ்ஞானம் என்றால் என்ன என்று யாரும் இதுவரை கேள்விப்படாமலும் கூட இருந்திருக்கலாம். எனவே அந்த நாட்டில் யாரும் அவரோடு முரண்பட வில்லை. ஆனால் அவர் பயந்து விட்டார், மேலும் என் முன்னால் அவர் வந்த போது, அவர் என்னிடம்,' என்னை மன்னித்து விடுங்கள், நான் மீண்டும் முற்றிலும் மெய்ஞ்ஞானம் அற்றவனாக ஆகிவிட்டேன்,'' என்றார்.

நான் அவரிடம், 'இந்த ஆசை உனக்கு வரும் போது, நீ காரியத்தில் இறங்கி எல்லா உலக அரசுகளுக்கும், பிரதமர்களுக்கும், தூதர்களுக்கும், நீ மெய்ஞ்ஞானம் அடைந்து விட்டதால், அவர்களுக்கு ஏதாவது அறிவுரை தேவைப்படுகிறதா என்பதை நினைவு கொள்'' என்று அறிவுரை கூறினார்.

இரண்டு வருடங்கள் அவர் அமைதியாக இருந்தார், ஆனால் ஒரு நாள் அவரிடம் இருந்து திரும்பவும் எனக்கு ஒரு

கடிதம் வந்தது. அதில் அவர், 'ஓஷோ, இந்த முறை அது உண்மையில் நடந்து விட்டது நான் அங்கு வருகிறேன்.'' என்று எழுதி இருந்தார்.

''சரி வா'' என்று நானும் கூறினேன்.

ஆனால் அவர் என்னிடம் வந்ததும், 'என்னை மன்னித்து விடுங்கள். இது மிகவும் ஆச்சரியமாக உள்ளது. நான் இங்கு வந்தவுடன் மெய்ஞ்ஞானம் அற்றவராக ஆகிவிடுகிறேன். ஆனால் நான் ஜெர்மனி திரும்பிச் சென்றவுடன் எனக்கு ஆசை எழுகிறது, நான் மெய்ஞ்ஞானம் அடையவில்லை என்று கூறுவதற்கு அங்கு எனக்கு யாரும் கிடையாது. ஏன் காத்திருக்க வேண்டும்? அறிவித்து விடுவோம்! இந்த ஆசையானது மிகவும் தொடர்ந்து நீடிப்பதாக இருக்கிறது'', என்று கூறினார்.

இப்படி அநேக முறை நடந்தது, கடந்த முறை வந்த போது அவர் இந்த கம்யூனில் சேர்ந்து விட்டதாகவும், இங்கு அவர் உணவகத்தில் சாப்பாடு தட்டுகளை கழுவிக் கொண்டு இருப்பதாகவும் நான் கேள்விப்பட்டேன். என்னை விரைவில் காண வருகின்ற ஒருவர் அவரிடம் சென்று, 'குணாகர், நீ என்ன செய்து கொண்டு இருக்கிறாய்?'' என்று கேட்டார். அது கம்யூனில் உள்ளவர்கள் உணவருந்தும் உணவகமாகும்.

அதற்கு அவர், 'மெய்ஞ்ஞானத்தை பற்றி மறந்து விடு, என்னை இந்த தட்டுக்களை கழுவுவதற்கு விட்டு விடு, மேலும் நீ ஓஷோவை பார்க்க சென்றால் அவரிடம் நான் மெய்ஞ்ஞானம் அடையப் போவதில்லை அதிலும் ஜெர்மனியில் என்று வெறுமனே அவரிடம் கூறிவிடு. நான் மெய்ஞானம் அடைவ தென்றால், நான் அவருக்கு அருகில் இருக்கும் போது தான் அடைவேன். இப்போது இந்த தட்டுக்களை கழுவுவதில் அளவுகடந்த மகிழ்ச்சி அடைவதைப் பார்க்கும் போது மெய்ஞ்ஞானம் அடைவது என்பது எப்படிப்பட்ட ஒரு துன்புறுத்தல் என்பதை நான் உணர்கிறேன்.'' என்று கூறினார். அதை துன்புறுத்துதல் என்று கூறுவதற்கு காரணம் என்ன வென்றால் அவர் என்னைப் போல வெறுமனே பாசாங்கு செய்ய ஆரம்பித்தார்.

அவர் ஜெர்மனி சென்று மலை மீதுள்ள தனது அழகான மாளிகையினுள் இருக்கும்போது, அவர் தனது அறையை விட்டு வெளியே வருவதில்லை. அவர் யாரையும் சந்திப்பதில்லை. யாராவது வந்து அவரைத் தொந்தரவு செய்வதால் அவர் ஒரு செயலாளரை வைத்துக் கொண்டார். அவரால் வெளியில் வரமுடியவில்லை. அப்படி வந்தால் அவரது மெய்ஞ்ஞானத்தை அவர் இழந்து விடுவார். அவர் மக்களை சந்திக்க முடியாது, அவரது செயலாளரை மட்டுமே சந்திக்க முடியும், மேலும் அந்த செயலாளர் அவரைப் பார்க்க வருபவர்களிடம், 'அவர் சமாதி நிலையில் இருக்கிறார். அவர் யாரையும் பார்க்க மாட்டார். அவரைத் தொந்தரவு செய்யாதீர்கள்''என்று கூறிவிடுவார்.

'நான் ஏற்கனவே இந்த மெய்ஞ்ஞானத்தினால் போதுமான அளவு கஷ்டப்பட்டு விட்டேன். இப்போது இந்த கம்யூனில் சாப்பாட்டு தட்டுகளை கழுவுகின்ற ஒருவராக நான் வாழ்க்கையை சந்தோஷமாக அனுபவிக்கிறேன். இப்போது குறைந்த பட்சம் என்னால் வெளியிலாவது செல்ல முடிகிறது. நான் திரைப்படம் பார்க்க போக முடிகிறது. நான் டிஸ்கோ நடனத்திற்கு போக முடிகிறது. எனவே அந்த மெய்ஞ்ஞானம் மிகவும் கடினமான ஒரு விஷயமாக, இருக்கிறது. ஒரு அறையில் பூட்டிக் கொண்டு அமர்ந்திருப்பது மிகவும் கஷ்டம்'' என்று கூறினார்.

எனவே மெய்ஞ்ஞானம் என்பது மனதில் இருந்தும் கூட வரமுடியாது. மனம் மறைத்துவிடும் போது மட்டுமே மெய்ஞ்ஞானம் வரமுடியும். உண்மையில் மெய்ஞ்ஞானம் என்பது ஒளி. மனம் தான் அறியாமை என்பதாகும். மெய்ஞ் ஞானம் என்பது தான் ஞானம், மனம் என்பது இருள்.

*உங்களது மனம் தூய்மையாக இருந்தால், எல்லா புத்த நிலங்களும் தூய்மையாக இருக்கின்றன.*

நான் இதை திருத்துவதற்கு விரும்புகிறேன். உங்களது மனம் அற்ற நிலை என்று நான் கூற விரும்புகிறேன். அதற்கு, தூய்மைக்கு அப்பால் மற்றும் தூய்மையற்றதற்கும் அப்பால் என்றும் அர்த்தமாகும். எனவே உங்களது மனம் அற்ற நிலை தான் புத்த பூமியாக இருக்கிறது. தூய்மையான மனம் புத்த

பூமியாக இல்லை. தூய்மையான மனமும் கூட இன்னமும் மனம் என்பதாகவே இருக்கிறது. தூய்மை, தூய்மை இல்லாமை என்பது ஒரு இரட்டை நிலையாகவே இருக்கிறது. ஆனால் புத்த பூமியானது இந்த இரட்டை நிலைக்கு அப்பாற்ப்பட்டதாக இருக்க வேண்டும். அது இரட்டை நிலையின் ஒரு பகுதியாக இருக்க முடியாது. அது இரண்டிற்கும் அப்பால் இருந்தாக வேண்டும்.

'மனங்கள் அசுத்தமாக இருந்தால், உயிர்களும் அசுத்தமாக இருக்கின்றன. மனங்கள் சுத்தமாக இருந்தால் உயிர்களும் சுத்தமாக இருக்கின்றன'' என்று சூத்திரங்கள் கூறுகின்றன.

இதுவரை முற்றிலும் சரியாக உள்ளது.

ஒரு புத்தரின் பூமியை அடைவதற்கு உங்களது மனதை தூய்மையாக்குங்கள்.

இது தவறானது, ஏனெனில் அதன் பின்னர், நல்ல மக்களுக்கும், ஒரு புத்தருக்கும் இடையே உள்ள வேறுபாடு என்ன? தூய மனம் புத்தபூமியாக இருக்கிறது. தூய்மையாக இருக்கின்ற மனிதர்கள் தூய்மையான உயிர்கள். எனவே ஒரு நல்ல மனிதனுக்கும் ஒரு புத்தருக்கும் இடையே உள்ள வேறுபாடு என்ன? அங்கு வேறுபாடு இல்லாதது போன்று தெரிகிறது. ஆனால் உண்மையில் மிகப் பெரிய வேறுபாடு இருக்கின்றது.

எனவே, ஒரு புத்த பூமியை அடைவதற்கு மனதிற்கு அப்பால் செல்லுங்கள், சுத்தம் அசுத்தம் ஆகிய இரண்டிற்கும் அப்பால் செல்லுங்கள். உங்களது மனம் அற்ற நிலை, புத்த பூமியாக ஆகிவிடும் போது, புத்தர் உங்களுக்கு கிடைக்கக் கூடியவர் ஆகிறார். இவை தான் எனது திருத்தங்கள்.

இப்படியாக மனதின் மூன்று விஷமுள்ள நிலைகளைக் கடந்து வருவதன் மூலம், மூன்று வகை நன்னெறிகளும் தாமாகவே நிறைவேற்றப்படுகின்றன.

ஆனால், தாராள மனப்பான்மை, நல் ஒழுக்கம், பொறுமை, பக்தி, தியானம் மற்றும் ஞானம் ஆகியவை ஆறு பரமிதாக்களாக இருக்கின்றன என்று சூத்திரங்கள் கூறுகின்றன. பரமிதாக்கள்

என்பது புலன்களைத் தூய்மைப் படுத்துவதைக் குறிக்கிறது, என்று இப்போது நீங்கள் கூறுகின்றீர்கள். இதன் மூலம் நீங்கள் என்ன அர்த்தம் கொள்கின்றீர்கள்? இவை ஏன் பயணப் படகுகள் என்று அழைக்கப்படுகின்றன?

இந்தக் கேள்வி எளிமையானது. சிறப்பு வாய்ந்தது. இந்த ஆறு பரமிதாக்கள் என்ன? என்று சீடர் கேட்கிறார். பரமிதா என்கிற வார்த்தைக்கு உங்களை அடுத்த கரைக்கு கொண்டு சேர்க்கின்ற ஒரு சிறிய பயணப்படகு என்று அர்த்தமாகும்.

தாராள மனப்பான்மை, நல்ஒழுக்கம், பொறுமை, பக்தி, தியானம், ஞானம் ஆகிய இவை ஆறும் பயணப்படகுகள். இவை உங்களை இந்த கரையில் இருந்து அடுத்த கரைக்கு, உங்களது உண்மையான வீட்டிற்கு அழைத்துச் செல்ல முடியும்.

இது ஒரு எளிய கேள்வி. போதிதருமர் வெறுமனே தாராள மனப்பான்மை என்பது என்ன, நல்ஒழுக்கம் என்பது என்ன, பொறுமை என்பது என்ன, பக்தி என்பது என்ன, தியானம் என்பது என்ன, ஞானம் என்பது என்ன என்று விவரித்தால் போதுமானது. ஆனால் இந்த அழகான வார்த்தைகளுக்கு ஒரு எளிய விளக்கத்தை கொடுப்பதற்கு மாறாக, அவர் ஒரு விநோதமான பதிலுக்குள் செல்கிறார்.

*பரமிதாக்களை பேணி வளர்க்கும் போது, ஆறு புலன்களைத் தூய்மைபபடுத்துதல் என்பதற்கு ஆறு திருடர்களை கடந்து வருதல் என்று அர்த்தமாகும். காண்கின்ற இந்த உலகை கைவிடுவதால் கண் என்னும் திருடனின் உறவை முறித்துக் கொள்வது தாராள மனப்பான்மையாக இருக்கிறது.*

இப்போது, இதை விட அதிக அர்த்தமற்ற ஒன்றினை ஒருவர் நினைத்துப் பார்க்க முடியாது. இதை மீண்டும் கவனியுங்கள்.

*காண்கின்ற இந்த உலகை கைவிடுவதனால் கண் என்னும் திருடனின் உறவை முறித்துக் கொள்வது தாராள மனப் பான்மையாக இருக்கிறது.* கண்களுக்கு கிடைக்கின்ற இந்த உலகை துறந்து, கைவிட்டு விடுதல் என்றால் அதற்கு ஒரே வழி குருடாக இருப்பது மட்டுமேயாகும்! மற்றபடி நீங்கள் அதை எப்படி கைவிடமுடியும்? நீங்கள் மலைக்குப் போகலாம் ஆனால் அங்கும் கூட காண்கின்ற உலகம் இருக்கத்தான் செய்யும். நீங்கள்

இருண்ட குகைக்குள் போய் இருக்கலாம் ஆனால் இருட்டும் கூட காணக்கூடியது தான். நீங்கள் அதைப் பார்க்கிறீர்கள். உண்மையில் குருடாய் இருப்பது கூட, நீங்கள் குருடராக பிறக்கவில்லை என்றால் உங்களுக்கு உதவ முடியாது. ஏனெனில் குருடாகப் பிறந்த ஒரு மனிதன் கனவுகள் கூட காணமுடியாது. எதைப் பற்றியும் அவனுக்கு எந்த ஒரு எண்ணமும் இருக்காது.

நீங்கள் இதைப்பற்றி ஒருபோதும் சிந்தித்திருக்க மாட்டீர்கள். ஒரு குருட்டு மனிதன் தனது கனவில் ஒரு ரயில்வண்டியை காணமுடியும் என்றோ அல்லது தனது கனவில் நட்சத்திரங்கள் நிறைந்த இரவையோ அல்லது ஒரு அழகான பெண்ணையோ அல்லது ஒரு ரோஜா மலரையோ தனது கனவில் காண முடியும் என்றோ நீங்கள் நினைக்கிறீர்களா? நடக்காது, ஏனெனில் அவன் இந்த விஷயங்களை ஒருபோதும் கண்டதில்லை. கனவுகள் வெறும் பிரதிபலிப்புகள் மட்டுமே. நீங்கள் உண்மையான வாழ்க்கையில் என்ன பார்த்தீர்களோ அதைத்தான் கனவுகள் பிரதிபலிக்க முடியும்.

குருடன் ஒருவன் இருளில் வாழ்கிறான் என்று கிட்டத்தட்ட நினைப்பது தான் மிகவும் ஆச்சரியமான விஷயமாக உள்ளது. ஆனால் அது தவறானது, ஏனெனில் இருட்டு என்பதும் கூட ஒரு காணக்கூடிய விஷயம், நீங்கள் தான் அதை பார்க்கவேண்டும். குருடனுக்கு கண்கள் கிடையாது. அவனால் இருட்டையே பார்க்க முடியாது, வெளிச்சம் என்பது அவனுக்கு வெகு தொலைவில் உள்ளது. அவனால் இருட்டைப் பார்க்க முடியும் என்றால் அவன் வெளிச்சத்தை பார்ப்பதை உங்களால் தடுக்க முடியாது. பிறவி ஊமையால் எதையும் கேட்கமுடியாது என்பதைப் போல பிறவிக் குருடனால் எதையும் பார்க்க முடியாது.

ஆனால் நீங்கள் என்ன செய்ய முடியும்? உங்களுக்கு கண்கள் இருக்கின்றன. உங்களால், இந்த காட்சி உலகை எப்படி கைவிட முடியும்? இந்தியாவில் சூர்தாஸ் என்ற ஒரு கவிஞர் இருந்தார். இந்துக்கள் அவரை ஒரு துறவியாக வழிபட்டனர். அவர் பிச்சை எடுக்க சென்ற போது அவர் ஒரு அழகான பெண்மணியைப் பார்த்தார். அந்த வீட்டில் யார் இருக்கிறார் என்பது தெரியாமல் அவர் கதவைத் தட்டிய போது ஒரு அழகான பெண்மணி கதவைத் திறந்தார். அப்போது திடீர் என்று அவள்

மீது ஒரு ஆசை அவருக்கு எழுந்தது. அது இயற்கையானது தான், அது தவறு அல்ல, ஒரு அழகான மலரைப் பார்த்து நீங்கள் சந்தோஷப்படும் போது, ஒரு அழகான முகத்தை பார்த்து ஏன் சந்தோஷப் படக்கூடாது? ஆனால் மதங்கள் இப்படிப் பட்ட இன்பங்களுக்கு எதிரானவை. எல்லா மதங்களும் தங்களைத் தாங்களே துன்புறுத்திக் கொள்பவர்களால் நிறுவப்பட்டது போல தெரிகிறது. உங்களை நீங்களே துன்புறுத்திக் கொள்ளுங்கள்! நீங்கள் அதிகம் உங்களை துன்புறுத்தினால், நீங்கள் அதிகம் ஆன்மிகமானவர் ஆகிவிடுவீர்கள்.

சூர்தாஸ் மிகவும் குற்ற உணர்வு கொண்டார். ஆனால் அவர் எதுவுமே செய்யவில்லை, வெறுமனே அந்த முகம் மிகவும் அழகானதாக இருந்ததால் அவருக்குள் ஒரு மிகப்பெரிய பாராட்டுதல் எழுந்தது இயல்பானது தான். ஆனால் அது சமய நன்னெறிக்கு எதிரானது. அவர் தனது கண்கள் இரண்டையும் அழித்து விட்டு குருடராக ஆகிவிட்டார். இப்படி அவர் குருடராக ஆனதால், பல நூற்றாண்டுகளாக அவர் மிகப்பெரிய துறவியாக வழிப்படப்பட்டார். ஆனால் அவர் தனது கண்களை அழித்து விட்டதால், அவர் கனவு காண்பதை நிறுத்தி இருப்பார் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? இதற்கு நேர் எதிரான ஒன்று தான் நடந்திருக்கும். அதன் பின்னர் அந்த அழகான முகத்தை அவர் மேலும் மேலும் கனவில் கண்டிருப்பார். அழகாக அந்த முகம் அவரது கனவிலும் அழகானதாகவும், அலங்காரமானதாகவும், இருந்திருக்கும். ஆனால் இதுதான் தாராள மனப்பான்மையின் அர்த்தமா?

தாராள மனப்பான்மை என்பதற்கு எந்த விதமான நிபந்தனையும், இல்லாமல் பகிர்ந்து கொள்ளுதல் என்று அர்த்தமாகும். அதற்கும் கண்களுக்கும் எந்த விதமான சம்பந்தமும் இல்லை. அதற்கும், காண்கின்ற இந்த உலகினை கைவிட்டுவிடுவதற்கும் எந்த சம்பந்தமும் கிடையாது. உங்களிடம் ஏதோ இருக்கிறது என்று தான் அதற்கு அர்த்தமாகும். அதை பகிர்ந்து கொள்வதில் நீங்கள் கண்டிப்பாக சந்தோஷமடைய வேண்டும். அதில் கஞ்சனாக இருக்காதீர்கள். உங்களிடம் உள்ள எதையும் பிடித்து வைத்துக் கொள்ளாதீர்கள். ஏனெனில் இந்த

ஒட்டுமொத்த வாழ்க்கையும் ஒரு நாள் முடியப் போகிறது. நீங்கள் எதையும் உங்களோடு எடுத்துக்கொண்டு செல்லவும் முடியாது. ஆகவே நீங்கள் உயிரோடு இருக்கும் போதே எந்த அளவுக்கு அதிகமாக பகிர்ந்து கொள்ள முடியுமோ? அந்த அளவுக்கு ஏன் பகிர்ந்து கொள்ளக் கூடாது? எந்த நேரத்திலும் பொருள்கள் எடுக்கப்பட்டு விடலாம். எனவே நீங்கள் அவற்றை பகிர்ந்து கொள்ளுதல் நல்லது. பகிர்ந்து கொள்ளுதல் என்பது ஒரு மிகப் பெரிய மகிழ்ச்சியாகும். இந்த உலகில் பகிர்ந்து கொள்கின்ற கலையை கற்றுக் கொள்கிற மனிதனே மிகப் பெரிய பணக் காரனாக இருக்கின்றான். அவன் வெளியில் பார்ப்பதற்கு ஏழையாக இருக்கலாம், ஆனால் அவனது உள் உயிரானது பேரரசர்களும் கூட பொறாமைப்படும் அளவுக்குரிய செல்வச் செழிப்பின் தன்மையைக் கொண்டிருக்கும்.

நான் ஒரு சூ பி கதையை எப்போதும் நேசிப்பது உண்டு. ஏழை மரம் வெட்டி பிழைப்பவன் ஒருவன் காட்டில் உள்ள ஒரு குடிசையில் வாழ்ந்தான். அந்த வீடு மிகவும் சிறியதாக இருந்ததால் அதில் அவனும் அவனது மனைவியும் மட்டுமே படுத்து உறங்குவதற்கான இடம் இருந்தது.

ஒரு நாள், இருள் நிறைந்த நடு இரவில், மழை பெய்து கொண்டிருந்த போது யாரோ கதவைத் தட்டினார்கள். அவனது மனைவி கதவிற்கு அருகில் தூங்கிக் கொண்டு இருந்தாள். கணவன் தனது மனைவியிடம்; 'கதவைத் திற நன்றாக மழை பெய்கிறது, எனவே யாராவது வழி தவறி வந்திருக்க வேண்டும்'' இருள் நிறைந்த இரவு மேலும் முழுவதும் வனவிலங்குகள் இருப்பதால் ஆபத்தானது. எனவே உடனடியாக கதவைத்திற'' என்று கூறினான்.

அதற்கு அவள், ' ஆனால் இங்கு இடம் இல்லையே'' என்றாள். அந்த மனிதன் சிரித்துக் கொண்டே 'இது ஒரு அரசர்கள் அரண்மனை அல்ல, அங்கு எப்போதும் படுப்பதற்கு இடம் குறைவாக இருக்கும். இது ஒரு ஏழையின் குடிசை. இரண்டு பேர் நன்றாக படுத்து தூங்கலாம். மூன்று பேர் உட்கார்ந்து கொள்ளமுடியும். நாம் இடத்தை உண்டாக்கி கொள்வோம். கதவைத் திற,'' என்று கூறினான்.

கதவு திறக்கப்பட்டது. அந்த மனிதன் உள்ளே வந்தான், அவன் நன்றி கூறினான். அவர்கள் மூவரும் உட்கார்ந்து கொண்டு, பேசிக் கொண்டும், ஒருவருக்கொருவர் கதைகள் சொல்லிக் கொண்டும் இருந்தனர். அன்றைய இரவு எப்படியாவது கழித்தாக வேண்டும். ஏனெனில் அவர்களால் படுத்து உறங்க முடியாது. அங்கு இடம் இல்லை. ஆனால் அப்போது தான் மற்றொருவர் கதவைத் தட்டுவது கேட்டது.

புதிதாக வந்த நண்பர் இப்போது கதவின் அருகில் அமர்ந்திருந்தார். அந்த குடிசையின் சொந்தக்காரன், 'நண்பரே, கதவைத் திறங்கள், யாரோ ஒருவர் வழி தவறிவிட்டார்,'' என்றார். அதற்கு அந்த மனிதர்,'நீ ஒரு விநோதமான ஆள் போலத் தெரிகிறது. இங்கு இடம் இல்லையே'' என்று கூறினான். அதற்கு அவன் 'இப்படித்தான் எனது மனைவியும் கூட வாதம் செய்தாள். நான் அவளது வாதத்தை கேட்டிருந்தால், நீங்கள் இந்த காட்டில் வனவிலங்குகளால் இரையாக்கப்பட்டு இருப்பீர்கள். உங்களால் தான் நாங்கள் உட்கார்ந்து கொண்டு இருக்கிறோம் என்பதைக் கூட புரிந்து கொள்ளாத ஒரு விநோதமான மனிதராக நீங்கள் இருக்கிறீர்கள். பகல் முழுவதும் உழைத்து நாங்கள் களைப்புடன் இருக்கிறோம். நான் மரம் வெட்டுபவன். நாள் முழுதும் மரத்தை வெட்டி அதன் பின்னர் அதை சந்தையில் விற்று கிடைக்கிற பணத்தில் ஒரு நாளைக்கு ஒரு வேளை உணவு சாப்பிடுவதே கஷ்டமாக உள்ளது. கதவைத் திறங்கள். இது உங்களது குடிசை அல்ல. இதில் மூன்று பேர் சௌகரியமாக உட்கார்ந்து இருக்கும் போது, கொஞ்சம் நெருக்கி உட்கார்ந்தால் நான்கு பேர் உட்காரலாம், கொஞ்சம் அசௌகரியமாக இருக்கும். ஆனால் நம்மால் இடத்தை உருவாக்கமுடியும்'' என்று கூறினான்;.

எனவே இயல்பாக அவர் கதவைத் திறக்க வேண்டியதாயிற்று. இப்போது அவர்கள் மிகவும் நெருக்கமாக உட்கார்ந்து கொண்டனர். ஒரு அங்குல இடம் கூட காலியாக இல்லை. ஆனால் அப்போது திடீரென்று, விநோதமாக கதவை தட்டும் ஒலி கேட்டது. அது மனிதன் கதவைத் தட்டும் ஒலி போன்று இல்லை! மற்ற மூவரும் அமைதியாக இருந்தனர். எங்கே இவர் கதவைத் திறந்து விடுங்கள் என்று கூறி விடுவாரோ என்று அவனது மனைவியும், மற்ற இரண்டு விருந்தாளிகளும் பயந்தனர்.

ஆனால், அவன் 'கதவைத் திறங்கள் யார் தட்டுகிறார் என்று எனக்கு தெரியும். அது எனது கழுதை. இந்த பரந்த உலகில் அவன் மட்டுமே எனது நண்பன்! மரக்கட்டைகளை அந்த கழுதை மீது சுமந்து கொண்டு சென்று விற்கிறேன். அது வெளியே இருக்கின்றது. ஆனால் இப்போது மழை அதிகமாக பெய்கிறது. கதவை திறங்கள்'' என்று கூறினான்.

ஆனால் இப்போது நான்காவதாக ஒரு விருந்தாளியை உள்ளே அனுமதிக்க வேண்டும். இதற்கு ஒவ்வொருவரும் மறுத்தனர். எனவே அவர்கள், இது அதிகப் படியானது. அந்த கழுதை எங்கு நிற்கப் போகிறது?'' என்று கேட்டனர்.

உடனே அந்த மனிதன், 'நீங்கள் புரிந்து கொள்ளவில்லை. இது ஒரு ஏழையின் குடிசை. இதில் எப்போதும் இடம் இருக்கும். இப்போது நாம் உட்கார்ந்து கொண்டு இருக்கிறோம். அந்த கழுதை உள்ளே வரும் போது நாம் அனைவரும் நின்று கொண்டு, நடுவில் அந்த கழுதையை விட்டு விடுவோம். அப்போது அது கதகதப்பையும், சுகத்தையும், நேசத்தையும் உணரும்'' என்றான்.

உடனே அவர்கள், ' உனது குடிசையில் மாட்டிக் கொண்டு இருப்பதை விட இந்த காட்டில் காணாமல் போய்விடலாம்.'' என்றனர்.

ஆனால் அவர்களால் எதுவும் செய்ய முடியாது. சொந்தக்காரர் கதவைத் திற என்று கூறிவிட்டால் கதவைத் திறந்து விட வேண்டும். கதவு திறக்கப்பட்டது. கழுதை உள்ளே வந்தது. அதன் உடலில் இருந்து தண்ணீர் சொட்டு சொட்டாக விழுந்து கொண்டிருந்தது. அந்த மனிதர் கழுதையை உள்ளே கொண்டு வந்து நடுவில் நிற்கவைத்துவிட்டு மற்ற அனைவரையும் அதைச் சுற்றி நிற்கும் படி கூறினான். அவன் மற்றவர்களிடம், 'உங்களுக்கு புரியாது, எனது கழுதைக்கு தத்துவ மனம் உண்டு. நீங்கள் என்ன சொன்னாலும் அது கவலைப்படாது. அது எப்போதும் அமைதியாக கேட்டுக் கொள்ளும்'' என்று கூறினான்.

நான் இந்த கதையை நேசித்தேன். ஒரு பேரரசனின் அரண்மனை மிகப் பெரியதாக இருந்தாலும் கூட அங்கு இடப்

பற்றாக்குறை இருக்கும் என்று கூறுகின்ற இந்த கதை எனக்கு பிடிக்கும்.

இந்திய ஜனாதிபதியின் வீட்டில், கழிவறையோடு கூடிய நூறு அறைகள் உள்ளன. நூறு ஏக்கர் தோட்டம் உள்ளது. இந்த நூறு அறைகளை வைத்துக் கொண்டு அவர்கள் அங்கு என்ன செய்கிறார்கள்? ஒருவனுக்கு ஆச்சரியம் தான் வருகிறது.

ஒருமுறை நான் அங்கு சென்றிருந்தேன் ஏனெனில் ஜனாதிபதிகளில் ஒருவரான ஜாகீர் உசேன் என்னிடம் மிகவும் ஆர்வம் உள்ளவர். அவர் அலிகார் பல்கலைக்கழக துணை வேந்தராக இருந்தார், மேலும் அவர் துணை வேந்தராக இருந்த போது நான் அங்கு பேசி இருக்கிறேன். அவர்தான் தலைமை தாங்கினார். மேலும் நான் என்ன கூறினேனோ அதை மிகவும் விரும்பினார். அவர் ஜனாதிபதி ஆனவுடன், நான் டில்லியில் இருப்பதை அறிந்து கொண்ட அவர் ஜனாதிபதி மாளிகைக்கு வரும்படி என்னை அழைத்தார். அப்போது அவர் எனக்கு சுற்றிக் காண்பித்தார். அப்போது நான் அவரிடம், 'இந்த நூறு அறைகளும் என்ன நோக்கத்தை நிறைவேற்றுகின்றன?'' என்று கேட்டேன்.

அதற்கு அவர்' அவை பயன்படுத்தப்படாமல் இருக்கின்றன. உண்மையில் அதைப் பராமரிப்பதற்கு நூறு வேலைக்காரர்கள் தேவைப்படுகிறார்கள். நூறு ஏக்கர் பெரிய தோட்டத்தையும், நூறு அறைகளையும் பராமரிக்க நூறு வேலைக்காரர்கள் உள்ளனர். உனக்கு முன்னால் தெரிகின்ற இரண்டு பெரிய கட்டடங்களும் விருந்தினர் இல்லங்கள். ஒவ்வொரு விருந்தினர் இல்லத்திலும் குறைந்த பட்சம் இருபத்து ஐந்து அறைகள் இருக்கும். அதற்கு குறைவாக இருக்காது.

உடனே நான், இது அப்பட்டமாக, வீணாகிறது. நீங்கள் எத்தனை அறைகளில் தூங்குகிறீர்கள்?'' என்று கேட்டேன்.

அதற்கு அவர், 'எத்தனை அறைகளா? நான் எனது படுக்கையில் படுக்கிறேன். அநேக அறைகளை பரப்பிக் கொண்டு தூங்குவதற்கு நான் ஒரு முரடான உடல் கொண்ட பயங்கர மிருகம் அல்ல. தலை ஒரு அறையில், உடல் வேறு ஒரு அறையிலும், கால்கள் வேறு ஒரு அறையில் வைத்து

உறங்குவதற்கு நான் பயங்கரமான உருவம் கொண்ட மிருகம் அல்ல.'' என்று கூறினார்.

ஆனால், இது தான் உலகில் உள்ள சூழ்நிலை, பேரரசர்கள் பெரிய அரண்மனைகளை வைத்திருக்கின்றனர், என்றால் கூட அங்கு யாரும் தங்குவதற்கு இடமில்லை. இதோடு கூட அவர்கள் புதிய அரண்மனைகளையும், புதிய விருந்தினர் மாளிகைகளையும் கட்டிக் கொண்டு இருக்கின்றனர்.

ஆனால் இந்த கதையில் ஏழை மனிதனோ, 'இது ஒரு ஏழையின் குடிசை, இங்கு இடப்பற்றாக்குறை என்பது கிடையாது. நாம் சமாளித்துக் கொள்வோம்.'' என்று கூறுகிறான். அவர்கள் சமாளிக்கவும் செய்தார்கள். அவர்கள் நின்று கொண்டு இருக்க வேண்டியதாக இருந்தாலும் கூட அந்த இரவு அழகாகக் கழிந்தன.

எனவே, நீங்கள் என்ன வைத்திருக்கிறீர்களோ, அதை பகிர்ந்து கொள்ளுதல் அழகானது. உங்களிடம் ஒன்றுமே இல்லை என்றாலும் கூட உங்களின் ஒன்றுமில்லாமையிலும் கூட நீங்கள் பகிர்ந்து கொள்ளக் கூடிய ஏதோ ஒன்றினைக் கண்டு கொள்ள முடியும்.

தாராள மனப்பான்மை என்பது பகிர்ந்து கொள்ளுதல். போதிதருமர் என்ன கூறுகிறாரோ அது வெறும் முட்டாள் தனமானது.

*ஒலிகளைக் கேட்காமல் இருப்பதால், காது என்னும் திருடனின் உறவை முறித்துக் கொள்ளுதல் நல்ஒழுக்கம் ஆகிறது.*

இது போன்றதொரு விளக்கத்தை நீங்கள் எப்போதாவது கேட்டிருக்கிறீர்களா? ஒலிகளைத் கேட்காமல் இருத்தல், இசையைக் கேட்காமல் இருப்பது நல்ஒழுக்கமாம்! அப்படி யானால் ஒரு மனிதனைக் கொல்வது அல்லது ஒரு பெண்ணை கற்பழிப்பது தீய ஒழுக்கம் இல்லையா? இசையைக் கேட்பது தீய ஒழுக்கம் என்றால், அதிகாலைப் பொழுதில் மரங்களில் பறவைகள் எழுப்புகின்ற ஒலியைக் கேட்பது தீய ஒழுக்கமா? எனது உணர்வு என்னவென்றால், போதிதருமர் இறுதியான கேள்விக்கு ஒரு பொய்யைச் சொல்லி அவர் மாட்டிக் கொண்டு

விட்டதால், அவர் தனது பிடிமானத்தை இழந்து விட்டார். எனவே இப்போது அவர் முற்றிலும் அர்த்தமற்ற முட்டாள் தனமான விளக்கங்களை அளிப்பதற்கு முயற்சித்துக் கொண்டு இருக்கிறார்.

*எல்லா வாசனைகளையும் சமமாக பாவிப்பதன் மூலம், மூக்கு என்னும் திருடனை பணிவடையச் செய்தல் பொறுமை என்பதாக இருக்கிறது.*

இதில் அவர் உண்மையில் அசலாக இருக்கிறார். நான் நன்னெறி மற்றும் பொறுமை போன்ற நற்செயல்கள் குறித்து ஆயிரக் கணக்கான புத்தகங்களைப் படித்திருக்கிறேன். ஆனால் அதற்கு காரணம் மூக்கு தானே தவிர நீங்கள் அல்ல என்று கூறுகின்ற இந்த வாக்கு மூலத்தை நான் ஒருபோதும் எங்கும் கண்டதில்லை. உங்களால் எல்லா வாசனைகளையும் சமமாக பாவிக்க முடியும் என்றால் அதாவது ஒரு ரோஜா மலரின் மணத்தையும், மாட்டு சாணத்தின் மணத்தையும் ஒரே மாதிரியாக பாவிக்க முடிந்தால், நீங்கள் பொறுமையாக இருக்கிறீர்கள்! இந்த பொறுமையை நீங்கள் நரகத்தில் தூக்கிப் போடுங்கள். இது வெறுமனே புத்திசுவாதீனமற்றது, புலன் நுகர்ச்சி அற்றது.

புத்திசாலியான ஒரு மனிதன் அதிக புலன் உணர்ச்சி மிக்கவனாக ஆகிவிடுகிறான். மரங்களின் பசுமையை நீங்கள் எப்படி பார்க்கிறீர்களோ அதிலிருந்து வேறுபட்டு ஒரு கவிஞன் பார்க்கிறான், அவன் அவற்றில் அதிக பசுமையானதாக காண்கிறான். அவன் வெறும் பச்சை மரங்களைப் பார்ப்பதில்லை, அவன் பச்சை நிறத்தின் பல்வேறு பட்ட நிறங்களைக் காண்கிறான். நிறம் குறித்த அவரது புலன்உணர்வு மிகவும் கூர்மையானதாகவும், கூர்மதியுடனும் இருக்கிறது.

ஒரு இசைக் கலைஞன் அமைதியாலும் கூட ஒலிகளைக் கேட்கிறான். அவனது காதுகள் மிகவும் ஒத்திசைந்து இருக்கின்றன. ஏனைய புலன்களோடு இதே நிலை தான் இருக்கிறது.

ஆனால் போதிதருமர் உண்மையில் தன்னை சிரிப்புக்குரியவராக ஆக்கிக் கொள்கிறார். சுவை, பாராட்டு, விளக்குதல் ஆகியவற்றின் *மீதான* ஆசையை வெற்றி கொள்வதன் மூலம்

வாய் என்னும் திருடனை கட்டுப்பாட்டில் வைப்பது பக்தி ஆகிறது.

மிகுந்த ருசிமிக்க உணவையும், புனித மாட்டுச் சாணத் தையும் எந்த வேறுபாடும் இல்லாமல் உங்களால் சாப்பிட முடியும் என்றால், அதுதான் பக்தி! எனது வாழ்நாள் முழுவதும் நான் பக்தியைப் பற்றி விவரிப்பதற்கு முயற்சித்துக் கொண்டு இருக்கிறேன். ஆனால் போதிதருமர் நன்றாக தெரிந்து வைத்திருக்கிறார்!

*தொடு உணர்வினால். அசையாமல் இருப்பதன் மூலம் உடல் என்னும் திருடனை அடக்குவது தியானம் என்பதாகிறது.*

யாராவது உங்களைத் தொடும் போது நீங்கள் அதை உணர வில்லை என்றால், நீங்கள் தியானத்தில் இருக்கிறீர்கள்? யாராவது உங்களைத் தொடும் போது, அதை நீங்கள் உணரவில்லை என்றால் நீங்கள் வெறுமனே இறந்து விட்டீர்கள் என்று அர்த்தம். இது தியானம் அல்ல.

ஆனால் இவர் மிகப்பெரிய காரியத்தை செய்திருக்கிறார். 'இந்தியாவில் இருந்து மெய்ஞ்ஞானி ஒருவர் வந்திருக்கிறார். நாங்களும் கேள்விப்பட்டிருக்கிறோம். ஆனால் இது தான் அசலானது'' என்று அவரது பேச்சை கேட்ட மக்கள் கண்டிப்பாக ஆச்சரியப்பட்டு இருப்பார்கள். அந்த சீன மக்களும் கூட தியானம் பற்றி அதிகம் கேள்விப்பட்டு உள்ளனர்.

தியானம் என்றால் என்ன என்பதை அறிந்த கௌதம புத்தரோடு, அவரைப் போன்ற தகுதியுடன், அவரது சமகாலத்தில் வாழ்ந்த சீன நாட்டினைச் சார்ந்த லாவொத்சு, சுவாங்த்சு, லீத்துசு போன்றவர்களையும் அவர்கள் அறிந்திருந்தனர். ஆனால் போதிதருமரே, கிட்டதட்ட நம்பமுடியாத ஒரு விளக்கத்தை கொடுக்க முயற்சிக்கிறார். அவர் தனது பலத்தை இழந்துவிட்டார்.

இறுதியான கேள்வி கேட்கப்பட்ட போது, அந்த இடத்தில் தான் அவர் கீழே விழ ஆரம்பித்து விட்டார். அவர் எல்லா வற்றையும் மறந்து விட்டார். இப்போது அதை சரி செய்வதற்கு அவர் முயற்சிக்கிறார். முதலாவது ஒரு வழியில் இருந்த ஓட்டையை அடைக்கிறார், அந்த ஓட்டையை அடைக்கிறார்

ஆனால் புதிய ஓட்டைகள் வந்து கொண்டே இருக்கின்றன. அவர் இங்கும் அங்கும் ஓடிக் கொண்டு இருக்கிறார். ஆனால் தான் என்ன செய்கிறோம் என்கிற உணர்வு அவரிடம் இல்லை.

*மாயைக்கு பலியாகிவிடாமல், ஆனால் முழு விழிப்புடன் இருப்பதன் மூலம், மனம் என்னும் திருடனை நன்கு பக்குவப்படுத்துதல் ஞானம் என்பதாக ஆகிறது.*

இது தான் கொஞ்சம் அர்த்தமுள்ளதாக தெரிகிறது. அதிகம் இல்லை, கொஞ்சம் தான், ஏனெனில் விழிப்பு நிலை என்பதை பயிற்சி செய்ய முடியாது. விழிப்பு நிலை என்பது தானே நடக்கின்ற ஒரு விஷயம், அதை நீங்கள் பயிற்சி செய்ய முடியாது என்று அவரே கூட முன்பு கூறி இருக்கிறார். பயிற்சி செய்யப்படுகின்ற எதுவும் உங்களது மனதினால் தான் பயிற்சி செய்யப்படுகிறது. மனதை பயிற்சி செய்பவர் யார்?

நீங்கள் உடலைப் பெற்றிருக்கிறீர்கள், நீங்கள் யோகா பயிற்சி செய்ய முடியும். நீங்கள் மனதைப் பெற்றிருக்கிறீர்கள். நீங்கள் விழிப்புணர்வை, தியானத்தை பயிற்சி செய்யமுடியும். ஆனால் உடலினால் வருகின்ற எதுவும் அந்த உடலோடு போய் விடுகிறது, மனதோடு வருகின்ற எதுவும் மனதோடு போய் விடுகிறது. மரணம் எல்லாவற்றையும் எடுத்துக் கொள்ளும் போது அவை உங்களோடு வரமுடியாது.

எனவே, உடலின் ஒரு அங்கமாக இல்லாத, மனதின் ஒரு அங்கமாக இல்லாத, ஏதோ ஒன்று உங்களுக்குள் நிகழ்ந்தாக வேண்டும். அதாவது உடல் மன அளவில் வேர் ஊன்றாத ஏதோ ஒன்று உள்ளுக்குள் நிகழ்ந்தாக வேண்டும். விழிப்பு நிலை என்பது விழிப்புணர்வு என்பதாக இருக்கிறது. இந்த உடல் மற்றும் மனம் என்பதன் செயல்களை எல்லாம் வெகு தொலைவில் இருந்து கொண்டு சாட்சி பாவனையோடு கவனிப்பதாக இருக்கிறது. அதன் பின்னர் முழு விழிப்பு நிலை என்பது உங்களோடு வரும். உங்களது உடல் மற்றும் மனமானது, மரணத்தினால் எடுத்துச் சொல்லப்பட்டாலும் கூட, முழு விழிப்பு நிலை என்பது யாராலும் எடுத்துக் செல்ல முடியாது.

எனவே தான் இது கொஞ்சம் உண்மையானது என்று கூறுகிறேன். குறைந்த பட்சம் அவர் தன்னை கொஞ்சம் அதிக முட்டாள் போன்றவராக ஆக்கிக் கொள்ளவில்லை.

இந்த ஆறு பரமிதாக்களும் போக்குவரத்திற்குரியவை. படகுகள் அல்லது கட்டுமரம் போன்று அவை உங்களை அடுத்த கரைக்கு கொண்டு செல்கின்றன. அதனால் அவை பயணப் படகுகள் என்று அழைக்கப்படுகின்றன.

ஆனால் சாங்கிய முனி ஒரு போதி சத்துவராக இருந்த போது, அவர் மூன்று கிண்ணங்கள் பால்... இப்போது இது கற்பனை பண்ண முடியாத கடைசி பைத்தியக்கார தனமாக இருக்கப் போகிறது. சீடர் அவரிடம் கேட்கிறார்.

*ஆனால் சாங்கிய முனி ஒரு போதிசத்வராக இருந்த போது அவர் மூன்று கிண்ணங்கள் பால் மற்றும் ஆறு அகப்பை கஞ்சியை அவர் மெய்ஞ்ஞானம். அடைவதற்கு முன்பு பருகினார். புத்த நிலையினால் விளைகின்ற பழத்தை சுவைப்பதற்கு முன்பு அவர் பாலைக்குடித்தால், மனதை வெறுமனே கவனித்தல் என்பது எப்படி முத்தியைக் கொடுக்க முடியும்?*

போதி தருமர், இயற்கைக்கு மாறுபட்டவர் ஆகிவிட்டதால், அவரது சீடர்களும் கூட, சாதாரணமாக அவர்கள் கேட்டிருக்க முடியாத கேள்விகளை இப்போது அவர்கள் கேட்க ஆரம்பிக்கின்றனர். ஆனால் இப்போது எல்லாம் சரியாக இருக்கிறது. புத்தர் மூன்று கிண்ணங்கள் பால் குடித்தார் என்பது உண்மைதான். ஆனால் அந்த மூன்று கிண்ணங்கள் பால் குடித்ததனால் தான் அவர் மெய்ஞ்ஞானம் அடைந்தார் என்றோ அல்லது மெய்ஞ்ஞானம் பெறுவதற்கு முன்பு ஒருவர் இப்படி ஒன்றைச் செய்ய வேண்டும் என்றோ அர்த்தமல்ல. இது ஒரு நிபந்தனை என்று அர்த்தம் அல்ல. ஆனால் அதைத்தான் அந்த சீடர்கள் கேட்கின்றனர்.

*புத்த நிலையில் விளைகின்ற பழத்தை சுவைப்பதற்கு முன்பு அவர் பாலைக் குடித்தால், மனதை வெறுமனே கவனித்தல் என்பது எப்படி முக்தியைக் கொடுக்க முடியும்?*

முதலில் ஒருவர் மூன்று கிண்ணங்கள் பாலைக் குடிக்க வேண்டும். ஆனால் நீங்களோ, வெறுமனே மனதைக் கவனியுங்கள் அப்போது நீங்கள் முக்தி அடைவீர்கள் என்று கூறுகின்றீர்கள். அப்படியானால் அந்த மூன்று கிண்ணங்கள் பால் என்பது என்ன?

இது போதிதருமருக்கு உள்ள நிலை மட்டுமல்ல இது எல்லா மத புனித நூல்கள், வியாக்கியானங்கள் ஆகியவற்றிற்கும் உள்ள நிலையாகும். ஆச்சரியமடைவீர்கள் இந்த மக்கள் இதை ஒரு எளிய விஷயமாக, ஒரு சாதாரண சம்பவமாக பார்க்கமுடியாதா? அவர் பசியோடு இருந்தார். எனவே யாரேர் ஒருவர் பாலைக் கொடுத்தார். ஆனால் சீடர்கள் கேட்பதை மன்னித்து விடலாம். அவர்கள் சீடர்கள், அறியாமையால் இருப்பவர்கள். ஆனால் அதற்கான பதில் மிகவும் உயர்ந்தது! இந்த பதிலுக்கு முன்பு சீடர்கள் ஒன்றுமில்லாதவர்கள் ஆகிவிடுகின்றனர். அந்த பதில் உயர்ந்ததாக உள்ளது என்றார்.

*நீங்கள் கூறுவது உண்மைதான், இப்படித்தான் அவர் மெய்ஞ்ஞானம் அடைந்தார். ஒரு புத்தர் ஆவதற்கு முன்பு அவர் பாலைக் குடிக்க வேண்டியதாயிற்று, ஆனால் இரண்டு வகையான பால் உள்ளது.*

இதற்கு மேல் உங்களால் போகமுடியாது. முட்டாள் தனத் திற்கும் ஏதாவது எல்லை இருக்கும் என்று நான் நினைத்தேன். ஆனால் அதற்கு எல்லை இல்லை. அவர் கூறுகிறார்.

*ஆனால் இரண்டு வகையான பால் உள்ளது. சாங்கிய முனி குடித்தது சாதாரணமான, அசுத்தமான பால் அல்ல ஆனால் அது சுத்தமான தர்மத்தின் பால்,*

சாதாரணபால் அல்ல - மதப்பால்! மேலும் மதப்பால் என்றால் என்ன? யாரும் அதைப்பற்றி கேள்விப்பட்டதில்லை. பவுடர்பால் மற்றும் எல்லாவிதமான பால்களையும் பற்றி மக்கள் கேள்விப்பட்டிருக்கிறார்கள் ஆனால் தர்மத்தின் பால்? பால் எப்படி சமயப்பற்று உள்ளதாக இருக்கமுடியும்?

*மூன்று கிண்ணங்கள் என்பது மூன்று வகை நன்னெறிகள் ஆறு ஆகப்பைகள் என்பது ஆறு பரமிதாக்கள். சாங்கிய முனி*

மெய்ஞ்ஞானம் அடைவதற்கு முன்பு. அவர் இந்த சுத்தமான தர்மத்தின் பாலைக் குடித்ததனால் தான் அவரால் புத்த நிலையின் பழத்தை சுவைக்க முடிந்தது. ததாகதர், இந்த அசுத்தமான, நாற்றமடிக்கும் பசுவின் பாலைக் குடித்தார் என்று சாக்குபோக்கை கண்டு பிடிப்பது பழிதூற்றுவதன் உச்சமாக இருக்கிறது. அது உண்மையாக இருக்கும் பட்சத்தில், அழிக்க முடியாத, மோகங்கள் அற்ற, தருமாவின் ஆன்மாவானது, இந்த உலகின் மனவேதனைகளில் இருந்து எப்போதும் விடுதலை பெற்று இருக்கிறது. அப்படி இருக்கும் போது அவர் தனது பசியை அல்லது தாகத்தை தணிப்பதற்கு அசுத்தமான பாலின் அவசியம் என்ன?

ஒருபக்கம், உங்களது உள் உறைந்துள்ள ஆன்மாவானது எப்போதும் தூய்மையானது, அதை அசுத்தமாக்குவுதற்கு வழியே கிடையாது என்று போதிதருமர் அநேக சூத்திரங்களில் மீண்டும் மீண்டும் கூறுகின்றார். ஆனால் இப்போது, உங்களது ஆன்ம இயல்பை தெரிந்து கொண்டவர் ஆவதற்கு, உங்களுக்கு மிகவும் சிறப்பு வகையான பால், தர்மா பால் தேவைப்படுகிறது என்று கூறுகிறார். இந்த தர்மாபால் எப்படி உண்டாகிறது என்பதற்கான ஒட்டு மொத்த விவரிப்பையும் அவர் கொடுக்கிறார்.

'இந்த எருதுகள் உயர் பூமியிலோ அல்லது தாழ்வான பூமியிலோ வசிப்பவை அல்ல'' என்று சூத்திரங்கள் கூறுகின்றன.

இது ஒரு பசு அல்ல என்பது நீங்கள் நினைவில் கொள்ள வேண்டிய முதல் விஷயமாகும். ஏனெனில் ஒரு பசு என்பது ஒரு பெண். எனவே, ஒரு பெண்ணிடம் இருந்து நீங்கள் தர்மாபாலை எதிர்பார்க்க முடியாது. தர்மா பால் என்பது ஆண் இனத்திடம் இருந்து மட்டுமே வருகிறது. இந்த சூத்திரத்தை நீங்கள் மொரார்ஜி தேசாய்க்கு அனுப்பி வைக்க வேண்டும். இது அவரது கொள்கைக்கு ஆதரவாக உள்ளது. அவர் தினமும் இந்த தர்மாபாலைக் குடித்துக் கொண்டு இருக்கிறார். அவர் தனது சொந்த பாலைக் கறப்பதும் குடிப்பதுமாக இருக்கிறார். எந்த ஒரு புத்தரை விடவும் அவர் அதிக புண்ணியத்தை பெற்று விட்டார் என்று நான் நினைக்கிறேன்.

இந்த எருது என்பது ஒரு பிழை அல்ல, ஏனெனில் இதற்கு முன்பு அவர் பசு என்கிற வார்த்தையை பயன்படுத்தி இருக்கிறார். அந்த பாலைப்பற்றி கண்டனம் தெரிவிக்கும் போது அவர், 'ததாகதர் இந்த அசுத்தமான, நாற்றமடிக்கும் பசுவின் பாலைக் குடித்தார் என்று சாக்கு போக்கை கண்டு பிடிப்பது பழிதூற்றுவதன் உச்சமாக இருக்கிறது. எனவே பசுக்களுக்கும் எருதுகளுக்கும் இடையே உள்ள வேறுபாட்டினை அவர் முற்றிலும் நன்றாக அறிந்து கொண்டு இருந்தார்.

'இந்த எருதுகள், உயர் பூமியிலோ அல்லது தாழ்வான பூமியிலோ வசிப்பவை அல்ல. சிறு தானியத்தையோ அல்லது பசுந்தீவனத்தையோ சாப்பிடுவது இல்லை, மேலும் இவையும் பசுக்களோடு மேய்ச்சலுக்கு செல்வதும் கிடையாது'' என்று சூத்திரங்கள் கூறுகின்றன. ஏனெனில் பசுக்களோடு சேர்ந்து மேய்சலுக்கு செல்லும் போது கூட இந்த தர்மாபால் என்பது அசுத்தமானதாக ஆகிவிடுகின்ற சாத்தியங்கள் உள்ளன.

இந்த எருதுகளின் உடல்கள் பளபளப்பான தங்கத்தின் நிறத்தில் இருக்கிறது. இந்த எருது என்பது வைரோகானா (VAIROCANA) என்பதைக் குறிக்கிறது. எல்லா உயிர்கள் மீதுள்ள கருணையினால், அது தனது தூய தர்ம உடலில் இருந்து, விடுதலையை தேடுபவர்களுக்காக, மூன்று வகையான நன்னெறிகளையும், ஆறு பரமிதார்களையும் பேணி வளர்ப்பதற்காக மிக உயர்ந்த நிலையான தர்மாபாலை உற்பத்தி செய்கிறது. இப்படிப்பட்ட ஒரு உண்மையான, தூய எருதுவின் சுத்தமான பாலானது ததாகதர் புத்த நிலையை அடைவதற்கு மட்டும் உதவவில்லை, இதைக் குடிக்கின்ற எந்த ஒரு உயிரும் முழுமையான, மிஞ்சமுடியாத மெய்ஞ்ஞானத்தை அடைய உதவுகிறது.

இது உண்மையில் நமது ஊக்கத்தை குலையச் செய்கிறது. இந்த தர்மா எருதை நாம் எங்கு காணப் போகிறோம்?

இது எனக்கு மிகவும் புகழ்பெற்ற ஒரு இந்து துறவி ஒருவரை நினைவு படுத்துகிறது. ஒரு இந்து மாநாட்டில் கலந்து கொள்வதற்கு நான் அவரோடு பயணம் செய்தேன். ஒரே வீட்டில்

நாங்கள் தங்கினோம். அவர் பால் மட்டுமே குடிப்பார். அது மட்டுமே அவரது உயர்ந்த ஆன்மிக செயலாக இருந்தது. மற்றபடி, அவரிடம் எந்த ஒரு புத்திசாலித்தனத்தையும் என்னால் பார்க்க முடியவில்லை. நான் அவருடன் மூன்று நாட்கள் இருந்தேன். அவர் பாலை மட்டுமே பயன்படுத்தினார் என்பது மட்டுமே ஒரே ஆன்மிக விஷயமாகும். அந்த பாலானது ஒரு வெள்ளைப் பசுவில் இருந்து, முழுவதும் வெள்ளை நிறம் கொண்ட பசுவில் இருந்து பெறப்படவேண்டும்.

இதைக் கேள்விப்பட்ட நான் அவரிடம், 'நான் உங்களது உயர்ந்த நன்னடைத்தையில் தலையிடக் கூடாது. ஆனால் என்னால் எனது உணர்ச்சி தூண்டலை அடக்க முடியாது. ஏனெனில் ஒரு கறுப்பு நிற பசுவானது கறுப்பு நிற பாலைக் கொடுப்பதை நான் ஒருபோதும் பார்த்தது கிடையாது. பால் என்பது எப்போதும் வெள்ளை நிறத்தில் தான் இருக்கிறது. ஆகவே, நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்? ஒரு பசுவில் ஒரு புள்ளி, ஒரு சிறிய புள்ளி, அது கறுப்பாகவோ அல்லது காவி நிறத்திலோ அல்லது எந்த நிறத்திலோ இருந்தால் அதை வேண்டாம் என்று மறுப்பது ஏன்? என்று கேட்டேன்.

காலையில், அந்தத் துறவி பார்ப்பதற்காக அநேக பசுக்கள் கொண்டு வரப்பட்டன. அவர் அந்த பசுக்களை எல்லாம் நன்றாக சுற்றிப்பார்த்து அவற்றில் முழுவதும் வெள்ளையான பசு உள்ளதா அல்லது இல்லையா என்று பார்ப்பார். அப்படி முழுவதும் வெள்ளை நிறத்தில் உள்ள பசுவை அவர் ஏற்றுக் கொண்ட உடன், ஒரு ஆள் தனது ஆடைகளோடு குளித்துவிட்டு, தனது ஈரமான ஆடைகளோடு அந்த துறவியின் முன்பு, அந்த வெள்ளைப் பசுவிடமிருந்து பாலைக் கறக்க வேண்டும். ஏனெனில் அப்போதுதான் ஏதாவது அசுத்தமோ அல்லது தவறோ அந்த பாலுக்குள் போகாமல் இருக்கும்.

அவரது இந்த முட்டாள் தனத்தைப் பார்த்து நான் மூன்று நாட்களில் களைத்துப் போய்விட்டேன். அப்போது நான் போதிதருமர் பற்றி கேள்விப்பட்டதில்லை. அப்படி கேள்விப் பட்டிருந்தால் நான் அவரிடம், 'நீங்கள் செய்வது முற்றிலும் சரியானது. ஒரே ஒரு விஷயம் மட்டுமே தவறானது; நீங்கள்

பசுக்களின் பாலைக் குடிக்கிறீர்கள்; நீங்கள் எருதுவின் பாலை அதுவும் வெள்ளை நிற காளை மாட்டின் பால் கூட வெள்ளையாக இருக்காது. அது மஞ்சளாக இருக்கும். ஆனால் மெய்ஞ்ஞானம் அடைவதற்கு ஒருவர் எந்த விதமான தவச் செயலும் செய்யலாம். இது மிகப்பெரிய ஒழுங்கு நடவடிக்கை.

போதிதருமர் வெறுமனே தன்னை ஒரு முழுமுட்டாளாக ஆக்கிவிட்டார். விஷயங்கள் விளக்குவதற்கு எளிமையானதாக இருந்தும் கூட அவர் அப்படி செய்து விட்டார். இந்த மதத்தோடு மட்டும் இந்த பிரச்சினை இல்லை ஒவ்வொரு மதத்திலும் இதே பிரச்சினை மீண்டும் மீண்டும் வருகிறது.

சமண தீர்த்தங்கரர் ஆகிய மகாவீரர் ஒரு குறிப்பிட்ட ஆசனத்தில் அமர்ந்திருக்கும் போது மெய்ஞ்ஞானம் அடைந்தார். அது வித்தியாசமான ஆசனம். ஏனெனில் நீங்கள் அப்படிப்பட்ட ஆசனத்தில் மிக அபூர்வமாகத்தான் உட்கார்ந்து இருப்பீர்கள், யோகாவில் இது' பசுவிடம் பால்கறக்கும் ஆசனம்'', என்று அழைக்கப்படுகின்றது. இந்தியாவில் பால் கறப்பதற்கு இயந்திரங்கள் பயன்படுத்துவதில்லை, ஆட்கள் ஒரு முக்காலியில் அமர்ந்து கொண்டு கையினால் பசுவிடமிருந்து பால் கறப்பார்கள். ஆனால் மகாவீரர் என்ன செய்தார்? நிச்சயமாக அவர் பசுவிடம் பால் கறக்கவில்லை. எனவே அவர் ஏன் பசுவிடம் பால் கறக்கின்ற அந்த ஆசனத்தில் அமர வேண்டும்?

அந்த ஒரே ஒரு காரணத்திற்காக மட்டுமே செய்ய முடியும். ஆனால் அந்த காரணத்தை நான் உங்களுக்கு சொல்லமாட்டேன், நீங்கள் மொரார்ஜி தேசாயிடம் கேட்கலாம்; நீங்கள் அவரிடம், ' நீங்கள் நன்றாக செய்கிறீர்கள். சரியாக பசுவிடம் பால் கறக்கின்ற நிலையில் உட்கார வேண்டும் என்பதை நினைவில் கொள்ளுங்கள். பாலைக் கறந்து குடித்தால், மெய்ஞ்ஞானம் நிச்சயம் கிடைக்கும்'' என்று கூறுங்கள்.

இப்போது, மகாவீரருக்கு பிறகு, சமண மதத் துறவிகள் ஒருவர் கூட மெய்ஞ்ஞானம் அடைய முடியாது என்று நினைத்துக் கொண்டு இருக்கிறார்கள். ஏனெனில் அந்த ஆசனத்தில் அமர்வது மிகவும் கடினம். நீங்கள் நீண்ட நேரம் அமர முடியாது. அது ஒரு

விநோதமான ஆசனம். தியானம் செய்வதற்கு ஒருவர் ஓய்வுடன் இளைப்பாறுகின்ற ஒரு நிலையில் உட்கார வேண்டியது அவசியமாகிறது. மகாவீரரின் ஆசனம் மிகவும் மன அழுத்தத்தை கொடுப்பதாகும்.

ஆனால் எதிர்பாராமல் என்ன நடக்கிறதோ, அதை மக்கள் ஒரு காரணமாக நினைக்க ஆரம்பித்துவிடுகின்றனர். மெய்ஞ் ஞானத்திற்கு அப்படிப்பட்ட ஒரு ஆசனம் தேவை என்பது போன்று நினைத்துக் கொள்கின்றனர். மெய்ஞ்ஞானம் அடைவதற்கு எதுவும் தேவை இல்லை. ஏனெனில் நீங்கள் செய்யக்கூடிய எதனாலும் மெய்ஞ்ஞானம் விளைவதில்லை. மெய்ஞ்ஞானமானது, உங்களது செயல் என்று எதுவும் இல்லாமல், முழுமையான அமைதியுடன் உங்களது நான் என்பது இல்லாது போவது மட்டுமே நிகழ்கிறது.

' இது எனது மெய்ஞ்ஞானம். இதை நான் தான் செய்து முடித்தேன்.'' என்று நீங்கள் பெருமையாக பேசமுடியாது. மெய்ஞ்ஞானம் நிகழும் போது உங்களால் 'நான்' இல்லாமல் இருந்தேன். 'நான்' இல்லாமல் இருந்ததால், நான் மிகவும் அமைதியாக, வெறுமனே ஒன்றும் இல்லாதவனாக, வெறுமனே எதையும் பெறுகின்றவனாக மட்டுமே இருந்த போது அது நடந்தது'' என்று மட்டுமே கூறமுடியும். சூரியனின் ஒளிக்கதிர்கள் மலர்களிடம் வரும்போது அவை தங்களின் இதழ்களை திறப்பது போன்று அது அப்பால் இருந்து வந்தது. அப்பால் உள்ள ஏதோ ஒன்று உங்களுக்குள் வருகிறது, அப்போது உங்களது தாமரை அதன் இதழ்களைகத் திறக்கிறது. ஒரு போதும் தீர்ந்து போகாத அதன் நறுமணத்தை வெளியிடுகிறது. ஆனால் இதற்கான காரணம் எதுவும் கிடையாது.

காரணங்கள், விளைவுகள் ஆகியவை அறிவியல் வார்த்தைகள். உங்களது அக வாழ்க்கையின் புதிரில் அவற்றுக்கு எந்த விதமான சிறப்பும் கிடையாது. எதுவும் காரணமும் அல்ல, எதுவும் விளைவதும் இல்லை. புத்த நிலை, மெய்ஞ்ஞானம், விழித்தெழுதல், முக்தி அல்லது விடுதலை ஆகியவை ஏற்கனவே அங்கு இருக்கிறது. அது உருவாக்கப்படக் கூடியது அல்ல, எனவே அதற்கு காரணம் தேவை இல்லை. அது வெறுமனே

உற்றுப்பார்க்கப்பட மட்டுமே வேண்டியதாகும். நீங்கள் உங்களது கண்களை உள்நோக்கி திருப்பி அதைப் பார்க்க வேண்டியது தான். இது ஒரு கண்டு பிடிப்பு. பல ஆயிரம் ஆண்டுகளாக அது அங்கே உள்ளது. ஆகவே நீங்கள் அதை எந்த நொடிப்பொழுது வேண்டுமானாலும் செய்யலாம். காரணம் என்பதாக இல்லாமல் வெறுமனே ஒரு சிறிய விஷயம் மட்டும் செய்தால் போதும். நீங்கள் உள்நோக்கி உங்களது கண்களை திறந்து பாருங்கள். மேலும் அதைத்தான் நான் தியானம் என்று அழைக்கிறேன்.

மனம் என்பது வெளிப்பக்கம் திறக்கிறது. தியானம்; என்பது உள்பக்கம் திறக்கிறது. இந்த புற உலகிற்கு மனம் தான் உங்களை வழி நடத்தி செல்கிறது. உங்களது உள்பகுதிக்கு தியானம் தான் உங்களை வழி நடத்தி செல்கிறது. அப்போது, திடீரென்று நீங்கள் மெய்ஞ்ஞானம் பெற்று விடுவீர்கள். மெய்ஞ்ஞானம் என்பது எப்போதும் திடீரென்று தான் வருகிறது. அது ஒரு போதும் படிப்படியாக நடப்பதில்லை.

மேலும் போதிதருமருக்கு இது தெரியும். அவரது சொந்த மெய்ஞ்ஞானமும் கூட ஒரு திடீர் அனுபவமாகத்தான் இருந்தது. ஆனால் வெறுமனே புத்த பாரம்பரியத்திற்கு முரண்படக்கூடாது என்பதற்காக, மக்களை கோபம் கொள்ள செய்யக்கூடாது என்பதற்காக, எதிரிகளை உண்டாக்க கூடாது என்பதற்காக, அவர் சமாதானம் செய்து கொண்டார். நான் இந்த சமாதானத்தை கடுமையாக கண்டனம் செய்கிறேன்.

இவரைப் போன்ற அறிவுஜீவிகள் எந்தக் காரணத்திற்காகவும் சமாதானம் செய்து கொள்ளக்கூடாது. சீனாவில் உள்ள புத்தமதம் முழுவதும் மறைந்தாலும், எதுவும் இழக்கப்பட்டுவிடாது.

ஆனால் போதிதருமரின் இந்த சமாதானமானது அவரது சொந்த ஒருங்கிணைப்பை, அவரது சொந்த நேர்மையை, அவரது சொந்த அதிகாரத்தை அழித்துவிட்டது. அவர் உண்மையில் ஒரு அரக்கன் போன்று இருந்தாலும் அவர் ஒரு குள்ளன் போன்று ஆகிவிட்டார்.

○

மடாலயங்களை கட்டுதல், சிலைகளை நிறுவுதல், ஊதுபத்தி கொளுத்துதல், மலர்களைப் பரப்புதல், அணையா விளக்குகளை ஏற்றுதல், இரவும் பகலும் ஆறு காலமும் பயிற்சி செய்தல், ஸ்தூபிக்களை சுற்றி நடத்தல், உண்ணா நோன்பை கடைப்பிடித்தல் மற்றும் வழிபடுதல் போன்ற புகழத்தக்க காரியங்களைச் செய்வதால் மரணிப்பவர்கள் மெய்ஞ்ஞானத்தை அடைய முடியும் என்று இந்த சூத்திரங்கள் முழுவதிலும் புத்தர் கூறுகிறார். ஆனால் மனதைக் கவனித்தல் என்பது ஏனைய எல்லா பயிற்சிகளையும் உள்ளடக்கி விடுகிறது என்றால், அதன் பின்னர் இப்படிப்பட்ட காரியங்கள் தேவைக்கு அதிகமானவை போன்று தோன்றக் கூடும்.

புத்தரின் சூத்திரங்கள் எண்ணிக்கையற்ற உருவகங்களைக் கொண்டுள்ளது. ஏனெனில் மரணிப்பவர்கள் குறுகிய மனங் களைக் கொண்டவர்கள். எனவே ஆழமான எதையும் புரிந்து கொள்ள மாட்டார்கள், புத்தர், உயர்ந்த நிலையைக் குறிப்பதற்கு தெளிவாகத் தெரியக் கூடியவற்றைப் பயன்படுத்தினார். உட்புறத்தில் பேணி வளர்ப்பதற்கு பதிலாக வெளிப்புற வேலைகளில் மனதை ஒருமுகப் படுத்துவதன் மூலம் ஆசீர்வாதங்களை தேடுகின்ற மக்கள் சாத்தியமில்லாத ஒன்றிற்கு முயற்சி செய்துகொண்டு இருக்கிறார்கள்.

ஒரு மடாலயம் என்று நீங்கள் அழைப்பதை, நாங்கள் ஒரு சங்காமா, தூய்மையான ஒரு இடம், என்று அழைக்கிறோம். ஆனால் யார் எல்லாம் மூன்று விஷங்கள் நுழைவதை தடுக்கிறார்களோ, அவர்களது புலன்களின் வாசல்களைத் தூய்மையாக வைத்திருக்கிறார்களோ, அவர்களது உடல் மற்றும்

மனதை அசையாமல் வைத்திருக்கிறார்களோ, உள்ளும் புறமும் சுத்தமாக வைததிருக்கிறார்களோ, அவர்கள் ஒரு மடாலயத்தைக் கட்டுகிறார்கள்.

சிலைகல்ள நிறுவுவது என்பது மெய்ஞ்ஞானத்தை தேடுபவர் களால் பேணிவளர்க்கப்படுகின்ற எல்லா பயிற்சிகளையும் குறிக்கிறது.

ஊதுபத்தி கொளுத்துதல் என்பது சாதாரண பொருளால் ஆன ஊதுபத்தி என்று அர்த்தமல்ல. ஆனால் அதன் நறுமணத்தின் மூலம் இழிச்செயல், அறியாமை மற்றும் தீய செயல்களை விரட்டி அடிக்கின்ற, தெளிவாகத் தெரிகின்ற தர்மம் என்னும் ஊதுபத்தியாகும்.

புத்தர் இந்த உலகில் இருந்த போது, அவர் தனது சீடர்களிடம், பத்து திசைகளில் உள்ள புத்தர்களுக்கு காணிக்கை யாக, விழிப்புணர்வு என்னும் நெருப்பினால் இப்படிப்பட்ட விலை மதிப்பற்ற ஊதுபத்தியை கொளுத்தும் படி கூறினார். ஆனால், மக்கள் இன்று ததாகரின் உண்மையான அர்த்தத்தை புரிந்து கொள்ளவில்லை. அவர்கள் ஒரு போதும் வராத சில எதிர்கால ஆசீர்வாதங்களை நம்பிக்கொண்டு சந்தனக்கட்டை அல்லது சாம்பிராணி போன்ற ஊதுபத்தி பொருள்கள்ளைக் கொளுத்துவதற்கு ஒரு சாதாரண ஒளிச்சுடரைப் பயன்படுத்து கின்றனர்.

மலர்களைப் பரப்புவதற்கும் இதே உண்மை பொருந்தும். இது தர்மத்தைப் பற்றி பேசுதல் அல்லது ஒழுக்கம் என்னும் மலர்களை பரப்புதல், மற்றவர்கள் பயனுறவும் உண்மையான ஆன்மா மகிமை அடையவும் செய்வதைக் குறிக்கிறது. ததாகதா என்பது, மக்கள் தாவரங்களின் மலர்ச்சியை வெட்டி விடுவதன் மூலம் தாவரங்களுக்கு தீங்கு செய்தல் என்று நீங்கள் நினைத்தால், நீங்கள் நினைப்பது தவறு. நன்னெறிகளை கடைபிடிப்பவர் யாராக இருந்தாலும், பூமியிலும் சொர்க்கத்திலும் அநேக எண்ணிக்கையில் உள்ள எந்த ஒரு உயிரினத்திற்கும் காயத்தை ஏற்படுத்த மாட்டார்கள். தவறுதலாக நீங்கள் எதையாவது காயப்படுத்தி விட்டால், அதற்காக நீங்கள்

துன்பப்படுவீர்கள். எதிர்காலத்தில் பெறப்போகும் ஆசீர்வாதத் திற்காக, உயிரினங் களைக் காயப்படுத்தி, வேண்டும் என்றே நன்னெறிகளை உடைத்தெறிபவர்கள் யாராக இருந்தாலும் அவர்கள் மேலும் அதிகமாக துன்பப்படுவார்கள். வரப்போகின்ற ஆசீர்வாதங்களை துன்பங்களாக மாறுவதற்கு அவர்களால் எப்படி விட்டுவிடமுடியும்?

அணையா விளக்கு என்பது விழிப்புணர்வை குறிக்கிறது. நீண்ட காலத்திற்கு முன்பு தீபம்கரா அல்லது விளக்கேற்றுபவர் என்ற பெயருடைய ஒரு புத்தர் இருந்தார். விளக்கேற்றுபவர் என்பது தான் அவரது பெயரின் அர்த்தம். ஒரு புத்தரின் கண் இமைகளின் இடையே உள்ள மயிர்கள் ஒரு சுற்று சுற்றுவதால் வெளிப்படுகின்ற ஒளியினால் கணக்கற்ற உலகங்களை ஒளியேற்ற முடியும். ஒரு எண்ணெய் விளக்கால் எந்த உபகாரமும் கிடையாது.

இரவு பகலும் ஆறு காலமும் பயிற்சி செய்தல் என்பதற்கு, ஆறு புலன்களுக்கு மத்தியில் இடைவிடாது மெய்ஞ்ஞானத்தை பேணி வளர்த்தல். விழிப்புணர்வை ஒவ்வொரு உருவத்திலும் பாதுகாத்தல் என்று அர்த்தமாகும். ஆறு காலங்கள் என்பதற்கு ஆறு புலன்களின் மீதும் ஒரு போதும் கட்டுப்பாட்டை தளர்த்தாமல் இருத்தல் என்று அர்த்தமாகும்.

ஸ்தூபியைச் சுற்றி நடப்பது என்பதில், ஸ்தூபி என்பது உங்களது உடல் மற்றும் மனம். உங்களது விழிப்புணர்வு, நீங்காமால் உங்களது உடல் மற்றும் மனதை சுற்றி வருதல் ஸ்தூபியை சுற்றி நடப்பது என்று அழைக்கப்படுகிறது.

உண்ணா நோன்பினைக் கடைப்பிடித்தல் என்பதற்கும், இதே உண்மை பொருந்தும். உண்ணா நோன்பு இருத்தல் என்பதற்கு உங்களது உடலையும் மனதையும் கவனம் சிதறாமல் மற்றும் கலங்காமல் சரி செய்தல் என்று அர்த்தமாகும்.

மேலும் நீங்கள் மாயை என்னும் உணவை உண்பதை நிறுத்தி விடும் போது, நீங்கள் அதை மீண்டும் தொட்டால், நீங்கள் உங்களது உண்ணா நோன்பை உடைத்தெறிந்து விடுகிறீர்கள். அப்படி உடைத்தெறிந்து விட்டால், அதிலிருந்து நீங்கள்

ஆசீர்வாதங்களை அறுவடைசெய்ய முடியாது. இதைக் கண்டு கொள்ளாத மயக்கத்தில் உள்ள மக்களால் இந்த உலகம் நிறைந்து இருக்கிறது. எல்லா விதமான தீயவைகளிலும் அவர்கள் தங்களின் உடல் மற்றும் மனதை ஈடுபடுத்துகிறார்கள். அவர்கள் தங்களது கட்டுக்கடங்கா உணர்ச்சிகளின் மீதான கட்டுப்பாட்டிற்கு சுதந்திரம் கொடுத்து விடுகின்றனர். அவர்கள் எந்த வெட்கமும் கொள்வதில்லை. அவர்கள் சாதாரண உணவை சாப்பிடுவதை நிறுத்தி விடும் போது அதை அவர்கள் உண்ணா நோன்பு என்று அழைக்கின்றனர். எப்படிப்பட்ட முட்டாள்தனம்!

வழிபாடு என்பதும் இதே போன்றதுதான். நீங்கள் அதன் அர்த்தத்தை புரிந்து கொண்டு அதன் நிபந்தனைகளை கடைப் பிடிக்க வேண்டும். அதற்கான அர்த்தத்தில் செயலும், செயலில் இல்லாமையும் உள்ளடங்கி இருக்கிறது.

வழிபாடு என்றால் பெரும் மதிப்பு மற்றும் பண்பு அடக்கம் என்று அர்த்தம். அதற்கு உங்களது உண்மையான ஆன்மாவை மதித்தல். மாயையை அடங்கி இருக்க செய்தல் என்று அர்த்தம். தீய ஆசைகளை துடைத்து விட்டு, நல்ல எண்ணங் களைக் கொண்டு வந்தால், அதில் எதுவும் காட்டப்படவில்லை என்றாலும் கூட, அது வழிபாடாக ஆகிறது.

யார் இந்த உள் அர்த்தத்தை பேணி வளர்க்காமல் ஆனால் அதற்கு பதிலாக வெளிநோக்கிய வெளிப்படுத்துதல்களில் மனதை ஒருமுகப்படுத்துகிறார்களோ அவர்கள் அறியாமை, வெறுப்பு, தீமை ஆகியவற்றில் ஈடுபடுவதை ஒருபோதும் நிறுத்தாமல் எதற்கும் தகுதியானவராக இல்லாதபடிக்கு தங்களின் சக்தியை தீர்த்து விடுவார்கள். அவர்களால் ஆசனங்களின் மூலம் அடுத்தவர்களை ஏமாற்ற முடியும், ஞானிகளின் முன்னால் வெட்கப்படவும், மரணிப்பவர்களின் முன்னால் தகுதி அற்றவர்களாக இருக்க முடியும், ஆனால் அவர்கள் ஒருபோதும் சக்கரத்தில் இருந்து தப்பமாட்டார்கள், அவர்கள் ஏதாவது சிறப்பை குறைவாகவே அடைவார்கள்.

போதிதருமருக்கு வயதாகிப் போய்விட்டது என்று கூறுவதற்காக நான் ஆழ்ந்த மனவேதனைப்படுகிறேன். 'இந்த

அறியாமை எங்கிருந்து வந்தது?'' என்கிற கேள்வி கேட்கப்படு கின்ற வரையில் அவர் மிகுந்த உயரத்திற்கு சென்றார். ஆனால் அவர் பாதையை மறந்து விட்டார். இது அடிக்கடி நடப்பது தான். நீங்கள் ஒரு முறை பொய் சொல்லி விட்டால், அதற்கு மேல் ஆயிரத்தியோரு முறை நீங்கள் பொய் சொல்லியாக வேண்டும். ஒரு பொய்யை பாதுகாக்க அடுத்த பொய் தேவைப்படுகிறது. அப்படிச் செய்தாலும் கூட இல்னும் அந்த பொய்யானது பாதுகாப்பற்றதாகவே இருக்கிறது. ஒரு பொய்யைப் பாதுகாப்பதற்கு பதிலாக நீங்கள் இப்போது இரண்டு பொய்களை பாதுகாக்க வேண்டும். ஆனால் உண்மையினால் பொய்களை பாதுகாக்க முடியாது. ஆகவே நீங்கள் மூன்றாவதாக ஒரு பொய்யை உள்ளே கொண்டு வருகிறீர்கள். இப்படியாக இது முடிவில்லாத ஒரு தொடர் போல் இருக்கிறது.

இது தான் போதிதருமருக்கு நடந்தது, ஏனெனில் 'எனக்கு தெரியாது'' என்று அவரால் வெறுமனே கூற முடியவில்லை. இப்போது அவர் சிக்கலான நிலையில் இருக்கிறார். அவரிடம் என்ன கேட்கப்பட்டாலும் அதற்கு அவர் பதில் சொல்லியே ஆக வேண்டும். அவருக்கு தெரிகிறதோ அல்லது இல்லையோ, பதில் சொல்லியே தீர வேண்டும். மேலும் விஷயங்களின் இயல்புப்படி நாம் அறிந்து கொள்ள முடியாத சில விஷயங்கள் இருக்கின்றன. ஆகவே இது ஒரு இறுதியான கேள்வி, மேலும் இறுதியான கேள்விகளுக்கு பதில் அளிக்க முடியாது என்பதை ஏற்றுக் கொள்வது ஒரு பேரழிவாக இருந்திருக்க முடியாது. போதி தருமருக்கோ அல்லது கடந்தகால, எதிர்கால மற்றும் நிகழ்காலத்தில் உள்ள யாருக்குமே இது பேரழிவாக இருந்திருக்க முடியாது.

இறுதியான கேள்வி எப்போதும் ஒரு புதிராகவே இருக்கும். அதற்கு நீங்கள் ஒரு பதிலைக் கொடுத்து அதன் புதிரை அவிழ்த்து விட முடியாது. இறுதியான ஒன்றை நீங்கள் எதிர்கொள்கின்ற அந்த நொடிப்பொழுதில் நீங்கள் ஒரு குழந்தையைப் போன்று, ஒரு கள்ளம் கபடமற்றவராக ஆகிவிட வேண்டும். அதன் அற்புதத்தை சந்தோஷமாக அனுபவியுங்கள், உங்களது இதயத்தின் ஆழத்தில் புதிரை விரும்பி பாராட்டுங்கள். அது

உங்களது ஆன்மாவின் அமைதிக்குள் சென்றடையட்டும். அது உங்களுக்குள் ஊடுருவிச் சென்று உங்களை உருமாற்றம் அடையச் செய்யப்படும். அது, கேட்பதற்கான ஒரு கேள்வியும் அல்ல அல்லது அதற்கு ஒரு பதிலையும் எதிர்பார்க்கவும் கூடாது.

ஆனால் போதிதருமர் ஒரே ஒரு அடி மட்டும் தவறாக எடுத்து வைத்து விட்டார், எனவே இப்போது அவர் கழிவுநீர் வாய்க்காலில் விழுந்து விட்டார். ஒவ்வொரு நாளும் அவர் தேவை இல்லாமல் புதிய பொய்களை உருவாக்கிக் கொண்டே போகிறார். எப்போதாவது ஒருமுறை உண்மையான சிலவற்றை கூறுகிறார். ஆனால் இப்போது உண்மையின் அளவு குறைந்து கொண்டே போகிறது. மேலும் பொய்கள் அதிகமாகிக் கொண்டே போகிறது. அவற்றின் அளவு அதிகமாகிக் கொண்டே போகிறது.

அந்த இறுதியான கேள்விக்கு வெறுமனே, ' என்னை மன்னித்து விடுங்கள், எனக்கு தெரியாது'' என்று சொல்வதற்கு போதுமான தைரியம் போதிதருமர் போன்ற மனிதர்களிடம் இல்லை என்பதை நாள் ஒரு போதும் சிந்தித்ததில்லை. அவர் அதைச் சொல்லி அங்கேயே நின்றிருந்தால், அவர் பலலட்சம் ஞானிகளுக்கு மேலே உயரத்திலும், ஆழத்திலும், கம்பீரத்திலும் உயர்ந்திருப்பார்.

ஆனால், அதில் உள்ள பிரச்சினையை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. அவர் சீடர்களை ஏமாற்றம் அடையச் செய்வதற்கு விரும்பவில்லை. அவர் சீன மக்களை ஏமாற்றம் அடையச் செய்ய விரும்பவில்லை. ஒரு மெய்ஞ்ஞானியாலும் கூட பதில் கூற முடியாத அடிப்படைக் கேள்விகள் உள்ளன என்று அவர்களிடம் கூறுவதற்கு அவர் விரும்பவில்லை. எனவே தான் அவர் கற்பனைகளை ஜோடனை செய்து கொண்டே போகிறார். புத்தர் தவறாக கூறி இருக்கிறார் என்று அவரால் கூறமுடியாது. ஆகவே அவர் விநோதமானவற்றை உற்பத்தி செய்ய வேண்டியதாயிற்று. அவை புத்தர் கூறியவற்றோடு பொருந்தவே இல்லை. அந்த பதில்கள் போதிதருமரே முன்பு கூறிய வற்றோடும் கூட முற்றிலும் பொருந்தவில்லை. மனம் குறித்து விழிப்புணர்வுடன் இருந்து கொண்டு, அந்த மனதிற்கு அப்பால் போக வேண்டும் என்பது தான் போதிதருமரின் ஒட்டு மொத்த

போதனையாகும், எனவே அது முற்றிலும் குறைகளற்றதாக இருந்தது. அதோடு எதையும் சேர்க்க வேண்டியது இல்லாமல் போய்விட்டது.

இப்போது அவர் கேள்விகளுக்கு வேண்டா வெறுப்பாக பதில் சொல்லிக் கொண்டு இருக்கிறார், ஆனால் அதை அவரால் நிறுத்த முடியாது. உங்களது சீடர்களின் கேள்விகளை புறம் தள்ளிவிட்டு, அது ஒரு கேள்வி அல்ல ஏனெனில் அது இறுதியானது என்று சொல்வதற்கு அபரிமிதமான தைரியம் தேவைப்படுகிறது.

ஒரு மெய்ஞ்ஞானம் அடைந்த மனிதருக்கு எல்லாம் தெரியும் என்று சீன மக்களை திருப்திப்படுத்தவும், தனது சீடர்களைத் திருப்திப்படுத்தவும் ஒவ்வொரு வழியிலும் அவர் முயற்சித்து கொண்டு இருக்கிறார்.

உண்மை நிலை என்பது அப்படி இல்லை. நீங்கள் அதிகம் மெய்ஞ்ஞானம் அடையும் போது, மிகவும் குறைவாகவே நீங்கள் அறிந்து கொள்கிறீர்கள். மெய்ஞ்ஞானத்தின் இறுதியான சிகரத்தில், நீங்கள் வெறுமனே உங்களையே அறிந்து கொள்கிறீர்கள். அதைத்தவிர வேறு எதையும் அல்ல. ஆனால் சிகரத்தில் இருக்கும் போது, நீங்களே இந்த ஒட்டு மொத்த பிரபஞ்சமாக இருக்கிறீர்கள்.

அவர் இன்னமும் எந்த இடத்தில் சரியாகச் சொல்கிறார் என்பதை நான் உங்களுக்கு கூறுகிறேன், ஏனெனில் உண்மை நிலை என்றால் என்ன என்பதை அவர் அறிவார். ஆனால் இப்போது அவர் சமாதானம் செய்து கொள்கிறார். அவர் ஒரு புரட்சியாளர் அல்லர், அவர் ஒரு அமைதியான மனிதர். சீனாவில் புதிதாக புத்தமதத்தை தழுவியவர்களுக்கு கலக்கத்தை ஏற்படுத்தும் படி ஒரு சிறு வார்த்தை கூட சொல்வதற்கு அவர் விரும்பவில்லை. அவர் ஒரு போதும் சீனாவிற்கு போகாமல் இந்தியாவிலேயே இருந்திருந்தால் சரியாக இருந்திருக்கும். இங்கே அவர் தனது உண்மையான ஆன்மாவாக இருந்திருப்பார். மற்றவர்களைப்பற்றி அவர் மனதில் எண்ணிப்பார்க்க வேண்டியது கூட இருந்திருக்காது. நீங்கள் மற்றவர்களை எண்ணிப் பார்க்கும் போது, நீங்கள் உயரத்தில் இருந்து கீழே விழுந்து விடுகிறீர்கள்.

என்னைப் பொறுத்தமட்டில், எனது முழு அர்ப்பணிப்பும் உண்மை நிலையை நோக்கியே இருக்கிறது. இந்த ஒட்டு மொத்த உவகையும் எரிச்சலும், கோபமும் அடையச் செய்தாலும் கூட அவர்களை ஆறுதல் அடையச் செய்வதற்காக நான் எதையும் கூற மாட்டேன்., மேலும் உண்மை நிலை குறித்த எனது சொந்த அனுபவத்திற்கு எதிராக செல்கின்ற எதையும் நான் கூற மாட்டேன். மக்கள் என்னிடம், 'ஏன் இந்த ஒட்டு மொத்த உலகமும் உங்களுக்கு எதிராக இருக்கிறது?'' என்று கேட்பார்கள். இந்த உலகம் எனக்கு எதிராக இல்லை, நான் தான் உலகத்திற்கு எதிராக இருக்கிறேன். ஏனெனில் நான் சத்யத்தை தேர்வு செய்திருக்கிறேன். முற்றிலும் எனது சொந்த அனுபவத்தை மட்டுமே நான் கூறுவேன். என்ன காரணமாக இருந்தாலும், எந்த வழியாலும் நான் சமாதானம் செய்து கொள்ள மாட்டேன்.

ஆனால் போதிதருமர் சமாதானம் செய்ய ஆரம்பித்து விட்டார். மக்களால் அவர் வழிபாட்டுக்குரியவர் ஆகி இருக்கலாம், ஏனெனில் அவர் அவர்களின் மனத்திற்கு ஆறுதல் கூறினார், ஆனால் எனபது பார்வையில் அவர் தனது கம்பீரத்தை இழந்து விட்டார்; அவர் தனது அழகு மற்றும புத்திக் கூர்மையை இழந்துவிட்டார். புரிந்து கொள்ளப்பட்டவராக இருக்க வேண்டும் என்பதற்காக அவர் வெறுமனே மிகவும் தாழ்வாக இறங்கி வந்து விட்டார். இது தான் சீடரின் கேள்வி :

மடாலயங்களை கட்டுதல், சிலைகளை நிறுவுதல், ஊதுபத்தி கொளுத்துதல், மலர்களை பரப்புதல், அணையா விளக்குகளை ஏற்றுதல், இரவும் பகலும் ஆறு காலமும் பயிற்சி செய்தல், ஸ்தூபிக்களை சுற்றி நடத்தல், உண்ணா நோன்பை கடைப்பிடித்தல் மற்றும் வழிபடுதல் போன்ற புகழத்தக்க காரியங்களைச் செய்வதால் மரணிப்பவர்கள் மெய்ஞ்ஞானத்தை அடைய முடியும் என்று இந்த சூத்திரங்கள் முழுவதிலும் புத்தர் கூறுகிறார்.

இதில் ஸ்தூபிகள் என்பது பழங்கால மெய்ஞ்ஞானிகளின் சமாதிகளைக் குறிக்கிறது. உண்மையில், இந்த முழு சூத்திரமும், புத்த மதத்தின் மகாயானப் பள்ளியின் கண்டு பிடிப்பாகும். புத்தர் இது போன்று எதையும் ஒருபோதும் சொல்லவில்லை, ஆனால் அப்படி அவர் சொல்லி இருந்தால் அவர் தவறாகச் சொல்லி

இருக்கிறார். அது தான் போதி தருமரின் எளிய அணுகுமுறையாக இருந்திருக்க வேண்டும், ஏனெனில் மரணமடையும் தருவாயிலும் கூட புத்தரின் கடைசி வார்த்தைகள், 'எனது சிலைகளை நிறுவாதீர்கள்'' என்று தான் இருந்தது.

ஆரம்பத்தில் இதில் போதி தருமரே கூட 'புத்தர்கள் புத்தர்களை வழிபட முடியாது'' என்று கூறி இருக்கிறார். அதற்கு அவசியம் இல்லை, அது உண்மையில் தாழ்வு படுத்துவதாகும். நீங்களும் கூட உங்களுக்குள் அதே தன்மையுள்ள தன்னுணர்வை வைத்திருக்கறீர்கள். நீங்கள் அதை வெறுமனே தேடிக் கண்டு பிடிக்க வேண்டும். வேறு யாரோ ஒருவர் அதைக் கண்டு பிடித்து இருக்கிறார், ஆனால் அதை வைத்திருப்பது என்பதில், நீங்கள் இருக்கும் அதே விதத்தில் அதை உங்களுக்குள் வைத்து இருக்கிறீர்கள்.

தீபம்காரா என்பவரின் பெயரை போதிதருமர் குறிப்பிடுகிறார். அவர் கௌதம புத்தருக்கு முன்பு இருந்த பழங்கால புத்தர். மேலும் தீபம் காராவின் காலத்தில் கௌதம புத்தர் ஒரு சாதாரண மனிதராக இருந்தார். ஆர்வத்தின் காரணமாக அவர் தீபம்காராவைப் பார்ப்பதற்கு சென்றார். தீபம் காரா என்கிற பெயர் அவருக்கு கொடுக்கப்பட்டது. ஏனெனில் அவரது பிரசன்னம் அந்த அளவுக்கு எளிதில் பரவக்கூடியது. அவரிடத்தில் கள்ளம் கபடமற்று யார் வந்தாலும் உடனடியாக முற்றிலும் இருளாக இருந்த தங்களின் இதயங்களில் தீபம்காராவிடமிருந்து ஒரு ஒளிச்சுடர் குதித்து வந்தது போன்று, கண்ணுக்கு தெரியாத ஏதோ ஒன்று அருகில் வந்தவர்களைப் பிடித்துக்கொள்ளும். மேலும் இப்போது அவர்கள் இதயங்களில் ஒளி ஏற்றப்பட்டு இருக்கும். அதனால் தான் அவரது பெயர் தீபம்காரா புத்தர், என்பது அவருக்கு கொடுக்கப்பட்டது. அதற்கு, வெறுமனே தனது இருப்பு நிலையின் மூலம் மற்றவர்களிடம் ஒளி ஏற்றப்படாமல் இருக்கின்ற விளக்குகளுக்கு ஒளி ஏற்றுபவர் என்று அர்த்தமாகும்.

அந்த நேரத்தில் கௌதம புத்தர் மெய்ஞ்ஞானம் அடையவில்லை. ஆனால் ஆர்வத்தின் காரணமாக, என்ன நடக்கிறது என்று பார்ப்பதற்கு, ஏன் அநேக மக்கள் அவரைப் பார்ப்பதற்கு போகிறார்கள் என்பதைத்தெரிந்து கொள்ள ஒரு சிறு

குழந்தை போல சென்றார். அவரது ஆர்வமானது கள்ளம் கபட மற்றது. அவர் அறிவைப் பெறுவதற்காகவோ அல்லது மெய்ஞ்ஞானம் அடைவதற்கோ அல்லது வேறு எதற்கோ அங்கு போகவில்லை. அதில் எந்த பேராசையும் கிடையாது, அதில் எந்த லட்சியமும் கிடையாது. அது வெறும் ஆச்சரியத்தினால் சென்றதாகும். தீபம்காராவிடம் சென்று வந்த மக்கள், அவர் முன்பு அமைதியாக அமர்ந்து இருந்தால், ஏதோ ஒன்று அவர்களுக்குள் மாற்றப்பட்டதாகவும், வீட்டிற்கு அவர்கள் மாறுபட்ட மனிதர்களாக திரும்பியதாகவும் கூறியதை கௌதம புத்தர் கேள்விப்பட்டார். அவரிடம் சென்று வநதவர்களின் செயல்கள் மாறிவிட்டன. பேராசை மறைந்து விட்டது. லட்சியம், கோபம் மறைந்துவிட்டது. அவரைப் பார்த்து விட்டு வந்த மக்கள் அந்த அளவிற்கு அழகானவர்களாகவும், அந்த அளவுக்கு நறுமணம் வீசுபவர்களாகவும் மாறிவிட்டதைக் கண்ட கௌதம புத்தர் அந்த மனிதரைப் பார்க்க விரும்பினார். அந்த மனிதர் ஓர் அற்புதமானவர். அவர் எதையும் செய்யவில்லை, என்றாலும் கூட ஏதோ ஒன்று நடந்தது.

குரு ஒருபோதும் எதையும் செய்யமாட்டார். ஒளிச் சுடரோடு எரிந்து கொண்டிருக்கிற ஒரு மெழுகுவர்த்தியை ஒளி ஏற்றப்படாத வேறு ஒரு மெழுகுவர்த்தியின் அருகில் கொண்டு வருவது போன்று ஒரு குருவின் ஒட்டுமொத்த வேலையும் எப்படியாவது உங்களை மிக அருகில் கொண்டு வருவதேயாகும். ஒரு குறிப்பிட்ட நிலையில், எரிந்து கொண்டிருக்கிற மெழுகு வர்த்தியில் இருந்து எரியாத மெழுகுவர்த்தியானது ஒளியைப் பெற்றுக் கொள்கிறது. எரிந்து கொண்டிருக்கின்ற மெழுகு வர்த்திக்கு எந்த விதமான இழப்பு கிடையாது. ஆனால் எரியாமல் இருந்த மெழுகுவர்த்திக்கு ஒரு அபரிமிதமான பொக்கிஷம் கிடைத்துவிடும். எரியாமல் இருக்கும் போது அது உயிரற்று இருந்தது. ஆனால் அதில் சுடர் ஏற்றப்பட்டவுடன், அதற்கு உயிர் வந்து விட்டது. இப்போது இந்த மெழுகு வர்த்தியால், முதல் மெழுகுவர்த்தி செய்து வந்ததைப் போல, இதுவும் கூட அதே வழியில் இருட்டை ஒழிக்க முடியும்.

தீபம் காரா அப்படிப்பட்ட ஒரு மனிதர், உண்மையான, ஒவ்வோர் உயர்ந்த குருவும் அப்படிப்பட்ட ஒரு மனிதராகத்தான்

இருக்கிறார் அவரைச் சுற்றி நடப்பவை எல்லாம் அவரால் செய்யப்படுபவை அல்ல. அவர் செய்வதெல்லாம் வெறுமனே உங்களை அருகில் கொண்டு வருவதும், தன்னை உங்களுக்கு கிடைக்கும்படி செய்வதும், உங்களுக்கு ஒரு புதிர் போன்று அவர் இருப்பதுமேயாகும். அதனால்தான் உங்களை அறியாமலேயே காந்தமானது மற்ற பொருள்களை கவர்ந்து இழுப்பது போன்று நீங்கள் இழுக்கப்படுகிறீர்கள். ஒரு குறிப்பிட்ட தூரத்திற்குள் நீங்கள் வந்துவிடும் போது திடீரென்று நீங்களும் ஒளிச்சுடர் ஏற்றப்பட்டு ஒளி வீசுகிறீர்கள். உங்களிடம் உள்ள பழைய மனிதன் இறந்து போய், ஒரு புதிய மனிதன் பிறக்கிறான்.

இந்த சூத்திரம் முற்றிலும் தவறானது. இது கௌதம புத்தரின் பேச்சு அல்ல. ஏனெனில் அவரைப் போன்ற புரிதல் உள்ள மனிதர் இப்படி *மடாலயங்களை கட்டுதல், சிலைகளை நிறுவுதல், ஊதுபத்தி கொளுத்துதல்.... போன்ற புகழ் மிக்க காரியங்களைச் செய்வதன் மூலம் மரணிப்பவர் மெய்ஞ்ஞானம் அடைய முடியும் என்று மக்களிடம்* அவர் கூறமாட்டார். ஊதுபத்தி கொளுத்து வதற்கும் மெய்ஞ்ஞானம் அடைவதற்கும் ஏதாவது தொடர்பு உள்ளது என்று நீங்கள் காண முடிகிறதா? நீங்கள் மலை போன்ற அளவு ஊதுபத்திகளை கொளுத்தலாம். ஆனால் இதில் நீங்கள் மெய்ஞ்ஞானம் அடைவதற்கான எந்த விதமான தர்க்க அறிவுடைய உதவுதலும் இல்லை. நீங்கள் அதில் எரிக்கப்பட்டுவிடலாம். அந்த ஒரு காரியம் மட்டுமே நடக்கும். மடாலயங்களை கட்டுதல், ஆனால் நீங்கள் ஒரு துறவி இல்லையே! வேறு முட்டாள்கள் துறவிகள் ஆவதற்கு நீங்கள் மடங்களை கட்டப் போகிறீர்களா? அது எப்படி உங்களது மெய்ஞ்ஞானமாக ஆகும்? கௌதம புத்தர் மெய்ஞ்ஞானம் அடைவதற்கு முன்பு எத்தனை மடாலயங்களைக் கட்டினார்? அவர் எவ்வளவு நறுமணப் பொருள்களை கொளுத்தினார்? எத்தனை மலர்களை அவர் பரப்பினார்? எத்தனை அணையா விளக்குகளை அவர் ஏற்றினார்?

கிடையாது. இது கௌதம புத்தரின் பேச்சே அல்ல, மகாயானப் பள்ளியின், ஒரு குறிப்பிட்ட இனம் மற்றும் கோட்பாட்டின் கண்டுபிடிப்பாகும். ஏன் இப்படிப்பட்ட

விஷயங்கள் உருவாக்கப்பட்டன என்பதற்கு ஒரு வரலாற்று காரணமும் இருக்கிறது. புத்தர் ஒரு நேர்மையான மனிதராக இருந்தார். விளைவுகள் ஏதுவாக இருந்தாலும் கூட அவர் சரியானவற்றையே கூறினார். உதாரணமாக அவர், 'எல்லாப் பண்டிதர்களும், அறிவாளிகளும், பிராமணர்களும் முட்டாள்கள், அவர்கள் ஒட்டுண்ணிகள். பல நூற்றாண்டுகளாக அவர்கள் மக்களின் ரத்தத்தை உறிஞ்சி கொண்டு இருந்தார்கள் என்று கூறினார். வேதங்களை அவர் 'வெறும் குப்பைகள்'' என்று அழைத்தார். வேதங்கள் என்பவை இந்துக்களால் மிகுந்த மரியாதை செலுத்தப்பட்டவை. எனவே யாராவது அதை குப்பை என்று சொல்வதற்கு கண்டிப்பாக அவருக்கு மிகப்பெரிய தைரியம் வேண்டும். அவர், இந்து அவதாரங்கள் எதையும் ஏற்றுக் கொள்ள வில்லை. அவற்றுக்கு எந்த மதிப்பும் இல்லை என்றார். உதாரணமாக பரசுராமர் இந்துக் கடவுள்களின் அவதாரங்களில் ஒருவர் ஆவார். மிகப் பெரிய முனிவர் ஒருவரின் மகனாக அவர் கருதப்பட்டார். எல்லாக் கணவன்களும் தங்களது மனைவியை சந்தேகிப்பது போல, மற்றும் எல்லா மனைவிகளும் தங்களது கணவன்களை சந்தேகிப்பது போல, அந்த முனிவரும் மிகவும் சந்தேகப் பேர்வழியாக இருந்தார். அது ஒன்று மட்டுமே அவர்களது உறவு. இறுதியாக தந்தையானவர் தான் சந்தேகப்பட்டது சரிதான் என்று நினைத்தார். அதற்கு ஆதாரங்கள் இருந்திருக்கலாம் அல்லது இல்லாமலும் போய் இருக்கலாம். இந்த விஷயத்தில் அவரால் நிச்சயமாக கூற முடியவில்லை. எனவே அவர், தனது மகன் பரசுராமரிடம் அவரது தாயின் தலையை வெட்டி எடுத்துக் கொண்டு வரும்படி கட்டளையிட்டார். ஏன் என்று கேட்காமல் பரசுராமரும் சென்றார். இது ஒரு சிறிய விஷயம் அல்ல! தாயின் தலையை வெட்டி எடுத்துக் கொண்டு வந்து அவரது தந்தையிடம் கொண்டு வருவது என்பது சிறிய விஷயம் அல்ல.

அதன் பின்னர்; தந்தை மகனிடம், ' நான் அவள் மீது சந்தேகப்பட்டுக் கொண்டே இருந்தேன், ஆனால் இப்போது அவள் ஒரு மிகப்பெரிய போர் வீரனோடு காதல் வயப்பட்டிருந்தாள் என்பதற்கான குறிப்பிடட சாட்சியங்கள் என்னிடம் உள்ளன. என்றார். பரசுராமரும் அவரது குடும்பமும் பிராமணர்

என்னும் ஜாதியைச் சார்ந்தவர்கள். பரசுராமர் அவரிடம் 'நீங்கள் கவலைப்படாதீர்கள். சத்ரிய குலத்தை சேர்ந்த எந்த ஒரு பக்தனையுமே நான் உயிரோடு விடமாட்டேன்'' என்று கூறினார்.

இந்தக் கதை மிகைப்படுத்தப்பட்டு இருக்கலாம். ஆனால் இது அந்த மனிதனின் குணத்தைக் காட்டுகிறது. இந்த ஒட்டு மொத்த உலகிலும் உள்ள சத்ரியர்களை அநேக, அநேக முறை அவன் கொன்றதை இது காட்டுகிறது. ஆனால் இந்த புது சத்திரியர்கள் எங்கிருந்து வருகிறார்கள்? ஒரு ஆச்சரியமான விஷயத்தை இந்து சமுதாயம் ஏற்றுக் கொள்கிறது. யாரும் எப்போதும் இதை நினைத்துப் பார்ப்பதில்லை. தங்களிடம் மிகப்பெரிய கலாசாரம் உள்ளது என்று இந்துக்கள் கூறிக் கொண்டே செல்கின்றனர். ஆனால் அவர்கள் ஒருபோதும் அஸ்திவாரத்தை பார்ப்பதில்லை; அவர்களது கலாசாரம் என்பது வெறும் ஒரு போலியான பெயர்.

பிராமண முனிவர் ஒருவரிடம் வந்து ஒரு பெண்மணி தனக்கு ஒரு குழந்தை வேண்டும் என்று கேட்டால், அதன் பின்னர் அந்தப் பெண்ணை காதலித்து அவளைக் கர்ப்பமடையச் செய்வது ஒரு பிராம்ண முனிவரின் கடமை என்று இந்து சமுதாயமானது ஏற்றுக் கொண்டது. அவர் அவளை மறுத்து விடக்கூடாது. ஆகவே பரசுராமன் சத்திரியர்களின் தலைகளை வெட்டிக் கொண்டே போனான்; அங்கே நிறைய பேர் விதவைகள் ஆகிவிட்டனர். எனவே அவர்கள் முனிவர்களிடம் சென்றனர். இது ஒரு நல்ல தொழில், மிகப்பெரிய சதிஆலோசனை!

அந்த ஒட்டு மொத்த நாடும் விபச்சாரம் செய்கின்ற நிலையில் இருந்தது. ஆனால் பரசுராமன் கொன்று கொண்டே இருந்தான். இப்படிப்பட்டவன் செயலானது கடவுளின் ஒரு குணமாக ஏற்றுக் கொள்ள முடியாதது. இது தர்க்க அறிவு உள்ளதாக தெரியவில்லை. அவனது தாய் ஒரு சத்திரியனோடு காதல் கொண்டிருந்தாள் என்றால் அவன் வெறுமனே அந்த ஒரு மனிதனை மட்டுமே கொன்றிருக்க வேண்டும். அவனை இந்துக்கள் கடவுளின் ஒரு அவதாரமாக நினைப்பதால் இந்த சலுகையை மட்டுமாவது நாம் பரசுராமனுக்கு கொடுக்கலாம். ஆனால் அவனது நாடு மட்டுமல்ல, இந்த உலகம் முழுவதிலும்

உள்ள சத்திரியர்களைக் கொள்வது என்பதற்கு பின்னால் எந்த ஒரு தர்க்க அறிவும் இருப்பதாக தெரியவில்லை. அவனது தந்தை என்ன கேட்டார் என்பதும் கூட நிச்சயமாகத் தெரியவில்லை. பரசுராமன் அவனது தந்தை கூறுவதற்கான ஆதாரத்தை கேட்டிருக்க வேண்டும், நிருபணத்தை கேட்டிருக்க வேண்டும். அவனது தந்தை வெறுமனே ஒரு பொறாமை பிடித்த மனிதனாக இருந்திருக்க வேண்டும்.

இப்போது கௌதம புத்தர் பரசுராமனை கடவுளின் அவதாரங்களில் ஒன்றாக ஏறறுக்கொள்ள முடியாது. பரசுராமர் கடவுளின் ஒரு அவதாரம் என்றால் அதன் பின்னர் சாத்தானின் அவதாரமாக யார் இருப்பார்கள்? புத்தர், ராமனையும் கூட கடவுளின் ஒரு அவதாரமாக ஏற்றுக் கொள்ள மாட்டார்; ஏனெனில் சில பிராமணர்கள் வேத மந்திரங்களைச் சொல்லிக் கொண்டு இருந்த போது, ஒரு சூத்திரன், ஒரு இளைஞர், ஒரு மரத்தின் பின்னால் மறைந்து கொண்டு அதைக் கேட்டு விட்டான் என்பதற்காக அவனது காதுகளில் ஈயத்தை காய்ச்சி ஊற்றினான். வேதங்களை சூத்திரர்கள் படிப்பதற்கு அனுமதி கிடையாது. அதைக் காதால் கேட்பதற்கும் கூட அனுமதிக்கப்படவில்லை. ஒரு நாட்டின் நான்கில் ஒரு பகுதி மக்கள் அதன் சமய புனித நூல்களை காது கொடுத்து கேட்பதற்கு கூட அனுமதிக்கப்படவில்லை என்னும் போது, இந்த தேசமானது என்ன விதமான கலாசாரத்தை உருவாக்கி இருக்கிறது?

இந்த இளைஞன், வெறுமனே ஆர்வக் கோளாறினால் மரத்தின் பின்னால் ஒளிந்து கொண்டு கேட்டான். அதை அவன் புரிந்து கொண்டு இருக்கவும் முடியாது. ஏனெனில் வேதங்கள் சமஸ்கிருதத்தில் இருந்தன. சமஸ்கிருதம் ஒரு போதும் மக்கள் பேசுகின்ற மொழியாக இருந்தது கிடையாது. அது எப்போதும் பூசாரிகளின் மொழியாகவே இருந்தது. எனவே அவன் அதை கேட்டாலும் கூட அவனால் எதையும் புரிந்துகொண்டிருக்க முடியாது. இது ஒரு குற்றம் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? இதற்காக, அவனது காதுகளில் காய்ச்சிய ஈயத்தை ஊற்றி ஒரு இளைஞனை அவன் பேதங்களைக் காதால் கேட்ட பாவத்தை செய்தான் என்று அவனை அழிப்பது மதிப்புள்ளதா? அந்த இளைஞன் இறந்துவிட்டான்.

புத்தரால் ராமரை ஏற்றுக் கொள்ளமுடியவில்லை. அவரால் கிருஷ்ணரையும் கூட ஏற்றுக் கொள்ள முடியவில்லை. கிருஷ்ணர் பெண்கள் மீது பைத்தியமாக இருந்தார். ஆனால் அவர் பதினாறு ஆயிரம் பெண்களை சேர்த்தார். அவரது மனம் கவர்ந்த பெண் யாராக இருந்தாலும் அவள், அவனது குடும்பத்தில் இருந்து எடுக்கப்பட்டு விடுவாள். அவள் கன்னியாக இருக்கலாம், அவள் திருமணம் ஆனவளாகவும் இருக்கலாம், அவளுக்கு குழந்தைகள் இருக்கலாம், அவளுக்கு ஒரு கணவன் இருக்கலாம், அவர் தனது வயதான மாமனாரை அல்லது மாமியாரை கவனித்துக் கொண்டு இருப்பவராகவும் இருக்கலாம். பதினாறு ஆயிரம் பெண்களை அவர் வெறுமனே தனது தோள்களில் தூக்கிக் கொண்டு வந்து விடுவார். அவர்கள் ஏதோ கால்நடைகள் போன்று நடத்தப் பட்டனர். கிருஷ்ணருக்கு அந்த பதினாறு ஆயிரம் பெண்களின் பெயர் கூட தெரிந்திருக்கும் என்று நான் நினைக்கவில்லை. ஆனால் அவர் பலம் வாய்ந்தவராக இருந்தார். அவரிடம் மிகப்பெரிய போர்ப்படை இருந்தது, அவர் மிகப்பெரிய அரசராகவும் இருந்தார். இப்படிப்பட்ட முட்டாள்தளமான, மாசுபடிந்த மனிதரை, கடவுளின் ஒரு அவதாரமாக புத்தரால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை.

புத்தர் மிகவும் நேர்மையானவர். அவர், 'எல்லாச் சிலைகளும், எல்லாக் கோயில்களும், எல்லா வேதங்களும், மக்களைச் சுரண்டுவதற்காக வஞ்சகம் நிறைந்த மதகுருக்களால் உருவாக்கப்பட்டவை'' என்று கூறினார். அப்படிப்பட்ட புத்தர் தனது சொந்த மக்களிடம் மடலாயங்களை கட்டுவதாலும், சிலைகளை நிறுவுதல், ஊதுபத்திகளை கொளுத்துதல், மலர்களை பரப்புதல், அணையா விளக்குகளை ஏற்றுதல், பகலும் இரவும் ஆறு வேளைகளிலும் பயிற்சிச் செய்தல், ஸ்தூபிக்களை சுற்றி நடத்தல், உண்ணா நோன்பு கடைபிடித்தல் மற்றும் வழிபாட்டினாலும் மெய்ஞ்ஞானத்தை அடைய முடியும் என்று எப்படி சொல்ல முடியும்?

புத்தர் வழிபாட்டிற்கு எதிரானவர், அவர் சிலைகளுக்கு எதிரானவர். அவர் இறக்கும் போது அவரது கடைசி வார்த்தை களை நான் உங்களுக்கு மீண்டும் நினைவுபடுத்துகிறேன்.

'எனக்கு சிலைகள் வைக்காதீர்கள், எனது பெயரில் கோயில்கள் கட்டாதீர்கள், என்னை வழிபட ஆரம்பிக்காதீர்கள் ஏனெனில் வழிபாடு உங்களை எங்குமே வழிநடத்தி செல்லாது. நான் உங்களுக்கு தியானத்தின் பாதையை காட்டி இருக்கிறேன். எனவே தியானம் செய்யுங்கள். உங்களது தியானத்தில் நான் தோன்றினால், தயங்காதீர்கள், உடனடியாக எனது தலையை வெட்டிவிடுங்கள்'', என்று கூறினார். இப்படி சொல்கின்ற மனித னிடமிருந்து இந்த சூத்திரங்கள் வருவதற்கான சாத்தியங்கள் உண்டு என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

போதிதருமர், 'இவை புத்தரின் வார்த்தைகள் அல்ல'' என்று வெறுமனே கூறி இருக்க வேண்டும். ஆனால் அவர் அப்படி சொல்லவில்லை. அங்கு தான் அவர் எனது கண்களுக்கு மிகவும் கீழே விழுந்து விடுகிறார்.

அவர் அப்படி சொல்லவில்லை. ஏனெனில் புத்தமதத்தினர் சீனாவில் எத்தனை அநேக மடாலயங்களையும், அநேக கோயில்களையும், அநேக சிலைகளையும் அமைக்க முடியுமோ அத்தனை அமைப்பதற்கு முயற்சித்துக் கொண்டு இருந்தார்கள். சீனாவில் பத்தாயிரம் புத்தர் சிலைகளுடன் ஒரு கோயில் இருக்கிறது. ஒரு ஒட்டு மொத்த மலையே ஒரு கோயிலாக வடிவமைக்கப்பட்டுள்ளது. உலகிலேயே, இப்படி பத்தாயிரம் சிலைகள் உள்ள கோயில் இது ஒன்றுதான் உள்ளது. எனவே இது சரியல்ல என்று ஏதாவது கூறுவது சீனர்களை புத்த மதத்திற்கு மாற்றிக் கொணடிருந்த பௌத்தர்களுக்கு எதிரானதாக போய்விடும் என்று நினைத்து போதிதருமர் அப்படி கூறவில்லை. சீன மக்கள் துறவிகளுக்கு உணவு அளித்தால், புத்தரை அவர்கள் வழிபட்டால், அவர்கள் மடாலயங்களுக்கு நன்கொடை அளித்தால், அவர்கள் மெய்ஞ்ஞானம் அடைவார்கள் என்கிற உறுதியை சீன மக்களுக்கு புத்த மதத்தினர் அளித்து வந்தனர்.

போதி தருமர் ஒரு நொடிப் பொழுது தயங்கி இருப்பார், ஆனால் இறுதியில், ஒரு அமைப்பு ரீதியான மதத்தின் ஒரு அங்கமாக இருக்கின்ற எலிப் பொறிக்குள் விழுந்து விட்டார். அமைப்பு ரீதியான மதங்கள் உங்களை எங்குமே வழிநடத்தாது. இப்படிப்பட்ட முட்டாள்தனமான விஷயங்களை எப்போதும்

வலியுறுத்தி வந்தன. ஆனால் இத்தகைய முட்டாள்தனங்கள், உங்களால் அந்த அமைப்பு ரீதியான மதங்களுக்கு உதவின. மற்றபடி பத்து லட்சம் கத்தோலிக்க பாதிரியார்கள் மற்றும் கன்யாஸ்திரியர்களுக்கு யார் சாப்பாடு போடுவார்கள்? ஆயிரக்கணக்கான கத்தோலிக்க மடாலயங்களின் செலவுகளை யார் கவனிப்பார்கள்? ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமைகளில் பாதிரியார்களின் பிரசங்கத்தின் போது இடைவிடாமல், மக்கள் நன்கொடை அளிக்க வேண்டும் என்று நினைவுறுத்த வேண்டும். ' நன்கொடைகள் உங்களை பாவத்தில் இருந்து காப்பாற்றும்'' என்று இடைவிடாது பிரசங்கத்தின் போது வலியுறுத்த வேண்டும். பாவத்திலிருந்து பாதுகாக்கும் என்பது மெய்ஞ்ஞானம் என்பதற்கான கிறிஸ்தவர்களின் வார்த்தையாகும்.

அந்த சீடர்களால் இதைக் காண முடிகிறது, ஆகவே அவர்கள் கீழ்க்கண்டவாறு கேட்கின்றனர்:

*ஆனால், மனதைக் கவனிப்பது என்பது ஏனைய எல்லா பயிற்சிகளையும் உள்ளடக்கி விடுகிறது என்றால், அதன் பின்னர் இப்படிப்பட்ட காரியங்கள் தேவைக்கு அதிகமானவை போன்று தோன்றக் கூடும்.*

மனதைக் கவனிக்கின்ற ஒரு செயல்முறையானது மெய்ஞ்ஞானத்தை உருவாக்குகிறது என்றால், அதன் பிறகு இந்த விஷயங்கள் எல்லாம் ஏன் தேவைப்படுகிறது? இந்த விஷயங்கள் எல்லாம் மனதில் இருந்து வருகின்றன; இவை மனதை நன்றாக பலப்படுத்துகின்றன. ஆனால் நீங்கள் செய்ய வேண்டிய தெல்லாம் மனதை பலவீனமடையச் செய்து, அதற்கு அப்பால் செல்வதைத் தான். எனவே மனதைக் கடந்து அதற்கு அப்பால் சென்று விட்டால், உங்களிடமிருந்து அதனால் எந்த ஒரு சக்தியையும் எடுத்துக் கொள்ள முடியாது. எனவே மனமானது பசி பட்டினியால் இறந்து விடுகிறது. எனவே நீங்கள் மனம் என்று எதையும் பெற்றிராமல், மனம் அற்ற தூய்மையான அமைதியில் இருந்தால், நீங்கள் மெய்ஞ்ஞானத்தை அடைந்து விட்டீர்கள்.

'நீங்கள் கூட வெறுமனே மனதைக் கவனியுங்கள். அதுவே போதுமானது என்று கூறி இருக்கிறீர்கள். அதன் பின்னர்

இப்படிப்பட்ட சடங்குகளின் அவசியம் என்ன?'' என்று சீடர்கள் முற்றிலும் சரியான கேள்வியைக் கேட்கிறார்கள். இப்போது அவர் பிடிபட்டு விட்டார். 'இதே வார்த்தைகள் புத்தருடையவை அல்ல என்றார். அவர் மகாயான புத்த மதத்திற்கு எதிரானவராக ஆகி விடுவார். ஆனால் அவர் அந்த பிரிவைத்தான் சார்ந்திருக்கிறார்.

அதனால்தான் நான், எந்தஒரு பிரிவையும், எந்த ஒரு இனத்தையும், எந்த ஒரு மதத்தையும் சார்ந்து இருக்காதீர்கள் என்று நான் வலியுறுத்துகிறேன். இல்லையெனில் உங்களால் உண்மை நிலைக்கு முழுவதும் அர்ப்பணிப்பு உள்ளவராக உங்களால் இருக்க முடியாது. உண்மைக்குரிய அர்ப்பணிப்பிற்கு பக்கத்திலேயே வேறு அர்ப்பணிப்புகளை செய்வது ஆபத்தானது. அதன் பின்னர் நீங்கள் அந்த அடுத்த அர்ப்பணிப்பையும் கூட எப்படியாவது சமாதானப்படுத்த விரும்புவீர்கள்.

போதிதருமர் போன்றவர்களாலேயே சத்தியத்தைக் கூறமுடியவில்லை. சீனாவிற்குள் நுழைந்த முதல் மெய்ஞ்ஞானி அவர்தான். எனவே புத்தரை வழிபடுங்கள், ஊதுபத்தி கொளுத்துங்கள், பூக்களை போடுங்கள், கோயில்களை கட்டுங்கள், சிலைகளை வையுங்கள், மடலாயங்களைக் கட்டுங்கள் அப்போது மெய்ஞ்ஞானம் அடைவீர்கள் என்று அறுநூறு ஆண்டுகளாக ஆயிரக்கணக்கான புத்தமதத்துறவிகள் உருவாக்கி உள்ள அந்த ஒட்டு மொத்த கம்பீரமான கட்டடமும் போதி தருமர் உண்மை நிலையைக் கூறினால், பொத் என்ற சத்தத்துடன் இடிந்து விழுந்து விடும்; ஏனெனில் சீன மக்களில் யாரும் அதுவரை மெய்ஞ்ஞானம் அடையவில்லை. ஒட்டு மொத்த சீனாவும், உண்மையில் உண்மை நிலை என்பது என்ன, சத்யம் என்பது என்ன என்பதை ஒரு மெய்ஞ்ஞானியிடமிருந்து கேட்பதற்காக காத்துக் கொண்டு இருந்தது. ஆனால் போதிதருமரும் கூட ஒரு வியாபார நிறுவனத்தை சார்ந்தவர் என்பதால், அவர் சத்தியத்திற்கு ஆதரவாக இருப்பதற்கு மாறாக வியாபாரத்திற்கு ஆதரவாக இருப்பதற்கு முடிவு செய்து விட்டார்.

நான் ஒரு சிறு கதையை எப்போதும் கூறுவதுண்டு, ஒரு சிறிய கிறிஸ்துவ பள்ளிக்கூடம். சிறு குழந்தைகளுக்குரிய மிக அருகில் உள்ள ஒரே பள்ளிக்கூடம். அந்த ஆசிரியர் குழந்தை

களிடம் 'இந்த பூமியில் நடந்து சென்ற மனிதர்களிலேயே இயேசு கிறிஸ்துதான் மிக உயர்ந்த மனிதராக இருக்கிறார்'' என்று கிட்டத்தட்ட ஒரு மணி நேரமாக கூறிக்கொண்டு இருந்தார். அதன் பின்னர் அவர் மாணவர்களிடம் இந்த பூமியில் நடந்து சென்ற மனிதர்களிலேயே மிகவும் உயர்ந்த மனிதர் யார்?'' என்று கேட்டார்.

ஒரு அமெரிக்க சிறுவன், '' ஆபிரகாம் லிங்கன்'' என்றான். அதற்கு அவர், 'மோசமான பதில் இல்லை ஆனால் மிகவும் சரியாக பதில் அல்ல'' என்றார்.

ஒரு ஆங்கிலேய சிறுமி எழுந்து நின்று ' வின்ஸ்டன் சர்ச்சில்'' என்றாள். ஒரு விஷயத்தை விளக்குவதற்கு தான் ஒரு மணி நேரத்தை வீணாக்கியதை அந்த ஆசிரியரால் நம்ப முடியவில்லை. எனவே அவர் அந்த சிறுமியிடம், 'மோசம் இல்லை, ஆனால் இது இன்னமும் சரியான பதில் இல்லை'' என்றார்.

அதன் பின்னர் எப்போதும் எதுவுமே பேசாத ஒரு சிறுவன் கையை உயர்த்தி எழுந்து நின்றான். உடனே ஆசிரியை 'நீ ஒருபோதும் பேசமாட்டாய், முதல் தடவையாக நீ கையை உயர்த்துகிறாய்!'' என்றார். அவன் கூறும் பதில் நிச்சயமாக சரியாக இருக்காது என்று பயந்தார். ஆனால் அந்த சிறுவன் 'இயேசு கிறிஸ்து'' என்றான். இதற்கு முன்பு கூறிய பதில்களால் அந்த ஆசிரியை அதிர்ச்சி அடைந்தார். ஆனால் இந்த சிறுவனின் பதிலால் அவர் மேலும் அதிகமாக அதிர்ச்சி அடைந்தார். ஏனெனில் அந்த சிறுவன் ஒரு யூதன்.

வகுப்பு முடிந்த உடன் ஆசிரியை அந்த பையனை தனியே அழைத்து சென்று,.' ஹைமி, நீ ஒரு யூதன் தானே?'' என்று கேட்டார்.

உடனே அவன் 'ஆம் நான் யூதன் தான்'' என்றான்.

அதற்கு ஆசிரியை, அப்படியானால் உண்மையில் இந்த பூமியில் நடந்து சென்ற மனிதர்களில் இயேசுகிறிஸ்து தான் உயர்ந்தவர் என்று நீ நினைக்கிறாயா?'' என்று கேட்டார்.

அந்த சிறுவன் சிரித்துக் கொண்டே ' வியாபாரம் என்று வந்து விட்டால் வியாபரம் தான். எனது இதயத்தின் ஆழத்தில்

மோசஸ்தான் அந்த மனிதா் என்று அறிந்து கொண்டிருக்கிறேன். இயேசுகிறிஸ்து அல்ல, அவர் மிகவும் குள்ளமானவர். ஆனால் வியாபாரம் என்று வந்து விட்டால் வியாபாரத்தை தான் பார்க்கவேண்டும்'' என்றான். ஏனெனில் சரியாக பதில் சொல்கிறவருக்கு ஒரு பெரிய வெற்றிக் கோப்பை கொடுப்பதாக கூறப்பட்டது. எனவே ஹைமி தனது உயரத்தை விட உயரமான அந்த வெற்றிக் கோப்பையை தூக்கிக் கொண்டு சென்றான்.

ஆனால், நீங்கள் அந்த சிறு குழந்தையை மன்னித்து விடலாம். அவன் மிகவும் தர்க்க அறிவுடன் கூறுகிறான். ' பந்தயத்தில் ஜெயிப்பதற்கு, ஒருமுறை வகுப்பறையில் ''இயேசு கிறிஸ்து'' என்று கூறினால் என்ன நடந்து விடப் போகிறது. யார் ஜெயிக்கப் போகிறார்கள் என்பதற்கான விதிகளை நான் அறிவேன், எனவே தேவை இல்லாமல் மோசஸை உள்ளே கொண்டு வந்து நான் ஏன் தோல்வி அடைய வேண்டும்? எனது இதயத்தின் ஆழத்தில் இந்த பூமியில் நடந்து சென்றவர்களில் மோசஸ்தான் மிக உயர்ந்த மனிதர் என்பதை நான் அறிவேன்,'' என்று அவன் கண்டிப்பாக நினைத்திருக்க வேண்டும்.

ஆனால் மெய்ஞ்ஞானம் அடைந்த மனிதர்களாக இருந் தாலும் கூட, தங்களின் அர்ப்பணிப்பானது அமைப்பு ரீதியாக மதத்திற்கா அல்லது உண்மைக்கா என்று முடிவு எடுக்க வேண்டும் என்னும் போது அவர்கள் தங்களின் அமைப்பிற்கே அர்ப்பணிப்பை கொடுப்பதற்கு முடிவு செய்கிறார்கள். இது உண்மையில் வருத்தப்படக் கூடியது. போதிதருமர் கொடுக்கின்ற பதில்கள் வெறுமனே சம்பந்தம் இல்லாதவை. புத்தர்தான் இந்த சூத்திரத்தைப் பேசினார் என்பதை நிரூபிப்பதற்காக ஏதோ ஒன்றை கூறுவதற்கு முயற்சிக்கிறார்.

இப்படிப்பட்ட பேச்சு புத்தரால் பேசப்பட்டது என்பதை நான் முற்றிலும் மறுக்கிறேன். அது அவரது போதனைக்கு எதிராக, அவரது வாழக்கைக்கு எதிராக, அவரது பாதைக்கு எதிராக போகிறது.

*புத்தரின் இந்த சூத்திரங்கள் எண்ணிக்கையற்ற உருவகங் களைக் கொண்டுள்ளது என்று போதிதருமர் கூறினார்.*

இப்போது உங்களால் தந்திரத்தைப் பார்க்க முடிகிறதா? இப்போது அவரால் இது சரி என்றும் சொல்ல முடியவில்லை, சிறு தவறு என்றும் சொல்ல முடியவில்லை. அவர் ஒரு நடு வழியைக் கண்டு பிடித்து புத்தர் உருவகங்களில் பேசுகிறார் என்று கூறுகிறார்.

ஏனெனில் மரணிப்பவர்கள் குறுகிய மனங்களைக் கொண்டவர்கள். ஆனால் அவர் யாரிடம் பேசிக் கொண்டு இருக்கிறார்? மரணிப்பவர்களிடமா அல்லது அழிவற்றவர்களிடமா? புத்தரின் பேச்சை கேட்க வந்தவர்கள் குறுகிய மனத்தினர் என்றால், தனது பேச்சை கேட்க வந்தவர்கள் உயர்ந்த மனதைக் கொண்டவர்கள் என்று போதிதருமர் நினைக்கிறாரா? எந்த ஒரு மனிதருக்கும் எப்போதும் இல்லாத அளவுக்கு புத்தருகக்கு மிகவும், புத்திக் கூர்மையுள்ள கூட்டத்தினர் அவ்ரது பேச்சைக் கேட்டனர். போதிதருமர் சமீபத்தில் மதமாற்றம் செய்யப்பட்ட புத்த மதத்தினரிடம் பேசிக் கொண்டு இருக்கிறார்.

புத்தர் உயர்ந்த நிலையைக் குறிப்பிடுவதற்கு, தெளிவாகத் தெரியக் கூடியவற்றைப் பயன்படுத்தினார்,

*இது தந்திக்காரத் தனம், மன்னிக்க முடியாது. உட்புறத்தில் பேணி வளர்ப்பதற்கு பதிலாக வெளிப்புற வேலைகளில் மனதை ஒருமுகப்படுத்துவதன் மூலம் ஆசீர்வாதங்களைத் தேடுகின்ற மக்கள் சாத்தியமில்லாத ஒன்றிற்கு முயற்சி செய்து கொண்டு இருக்கிறார்கள்.*

ஆனால் அவருக்கு உண்மைநிலை தெரிகிறது. எனவே உண்மை நிலையை அடக்கி கொண்டு கூட்டத்தோடு கூட்ட மனதோடு செல்ல வேண்டும் என்று அவர் முயற்சி செய்தாலும் கூட எப்போதாவது ஒருமுறை உண்மை நிலையானது மேலே எழுந்து வருகிறது. உட்புறத்தில் பேணி வளர்ப்பதற்கு பதிலாக, வெளிப்புற வேலைகளில் ஒரு முகப்படுத்துதல் மூலம் ஆசீர்வாதங்களை தேடுகின்ற மக்கள் சாத்தியமில்லாத ஒன்றிற்கு முயற்சி செய்கிறார்கள் என்று அவர் கூறுகிற போது அது உண்மையாகிறது.

*ஒரு மடாலயம் என்று நீங்கள் அழைப்பதை நாங்கள் ஒரு சங்கராமா, தூய்மையான ஒரு இடம் என்று நாங்கள் அழைக்கிறோம்.*

இது முற்றிலும் தவறானது. சங்கராமா என்பது மிகச்சரியாக ஒரு மடாலயம் தான். அது மடாலயம் என்பதில் இருந்து வேறுபட்டது அல்ல; இரு ஒரு உருவகம் அல்ல. கடந்த இரண்டாயிரம ஆண்டுகளாக சீனாவில் ஆயிரக்கணக்கான மடாலயங்கள் இருந்தன. முப்பது ஆண்டுகளுக்கு முன்பு ஏற்பட்ட கம்யூனிச புரட்சியில் இருந்து அநேக மடாலயங்கள் அழிக்கப்பட்டு விட்டன; மற்றபடி பல லட்சம் துறவிகள் மக்களின் ரத்தத்தில் உயிர்வாழ்ந்து கொண்டிருந்தனர். ஆனால் அவை மீண்டும் வந்து கொண்டிருக்கின்றன.

மா சே துங்கின் பிடிவாதமான, விடாப்பிடியான, பாசிச மற்றும் கம்யூனிஸ மனமானது மடாலயங்களை, ஆஸ்பத்திரி களாகவும், பள்ளிகளாகவும் மாற்றியது. துறவிகளை வயல் வெளிக்கு சென்று வேலை செய்யும்படி கட்டாயப் படுத்தியது. பிச்சை எடுப்பதை மாவோ நிறுத்தினார். ஆனால் புத்தமதம் பிச்சை எடுப்பதனால் மட்டுமே உயிர்வாழ்ந்தது. உண்மையில் பிச்சை எடுப்பது என்பது புத்த மதத்தில் ஒரு நன்னெறியாக, ஒரு பயிற்சி யாக இருந்தது, ஏனெனில் அது உங்களை பணிவானவர்களாக ஆக்கிவிடுகிறது. ஆனால் மாவோ பிச்சை எடுப்பதை சட்ட விரோதமாக்கினார். துறவிகளை அவர்களின் உணவு, அவர்களின் உடை மற்றும் அவர்களின் இருப்பிடத்திற்காக வேலை செய்யும்படி வலுக்கட்டாயப் படுத்தினார்.

இப்போது மாவோ இறந்து விட்டார். எனவே கம்யூனிஸ்ட் கட்சியில் இருந்த அவரது எதிரிகள் அதிகாரத்திற்கு வந்து விட்டனர். மாவோ அவர்களை அனுமதிக்காமல், அநேகரை நிர்ப்பந்தமாக சிறைக்கு அனுப்பினார். அநேகர் கொல்லப்பட்டனர், ஆனால் இப்போது அவர்கள் அதிகாரத்திற்கு வந்து விட்டனர். இப்போது கம்யூனிஸ்ட் கட்சிக்கு உள்ளேயே உள்ள எதிர்க்கட்சியானது ஆட்சிக்கு வந்து விட்டது. அது மக்களின் இதயத்தை வெல்வதற்கு விரும்புகிறது. மடாலயங்கள் இப்போது அங்கு மீண்டும் வந்து கொண்டு இருக்கின்றன. ஏனெனில் இரண்டாயிரம் வருட புத்தமதத்தை அவ்வளவு சுலபமாக அழித்து விடமுடியாது. இப்போது, தங்களது பிச்சைப் பாத்திரத்துடன் புத்த துறவிகளை அங்கு காண முடிகிறது. அந்த மருத்துவமனைகள்

காலி செய்யப்பட்டு விட்டன. ஆந்த பள்ளிக் கூடங்கள் காலி செய்யப்பட்டு விட்டன. இப்போது துறவிகளையும் கூட வயல் வெளிகளிலோ அல்லது தொழிற்சாலைகளிலோ அல்லது அவர்களால் எங்கெல்லாம் பயன்படுத்தமுடியுமோ அங்கெல்லாம் அவர்களால் வேலை செய்யும் படி நிர்ப்பந்தம் செய்வதில்லை.

*ஆனால், யார் எல்லாம் மூன்று விஷங்கள் நுழைவதைத் தடுக்கிறார்களோ, அவர்களது புலன்களின் வாசல்களைத் தூய்மையாக வைத்திருக்கிறார்களோ, அவர்களது உடல் மற்றும் மனதை அசையாமல் வைத்திருக்கிறார்களோ, மற்றும் உள்ளும் புறமும் சுத்தமாக வைத்திருக்கிறார்களோ, அவர்கள் ஒரு மடாலயத்தைக் கட்டுகிறார்கள்.*

இப்போது, இது வெகு தொலைவில் இருந்து கொண்டு வரப்பட்ட கருத்து. புத்தமதத்தில் புதிதாக சேர்பவர்களிடம் போதிதருமரால் இதை விளக்க முடியும் என்றால், புத்தரே கூட தான் உருவகங்களில் பேசுகிறேன் என்று ஏன் சொல்லவில்லை? அவர் தானாகவே அதை விளக்கி இருக்கவேண்டும். சொற்பொழிவு என்று வரும்போது புத்தர் இவரை விடவும் நன்றாக பேசுபவர்; இவை வெறும் உருவகங்கள் தான் என்று அவர் விளக்கி இருக்க வேண்டும். ஆனால் அவர் எங்கும் இதை உருவகம் என்று குறிப்பிடவில்லை. எல்லாவற்றையும் உருவகமாக மாற்றுவது மிகவும் கடினமான வேலை, ஆனால் இவை எல்லாம் உருவகங்கள் தான் என்கிற கருத்தோடு அவர் செல்கிறாரா என்பதை நாம் பார்ப்போம்.

*சிலைகளை நிறுவுவது என்பது மெய்ஞ்ஞானத்தை தேடுபவர் களால் பேணி வளர்க்கப்படுகின்ற எல்லாப் பயிற்சிகளையும் குறிக்கிறது.*

இது எப்படி ஒரு உருவகம் ஆகும் என்று என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.

*சிலைகளை நிறுவுவது என்பது மெய்ஞ்ஞானத்தை தேடுபவர்களால் பேணி வளர்க்கப்படுகின்ற எல்லா பயிற்சி களையும் குறிக்கிறது.* இதற்கும், எங்கிருந்தோ கொண்டு

வரப்பட்ட கருத்திற்கும் கூட என்ன உறவு இருக்கிறது? ஒரு உருவகம் என்பது விஷயத்தை பிரதிநிதித்துவம் செய்வதாக இருக்கவேண்டும்; அது ஏதாவது ஒன்றை விளக்க வேண்டும், புரிந்து கொள்வதற்கு அது உதவியானதாக இருக்க வேண்டும். சிலைகளை வைப்பதற்கும், மெய்ஞ்ஞானத்தை பயிற்சி செய்யவதற்கும் சம்பந்தமே கிடையாது. ''மெய்ஞ்ஞானத்திற்கான பயிற்சி'' என்று புத்தரே ஏன் கூறவில்லை?

*ஊதுபத்தி கொளுத்துதல் என்பது சாதாரண பொருளால் ஆன ஊதுபத்தி என்று அர்த்தமல்ல.*

இது, எங்கேயோ ஆன்மிக ஊதுபத்தி கிடைக்கிறது என்பது போல் உள்ளது.

*ஆனால் அதன் நறுமனத்தின் மூலம் இழிச் செயல், அறியாமை மற்றும் தீயச் செயல்களை விரட்டி அடிக்கின்ற தெளிவாகத் தெரிகின்ற தர்மம் என்னும் ஊதுபத்தியாகும்.*

இதை நீங்கள் எங்கு பெறப்போகிறீர்கள்? எனவே தான் போதிதருமருக்கு எழுபத்து ஐந்து வயதுதான் ஆனாலும் கூட அவருக்கு மிகவும் வயதாகிவிட்டது போன்று தெரிகிறது என்று கூறுவதற்காக நான் மிகவும் மன வேதனைப்படுகிறேன்.

*அதன் நறுமணத்தின் மூலம் இழிச்செயல், அறியாமை மற்றம் தீயச் செயல்களை விரட்டி அடிக்கின்ற தெளிவாகத் தெரிகின்ற தர்மம் என்னும் ஊதுபத்தியாகும்.*

மிகப்பெரிய விஷயம்! ஆனால் இதை எங்கே பெறுவது. இந்த ஆன்மிக ஊதுவத்தியை யாரும் ஒரு போதும் பார்த்தது இல்லை; அப்படி இருந்தால் வாழ்க்கை மிகவும் எளிமையானதாக ஆகி இருக்கும். தியானம், ஒழுக்கக்கட்டுப்பாடு, விழிப்புணர்வு என்று மக்களை கவலை அடையச் செய்ய வேண்டிய அவசியம் இருக்காது. வெறுமனே ஆன்மிக ஊதுபத்தியை எரித்தால் போதும். உடனே எல்லாமே விரட்டி அடிக்கப்பட்டு விடும். அதன் நறுமணத்தால் நீங்கள் தூய்மையாக்கப்பட்டு விடுவீர்கள்!

ஆனால் நான் மட்டும் மெய்ஞ்ஞானம் அடைய மாட்டேன், ஏனெனில் எனக்கு நறுமணம் என்றாலே அலர்ஜியாகிவிடும். அது

தெளிவாக தெரியக் கூடியதோ அல்லது தெளிவாகத் தெரியாததோ, எதுவாக இருந்தாலும் அது எனக்கு ஒவ்வாமையை கொடுத்துவிடும். ஆனால், நான் ஒருவன் மட்டும் மெய்ஞ்ஞானம் அடையவில்லை என்றால் ஒன்றும் கெட்டுப் போய்விடாது. இந்த ஒட்டுமொத்த உலகமும் மெய்ஞ்ஞானம் அடைந்து விடும் என்றால் அதை நான் சகித்துக் கொள்ள முடியும். நான் முற்றிலும் தயாராக இருக்கிறேன். எவ்வளவு காலம் தான் மக்களை ஏமாற்றலாம் என்று கூட போதிதருமருக்கு தெரியவில்லை. ஆனால் அவர் ஆயிரம் ஆண்டுகள் அவர்களை ஏமாற்றி இருக்கிறார். அவ்வளவு காலங்கள் இந்த சூத்திரங்கள் இருந்திருக்கின்றன. அவை நிச்சயமாக பாதுகாக்கப் பட்டுள்ளன ஏனெனில் அவை மகாயான பௌத்தர்களின் கைகளில் இருந்தது. அவை மொழிபெயர்க்கப்படுவதை அவர்கள் விரும்பவில்லை; அவைகள் போதிதருமரின் மிகப்பெரிய புகழை அழித்து விடும். அவர் பேசுவது முற்றிலும் புறம்பானது என்று அவர்களே கூட புரிந்து கொண்டிருக்கலாம்.

*புத்தர் இந்த உலகில் இருந்தபோது, அவர் தனது சீடர்களிடம் பத்து திசைகளில் உள்ள புத்தர்களுக்கு காணிக்கையாக, விழிப் புணர்வு என்னும் நெருப்பினால் இப்படிப்பட்ட ஊதுபத்தியை கொளுத்தும்படி கூறினார்.*

அது விலை மதிப்பற்றதாக இருக்கலாம். ஆனால் அது எங்கு கிடைக்கிறது? ஆனால் அதன் பின்னர் அந்த ஊதுபத்தியை எரிப்பதற்கு வெறுமனே விழிப்புணர்வை ஒரு நெருப்பு போல ஆக்கி விடுகிறார், அந்த ஊதுபத்தியானது எல்லா வற்றையும் செய்து விடும், நீங்களும் மெய்ஞ்ஞானம் அடைந்து விடுவீர்கள். எனவே இப்போது அந்த தர்மா ஊதுபத்தியைத் தேடி கண்டு பிடிப்பது தான் உங்களது முழு தேடுதலாக இருக்க வேண்டும்! ஒருவேளை நீங்கள் அதை பூனாவில் கண்டு கொள்ளலாம். இது ஆன்மிகமான நகரம். இங்கு உயிரினங்கள் நடமாடாமல், வெறும் ஆவிகள் மட்டுமே நடமாடும் அளவிற்கு ஆன்மீகமானது.

*ஆனால் மக்கள் இன்று ததாகதரின் உண்மையான அர்த்தத்தை புரிந்து கொள்ளவில்லை.*

போதிதருமர் மட்டுமே ததாகதரின் உண்மை அர்த்தத்தை புரிந்து கொண்டிருக்கிறார். ஒருவேளை ததாகதரே தனது சொந்த உண்மையான அர்த்தத்தை புரிந்து கொள்ள முடியாமல் இருக்கலாம்.

அவர்கள், ஒருபோதும் வராத சில எதிர்கால ஆசீர் வாதங்களை நம்பிக்கொண்டு சந்தனக் கட்டை அல்லது சாம்பிராணி போன்ற ஊதுபத்திகளைக் கொளுத்துவதற்கு ஒரு சாதாரண ஒளிச்சுடரை பயன்படுத்துகின்றனர்.

போதிதருமர் சுற்றி சுற்றி வருகிறார். ''இந்த பேச்சுக்கள் புத்தருடையவை அல்ல, இந்த பேச்சுக்கள் முழுமையான முட்டாள்தனமானவை'' என்று அவர் வெறுமனே கூறி இருக்க வேண்டும். அதுதான் சரியானதாகவும் இருந்திருக்க முடியும்.

மலர்களைப் பரப்புதல், ஒழுக்கம் என்னும் மலர்களை எப்படி நீங்கள் பரப்புவீர்கள்? ஒருவர் இந்த முட்டாள் தனமான கருத்தை ஏற்றுக் கொண்டாலும் கூட ஒழுக்கம் என்னும் மலர்களை எப்படி பரப்புவீர்கள்? நீங்கள் மக்களிடம், இதுதான் உண்மைநிலை, இது தான் அன்பு, இதுதான் கருணை'' என்று கூறிக்கொண்டு அவர்களிடம் கொடுத்து விட்டு உங்களது கைகளை காலியாக்கி விடுவீர்களா?

பைத்தியக்கார விடுதியில் உள்ள இரண்டு பைத்தியங்கள் பூங்காவில் உட்கார்ந்திருந்தன. தினமும் ஒரு மணி நேரம் அவர்கள் வெளியே பூங்காவில் சுற்றுவதற்கு அனுமதிக்கப் பட்டனர். ஒரு பைத்தியக்காரன், தனது கை முஷ்டியை மடக்கி கொண்டு அடுத்தவனிடம், ''எனது கைக்குள் என்ன இருக்கிறது என்று நீ கூறிவிட்டால், உனக்கு நான் ஒரு ரூபாய் கொடுப் பேன்?'' என்று கூறினான்.

உடனே அடுத்த மனிதன், நிஜமாகவா? நீ சொன்ன சொல்லை காப்பாற்றுவாயா? என்று கேட்டான்.

அதற்கு முதல் மனிதன் தனது பையில் இருந்து ஒரு ரூபாய் நாணயத்தை எடுத்து காட்டி, ''இது தான் அந்த ரூபாய் எனவே எனது கையில் என்ன இருக்கிறது'' என்று கூறு என்றான்.

அடுத்த மனிதன் பார்த்துவிட்டு, " அது ஒரு யானை போன்று தெரிகிறது" என்றான்.

உடனே முதல் மனிதன், " உனக்கு ரூபாய் கிடையாது. நீ கையில் உள்ளதைப் பார்த்து விட்டாய் போன்று தெரிகிறது. நீ தந்திரம் செய்து விட்டாய்" என்று கூறினான். அவன் அந்த ஒரு ரூபாயையும் கொடுக்கவில்லை. ஏனெனில் அவனும் கூட தனது கைமுஷ்டியில் ஒரு யானையை வைத்திருப்பதாக நம்பிக் கொண்டு இருந்தான்.

*மற்றவர்கள் பயனுறவும், உண்மையான ஆன்மா மகிமை அடையவும், நல் ஒழுக்க மலர்களை உங்களால் எப்படி பரப்ப முடியும்? ததகதா என்பது மக்கள் தாவரங்களின் மலர்ச்சியை வெட்டி விடுவதன் மூலம், தாவரங்களுக்கு தீங்கு செய்தல் என்று நினைத்தால் நீங்கள் நினைப்பது தவறு.*

இது சரியானதாகத் தெரிகிறது. ஆனால் அவர் எல்லா வற்றையும் கலந்து சொல்கிற விதத்தில் அது எல்லா சிறப்பியல் பையும் இழந்து விடுகிறது. நீங்கள் பூக்களை பறிப்பதை நிச்சயமாக புத்தர் விரும்பமாட்டார்; அதுவும் கொல்லுதல் என்பதாகத்தான் இருக்கிறது. ரோஜாச் செடியில் உள்ள ஒரு பூவானது ஒரு உயிரை, ஒரு அழகினைப் பெற்றிருக்கிறது. நீங்கள் அதை பறித்து விட்டால், அது இறந்து போகிறது. அதை அங்கேயே விட்டு விடுங்கள்.

முக்தா எனது தோட்டக்காரர். அவள் ஒரு இலை அல்லது ஒரு பூவைக் கூட வெட்ட விடமாட்டாள். ஆரம்பத்தில் தனது முதுகின் பின்னால் தோட்டக்காரனின் கத்தரிக்கோலை மறைத்துக் கொண்டு செல்வதுண்டு! ஆனால், இப்போது நான் புத்தர் உலாவுக்கு செல்லும் போது என்னால் மலர்களைப் பார்க்கமுடிகிறது. அந்த தோட்டமானது ஒரு காடு போன்று ஆகிவிட்டது. எனவே அவள் தோட்டக்காரனின் கத்தரிக்கோலை தூக்கி எறிந்திருக்க வேண்டும். ஒவ்வொரு மத்தையும் அதற்குரிய விதத்தில் வ்ளர விடுங்கள்; எனது தோட்டத்திலாவது அப்படி இருக்கட்டும்! எந்த மரத்தையும் கொல்லாதீர்கள், எந்த உயிருள்ள பூக்களையும் அழிக்காதீர்கள்.

மலர்களை வெட்டுவதற்கு புத்தர் அனுமதித்திருக்க மாட்டார் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் மாறாக இந்த ஒட்டு மொத்த சூத்திரமும் மகாயானப் பள்ளியினால் உள்ளே நுழைக்கப்பட்டது என்று என்னால் கூறமுடியும். ஆனால் மகாயானப் பள்ளியானது இப்படிப்பட்ட விஷயங்களை ஏன் உள்ளே நுழைக்க வேண்டும்?

இங்கே, அடிப்படையாக நீங்கள் புரிந்து கொள்ள வேண்டிய ஒன்று உள்ளது. இருபத்து ஐந்து நூற்றாண்டுகளுக்கு முன்பு கௌதம புத்தர் இந்த நாட்டில் இருந்தபோது, அவர் கிட்டத்தட்ட ஒட்டுமொத்த பூமியையும் மதமாற்றிவிட்டார். மற்றவரை ஆட்படுத்துகின்ற ஒரு மனிதராக இருந்தார். அவர் வெறுமனே படித்த மனிதர் மட்டுமல்ல; அவர் இந்த இயற்கையை அறிந் திருந்தார். அவர் இதன் நடுப்பகுதியாக இருந்தார். அவரது தாக்கம் அபரிமிதமானதாக இருந்தது. ஒருவேளை யாரும் இதுவரை இப்படிப்பட்ட ஒரு தாக்கத்தை ஏற்படுத்தாமல் போயிருக்கலாம்.

ஆனால் அவர் இறந்து விட்ட அந்த நொடிப்பொழுதிலேயே, பிராமணர்கள், பூசாரிகள் ஆகியவர்கள் தாங்கள் இதுவரை மறைந்திருந்த தங்களின் குகைகளில் இருந்து வெளியே வந்து விட்டனர். ஏனெனில் அவர்களால் கௌதம புத்தரை எதிர் கொள்ள முடியவில்லை. அவரை எதிர் கொள்பவர் யாராக இருந்தாலும் அவர் அவருடைய ஒரு சீடராக ஆகிவிடுவார். எனவே அவர்கள் தங்களின் சந்தர்ப்பத்திற்காக காத்துக்கொண்டு இருந்தனர். அவர்களின் ஒட்டு மொத்த தொழிலையும் புத்தர் அழித்துவிட்டார். இப்போது கோயில்களில் மணிகள் அடிக்கப்படுவதில்லை, மக்கள் வழிபாட்டிறகு செல்வதில்லை. மக்கள், பிராமணர்களை தங்களது மதச் சடங்குகளுக்கு அழைப்பதில்லை. ஆனால் பிராமணர்கள் தான் இந்த ஒட்டு மொத்த உலகிலேயே பூசாரிகளாக இருப்பதில் மிகவும் கெட்டிக்காரர்கள்.

அவர்கள் மக்களைப் பிடித்து விடுவார்கள். ஒவ்வொரு மனிதனும் பிறந்த உடன் உடனடியாக அவர்களின் கட்டுப் பாட்டின் கீழ் வந்து விடுகிறான். முதலில் சில சடங்குகள், அதன்

பின்னர் அவனது பிறந்த ஜாதகம் எழுதுவதற்காக, அதன் பின்னர் அவனது பெயர் சூட்டும் சடங்கு செய்யப்பட வேண்டும். இப்படி எல்லாவற்றிலும், பிராமணர்கள் மக்களைச் சுரண்டிக் கொண்டு இருந்தார்கள். அதன் பின்னர் அந்த சிறுவனுக்கு மொட்டை போட வேண்டும். இப்படி சடங்குகள் போய்க் கொண்டே இருக்கும். நீங்கள் வேறு நகரத்திற்கு குடி பெயர்ந்து போக வேண்டும் என்றாலும் கூட நீங்கள் சரியான நட்சத்திரத்திற்காக, வடக்கே போவதா அல்லது தெற்கா அல்லது கிழக்கா அல்லது மேற்கா எது நாம் செல்வதற்கு மிகவும் சரியான நேரம், என்று இப்படி எல்லாவற்றிற்கும் நீங்கள் பிராமணர்களிடம் ஆலோசனை கேட்க வேண்டும்.

அதன் பின்னர் திருமணம் வருகிறது. அப்போது மீண்டும் பிராமணர் அங்கு வந்து விடுகிறார். அதன் பின்னர் கல்யாணத் திற்கு அடுத்ததாக குழந்தைகள் வர ஆரம்பிக்கிறார்கள். அப்போதும் அங்கே பிராமணர் வந்து விடுகின்றார். அதன் பின்னர் அந்த மனிதன் வயதானவன் ஆகி விடுகிறான். இப்படி தொட்டிலில் இருந்து சுடுகாடுவரையில் பிராமணப் பூசாரி தனது பிடியை வைத்துக் கொண்டு இருக்கிறார்.

ஒரு மனிதன் இறந்த பின்பும் கூட, செய்யப்பட்ட வேண்டிய சடங்குகள் உள்ளன! ஒரு ஏழை நாட்டில், அந்த சடங்குகளுக்கு அதிக செலவு ஆவதால் மக்கள் தங்களின் வீடு, வாசல், உடைமைகளை விற்க வேண்டியதாகிறது. அதை வைத்துதான் அவர்கள் உயிர்வாழ்ந்து கொண்டிருந்தனர். ஆனால் அவர்களது தந்தை இறந்துவிட்டதால் அவை எல்லாவற்றையும் விற்க வேண்டியதாகிறது. அவர்கள் பிராமணர்களுக்கு மிகப்பெரிய விருந்து ஒன்றும் கொடுக்கவேண்டும்.

இறந்து போன நமது மூதாதையர்களுக்கும் கூட சடங்குகள் செய்யவேண்டும். இது ஒரு நீண்ட வரிசை, முடிவில்லாத வரிசை, உண்மையில் லட்சம் பேர் ஒருவர் பின்னால் ஒருவர் வரிசையில் நிற்கிறார்கள். அதற்காக பிராமணர்கள் ஒரு சிறப்பான காலத்தையும் வைத்திருக்கிறார்கள். நமது முன்னோர்களுக்காக அவர்கள் ஒரு மாதம் முழுவதையும் ஒதுக்கி உ;ள்ளனர் ஏனெனில் எண்ணிக்கை மிகப் பெரியதாக உள்ளது. எனவே

ஒருமாதம் தொடர்ந்து சடங்குகள் நடக்கின்றன. நெருப்பை வளர்த்து, மந்திரங்கள் சொல்லப்பட்டு அந்த குடும்பத்தில் இறந்து போன அனைவரின் ஆன்மாவும் சாந்தி அடைவதற்கு சடங்குகள் செய்யப்படுகின்றன. உங்களுக்கு அவர்களின் பெயர்கள் கூட தெரியாது! பல லட்சம் பேர் இறந்திருக்க வேண்டும்.

நீங்கள் உட்கார்ந்து இருக்கும் இடத்திற்கு அடியில் குறைந்த பட்சம் எட்டு பேர்களின் கல்லறைகள் இருப்பதாக விஞ்ஞானிகள் கணக்கிட்டு இருக்கிறார்கள். பயபடாதீர்கள் அவர்கள் இறந்து போனவர்கள்! ஆனால் அநேக மக்கள் இறந்து போய் இருக் கிறார்கள் அந்த மனிதர்கள் இறந்து ஆயிரக்கணக்காக வருடங்கள் ஆகிவிட்ட போதிலும் அந்த சாஸ்திரிகள் இன்னமும் உங்களை சுரண்டிக் கொண்டு இருக்கிறார்கள்.

இந்த விஷயத்தில் புத்தர் ஒரு அபரிமிதமான புரட்சியை உருவாக்கினார். அதில் அவர் பிராமணப் பூசாரிகளின் ஒட்டு மொத்த கூட்டமைப்பையும் அழித்தார். ஆனால் அவர் இறந்த அந்த நொடிப் பொழுதிலேயே அவர்கள் திரும்பவும் வந்து விட்டனர்.

மக்களும் கூட அவர்களைக் காணாமால் இருந்தனர். வாழ்க்கை மிகவும் எளிமையானதாக ஆகிவிட்டது. ஒரு குழந்தை பிறந்தவுடன், அவனுக்கு சந்தோஷமும், நீண்ட ஆயுளும் இருக்க வேண்டும் என்று மந்திரம் ஒதுவதற்கு அங்கு பிராமணர் இல்லை. யாராவது இறந்தாலும் கூட அவரது இறுதியாத்திரைக்கு ஆசீர்வாதம் கூறுவதற்கு அங்கு பிராமண பூசாரி இல்லை, மக்கள் இந்த சடங்குகளை எல்லாம் இழந்து விட்டார்கள். ஆகவே புத்தர் இறந்த உடன் இந்த பிராமணர்கள் மெதுவாக மெதுவாக திரும்பவும் வந்து விட்டனர். அவர்கள் புத்த மதத்தினரை இந்த நாட்டை விட்டு விரட்டி அடிக்க ஆரம்பித்தனர்.

வெறும் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு இங்கு அபூர்வமாகவே ஒரு புத்தமதத்தை சேர்ந்தவர் இருந்தார். கடந்த ஐம்பது ஆண்டுகளில், ஒரு மனிதர் மிகப்பெரிய சேவை செய் திருக்கிறார். அவர் மதப்பற்றுள்ள மனிதராக இல்லாவிட்டாலும் கூட அவர் ஒரு அரசியல்வாதி, ஆனால் எதிர்பாராத விதமாக அவர் ஏதாவது செய்தாக வேண்டியதாயிற்று, அது ஒரு அரசியல் தந்திரம்.

பாபாசாகேப் அம்பேத்கர் ஒரு சூத்திரர், ஆனால் ஒரு பணக்காரர் கண்ணில் அவர் பட்டார். அம்பேத்கரின் புத்திசாலித்தனத்தை கண்டுகொண்ட அந்த செல்வந்தர் அவரை இங்கிலாந்து சென்று படிக்கச் செய்தார். அவர் இந்த உலகின் மிக உயர்ந்த சட்ட நிபுணர்களில் ஒருவராக இருந்தார். இந்திய அரசியல் சட்டத்தை உருவாக்கவும் அவர் உதவினார். இந்து சமுதாயத்தின் கால் பகுதியாக உள்ளதால் பிறந்த இனமாகிய சூத்திரர்களுக்காக அவர் இடைவிடாமல் போராடினார். ஆவர் சூத்திரர்களுக்கு ஒரு தனியான வாக்குரிமை அளிக்க வேண்டும் என்று விரும்பினார். அவர் செய்தது முற்றிலும் சரியானது.

பத்தாயிரம் ஆண்டுகளாக சூத்திரர்களாக உள்ள அவர்களை துன்புறுத்திக் கொண்டும், அசிங்கமான வேலைகளைச் செய்யும் படி அவர்களை நிர்ப்பந்தித்துக் கொண்டும், கிட்டத்தட்ட அந்த வேலைக்கு அவர்களுக்கு எதுவும் கொடுக்கப்படாத நிலையில் அவர்கள் ஏன் இந்த இந்து சமுதாயத்தை சார்ந்து இருக்க வேண்டும்? அவர்கள் நகரத்தின் மத்தியில் வசிப்பதற்கு கூட அனுமதிக்கப்படவில்லை. அவர்கள் நகரத்திற்கு வெளியே தான் வசிக்க வேண்டும். சுதந்திரத்திற்கு முன்பு வரை நகரத்தின் அநேக தெருக்களில் அவர்கள் நடந்து செல்வதற்குக் கூட அனுமதிக்கப் படவில்லை. அநேக இடங்களில், ''நான் ஒரு சூத்திரன், மேலும் நான் இந்த வழியாக வந்து கொண்டு இருக்கிறேன். நான் சொல்வதை கேட்பவர்கள் யாராக இருந்தாலும் தயவு செய்து வழியை விட்டு விலகிக் கொள்ளுங்கள்'' என்று உரத்த குரலில் கூறும்படி கட்டாயப்படுத்தப்பட்டனர். ஏனெனில் அவர்களின் நிழல் உங்கள் மீது விழுந்தாலும் கூட அது தீட்டாகிவிடும்.

ஆனால் எந்த வழியும் காணப்படவில்லை, ஏனெனில் சூத்திரர்கள் இந்து சமுதாயத்தை விட்டு விலகக் கூடாது என்று மகாத்மா காந்தி வலியுறுத்தி வந்தார். அதுவும் கூட ஒரு அரசியல் தந்திரம் தான், ஏனெனில் இந்துக்களில் நான்கில் ஒரு பகுதியினர் அந்த சமுதாயத்தை விட்டு விலகிவிட்டால், அதன் பின்னர் இந்துக்கள் தங்களது சொந்த நாட்டிலேயே சிறுபான்மையானவர் களாக ஆகிவிடுவார்கள். இங்கே முகமதியர்கள் உள்ளனர், கிறிஸ்துவர்கள் இருக்கின்றனர், ஜைனர்கள் உள்ளனர். இப்போது

இந்து சமுதாயத்தில் இருந்து ஒரு பெரிய ஜனத்தொகை வெறியேறிவிட்டால், இந்துக்களின் நாடு என்பது கிட்டத்தட்ட ஏனைய மதங்களின் நாடு என்பது போன்று ஆகிவிடும். அவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து விட்டால், இந்துக்கள் ஒருபோதும் அதிகாரத்திற்கு வரமுடியாது.

மகாத்மா காந்தியை ஒரு மதப்பற்றுள்ள மனிதராகக் கூட நான் கருதவில்லை. அவரும் அம்பேத்கரின் வகையைச் சார்ந்தவர் தான். அம்பேத்கர் தனது நிலைப்பாட்டினை திரும்பப் பெறவேண்டும் என்று காந்தி சாகும் வரை உண்ணாநோன்பு இருந்தார். சூத்திரர்களுக்கு தனி வாக்குரிமை என்கிற கருத்தை அம்பேத்கர் திரும்பப் பெற்றுக் கொள்ள வேண்டியதாயிற்று. ஆனால் காந்தி கெட்டிக்காரர். அவர் சூத்திரர்களை 'அரிஜன்கள் என்று அழைத்தார். வஞ்சக மக்கள் எப்போதும் வார்த்தைகளால் விளையாடக் கூடியவர்கள். வார்த்தைகளால் எந்த வேறுபாடும் வந்து விடுவதில்லை. நீங்கள் அவர்களை சூத்திரர்கள், தீண்டத்தகாதவர், அல்லது 'அரிஜன் என்று எப்படி அழைத்தாலும் நிலைமை மாறப்போவது கிடையாது. 'அரிஜன் என்றால் ''கடவுளின் குழந்தைகள்' என்று அர்த்தம்.

மகாத்மா காந்தியின் மகன்; ராம்தாஸிடம் நான் நீண்ட விவாதம் செய்தேன். நான் அவரிடம்,'' இந்த வஞ்சகத்தனத்தை உங்களால் பார்க்க முடிகிறதா? கடவுளின் குழந்தைகள் பத்தாயிரம் ஆண்டுகளாக துன்பப்பட்டுக் கொண்டு உள்ளனர். கடவுளின் குழந்தைகளாக இல்லாதவர்கள் அவர்களை துன்புறுத்திக் கொண்டும், அடக்கி ஒடுக்கிக் கொண்டும், அவர்களின் பெண்களை கற்பழித்துக் கொண்டும், அவர்கள் வசிக்கும் இடங்களில் அவர்களை உயிரோடு கொளுத்திக் கொண்டும் இருக்கின்றனர். இவர்கள் அனைவரும் கடவுளின் குழந்தைகள் என்றால், அதன் பின்னர் கடவுளின் குழந்தையாக இல்லாமல் இருப்பது தான் சிறந்ததாகும் இது ஆபத்தானதாக உள்ளது'' என்று கூறினேன்.

அதற்கு ஒரு அழகான அர்த்தத்தை கொடுப்பதற்காகவே காந்தி பெயரை மாற்றினார். ஆனால் உள்ளுக்குள் எல்லாம் அப்படியேதான் இருந்தது. அம்பேத்கர் தான் கூறியதை திரும்பப்

பெறுவரை அவர் சாகும் வரை உண்ணாவிரதம் இருக்கப் போவதாக முடிவெடுத்தார்.

அம்பேத்கரின் இடத்தில் நான் இருந்திருந்தால், நான் மகாத்மா காந்தியிடம், '' வாழ்விலும் அல்லது சாவிலும் உண்ணாவிரதம் இருப்பது உங்களது வேலை. நீங்கள் தாராளமாக இருக்கலாம். சாகும் வரையிலும் அல்லது அதற்கு அப்பாலும் கூட இருக்கலாம்! '' என்று கூறி இருப்பேன்.

ஆனால் நாடு முழுவதும் இருந்து அம்பேத்கருக்கு நெருக்கடி கொடுத்தார்கள். ஏனெனில் காந்தி இறந்து விட்டால் அந்த ஒட்டு மொத்த பழியும் அம்பேத்கர் மீது விழுந்து விடும். ஆனால் நான் காந்தியிடம், '' இது மிகவும் வன்செயலான காரியம், ஆனால் நீங்களோ அகிம்சை பற்றி பேசிக் கொண்டு இருக்கிறீர்கள். இது தான் அகிம்சையா? '' என்று கேட்டிருப்பேன்.

இது நடந்தது. நான் ராய்ப்பூரில் உள்ள சமஸ்கிருதக் கல்லூரியில் கற்றுக் கொடுத்துக் கொண்டு இருந்தேன். கொள்ளையர்களில் ஒருவன் ஒரு அழகான இளம் பெண்ணிடம் தன்னைத் திருமணம் செய்து கொள்ளும்படி கேட்டான். அவன் ஆபத்தான மனிதன். ஒரு குற்றவாளி. அவன் பலமுறை சிறைக்கு சென்றிருக்கிறான், அநேக குற்றங்களைச் செய்தவன். அவனுக்கு திட்டத்தட்ட அந்த பெண்ணின் தந்தையின் வயது இருக்கும். ஆனால் அவன் அந்த பெண் மீது விருப்பப்பட்டான். காந்தி எப்படி சாகும் வரை உண்ணாவிரதம் இருந்து எல்லாவற்றையும் சமாளித்தார் என்பதையும் பார்த்துக் கொண்டான், ஏனெனில் காந்தி அம்பேத்கரை சமாளித்து விட்டார்.

இருபத்தியோரு நாட்களாக காந்தி உண்ணாவிரதம் இருந்தபோது அவரது உடல் நிலை வேகமாக மோசமடைய ஆரம்பித்த உடன் மருத்துவர், ''ஏதாவது செய்யுங்கள், இல்லை எனில் இந்த வயதான மனிதர் போய்விடுவார்'' என்று கூறினார். இந்திய தேசிய தலைவர்கள் அனைவரும் அம்பேத்கருக்கு நெருக்கடி கொடுக்க ஆரம்பித்தனர். அவர்கள் அம்பேத்கரிடம்,'' மகாத்மாவிடம் செல்லுங்கள். அவரிடம் மன்னிப்பு கோருங்கள் அவர் விரதத்தை கைவிடும் படி கேட்டுக் கொண்டு ஆரஞ்சு பழ

ரசம் கொடுத்து விடுங்கள். உங்களது அமைப்பையும் கலைத்து விடுங்கள்; அப்படி செய்யவில்லை என்றால் இந்த நாட்டின் மிகப்பெரிய மனிதரை மாபெரும் மதத்தலைவரைக் கொன்ற ஒருவராக நீங்கள் நினைக்கப்படுவீர்கள்,'' என்று கூறினார்கள். விருப்பம் இல்லை என்றாலும் கூட அம்பேத்கர் அதை செய்ய வேண்டியதாயிற்று.

நானாக இருந்தால் செய்திருக்க மாட்டேன்! அந்தப் பழியை நான் ஏற்றிருப்பேன். சரித்திரத்தின் கண்டனத்தை நான் ஏற்றிருப்பேன். நீங்கள் இறந்தவுடன் உங்களைப் பற்றி சரித்திரத்தில் என்ன எழுதப்பட்டுள்ளது என்று யார் கவலைப்பட போகிறார்கள்? குறைந்த பட்சம் அது உங்களுக்காவது தெரியாது. உங்களால் படிக்கவும் முடியாது. அவர்கள் எதை வேண்டு மானாலும் எழுதிவிட்டு போகட்டும்.

ஆனால் நான் இதை அகிம்சை வழி அல்ல என்று அவரிடம் வலியுறுத்தி இருப்பேன். இது முற்றிலும் வன் செயல். ஆனால் அது கண்களுக்கு தெரியாத வகையில் உள்ளது. உங்களைக் கொன்று விடுவதாக நான் பயமுறுத்துகிறேன். இது வன் செயலாக இருக்கிறது. என்னை நீங்கள் ஏற்றுக் கொள்ளாவிட்டால் நான் என்னையே கொன்று விடுவேன் என்று பயமுறுத்துகிறேன். இது தான் தர்க்க அறிவா? காந்தி எடுத்த அந்த நிலைப்பாடு முற்றிலும் தர்க்க அறிவற்றது. ஆனால் பயமுறுத்துவதன் மூலம் அவர் அதை ஆதரித்தார் '' என்னை நானே கொன்று விடுவேன்'' என்று கூறுவது நம்மை மிரட்டுவதாகும்.

அம்பேத்கர் வேறு ஒரு வழியில் சமாளித்தார். அவர் சூத்திரர்களை புத்த மதத்திற்கு மதம் மாற்ற ஆரம்பித்தார். அதனால் தான் இந்தியாவில் இப்போது ஒரு சில லட்சம் பௌத்தர்கள் இருக்கின்றனர். ஆனால் எந்த விதத்திலும் அவர்கள் மதப்பற்றுள்ளவர்கள் அல்லர். அது வெறுமனே ஒரு அரசியல் நடவடிக்கை.

காந்தியை பார்த்து இந்த கொள்ளைக்கார மனிதனும் அந்த அழகான பெண்ணின் வீட்டிற்கு படுக்கையுடன் சென்று

விட்டான். அங்கு சென்று அந்த அழகான இளம் பெண் தன்னைத் திருமணம் செய்து கொள்ளவில்லை என்றால் அவன் சாகும் வரை உண்ணா விரதம் இருக்கப் போவதாக அறிவித்து விட்டான். நகர் முழுவதும் இதைப் பற்றிய பேச்சாகவே இருந்தது; புகைப்படக்காரர்களும், பத்திரிகையாளர்களும் அங்கு சென்றார்கள், நாள் முழுவதும் அந்த கூட்டம் அங்கு இருந்தது. அந்த பெண்ணின் தந்தை பயப்பட்டார். அவரிடம், '' அந்த மனிதனின் மரணத்திற்கு நீங்கள் ஏன் பொறுப்பாகிறீர்கள்?'' என்று நெருக்கடி கொடுத்தார். ஆனால் அந்த தந்தை, ''இது முற்றிலும் அசிங்கமானது. இந்த மனிதருக்கு எனது வயது ஆகிறது. இவன் ஒரு குற்றவாளியாக இருக்கிறான். நான் எனது மகளை இவருக்கு கொடுக்க மாட்டேன்.'' என்று கூறினார்.

எனக்கு அந்த பெண்ணையும், அவனின் தந்தையையும் தெரியும். கல்லூரியில் அந்த பெண் எனது மாணவி. அந்த பெண் தனது தந்தையிடம் மேற்கொண்டு என்ன செய்வது என்று என்னிடம் ஆலோசிக்கும்படி அறிவுரை கூறினார். அதற்கு முன்பு எனக்கு அவரைத் தெரியாது. அவர் என்னிடம் வந்து முழு கதையையும் கூறினார். நான் அவரிடம், '' இது மிகவும் சுலபமானது. நீங்கள் ஒரு மோசமான விபச்சாரியை அந்த ஆளின் வயதுடைய ஒரு விபச்சாரியை தேடிக் கண்டுப் பிடியுங்கள்'' என்றேன்.

உடனே அவர்,''என்ன?'' என்றார்.

அதற்கு நான் அவரிடம், ''இந்த முழு விஷயத்தையும் கவனமாகக் கேளுங்கள். தெருவில் போகும் மோசமான ஒரு விபச்சாரியை கண்டு பிடியுங்கள், வீட்டின் முன்னால் வேறு ஒரு படுக்கை போட்டு அந்த விபச்சாரி,'' இந்த கொள்ளக்காரன் என்னைத் திருமணம் செய்து கொள்ளும் வரை நான் சாகும் வரை உண்ணாவிரதம் இருக்கப் போகிறேன் என்று அறிவிக்கும்படி செய்யுங்கள். இதை விட வேறு எதுவும் வேலைக்கு ஆகாது'' என்று கூறினேன்.

அந்த கொள்ளைக்காரன் ஒரு இரவிலேயே தப்பி ஓடி விட்டான். அவனை மீண்டும் பார்க்க முடியவில்லை. அவன்

மீண்டும் வந்து தன்னைத் திருமணம் செய்து கொள்ளும்படி கேட்கவும் இல்லை. இது தான் காந்திய செய்முறை, மிகவும் சமயப்பற்றுள்ள ஒரு விஷயம்.

புத்தர் இறந்த பிறகு இந்த நாட்டில் இருந்த பௌத்தர்கள் எரித்து கொல்லப்பட்டார்கள், நாட்டை விட்டு துரத்தி அடிக்கப்பட்டார்கள். புத்தர் விட்டு விட்டு போன தாக்கம் எல்லாம் நாடு முழுவதிலும் முற்றிலும் சுத்தமாக அழிக்கப்பட்டது. புத்த கயாவில் அவர் மெய்ஞ்ஞானம் அடைந்ததன் நினைவாக கட்டப்பட்ட கோயிலும் கூட, அதைக் கவனிப்பதற்கு ஒரு பௌத்தரும் கூட இல்லை. பிராமணர் ஒருவர் தான் அந்த கோயிலை கவனித்து வந்தார். அவரது குடும்பம் தான் தலைமுறை தலைமுறையாக இந்த இரண்டாயிரம் ஆண்டுகளாக அந்தக் கோயிலை கவனித்து வருகிறது.

இப்போது அவர்கள் அந்தக் கோயிலின் சொந்தக்காரர்கள் ஆகிவிட்டனர். அவர்கள் புத்தரை நம்புவதில்லை. அவர்கள் புத்தருக்கு எதிரானவர்கள். ஆனால் அந்த கோயில் விலை மதிப்பற்றது. ஏனெனில் உலகம் முழுவதும் இருந்து மக்கள் அந்த கோயிலுக்கு வருகின்றனர். அதிக பணம் அந்த கோயிலுக்கு வருகிறது, ஆகவே அந்த பூசாரி கவலைப்படவில்லை. அவர் நிறைய பணம் சம்பாதித்துக் கொண்டு இருக்கிறார். எனவே அந்தக் கோயிலை அவர் யாரிடமும் கொடுப்பதற்கு விரும்பவில்லை. ஏனெனில் இரண்டாயிரம் ஆண்டுகளாக அது அவருக்கு சொந்தமானதாக உள்ளது. எந்த ஒரு சட்டமும் அவரிடம் இருந்து அதை எடுத்துக் கொள்ள முடியாது.

ஆகவே பௌத்தர்கள் சீனாவையும், திபெத்தையும் அடைந்த உடன் அவர்கள் ஒரு பாடம் கற்றுக் கொண்டு விட்டனர். நீங்கள் மக்களுக்கும் அவர்களின் பாரம்பரியத்திற்கும் எதிராக சென்றால் உங்களால் தாக்கு பிடிக்க முடியாது. ஒருவேளை பிறரை கட்டுப்படுத்தும் வலிமை உள்ள அந்த மனிதர் உயிரோடு இருந்திருந்தால் நீங்கள் விளையாட்டில் ஜெயித்தவராக காணப்படலாம், ஆனால் அந்த மனிதர் போய்விட்டால், இந்தியாவில் என்ன நடந்ததோ அதுதான் திபெத்தில் நடக்கும், சீனாவிலும் நடக்கும். இலங்கையிலும் நடக்கும், ஜப்பானிலும்

நடக்கும். எனவேதான் அவர்கள் தங்களை சமாதானம் செய்து கொண்டனர்.

இப்படிப்பட்ட தவறான சூத்திரங்களை உள்ளே நுழைத்ததற்கு அது தான் காரணமாகும். திபெத்தில் உள்ள புத்த புனித நூல்கள், திபெத்தில் உள்ள பௌத்த மக்களை ஆறுதல் படுத்துவதற்காக வேறு சூத்திரங்களைக் கொண்டுள்ளது. சீன மகாயான சூத்திரங்களில் வேறுபாடுகள் உள்ளன. இலங்கையிலும் அவை வேறுபட்டு இருக்கின்றன. புத்தரால் கூறப்படாத, இப்படிப்பட்ட முற்றிலும் முட்டாள்தனமான சூத்திரங்கள், பௌத்த புனித நூல்களில் எப்படி நுழைந்தன என்பதற்கு இதுதான் வரலாற்று ரீதியான காரணமாகும். அறிந்தே அவை உள்ளே சேர்க்கப்பட்டன. ஏனெனில் அவை குப்பை என்றால் புத்தமதம் உயிர் பிழைத்து இருக்க முடியாது.

ஆனால் என்னைப் பொறுத்தமட்டில் மற்றும் போதிதருமரைப் பொறுத்தமட்டிலும் கூட உண்மை நிலைதான் மதிப்பாக இருந்திருக்கவேண்டும். உயிர் பிழைப்பது அல்ல, உண்மை நிலையை குலைத்துவிட்டு, பொய்களை உருவாக்கி உயிர் வாழ்வதில் என்ன இருக்கிறது? இந்த ஒட்டு மொத்த உலகில் இருந்தும் கூட புத்தமதம் மறைந்து போனாலும் கூட அது ஒரு பெரிய விஷயம் ஆகாது. ஆனால் புத்தரின் பேச்சுக்களில் தூய்மையானது பாதுகாக்கப்பட்டு இருக்க வேண்டும்.

ஒரு ஆன்மிக சாதகன், ஆன்மிகத்தை தேட விரும்பும் போது, தேவையற்ற ஒழுங்கு நடவடிக்கைகள், சடங்குகள் போன்ற காட்டில் சிக்கிக் கொண்டு வழி தெரியாமல் போய் விடக் கூடாது. போதிதருமர் அதைத் தெளிவாக்கி இருக்க வேண்டும். அதில் உள்ள ஆபத்தை நான் அறிவேன். அவர் அதிக குற்றஉணர்வு கொண்டிருப்பார் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. ஏனெனில் இந்த சூத்திரங்களுக்கு பிறகு அவர் சீனாவை விட்டு வெளியேறி இமய மலைக்கு வந்து விட்டார். தான் செய்வது தனது சொந்த புரிதலுக்கு எதிரானது என்பதை கண்டு அவர் கண்டிப்பாக மிதமான மனக்காயங்களை உணர்ந்திருக்க வேண்டும். ஆனாலும் கூட என்னால் அவரை மன்னிக்க முடியாது. உண்மைக்கு எதிராக யார் சென்றாலும் என்னால் அவர்களை மன்னிக்க முடியாது.

நன்னெறிகளைக் கடைப்பிடிப்பவர் யாராக இருந்தாலும் பூமியிலும் சொர்க்கத்திலும் அநேக எண்ணிக்கையில் உள்ள எந்த ஒரு உயிரினத்திற்கும் காயத்தை ஏற்படுத்த மாட்டார்கள். தவறுகளாக நீங்கள் எதையாவது காயப்படுத்தி விட்டால், நீங்கள் துன்பப்படுவீர்கள். எதிர்காலத்தில் பெறப் போகும் ஆசீர்வாதத்திற்காக, உயிரினங்களைக் காயப்படுத்தி, வேண்டும் என்றே நன்னெறிகளை உடைத்தெறிபவர்கள் யாராக இருந்தாலும் அவர்கள் அதிகமாக துன்பப்படுகிறார்கள். வரப்போகிற ஆசீர்வாதங்களை, துன்பங்களாக மாற்றுவதற்கு அவர்களால் எப்படிவிட்டுவிட முடியும்?

அணையா விளக்கு என்பது விழிப்புணர்வைக் குறிக்கிறது.

இந்த பேச்சில் மட்டுமே அந்த உருவகம் சரியானதாக தெரிகிறது. அது முழுமையான விழிப்புணர்வு, அணையா விளக்கு போன்றது என்று பொருள் விளக்கம் கொள்ளமுடியும். ஆனால் அவரது பொருள் விளக்கத்திற்கு மற்ற உருவகங்களை அவரால் உறவுபடுத்தி கூற முடியவில்லை.

நீண்ட காலத்திற்கு முன்பு தீபம் காரா அல்லது விளக்கேற்றுபவர் என்று பெயருடைய ஒரு புத்தர் இருந்தார். விளக்கேற்றுபவர் என்பதுதான் அவரது பெயரின் அர்த்தம். ஒரு புத்தரின் கண் இமைகளின் இடையே உள்ள மயிர்கள் ஒரு சுற்று சுற்றுவதால் வெளிப்படுகின்ற ஒளியினால் கணக்கற்ற உலகங்களை ஒளியேற்ற முடியும். ஒரு எண்ணெய் விளக்கினால் எந்த உபகாரமும் கிடையாது.

இரவும் பகலும் ஆறுகாலமும் பயிற்சி செய்தல் என்பதற்கு, ஆறு புலன்களுக்கு மத்தியில் இடைவிடாது மெய்ஞ்ஞானத்தை பேணி வளர்த்தல், விழிப்புணர்வை ஒவ்வொரு உருவத்திலும் பாதுகாத்தல் என்று அர்த்தமாகும். ஆறு காலங்கள் என்பதற்கு ஆறு புலன்களின் மீதும் ஒருபோதும் கட்டுப்பாட்டு தளர்த்தாமல் இருத்தல் என்று அர்த்தமாகும்.

ஆனால் இவை அவரது சொந்த பேச்சிற்கு முரண் பட்டதாக இருக்கின்றன. கட்டுப்பாடு என்பது தேவை இல்லை ஏனெனில்

அது மனதின் மூலம் நடக்கிறது. ஒருவர் தானே நிகழ்கின்ற வாழ்க்கையை வாழ வேண்டும். அது தான் அவரின் அடிப் படையான போதனை. ஒருவர் உள்ளத்தில் தானே எழுகின்ற வற்றை செய்பவராக இருக்கவேண்டும். ஒருவர் கடந்த காலத்தைப்பற்றி நினைக்காமலும், அல்லது எதிர்காலத்தைப்பற்றி நினைக்காமலும், அல்லது நிகழ்காலத்தைப் பற்றிக் கொண்டும் வாழாமல், நொடிக்கு நொடி வாழ்ந்தாக வேண்டும்.

இப்படிப்பட்ட அழகான சூத்திரங்களை போதிதருமர் ஆரம்பத்தில் கொடுத்து இருக்கிறார். ஆனால் முடிவில் அவர்களது சொந்த காரியத்தையே முற்றிலும் கெடுத்து விடுகிறார்.

*ஸ்தூபியைச்சுற்றி நடப்பது என்பதில், ஸ்தூபி என்பது உங்களது உடல் மற்றும் மனம். உங்களது விழிப்புணர்வானது நிற்காமல் உங்களது உடல் மற்றும் மனதை சுற்றி வருதல் ஸ்தூபியைச் சுற்றி நடப்பது என்று அழைக்கப்படுகிறது.*

இந்த ஒட்டு மொத்த விஷயமும் முட்டாள்தனமானது என்றாலும் கூட அவர் எப்படியோ சமாளிப்பதற்கு முயற்சி செய்கிறார். ஸ்தூபிக்கள் உண்மையில் இருக்கின்றன. மகாயானப் பிரிவின் பௌத்தர்கள் அந்த ஸ்தூபிக்களுக்கு புனித யாத்திரை சென்று அவற்றை சுற்றிவருவார்கள். ஆனால் உங்களது உடல் மற்றும் மனம் ஒரு ஸ்தூபி அல்ல. நீங்கள் இறந்த பிறகு உங்களுக்கு ஒரு கல்லறை கட்டப்படும். அதுதான் ஸ்தூபி. புத்த மதத்தினரின் கல்லறையானது ஸ்தூபி என்று அழைக்கப் படுகிறது. அது ஒரு விதமான வட்டவடிவில் உண்டாக்கப் படுகிறது.

ஆனால் உங்களது உடல் மற்றும் மனம் உயிரோடு இருக்கிறது. எனவே உங்களது தன்னுணர்வானது உங்களது உடல் மற்றும் மனதை எப்படி சுற்றி வரமுடியும்? அவரது பொருள் விளக்கங்களில் இருந்து கேள்விகள் கேட்கப்படலாம் என்பதைக் கூட அவர் கருத்தில் எடுத்துக் கொள்ளவே இல்லை. அவற்றை பற்றி கேள்விகள் கேட்கப்பட வில்லை, ஏனெனில் மக்கள் அதில் மன ஆறுதல் அடைகிறார்கள். அவற்றுள் தெளிவாகத் தெரிகின்ற ஒன்றை விரும்புகிறார்கள். அது ஒரு உருவகம் என்னும் போது

அதனால் எந்தத் தீங்கும் கிடையாது. அவர் கௌதம புத்தரை மறுக்கவில்லை.

*உண்ணா நோன்பை கடைப்பிடித்தல் என்பதற்கும் இதே உண்மை பொருந்தும்.*

கொஞ்சம் புத்திசாலித்தனம் உள்ள ஒவ்வொரு மனிதனும் இதில் உள்ள முட்டாள்தனத்தை கண்டு கொள்ளமுடியும்.

*உண்ணா நோன்பு இருத்தல் என்பதற்கு... உங்களது உடலையும் மனதையும் சரி செய்தல் என்று அர்த்தம்.* உங்களது உடலையும் மனதையும் கவனம் சிதறாமல் மற்றும் கலங்காமல் சரிசெய்தல் என்று அர்த்தமாகும் என்பது எப்படி உண்ணா நோன்பு என்பதற்கு அர்த்தமாக முடியும் என்று என்னால் நினைத்துப் பார்க்க முடியவில்லை. உண்ணா நோன்பு என்றால் வெறுமனே உண்ணா நோன்புதான். வேறு எதுவும்' அல்ல,

*நீங்கள் மாயை என்னும் உணவை உண்பதை நிறுத்தி விடும் போது, நீங்கள் அதை மீண்டும் தொட்டால் நீங்கள் உங்களது உண்ணா நோன்பை உடைத்து எறிந்து விடுகிறீர்கள்.* இப்போது அவர் என்ன சொல்கிறோம் என்பதையே மறந்துவிட்டார். உண்மையில் அப்படி அவர் கூறுவது அவரது ஆன்மாவின் உள்ளுக்குள் இருந்து வரவில்லை. இது வெறுமனே மனமானது ஜிம்னாஸ்டிக் செய்வது போன்றது. அவர் உடலையும், மனதையும் ஸ்தூபி என்று விவரித்ததை மறந்து விட்டார். உங்களது உடலை சரி செய்தல், உங்களது உடலை ஒழுங்கு படுத்துதல் தான் உண்ணா நோன்பு என்று விவரித்து விட்டார்.

இப்போது, மாயை என்னும் உணவை உண்பதை நிறுத்திவிட்டால் என்னும் கருத்து எங்கிருந்து வருகிறது? இது அந்த உருவகத்திற்கான விவரிப்பு அல்ல. உணவு என்பது உள்ளே கொண்டு வரப்படவில்லை.

*நீங்கள் மாயை என்னும் உணவை உண்பதை நிறுத்தி விட்டால்....* மாயை இல்லாத உணவு என்று ஏதாவது இருக்கிறதா? நீங்கள் சாப்பிடுகிற அதே ரொட்டியைத்தான் புத்தரும் சாப்பிடுகிறார், நீங்கள் குடிக்கிற தண்ணீரைத் தான்

புத்தரும் குடிக்கிறார். நீங்கள் அதை மீண்டும் தொட்டாலே.... சாப்பிடக்கூட வேண்டாம்; வெறுமனே அதைத் தொட்டாலே அது மாயை ஆகி விடுகிறது! ஒரு மாயையைத் தொடுவதில் என்ன தீங்கு இருக்கிறது? மாயை என்பது இல்லாதது, உங்களால் அதைத் தொட முடியாது. ஆனால் நீங்கள் அதை மீண்டும் தொட்டுவிட்டால் நீங்கள் உண்ணா நோன்பை உடைத்து விடுகிறீர்கள். அவர் முன்பு விளக்கமளித்த உருவகத்தை மறந்து விட்டார். இப்போது, நீங்கள் அந்த மாயை உணவைத் தொட்டாலும் கூட உங்களது உண்ணா நோன்பை உடைத் தெறிந்து விட்டீர்கள் என்கிறார்.

அப்படி உடைத்தெறிந்து விட்டால், அதிலிருந்து நீங்கள் ஆசீர்வாதங்களை அறுவடை செய்ய முடியாது. இதைக் கண்டு கொள்ளாத மயக்கத்தில் உள்ள மக்களால் இந்த உலகம் நிறைந்து இருக்கிறது. எல்லா விதமான தீயவைகளிலும் அவர்கள் தங்களது உடல் மற்றும் மனதை ஈடுபடுத்துகிறார்கள். அவர்கள் தங்களது கட்டுக்கடங்கா உணர்ச்சிகள் மீதான கட்டுப்பாட்டிற்கு சுதந்திரம் கொடுத்து விடுகிறார்கள், அவர்கள் எந்த வெட்கமும் கொள்வ தில்லை. அவர்கள் சாதாரண உணவை சாப்பிடுவதை நிறுத்தி விடும் போது அதை அவர்கள் உண்ணா நோன்பு என்று அழைக்கின்றனர். எப்படிப்பட்ட முட்டாள்தனம்?

எப்படிப்பட்ட முட்டாள்தனம்? என்கிற அந்த கடைசி வாக்கியத்தை மட்டும் நான் ஒத்துக் கொள்கிறேன்.

வழிபாடு என்பதும் இதே போன்றது தான். நீங்கள் அதன் அர்த்தத்தை புரிந்து கொண்டு அதன் நிபந்தனைகளை கடைப் பிடிக்க வேண்டும். அதற்கான அர்த்தத்தில் செயலும், செயல் இல்லாமையும் உள்ளடங்கி இருக்கறது.

அவர் தொடர்பில்லாத வார்த்தைகளை உள்ளே கொண்டு வந்து மக்களை ஏமாற்ற முயற்சி செய்கிறார்

வழிபாடு என்றால் பெரும் மதிப்பு மற்றும் பணிவு அல்லது அடக்கம் என்ற அர்த்தம்.

இது உண்மைதான். இதற்கு உங்களது உண்மையான ஆன்மாவிற்கு பெரும் மதிப்பும் மாயையை பணிவுடன் இருக்கச் செய்வதும் என்றும் அர்த்தமாகிறது. ஆனால் நீங்கள் உண்மையான ஆன்மாவை கண்டு கொள்ளும் போது, நீங்கள் மாயையை எங்கு காண்பீர்கள்? இரண்டும் ஒன்றாக இருக்க முடியாது, ஒன்று நீங்கள் கண் விழித்து இருக்க வேண்டும். அப்போது அங்கு கனவுகள் இருக்காது அல்லது கனவுகள் அங்கு இருந்து நீங்கள் விழித்தெழாமல் இருக்க வேண்டும். தனது உண்மையான ஆன்மாவை அறிந்து கொள்கின்ற மனிதனுக்கு மாயை என்பது கிடையாது. ஆனால் போதிதருமர் குழப்பத்தில் மாட்டிக் கொண்டார். எனவே அதிலிருந்து வெளியே வருவதற்கு அவர் கடினமான முயற்சி செய்கிறார். ஆனால் அந்த குழப்பத்தில் மேலும் மேலும் ஆழத்திற்கு செல்கிறார்.

*தீய ஆசைகளை துடைத்து விட்டு நல்ல எண்ணங்களை கொண்டுவந்தால், அதில் எதுவும் காட்டப்பட வில்லை என்றாலும் கூட, அது வழிபாடாக ஆகிறது.*

முன்பு இந்த சூத்திரங்களில் நல்லது மற்றும் கெட்டது ஆகிய இரண்டிற்கும் அப்பால் ஒருவர் போக வேண்டும் என்று அவர் கூறினார். இப்போது நல்லது வழிபாடாகிறது.

*யார் இந்த உள் அர்த்தத்தை பேணி வளர்க்காமல், ஆனால் அதற்கு பதிலாக வெளிநோக்கிய வெளிப்படுத்துதல்களில் மனதை ஒருமுகப்படுத்துகிறார்களோ அவர்கள் அறியாமை, வெறுப்பு, தீமை ஆகியவற்றில் ஈடுபடுவதை ஒருபோதும் நிறுத்தாமல் எதற்கும் தகுதியானவராக இல்லாத படிக்கு தங்களின் சக்தியை தீர்த்து விடுகிறார்கள். அவர்களால் ஆசனங்களின் மூலம் அடுத்தவர்களை ஏமாற்ற முடியும், ஞானிகளின் முன்னால் வெட்கப்படவும், மரணிப்பவர்களின் முன்னால் தகுதி அற்றவர்களாகவும் இருக்க முடியும். ஆனால் அவர்கள் ஒருபோதும் சக்கரத்தில் இருந்து தப்ப மாட்டார்கள். அவர்கள் ஏதாவது சிறப்பை குறைவாகவே அடைவார்கள்.*

இது சூத்திரங்களின் விநோதமான ஒரு தொகுப்பு. அவர் உண்மையில் ஆழமாக போகிறார். எல்லாத் தவறுகளையும்

வெட்டி எறிகின்ற கூர்மையான வாள் போன்று இருக்கிறார். ஆனால் இவை எல்லாம், 'இந்த அறியாமை என்பது எங்கிருந்து வருகிறது?' என்கின்ற இறுதியான கேள்வி கேட்கப்படும் வரைதான் அப்படி இருக்கிறார். அவரால் அதற்கு பதில் சொல்ல முடியவில்லை. தனக்கு தெரியாது என்று கூறிக் கொள்வதற்கு போதுமான பணிவும் அவரிடம் இல்லை. இப்படிப்பட்ட குழப்பத்தில் அவர் மாட்டிக் கொள்கிறார். அதன் பின்னர் ஒவ்வொரு கேள்வியும் பதில் சொல்லப்படாமலேயே இருக்கிறது. அதற்கு பதில் சொல்வது போல அவர் பாசாங்கு செய்கிறார். ஆனால் அந்த பதிலானது அந்த கேள்விக்கு தொடர்புடையதாகக் கூட இல்லை.

போதிதருமர் போன்ற மனிதருக்கே இப்படி நடக்க முடியும் என்றால், நீங்கள் மிகவும் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும். தங்களது முழு அர்ப்பணிப்பும் உண்மை நிலை குறித்து மட்டுமே இருக்க வேண்டும். வேறு எது குறித்தும் இருக்கக் கூடாது என்கிற எளிய காரணத்திற்காகத் தான் நான் உங்களை எந்த மதத்தையும் சார்ந்து இருக்காதீர்கள், எந்த கோட்பாட்டையும் சார்ந்து இருக்காதீர்கள். எந்த ஒரு புனித நூலையும் சார்ந்து இருக்காதீர்கள் என்று வலியுறுத்துகிறேன். உங்களது அர்ப்பணிப்பு பிளவுபட்டு விடக்கூடாது. அப்படி இருந்தால் நீங்கள் சமாதானம் செய்து கொள்ள வேண்டியது இருக்கும். நீங்கள் அப்படி செய்வது உங்களைப் புரிந்து கொள்பவர்கள் யாராக இருந்தாலும், நீங்கள் புத்தி சுவாதீனம் இல்லாதவராக ஆகிவிட்டீர்களோ அல்லது பைத்தியக்காரர் ஆகி விட்டீர்களோ அல்லது உங்களுக்கு வயதாகி விட்டது என்றோ உணர்ந்து கொள்வார்கள். நீங்கள் பாதையை தவறவிட்டு விட்டீர்கள் என்கிற ஒரு விஷயம் மட்டும் நிச்சயமாகி விடும்.

போதிதருமரும் கூட அவரது உள் மையத்தில், அவரது மெய்ஞ்ஞானத்தை இழந்து விடாமல் இருக்கலாம். மெய்ஞ்ஞானம் என்பது இழக்கமுடியாதது. ஆனால் அவர் அதை மாசுபடுத்தி விட்டார். அவரது மெய்ஞ்ஞானம் இதற்கு பிறகு மிகவும் சுத்தமானதாகவோ, பிரகாசமானதாகவோ, ஒளித்தூண் போன்றோ இருக்காது. ஆனால் இவை எல்லாம் அவர்

வெறுமனே ஒரு அமைப்பு ரீதியான மதத்திற்காக வெறுமனே வியாபாரம் போன்று ஆக்கிவிட்டதால் வந்தவை.

எல்லா அமைப்பு ரீதியான மதங்களும் மறைந்து போய், மதம் என்பது இந்த பிரபஞ்சத்தை நோக்கிய தனி மனிதனின் அர்ப்பணிப்பு என்று ஆகாதவரையில் சமாதானம் செய்து கொள்ளல் என்னும் கேள்வி இராதபோது மட்டுமே மனித இனமானது மதப்பற்றுள்ளதாக ஆக முடியும்.

நான் உங்களுக்கு கூறுகிறேன்: மதம் என்பது எழுச்சி மிக்கது, எனவே மதத்தின் மனிதன் என்பவன் ஒரு எழுச்சியாளனாக இருக்கிறான். அவன் எல்லா பழைமை வாதங்களுக்கும், எல்லா பாரம்பரியங்களுக்கும், எல்லா அமைப்புகளுக்கும், எல்லாக் கொள்கைகளுக்கும் எதிராக எழுச்சி பெற்று நிற்கிறான். அவன் உண்மையை மட்டுமே நேசிக்கிறான். அவனது அன்பு சத்தியத்திற்குரியதாகவே இருக்கிறது. இப்படிப்பட்ட மனிதன் மட்டுமே அதை கண்டு கொள்ளமுடியும். மற்றவர்கள் அறியாமையில், கனவுகளில், தூக்கத்தில் மட்டுமே சுற்றித் திரிகிறார்கள். எனவே அவர்கள் துன்பப்படுகின்றனர்.

துறவிகள் குளிப்பதற்கு பங்களிப்பதன் மூலம், மக்கள் எல்லையற்ற ஆசீர்வாதங்களைப் பெறுகிறார்கள் என்று குளியலறைச் சூத்திரம் கூறுகிறது. வெளிப்புற பயிற்சியினால் தகுதி பெறுகின்ற ஒரு சம்பவமாக இது தோற்றமளிக்கும். இது எப்படி மனதைக் கவனிப்பதற்கு தொடர்புடையதாக இருக்கிறது?

இங்கு, துறவிகள் குளிப்பது என்பது தெளிவாகத் தெரிகின்ற எதையும் நீர் கொண்டு கழுவுதல் என்பதைக் குறிக்காது. பிரபு அவர்கள் இந்த குளியலறை சூத்திரத்தை போதித்த போது, அவர் தனது சீடர்கள் நீர் கொண்டு கழுவுதலின் தர்மத்தை நினைவில் கொள்ள வேண்டும் என்று விரும்பினார். ஆகவே தனது உண்மையான அர்த்தத்தை தெரிவிப்பதற்கு ஒவ்வொருவர் மீதான அக்கறையை அவர் பயன்படுத்தினார். குளியலறை என்பது இந்த உடல், நீங்கள் ஞானம் என்னும் நெருப்பை எரித்து, நன்னெறி என்னும் சுத்தமான தண்ணீரை வெதுவெதுப்பாக சூடாக்கி அதன் பின்னர் உங்களுக்குள் உள்ள உண்மையான புத்த இயல்பை குளிப்பாட்டுங்கள். இந்த ஏழு பயிற்சிகளையும் தூக்கி பிடிப்பதன் மூலம் நீங்கள் உங்களது புண்ணியத்தை கூடுதலாக சேர்க்கிறீர்கள். அந்த காலத்தில் இருந்த துறவிகள் கண்டுணர்தல் உள்ளவர்களாக இருந்தனர். அவர்கள் புத்தரின் அர்த்தத்தை புரிந்து கொண் டார்கள். அவர்கள் புத்தரின் போதனைகளைப் பின்பற்றினார்கள். தங்களது ஒழுக்கத்தை குறைகள் அற்றதாக ஆக்கினார்கள். புத்த நிலையின் கனிகளை சுவைத்தார்கள். ஆனால் இந்தக் கால மக்கள் இந்த விஷயங்களின் ஆழத்தை கண்டு கொள்ள மாட்டார்கள். நமது உண்மையான புத்த இயல்பிற்கு எந்த வடிவமும் கிடையாது. தொட்டு உணர முடியாத உடலை மக்கள் சாதாரண தண்ணீரை பயன்படுத்தி எப்படி கழுவ முடியும்? அது வேலை

செய்யாது. அவர்கள் விழித்தெழுவது எப்போது? இப்படிப்பட்ட ஒரு உடலை கழுவுவதற்கு நீங்கள் அதைக் கவனிக்க வேண்டும். ஆசையில் இருந்து மாசுக்களும், இழிசெயல்களும் எழும் போது, உங்களை உள்ளேயும் வெளியேயும் மூடி மறைக்கும் வரை அவை பல்கிப் பெருகுகின்றன. ஆனால் உங்களின் இந்த உடலைக் கழுவுவதற்கு நீங்கள் முயற்சி செய்தால், அதை சுத்தம் செய்வதற்கு முன்பு கிட்டத்தட்ட உடலானது காணாமல் போகும் வரை நீங்கள் அதைத் தேய்க்க வேண்டும். இதிலிருந்து, புத்தர் கூறியதற்கு வெளிப்புறத்தில் ஏதோ ஒன்றை நீரால் கழுவுதல் என்று அர்த்தமல்ல என்பதை நீங்கள் உணர்ந்து கொள்ள வேண்டும்.

யார் ஒருவர் புத்தரை முழு இதயத்தோடு ஆவாகனம் செய்கிறாரோ அவர் நிச்சயமாக மேற்கு சொர்க்கத்தில் மறுபிறவி எடுக்கிறார். இந்த வாசலானது புத்த நிலைக்கு வழி நடத்தி செல்வதால், மனதைக் கவனிப்பதன் மூலம் முக்தி நிலையை ஏன் தேடுகிறீர்கள்? புத்தர் என்றால் விழிப்புணர்வு என்று அர்த்தம், உடல் மற்றும் மனம் மீதான விழிப்புணர்வு என்று அர்த்தம், உடல் மற்றும் மனம் மீதான விழிப்புணர்வு தீயவைகள் எழுவதில் இருந்தும் கூட தடுக்கிறது. மேலும் ஆவாகனம் செய்தல் என்பதற்கு மனதிற்கு அழைப்பு விடுதல், ஒழுங்கு நடவடிக்கைகளின் விதிகளுக்கு இடைவிடாமல் மனதை அழைத்தல் மற்றும் உங்களது பலம் கொண்ட மட்டும் அவற்றைப் பின்பற்றி நடத்தல் என்று அர்த்தமாகும். புத்தரின் பெயரை ஆவாகணம் செய்வதற்கு, நீங்கள் ஆவாகனத்தின் தர்மத்தை புரிந்து கொண்டிருக்க வேண்டும். அது உங்களது மனதில் இல்லை என்றால், உங்களது வாயானது வெறும் ஒரு பெயரை மட்டுமே உச்சாடனம் செய்கிறது. மூன்று விஷங்களினால் நீங்கள் தொந்தரவு செய்யப்படும் வரை அல்லது உங்களைப் பற்றிய எண்ணங்களோடு நீங்கள் இருக்கும் வரை உங்களது மயக்கமுற்ற மனமானது நீங்கள் புத்தரைக் காண்பதில் இருந்து உங்களை வெளியே வைத்துவிடும். அர்த்தத்தை தேடும்போது நீங்கள் தோற்றங்களைப் பற்றிக் கொண்டால், உங்களால் ஒரு விஷயத்தை கண்டு கொள்ள முடியாது. இதனால் தான் கடந்த கால முனிவர்கள் பேச்சை வளர்க்காமல், தங்களது

எண்ணங்களையும் உணர்வுகளையும் தாங்களே ஆய்வு செய்வதை பேணி வளர்த்தார்கள்.

எல்லா புண்ணிய செயல்களுக்கும் மனம் தான் மூலம். எல்லா சக்திகளுக்கும் இந்த மனம் தான் தலையாயது. மனம் இளைப்பாறும் போது நிர்வாண நிலையின் முடிவில்லாத ஆனந்தம் அதிலிருந்து வருகிறது. மூன்று பகுதிகளிலும் மறுபிறவியும் கூட மனதில் இருந்து தான் வருகிறது. ஒவ்வொரு உலகிற்கும் மனமே வாசல். மனமே, ஆற்றின் ஆழமற்ற இடத்தின் வழியாக அடுத்த கரைக்கு நம்மை அழைத்துச் செல்கிறது. அந்த வாசல் எங்கு உள்ளது என்பதை அறிந்து கொண்டவர்கள் அதை அடைவதைப்பற்றி கவலைப்பட மாட்டார்கள். ஆற்றில் ஆழமற்ற இடம் எங்கு உள்ளது என்பதை அறிந்து கொண்டவர்கள் ஆற்றைக் கடப்பது பற்றி கவலைப்பட மாட்டார்கள்.

இந்தக் காலத்தில் நான் சந்திக்கிற மக்கள் மேலேழுந்த வாரியாக இருக்கின்றனர். தகுதி என்பது ஏதோ ஒரு உருவம் உள்ளது போல அவர்கள் நினைக்கின்றனர். அவர்கள் செல்வத்தை விரயம் செய்கின்றனர். மற்றும் நிலம் மற்றும் கடலில் உள்ள உயிரினங்களை கொலை செய்கின்றனர். தெளிவாகத் தெரிகின்ற எதைப் பார்த்தாலும் உடனடியாக அவர்கள் அதன் மீது பற்றுக் கொள்கின்றனர். நீங்கள் அவர்களிடம் உருவமற்ற தன்மைப் பற்றி பேசினால் அவர்கள் அங்கு வாய் பேசாமல் ஊமைகள் போன்று குழப்பத்தில் இருக்கின்றனர். இந்த உலகின் சிறிய கருணைகள் மீது பேராசை கொண்டு, அவர்கள் தங்களுக்கு வரப்போகின்ற துன்பத்தை காணமுடியாது குருடர்களாக இருக்கின்றனர். இப்படிப்பட்ட சீடர்கள் வீணாக தங்களைத் தேய்மானம் செய்து கொள்கிறார்கள். உண்மையில் இருந்து பொய்மைக்கு திரும்புவதன் மூலம், எதிர்கால ஆசீர்வாதங்களைத் தவிர வேறு எதையும் பேசுவதில்லை.

உங்களால் மனதின் உள் ஒளி மீது வெறுமனே ஒருமுகப்படுத்தி அதன் வெளிப்புற பிரகாசத்தை கவனிக்க முடியும் என்றால், நீங்கள் மூன்று விஷங்களையும் கைவிட்டு விட்டு ஆறு திருடர்களையும் கூட ஒரே அடியாக விரட்டி விடலாம். முயற்சி இல்லாமல் சத்தியத்தின் வாசலையும்,

எல்லையற்ற எண்ணிக்கையில் புண்ணியங்களையும் நிறைகளையும் உங்களுடையதாக ஆக்கிக் கொள்ளலாம். சாதாரணமாக உள்ளவற்றின் மூலம், உயர்நிலையில் உள்ளதை சாட்சி பாவனையில் கண்டு கொள்வது, கண் சிமிட்டும்; தொலைவை விட குறைவான தூரத்தில் உள்ளது. அறிந்து கொள்வது என்பது இப்போதே நடக்கக் கூடியது. அப்படி இருக்கும் போது நரை முடி பற்றி ஏன் கவலைப்படுகிறீர்கள், ஆனால் உண்மையான காதலானது மறைந்து இருக்கிறது. வெளிப்படுத்தப்பட முடியாதது. நான் மனதைக் கவனித்தல் என்பதை மட்டுமே தொட்டுக் காட்டி இருக்கிறேன்.

கடவுளுக்கு நன்றி இது தான் போதி தருமரின் கடைசி சூத்திரம். அவர் ஏன் குளியலறையின் பின்னால் போகிறார் என்று கவலைப்பட்டுக் கொண்டு இருந்தேன்! இது மலையின் உச்சிக்கு சென்று விட்டு திரும்பவும் உங்களது வீட்டிற்கு வருகின்ற ஒரு அபரிமிதமான பயணமாக இருந்தது. போதி தருமர் உங்களை முழு ரங்கராட்டினத்திலும் ஏற்றிக் கொண்டு சென்று விட்டார்.

நான் போதி தருமரில் இருந்து ஆரம்பித்தேன். போதிதருமர் என்ற பெயருக்கு, ' விழிப்புணர்வுவின் சுய இயல்பு'' என்று அர்த்தம். ஆனால் துரதிருஷ்டவசமாக நான் போதிதருமருடன் பயணத்தை முடித்தாக வேண்டும். இப்போது போதிதருமர் என்றால்,'விழிப்புணர்வு இல்லாமை, முட்டாள்தனத்தின், இயல்பு'' என்று அர்த்தமாகிவிட்டது.

அவர் தன்னை இந்த குழப்பத்தில் ஆழ்த்திவிட்டார், ஆனால் இது நமக்கு ஒரு அபரிமிதமான அகப் பார்வையாக இருந்தது. அவரைக் கவனிக்கும் போது இதே குழப்பத்தை நீங்கள் தவிர்த்து விடலாம். ஆரம்பத்தில் அவர் கூறியவை எல்லாம், மனிதனின் ஆழத்தில் உள்ள சக்திகள் குறித்த அகப்பார்வையைக் காட்டியது. ஆனால் இப்போது அவர் கூறுவது எல்லாம் வெறுமனே முற்றிலும் சம்பந்தமில்லாதது.

அவ்வப்போது தான் யார் என்பதை அவர் நினைவு படுத்திக் கொள்கிறார். ஆனால் அவர் மறந்து கொண்டே போவது பேலத்தான் தெரிகிறது. ஒருவேளை மகாயானம் என்னும் தனிக் கோட்பாட்டின் மீது அவர் அதிகமான பற்றுதல் கொண்டிருக்

கலாம். புதிதாக புத்த மதத்தில் சேர்ந்தவர்களை தொந்தரவு செய்யாமல் இருப்பது பற்றியும் அவர் கவலைப்பட்டிருக்கலாம்.

இந்தச் சூழ்நிலையில், கண்டிப்பாக அவர் நிறைய கஷ்டப்பட்டிருக்க வேண்டும். என்னால் அதை பார்க்க முடிகிறது. ஒருவேளை யாரும் அதை கவனிக்காமல் இருந்திருக்கலாம். ஆனால் என்னால் அவரது கஷ்டத்தை பார்க்க முடிகிறது. விஷயங்களை அவர் விருப்பம் இல்லாமல் கூறுகிறார். அதுதான் அவரது கஷ்டம். எந்த ஒரு கோட்பாட்டையும், எந்த ஒரு புனித நூலையும், எந்த ஒரு திருச்சபையையும் ஏற்றுக் கொள்கின்ற அனைவருக்கும் இதுதான் பிரச்சினையாக இருக்கிறது. அவர்கள் தொடர்ந்து சிக்கலில் இருப்பார்கள். அவர்கள் தங்களின் உள்ளே உள்ள சொந்தக் குரலை கேட்கும்போது அது வேறு ஏதோ ஒன்றினைக் கூறுகிறது. அவர்கள் தங்களின் பாரம்பரியத்தை கவனித்தால் அது வேறு எதையோ சொல்கிறது.

எல்லாரையும் கோபத்திற்கு உள்ளாக்குவதற்கு தயாராக இந்த உலகில் ஒரு சில மக்கள் இருந்து வந்திக்கிறார்கள். போதிதருமர் தனது அனுபவத்தை சொல்லி இருந்தால் ஒருவேளை அவர் தனது எல்லாப் புகழ் மற்றும் மரியாதையை இழந்திருக்கலாம். புத்த மதத்தின் தலைவர்களில் தனது உயர்ந்த பெயரையும் இழந்திருக்கலாம். ஆனால் எனக்கு, அது ஒரு இழப்பாக இருக்காது. அவர் தனது சொந்த அனுபவத்தை ஒருமுகப்படுத்தி, இடைவிடாது ஒரே அர்ப்பணிப்புடன் இருந்திருந்தால் அவர் மற்றவர்களை விடவும் உயரத்தில் எழுந்து நின்றிருப்பார். வேறு எதுவும் அதை மாற்ற முடியாது.

குளியலறை சூத்திரம் என்ற இந்த சூத்திரத்தின் பெயரைக் கேட்டவுடனேயே நீங்கள் சிரித்தீர்கள். ஏனெனில் இந்தியாவில் இந்து மதத்திற்கு எதிராக, சமணமதம் மற்றும் புத்தமதம் ஆகிய இரண்டு புரட்சிகரமான மதங்கள் இருந்து வந்தன என்பது உங்களுக்கு தெரியாது. ஒரு சமணத் துறவி ஒருபோதும் குளிப்பதில்லை; அவர் தனது பற்களை கூட துலக்குவதில்லை. அவர் நாற்றமடிப்பார் ஆனால் அது தான் மிகப்பெரிய நன்னெறி யாக எண்ணப்பட்டது. எப்படியும் மரணமடையப் போகின்ற, நிலையற்ற இந்த உடலைப் பற்றி நீங்கள் கவலைப்படாமல்

இருப்பது நல் ஒழுக்கமாக கருதப்பட்டது. அதை ஏன் சுத்தம் செய்து கொண்டு உங்களது நேரத்தை வீணாக்குகிறீர்கள்? நாளை மீண்டும் அது அசுத்தமாகிவிடப் போகிறது.

புத்தமதமானது சமணமதத்திற்கு கிட்டத்தட்ட இணையான ஒரு மதம். முக்கியமான விஷயங்களில் அவை ஒத்துப் போகின்றன. ஆனால் மகாவீரரை விடவும் புத்தர் மிகவும் அர்த்தமுள்ளவராக தெரிகிறார். புத்தர் தனது துறவிகளை தினமும் குளித்து அவர்கள் சுத்தமாக இருக்க வேண்டும் என்று விரும்பினார். அப்போது தான் அவர்களது உடலானது கண்டனத் துக்குரியதாக ஆகாமல் தங்களின் தெய்விக இயல்பின் கோயில் என்று நினைந்து உடலுக்கு அவர்கள் மரியாதை கொடுப்பார்கள். ஆனால் புத்த மதத்தில் அநேக துறவிகள் இருந்தனர். அவர்களுக்கு உணவளித்தல், உங்களது குளியலறைகளை அவர்கள் பயன்படுத்துவதற்கு கொடுத்தல், அவர்களுக்கு ஆடைகளைக் கொடுத்தல், அவர்கள் உடல் நலம் குன்றிய போது மருந்து கொடுத்தல் ஆகியவை இந்த சமுதாயத்திற்கு மேலும் மேலும் அதிக சுமையாக ஆகிக்கொண்டு வந்தது.

சில வருடங்களுக்கு முன்பு தாய்லாந்தில், நாட்டின் மக்கள் தொகையில் கிட்டத்தட்ட கால் பங்கு மக்கள் துறவிகளாக ஆகிவிட்ட சூழ்நிலை வந்தது. எனவே அரசாங்கமானது, நீங்கள் அரசாங்கத்தின் அனுமதி பெறாமல், நீங்கள் ஒரு துறவியாக ஆகக் கூடாது என்று கூறி சட்டம் இயற்றியது.

இப்படிப்பட்ட ஒரு நடவடிக்கையை ஒரு அரசாங்கம் எடுப்பது, சரித்திரத்திலேயே இது தான் முதன் முறையாகும், ஆனால் ஒரு ஏழை நாட்டில் இது முற்றிலும் தேவையான ஒன்றாகும். நான்கு பேரில் ஒருவர் வேலை செய்யாமல் இருந்து கொண்டு, எதையும் உருவாக்காமல் ஆனால் தேவையான எல்லா விஷயங்களையும் அவருக்கு மற்றவர்கள் கொடுக்க வேண்டும் என்னும் போது அவர் ஒரு சுமையாக ஆகிவிடுகிறார்.

இது ஒரு அசிங்கமான சூழ்நிலை. அங்கு மக்கள் தொகையில் பாதிபேர் பசியோடு இருக்கிறார்கள். நாட்டில் பாதிபேர் தினமும் ஒருவேளை உணவு மட்டுமே சாப்பிட்டு விட்டு தூங்குகிறார்கள். அங்கு மக்கள் பழங்களை மட்டுமே

சாப்பிடுவதோடு அல்லாமல் மரத்தின் வேர்களை வெட்டி அதில் உள்ள கிழங்குகளை சமைத்து, அது தங்களுக்கு ஊட்டச்சத்தினை அளிக்கும் என்று நம்பிக்கை யோடு சாப்பிடுகிறார்கள். அந்த கிழங்குகள் மரத்தை ஊட்டமாக வளர்த்து வருவதால், அந்த மரங்கள் மலர்களையும் பழங்களையும் தருவதால், இயற்கை யாகவே அதன் வேர்கள் அதிக ஊட்டச் சத்துடன் இருந்தாக வேண்டும் என்று அவர்கள் நம்பினார்கள்.

கௌதம புத்தர் இப்படிப்பட்ட அற்பமான விஷயங்களைப் பற்றி பேச வேண்டியதாயிற்று. ஏனெனில் இதைப் பற்றி பேசப்படுவதில்லை, ஆனால் மக்கள் தாங்களாகவே முடிவுகளை எடுக்க ஆரம்பித்து விட்டனர். தனது சீடர்கள் உள்ளேயும் வெளியேயும் சுத்தமாகவும் தூய்மையாகவும்,எல்லா வழிகளிலும் உஷாராகவும், ஒரு ஒருங்கிணைந்த தனிமனிதர்களாக இருக்க வேண்டும் என்று விரும்பினார். சீடர்கள் குறித்து அவரது அக்கறையும், கருணையும் மிகப்பெரிய அளவில் இருந்ததால், ஒரு புத்த துறவிக்கு முப்பத்து மூன்று ஆயிரம் விதிமுறைகள் வகுக்கப்பட்டன. இதில் மனம் திண்டாடி விடும்; முப்பத்து மூன்று ஆயிரம் விதிமுறைகள்! இவற்றை நினைவில் நைத்திருப்பதே கூட மிகவும் கடினமானது.

ஆனால் புத்தர் ஒவ்வொரு விஷயத்திலும் அக்கறை எடுத்துக் கொண்டார். எப்போது கண் விழித்து வர வேண்டும், உங்களது உணவிற்காக எப்போது பிச்சை எடுக்க போகவேண்டும். உங்களது முழு உணவையும் ஒரே வீட்டில் எடுக்கக் கூடாது ஆனால் ஐந்து வீடுகளில் எடுக்க வேண்டும். அப்போதுதான் யாருக்கும் சுமையாக இருக்காது. ஐந்து வீடுகளிலும் உங்களுக்கு கொஞ்சம் உணவு கொடுத்தால் போதும். அது உங்களுக்கு போதுமானதாக இருக்கும். ஒரே வீட்டில் பிச்சை எடுத்தால், நீங்கள் அவர்களுக்கு பாரமாக ஆகி விடுவீர்கள். ஒரே நகரத்தில் மூன்று நாட்களுக்கு மேல் அதிகமாக தங்கக் கூடாது. ஒரு நாளில் ஒரு தடவை மட்டுமே சாப்பிடுங்கள். ஏனெனில் பல லட்சம் மக்கள் ஒரு நாளில் ஒரு தடவை மட்டுமே சாப்பிடு கின்றனர். நீங்கள் இரண்டு வேளை உணவு கேட்கக்கூடாது.

மூன்று தனித்தனி ஆடைகளுக்கு மேல் வைத்திருக்காதீர்கள்; அதில் இரண்டு பயன்பாட்டிற்கு, ஒன்று அவசரத்தேவைக்கு. உதாரணமாக, நீங்கள் எல்லா துறவிகளும் தங்கி இருக்கும் நகரத்திற்கு திடீரென்று வரவேண்டிய நிலை வரும் போது மழை பெய்ய ஆரம்பித்து விடுகிறது. உங்களது மேலாடையும், கீழாடையும் நனைந்து போய் விடும். அப்போது உங்களது உடலை மறைப்பதற்கு குறைந்த பட்சம் ஒரு ஆடையாவது வேண்டும். எனவே இந்த மூன்றாவது ஆடை அவசர காலத் திற்குரியது. இரண்டு உங்களது முக்கிய தேவைக்கு, ஆனால் நீங்கள் மூன்று ஆடைகளுக்கு மேல் வைத்துக் கொள்ளக் கூடாது.

இவை அற்பமானவை என்று தோன்றினாலும் கூட இந்த விவரங்கள் முக்கியமானவை. 'இது என்ன முட்டாள்தனம்? ஒரு கௌதம புத்தர் ஆன்மிகத்தை பற்றி பேச வேண்டும், அவர் வளர்ச்சி, விழிப்புணர்வு விடுதலை பற்றி பேச வேண்டும். ஆனால் அவர் இப்படிப்பட்ட சிறிய விஷயங்களைப் பற்றி பேசுகிறார்,'' என்று நீங்கள் நினைக்கலாம். ஒரு எளிய காரணத்திற்காக அவர் இப்படி செய்தாக வேண்டும். ஏனெனில் அவர் இந்த உலகை துறவறம் கொள்கின்ற எண்ணத்தை ஏற்றுக் கொண்டவர் மக்கள் இந்த உலகில் துறவறம் பூண்டு விடும் போது கண்டிப்பாக அவர்கள் சுமையாக ஆகிவிடுகிறார்கள். மேலும் நிலையில் உள்ள சமுதாயத்தில் இது அதிக சுமையாகிவிடும்.

ஆகவே, ஒருவர் தனது குளியலறையை ஒரு துறவி பயன்படுத்த கொடுப்பதால் அவர் மிகப்பெரிய புண்ணியத்தை சம்பாதிக்கிறார் என்று புத்தர் கூறும்போது, மக்கள் இதை ஒரு சுமையாக நினைக்காமல் ஆனால் ஒரு ஆசீர்வாதமாக நினைப்பதற்காக வெறுமனே மக்களைத் தூண்டுகிறார்.

ஒரு துறவி நீங்கள் கொடுக்கும் உணவை ஏற்றுக் கொள்ளும் போது அவர் உங்களுக்கு கடமைப்படவில்லை. நீங்கள் தான் அவருக்கு கடமைப்பட்டு இருக்கிறீர்கள். வெறுமனே அவர் உணவை ஏற்றுக் கொண்டதால் உங்களுக்கு பெரிய புண்ணியம் கிடைக்கிறது. ஒருவேளை நீங்கள் உங்களது சாப்பாட்டை கொடுத்திருக்கலாம் அல்லது உங்களது குழந்தைகளின் உணவைக் கொடுத்து இருக்கலாம், ஆனால் நீங்கள் ஏதோ

ஒன்றை தியாகம் செய்து இருக்கிறீர்கள். எந்த பணமும், எந்த உடைமைகளும் இல்லாத ஒரு மனிதனுக்கு நீங்கள் மரியாதை செய்திருக்கிறீர்கள் என்று புத்தர் கூறுகிறார்.

இந்த உலகில் துறவியாக ஆகப் போகிற குழந்தையைப் பெற்ற தாய் ஆசீர்வதிக்கப்பட்டவள் என்று புத்தர் கூறுகிறார். துறவறம் பூணுகின்ற ஒரு குழந்தையை உடைய ஒரு தந்தையும் ஆசீர்வதிக்கப்பட்டவர். அந்தக் குழந்தையானது தனது சக்தியை அதன் அறுதி நிலைக்கு கொண்டு செல்வதற்காக இந்த உலகில் துறவறம் மேற்கொள்கிறது. அவர்களுக்கு உதவுங்கள். உங்களால் உங்களது தன்னுணர்வை உயர்த்த முடியவில்லை என்றால் குறைந்தபட்சமாக யார் தங்களது தன்னுணர்வை அதன் இறுதியான பிரகாசத்திற்கு உயர்த்துவதற்கு அபரிமிதமான முயற்சி மேற்கொள்கிறார்களோ அவர்களுக்கு ஒரு சிறிய விதத்தில் உங்களால் உதவ முடியும்.

ஆகவே, இது அற்பமானதா அல்லது இல்லையா என்பது கிடையாது. இந்த சூத்திரத்தை அதில் உள்ளது போல அப்படியே போதிதருமர் ஏற்றுக் கொண்டு இருந்தால் அது நன்றாக இருந்திருக்கும். நான் என்ன கூறினேனோ அதையே போதிதருமரும் கூறி இருக்க வேண்டும். ஆனால் போதிதருமரே கூட மன உளைச்சலை உணர்கிறார். ஆகவே மீண்டும் அவர் இது கண்களுக்கு தெரிய ஒரு விஷயத்தை விளக்குகின்ற ஒரு உருவகம் என்று கூறுகிறார். எனவே அது அவரது ஒட்டு மொத்த அணுகுமுறையையும் பொய்யானதாக ஆக்குகிறது. நான் அந்த சூத்திரங்களைப் படிக்கிறேன். அதன் பிறகு அவரது பொய்யான விளக்கங்களைப் படிக்கிறேன்.

சூத்திரம் மிகவும் தெளிவாக உள்ளது; அதற்கு விளக்கம் இவை இல்லை.

*'துறவிகள் குளிப்பதற்கு பங்களிப்பதன் மூலம் மக்கள் எல்லையற்ற ஆசீர்வாதங்களைப் பெறுகிறார்கள் என்று குளியலறை சூத்திரம் கூறுகிறது. வெளிப்புற பயிற்சியினால் தகுதி பெறுகின்ற ஒரு சம்பவமாக இது தோற்றமளிக்கும். இது எப்படி மனதைக் கவனிப்பதற்கு தொடர்புடையதாக இருக்கிறது?*

சீடன் போதிதருமரிடம் கேட்கிறார். மனதைக் கவனித்தால் போதும் என்று நீங்கள் கூறுகிறீர்கள். ஆனால் புத்தர் இப்படிப்பட்ட சிறிய விஷயங்களைப் பற்றி பேசிக்கொண்டு இருக்கிறார். மனதைக் கவனித்தல் பற்றி நீங்கள் கூறுவதில் இப்படிப்பட்ட விஷயங்களுக்கு அதில் இடம் உள்ளதா?

இதற்கான எளிய பதில் இப்படி இருந்திருக்கவேண்டும்; நான் முக்கியமான விஷயங்களைப் பற்றி பேசுகிறேன். ஆனால் புத்தர் முக்கியமான மற்றும் முக்கியமல்லாத ஆகிய இரண்டையும் பற்றி பேசுகிறார். அவர் ஒரு துறவி என்ன செய்ய வேண்டும் என்பதில் மட்டுமே அக்கறை கொண்டவராக இல்லை. ஒரு துறவி மனதைக் கவனிக்க வேண்டும்; விழிப்புணர்வு, விபாசனா, கவனித்தல், சாட்சிபாவனை ஆகியவை மட்டுமே அவரது முக்கியமான பயிற்சிகள். ஆனால் அதோடு கூட அந்த ஏழை துறவிக்கு உணவும் தேவை; மழை காலத்தில் கொஞ்சம் தங்குமிடம் தேவை, அவருக்கு சில ஆடைகள் தேவை.

புத்தர் மிகவும் விரிவான நோக்கம் கொண்டிருக்கிறார். இது தனிப்பட்ட ஒரு துறவி பற்றிய கேள்வி அல்ல, ஆனால் பலலட்சம் மக்கள் துறவிகளாக ஆகிக் கொண்டு இருக்கும் போது, அதன் பின்னர் விதிமுறைகள் உண்டாக்கப்பட வேண்டும்; அப்படி இல்லை என்றால் அது இந்த ஒட்டு மொத்த சமுதாயத்திலும் குழப்பத்தை உருவாக்கி இருக்கும்.

ஒரு துறவி தான் என்ன சாப்பிடவிரும்புகிறார் என்று கூறக்கூடாது. அந்த குடும்பத்திற்கு என்ன செய்யப்பட்டு உள்ளதோ, அவர் அதைத்தான் சாப்பிட வேண்டும். நாளை அவர் எந்த குடும்பத்திற்கு பிச்சை எடுக்க போகிறார் என்றும் அவர் கூறக் கூடாது, ஏனெனில் அவரது அந்த செய்தியானது அந்த குடும்பத்தினருக்கு, நாளை துறவி தமது வீட்டிற்கு வருவதால் அவருக்கு விலை உயர்ந்த உணவை, சில சுவையான உணவை அளிக்க வேண்டும் என்கிற உணர்வை ஏற்படுத்திவிடக் கூடாது. இது ஒரு தேவையற்ற சுமை போன்று ஆகிவிடலாம். அந்த துறவி ஒரு ஒட்டுண்ணி போல ஆகிவிடலாம்.

இதை எல்லாம் தவிர்ப்பதற்காக, மக்கள் சாதாரணமாக விரும்பாத இப்படிப்பட்ட சின்ன விஷயங்களைப் பற்றி புத்தர்

பேச வேண்டியதாயிற்று. அந்த நாட்களில் மிகச் சில மக்களே தங்களுக்கென்று சொந்தமாக குளியலறை வைத்திருந்தனர். இருபத்து ஐந்து நூற்றாண்டுகளுக்கு பின்னர் இன்றும் கூட, ஒருசில பெரிய நகரங்களைத் தவிர, இந்திய ஜனத்தொகையில் தொண்ணூறு சதவிகிதம் பேர் தங்களுக்கென்று குளியலறை வைத்திருக்கவில்லை. அவர்கள் கிராமத்திற்கு வெளியே, ஆற்றின் கரைக்கோ அல்லது ஏரியின் கரைக்கோ அவர்கள் போகிறார்கள். அது தான் அவர்களுக்கு குளியலறை அது தான் அவர்களின் கழிப்பறை.

உங்களது படுக்கை அறையுடன் இணைத்து குளியலறை வைத்துக் கொள்வது ஒரு மிகப்பெரிய ஆடம்பரமாக நினைக்கப்படுகிறது. இந்தியாவில் ஒரு சிலர் மட்டுமே அப்படி வைத்துக் கொள்ளமுடிகிறது. இந்த நாடு அந்த அளவுக்கு ஏழை நாடு. வறுமை மட்டுமே அதைத் தடுக்கவில்லை; புத்தரின் அந்த காலத்திலும் கூட, போதுமான பணம் உள்ள மக்களுக்கு தங்களின் படுக்கை அறையோடு இணைத்து குளியலறை வைத்துக் கொள்ள வேண்டும் என்கிற யோசனை இல்லை.

நூறு வருடங்களுக்கு முன்பு அமெரிக்க உச்ச நீதிமன்றத்தில் ஒரு வழக்கு ஒன்று வந்ததை அறிந்து நீங்கள் ஆச்சரியப்படு வீர்கள், ஏனெனில் ஒருவர் தனது படுக்கை அறையுடன் இணைத்து ஒரு குளியலறை கட்டிவிட்டார். இது கிறிஸ்தவ மதத்திற்கு எதிரானதாக கருதப்படடது; இது அந்த அளவுக்கு ஒரு அசிங்கமான விஷயமாக எண்ணப்பட்டது. அந்த மனிதர் ஐரோப்பாவில் இருந்து அதைக் கற்றுக் கொண்டு வந்தார். அவர் அமெரிக்காவிக்கு ஒரு பரிசை கொண்டுவருவதாக நினைத்தார். நிச்சயமாக அது ஒரு பரிசு தான்!

ஆனால், அவர் மக்களின் மனதை மாசுபடுத்துகிறார் என்று கூறி, கிறிஸ்துவ அமைப்புகள் உச்ச நீதி மன்றத்தில் வழக்கு தொடர்ந்தன. 'இந்த எண்ணமானது சாத்தானால் அவரது மனதில் பதிக்கப்பட்டுள்ளது'', என்று அவர்கள் கூறினார்கள். ' படுக்கை அறையோடு இணைந்த ஒரு குளியலறையை யாராவது கேள்விப் பட்டு இருக்கிறார்களா? என்றும் கூறினார். இந்த வழக்கில் உச்சநீதிமன்றமானது அந்த மனிதர் அந்த குளியலறையை வீட்டின்பின்புறம் அது எங்கு இருக்க வேண்டுமோ அந்த

இடத்தில் மாற்றிக் கட்டும்படி உத்தரவிட்டது. அவை புறவீடுகள் என்று அழைக்கப்பட்டன. அவை பிரதான வீட்டோடு இணைக்கப் படுவதில்லை. வீட்டின் பின் பக்கம், கொல்லையில் கட்டப் பட்டன. அசிங்கமான இடங்கள்!

ஆனால், புத்தரின் காலத்தில் இணைக்கப்பட்ட குளியலறை களைக் கொண்ட பணக்காரர்கள் இருந்தனர். பாகிஸ்தானில் கண்டுபிடிக்கப்பட்ட மிகவும் பழங்கால நகரங்களான மொகஞ்சதாரோ மற்றும் ஹரப்பாவில், ஆச்சரியமான, கிட்டத்தட்ட நம்பமுடியாத விஷயங்கள் இருந்தன. அந்த நகரங்கள் ஏழாயிரம் ஆண்டுகள் பழைமை வாய்ந்தவை. சில இயற்கை பேரழிவுகள் அல்லது மனிதனால் ஏற்படுத்தப்பட்ட பேரழிவுகள், அந்த அழகான நகரங்களை, ஒருமுறை மட்டுமல்ல, ஆனால் ஏழு முறை அழிக்கப்பட்டன. ஏனெனில் ஏழு முறை அந்த நகரங்கள் மீண்டும் மீண்டும் கட்டப்பட்டன. மக்கள் அதை நூற்றாண்டுகாலம் தோண்டிக் கொண்டே இருந்தனர். எந்த விதமான பேரழிவு ஏற்பட்டது என்று அவர்களால் நம்ப முடியவில்லை. நகரின் ஒரு அடுக்கு சேற்றினால் மூடப்பட்டு இருந்தது, அதன் பின்னர் அடுத்த அடுக்கும் கூட மீண்டும் சேற்றில் மூடப்பட்டு இருந்தது.

முதலில் அவர்கள் தோண்டிய போது, முதல் அடுக்கு, மேல்பரப்பில் உள்ள அடுக்குதான் நகரமாக இருந்தது என்று நினைத்தனர். ஆனால் சிலர் அதற்கு உள்ளே என்ன உள்ளது என்று பார்ப்பதற்காக கொஞ்சம் ஆழமாகத் தோண்டினார்கள். சில அடிகள் கொண்ட மண் அடுக்குகளைத் தோண்டிய பின்னர், அங்கே வேறு ஒரு நகரம் இருப்பதைக் கண்டு அவர்கள் ஆச்சரியப்பட்டனர். அதன் பின்னர் அவர்கள் மீண்டும் மீண்டும் தோண்டிப்பார்த்து, இறுதியில் அவர்கள் ஏழு நகங்களின் அடுக்குகள் ஒன்றன் மேல் ஒன்றாக இருப்பதைக் கண்டனர். அந்த நகரங்களின் தெருக்கள் சான் பிரான்சிஸ்கோ அல்லது நியூயார்க் நகரங்களில் உள்ள தெருக்களைப் போன்று மிகவும் அகலமாக இருந்தன. அந்த தெருக்களைப் போன்று மிகவும் அகலமாக இருந்தன. அந்த தெருக்களில் மிகப்பெரிய வாகனங்கள் செல்ல வேண்டியது இருந்ததால் தான் அந்த தெருக்கள் அவ்வளவு அகலமானதாக கட்டப்பட்டிருக்க வேண்டும்.

நான் இந்த நகரங்களை நினைவு படுத்தினேன், ஏனெனில் இரண்டு நகரங்களிலும், உள்ள வீடுகளில் படுக்கை அறையோடு இணைத்து குளியலறைகள் கட்டப்பட்டு இருந்தன, இப்போது நாம் வைத்திருப்பது போன்ற நீச்சல் குளங்களையும் வைத்திருந் தனர். அவர்கள், ஒவ்வொரு வீட்டிற்கும், குளிர்ந்த நீரும், சுடு நீரும் செல்கின்ற ஒரு வித்தியாசமான அமைப்பு முறையில் கட்டி இருந்தனர். இது மிகவும் ஆச்சரியப்படக்கூடியது! மேலை நாட்டில் இப்போது உள்ள நாகரிகத்தின் அதே உயரத்தை அவர்கள் அப்போதே அடைந்திருந்தார்கள் போன்று தெரிகிறது ஏனெனில் இந்த இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் அமெரிக்க உச்ச நீதிமன்றம், ஒரு மனிதன் தனது சொந்த வீட்டில் படுக்கை அறையோடு இணைந்த ஒரு குளியலறை கட்டுவதற்கு மறுப்பு தெரிவித்துள்ளது.

எதிர்காலம், இன்னமும் வித்தியாசமாக இருக்கப் போகிறது ஏனெனில் கட்டட வடிவமைப்பாளர்கள் புதிது புதிதாக சிந்திக்கின்றனர். ஒரு வித்தியாசமான விஷயத்தை சிந்திக்கின்ற எனது நண்பர் ஒருவரிடமிருந்து எனக்கு அனுப்பப்பட்ட சில வடிவமைப்புகளை நான் பார்த்தேன். அவை உண்மையில் கட்டப்பட்டால் உலகம் முழுவதும் ஒவ்வொரு மதமும் அதற்கு எதிராக நீதிமன்றத்தில் போராடும். அந்த யோசனை என்ன வென்றால் படுக்கை அறையோடு இணைந்த குளியலறையாக இல்லாமல், ஆனால் குளியலறைக்குள் படுக்கை அறையை வடிவமைப்பதாகும். அவர்கள் அந்த அளவுக்கு அழகான வடிவமைப்பை செய்திருந்ததால், குளியலறை என்பது அந்த இடத்தை விட்டு வெளியே இருப்பது போல தெரிவதில்லை; அந்த குளியலறை அந்த படுக்கை அறையின் அழகை மேலும் அதிகமாக அழகுப்படுத்தியது.

ஆனால், இந்த வடிவமைப்பை ஒவ்வொரு மதமும் நிச்சயமாக எதிர்க்கப் போகிறது. அது அவர்கள் அதிக தூரம் செல்வதாகும். எப்படியோ, படுக்கையறையோடு, குளிய லறையை இணைப்பதற்கு நாம் ஏற்றுக் கொண்டு விட்டோம். இப்போது இந்த பைத்தியக்கார கட்டட வடிவமைப்பாளர்கள் மீண்டும் ஒரு யோசனையைக் கொண்டு வர முயற்சிக்கின்றனர். அந்த யோசனையும் கூட நிறைவேறப் போகிறது என்று நான்

நினைக்கிறேன். அந்த அறைக்கு அவர்களின் வடிவமைப்புகள் மிகவும் உன்னதமாக உள்ளன. இணைக்கப் பட்ட ஒரு குளியலறை ஏன் அமைக்க வேண்டும்? அந்த குளியலறையை மிகவும் அழகாக அமைத்து விட்டால் அதன் பின்னர் நீங்கள் உங்களது படுக்கை அறையை அதோடு இணைத்துக் கொள்ளலாம். உண்மையில் இரண்டுமே ஒரே இடத்தில் இருக்கலாம். அவற்றுக்கு இடையே எந்த விதமான தடுப்பு சுவரும் தேவை இல்லை. அது உங்களுடைய படுக்கை அறை, அது உங்களது குளியலறை தான். அவை அழகாகவும், சுத்தமாகவும் இருக்கும்படி அமைத்துக் கொள்ள முடியும் போது வேறு எந்த கேள்வியும் எழாது.

ஆனால் புத்தர் காலத்தில் அது பிரச்சினையாக இருந்தது. மிகச் சில பணக்கார குடும்பங்கள் குளியலறையை வைத் திருந்தன, ஆனால் பிரச்சினை அதை விட பெரியதாக இருந்தது ஏனெனில் புத்த துறவிகளால் ஆற்றில் குளிக்க முடியாது. அவர்களிடம் போதிய ஆடைகள் இருக்காது. அவர்களிடம் உள்ளாடைகளும் கூட கிடையாது. அவர்களிடம் மூன்று துண்டு துணிகள் மட்டுமே இருக்கும். ஒரு துண்டு துணியை இடுப்பிற்கு கீழே கட்டிக் கொள்வார்கள். அடுத்ததை உடலைச் சுற்றி போர்த்திக் கொள்வார்கள். அவை வெறுமனே துணியில் துண்டாக வெட்டப் பட்ட ஆடைகள்.

அவற்றை தைக்க் வேண்டியதில்லை. ஏனெனில் அது ஒரு ஆடம்பரமாகிவிடும். அவர்கள் வெறுமனே தையலற்ற வெற்று துணிகளை பயன்படுத்தினர். ஒன்றை இடுப்பில் சுற்றிக் கொண்டு, அடுத்ததை மார்பில் சுற்றிக் கொள்ள வேண்டியதுதான். அது அவர்களுக்கு கடினமாக இருந்தது. ஒன்று அவர்கள் நிர்வாணமாக குளிக்க வேண்டும்; கௌதமபுத்தர் அதை அனுமதிக்கவில்லை, அல்லது அவர்கள் ஆற்றினுள் தங்களது துணிகளோடு இறங்கி குளிக்க வேண்டும் அப்போது அவர்களது ஆடைகள் ஈரமாகிவிடும்.

எனவே கௌதமபுத்தர் ஏன் இப்படிப்பட்ட அற்பமான விஷயங்கள் பற்றி பேசுகிறார் என்பதற்காக ஒட்டு மொத்த சூழ்நிலையையும் நீங்கள் பார்க்க வேண்டும். சொந்தமான

குளியலறை வைத்துள்ள மக்கள், துறவிகளை அதில் குளிப்பதற்கு அனுமதிப்பதன் மூலம் அவர்கள் ஊக்கம் பெறும் வகையில் அவர்கள் எல்லையற்ற ஆசீர்வாதங்களைப் பெறுவார்கள் என்று கூறுகிறார். இதில் எந்த ஒரு உருவகமும் இல்லை. இந்த சூத்திரம் என்ன கூறுகிறதோ அதே தான் அதற்கு அர்த்தமும் ஆகிறது.

எனவே சீடருக்கு கீழ்க்கண்டவாறு கேட்பதற்கு முழு உரிமை உள்ளது: 'இது தகுதியை பெறுவதற்கான ஒரு வெளிப்புற பயிற்சி என்பது போன்று தோன்றலாம், ஏனெனில் நீங்கள் அவரது குளியலறையை பயன்படுத்துவதற்கு அனுமதிக்கின்ற அந்த மனிதர் அந்த தகுதியை அடைகிறார். அவர் எதையும் செய்யவில்லை. ஆனால் வெறுமனே உங்களை அவரது குளியலறையை பயன்படுத்த அனுமதி மட்டுமே கொடுக்கிறார்'' என்று இவர்கள் கேட்கின்றனர்.

அதற்கு போதிதருமர் 'இப்படிப்பட்ட வெளிப்புற பயிற்சி களால் எந்த தகுதியையும் பெறுவதற்கு எதுவும் இல்லை. பெறவேண்டிய அவசியமும் இல்லை. அதற்கான சாத்தியங்களும் கூட கிடையாது. மனதைக் கவனிப்பது மட்டுமே தகுதி பெறுகின்ற விஷயமாக இருக்க முடியும்'' என்று கூறுகிறார்.

அவர் வெறுமனே, இது மக்களுக்கு ஒரு ஊக்கம் அளிப்பதற்காக மட்டுமே சொல்லப்பட்டது. மற்றபடி அவர்கள் மற்றவர்களை ஏன் அனுமதிக்க வேண்டும்? என்று கூறியிருக்க வேண்டும். உண்மையில் தனது குளியலறையை வேறு யாரும் பயன்படுத்துவதை ஒருவரும் விரும்ப மாட்டார்கள். அதிலும் குறிப்பாக அந்நியர்களை அனுமதிக்க விரும்ப மாட்டார்கள். இது ஒரு பொது இடம் அல்ல. ஒவ்வொருவரும் தனது குளியலறை தனக்குரியதாக இருக்க வேண்டும் என்று தான் விரும்புவார்கள். பணக்காரர்கள் இந்த கருத்தை விரும்பமாட்டார்கள் ஏனெனில் அந்நியத் துறவிகள், அழுக்கான ஆடைகளோடும், கால்களில் செருப்பு அணியாமால் அசிங்கமான அழுக்கடைந்த கால் களுடனும், வெயிலின் வியர்வையுடன், மணல் சாலைகளின் தூசியை கால்களில் சேர்த்துக் கொண்டு தங்களது குளியலறைக் குள் நுழைவதற்கு விருப்பப்படமாட்டார்கள். ,பணக்காரர்கள் இதை விரும்பமாட்டார்கள்.

அந்தக் காலத்தில் இருந்த பணக்காரர்களைப் பற்றி உங்களுக்கு எதுவும் தெரியாது. அவர்கள் தங்களது குளியல் தொட்டிகளில் சாதாரண தண்ணீர் வைத்திருப்பதில்லை ஆனால் அதில் ரோஜா நீரை வைத்திருப்பார்கள். இது விநோதமான ஒரு கதை. ஒரு பகுதியினர் உணவிற்காக இறந்து கொண்டு இருக்கிறார்கள். ஆனால் அடுத்த பகுதியினர், அதே மனித இனத்தை சார்ந்தவர்கள் இப்படிப்பட்ட செலவு மிகுந்த குளியல் குளிக்கிறார்கள். ஒரு தடவை குளிப்பதற்கு ஆயிரக் கணக்கான ரோஜா மலர்கள் பயன்படுத்த வேண்டும். இத்தகைய மக்கள் நாடோடிகள், துறவிகள், பிச்சைக்காரர்கள் ஆகியோரை விரும்ப மாட்டார்கள். இவர்கள் அனைவரும் அவர்களது கண்களுக்கு பிச்சைக்காரர்களாகத் தெரிவார்கள். மறு உலகில் அவர்கள் ஆசீர்வாதங்களைப் பெறுவார்கள் என்பது போன்ற ஊக்கமளிக்கின்ற கருத்துகள் இல்லை என்றால் அவர்கள் துறவிகளை அனுமதிக்க மாட்டார்கள். எனவே புத்தர் இப்போது வியாபார நோக்கில் பேசுகிறார். அவர் செய்த்து சரியானது தான்.

ஆனால் போதி தருமரிடம் உள்ள பிரச்சினை என்ன வென்றால் விஷயங்கள் எப்படி உள்ளனவோ அப்படியே அவரால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. இங்கு துறவிகள் குளிப்பது என்பது தெளிவாகத் தெரிகின்ற எதையும் நீர் கொண்டு கழுவுதல் என்பதைக் குறிக்காது என்று போதிதருமர் கூறுகிறார்.

தெளிவாகத் தெரிகின்ற எதையும் நீங்கள் எப்படி கழுவுவீர்கள்? ஒரு பொருளை தொட்டு உணரவும் முடியவில்லை. தெளிவாகவும் பார்க்கவும் முடியவில்லை. தெளிவாக தெரிகின்றவை மட்டுமே கழுவப்படவேண்டும். உங்களது உடலை மட்டுமே தண்ணீரால் சுத்தம் செய்ய முடியும் ஆனால் உங்களது ஆன்மாவை சுத்தம் செய்யமுடியாது. உங்களது ஆடைகள் சுத்தம் செய்யப்படலாம் ஆனால் உங்களது உயிரை சுத்தம் செய்ய முடியாது. ஆனால் அதற்கு நீங்கள் அழுக்கடைந்த ஆடைகளை உடுத்த வேண்டும், மற்றும் நீங்கள் அழுக்கடைந்த உடலோடு இருக்க வேண்டும் என்று அர்த்தமல்ல.

புத்தர், அவருடன் சமகாலத்தில் வாழ்ந்த மகாவீரரோடு ஒப்பிடும் போது மிகவும் கலை உணர்வு மிக்கவர், எனவே

மகாவீரரை விடவும் அவர் அதிக அழகுடன் இருந்தார். மகாவீரர் ஒரு பலம் வாய்ந்த ஆளுமைப்பண்புடன் இருந்தார். ஆனால் அழகுடன் இல்லை. மகாவீரர் ஒரு மல்யுத்த வீரரின் ஆளுமைப் பண்புடன் இருந்தார். ஆனால் ஒரு தாமரை மலரின் தனித் தன்மையுடன் இல்லை.

கௌதம புத்தர் ஒரு தாமரை மலரோடு ஒன்று போல் ஆகிவிட்டது ஏதோ எதிர்பாராமல் நடந்தது அல்ல. தாமரை மலரானது மிகவும் மென்மையும், மிகவும் அழகையும் கொண்டிருப்பதால், இந்த பூமியில் வேறு எந்த மலரும் அதன் அருகில் வரமுடியாது. அவர் தனது துறவிகள் புலன் உணர்வுடன், கலை உணர்வுடன், சுத்தமாக இருக்க வேண்டும் என விரும்பினார். எனவே நீங்கள் இந்த ஏழைத் துறவிகளுக்கு உணவு, குளிக்கும் வசதி, மருந்துகள் மற்றும் ஆடைகள் ஆகியவற்றிற்கு உதவினால் நீங்கள் மறு உலகில் அதிக தகுதியைப் பெறுவீர்கள் என்று கூறுவது மட்டுமே இயற்கையான ஒரு வழியாக இருந்தது. இது வெறுமனே ஒரு மனித குலத்திற்கு பயன்தருகின்ற ஒரு காரியமாகும்.

*பிரபு அவர்கள் இந்த குளியலறை சூத்திரத்தை போதித்த போது, அவர் தனது சீடர்கள் நீர் கொண்டு கழுவுவதன் தர்மத்தை நினைவில் கொள்ள வேண்டும் என்று விரும்பினார். ஆகவே தனது உண்மையான அர்த்தத்தை தெரிவிப்பதற்கு, ஒவ்வொருவர் மீதான அக்கறையை அவர் பயன்படுத்தினார். குளியலறை என்பது இந்த உடல்.*

இப்போது இது முட்டாள்தனம். அவரே கூட ஆரம்ப சூத்திரங்களில் புத்தர்கள் ஒருபோதும் முட்டாள்தனமானவற்றை போதிக்க மாட்டார்கள் என்று கூறினார். ஆரம்ப சூத்திரங்களில் மிகவும் அபரிமிதமான தெளிவுடன் கூறிய எல்லா விஷயங்களிலும் கிட்டத்தட்ட இப்போது முரண்பட்டுக் கொண்டு இருக்கிறார். ஆனால் இப்போது அவரே கூட சிக்கலில் மாட்டிக் கொண்டார்.

*குளியலறை என்பது உடல். நீங்கள் ஞானம் என்னும் நெருப்பை எரித்து, நன்னெறி என்னும் சுத்தமான தண்ணீரை வெது வெதுப்பாக சூடாக்கி அதன் பின்னர் உங்களுக்குள் உள்ள உண்மையான புத்த இயல்பை குளிப்பாட்டுங்கள்.*

இந்த குளியலறை சூத்திரம் தவிர வேறு எதையும் புத்தர் பேசவில்லையா? அவர் புத்த இயல்பு சூத்திரம் பற்றி பேசி இருக்க வேண்டும். போதிதருமரை விடவும் புத்தர் புத்திசாலித்தனம் குறைந்தவர் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? அவர் என்ன சொல்ல விரும்புகிறாரோ அதை அப்படியே மிகச் சரியாக சொல்வதற்கு புத்தருக்கு தெரியாது என்று நினைக்கிறீர்களா? அதைக் கூறுவதில் எந்த கஷ்டமும் கிடையாது. ஒரு போதிதருமர் அதைக் கூறும் போது, ஒரு புத்தரால் ஏன் அதைக் கூற முடியாது?

*இந்த ஏழு பயிற்சிகளையும் தூக்கிவிடுவதன் மூலம் நீங்கள் உங்களது புண்ணியத்தை கூடுதலாக சேர்க்கிறீர்கள் அந்த காலத்தில் இருந்த துறவிகள் கண்டு உணர்தல் உள்ளவர்களாக இருந்தனர்.*

இது உண்மை எனில், கௌதம புத்தர் காலத்து துறவிகள் மிகவும் கண்டுணரக் கூடியவர்கள் என்றால், அதன் பின்னர் நிச்சயமாக இந்த சூத்திரமானது குளியலறை சூத்திரம் என்று அழைக்கப்பட வேண்டிய அவசியமே இருந்திருக்காது. இது புத்த இயல்பு சூத்திரம் என்று அழைக்கப்பட்டிருக்க வேண்டும் அல்லது வேறு ஏதாவது அழகான வார்த்தையில் அழைக்கப்பட்டு இருக்க வேண்டும். அதில் ஏன் குளியலறையை கொண்டு வருகிறீர்கள்? புத்தரின் சீடர்கள் மிகவும் கண்டுணரக் கூடியவர்கள் என்றால் குறைவான கண்டுணர்தல் உள்ள மக்களுக்கு போதிதருமர் அதை தெளிவாக்க வேண்டும் அல்லவா? அவர் இப்படிப்பட்ட விநோதமான உருவகங்களை பயன்படுத்துவது விநோதமாக இருக்கிறது. போதிதருமர் ஒட்டு மொத்த விஷயத்தையும் மேலே கொண்டு வருகிறார்.

*அவர்கள் புத்தரின் அர்த்தத்தை புரிந்து கொண்டார்கள்.*

அவர்கள் புத்தரின் அர்த்தத்தை புரிந்து கொண்டார்கள் என்றால், அதன் பின்னர் அந்த அர்த்தத்தை அவர் ஏன் குளியலறை சூத்திரங்களுக்கு பின்னால் மறைத்து வைத்தார்?

*அவர்கள் புத்தரின் போதனைகளைப் பின்பற்றினார்கள். தங்களது ஒழுக்கத்தை குறைகள் அற்றதாக ஆக்கினார்கள். புத்த நிலையின் கனிகளைச் சுவைத்தார்கள்.*

புத்தரின் இந்த சீடர்களுக்கும் கூட புத்தநிலையை அனுபவித்திருந்தார்கள் என்றால், இப்படி உருவகங்களில் பேச வேண்டிய அவசியம் என்ன? புத்தர் நேரடியாகவே பேசி இருப்பார். உருவகங்கள் குழந்தைகளுக்குத்தான் தேவைப்படும். ஆகவே அவர் என்று கூறுகிறாரோ அது சரியானது தான். ஆனால் அது அவருக்கு எதிராக போகிறது, ஆதரவானதாக இல்லை.

*ஆனால் இந்தக் கால மக்கள் இந்த விஷயங்களின் ஆழத்தை கண்டு கொள்ள மாட்டார்கள்.*

ஆனால் இந்த குளியலறை சூத்திரங்கள் போதிதருமரின் காலத்திற்காக எழுதப்படவில்லை. இந்த குளியலறை சூத்திரங்கள் புத்தரால் பேசப்பட்டு ஆயிரத்து நூறு ஆண்டுகளுக்கு பின்னரே போதிதருமர் வந்தார். எனவே போதிதருமர் காலத்து மக்களுக்காக புத்தர் பேசினார் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? இது நீங்கள் புரிந்து கொள்ள வேண்டிய ஒன்றாகும். ஏனெனில் இது தொடர்ந்து திரும்பத் திரும்ப சொல்லப்படுகிற ஒரு விஷயமாக உள்ளது. அதாவது இன்றைய மக்களை விடவும், பழைய காலத்து மக்கள் மிகவும் கண்டுணரக் கூடியவர்களாகவும், அதிக புலன் உணர்வு உள்ளவர்களாகவும், அதிக புத்திசாலிகளாக இருந்தனர். இன்றும் கூட அப்படி கூறப்படுகிறது.

பாபிலோனில் ஒரு செங்கல் தோண்டி எடுக்கப்பட்டது. அந்த செங்கல்லின் மீது 'பழைய காலத்து மக்கள் புத்தி காலிகளாக இருந்தனர்'' என்று பதிக்கப்பட்டு உள்ளது. அந்தச் செங்கல் ஆறாயிரம் ஆண்டு பழைமையானது. கௌதம புத்தரும், மகா வீரரும், பழைய காலத்து மக்கள். அதிக புத்திசாலிகள் என்று அநேக தடவை திரும்பத் திரும்ப கூறுகிறார்கள். ஆனால் அந்த பழைய காலங்கள் எப்போது இருந்தன என்பது எனக்கு தெரியாது.

இந்துக்களின் வேதங்கள் இந்த உலகிலேயே மிகவும் பழைமையான புனித நூல்களாக கருதப்படுகின்றன. இந்த நகரத்தில் இருந்த லோகமான்ய பாலகங்காதர திலகர் என்பவர். அதை நிரூபித்து இருக்கிறார். அந்த ஆதாரங்கள் கிட்டத்தட்ட அரை நூற்றாண்டாக யாராலும் மறுக்கப்பட வில்லை. நான்கு வேதங்களில் முதன்மையான வேதமாகிய ரிக் வேதம்

தொண்ணூறு ஆயிரம் வருடங்கள் பழமையானது. ஆனால் இந்த ரிக் வேதத்திலும் கூட பழைய காலத்தில் மக்கள் மிகவும் கண்டு உணர்பவர்களாகவும், மிகவும் புத்திசாலிகளாகவும் இருந்தனர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த பழைய காலங்கள் என்பது எப்போது என்று எனக்கு தெரியாது. இது வேறுமனே இன்றைய காலத்தில் உள்ள மக்களை கண்டனம் செய்வதற்காகவே இப்படி கூறப்படுகிறது. இந்த கருத்தானது இடைவிடாமல் பயன்படுத்தப் பட்டு வருகிறது.

மனிதனின் தன்னுணர்வானது பரிணாம வளர்ச்சி அடைந்து கொண்டு வருகிறதா அல்லது இல்லையா? இப்படிப்பட்ட மக்களின் கூற்றுப்படி மனிதனின் தன்னுணர்வானது கீழ் நோக்கி போய்க் கொண்டு இருப்பது போல் தெரிகிறது. மேல் நோக்கி செல்லவில்லை. உண்மை என்னவென்றால் நீங்கள் வரவாற்றில் பின்னோக்கி சென்றால், எவ்வளவு தூரம் ஆதி காலத்திற்குள் செல்கிறீர்களோ அவ்வளவு ஆதிகால வழக்கங்களை நீங்கள் காண்பீர்கள். மனித மாமிசம் சாப்பிடுவது வழக்கத்தில் இருந்தது. அதில் மீதியுள்ள ஒரு சிலர் ஆப்பிரிக்காவின் அடர்ந்த காடுகளில் இன்னமும் இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் தான் மிகவும் பழமை வாய்ந்த மக்கள்.

பழைமை வாய்ந்த மக்களை நீங்கள் காண வேண்டும் எனில் நீங்கள் ஆப்பிரிக்கா செல்லுங்கள். ஆனால் மிகவும் கவனமுடன் இருங்கள்! இது நான் கேள்விப்பட்டது. மனித மாமிசம் சாப்பிடுகிறவர்களை மாற்றுவதற்காக முதல் முதலாக கிறித்துவ மதச் சபை அமைப்புகள் சென்ற போது அவைகள் அவர்களிடம், கடவுள் உங்களை எல்லாம் நேசிக்கின்றார். இயேசு உங்களை ரட்சிக்க வருவார் என்று கூறினார்கள். அவர்களை இந்த பிரசங்கத்தை மிகவும் சந்தோஷத்துடன் கேட்டனர். அவர்கள் அந்த பிரசங்கம் செய்த மனிதரை தங்களது தோள்களில் தூக்கிக் கொண்டு சென்றனர். இதை அவர் மிகப்பெரிய வரவேற்பு என்று நினைத்துக் கொண்டார். ஆனால் அவர்கள் இவரை ஒரு கொதிக்கும் பானைக்குள் போட்ட போது அவர், 'நீங்கள் என்ன செய்கிறீர்கள்?'' என்று கேட்டார். அதற்கு அவர்கள், 'இன்னும் சில நிமிடங்களில் உங்களுக்கு தெரியும்'' என்றார்கள்.

தண்ணீர் மிகவும் சூடாக ஆரம்பித்த போது, அந்த குண்டான மத சேவகர் அந்த பெரிய பானையில் தனது தலையை வெளியே காட்டிக் கொண்டு அந்த மக்களை எப்படியாவது தூண்டுவதற்கு முயற்சி செய்தார். 'உங்களுக்கு கிறிஸ்துவ மதத்தின் சுவையைக் கொடுப்பதற்காக நான் இங்கு வந்திருக்கிறேன் ஆனால் நீங்களோ என்னைக் கொன்று கொண்டு இருக்கிறீர்களே,'' என்று அவர் கூறினார்.

உடனே அவர்கள், 'கவலைப்படாதீர்கள், உங்களை சூப் வைத்து குடித்த பிறகு, கிறிஸ்தவத்தின் முதல் ருசியை நாங்கள் பெறுவோம். அதனால் தான் நாங்கள் உங்களை கொதிக்க வைத்துக் கொண்டு இருக்கிறோம் கிறிஸ்தவத்தின் ருசியை பெறுவதற்காகத்தான் இப்படி செய்து கொண்டிருக்கிறோம்'' என்று கூறினார்கள்.

கிறிஸ்தவத்தை அமைப்பதற்கு வேறு வழி இல்லை என்று நான் நினைக்கிறேன்! இவர்கள் தான் ஆதி கால மக்கள் இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் இவர்கள் மூன்றாயிரம் பேர் இருந்தார்கள், ஆனால் அவர்களின் பகுதிக்குள் கடந்து செல்பவர்கள் யாரையும் பார்ப்பது மிகவும் அபூர்வமாகிவிட்டது. அவர்கள் சுற்றும் முற்றும் பார்த்தார்கள். ஆனால் யாரும் அவர்களிடம் நெருங்கி போவது கிடையாது. அதன் பின்னர் இறுதியாக அவர்கள் தங்களது சொந்த மக்களையே சாப்பிட வேண்டியதாயிற்று. இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் அவர்கள் மூன்றாயிரம் பேர் இருந்தார். இப்போது முன்னூறு பேர் மட்டும் இருக்கின்றனர். அவர்கள் தங்களது மக்களில் இரண்டாயிரத்து எழுநூறு பேரைக் கொன்று தின்று விட்டனர். ஒவ்வொரு நாளும் உணவு தேவை. யாராவது வெளியில் இருந்து வந்தால், நல்லது. நீங்கள் எப்போதாவது சீன உணவுவிடுதிகளுக்கு போவது போல, அவர்களும் சில சீனர்கள், சில ஜப்பானியர்கள், சில ஜெர்மானியர், சில இந்தியர் என்று வெறுமனே கொஞ்சம் ருசித்து சாப்பிட்டு இருப்பார்கள். எப்போதாவது ஒரு முறை அவர்களுக்கும் ஒரு மாறுபட்ட சுவை என விரும்பினர்கள்.

ஆனால் அது மிகவும் கடினம் ஏனெனில் மக்கள் அநேக மைல்கள் தள்ளி வசித்தார்கள். அந்தப் பகுதி ஆபத்தானது என்று

ஒவ்வொருவருக்கும் தெரியும், அங்கு செல்கின்ற மக்கள் ஒரு போதும் திரும்பி வருவதில்லை. அங்கு யார் போனாலும், போனவர் போனவர்தான், உங்களை அவர்கள் பிடித்து விட்டால், முடிந்து போய்விடும், விரைவில் நீங்கள் சமைக்கப்பட்டு விடுவீர்கள். திராட்சை மற்றும் வாசனைப் பொருள்களை உங்களுக்கு திணித்து சமைத்து விடுவார்கள், நீங்கள் அதை ரசிக்கலாம்! நீங்கள் அதை ரசிக்க மாட்டீர்கள் என்று நான் சொல்லவில்லை, நீங்கள் அதை ரசிக்கலாம் என்று தான் கூறுகிறேன். இந்த முழு விஷயமும் அப்படிப் பட்டதொடு வீரதீரச் செயலாக இருக்கும்.

எனவே நீங்கள் இப்படி வரலாற்றில் பின்னோக்கி சென்றால், மேலும் மேலும் புத்தி இல்லாதவர்களையும், மனவளர்ச்சி குன்றியவர்களையும், மேலும் மேலும் காட்டுமிராண்டித் தனமான மக்களையும் மட்டுமே பார்க்க முடியும். ஆரம்பத்தில் மக்கள் அனைவரும் மாபெரும் மேதைகளாக இருந்தனர் ஆனால் இப்போது ஒவ்வொருவரும் கீழே இறங்கி வந்து விட்டனர் என்று எல்லா மதங்களிலும் பயன்படுத்தப்படுகின்ற இந்த கருத்தானது உண்மையானது அல்ல. இது முற்றிலும் தவறானது. இதற்கு வரலாற்று அடிப்படை கிடையாது. தர்க்க அறிவுப்படியான ஆதரவும் கிடையாது. ஆனால் இதுவரை உள்ள பரிணாம வளர்ச்சியில் நீங்கள் தான் உயர்ந்த சிகரம் என்று நான் உங்களுக்கு கூற விரும்புகிறேன். உயர்ந்த சிகரம் போன்றவர்கள் உங்களில் அதிகம் இல்லை என்றாலும் கூட நீங்கள் தான் உயர்ந்தவர்கள்.

அபிவிருத்தி செய்யப்படாத அளவுகடந்த சக்தியை நீங்கள் வைத்திருக்கிறீர்கள். ஆனால் அந்த ஆதிகால மனிதர்கள் உங்களை விடவும் அதிக அபிவிருத்தி அடையாதவர்கள். உங்களுக்கு குறைந்த பட்சமாவது கொஞ்சம் தன்னுணர்வு உள்ளது. அவர்களுக்கு தன்னுணர்வே கிடையாது. அவர்கள் விலங்குகளின் நிலைக்கு அருகில் உள்ளனர்.

*நமது உண்மையான புத்த இயல்பிற்கு எச்த வடிவமும் கிடையாது. மனவேதனை என்னும் தூசிக்கும் எந்த உருவமும் கிடையாது. தொட்டு உணர முடியாத உடம்பை மக்கள் எப்படி சாதாரண தண்ணீரைக் கொண்டு கழுவ முடியும்?*

அவர் அதே முட்டாள்தனமான விஷயங்களைத் திரும்பத் திரும்ப கூறிக்கொண்டே போகிறார். நேற்று புத்தர் எப்படி சாதாரண பாலைக் குடிக்க முடியும் என்று கூறினார். இப்போது மக்கள் எப்படி சாதாரண தண்ணீரை பயன்படுத்த முடியுமா? என்று கூறுகிறார். வேறு எங்கோ கொஞ்சம் அசாதாரணமான தண்ணீர் கிடைப்பது போல பேசுகிறார்!

*தொட்டு உணரமுடியாத உடலை கழுவுவதற்கு...* தொட்டு உணர முடியாததை கழுவ வேண்டிய அவசியம் கிடையாது. தொட்டு உணரக்கூடியது தான் அழுக்கடைகிறது. காணமுடியாத பரந்த வெளியானது, ஒருபோதும் அழுக்கடைவதில்லை; வானம் ஒருபோதும் அழுக்கடைவதில்லை. மனதிற்கு அப்பால் உள்ள அமைதி ஒருபோதும் அழுக்காவது கிடையாது. அது சாத்தியமில்லாதது என்றாலும் கூட அதன் பின்னர் நாம் அதற்கு கண்களுக்கு தெரியாத சோப்பு மற்றும் கண்களுக்கு தெரியாத ஷாம்பு ஆகியவற்றை கண்டு பிடித்து விடுவோம். நீங்கள் வெறும் காலியான பாட்டிலைத்தான் காண்பீர்கள். ஆனால் உள்ளே கண்களுக்கு தெரியாத ஷாம்பூ இருக்கும்.

நியூயார்க்கில் உள்ள ஒரு கடையில் ஒரு குறிப்பிட்ட பொருளை அவர்கள் விற்பதாக நான் கேள்விப்பட்டு இருக்கிறேன். அதனால் நியூயார்க்கில் உள்ள எல்லா பெண்களும் பரபரப்பாகி அதை வாங்குவதற்கு விரும்பினார்கள். அது கண்களுக்குத் தெரியாத கொண்டை ஊசிகள். கண்களுக்கு தெரியாத கொண்டை ஊசிகள் கிடைக்கின்றன என்றால் எந்த ஒரு பெண்ணும் மனம் தூண்டப்படாமல் இருக்க முடியாது என்று நான் நினைக்கிறேன். அந்த கடைக்கு முன்பு நீண்ட வரிசையில் பெண்கள் நின்று பணத்தை கொடுத்து சிறிய பெட்டிகளை வாங்கி சென்றனர். ஒரு பெண்மணி அந்த பெட்டியை திறந்து பார்த்தாள். ஆனால் அவளால் அதற்குள் எதையும் பார்க்கமுடியவில்லை. கண்களுக்கு தெரியாத கொண்டை ஊசியை உங்களால் எப்படி பார்க்கமுடியும்? எனவே அவள் கடைக்காரரிடம் சென்று, 'எனக்கு இதனுள் எதுவும் தெரியவில்லையே'' என்றாள். உடனே கடைக்காரர்; 'கண்களுக்கு தெரியாத கொண்டை ஊசியை உங்களால் எப்படி பார்க்கமுடியும்'' என்றார்.

அதற்கு அவள் கடைக்காரரிடம் 'அதுவும் சரிதான். இது புதுமையானதாக இருப்பதால் எனது மகள்களுக்கும் நண்பர்களுக்கும் அன்பளிப்பாக அனுப்புவதற்கு இன்னும் சில பெட்டிகளை வாங்குவதற்கு மீண்டும் நான் நாளைக்கு வர விரும்புகிறேன். நாளையும் கூட உங்களிடம் போதுமான கையிருப்பு உள்ளது அல்லவா? ஏனெனில் இங்கு அநேக வாடிக்கையாளார்கள் வரிசையில் காத்து நிற்கிறார்கள். நானும் கூட திட்டத்தட்ட ஒரு மணி நேரம் வரிசையில் நின்று தான் இதை வாங்கினேன்'' என்று கூறினாள்.

உடனே கடைக்காரர், ' கவலைப்படாதீர்கள், எங்களிடம் பதினைந்து நாட்கள் வரை கையிருப்பு உள்ளது. ஆனால் அது உங்களது கண்களுக்குத் தெரியாது. அது அங்கு உள்ளதா அல்லது இல்லையா என்பது ஒரு விஷயம் அல்ல. நீங்கள் எப்போது வேண்டுமானாலும் வரலாம். அது எப்போதும் கிடைக்கும்'' என்றார்.

இப்படித்தான் போதி தருமரும் தர்க்க அறிவற்ற, பகுத்தறி வற்ற விஷயங்களைக் கூறிக் கொண்டு இருக்கிறார். இது சாதாரண பொதுப்படையான அறிவாகக் கூட இல்லை.

*அது வேலை செய்யாது. அவர்கள் விழித்தெழுவது எப்போது? இப்படிப்பட்ட ஒரு உடலை தழுவுவதற்கு நீங்கள் அதைக் கவனிக்க வேண்டும். ஆசையில் இருந்து மாசுகளும், இழி செயல்களும் எழும் போது, உங்களை உள்ளேயும் வெளியேயும் மூடி மறைக்கும் வரை அவை பல்கிப் பெருகுகின்றன. ஆனால் உங்களின் இந்த உடலை கழுவுவதற்கு நீங்கள் முயற்சி செய்தால், அதைச் சுத்தம் செய்தவற்கு முன்பு கிட்டத்தட்ட உடலானது காணாமல் போகும் வரை நீங்கள் அதைத் தேய்க்க வேண்டும்.*

உங்களின் கண்களுக்கு தெரிகின்ற இந்த உடலை உங்களால் சுத்தம் செய்ய முடியாது என்று அவர் கூறுகிறார். நீங்கள் அதை சுத்தம் செய்ய விரும்பினால், இந்த ஒட்டு மொத்த உடலும் காணாமல் போகின்ற நிலை வரை அதை நீங்கள் தேய்க்க வேண்டும் என்கிறார். அதன் பின்னர் மட்டுமே நீங்கள் சுத்தமாக இருப்பீர்கள். இதற்கு, நீங்கள் இந்த உடலை சுத்தம் செய்ய

வேண்டிய அவசியம் இல்லை என்று அர்த்தமாகிறது. இது பலனற்றது; இதற்கு தற்கொலை செய்து கொள்ளுதல் என்று அர்த்தமாகும்!

ஆனால் இந்த உடல் மறையும் அளவிற்கு நீங்கள் தேய்க்க வேண்டிய அவசியம் கிடையாது என்பதை நீங்கள் அறிவீர்கள். உங்களது உடலில் துர்நாற்றம் போகும் வரை நீங்கள் உடலைத் தேய்க்க முடியும். உங்களது வியர்வையானது உங்களைச் சுற்றி ஒரு விரும்பத்தகாத வாசனையை உருவாக்காத அளவு நீங்கள் தேய்த்து குளிக்க வேண்டும். உங்களது சுவாசமானது யாரையும் தொந்தரவு செய்யாத அளவுக்கு உங்களது வாயானது சுத்தமாக கழுவப்பட வேண்டும். நீங்கள் சோப் உபயோகிக்கலாம், நீங்கள் ஷாம்பூ உபயோகிக்கலாம், நீங்கள் வாசனை திரவியங்களை பயன்படுத்தலாம். உங்களது உடலானது காணாமல் போகும் வரை நீங்கள் அதைத் தேய்க்க வேண்டிய அவசியம் கிடையாது. அப்படியானால் அதைக் கழுவுவதில் என்ன அர்த்தம் உள்ளது? உடலில் மிச்சம் எதுவுமே இருக்காது.

உங்களது உடலை சுத்தம் செய்கின்ற சாதாரண குளியலை புத்தர் கூறவில்லை, அவர் உங்களது ஆன்மாவை சுத்தம் செய்ய வேண்டும் என்கிற அர்த்தத்தில் கூறுகிறார் என்பதை காட்டுவதற்கு அவர் இந்த வாதத்தை கொடுப்பதாக போதிதருமர் நினைக்கிறார்.

ஆனால் ஆன்மா என்பது எப்போதும் சுத்தமானது என்று அவர் கூறிய தனது சொந்த சூத்திரங்களையே போதிதருமர் முற்றிலும் மறந்து விட்டார். ஆன்மா ஒருபோதும் அசுத்தமாக இருந்ததில்லை. உங்களது புத்த இயல்பு எப்போதும் தூய்மையானது, அது ஒரு போதும் அசுத்தமாக இருந்தது கிடையாது. உங்களால் அவரது சூத்திரங்களாக நினைவுக்கு கொண்டுவர முடிகிறதா? நீங்கள் ஏற்கனவே மெய்ஞ்ஞானம் அடைந்து விட்டீர்கள், வெறுமனே நீங்கள் தூங்கிக் கொண்டு இருக்கிறீர்கள் என்று அவர் கூறுகிறார். இங்கே சுத்தம் செய்தல் அல்லது ஏதாவது வழிபாடு செய்தல், அல்லது எந்த ஒரு சடங்கும் செய்ய வேண்டும் என்கிற கேள்வியே இங்கு கிடையாது. நீங்கள் செய்ய வேண்டியது மனதைக் கவனிப்பது மட்டுமேயாகும். அப்போது, அப்படி நீங்கள் மெதுவாக மெதுவாக மனதைக்

கவனிப்பது உங்களை விழித்து எழச் செய்துவிடும். விழித்தெழுவது தான் மெய்ஞ்ஞானம் அடைவதாகும்.

ஆனால் இப்போது அவர் அந்த சூத்திரங்கள் எல்லாவற்றையும் மறந்து விட்டார். அவர் இப்படிப்பட்ட ஒரு அபரிமிதமான தவறைச் செய்துவிட்டார். அவரிடம் அந்த அறியாமை பற்றிய இறுதியான கேள்வி கேட்கப்பட்ட உடனேயே அவர் நிறுத்தி இருக்க வேண்டும். அவர் நிறுத்தவில்லை. எங்கு நிறுத்த வேண்டும் என்பதை ஒருவர் அறிந்திருக்க வேண்டும். இல்லை எனில் ஒருவர் பொறிக்குள் மாட்டிக் கொள்வார். இப்போது அவர் பேசிக் கொண்டு போய்க் கொண்டே இருக்கிறார். மேலும் எங்கு நிறுத்துவது எப்படி நிறுத்துவது என்பதும் கூட அவருக்கு தெரியவில்லை.

*இதிலிருந்து புத்தர் கூறியதற்கு வெளிப்புறத்தில் ஏதோ ஒன்றை நீரால் கழுவுதல் என்று அர்த்தமல்ல என்பதை நீங்கள் உணர்ந்து கொள்ள வேண்டும்.*

வெளிப்புறத்திற்கு மட்டுமே கழுவுதல் தேவை. உட்புறத்திற்கு கழுவுதல் போல இல்லை. புத்தர் தான் பேசியதற்கு என்ன அர்த்தத்தை கொண்டாரோ, அதன் பின்னர் போதிதருமரும் கூட புத்தரை தான் கூறுகின்ற அதே முட்டாள்தனத்தை நோக்கி ஓட்டிக் கொண்டு இருக்கிறார். வெளியில் உள்ளது மட்டுமே அழுக்கடைகிறது. எனவே அதை கழுவவேண்டியது அவசியம். உள்ளே உள்ளது ஒருபோதும் அழுக்கடைவதில்லை, எனவே அதைக் கழுவ வேண்டிய அவசியம் கிடையாது.

*யார் ஒருவர் புத்தரை முழு இதயத்தோடு ஆவாகனம் செய்கிறாரோ அவர் நிச்சயமாக மேற்கு சொர்க்கத்தில் மறுபிறவி எடுக்கிறார். இந்த வாசலானது புத்த நிலைக்கு வழிநடத்தி செல்வதால், மனதைக் கவனிப்பதன் மூலம் முக்தி நிலையை ஏன் தேடுகிறீர்கள்? என்று சீடர்கள் கேட்கின்றனர்.*

சீடரின் இந்தத் தொடர் வலியுறுத்தல். ஏனெனில், மனதைக் கவனித்தாலே போதும் என்று போதிதருமர் வலியுறுத்தினார். அப்படியானால் அதன் பின்னர் புத்தர் ஏன் அடுத்த விஷயங்கள்

பற்றி பேசுகிறார்? தனது சொந்த குருவிற்கு எதிராக பேசுகின்ற ஸதரியமும் கூட போதிதருமருக்கு இல்லை. அவர் சீடரிடம், 'புத்தர் கூறியவற்றை வகைப்படுத்த வேண்டியது எனது வேலை அல்ல. வெறுமனே மனதைக் கவனித்தல் போதும் என்பது தான் எனது அறிதல் மற்றும் எனது சொந்த புரிதலாகும். ஒருவேளை புத்தர், உள்ஒழுக்கத்தோடு கூட வெளி ஒழுக்கத்தையும் உருவாக்க விரும்பி இருக்கலாம். அது அவரது வேலை, அதைப் பற்றி எனக்கு எந்த அக்கறையும் கிடையாது'' என்று அவர் கூறி இருக்க வேண்டும். இது போன்ற சிறிய எளிமையான பேச்சை போதிதருமர் பேசி இருந்தால், அவர் இருந்துவந்த சூரிய ஒளி மின்னும் சிகரத்தில் இருந்து கீழே விழுந்து இப்படி அவரால் தீர்க்கமுடியாத சிறிய விஷயங்களில் மாட்டிக் கொள்வதில் இருந்து தன்னைக் காப்பாற்றி இருக்கமுடியும்.

அவரது பதில்கள் மீண்டும் மீண்டும் அதே விதமான முட்டாள் தனமானதாக இருக்கிறது. *புத்தர் என்றால் விழிப்புணர்வு என்று அர்த்தம்.* இதை அவர் அநேக தடவைகள் கூறி இருக்கிறார்.

*புத்தர் என்றால் விழிப்புணர்வு என்று அர்த்தம். உடல் மற்றும் மனம் மீதான விழிப்புணர்வு. தீயவை எழுவதில் இருந்தும் கூட தடுக்கிறது. ஆவாகனம் செய்தல் என்பதற்கு மனதிற்கு அழைப்பு விடுதல் என்று அர்த்தம்.*

ஆவாகனம் செய்தல் என்பது மனதிற்கு அழைப்பு விடுதல் என்று அர்த்தமாகிறது. அப்படியானால் 'மனதிற்கு அழைப்பு விடுங்கள்'' என்று புத்தர் ஏன் சொல்லவில்லை?; 'புத்தரை ஆவாகனம் செய்யுங்கள்'' என்று ஏன் கூறுகிறார்? விஷயங்கள் எளிமையானதாக இருக்கும் போது அதை ஏன் தேவை இல்லாமல் சிக்கலானதாக ஆக்குகிறார்கள்? புத்தர் விஷயங்களை சிக்கல் ஆக்குகின்ற ஒரு மனிதர் அல்லர், அவர் ஒரு தத்துவ மேதை அல்ல. அவர் முற்றும் அறிந்த முனிவர். அவர் மக்களின் மனதில் குழப்பத்தை உருவாக்குகின்ற எந்த ஒரு பொருளற்ற பேச்சையும் பயன்படுத்தாமல்,எளிமையான வழியில், தெளிவான வழியில் மட்டுமே அவர் பேசுகிறார். மனதை அமைதிப்படுத்தி அதன் மூலம் அதற்கு அப்பால் மிக சுலபமாக செல்வது தான் அவரது ஒட்டு மொத்த முயற்சியாகும்.

ஆவாகனம் செய்தல் என்பதற்கு மனதிற்கு அழைப்பு விடுதல். ஒழுங்கு நடவடிக்கைகளின் விதிகளுக்கு இடை விடாமல் மனதை அழைத்தல். உங்களது பலம் கொண்ட மட்டும். அவற்றைப் பின்பற்றி நடத்தல் என்று அர்த்தமாகும்.

ஆனால் இதே போதிதருமர் தான் எந்த ஒரு ஒழுங்கு நடவடிக்கையும் உங்களை புத்த நிலைக்கு வழிநடத்தி செல்லாது, எந்த விதிமுறைகளும் தேவை இல்லை. என்று மீண்டும் மீண்டும் கூறி இருக்கிறார். நீங்கள் உங்களது எண்ண ஓட்டத் தினை, உங்களது மனதினை வெறுமனே விழிப்புணர்வுடன் கவனிப்பது மட்டுமே உங்களுக்கு உதவ முடியும் என்று கூறி இருக்கிறார்;.

புத்தரின் பெயரை ஆவாகனம் செய்வதற்கு நீங்கள் ஆவாகனத்தின் தர்மத்தை புரிந்து கொண்டிருக்க வேண்டும். அது உங்களது மனதில் இல்லை என்றால், உங்களது வாயானது வெறும் ஒரு பெயரை மட்டுமே உச்சாடனம் செய்கிறது. மூன்று விஷங்களால் நீங்கள் தொந்தரவு செய்யப்படும் வரை அல்லது உங்களைப் பற்றிய எண்ணங்களோடு நீங்கள் இருக்கும் வரை, உங்களது மயக்கமுள்ள மனமானது, நீங்கள் புத்தரைக் காண்பதில் இருந்து வெளியே வைத்துவிடும். அர்த்தத்தை தேடும்போது நீங்கள் தோற்றங்களைப் பற்றிக் கொண்டால் உங்களால் ஒரு விஷயத்தை கண்டு கொள்ள முடியாது. இதனால் தான் கடந்த கால முனிவர்கள் பேச்சை வளர்க்காமல், தங்களது எண்ணங்களையும் தங்களது உணர்ச்சிகளையும் தாங்களே ஆய்வு செய்வதை பேணி வளர்த்தார்கள்.

இது முற்றிலும் சரி இல்லாதது, ஏனெனில் தாங்களே ஆய்வு செய்தல் என்பது உங்களுக்குள் சிந்திப்பதை தவிர வேறு என்னவாக இருக்க முடியும்? உங்களது அகச்சிந்தனைகளை வெளிப்படுத்துவதைத் தவிர பேச்சு என்பது என்னவாக இருக்க முடியும், அவை வேறுப்பட்டவை அல்ல. ஒன்று உள்ளே இருக்கிறது. முதலில் நீங்கள் ஒரு விஷயத்தை உங்களுக்குள் ஆய்வு செய்கிறீர்கள், நீங்கள் சிந்திக்கிறீர்கள். அதன் பின்னர் அதை நீங்கள் வெளியில் கொண்டு வருகிறீர்கள். ராமா என்னும் வார்த்தையை கூறாமலேயே, நீங்கள் ராமா என்னும் வார்த்தையை

சிந்திக்க முடியும். அதன் பின்னர் நீங்கள் ராமா என்று கூறமுடியும். இதில் என்ன வேறுபாடு உள்ளது? முதலில் அந்த வார்த்தையை உங்களுக்குள்ளே சொல்லிக் கொண்டது மட்டும் தான் வேறுபாடாக உள்ளது. உங்களுக்குள் ஆய்வு செய்தல் என்பது ஒரு மௌனமான உள் உரையாடல். ஒவ்வொருவரும் அதை எல்லா நேரத்திலும் செய்து கொண்டுதான் இருக்கிறோம். அதற்கும் துறவிகளுக்கும் சம்பந்தம் கிடையாது. உங்களுக்குள் பேசிக் கொண்டது ஆய்வு செய்தல். மற்றவர்களிடம் பேசுவதற்கு பேச்சு என்று கூறப்படுகிறது. பாவிகளும் கூட அதைச் செய்யத் தான் வேண்டும்.

உங்களுக்குள் சிந்திக்காமல் எல்லா நேரமும் நீங்கள் என்ன செய்து கொண்டு இருக்கிறீர்கள்? அமர்ந்து கொண்டும்; நடந்து கொண்டும்; நீங்கள் இடைவிடாமல் ஆயிரத்தோரு விஷயங்களை சிந்தித்துக் கொண்டு இருக்கிறீர்கள், ஆனால் ஒரு சில விஷயங்களை மட்டுமே வெளிப்படுத்துவதற்கு கொண்டு வருகிறீர்கள். கடந்த கால முனிவர்கள் சிந்தனையை வளர்த்தார்கள். ஆனால் பேச்சை வளர்க்க வில்லை என்று கூறுவது உண்மை அல்ல ஏனெனில் முனிவர்கள் பேசவில்லை என்றால் அதன்பின்னர் உங்களது புனித நூல்கள் எங்கிருந்து வந்தன, உங்களது வேதங்கள், உங்களது உபநிடதங்கள் ஆகியவை எங்கிருந்து வந்தன? 108 உபநிடதங்கள் உள்ளன. உங்களது புனித குர்ஆன் எங்கிருந்து வந்தது. உங்களது புனித பைபிள் எங்கிருந்து வந்தது? உங்களது புனித தால்மட் எங்கிருந்து வந்தது மேலும் கௌதம புத்தரின் தம்மபதம் எங்கிருந்து வந்தது? இந்த போதி தருமரின் வார்த்தைகளும் கூட எங்கிருந்து வந்தது? அவர் தங்களுள் சிந்தனை செய்த துறவிகளைப் பற்றி மட்டுமே பேசுகிறார், ஆனால் பேச்சை அல்ல.

அப்படியானால் உங்களது புனித நூல்கள் எல்லாம் முனிவர்களால் எழுதப்படாமல், பாவிகளால் தான் எழுதப் பட்டுள்ளன. ஒரு முனிவர் என்பவர், தன்னைத்தான் அறிந்து கொண்டு அவரது அக அனுபவத்தோடு ஒத்திசைந்து போவதை மட்டுமே பேசுகிறார். ஆனால் அதை வெளிப்படுத்துவதற்கு வார்த்தைகளை கண்டு கொள்ள முடியாத போது அவர்

மௌனமாக இருந்து வருகிறார். அவர் பேசுவதற்கு எதிரானவர் அல்லர், அவர் மௌனத்திற்கு ஆதரவாளரும் அல்லர், மொழி களுக்கு அப்பால் உள்ள ஒரு இடத்திற்கு அவர் வந்து விட்டார். எனவே அவரால் பேசுவதற்கு மிகவும் கடினமாக இருக்கும். ஆனால் அதே சமயம் அவர் தனக்குள் ஆய்வு செய்வதும் கூட கடினமாகவே இருக்கும்; ஏனெனில் அவர் தனக்குள் எதை ஆழ்ந்து சிந்தித்தாரோ அதைத்தான் அவரால் பேச முடியும்.

வெறுமனே கவனியுங்கள்: அகத்தாய்வு என்பது உங்க ளுக்குள் பேசிக் கொள்வது. அப்போதும் நீங்கள் வார்த்தைகளை பயன்படுத்திக் கொண்டு தான் இருக்கிறீர்கள். பேசாமல் இருக்கும் போது உங்களால் வார்த்தைகளை பயன்படுத்த முடியும் என்றால், அதே வார்த்தைகளை நீங்கள் பேசும் போதும் ஏன் பயன்படுத்த கூடாது? பேசமுடியாத ஒன்றினை நீங்கள் அகத்தாய்வும் கூட செய்ய முடியாது. ஏனெனில் அவை ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள்.

*எல்லா புண்ணியச் செயல்களுக்கும் மனம் தான் மூலம்.* என்னால் வேறு எதையும் செய்ய முடியாது! போதிதருமர் முன்பு கூறியப்படியும் கூட இது முட்டாள்தனமானது. போதிதருமர் தனது சொந்த சூத்திரங்களிலேயே கூட மனதைக் கடந்து செல்ல வேண்டும்; இந்த மனம் தான் உங்களது அடிமைத் தளை, இந்த மனமானது முற்றிலும் அமைதியாகப்பட வேண்டும், வெறுமை யாக்கப்படவேண்டும் என்று கூறி இருக்கிறார். வேறு வார்த் தையில் சொல்ல வேண்டும் என்றால் நீங்கள் மனம் அற்ற நிலையை அடைய வேண்டும் என்று கூறி இருக்கிறார்.

மனம் அற்ற நிலைதான் எல்லா புண்ணியச் செயல்களுக்கும் மூலமாகும்; ஆனால் மனம் மூலமாகாது. மனம் தான் எல்லா புண்ணியத்திற்கும் மூலம் என்றால், அதன்பின்னர் மனம் அற்ற நிலை என்பதன் நோக்கம் என்ன? எல்லா புண்ணியங்களில் எல்லாம் அடங்கி விடுகின்றன. பாவங்கள் மட்டுமே மிச்சம் இருக்கின்றன. அப்படியானால் மனம் அற்ற நிலை தான் பாவங்களுக்கு எல்லாம் மூல காரணமா? உங்களுக்குள் உள்ள குற்றங்களுக்கும், உங்களுக்குள் உள்ள தீய ஒழுக்கங்களுக்கும், உங்களுக்குள் உள்ள புண்ணியமற்ற செயலகளுக்கும், தியானம்

தான் மூலமாக இருக்கிறதா? போதிதருமர் தனது சரியான உணர்வுகளுடன் இல்லை. ஒருமுறை அவர் தடுமாறினார், ஒருமுறை அவர் பொய் கூறினார், எனவே அவரால் தனது சமநிலையை திரும்பப் பெற முடியவில்லை.

*எல்லா புண்ணியச் செயல்களுக்கும் மனம் தான் மூலம். எல்லா சக்திகளுக்கும் இந்த மனம் தான் தலையாயது. அப்படியானால், புத்த இயல்பு மற்றும் அதன் சக்தி என்பது என்ன?*

*மனம் இளைப்பாறும் போது, நிர்வாண நிலையின் முடிவில்லா ஆனந்தம் அதிலிருந்து வருகிறது.*

இங்கு அவர் உண்மை நிலைக்கு கொஞ்சம் நெருங்கி வருகிறார், ஆனால் மிகச்சரியாக உண்மை நிலைக்கு வரவில்லை. இளைப்பாறுகின்ற மனம் இன்னமும் மனமாகவே இருக்கிறது. நிர்வாண நிலை என்பது மனம் மரணமடையும் போது நிகழ்கிறது. மனம் வெறுமனே இளைப்பாறும் போது மரணமடையும் போது நிகழ்கிறது. மனம் வெறுமனே இளைப்பாறும்போது அல்ல, ஏனெனில் இளைப்பாறுகின்ற அந்த மனம் எந்த நொடியில் வேண்டுமானாலும் சுறுசுறுப்பாகி விடலாம். இந்த மனம் என்பது வெறுமனே போய்விடவேண்டும். அதன் பின்னர் மட்டுமே நீங்கள் உங்களது முழு அமைதி குறித்து நிச்சயத்துடன் இருக்க முடியும். தொந்தரவு செய்து கொண்டிருந்தவர் முற்றிலும் போய்விட்டார். தொந்தரவு செய்கிறவர் ஓய்வாக இருக்கிறார் என்பதற்கு நீங்கள் தொந்தரவில் இருந்து விடுதலை அடைந்து விட்டீர்கள் என்று அர்த்தமல்ல. தொந்தரவு கொடுப்பவர் உங்களுக்கு மீண்டும் அதிக தொந்தரவு கொடுப்பதற்கான கொஞ்ச சக்தியை பெறுவதற்காக கூட வெறுமனே அமைதியாக இருந்திருக்கலாம்.

நான் எனது நண்பனோடு ஒரு வீட்டில் வசித்தேன். அவரது குழந்தை இடைவிடாமல் தொந்தரவு செய்து கொண்டே இருக்கும். அவனது தந்தை களைப்படைந்து விடுவார், அவனது தாயார் களைப்படைந்துவிடுவார் ஆனால் அவன் ஒரே குழந்தை என்பதால் அவர்கள் அவனை நேசித்தனர். நான் மட்டுமே அவனிடம் களைப்படைய மாட்டேன். அவர்கள் என்னிடம்,

'என்ன விஷயம்? அவன் ஒரு போதும் உங்களை தொந்தரவு செய்வதில்லையே'' என்று கேட்டார்கள்.

அதற்கு நான் அவர்களிடம் 'நான் அவனை தொந்தரவு செய்கிறேன். நான் அவனைக் கூப்பிடுகிறேன் ஆனால் அவன் ஒருபோதும் என்னிடம் நெருங்கி வருவதில்லை'' என்று கூறினேன்.

அதற்கு அவனது தந்தை,'நீங்கள் அவனை எப்படி தொந்தரவு செய்கிறீர்கள்? ஏனெனில் அவன் அந்த அளவுக்கு எப்போதும் இடைவிடாமல் கவலையைக் கொடுப்பான், ஒருபோதும் சும்மா இருக்க மாட்டான், எப்போதும் ஏதாவது செய்து கொண்டே இருப்பான், எதையாவது தூக்கி போடுவான், எதையாவது உடைப்பான், சோபாவில் இருந்து மேஜைக்கு குதிப்பான். அவனால் அமைதியாக உட்காரவேமுடியாது'' என்றார்.

அதற்கு நான் ''அவன் எப்படி அமைதியாக உட்காருகிறான் என்பதை நான் உங்களுக்கு காட்டுகிறேன்'' என்றேன்.

நான் உள்ளே நுழைந்த உடன் அவன் 'நான் அமைதியாக உட்கார்ந்து விடுகிறேன்'' என்று கூறினான்.

உடனே அவனது தந்தை என்னிடம், ' என்ன விஷயம்? நீங்கள் எதுவும் சொல்லவே இல்லை, நீங்கள் வந்ததைப் பார்த்த உடன் அவன்'' நான் அமைதியாக உட்கார்ந்து விடுகிறேன்? என்று கூறுகிறான்''என்று கூறினார்.

ஒரே வீட்டின் பாதியில் அவர்கள் வசித்தார்கள், மறு பாதியில் நான் இருந்தேன். ஆனால் இரண்டும் உள்பக்கமாக இணைக்கப் பட்டு இருந்தது. அந்த சிறுவன் எப்போதாவது எனது பக்கத்தில் வருவான். அப்போது நான் அவனிடம் 'நீ உள்ளே வர வேண்டும் என்றால் அதற்கு கட்டணம் செலுத்த வேண்டும்,'' என்றான்.

'என்ன?'' என்றான் அவள்.

உடனே நான், 'பணம் என்பது பிரச்சினை அல்ல. நீ என்ன செய்ய வேண்டும் என்று நான் உனக்கு கூறுகிறேன், முதலில் நீ இந்த வீட்டை ஏழு முறை சுற்றிவரவேண்டும்'' என்றேன்.

அது பெரிய வீடு, நான்கு ஏக்கர் பரப்பளவு இருந்த வீடு, என்னை ஏமாற்றாமல், தவறு செய்யாமல் மகிழ்ச்சியாக ஏழு முறை சுற்றி வரவேண்டும், அதன் பின்னர் உள்ளே வரலாம் என்று கூறினேன்.

ஏழு தடவை சுற்றி வந்த பின்னர் அவன் மிகவும் களைத்துப் போய் மீண்டும் வந்து சோபாவில் பொத் என்று விழுந்து விடுவான். நான் அவனிடம், ''நீ எப்படி உணர்கிறாய்?'' என்று கேட்பேன்.

உடனே அவன், '' நான் இன்னமும் உயிரோடு தான் இருக்கிறேன்'' என்பான். அதன் பிறகு நான் எனது வேலையைத் தொடர்ந்து செய்வேன். அப்போது அவன் வெறுமனே ஓய்வெடுத்துக் கொண்டு இருப்பான்.

உடனே அவனது தந்தை என்னிடம், ''இது விநோதமாக உள்ளது. நீங்கள் ஒருபோதும் எங்களிடம் கூறவில்லையே. அவன் எங்களை அதிகமாக துன்புறுத்தி வந்தான்'' என்று கூறினார்.

அதற்கு நான் அவரிடம்,'' அவனை வழிக்கு கொண்டு வர நான் எனது சொந்த வழியைக் கண்டு பிடித்தேன். ஏன்னைப் பார்க்க அவன் வந்தால் முதலில் அவன் கட்டணம் கொடுக்க வேண்டும். அந்த வீட்டை சுற்றி ஏழு தடவை வந்தால் போதும். அதன் பின்னர் அவன் எதையும் கேட்க மாட்டான். அதன் பின்னர் அவன் எதையும் கேட்கின்ற நிலையில் இருக்க மாட்டான். அவன் மிகவும் களைப்படைந்து சோபாவில் உட்காருவான். அநேக தடவை நன்றாக தூங்கி விடுவான். அப்போது நான் எனது வேலையைச் செய்வேன்'' என்று கூறினேன்.

இளைப்பாறுகின்ற மனதை நம்பமுடியாது. திரும்பி வரமுடியாத ஒரு நிலைக்கு மனம் முழுமையாக போக வேண்டும்.

*மூன்று பகுதிகளிலும், மறுபிறவியும் கூட மனதில் இருந்து தான் வருகிறது. ஒவ்வொரு உலகிற்கும் மனமே வாசல், மனமே, ஆற்றின் ஆழமற்ற இடத்தின் வழியாக அடுத்த கரைக்கு நம்மை அழைத்து செல்கிறது.*

இது சரி அல்ல, ஏனெனில் அடுத்த கரைக்கு ஆற்றைக் கடந்து செல்ல மனமே உதவுகிறது என்றால் அதன் பின்னர் தியானம் என்பதன் பயன்பாடு என்ன? எல்லா சக்திகளும் மனதில் இருந்து வருகின்றன, எல்லா உலகமும் மனதுக்கு சொந்தமானது, மனம் அமைதியாக இருப்பதிலிருந்து தான் நிர்வாண நிலையின் பேரானந்தம் வருகிறது. அடுத்த கரைக்கு கடந்து செல்ல மனமே உதவுகிறது. அதன் பின்னர் தியானம் என்பதன் பயன் என்ன?

உண்மையில் மனம் என்பது அடுத்த கரைக்கு கடந்து செல்கின்ற ஆற்றுத் துறை அல்ல. தியானம் தான் கடந்து செல்லும் ஆற்றின் துறையாக உள்ளது. தியானம் என்றால் எப்போதுமே மனம் அற்ற நிலை என்று தான் அர்த்தமாகும். மனம் அழிக்கப் பட்டு விடும்போது, மனதிற்கு ஈடுபட்டு வந்த அதே சக்தியானது உங்களது தியானம் ஆகிறது.

*அந்த வாசல் எங்கு உள்ளது என்பதை அறிந்து கொள் பவர்கள் அதை அடைவதைப் பற்றி கவலைப்பட மாட்டார்கள். ஆற்றில் ஆழமற்ற இடம் எங்கு உள்ளது என்பதை அறிந்து கொண்டவர்கள் ஆற்றைக் கடப்பது பற்றி கவலைப்பட மாட்டார்கள்.*

*இந்தக் காலத்தில் நான் சந்திக்கிற மக்கள் மேலெழுந்த வாரியாக உள்ளனர். தகுதி என்பதை ஏதோ ஒரு உருவம் உள்ளது போன்று அவர்கள் நினைக்கின்றனர். அவர்கள் செல்வத்தை விரயம் செய்கின்றனர். நிலம் மற்றும் கடலில் உள்ள உயிரினங்களை கொலை செய்கின்றனர். தெளிவாகத் தெரிகின்ற எதைப் பார்த்தாலும் அவர்கள் அதன் மீது பற்றுக் கொள்கின்றனர். நீங்கள் அவர்களிடம் உருவமற்றத் தன்மை பற்றி பேசினால் அவர்கள் அங்கு வாய் பேசாமல் ஊமைகள் போன்று குழப்பத்தில் இருக்கின்றனர். இந்த உலகின் சிறிய கருணைகள் மீது பேராசை கொண்டு, அவர்கள் தங்களுக்கு வரப்போகின்ற துன்பத்தை காணமுடியாத குருடர்களாக இருக்கின்றனர். இப்படிப்பட்ட சீடர்கள் வீணாகத் தங்களைத் தேய்மானம் செய்து கொள்கின்றனர். உண்மையில் இருந்து பொய்மைக்கு திரும்புவதன் மூலம், அவர்கள் எதிர்கால ஆசீர்வாதங்களைத் தவிர வேறு எதையும் பேசுவதில்லை.*

உங்களை மனதின் உள் ஒளி மீது வெறுமனே ஒருமுகப் படுத்தி அதன் வெளிப்புற பிரகாசத்தை கவனிக்க முடியும் என்றால் நீங்கள் மூன்று விஷயங்களையும் கைவிட்டு விட்டு, ஆறு திருடர்களையும் கூட ஒரே அடியாக விரட்டி விடலாம்.

தியானம் என்பதை ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பதற்கு ஒரு வார்த்தை இல்லை என்று நான் கூறி இருக்கிறேன். அதற்கு மூன்று வார்த்தைகள் உள்ளன; முதலாவது ஒருமுகப்படுத்துதல் (Concentration), இதுதான் மிகவும் கீழ்நிலையில் உள்ளது. இதற்கு உங்களது மனதை ஒரு விஷயத்திலோ அல்லது ஒரு எண்ணத்திலோ குவித்தல் என்று அர்த்தமாகும். இது அறிவியலில் பயன்படும். உண்மையில் மனதை ஒரு முகப்படுத்துதல் இல்லை என்றால் இங்கு அறிவியலே இருக்காது. அறிவியல் என்பது மனதை ஒருமுகப்படுத்துவதன் மூலம் கிடைக்கின்ற ஒரு உப பொருள்.

ஆங்கிலத்தில் உள்ள இரண்டாவது வார்த்தை (contemplation) ஆழ்ந்து சிந்தித்தல், இது மனதை ஒரு முகப்படுத்துவதை விட உயர்ந்த நிலையாகும். ஆழ்ந்து சிந்தித்தல் என்பது ஒரு குறிப்பிட்ட பொருள் விஷயத்தைப் பற்றி சிந்தித்தல் என்று அர்த்தம். அதாவது, அதே பொருள் விஷயத்தைப் பற்றி ஒரே ஒரு எண்ணம் மட்டுமல்ல, ஆனாலும் சிந்தனைகளின் சிற்றோடை என்று அர்த்தமாகும். உதாரணமாக, யாரோ ஒருவர் ஒளியைப் பற்றி சிந்தித்துக் கொண்டு இருக்கிறார். அதன் பின்னர் அவர் ஒளியைப் பற்றி, அதன் வேகம், அது ஏழு நிறங்களாகப் பிரிவது மற்றும் ஒளியின் எல்லா சாத்தியக் கூறுகளையும், ஒளியின் ஒட்டுமொத்த இயற்பியல் பற்றி நினைத்துக் கொண்டு இருக்கிறார். மனதை ஒருமுகப்படுத்துவதால் அறிவியல் எழுவதைப் போல ஆழ்ந்த சிந்தனையால் தத்துவம் எழுகிறது.

அடுத்து, ஆங்கிலத்தில் மூன்றாவது வார்த்தை (Meditation) தியானம். இது தான் மிகவும் உயர்வானது என்றாலும் கூட இது DHYAN (தியான்) என்பதற்கோ அல்லது சீனாவின் CH'AN என் பதற்கோ அல்லது ஜப்பானின் ZEN என்தபற்கோ இணையானது அல்ல. இவை எல்லாம் DHYAN என்கிற சமஸ்கிருத வார்த்தையின் வேறுபட்ட உச்சரிப்புக்கள்.

தியான் (DHYAN) என்றால் மனம் அற்ற நிலை என்று அர்த்தம். ஒருமுகப்படுத்துதலில் மனம் ஒருமுகப்படுத்துகிறது. ஆழ்ந்து சிந்திப்பதில் மனம் ஆழ்ந்து சிந்திக்கிறது. தியானம் பற்றிய மனம் தியானம் செய்கிறது. ஆனால் தியானம் என்பதில் மனமானது வெறுமனே மறைந்து போகிறது. தியானம் என்பது மனதிற்கு அப்பால் உள்ள அமைதி, இந்த சூத்திரங்களை மொழிபெயர்த்த மனிதர் ஆங்கிலத்தில் உள்ள concentrate (ஒருமுகப்படுத்துதல்) என்பதை தியான் என்பதற்காக பயன்படுத்தி இருக்கிறார்.

இதுதான் மொழி இயலாளர்களிடம் உள்ள பிரச்சினை. அவர்கள் புத்தகங்களை ஒரு மொழியில் இருந்து மற்றொரு மொழிக்கு மொழி பெயர்க்கின்றனர். ஆனால் குறிப்பாக கவிதைகளை மொழி பெயர்க்க வேண்டும் என்று வருகிற போது, அது மிகவும் கடினமாகி விடுகிறது. மெய்ஞ்ஞானம் அடைந்த ஒருவரின் பேச்சை மொழி பெயர்ப்பது என்பது, அதைவிட இன்னும் அதிக கடினமானதாக ஆகிவிடுகிறது.

ஆனால் பிரச்சினை என்னவென்றால், மெய்ஞ்ஞானம் அடைந்த மக்கள் வேறு யாருடைய புத்தகத்தையும் மொழி பெயர்ப்பதில் ஆர்வமே காட்ட மாட்டார்கள். அவர்கள் தங்களது சொந்த புத்தகத்தை கூட எழுதுவதற்கு ஆர்வம் காட்ட மாட் டார்கள். அவர்கள் தங்களின் அமைதியை சந்தோஷமாக அனுப விப்பார்கள். அவர்களது பரவச நிலை அந்த அளவுக்கு அதிகமாக இருக்கிறது. ஏதாவது ஒன்றை அவர்கள் மற்றவர்களுக்கு வெளிப்படுத்த விரும்பலாம், அவர்கள் பேச்சு வழக்கில் உள்ள வார்த்தைகளைப் பயன்படுத்துகின்றனர். ஏனெனில் பேச்சு வழக்கில் உள்ள வார்த்தையில் ஒரு கதகதப்பும், உயிர்த்துடிப்பும் இருக்கிறது. அது அவரது இதயத்தில் இருந்து வருகிறது. அது அவரது உயிரின் சிறு மணத்தை கொண்டு வருகிறது. எழுதப்படுகின்ற வார்த்தையும் காணாமல் போய் விடுகின்ற சில வெளிச்சத்தை, சில ஆழ்ந்த அறிவைச் சுமந்து கொண்டு வருகிறது. அதனால் தான் எந்த ஒரு மெய்ஞ்ஞானம் அடைந்த மனிதரும் ஒரு போதும் ஒரு சிறு வார்த்தை கூட எழுதியதில்லை.

உங்களின் மனதின் உள் ஒளி மீது வெறுமனே ஒருமுகப் படுத்தி அதன் வெளிப்புற பிரகாசத்தை கவனிக்க முடியும்

என்றால் நீங்கள் மூன்று விஷயங்களையும் கைவிட்டு விட்டு, ஆறு திருடர்களையும் கூட ஒரே அடியாக விரட்டி விடலாம்.

இதில் ஒருமுகப்படுத்துதல் என்கிற வார்த்தையை வெறுமனே மாற்றி விடுங்கள். நீங்கள் தியானம் செய்ய முடிந்தால், அதாவது இதில் தியானம் என்பது தியான் என்கிற அர்த்தத்தில் புரிந்து கொள்ளப்பட வேண்டும். தியான் என்பதில் நீங்கள் உங்களது மனம் அற்ற நிலையை செயல்பாட்டிற்கு கொண்டு வரமுடிந்தால், அதன் பின்னர் எல்லாமே ஒளி மயம் தான், எல்லாமே பெரும் மகிழ்ச்சி தான்.

முயற்சி இல்லாமல், சத்தியத்தின் பயனையும், எல்லையற்ற எண்ணிக்கையில் புண்ணியங்களையும், நிறைகளையும் உங்களுடையதாக ஆக்கிக் கொள்ளலாம். சாதாரணமாக உள்ளவற்றின் மூலம் உயர் நிலையில் உள்ளதை சாட்சி பாவனையில் கண்டு கொள்வது கண் சிமிட்டும் தொலைவை விட குறைவான தொலைவில் உள்ளது.

இறுதியாக, முடிவில் அவர் மீண்டும் தனது அசல் நிலைக்கு திரும்பி வருகிறார். இந்த வாக்கியத்தில் நாம் ஆரம்பித்த அந்த போதிதருமராக அவர் இருக்கிறார்.

சாதாரணமாக உள்ளவற்றின் மூலம், உயர் நிலையில் உள்ளதை, சாட்சி பாவனையில் கண்டு கொள்வது என்பது கண் சிமிட்டும் தொலைவை விட குறைவான தொலைவில் உள்ளது. அறிந்து கொள்ளுதல் என்பது இப்போதே நடக்கக் கூடியது. அப்படி இருக்கும் போது நரை முடி பற்றி ஏன் கவலைப்படுகிறீர்கள்?

நாளை மற்றும் வயதான காலம் பற்றி ஏன் கவலைப்படு கிறீர்கள்?

ஆனால் உண்மையான வாசலானது மறைந்து இருக்கிறது. வெளிப்படுத்தப்பட முடியாது.

அறியாமை என்பது எங்கிருந்து வருகிறது என்று போதி தருமரிடம் கேட்கப்பட்ட போது அவர் பதில் சொல்வதற்கு தேவையானது இது தான். ஆனால் அவர் சுற்றி, சுற்றி, சுற்றி வந்து விட்டு முடிவில் எப்படியே சமாளித்து தனது முதல் நிலைக்கு

வந்து விட்டார். உண்மையான வாசலானது மறைந்து இருக்கிறது. வெளிப்படுத்தப்பட முடியாதது.

நான் மனதைக் கவனித்தல் என்பதை மட்டுமே தொட்டுக் காட்டி இருக்கிறேன்.

போதிதருமர் இடையில் பேசியதை எல்லாம் கைவிட்டு விட்டு, அந்த தருணத்தில் இந்த இரண்டு வாக்கியங்களை மட்டுமே அவர் சொல்லி இருந்தால் போதிதருமரின் சூத்திரங்கள் முற்றிலும் தூய்மையானதாக, குறை கூற முடியாத அளவுக்கு தூய்மையானதாக இருந்திருக்கும். ஆனால் நான் அதை உங்களுக்கு தெளிவுபடுத்தி விட்டேன். ஆகவே எது சரியானது, எது அதிக உரைநடை போன்றது என்பதை நீங்களே தேர்வு செய்து கொள்ள முடியும்.

உங்களது தியானத்திற்கு உதவிகரமாக இருக்கப்போவது சரியானதாக இருக்கிறது. ஆன்ால் எது வெறுமனே தத்துவார்த்த மாகவும், தேவையற்ற இயல் கடந்த ஆராய்வாகவும், இருக்கிறதோ அது செல்லும்படி ஆகாதது மற்றும் அது தியானத்திற்கு பயன்படாது.

ஒரு வழியில், இந்த சூத்திரம் பற்றி விவாதிக்க வேண்டியது எதேச்சையாக நடந்த ஒன்று என்பதால் நான் சந்தோஷம் அடைகிறேன். ஏனெனில் நீங்கள் இரண்டு பக்கங்களையும் பார்க்கமுடிந்தது. நீங்கள் விழிப்புணர்வுடன் இருப்பதற்கு இது உதவும். உங்களது மெய்ஞ்ஞான நிலையின் உச்சத்திலும் கூட வழிதவறி செல்லலாம், முட்டாள் தனமான விஷயங்களை நீங்கள் அப்போதும் கூட கூறமுடியும். எனவே நீங்கள் அப்போது விழிப்புணர்வுடன் இருப்பதற்கு இந்த சூத்திரங்கள் உங்களுக்கு உதவும். இதில் உள்ள பிரச்சினை என்னவென்றால் சிறந்ததாக இல்லாத எதையும் என்னால் சகித்துக் கொள்ள முடியாது. மிகவும் சிறந்தவற்றை மட்டுமே தெரிந்து கொள்ள வேண்டும் என்றும், சிறந்ததை மட்டுமே அனுபவிக்க வேண்டும் என்றும், எந்த மாசும், எநத கலப்படமும் இல்லாத இருபத்து நான்கு காரட் சுத்தமான தங்கத்தை மட்டுமே நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும் என்றும் நான் விரும்பினேன்.

இந்த சூத்திரங்கள் பற்றி நான் பேசியது மிகவும் நல்லது, ஏனெனில் எது சரியானது மற்றும் எது தவறானது என்று உங்களுக்கு நான் சொல்லிக் கொண்டே போக முடிந்தது. நீங்கள் அநேக புத்தகங்களைப் படிக்கலாம், நீங்கள் அநேக மக்கள் கூறுவதை கேட்கலாம். எப்போதும் வெறுமனே தெளிவாக கவனியுங்கள். ஒவ்வொரு நாளும் சந்நியாசிகளிடம் இருந்து, ''நான் வேறு ஒரு புனிதரை, வேறு குருவைப் பார்க்கப் போயிருந்தேன்'' என்று கூறிக் கொண்டு எனக்கு கடிதங்கள் வருகின்றன. அந்த மனிதர்கள் வெறும் முட்டாள்கள் என்பதை நான் அறிவேன். சந்நியாசிகள் எனக்கு எழுதும் கடிதத்தில், ''அவர்களது பேச்சு மனதில் ஆழமாகப் பதிந்து விட்டது'' என்று எழுதுகிறார்கள். அதற்கு நான் வெறுமனே ''அட கடவுளே'' என்று தான் கூறுகிறேன்.

இப்படிப்பட்ட மக்களிடம், ஒவ்வொரு சிறு விஷயத்தையும் முற்றிலும் தெளிவாக்குவதற்கு நான் கடினமாக உழைத்தேன். ஆனால் எந்த ஒரு முட்டாளும் அவர்களது மனதை கவர முடியும்! அவர்களிடம் எது சரி, எது தவறு என்று பிரித்துப் பார்க்கக்கூடிய தெளிவு, விழிப்புணர்வு இல்லை போலத் தெரிகிறது.

இந்திய புனித நூல்களில் மிகவுயர்ந்த ஒன்றாக பத்ராயணரின் பிரம்ம சூத்திரம் இருக்கிறது. ஒரு சீடருக்கு தேவையான முதல் விஷயமாகிய பிரித்தறிதல் பற்றி தெளிவான தகுதியை அவர் குறிப்பிடுகிறார். பத்ராயணர் பிரித்தறிதலை ஏன் தனது முதல் விஷயமாக எடுத்துக் கொண்டார் என்பதை என்னால் பார்க்க முடிகிறது. பிரித்தறிதல் என்பது எது பொய் எது உண்மை, எது உண்மை மற்றும் எது பொய் என்று அறிந்து கொள்வதாகும். நீங்கள் கத்தோலிக்க போப்பாண்டவரைப் பார்த்திருக்கிறீர்களா? ஒருவேளை உங்களில் அநேகர் அவரைப் பார்த்திருக்கலாம், அல்லது சந்தித்து இருக்கலாம். பெரும்பான்மையான வர்கள் அவரது புகைப்படத்தை கண்டிப்பாக பார்த்திருப்பீர்கள். இவர் கடவுளின் பிரதிநிதி என்பதை சுட்டிக்காட்டுகின்ற எதையாவது அவரிடம் உங்களால் பார்க்கமுடிகிறதா? அவர் ஏதாவது ஒரு செருப்பு கம்பெனியில் விற்பனையாளராக இருக்க முடியும். ஆனால் முகம் பார்க்கும் கண்ணாடியில் ஒருமுறையாவது

பார்த்துவிட்டால் போதும் அப்போது அவர், ''அடகடவுளே, என்னை ஏன் தேர்ந்தெடுத்தீர்கள்? வேறு யாராவது ஒரு முட்டாளை உங்களால் கண்டு கொள்ள முடியவில்லையா? இந்த மிகப்பெரிய உலகில் அப்பாவியாகிய என்னை ஏன் தேர்ந்தெடுத்தீர்கள்?'' என்றுதானே அறிந்து கொண்டு இருப்பார்.

ஒரு வயதான யூதர் ஒருவர் இறந்து போகும் போது நடந்ததை நான் கேள்விப்பட்டு இருக்கிறேன். அவர் ஏதோ முணுமுணுத்துக் கொண்டு இறந்தார். ஆகவே அவரது குடும்பத்தில் உள்ளவர்கள் இறக்கும் நேரத்தில் அவர் என்ன முணுமுணுக்கிறார் என்பதை கேட்பதற்கு அவரிடம் நெருங்கி வந்தார்கள். அவர் கடவுளிடம், ''கடவுளே, ஒரே ஒரு வேண்டுகோள் ஆயிரம் ஆண்டுகளாக நாங்கள் உங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களாக இருந்து வருகிறோம். இது போதும், இப்போது வேறு யாரையாவது நீங்கள் தேர்வு செய்ய முடியாதா? நீங்கள் எங்களைத் தேர்வு செய்யாமல் இருந்திருந்தால், நாங்கள் இந்த அறைக்குள துன்பப்பட்டு இருக்கமாட்டோம். இப்போது இரக்கத்தோடு இருங்கள்; இறக்கும் தருவாயில் உள்ள ஒரு வயதான மனிதனின் கடைசி வார்த்தைகளைக் கேளுங்கள். வேறு யாரையாவது உங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களாக தேர்வு செய்து கொண்டு, எங்களை மாபெரும் சுமையில் இருந்து விடுவிப்பதற்கு இது தான் நேரம். நாங்கள் இடைவிடாமல் நசுக்கப்படுகிறோம்'' என்று கூறினார்.

உங்களது போப் ஆண்டவரைப் பாருங்கள், உங்களது சங்கராச்சாரியார்களைப் பாருங்கள், உங்களது ஆயத்துல்லா கொமேனிகளைப் பாருங்கள், உங்களது சமண துறவிகளைப் பாருங்கள், புத்தர் துறவிகளைப் பாருங்கள். அப்போது இந்த மக்களினுள் விழிப்படைந்த ஒரு மனிதன் இருப்பதை காண முடியாமல் நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். அனுபவத்தின் மூலம் வருகின்ற வார்த்தைகளையும் கூட அவர்கள் பெற்றிருப்பதில்லை, ஆனால் நீங்ள் எந்த வகையான முட்டாள்தனமாக இருந்தாலும் கூட மனம் கவரப்பட்டு விடுகிறீர்கள்.

இது பல நூற்றாண்டுகளாக நடந்து கொண்டிருக் கிறது. இது நிற்கவேண்டியதற்கு இது தான் நேரம். இறுதியான உண்மை

மற்றும் அதை அறிந்து கொள்வதை நோக்கி தனது அம்பினை வைத்துக் கொண்டு இருக்கின்ற ஒரு மனிதருக்கும் வெறுமனே பாசாங்கு செய்து கொண்டிருக்கின்ற ஒரு மனிதனுக்கும் இடையே பிரித்து அறிவதற்கு போதுமான தியானத் தன்மையுடன் ஒவ்வொருவரும் இருக்க வேண்டும்.

எப்படி பிரித்து அறிவது என்பதற்கு இந்த சூத்திரங்கள் நல்ல பயிற்சியாக இருந்தன. மிகவும் உஷாராக இருங்கள். மனம் கவரப்படுபவராக இருப்பது எளிதில் ஏமாறக் கூடியதாக இருப்பதாகும். எளிதில் ஏமாந்து விடாதீர்கள். இல்லையெனில் நீங்கள் சுரண்டப்படுவீர்கள். எளிதில் ஏமாறாமல் இருப்பதைத் தான் பத்ராயணர் பிரித்தறிதல், உஷாராக இருத்தல், விழிப்புணர்வுடன் இருத்தல் என்று கூறுகிறார். யாராலும் மனம் கவரப்படுவதில் அவசரம் காட்டாதீர்கள். காத்திருங்கள், ஒவ்வொரு நோக்கத்திலும் இருந்து அதை உற்றுப்பாருங்கள். அப்போது உங்களது இதயத்தில் மணிகள் அடிக்க ஆரம்பித்தால், அதன் பின்னர் அது ஒட்டுமொத்தமாக வேறு விஷயமாக ஆகிவிடும். ஆனால் '' நான் சரியான குருவை தேர்ந்தெடுத்து விட்டேன'' என்று உங்களது மனம் வெறுமனே கூறினால் உங்களது மனம் குறித்து ஜாக்கிரதையாக இருங்கள்.

உங்களது மனம் தான் உங்களது மிகப்பெரிய பகைவன்.

OOO